த.பா.நி. (க.வெ.) வரிசை எண் — 452

# பொருளியல் — தொடக்க நூல்

## 1

ஆசிரியர்

தே. வேலப்பன், எம்.ஏ., எம்.லிட்.,
விரிவுரையாளர், பொருளாதாரத் துறை,
தெ. தி. இந்துக் கல்லூரி,
நாகர்கோவில்.



தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition — May, 1973

T.N.T.B.S. (C.P.) No. 452



# ECONOMICS — AN INTRODUCTION

D. VELAPPAN

Price Rs. 9-65

'Published by the Tamil Nadu Text Book Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.'

*Printed by :*

TAMIL KADAL PRESS,
1/8, Srinivasa Iyer Street,
MADRAS-1.

# அணிந்துரை

திரு. இரா. நெடுஞ்செழியன்
*(தமிழகக் கல்வி-உள்ளாட்சித் துறை அமைச்சர்)*

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பன்னிரண்டாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.), 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்புகளிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகின்றது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாணவர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சியைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக் கழகம் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இரு வகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான 'பொருளியல் - தொடக்க நூல்' என்ற இந்நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 452ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 487 நூல்கள் வெளி வந்துள்ளன. இந்நூல் மைய அரசு கல்வி, சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக் கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை. ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்

## பகுதி I : அறிமுகம்


பக்கம்

1. பொருளியலின் பொருள் வரையறை ... 1

'குடும்ப நிருவாகம்' — 'பொருள் செயல் வகை' — வணிக, இயற்கை மரபினர் கருத்துக்கள் – ஆடம் ஸ்மித்தின் கருத்து — சமதருமக் கருத்தின் எழுச்சி — மார்ஷலின் பொருளிலக்கணம்-இராபின்ஸின் கருத்து — முடிவுரை.

2. பொருளியலின் வாய்ப்பெல்லை ... 22

நுதல் பொருள் — பொருளியலின் பகுதிகள்; பொருளியலின் இயல்பு — இயல்புரை — நெறியுரை அறிவியல் — கலை — பொருளியல் கோட்பாடு — நடைமுறையும் பொருளியலும்; பிற சமூக அறிவியல்களும்.

3. பொருளியல் விதிகள் ... 36

அறிவியல் விதிகள் — போக்குரை கூற்றுக்கள் — பொருளியல் ஆய்வின் பொதுவான எடுகோள்கள் — பொருளியல் விதிகளும் வளர்ச்சி குன்றிய நாடுகளும் — சமதரும அமைப்பில் பொருளியல் விதிகள்.

4. பொருளியல் ஆய்வு முறைகள் ... 46

காரண காரியத் தொடர்பு நிறுவுதல் — பகுத்தறி முறை — தொகுத்தறி முறை — பொருளியல் ஆய்வுக் கருவிகள்; தேக்க நிலை ஆய்வும், இயக்க நிலை ஆய்வும்; நுண்ணியல் ஆய்வும், பேரியல் ஆய்வும்— நுண்ணியல் ஆய்வும், விலை ஏற்பாடும்; சமநிலை ஆய்வு — மேலும் படிக்கத்தக்க நூற்கள்.


## பகுதி II : நுகர்வு


1. நுகர்வும் விருப்பங்களும் ... 64

நுகர்வின் பொருளும் சிறப்பும்; விருப்பங்களும் அவற்றின் சிறப்பியல்புகளும்.

2. பயன்பாடும் பயன்பாட்டு விதிகளும் 70

பயன்பாட்டின் பொருள் — குறைந்துசெல் பயன்பாட்டு விதி — இறுதிநிலை, மொத்தப் பயன்பாடு — குறை, சிறப்புக்கள் — சம இறுதிநிலைப் பயன்பாட்டு விதி — விதியின் பொதுத் தன்மை.

3. சமநோக்கு வளைகோடுகள் 88

பண்புக் கூறுகள் — நுகர்வோன் சமநிலை — விலை, பதிலீட்டு விளைவுகள் — சிறப்புக்கள்.

4. நுகர்வோர் எச்சப்பாடு ... 108

கோட்பாட்டின் விளக்கம் — குறை நிறைகள்.

5. நுகர்வோர் இறைமை ... 116

முதலாளித்துவமும் நுகர்வோர் இறைமையும்—நடைமுறைத் தடைகள் — நன்மை தீமைகள்.

6. தேவையும் தேவை நெகிழ்ச்சியும் ... 122

தேவையின் பொருள்—விலைசார் தேவை—தேவைப் பட்டியலும் வளைகோடும் — தேவை விதி — கருத்தியல் விளக்கங்கள் — தேவைச் சூழல் மாறுதல்கள்; வருமானஞ்சார் தேவை; பின்னிய தேவை; விற்போன் நோக்கில் தேவை; தேவை நெகிழ்ச்சி — விலைசார், வருமானஞ்சார், பின்னிய நெகிழ்ச்சிகள் — கோட்பாட்டின் நடைமுறைச் சிறப்பு — மேலும் படிக்கத்தக்க நூற்கள்.

## பகுதி III : உற்பத்தி

1. உற்பத்தியும் உற்பத்திக் காரணிகளும் ... 145

உற்பத்தியின் பொருளும் சிறப்பும் — நால்வகைக் காரணிகள்.

2. உற்பத்திக் காரணிகள் பெருக்கம் ... 152

நிலத்தின் அளிப்பு; உழைப்பு — மக்கள் தொகைக் கோட்பாடுகள்; மால்தஸ், உத்தம மக்கள் தொகைக் கோட்பாடுகள் — உழைப்பின் திறமை; முதல் — முதல் ஆக்கம்; அமைப்பு — தனியாள் தொழில் — கூட்டு வியாபாரம் — கூட்டுப் பங்குக் கம்பெனி — கூட்டுறவு — பொதுத் தொழில் முயற்சி.

3. உற்பத்திக் காரணிகள் சேர்மானம் ... 183

மாறும் வித விதி — காரணிகள் பதிலீடு ; பருமச் சிக்கனங்கள் ; உத்தம நிறுவனம் ; தொழிலின் ஓரிடச் செறிவு — வெபர் கோட்பாடு—காரணிகள்—நன்மை, தீமைகள்.

4. உற்பத்திச் செலவுகள் ... 213

பண, உண்மை, மாற்றீட்டு உற்பத்திச் செலவுகள் ; நிலைத்த, மாறும் உற்பத்திச் செலவுகள் ; சராசரி, இறுதிநிலை உற்பத்திச் செலவுகள் ; நெடுங்கால உற்பத்திச் செலவுகள் ; உற்பத்திச் செலவும் அளிப்பும் ; அளிப்பு நெகிழ்ச்சி — மேலும் படிக்கத்தக்க நூற்கள்.

## பகுதி IV : மாற்று

1. மாற்றும் அங்காடி வகைகளும் ... 231

மாற்றின் பொருளும் சிறப்பும் ; அங்காடி—நிறைவுப் போட்டி — விற்பனை முற்றுரிமை — நிறை குறைப் போட்டி.

2. விலை நிருணயம் I ... 238

மதிப்புக் கோட்பாடுகள் — உழைப்பு, உற்பத்திச் செலவு, பயன்பாட்டுக் கோட்பாடுகள் — மார்ஷலின் கோட்பாடு; மதிப்புக் கோட்பாட்டில் காலக் கூறின் சிறப்பு.

3. விலை நிருணயம் II ... 253

நிறைவுப் போட்டி ; விற்பனை முற்றுரிமை — வேறுபாடு காட்டும் விற்பனை முற்றுரிமை ; முற்றுரிமைப் போட்டி — விற்பனைச் செலவுகள் ; சிலவர் விற்பனை இருவர் விற்பனை ; இருபக்க முற்றுரிமை ; நிறைவுப் போட்டி, விற்பனை முற்றுரிமை, நிறைகுறைப் போட்டி ஓர் ஒப்பீடு ; தொடர்புடைய மதிப்புகள்—கூட்டளிப்பு — கூட்டுத் தேவை ; இணைந்த அளிப்பு — இணைந்த தேவை; ஊக வணிகம் — மேலும் படிக்கத்தக்க நூற்கள்.

## பகுதி V : பகிர்வு

1. பகிர்வும் நாட்டு வருமானமும் ... 301

பகிர்வின் பொருளும் சிறப்பும்; நாட்டு வருமானம் — பொருள் விளக்கம் — அளவிடு முறைகள் — பயன்.

2. பணிவழிப் பகிர்வும் ஆள்வழிப் பகிர்வும் ... 312

வருமான ஏற்றத் தாழ்வுகள் — காரணங்கள் — விளைவுகள் — தீர்வு வழிகள்.

3. பகிர்வுக் கோட்பாடுகள் ... 319

தோற்றுவாய்; இறுதிநிலை விளைதிறன் கோட்பாடு — தேவை — அளிப்புக் கோட்பாடு.

4. வாரம் ... 334

பொருளியல் வாரமும் ஒப்பந்த வாரமும் — ரிக்கார்டோவின் கோட்பாடு — இக்காலக் கோட்பாடு — போலி வாரம்.

5. கூலிக் கோட்பாடுகள் ... 349

பராமரிப்பு, வாழ்க்கைத் தர, மிச்ச உரிமையர், கூலி நிதி, இறுதிநிலை விளைதிறன், தேவை அளிப்புக் கோட்பாடுகள்.

6. கூலிகள் — சில சிக்கல்கள் ... 360

கூலி வேறுபாடுகள் — பண, உண்மைக் கூலிகள்; தொழிற் சங்கங்களும் கூலியும்; குறைந்த அளவுக் கூலிகள்; கூலிகளும் வேலையுடைமையும்; நிறைவுறு வேலையுடைமையும் வேலையின்மையும்.

7. வட்டி ... 388

வட்டியின் இயல்பும் அமைவும் — வட்டிக் கோட்பாடுகள்; நுகர்வுத் தவிர்ப்பு, இறுதிநிலை விளைதிறன், வாசிபட்ட அல்லது காலவிருப்பத் தேர்வு, தொன்மை மரபினர், நீர்மை விருப்பத் தேர்வு, கடன் நிதி, இக்காலக் கோட்பாடுகள்; வட்டியும் வேலையுடைமையும்; குறுங்கால நெடுங்கால வட்டி வீதங்கள்.

8. இலாபம் ... 411

மொத்த, நிகர இலாபம் ; இலாபக் கோட்பாடுகள்— வார, கூலி, ஆபத்து ஏற்பு, உறுதியின்மை ஏற்பு, இயக்கநிலை, இறுதிநிலை விளைதிறன் கோட்பாடுகள்— மேலும் படிக்கத்தக்க நூற்கள் — பிற்சேர்க்கை : சமதருமத்தின் முதன்மையான பொருளியல் சிக்கல்கள்.

## பகுதி VI : பொருளியல் சிந்தனை

1. வணிக மரபினர் ... 435

2. இயற்கை மரபினர் ... 440

3. ஆடம் ஸ்மித் ... 445

4. காரல் மார்க்ஸ் ... 453

5. ஆல்பிரட் மார்ஷல் ... 459

6. ஜான் மேனார்டு கெயின்ஸ் ... 464

7. மோகனதாஸ் கரம்சந்த் காந்தி ... 471

கலைச்சொற்கள் ... 477

பகுதி I

# அறிமுகம்

‘கார்விளை வில்லை, பசானம் கரிந்தது;
விளைவிலை யாயினும் வீட்டுச் செலவில்
ஒருகுறை யேனும் உண்டோ? அப்பா!’

**(கவிமணி)**

# 1. பொருளியலின் பொருள் வரையறை

'பொருள்' என்ற சொல் மிகவும் பழைமை யானது. 'அறம் பொருள் இன்பம் வீடு அடைதல் நூற்பயனே' என்பது தமிழ்வழக்கு. இருப்பினும், 'பொருளி'ன் அடியாகப் பிறந்த 'பொருளியல்', 'பொருளாதாரம்' என்ற சொற்கள் தமிழ்ச் சொல் தொகுதியில் அண்மைக் காலத்தில் சேர்ந்த சொற்களேயாகும். 'இக்கனுமிக்ஸ்' (Economics) என்ற ஆங்கிலச் சொல்லைத் தமிழாக்கிய போது தோன்றிய சொற்களே இவை. எனவே, பொருளியலின் பொருள் வரையறையை அறிய வேண்டுமெனில், 'இக்கனுமிக்ஸ்' என்ற ஆங்கிலச் சொல்லும் அதன் பொருளும் தோன்றி வளர்ந்த வரலாற்றினை அறிந்தாக வேண்டும்.

அனைத்துலகுக்கும் பொதுவான அறிவை முதன்முதலில் முறையாகப் பகுத்தாய்ந்த பெருமை மேற்கே கிரேக்க நாட்டுக்கும், கிழக்கே இந்திய நாட்டுக்கும் உரியது. இந்தப் பகுத்தாய்வினிடையே 'குடும்ப நிருவாகம்'[1] என்ற தனியொரு துறையைப் பற்றிக் குறிப்பிட்டு, அதற்குத் தம் மொழியில் 'இக்கோனுமியா' (Oikonomia) என்ற பெயருமிட்டனர் பண்டைக்காலக் கிரேக்க அறிஞர்கள். இந்த 'இக்கோனுமியா' தான் இன்று 'இக்கனுமிக்ஸ்' என ஆங்கிலத்தில் ஆகியுள்ளது.

இந்த 'இக்கோனுமியா'வின் வாய்ப்பெல்லையை இனிப் பார்க்கலாம். 'குடும்ப நிருவாக'த்தினுள் ஆண்டான் - அடிமை, கணவன் - மனைவி, பெற்றோர் - பிள்ளைகள், ஆகிய முத்திற உறவுகள் நிலவுவதாகக் குறிப்பிட்டுவிட்டு, இவற்றுக்குப் புறமே நான்காவதாகக் குறிப்பிடத்தக்கது 'நிதி செயல் வகை' என்பார் அரிஸ்டாட்டில் (Aristotle). பிழைப்புக்கான வழிவகைகளைப் பலவழிகளில் இயற்கை அருளியுள்ளது. இவற்றை நாடோடியாகவும், உழவனாகவும், கொள்

[1] 'குடித்தனமோ துரைத்தனமோ' என்பது தமிழ்ப் பழமொழி.

லைக்காரனாகவும், மீன்பிடிப்பவனாகவும், வேடனாகவும் மனிதன் சேகரிக்கிறான். இவ்வகைச் செயல்களே 'குடும்பநிருவாக'த்தின் பாற்படும். இவற்றுக்கு மாறாக 'இயற்கையல்லா'ச் செயல்களுமுள்ளன: பணத்தைப் பயன்படுத்திச் செல்வத்தைப் பெருக்கும் வாணிகம், வட்டித்தொழில், கூலிக்கு ஆள் அமர்த்தல் முதலியவைகளே இவ்வாறு குறிப்பிடப்படுகின்றன. இவை 'குடும்பநிருவாக'த்தின் பாற் படாதென்பார் அரிஸ்டாட்டில்.[1]

இங்கே 'குடும்பநிருவாக'த்தின்பாற் படும் செயல்வகைகளின் இயற்கைக் கூறு என்னவெனப் பார்க்கவேண்டும். மேலே சொன்ன நாடோடி முதல் வேடன் ஈறாகவுள்ள அத்தனை பேருடைய செயல் வகைகளிலும் உள்ளீடானதோர் ஒப்புமையைக் காணலாம். இவர்கள் இயற்கையால் வரையறுக்கப்பட்டுள்ள பொருள்களைத் தேடப் பலவாறாகப் பாடுபடுகின்றனர்; தேடுகிற பொருள்கள் வரையறுக்கப் பட்டிருப்பதால் அவற்றைச் சிக்கனமாகப் பயன்படுத்த வேண்டிய நிலையும் ஏற்படுகிறது. இதற்கு மாறாக, வணிகர் முதலியோர் பணத்தால் செல்வத்தைப் பெருக்கிக் கொள்ளும் முயற்சிக்கு வரையறையே இல்லை! எனவே, 'குடும்பநிருவாக'ச் செயல்வகைகளுடன் தொடர்புள்ள பொருள்கள் அரியனவாக இருக்க வேண்டும்; அச் செயல்வகைகள் சிக்கனச்[2] சூழலில் நிகழ்ந்தேற வேண்டும் என்பவை தெளிவாகின்றன.

அறக்கருத்தொன்று இங்கே தொக்கி நிற்கின்றது. 'குடும்பநிருவாகச்' செயல் வகைகளுடன் தொடர்புள்ள பொருள்கள், மெய்யாகவே உணர்கிற விருப்பங்களை நிறைவேற்ற வேண்டியவைகளெனில், பிறபொருள்கள் அவ்வகை விருப்பங்களிலொன்றையும் நிறைவேற்றவில்லை[3]. இவ்வாறு, 'குடும்பநிருவாக'ச் செயல்வகைகள் அறத்தின் பாற்படுகின்றன; அல்லது, அறத்தின்பாற் படும் செயல் வகைகளே 'குடும்பநிருவா'கத்தின்பாற் படுகின்றன எனலாம்.

அரிஸ்டாட்டில் போன்ற கிரேக்க அறிஞர்களின் மற்றொரு கருத்தையும் இங்குக் கவனிக்க வேண்டும். இந்நாளில் குடும்பச் செயல் வகைகள் பெரும்பாலும் தனிவாழ்வு சார்ந்த செயல்களாகவே கருதப் பெறுகின்றன. ஆனால், அந்நாளைய கிரேக்க அறிஞர்கள் குடும்பத்தை

1. இவற்றையொட்டிய அறிவுத்துறை பணவளநூல் (Chrematistics) என்று வழங்கப்பெற்றது.

2. Economical என்ற பெயரடையின் பொருள் 'சிக்கனமான' என்றவாறிருப்பதும் இங்குக் கருதத்தக்கது.

3. இதனால் பணத்தால் செல்வத்தைப் பெருக்கிக் கொள்ளும் செயல்வகைகள் 'கீழ்த்தரமான நிதிச் செயல்வகைகள்' எனப்பட்டன.

அரசின் ஓர் அலகாகவே கருதி வந்தனர். குடும்பம், ஊர், அரசு ஆகியவற்றுக் கிடையே ஒரு பரிணும உறவை அவர்கள் நிலைநாட்டி வந்தனர். இந்நிலையில் 'குடும்பநிருவாகம்' அரசியலின் ஒரு பகுதியாயிற்று: நாளடைவில், 'அரசப் பொருளாதாரம்' (Political Economy) என்றே ஆயிற்று.

கீழை நாட்டு அறிஞர் பெருமக்கள் இந்தக் 'குடும்ப நிருவாகம்' பற்றிக் கொண்டிருந்த கருத்தும் கிட்டத்தட்ட மேலே கண்ட வகையில் தான் இருந்தது. கிரேக்க அறிஞர்கள் 'குடும்ப நிருவாகம்' பற்றிப் பொதுப்படையாகச் சொன்ஞர்களெனில், கீழை நாட்டு அறிஞர்கள் நிருவகிக்கப்படவேண்டியது எது என்பதை வெளிப்படையாகவே சுட்டிக் காட்டிவிட்டனர் எனலாம். 'குடும்ப நிருவாக'ச் செயல் வகைகளுடன் தொடர்பு உள்ளவை பொருள்களே; எனவே, கீழை நாட்டறிஞர்களிடம் 'குடும்ப நிருவாக'மானது 'பொருள் செயல் வகை' ஆயிற்று.

இந்தப் 'பொருள் செயல் வகை'யும் அறநெறிப்பட்டதாகத் தான் இருக்கவேண்டும் என அறிஞர்கள் கருதினர். 'அருளொடும் அன்பொடும்' பொருளாக்கம் வரவேண்டும்; அருட் குழவியின் செல்வச் செவிலி பொருளாக இருக்கவேண்டும் – என்றெல்லாம் பண்டை அறிஞர்கள் கருதினர். இந்தப் 'பொருள் செயல் வகை'யும் அரசியலின் ஒரு கூருகவே இருந்தது. திருவள்ளுவர் பொருள் செயல் வகையை அரசியலின் ஒரு பகுதியாகவே விளக்கினுர். வடமொழியின் 'அர்த்த சாஸ்திரம்'[1] அடிப்படையில் ஓர் அரசியல் நூலே; அதிலும், மன்னன் தன் கருவூலத்தைப் பெருக்கிக் கொள்ளும் வழிவகைகளே விளக்கப்பட்டுள்ளன.[2]

தொடக்கத்தில், இவ்வாறு, இந்த அறிவுத் துறை அறவியலுக்கும் அரசியலுக்கும் மிகவும் கட்டுப்பட்டிருந்தது. பின்னர், சமயக் கருத்துக்கள் மேலோங்கியிருந்த இடைக் காலத்தில் இத்துறை சமயத்தின் அடிமையாகிவிட்டது என்றே சொல்லலாம். [3] பொருட்

[1] அர்த்தம் — பொருள்; சாஸ்திரம் — இயல். 'மண்ணை — அதாவது, செல்வத்தை—அடைவதற்கும் பேணுவதற்கும் உரிய வழிவகைகளைக் குறித்துப் பேசும் அறிவியலே அர்த்த சாஸ்திரம்' என்பார் அந்நூலாசிரியர்.

[2] ஆனல், 'அர்த்த சாஸ்திரம்' குறைந்த அளவே அறத்துக்குக் கட்டுப்பட்டுள்ளது; பொருளாக்கும் மன்னன் அறமல்லா வழிகளையுங் கடைப்பிடிக்கலாமென இந்நூல் கூறும்.

[3] 'நேர்மையான விலை' 'நியாயமான வட்டி, 'இலாபம்' என்றெல்லாம் அறஞ்சார் அடைமொழிகள் பெற்ற புதிய கோட்பாடுகள் இக்காலத்தில் தோன்றின.

பற்றை இழிவாகக் கருதுவதையே இயல்பாகக் கொண்ட சமய நோக்கின் வளர்ச்சி, பொருள் செயல்வகைத் துறையின் வளர்ச்சியை, இக்காலத்தில், பெரிதும் தடைப்படுத்திவிட்டது.

இதனிடையே பதினேழாவது நூற்றுண்டில் உலகெங்கும் தொழில் - வணிக வளர்ச்சி பரவலாக ஏற்பட்டது. இதன் எதிரொலியாக வணிகர் சிறப்பெய்தினர்; 'வணிக மரபினர்' (Mercantilists) என்ற புதியதோர் ஆசிரியர் கூட்டமும் எழுந்தது. இவர்கள் 'திரைகடலோடித் திரவியந் தேடு' வதையே அறமாக்கிவிட்டனர். இவர்கள் கருத்துப்படி பொன்னும் மணியுமே ஒரு நாட்டின் வலிமையை உலக அரங்கில் முடிவு செய்வன. எனவே, மேலும் மேலும் பொன்திரட்டுவது ஒரு நாட்டின் முழு முதற்கடனாயிற்று. 'பொருள் செயல்வகை' 'பொன் செயல்வகை' யாயிற்று. ஒரு காலத்தில் அரிஸ்டாட்டில் 'கீழ்த்தரமான நிதிசெயல்வகை' களெனக் குறிப்பிட்டவைகளெல்லாம், இப்போது இயல்பானவகைகளாகிவிட்டன!

இந்தப் பொன்பித்தத்தைத் தெளிவிக்கும் வகையில் பிரெஞ்சு நாட்டில் 'இயற்கை மரபினர்' (Physiocrats) எனப் பொதுவாக அறியப்பெறும் அறிஞர் பெருமக்கள் சிலர் தோன்றினர். கிரேக்க அறிஞர்கள் முன்பு போற்றிய 'இயற்கை'யை இவர்கள் வலியுறுத்தி, இயற்கை நியதிகளின்படி நடக்கவேண்டுமென அறிவுரை கூறினர். இயற்கையோடிணைந்து பாடுபடுவதன் வழியாகவே பொதுநலம் மேம்படும் என்றனர். தன்னலம் பேணத் தடையேதும் இல்லாமலிருந்தால் பொதுநலம் இயற்கையாகவே மேம்படும் என்றும் நிறுவினர். இதனால் செயற்கை அரசச் சட்டங்களின் பிடி தளர்ந்தது.

இந்தக் காலக் கட்டத்தில் தான் பதினெட்டாம் நூற்றுண்டின் பிற்பகுதியில், வரலாற்றுப்புகழ் பெற்ற தொழிற்புரட்சி இங்கிலாந்து நாட்டில் எழுந்தது. மக்களிடையே நிலவிய சமூக உறவுகள் புதியனவாயின. புதிய அரசியலமைப்புக்கள் தோன்றின. பொருள் செயல் வகைகளும் மாறிவிட்டன. வில்லியம் பெற்றி (William Pitty), ஜான் லாக் (John Locke), டேவிட் ஹ்யூம் (David Hume), ரிச்சர்ட் கான்டில்லியன் (Richard Cantillion) போன்ற ஆசிரியப் பெருமக்கள் 'அரசப் பொருளாதாரம்' என முதலில் குறிப்பிடப்பட்டு, 'பொன் செயல் வகை' எனப் பின்னால் ஆகிவிட்ட குறிப்பிட்ட செயல்வகைகளின் பரப்பு, இயல்பு, தொடர்பு - ஆகியவெல்லாம் மாறிவிட்டதைச் சுட்டிக்காட்ட முன்வந்தனர். ஏற்கெனவே

வணிகமரபினர் பொருள் செயல்வகையையே அறமாக்கிவிட்டிருந் தனர்; அதனை ஊக்குவிப்பதேபோன்று இயற்கை மரபினர் தன் னலம் பேணுவதில் நன்மையே யுள்ளதெனச் சொல்லி வந்தனர்.

(இந்தச் சூழலில், ஆடம் ஸ்மித் (Adam Smith) என்ற ஆங்கில நாட்டறிஞர், 1776-இல் புதிய கருத்துக்களை அறிமுகப்படுத்திய நூலொன்றைக் கொணர்ந்து, புதியதோர் அறிவுத்துறை முழு உரு வம் பெற வழிவகுத்தார். 'நாடுகளுடைய செல்வத்தின் இயல்பை யும் காரணங்களையும் பற்றியதொரு விசாரணை'[1] என்பது அந்நூலின் கவர்ச்சிகரமான தலைப்பு.)

இந்தத் தலைப்பை அலகிட்டு ஆராய்ந்தால், ஆடம் ஸ்மித்தின் அடிப்படைக் கருத்துக்கள் தெளிவாகப் புலப்படும். 'நாடுகளு டைய' என்று பன்மையில் குறிப்பிட்டுள்ளதிலிருந்து செல்வத்தின் இயல்பும் காரணங்களும் எங்கும் உண்மையாக – மனிதகுலத்துக்குப் பொதுவானவையாக — இருக்கின்றன என்பது அவர் கருத்தெனப் புலப்படுகிறது. 'செல்வத்தின் இயல்பை' நோக்கும் போது, ஆடம் ஸ்மித் தமது நூலில் உருவப் பொருள்களையே செல்வமெனக் கொண்டிருப்பதால், அவ்வகைப் பொருள்களே செல்வமாகின்றன. இதனால், உருவப் பொருள்களல்லா ஆசிரியர் - மருத்துவர் பணிகள் போன்றவை செல்வமாகா. இந்த அளவுக்குச் செல்வம் வேறு, அறம் வேறு என்றாகிறது. இனி, 'செல்வத்தின் காரணங்களை'க் காணப் புகுந்தால், இங்கே, இயற்கை மரபினரின் கருத்தை அப் படியே அடியொற்றிச் செல்கிறார் ஆடம் ஸ்மித். தன்னல நாட்டம் மிக்குள்ளவன் மனிதன். எனவே, அந்தத் தன்னலத்தைப் பேணு வதற்கு வேண்டியவற்றைச் செய்வதே செல்வத்தின் காரணங்கள் என்பார் அவர். இறுதியாக, 'விசாரணை' என்ற சொல்லின் அமைதியைப் பார்த்தால், 'இயல்பை' விசாரிக்கும்போது, அது அறிவுபெறும் நோக்கிலும், 'காரணங்களை' விசாரிக்கும்போது, அது செயல்படும் நோக்கிலும் நிகழ்கிறதென்பது தெளிவாகிறது. இவ் வாறு, 'மனிதகுலம் எவ்வாறு உருவப்பொருள்களை (தன்னல நாட்டச் சூழலில்) இயற்றுகிறதென்பதை அறிவுபெறும் நோக்கிலும் செயல்புரியும் நோக்கிலும் அறிவது' தான் ஆடம் ஸ்மித்தினுடைய நூலின் உட்பொருளாகிறது. இதனை இன்னும் சுருக்கமாகச் சொன் னால், 'பொருளுக்கு ஆதாரமானவற்றைப் பற்றி அறிவது' என்று சொல்லலாம். எனவே, இந்த அறிவுத் துறையைப் 'பொருளா தாரம்' என்றும் 'பொருளியல்' என்றும் தமிழில் வழங்குவது பொருத்தமானது தானே!

[1] 'An Enquiry into the Nature and Causes of Wealth of Nations.'

'பொருளுக்கு ஆதாரம்' என்று சொல்லும்போது அந்தப் 'பொருள்' உருவப் பொருள்களே என்பதும், அதற்கு 'ஆதாரம்' மனிதனின் தன்னல நாட்டமே என்பதும் ஆடம் ஸ்மித்தால் தெளிவாக வரையறுக்கப்பட்டுள்ளன. இவ்விரண்டு வரையறைகளும், ஆடம் ஸ்மித்தினுடைய கருத்தின் குறைபாடுகளாக, இந்நாளில், குறிப்பிடப் பெறுகின்றன.

உருவப்பொருள் பெருக்கத்தை வரவேற்பதற்குள்ள மனத்திட்பத்தைப் பதினெட்டாம் நூற்றாண்டைய சமூகத்தில் எதிர்பார்க்க முடியாது. சமயநோக்கு கொடி கட்டிப் பறந்த அந்நாளில் செல்வப் பெருக்கம் சீரழிக்கும் என்ற சிந்தனையே பொதுவாக இருந்தது; எனவே, அந்தச் செல்வத்தைப் பெருக்கத் தனியோர் அறிவுத் துறை இருந்தால், 'பணநாதனைப் போற்றும் அந்த இழிந்த துறை' வேண்டாத ஒன்று என கார்லைல் (Carlyle), இரஸ்கின் (Ruskin) போன்றோர் கருதினர். மேலும், உருவப் பொருள்களுக்குச் சிறப்பையெல்லாம் அளித்துவிட்டு, அப்பொருள்களை அடைகிற மனிதனை, அவன் முயற்சியை, அந்த முயற்சியின் பயனை நலத்தைப் புறக்கணிப்பது பெருந்தவறு என்ற கருத்தும் மேலோங்கியது.

ஸிஸ்மாண்டி (Sismondi) போன்ற தனியுரிமைக் கோட்பாட்டினர் (Individualists) கருத்து இங்குக் குறிப்பிடத்தக்கது. மனிதனுக்கும் சமூகத்துக்கும் இடையேயுள்ள தொடர்பினால் தான் பொருள்கள் சிறப்படைகின்றன. 'மனிதனது நிலையின் உருத்திரிபே செல்வம்; மனிதனுடன் தொடர்புறுத்துவதன் வழியாகவே அதனைப் பற்றிய தெளிவான கருத்தை உருவாக்க முடியும். 'ஏழையர் நிலை மேம்படாத ஒரு நாடு ஒரு போதும் செல்வச் செழிப்புள்ளதாக இருக்க முடியாது. எனவே, மனித நலத்துக்குக் கீழ்ப்பட்டதாகவே செல்வமானது இருக்க முடியும் என்பார் ஸிஸ்மாண்டி. 'பொருளியலானது பரந்த பொருளில் ஓர் ஒப்புரவுக் கோட்பாடே ஆகும். ஆய்வின் இறுதியில் மன்பதையின் மகிழ்ச்சிப் பெருக்கத்தை விளைவாகக் கொண்டிராத எந்தக் கோட்பாடும் அறிவியலைச் சார்ந்ததன்று' என்பார் ஸிஸ்மாண்டி.

ஆடம் ஸ்மித் வலியுறுத்திய 'தன்னல நாட்ட'த்துக்கு அடிப்படையான அவரது தனியுரிமைக் கருத்து இருவேறு கோணங்களிலிருந்து கண்டனத்துக்கு ஆளாகியது. தேசிய மரபினர் ஒரு புறமும், சமதருமக்கருத்தினர் மற்றொரு புறமுமிருந்து இக் கண்டனத்தைக் கொணர்ந்தனர்.

ஒரு நாட்டின் உறுப்பினர் குடிமக்கள். எனவே அவர்களுடைய செல்வமானது நாட்டைச் சார்ந்து, அதற்குட்பட்டே இருக்கிறது. மொழி, இலக்கியம் தோற்றம், வரலாறு, பழக்க வழக்கங்கள், சட்டங்கள், சமூக நிறுவனங்கள், வளங்கள், உரிமைநிலை, முன்னேற்றம், காலமுதிர்ச்சி, வரையறுக்கப்பட்ட நிலப்பரப்பு—ஆகிய வெல்லாம் நாட்டுக்கு நாடு வேறுபடுகின்றன. இந்நிலையில், நாட்டின் சமூக அரசியல் சூழல்களைப் பொருத்து மக்களுடைய உற்பத்தி ஆற்றல் வேறுபடுவது இயல்பு. 'நாட்டின் பொருளியல் கல்விக்கு ஏற்பாடு செய்வதும், வருங்காலத்து உலகமுழுதளாவிய இணைப்பில் அதற்குரிய இடத்தை எடுத்துக் கொள்ள நாட்டை ஆயத்த மாக்குவதுமே அரசப் பொருளாதாரத்தின் குறிக்கோள் பணித்திட்டம்' என்பார் இந்தத் தேசிய மரபின் தலைவராகக் கருதப்பெறும் பிரெரிக் லிஸ்ட் (Frederick List) என்பவர். இவ்வாறு தனி மனிதன் கண்ணோட்டத்தில் அல்லாமல், நாட்டின் ஆகமொத்தக் கண்ணோட்டத்திலிருந்தே பொருளியலை ஆய வேண்டும் என்கிறது. இவர்கள் கருத்துப்படி ஆடம் ஸ்மித்தின் விளக்கவுரையில் 'நாடுகளுடைய செல்வம்' என்ற சொற்றொடருக்குப் பதிலாக 'நாட்டினது செல்வம்' என்ற சொற்றொடரை ஆள்வதே பொருத்தமா யிருக்கும்.

ஆடம் ஸ்மித்தின் விளக்கவுரையைச் சமதருமக் கருத்தினர் அணுகிய முறை முற்றிலும் வேறுபட்டிருந்தது. செல்வத்தின் இயல்பில் இவர்களுக்குக் கருத்து வேற்றுமை இல்லாவிடினும், அதற்குரிய காரணங்களில் அடிப்படையான கருத்து வேற்றுமை இருந்தது.

மனித சமூக வாழ்வின் அடிப்படையே பொருளியல் நுதல் பொருள். சமூக வளர்ச்சிக்குக் காரணம் ஆண்டவன் அருளோ, நிலவியல் சூழ்நிலையோ, தனிப்பட்ட தலைவர்களின் செயலோ எதுவுமன்று; செல்வத்தின் உற்பத்தியொன்றே இதற்குக் காரணம். இந்த உற்பத்தியானது மனித உழைப்பு, உழைப்புக் கருவிகள், உழைப்புச் சாதனங்கள் ஆகிய மூன்றையும் பொருத்துள்ளது. இருந்தாலும், செல்வ உற்பத்தியில் மக்கள் ஈடுபடும்போது அவர்கள் அனைவரும் ஒருவர்க்கொருவர் தொடர்புள்ளவர்களாகத் தமக்கிடையே திட்டவட்டமான சில உறவுகளைக் கொண்டுள்ளனர். செல்வத்தின் உற்பத்தியிலும், பகிர்விலும், மாற்றிலும் நிலவுகிற இந்த உறவை உற்பத்தி (அல்லது, பொருளியல்) உறவுகள் என்று சமதருமக் கருத்தினர் அழைப்பர். இந்த உறவுகள் வரலாற்றுக் கண்ணோட்டத்தில் ஐவகைப்படும். நாகரிகமடையாத சமூகம், அடிமை முறை, நிலமானிய முறை, முதலாளித்துவம், சமதருமம் ஆகிய ஐந்து அமைப்

மக்களிலும் உற்பத்தி வழி வகைகள் எவருடைய உரிமையாக இருக்கின்றன என்ற அடிப்படையில் உற்பத்தி உறவுகள் வெவ்வேறு வகைப்படுகின்றன. இவை ஒவ்வொன்றுக்கும் பொருத்தமான பொருளியல் அமைப்பு, கருத்துக்கள், குறிக்கோள்கள், சமூக ஏற்பாடுகள் உள்ளன. இவை வரன்முறையாக ஒன்று தன்னைவிட உயர்வான அடுத்ததற்குத் தானகவே வழிவகுக்கின்றன. சமூக—பொருளியல் முறைகளின் தோற்றம், வளர்ச்சி, வீழ்ச்சி ஆகிய அனைத்தும் பொருளியல் விதிகளின் நிலைக்களனாக உள்ளன. இவ்விதிகளைக் கண்டு பிடிப்பது தான் ஓர் அறிவியலின் நோக்கமாக இருக்க முடியும் என்பது சமதருமக் கருத்தினர் முடிவு. இவ்வாறு பொருளியலின் உட்கிடைப் பொருள் 'மக்களுடைய உற்பத்தி — அல்லது, பொருளியல் — உறவுகளேயாம். உற்பத்தி வழிவகைகளின் உரிமையாதிக்கம், உற்பத்தியில் பல்வேறு சமூகக் குழுக்களுக்கு இருக்கும் இடம், அவற்றிக்கு இடையேயுள்ள உறவு, உருவப் பொருட் செல்வம் பகிர்ந்தளிக்கப் பெற்றுள்ள முறை—ஆகியவை அவற்றுள் அடங்கும். வேறு சொற்களில் கூறுவதானல், மக்களிடையேயுள்ள சமூக உற்பத்தி—அல்லது, பொருளியல்—உறவுகளின் வளர்ச்சி பற்றிய அறிவியலே பொருளியல். மனித சமூகத்தின் பல்வேறு வளர்ச்சிக் கட்டங்களில் செல்வத்தின் உற்பத்தியையும் பகிர்வையும் ஒழுங்குபடுத்துகிற விதிகளை அது விளக்குகிறது.' [1]

சமதருமக் கருத்தினரின் விளக்கம் பொருளியலின் பொருள் வரையறை பற்றிப் பிற சிந்தனையாளர்களைச் சிந்திக்கத் தூண்டியது. இங்கும் இருவகைச் சிந்தனைகள் எழுந்தன. ஒரு கூட்டத்தார் பொருளியலானது சமூக அமைப்பு வேறுபாடுகளுக்கு அப்பாற்பட்டதெனக் கருத, மற்றொரு கூட்டத்தார் பொருளியலின் வாய்ப்பெல்லையினுள் சமூக நலத்துக்கும் உரிய இடம் வழங்க வேண்டுமென வலியுறுத்தினர்.

முதல் கூட்டத்தில் ஸீனியர் (Senior) கேர்ன்ஸ் (Cairnes) போன்ற அறிஞர் பெருமக்களைக் காணலாம். பொருளியல் நுதல் பொருள் செல்வமே யொழிய மகிழ்ச்சியல்ல என்று ஸீனியர் குறிப்பிட்டதோடு, பொருளியல் நூலாளன் காணும் முடிவுகள் 'எவ்வளவுதான் பொதுவானவை யாகவும் உண்மையானவை யாகவும் இருந்தாலும், அறிவுரை ஒன்றையேனும் சேர்க்க அவை, அவனுக்கு உரிமை வழங்கவில்லை' என்பார். 'தற்கால நம் இரயில்வே முறைகளுக்கும் இயக்கவியலுக்கும் (Dynamics) இடையேயுள்ள தொடர்பினும் மிகுதியான அளவு தொடர்பு நம் தற்காலத் தொழில் முறைக்

[1] 'Fundamentals of Political Economy' by P. Nikitin P. 15.

கும் பொருளியல் அறிவியலுக்கு மிடையே இல்லை' என்பார் கேர்ன்ஸ். இதன் பொருள் பொருளியல் வேறு, அரசியல் வேறு என்பதே. பொருளியல் செயல்வகைகள் சமூக ஏற்பாடுகளைத் தாண்டி நிற்கின்றன; அல்லது, பல்வேறு சமூக ஏற்பாடுகளுக் கிடையே உள்ளீடான சில அடிப்படைச் செயல் வகைகளையே பொருளியல் குறித்து நிற்கிறது என்பது இவ்வாசிரியர்கள் கருத்து.

இதற்கு மாறுபட்டதொரு நிலையில் ஜான் ஸ்டூவர்ட் மில் (John Stuart Mill) பொருளியலையும் சமூக நலத்தையும் பிணைத்தாக வேண்டும் என வலியுறுத்தினர். தொன்னூலாளர் கருத்தை அவர் ஏற்றுக்கொண்ட நிலையிலேயே சமதருமத்தின் இன்றியமையாமை யையும் ஒப்புக் கொண்டார். இதே நேரத்தில் 'நலம்' (Welfare) பற்றிய புதிய கருத்துக்களை ஆஸ்திரிய நாட்டறிஞர்கள் பலர் தெரி விக்க முன் வந்தனர். 'மிகவுயர்ந்த அளவு மகிழ்ச்சி' பெறுவதே பொருளியல் செய்கைகளின் இறுதிக் குறிக்கோளென இவர்கள் சுட்டினர். ஒருவனது மகிழ்ச்சி எந்நிலையில் மிகவுயர்ந்த அளவினை அடையுமென்பதை அவன் மட்டுமே அறியத்தக்கவன்; ஆதலால் அவனைத் தடையின்றிச் செயல்புரிய விட்டுவிட வேண்டும் என்ற கருத்தைச் சுட்டி, இந்தப் புதிய மரபினர் சமதருமக் கருத்துக்கு மறுப்புத் தெரிவித்தனர்.

இவ்வாறு, பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதியில் பொரு ளியலின் பொருள்வரையறை பற்றிய கருத்து வேற்றுமைகள் மூவகைப்பட்டிருந்தன. பொருளியலின் கருப்பொருள் செல்வமா, அல்லது நலமா என்பதில் ஒருவகைக் கருத்துவேறுபாடு நிலவியது. இரண்டாவதாக, தனி மனிதன் செய்கைகளிலும் சமூகச் செய்கை களிலும் எவ்வகைச் செயல்கள் பொருளியலின்பாற் படுகின்றன என்பதிலும் கருத்து வேற்றுமை இருந்தது. இறுதியாக, பொரு ளியலின் இயல்பு பற்றியும் மாறுபட்ட கருத்துக்கள் தெரிவிக்கப் பட்டன: பொருளியல் அறிவானது அறிவு வளர்ச்சிக்கு உதவு வதா, அல்லது செயல்புரியத் துணை நிற்பதா என்பதில் ஆசிரியர் களுக்கிடையே கருத்தொற்றுமை இல்லை. இந்த எதிரெதிர் கருத் துக்களையெல்லாம் ஒருங்கிணைத்து, பொருளியலுக்குப் புதியதொரு பொருள் வரையறையைக் கட்டியவர் ஆல்பிரட் மார்ஷல் (Alfred Marshall) என்பவர் ஆவர்.

மார்ஷலின் புகழ்பெற்ற நூலாகிய 'பொருளியலின் மூலக் கோட் பாடுகள்' (Principles of Economics) இவ்வாறு தொடங்குகிறது. 'பொது முறையான தொழில் வாழ்வில் (ஈடுபட்டுள்ள) மன்பதை

யைப் பற்றிய அறிவாராய்ச்சித்துறை பொருளியல் அல்லது அரசப் பொருளாதாரம்; தனிமனிதச் செயல் வகைகளிலும், சமூகச் செயல் வகைகளிலும் நல்வாழ்வுக்கு இன்றியமையாத உருவப் பொருள் களைப் பெறுவதுடனும் பயன்படுத்துவதுடனும் மிக நெருங்கிய தொடர்புடைய பகுதியை அது ஆய்கிறது.'[1]

மார்ஷலின் பொருள்வரையறையை இனி அலகிட்டுப் பார்க்கலாம். தொல்லோர்களைப் போலச் செல்வத்தை நுதல்பொருளாகக் கொள்ளாமல், மன்பதையை நுதல்பொருளாகக் கொண்டார் மார்ஷல். மனிதன் பன்முகத்தவன்: குறுவை சாகுபடி செய்வது முதல் கூத்தில் கலந்து கொள்வது ஈருகப் பல துறைகளில் ஈடுபடுகிறுன் மனிதன். அவற்றுள், பொது முறையான (சாதாரணமான) தொழில் வாழ்வில் ஈடுபட்டுள்ள மனிதனைப் பற்றியே பொருளியல் ஆய்கிறது. இந்தப் 'பொது முறையான தொழில் வாழ்வு' எது என்ற வினு இயல்பாகவே எழுகிறது. குடியானவன் முதல் கூத்தாடி வரை எல்லார்க்கும் பொது முறையான தொழில் வாழ்வு அவரவர் பொருளீட்டிச் செலவிடும் முயற்சி தானே? இதனையே, 'உருவப் பொருள்களைப் பெறுவதும் பயன்படுத்துவதும்' எனக் குறிப்பிடுகிருர் மார்ஷல். அடுத்து, இந்தத் தொழில் வாழ்வின் நோக்கமென்ன என்ற வினுவும் எழுகிறது. 'நல்வாழ்வு' என இவ் வினுவுக்கு விடை யளிக்கிருர் மார்ஷல். இந்தத் தொழில் வாழ்வு தனி மனிதன் செய்கைகளை மட்டுமல்ல, அவனை உறுப்பாகக் கொண்ட சமூகத்தையும் சார்ந்துள்ளது என்பதையும் மார்ஷல் நினைவூட்டுகிருர்.

இவ்வாறு, மார்ஷலின் கருத்துப்படி பொருளியல் மனிதனுடைய செயல்களையே கற்கிறது; அச் செயல்களும் சமூகச் சூழலில், நல்வாழ்வுக் குறிக்கோளுடன் நிகழவேண்டும். செயல்களைக் கற்கும் போது அறிவைத் தேடுவது நோக்கமாக இருந்தாலும், அச் செயல்களின் இறுதிக் குறிக்கோள் 'நல்வாழ்வு' என்று குறிப்பிடும்போது, பொருளியல் அறிவு, செயல்துறைச் சிறப்புள்ளது என்பதும் தெளிவாகிறது. 'ஏழைகள் இழி நிலை பற்றியே பொருளியல் முதன்மையாக ஆய்கிறது; இந்த இழி நிலைக்கு முடிவு கட்ட வேண்டும் என்ற தூண்டுதலே பலரைப் பொருளியல் அறிவாராய்ச்சித் துறைக்கு ஈர்த்துள்ளது' என்பார் மார்ஷல். மேலும், 'பொருளியல்' என்ற

[1] 'Political Economy or Economics is the study of mankind in the ordinary business of life. It examines that part of individual and social action which is most closely connected with the attainment and with the use of material requisities of well-being.'

தலைப்பின் முன் 'அரசு' என்ற சொல்லை அடைமொழியாக ஆள்வதற்கும் முடிவு கண்டார் மார்ஷல். 'இக்கானமி' என்ற பழஞ்சொல்லின் முன்னிருந்த 'பொலிட்டிக்கல்' (அரசு சார்) என்ற அடைமொழியை நீக்கி விட்டு, அதன் பின் 'இக்ஸ்' என்ற (அறிவியல் சார்பு தொனிக்கும்) விகுதியைச் சேர்த்து 'இக்கனமிக்ஸ்' என்ற பெயரை நிலை நிறுத்தினர் மார்ஷல்.

மார்ஷலின் மாணாக்கர்களாகிய கானன் (Cannan), பிகு (Pigou) ஆகியோர் தம் ஆசிரியரின் கருத்தை மேலும் விளக்கியுள்ளனர். 'நல்வாழ்வுக்கு இன்றியமையாத உருவப்பொருள்களைப் பெறுவதும் பயன்படுத்துவது'மாகிய செயல் வகையைச் சுருக்கமாக 'உருவப்பொருள்சார் நலத்துக்குரிய காரணங்கள் என்று கானன் குறிப்பிடுவார். 'உருவப்பொருள் சார் நலம்' என்ற சொற்றொடரை மேலும் எளிதாக்கும் வகையில் பிகு விளக்கியுள்ளார். 'பணமெனும் அளவுகோலுடன் நேரடியாகவோ மறைமுகமாகவோ தொடர்புறுத்த முடிகிற சமூக நலத்தின் பகுதி'யே பொருளியல் நலம் என்பார் பிகு. தமது புகழ் பெற்ற நூலாகிய 'நலத்தின் பொருளியல்' (Economics of Welfare) என்பதில் 'நலப்பொருளியல்' (Welfare Economics) பற்றி மிக விரிவாக இவர் எழுதியுள்ளார்.

இவ்வாறு, மார்ஷல் தந்த விளக்கம் பண்டிதர்க்கும் பாமரர்க்கும் புரியும் வகையில் இருந்தபோதிலும், இலண்டன் பொருளியல் பள்ளி (London School of Economics) யைச் சார்ந்த பேராசிரியர் இலயனல் இராபின்ஸ் (Lionel Robbins) தாமெழுதிய 'பொருளியல் அறிவியலின் இயல்பையும் உட்கருத்தையும் பற்றியதொரு கட்டுரை' (An Essay on the Nature and Significance of Economic Science) என்ற நூலில் மார்ஷல் கருத்திலும், அவருடைய சீடர்கள் கருத்திலும் குறைகளிருப்பதாகக் குறிப்பிட்டுள்ளார். உருவப் பொருள்களுக்கே முதன்மை நல்கியுளதாகவும், 'நலம்' பற்றிய கருத்துக்கள் வேண்டாதன என்றும் இரு வகைகளில் இக் குறைபாடுகள் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

உருவப்பொருள் சாராச் செயல் வகைகள் -- அவை, நல்வாழ்வுக்கு உகந்தனவாக இருந்தாலும் — பொருளியலின் வாய்ப்பெல்லையினுள் இடம்பெருத வகையில் மார்ஷலின் விளக்கம் அமைந்துள்ளது என்பது முதல் குறைபாடு. மனிதனுடைய நலமானது உணவும் உடையும் போன்ற உருவப்பொருள்களை மட்டுமல்ல, அருவப் பொருள்களாகிய ஆசிரியர், மருத்துவர் போன்ருேருடைய

பணிகளையும் பொருத்துள்ளது. உண்மையில், உருவப்பொருள் களும் அருவப்பொருள்களுமாகிய இருவகைப் பொருள்களையும் பற்றிப் பொருளியல் ஆய்ந்தாக வேண்டும்.

மனிதனுடைய செயல்களின் இறுதிக் குறிக்கோள் நல்வாழ்வு தான் என அறுதியிட்டுக் கூறவும் முடியாது. நாட்டு வளங்களைப் போரிடுவதில் செலவிடுவதை இதற்கோர் எடுத்துக் காட்டாகச் சொல்லலாம். போரினால் நலமெதுவும் ஏற்படுவதில்லை; பொருள் கள் பாழாகின்றன. இருந்தபோதிலும், அது ஒரு பொருளியல் சிக்கல் என்பதை மறக்க முடியாது.

பொருளியல் செயல் வகைகளின் இறுதி நோக்கம் நல்வாழ்வு எனச் சொல்வதில் வேறொரு குறைபாடும் உள்ளது. அவ்வாறு சொல்லும்போது, நல்வாழ்வைக் கொணர்வதற்கான, அல்லது, பேணுவதற்கான, தேவைப்பட்டால் பெருக்குவதற்கான வழி முறை களைப் பரிந்துரைக்க வேண்டிய பொறுப்பு பொருளியல் துறையி னர்க்கு உரியதாகிறது. இந்தப் பொறுப்பை நிறைவேற்றும்போது, நல்லது – கெட்டது எனப் பாகுபாடு செய்ய வேண்டி வரும். அந் நிலையில், பொருளியல் அறவியல் கோட்பாடுகளுக்கு அடி பணிய நேரும். தூய அறிவியல், இயல்புரைப்பதாக இருக்குமே யொழிய, நெறியுரைப்பதாக இருக்க முடியாது என்பார் இராபின்ஸ்.

பொருளியல் நலத்தை அளந்தறியப் பணத்தை ஓர் அளவு கோலாகப் பயன்படுத்துவதிலும் சிக்கல்கள் உள்ளன. கிலோவும் மீட்டரும் ஆள்பேதங் காட்டுவதில்லை. ஆனால், பணமோ அத் தகைய தன்று. ஒரேயளவு பணத்திலிருந்து ஏழையொருவனும் செல்வனொருவனும் பெறுகிற நிறைவின் அளவு — நலம் — வெவ் வெருகத்தானே இருக்கிறது? பணம் புழங்காத பண்டமாற்றுச் சமூகத்தில் பொருள்சார் நலத்தை எவ்வாறு அளவிடுவது என்ற சிக்கலும் வேறுள்ளது.

மேலும், சமூகச் சூழலில் நிகழ்ந்தேறும் செயல்களையே பொரு ளியலில் கற்க வேண்டுமெனில், தனி மனித (இராபின்ஸன் குரூஸோ). சமூகத்துக்கு மார்ஷலின் பொருள் வரையறை பொருந்தாது போக லாம். இறுதியாக, மனித வாழ்வைத் தொழில் வாழ்வு, சமய வாழ்வு, இலக்கிய வாழ்வு எனப் பகுக்க முடியும் என்பதிலும் இராபின்ஸ் போன்றோர் தம் நம்பிக்கை யின்மையைத் தெரிவித் துள்ளனர்.

மேலே கண்ட குறைபாடுகளெல்லாம் பெரும்பாலும் மிகைப் படுத்தப்பட்டுள்ளவை என்பது ஆழ்ந்து சிந்திக்கப் புலப்படும். மார்ஷலும் அவருடைய சீடர்களும் உருவப் பொருள்களை மட்டும் வலியுறுத்தியதாகச் சொல்வது சரியன்று. செல்வத்தின் இயல்பை விளக்கும்போது, தமது நூலினுள் அருவப்பொருள்களையும் செல்வமெனவே அவர் கருதியுள்ளார். இசை விருந்தயர்வதும் பொருள் சார் நலந்தரும் என்று கானன் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார். எனவே, ‘ உருவப் பொருள்கள் ’ எனக் குறிப்பிட்டபோது மறுமைக்குரிய பொருள்களிலிருந்து வேறுபடுத்திக் காட்டும் வகையில் உலகியல் சார்ந்த பொருள்களே அவ்வாறு குறிப்பிடப்பட்டுள்ளன என்று கொள்வதே பொருந்தும். இரண்டாவது குறைபாட்டைப் பொருத்த வரை ‘ நலம் ’ என்ற சொல்லைத் தனிமனிதனின் குறுகிய கண்ணோட்டத்தி லிருந்து அணுகாமல், பிகுவைப் பின் பற்றிச் சமூகக் கண்ணோட்டத்தில் ஆய்ந்தால் இந்தக் குறைபாட்டுக்கு இடமிராது.

பொருளியல் நெறியுரை இயலாக இருக்க முடியாது என்ற இராபின்ஸின் கருத்து, அடிப்படையான சில சிக்கல்களை எழுப்புகிறது.[1] கார்லைல் கூறியதுபோல வியப்புணர்ச்சி தத்துவத் துறைக்குத் தோற்றுவாயாக இருக்கலாம்; ஆனால், பொருளியல் துறை தோன்றச் சமூக வுணர்வு தான் காரணமே யொழிய வியப்புணர்ச்சியன்று. இவ்வுணர்வும், இன்மையின் இனிமையன்மையைக் கண்ணுற்ற கழிவிரக்கத்தால் — சில நேரங்களில் கொதிப்பாலுங் கூடத் — தட்டியெழுப்பப் பட்டதாகும். எனவே, அது இன்மைதீர் நெறிகளைப் பரிந்துரைத்தாக வேண்டும். பொருளியல் அறிவும் அது தரும் பயனுக்காகவே போற்றப்பட வேண்டும்; வெறும் அறிவுக்காக அன்று.

பணம், நலத்தை அளவிடுவதில் தவறலாம் என்பது உண்மையே. ஆனால், பொருளியல் ஆய்வுத்துறையில் முடிவுகளை எட்டுவதற்குப் போதுமான அளவு தோராயமான மதிப்பீடுகளைப் பணத்தின் துணைகொண்டு செய்ய முடியும். மேலும், பணத்தை அளவுகோலாக எடுத்துக் கொள்ளாமலே பொருள்களைக் கொண்டே நலத்தை அளவிடலாம்; அந்த அளவீடு சற்று நயங்குன்றி இருக்கும் என்பதுதான் குறை.[2]

[1] பின்னர் அடுத்த தலைப்பின் கீழ் இவை விளக்கப்பெறும்
[2] பகிர்வு இயலில் ‘ நாட்டு வருமானம் ’ பற்றிய பகுதிகளைப் பார்க்க.

பொருளியல் ஒரு சமூக அறிவியலாகத் தான் இருக்க முடியு மெனத் தேசிய மரபினரும் சமதருமக் கருத்தினரும் ஏற்கெனவே வலியுறுத்தியுள்ள நிலையைத் தொடக்கத்தில் கண்டுள்ளதால், அது பற்றி இங்கு மீண்டும் சொல்ல வேண்டியதில்லை. இறுதியாக, மனித வாழ்வைப் பகுப்பது பற்றிச் சிந்தித்தால், அவ்வாறு பகுத்தாய மட்டும் வாய்ப்பில்லையேல், அரசியல், சட்டவியல், உளவியல் போன்ற எந்தச் சமூக அறிவியல் துறையும் தனித்தியங்க முடியாது என்பதை இங்குக் கவனிக்க வேண்டும். ஆடம் ஸ்மித் அன்றே கூறியது போலத் தத்துவத்துறையைப் பகுத்துப் பகுத்து ஆய்ந் தால் 'செயல் திறமை மிகுவதோடு காலமும் மிச்சப்படுகிறது.'

மார்ஷலின் பொருள்வரையறையில் குறைகண்ட இராபின்ஸ் தாமே ஒரு வரையறையைத் தந்துள்ளார். அதனை அடுத்துக் காண வேண்டும். மார்ஷலின் விளக்கத்தில் 'உருவப் பொருள்', 'நலம்' ஆகிய இரு கூறுகளுமே இராபின்ஸின் கருத்துக்கு ஒவ்வா திருந்தன. எனவே, மார்ஷலின் விளக்கத்திலிருந்து இவ்விரு சொற் களையும் நீக்கி விட்டால், 'மன்பதையின் (உருவ, அருவப்) பொருள்சார் செயல்வகைகள்' பற்றிய குறிப்பே மிஞ்சுகிறது. இப் பொருள்களுக்காக மனிதன் ஏன் 'செயல்பட' வேண்டும் என்று சிந்தித்தால், இச் செயற்பாட்டுக்குக் காரணம் பொருள்களின் இயல்பான அருமைப்பாடுதான் என்பதை அறியலாம். எனவே, இராபின்ஸ் 'குறிக்கோள்களுக்கும் பலபயனுடைய அரிய வழி வகை களுக்கு மிடையே தோன்றுகிற மனித ஒழுகலாற்றினைப் பற்றி ஆராய்கிற அறிவியலே பொருளியல்' [1] என்பார்.

மேலேயுள்ள கருத்தை அலகிட்டு ஆய்ந்தால் இராபின்ஸின் கருத்துத் தெளிவாகப் புலப்படும்.

மனிதனது 'குறிக்கோள்' என்ன என்பது இங்கு எழுகிற முதல் வினா. 'நல்வாழ்வு' என்பது மார்ஷலின் விடை. ஆனால், இராபின் ஸோ நன்மை தீமைக் கூறு எதுவுமில்லாத 'விருப்பங்களே' மனித னுடைய குறிக்கோள்கள் என்பார். இந்த விருப்பங்களின் சிறப் பான இயல்புக் கூறுகள் இரண்டினை இங்குக் கவனிக்க வேண்டும். விருப்பங்களுக்கு வரம்பில்லை ; ஒன்றை நிறைவேற்றினால், அத னிடத்தில் மற்றொன்று மறுகணமே கிளைக்கிறது. 'ஆசைக்கோர் அளவில்லை ; அகிலமெல்லாங் கட்டியாளினும் கடல் மீதில் ஆணை செலவே நினைவர், அளகேசன் நிகராக அம்பொன் மிக வைத்த

[1] 'Economics is the science which studies human behaviour as a relationship between ends and scarce means which have alternative uses.'

பேரும் நேசித்து ரசவாத வித்தைக்கு அலைந்திடுவர்' மேலும், இந்த விருப்பங்களெல்லாம் ஒப்பான சிறப்புள்ளவை என்றும் சொல்ல வழியில்லை ; சில தீவிரமானவைகளாகவும், வேறு சில தீவிரங் குறைந்தவைகளாகவும் உள்ளன. சோற்றின் மீதுள்ள விருப்பமும் கூத்தின் மீதுள்ள விருப்பமும் ஒப்பான தீவிரமுள்ளவை என்று பொதுவாகச் சொல்ல முடியாதல்லவா ?

இந்தக் குறிக்கோள்களை நிறைவேற்ற வேண்டுமெனில், அதற்கான வழி வகைகளைப் பெற வேண்டும். விருப்பங்களை நிறைவேற்ற உதவுகிற நிலம், உழைப்பு, காலம், கச்சாப்பொருள்கள், எந்திரங்கள் முதலிய பல்வேறு பொருள்களே வழிவகைகள் எனப் பெறுகின்றன. இப் பொருள்களின் மிக முக்கியமான கூறு இவை அரியனவாக இருப்பதுதான். வீட்டுக்கொரு காமதேனுவோ கற்பக மரமோ இருந்தால் கவலையில்லை ! ஆனால், உலகியலில் வழி வகைகள் அரியனவாயுள்ளன ; அதனால், இவற்றைப் பெறப் பாடுபட்டாக வேண்டும் : பொருளியல் செய்கைகளில் ஈடுபட்டாக வேண்டும்.

இந்த வழிவகைகளின் மற்றோர் இயல்பு இவற்றைப் பல வழிகளிலும் பயன்படுத்த முடியும் என்பது தான். நிலத்தைப் பசி தீர்க்கப் பயிரிடவும் பயன்படுத்தலாம்; பொழுது போக்கப் பந்தடித் திடலாகவும் பயன்படுத்தலாம். ஆனால், இரண்டிற்கும் பயன்படுத்தப் போதுமானபடி நிலமில்லை. எனவே, ஏதாவது ஒன்றில் தான் பயன்படுத்த வேண்டி ஏற்படுகிறது.

இந்தச் சூழலில் சிக்கலொன்று தோன்றுகிறது. வரையறையற்ற விருப்பங்களை நிறைவேற்ற வரையறைக்குட்பட்ட வழி வகைகளை ஆளும்போது, எந்த விருப்பத்தை நிறைவேற்றுவது —அல்லது, எந்த விருப்பத்தை நிறைவேற்றுவதில் வழிவகையை ஆள்வது — என்ற தேர்வுச்சிக்கல் தோன்றுகிறது. மேலே சொன்ன எடுத்துக் காட்டைத் தொடர்ந்தால், பசி விருப்பத்தை நிறைவேற்றுவதா, அல்லது, பொழுது போக்கு விருப்பத்தை நிறைவேற்றுவதில் நிலத்தை ஆள்வதா என்ற சிக்கல் தோன்றுகிறது. 'அரைத்துட்டிலே கல்யாணம் ; அதிலே கொஞ்சம் வாணவேடிக்கை' என்ற கதை தான் ! இதனால், இயல்பாகவே விருப்பங்களை வரிசைப் படுத்தித் தீவிரமானவற்றை நிறைவேற்றுவதில் அரிய வளங்களைப் பயன்படுத்தியாக வேண்டும். விருப்பங்களை வரிசைப்படுத்துவது மனிதனது விருப்பத் தேர்வு ஆகிறது. இந்த விருப்பத்தேர்வு பொருள்களை மதிப்பீடு செய்வதாகிறது. இந்த மதிப்பீடு பொருளியலின் மையக் கூறுகிறது.

மேலே சொன்ன நிலைகளெல்லாம் ஒருசேர ஏற்படும்போது தான் மதிப்பீட்டுச் சிக்கல் தோன்றும் என்பதை இங்குக் கவனிக்க வேண்டும். குறிக்கோள் பலவாயிருப்பதாலேயே சிக்கல் ஏற்படும் என்றில்லை. குறிக்கோள் பலவாயிருக்கும்போது, அவற்றை யடை யும் வழிவகைகளும் அளவற்றிருந்தால், சிக்கலுக்கு இடமே யில்லை யல்லவா ? இது போன்றே, வழி வகைகளின் அருமைப்பாடு மட்டும் தேர்வுச் சிக்கலுக்குக் காரணமாகி விட முடியாது. வழி வகைகள் தனியொரு துறையில் மட்டுமே பயன்படத்தக்கவையாக இருந்தால் அவற்றை எத்துறையில் ஆள்வது எனத் தேர வேண்டிய சிக்க லுக்கு இடமே யில்லை. எனவே, வழிவகைகள் மாற்றுத் துறைகளில் ஆளத்தக்கவைகளாகவும் இருக்க வேண்டும்.

உலகியல் சார்ந்ததோர் எடுத்துக் காட்டு மூலம் இவ் வுண்மை களை விளக்கலாம். பி. ஏ. தேறிய மாணவனுக்கு இரு விருப்பங்கள் இருப்பதாக வைத்துக் கொள்வோம்; எம். ஏ. பயில வேண்டு மென ஒரு விருப்பம் ; இல்வாழ்க்கையில் ஈடு பட வேண்டும் என் பது அடுத்த விருப்பம். இவ் விருப்பங்களை நிறைவு செய்ய வேண்டு மெனில் கல்விச் செலவுக் கெனப் பணமும், மணந்து கொள்ள மங்கை யொருத்தியும் வேண்டும். பணம் படைத்த மங்கை கிடைத்து விட்டாலோ, இரு விருப்பங்களும் நிறைவேறி விடு கின்றன: தேர்வுச் சிக்கலுக்கு இடமே யில்லை. இங்கு, விருப்பங் கள் பலவெனில், வழி வகைகளும் அரியனவாக இல்லாமல் பலவா கவே உள்ளன. இனி, மங்கை மட்டும் கிடைப்பதாக வைத்துக் கொண்டால், விருப்பங்கள் பலவாகவும், வழிவகைகள் சிலவாகவும் இருந்த போதிலும், இருக்கிற வழிவகைகளைக் கொண்டு குறிப்பிட்ட விருப்பம் ஒன்றை மட்டுமே நிறைவேற்ற முடியுமாதலால், இங்கும் தேர்வுக்கு இடமில்லை. மாறாக, விருப்பங்கள் மேற்குறித்த பல வாகவும், வழிவகை பணமெனும் ஒன்றாகவும் இருப்பதாக வைத்துக் கொண்டால், இங்கு, அரிதாக இருக்கும் வழிவகையைப் படிப்புக்குச் செலவிடுவதா, அல்லது, பரிசம் போட்டுப் பெண் முடிப்பதில் பயன் படுத்துவதா என்ற சிக்கல் தோன்றுகிறது. விருப்பங்களை மதிப்பீடு செய்தாக வேண்டும் ; இங்குப் பொருளியல் சிக்கலொன்று கருக் கொள்கிறது.

இந்த மதிப்பீட்டுச் சிக்கலில் பொருளியலாளன் பணி என்ன ? மனிதனுடைய விருப்பங்களைத் தெரிவு செய்து கொடுப்பது பொரு ளியல் நூலாளன் பொறுப்பா? என்ற வினாக்கள் இங்கு எழுகின்றன. இவ் விரண்டாவது வினா பொருளியலின் வாய்ப்பெல்லைக்கு அப்பாற் பட்டது என்பார் இராபின்ஸ். மக்களுக்கு நிறைவு தரும் பொருள்

களின் தகுதி, இயல்பு, அவரவர் உளவியல் நோக்கை, சுவை நிலையை, சிந்தனைப் போக்கைப் பொறுத்துள்ளது. இவற்றைப் புனைவதும் புதுக்குவதும் பொருளியல் நூலாளர் தொழிலல்ல. தத்துவ ஞானிகளும், அரசியல் வித்தகர்களும், அறவியல் தலைவர்களும் அத் தொழிலில் ஈடுபடலாம். பொருளியல் நூலாளர் தொழில் இருக்கிற அரிய வழிவகைகளைப் பல்வேறு விருப்பங்களை நிறைவேற்ற எவ்வளவு சிக்கனமாகப் பயன்படுத்த முடியும் என்பதைச் சுட்டிக் காட்டுவது மட்டுமே யாகும். குறிக்கோள்களில் நல்லவை கெட்டவை என எவையு மில்லை. அவற்றை நிறைவேற்றுவதில் தான் சிக்கன மான வழிகளும் சிக்கன மற்ற வழிகளும் உள்ளன. இவற்றை எடுத்துக் காட்டுவது தான் பொருளியல் நூலாளன் தொழில். பணத்தைப் படிப்பில் செலவிடுவது நல்லது என்றோ, பரிசம் போடுவது கெட்டது என்றோ எதுவும் பொருளியலில் இல்லை. படிப்பாயினுஞ் சரி, பரிசம் போடுவதாயினுஞ் சரி, இரண்டிலும் சிக்கனமாகச் செயல்பட வாய்ப்பிருக்கிறது; இந்த வாய்ப்புக்களைக் குறிப்பாக எடுத்துக் காட்டுவது தான் பொருளியல். எனவே, பொருளியல் நூலாளன் ஒரு நீதிபதியின் நிலையிலிருந்து தீர்ப்பு வழங்கவில்லை; ஒரு சான்று கூறுவோன் நிலையிலிருந்து நிகழ்ச்சிகளை விரித்துரைப்பதோடு நின்று விடுகிறான். அதாவது, பொருளியல் இயல்புரை அறிவியலே யொழிய நெறியுரை அறிவியலல்ல என்பது இராபின்ஸின் முடிவு.

இராபின்ஸின் புதிய [1] விளக்கத்தில் சில சிறப்புக்கள் இருப்பதை மறப்பதற்கில்லை. பௌதிகம், வேதியியல் போன்ற பிற அறிவியல் துறைகளின் அளவுக்குப் பொருளியலையும் ஒரு தூய அறிவியலாக நிறுவிய பெருமை இராபின்ஸுக்கு உரியது. எவ்வாறு பிற அறிவியல்களில் நல்லது கெட்டது எனப் பகுத்து ஆயாமல், காரண காரியத் தொடர்பை மட்டும் ஆராய்கிறோமோ, அது போன்று அருமைப் பாட்டை யொட்டிய தேர்வின் காரண காரியத் தொடர்பை மட்டுமே பொருளியல் நுவல்கிறது என்பார் இராபின்ஸ். மேலும், பிற அறிவியல்களைப் போல, பொருளியலும் காலத்துக்கும், நாட்டெல்லைக்கும், சமூக அமைப்புக்களுக்கும் அப்பாற் பட்டதாகிறது. பழங்கால மனிதன் முதல் புத்துலக மனிதன் ஈறாக, அமெரிக்கக் குடிமகன் முதல் ஆப்பிரிக்க வாசி ஈறாக, முதலா

[1] இராபின்ஸ் கூறியுள்ள சில கருத்துக்களை முன்பே வேறு சில ஆசிரியர்கள் கூறி யுள்ளார்கள். அருமைப் பாடு பற்றி விக்ஸ்டீட் Wichsteed விளக்கி யுள்ளார்; வெப்லன் Veblen என்ற அமெரிக்கப் பேராசிரியர் மனிதனது 'ஒழுகலாறு' பற்றியே பொருளியல் ஆய்கிறது எனக் குறிப்பிட்டுள்ளார். மிச்செல் Michell என்பார் கருத்தும் இதுவே.

ளித்துவ அமைப்பு முதல் சமதருமச் சமூகம் ஈருக—எல்லா இடங்களிலும் அருமைப் பாட்டை யொட்டிய பொருளியல் சிக்கல் உண்மையா யுள்ளது. தேர்வுச் சிக்கலை எதிரிடும் அலகு தனி மனிதனுகவோ, திட்டக் குழுவாகவோ, இராபின்ஸன் குரூஸோ ஆகவோ, சமூகச் சூழலில் வாழ்பவனுகவோ இருக்கலாம்; ஆனுல் அனைத்தும் எதிரிடுகிற சிக்கலில் மட்டும் வேற்றுமை யில்லை. இவ்வாறு பொருளியல் எங்கணும் உண்மையா யிருப்பதாக இராபின்ஸ் நிறுவுகிருர்.

மனித வாழ்வைப் பல்வேறு பகுதிகளாகப் பிரிந்து ஆராயாமல், மன்பதையின் செயல்களை ஒட்டு மொத்தமாக எடுத்து, அதில் ஒரு கூற்றை மட்டும் பொருளியல் ஆய்வதாகச் சொல்வதும் சிறப்பானதே. ஆலயத்துக்குச் செல்லும் மனிதனது செயல் சமய ஒழுங்கின்பாற் பட்டதே; ஆனுல், அங்கும் உந்து வண்டியில் சென்று வருவதா, அல்லது, அதற்காகும் செலவுக்குக் கற்பூரம் வாங்கிக் கொளுத்தக் கால் நடையாகச் சென்று வருவதா என்ற சிக்கல் தோன்ற வகையுண்டு. இவ்வாறு, சமய ஒழுங்கிலுங் கூட ஒரு பொருளியல் கூற்றைக் காணலாம்.

'இக்கனுமிக்ஸ்' என்ற ஆங்கிலச் சொல்லின் வேர்ச் சொல்லாகிய கிரேக்கச் சொல் சுட்டிய சிக்கனக் கூறு இராபின்ஸின் விளக்கத்தில் தொக்கி நிற்பதும் இங்குக் கவனிக்கத் தக்கது. வழி வகைகள் அரியனவா யிருப்பதால், அவற்றைக் கொண்டு அளவிறந்த விருப்பங்களை நிறைவேற்ற முயலும்போது, இயல்பாகவே சிக்கனத்தைக் கடைப்பிடிக்க வேண்டி ஏற்படுகிறது.

இக்கால ஆசிரியர்கள் சிலர் இராபின்சின் கோட்பாட்டை அப்படியே ஏற்றுக் கொள்வதுண்டு. பொருளியலின் பொருள் வரையறைச் சிக்கலுக்கு இராபின்ஸ் அறுதியானதொரு முடிவு கண்டு விட்டதாக மாக்ஸ்ஃபை (Maxfie) போன்ருேர் கூறுவர். இருந்தாலும் இராபின்ஸின் கோட்பாட்டிலும் குறைகள் சிலவற்றைக் காண முடியும்.

பொருளியலை ஓர் அறிவியலின் நிலைக்கு இராபின்ஸ் உயர்த்தியுள்ளார் என்பது உண்மையே; ஆனுல், அதற்காக மனிதனைப் பற்றிய அறிவுத்துறையில் மனிதத் தன்மைக்கு அவர் இடமில்லாது செய்து விட்டார் என்பதை நினைவு கூரவேண்டும். அறிவியலாக்க வேண்டும் என்ற நோக்கில் பொருளியல் சிக்கல்களில் நிறை குறை காணப் பொருளியல் நூலாளர் முயலலாகாது எனச் சொல்வது சரி

யன்று. பிளக்கப்பெற்ற அணுவின் செயலைப் பற்றி விருப்பு வெறுப்பின்றி விளக்கிக் கொண்டே செல்லலாம்; ஆனால், மனிதனின் நடத்தையை அவ்வாறு விளக்க முடியாது. மனிதனது நடத்தையே ஒரு குறிக்கோளாக இருக்கிறது.

மனிதன் ஒரு சமூக 'விலங்கு'. அவனுடைய செயல் வகைகளில் சமூகத்துடன் இணைந்து நிற்பவை மட்டுமே சமூக அறிவியலின்பாற் படுவன; அறிவாய்வுக்கு உகந்தன என்பதும் இங்குக் கவனிக்கத் தக்கது. கோவிலுக்குச் செல்லும் மனிதனையே எடுத்துக் கொள்வோம். கிழக்கே யிருக்கும் சிவன் கோவிலுக்குச் செல்வதா, அல்லது, மேற்கே யிருக்கும் விட்டுணு கோவிலுக்குச் செல்வதா என்ற தேர்வுச் சிக்கல் அவன் முன்னிருந்தால், இது பொருளியவின்பாற் படுவ தாகாது. ஏனெனில், மனிதனது குறிப்பிட்ட தேர்வால் சமூகம் எவ்வகையிலும் பாதிக்கப்படவில்லை. மாருகக் கையிலிருக்கும் காசுக்குக் கற்பூரம் வாங்குவதா, அல்லது, வண்டியேறிச் செல்வதா என்ற தேர்வுச் சிக்கல் ஏற்படும்போது இதன் முடிவு சமூகத்தையும் தாக்குகிறது. எடுத்துக் காட்டாகக்[1] கற்பூரம் வாங்க முடிவு செய்வதாக வைத்துக் கொண்டால் கற்பூர வணிகர் நிலையும் அதனால் பாதிக்கப் பெற்று, இறுதியில் ஒன்றன்பின் ஒன்ருகப் பல சமூக விளைவுகள் ஏற்படுகின்றன. எனவே, இராபின்ஸின் பொருள் வரையறையை இவ்வாறு திருத்தி எழுத வேண்டும் என்பார் கேர்ன்கிராஸ் (Cairncross):—' மக்கள் எவ்வாறு அருமைப் பாட்டைத் தம் விருப்பங்களுடன் சரிக்கட்ட முயல்கிருர்கள் என்பதையும், இம் முயற்சிகள் எவ்வாறு மாற்றின் வழியாக எதிரெதிர் செயல்படுகின்றன என்பதையும் ஆய்கிற ஒரு சமூக அறிவியல்' பொருளியல்.[1]

நல்வாழ்வைக் குறிக்கோளாகக் கொள்ளலாகாது என்பார் இராபின்ஸ். ஆனால், ஆழ்ந்து சிந்தித்தால், இராபின்ஸின் விளக்கத்திலும் நலக்கோட்பாடு தொக்கி நிற்பதை உணரலாம். சிக்கனமாக எவ்வாறு செயல் படலாம் எனச் சிந்திக்கும்போது, அதன் பொருள் சிக்கனமாகச் செல விடுவது ஓர் அறம் என்பது தானே? அதாவது, சிக்கனத்தைக் கடைப்பிடிப்பதே ஒரு குறிக்கோளாகிறது. சிக்கனத்தைக் கடைப்பிடிப்பதென்ருல் செலவிடாமலே இருப்பது என்பது அன்று; 'அறச் செட்டு முழு நட்டம்'; விவேகமாகச் செலவிடுவது என்பது தான் அதன் பொருள். வரையறைக்

[1] 'Introduction to Economics' by Alec Cairncross. P. 8.

குட்பட்ட வழிவகைகளைக் கொண்டு வரையறையற்ற விருப்பங்களை நிறைவேற்றும்போது விவேகமுள்ளவன் மிகவுயர்ந்த அளவு விருப்பங்களை நிறைவேற்றவே முயல்வான். இதன் மற்றொரு பொருள் தானே மிகவுயர்ந்த அளவு மகிழ்ச்சி அல்லது நலம் என்பது. எனவே, இராபின்ஸின் விளக்கத்தைத் திருத்த முற்பட்ட ஸ்டைக்லர் (Strigler), 'குறிக்கோள் நிறைவேற்றத்தை மிகவுயர்ந்த அளவினதாக்குவதே ஒதுக்கீட்டின் நோக்கமாயிருக்கும்போது, போட்டியிடும் குறிக்கோள்களிடையே அரியனவான வழிவகைகளை ஒதுக்கீடு செய்வதைக் கட்டுப்படுத்துகிற கோட்பாடுகளைப் பற்றிய அறிவாராய்ச்சியே பொருளியல்' என்பார்.

மேலும், இராபெர்ட்ஸன் (Robertson) கூறுவது போல, இப்பொருள் வரையறையானது பொருளியலின் வாய்ப்பெல்லையை ஒரே நேரத்தில் மிகக் குறுகியதாகவும் பரந்ததாகவும் ஆக்கி விடுகிறது. செல்வ வளங்கள் பயன்படுத்தப் படாமலிருந்தால் அங்கே அருமைப் பாடில்லை ; பொருளியல் சிக்கலுமில்லை. அப்படியானால் வேலையின்மையை ஒரு பொருளியல் சிக்கலாகக் கருத முடியாது.[1] அந்த அளவுக்குப் பொருளியலின் வாய்ப்பெல்லை சுருங்கி விடுகிறது. இதே நேரத்தில் படைத்தலைவனொருவன் தன்னிடம் குறைந்த அளவிருக்கும் படைவீரர்களைப் பல்வேறு களங்களுக்கு ஒதுக்கீடு செய்ய வேண்டிய சிக்கல் ஒரு பொருளியல் சிக்கல் ஆகி விடலாம் !

'குறிக்கோள்கள்', 'வழிவகைகள்' ஆகிய இரண்டினையும் இராபின்ஸ் விளக்கியுள்ள பான்மையிலும் சில குறைபாடுகளைக் காணலாம். குறிக்கோள்களாகிய விருப்பங்கள் எண்ணிறந்தன என்பார் இராபின்ஸ் ; அவை, நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து கொண்டிருக்கின்றன என்றும் அவர் கூறுவார். இவற்றால் பொருளியல் சிக்கல் இடையறாது நிலவுகிறது என்பது அவர் முடிவு. நம் நாட்டுப் பேரறிஞர்களுள் ஒருவராகிய ஜே. கே. மேத்தா (J. K. Mehta) இதன் தொடர்பாகப் புதியதொரு கருத்தைத் தந்துள்ளார். மனநிறைவின்மையே விருப்பத்தின் நிலைக்களன். எனவே, விருப்பம் என்பது ஒரு துன்ப உணர்வாகிறது. இந் நிலையில், விருப்பங்களின் எண்ணிக்கை பெருகப் பெருக, அவற்றால் மனிதன் அடையும் துன்பமல்லவா பெருகுகிறது! எனவே, மனிதனின் மிகவுயர்ந்த அளவு ஆவல் நிறைவு பெற வேண்டுமெனில், விருப்பங்களின் எண்ணிக்கையைக் குறைத்துக்

[1] இதன் பொருள் இராபின்ஸின் விளக்கம் வேலை நிறைவை ஓர் எடுகோளாகக் கொண்டுள்ளது என்பது தான்.

கொள்ள வேண்டும். 'பற்றுக பற்றற்றான் பற்றினை ; அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு' என்ற நிலைதான் உண்மையிலேயே உயர்ந்த நிலை. இவ்வாறு, 'விருப்பமில்லா நிலையை எட்டுவதற்கான முயற்சி என்ற வகையில், மனித ஒழுகலாற்றினை ஆராயும் ஓர் அறிவியலே பொருளியல்' என்பார் மேத்தா. அடுத்து வழி வகைகளை எடுத்துக் கொண்டாலும், இவை வரையறைக்குட் பட்டன என்ற எடுகோளின் அடிப்படையில் இராபின்ஸ் ஆராய்வார். ஆனால், இயக்க நிலைப்பட்ட இந்நாளைய உலகில் குறிக்கோள்களும் வழிவகைகளும் எப்பொழுதும் மாறிக்கொண்டே இருக்கின்றன. குறிப்பாக, வழிவகைகளைப் பெருக்கும் முயற்சி தற்காலத்தில் மாபெரும் முயற்சியாக இருந்து வருகிறது. எனவே, மாறும் குறிக்கோள்களுடன் மாறும் வழிவகைகளைத் தொடர்புறுத்தி ஆராய்ந்தால் தான் பொருளியல் நடைமுறைக்கு அது பொருந்துவதாயிருக்கும். போர்ப்பிற்காலத்தில் எண்ணற்றபடி வெளிவந்து கொண்டிருக்கும் பொருளியல் வளர்ச்சி பற்றிய ஆராய்ச்சி முடிவுகள் இவ்வகைப்படுவன. விக்ஸ்டீட் கூறியது போல, 'சமூகக் குறிக்கோள்களை அடைவதல்ல ; சமூக வழிவகைகளைப் பெருக்குவதை ஒட்டியதுதான் பொருளியல் என்று கொள்வது வழக்கமாகி விட்டது.'

முடிவாகச் சொல்வதானால், இராபின்ஸின் விளக்கம் ஒரு சல சலப்பை உண்டு பண்ணிய போதிலும், மரபிலிருந்து அது விலகியொன்றும் சென்று விடவில்லை. மார்ஷலும், இராபின்ஸும் சுட்டுகிற உட்பொருளில் வேறுபாடில்லை ; ஆனால், அந்தப் பொருளை அணுகுகிற முறையில் தான் வேறுபாடுள்ளது. உருவப் பொருள்களால் நலம் ஏற்படுகிறது எனக் கூறி அவற்றின் மீது முழுநாட்டம் செலுத்தினார் மார்ஷல். ஆனால், அப் பொருள்களின் தனிப்பண்பாகிய அருமைப்பாட்டின் மீது தீவிரக் கவனம் செலுத்தினார் இராபின்ஸ்.[1] ஒருவர் முடிவைச் சொல்ல, அடுத்தவர் வழியைக் காட்டுகிறார். நமக்கோ முடிவும் வழியும் ஆகிய இரண்டும் வேண்டும்.

[1] இருவரும் அரிஸ்டாட்டில் நூற்றாண்டுகளுக்கு முன்பு சுட்டிய இரு கருத்துக்களை ஆளுக்கொன்றாக எடுத்துக்கொண்டு மிக விரிவாக விளக்கியுள்ளனர் என்பதும் ஆழ்ந்து சிந்திக்கப் புலப்படும்.

# 2. பொருளியலின் வாய்ப்பெல்லை

அறிவுத்துறை யொன்றைக் கற்கும்போது, அதன் வாய்ப்புக்குரிய எல்லையை முதலில் வரையறுத்துக் கொள்ள வேண்டும். அப்போதுதான் குறிப்பிட்ட துறையை விட்டு விலகிச் செல்லாமல் தற்காத்துக் கொள்ள முடியும். ஓர் அறிவுத்துறையின் வாய்ப்பெல்லையை முடிவு செய்ய ஒரு முறைமுக ஆராய்ச்சி அவசியம் என்பார் ஜெ. என். கெயின்ஸ் (J. N. Keynes). குறிப்பிட்ட துறையின் நுதல்பொருளைத் தெளி விளக்கமாக முதலில் அறிந்து கொள்ள வேண்டும். அடுத்து, அத் துறையின் உள்ளார்ந்த இயல்பை நிறுவிக் கொள்ள வேண்டும். இறுதியில், அத் துறையையும் அதனையொட்டிய பிற துறைகளையும் ஒப்பு நோக்கி அவற்றுக்கிடையே எல்லைக்கல் நாட்டிக் கொள்ள வேண்டும். இனி, பொருளியல் துறையை இவ்வகையில் அணுக முயலலாம்.

## நுதல் பொருள்

ஓர் அறிவுத்துறையின் நுதல் பொருளை வரையறுக்க இரு வழிகள் உள்ளன. ஒன்று 'பிள்ளையார்' வழி; அடுத்தது 'முருகன்' வழி. உலகத்தை வலம் வர உலகியற்றியானை வலம் வருவது முதல் வழி; அந் நோக்கத்தில் அகிலத்தையும் வளைய வருவது இரண்டாவது வழி. இதுபோலப் பொருளியலின் நுதல் பொருளைக் காட்ட அதன் கருப்பொருளை மட்டும் காட்டி விடுவது ஒரு வழி. அதன் உட்பொருள்களையெல்லாம் தொகுத்துச் சொல்வது அடுத்த வழி.

முதல் வழியை முந்திய அதிகாரத்தில் கடைப் பிடித்தோம். பொருளியலின் மையக் கூறு பற்றி ஆசிரியர்கள் கொண்டுள்ள கருத்துக்களை அங்குக் கண்டோம். இங்கு, இரண்டாவது வழியைக் கையாண்டு பார்க்கலாம்.

செல்வத்தை யொட்டிய மனிதனுடைய செய்கைகளைப் பொருளியலில் கற்கிறோம் எனச் சொல்லும்போது, இச் செய்கைகளிலேயே சில உட்பகுதிகளைக் காணலாம். செல்வத்தை ஈட்டுவதும் பயன்படுத்துவதும் இச் செய்கைகளின் இரு பகுதிகள் என்பார் மார்ஷல். இராபின்ஸின் கருத்துப்படி வழி வகைகளை அடைகிற ஒரு பகுதியும் குறிக்கோள்களை நிறைவேற்றுவதில் அவற்றைப் பயன்படுத்துகிற மற்றொரு பகுதியும் பொருளியல் செய்கைகளில் காணக் கிடக்கின்றன.

இவ்விரு பகுதிகளில் முதல் பகுதியை 'உற்பத்தி' (Production) என்றும், இரண்டாவது பகுதியை 'நுகர்வு' (Consumption) என்றும் கூறுவர். மிக எளிய சொற்களில் கூறுவதானால், பொருள்கள் உண்டு பண்ணப் பெறுவதுதான் 'உற்பத்தி'; உற்பத்தியின் வழியாகத் தான் நுகர்வுக்கான வழிவகைகள்—பொருள்கள்—வருகின்றன. உற்பத்தியான பொருள்களைப் பயன்படுத்தும்போது 'நுகர்வு' நிகழ்கிறது. குறிக்கோள்களாகிய விருப்பங்கள் நிறைவேற்றப் படுவதுதான் நுகர்வு.

இந்நாளைய உற்பத்தி ஏற்பாட்டில், உற்பத்திக்கும் நுகர்வுக்குமிடையே நேரடித் தொடர்பு எதுவுமில்லை. பல்வேறு உற்பத்தித் துறைகளில் ஈடுபட்டுள்ளோர் பல்வகை விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ள உதவுவது 'மாற்று' (Exchange). தம்மிடம் எச்சமாக இருப்பதைப் பிறர்க்குக் கொடுத்து, அதற்கு மாற்றாகப் பிறரிடம் எச்சமாக இருக்கும் தமக்கு வேண்டியவற்றைப் பெற்றுக் கொள்வதுதான் மாற்று. சமூக உறவுகள் நிலவும் அமைப்பில் இது இயல்வதாகிறது. 'நல்வாழ்வுக்கு இன்றியமையாத உருவப் பொருள்களை' அடைவதற்கு மாற்று இன்றி முடியாது. இராபின்ஸின் கருத்தில் இந்த மாற்று வெளிப்படையாகப் புலப்படா விட்டாலும், அன்னார் பொருளியலின் மையக் கூறெனச் சுட்டிய 'மதிப்பு' இந்த மாற்றின்போதுதான் உருவாகிறது.

சமூக உறவுகள் நிலவும் அமைப்பின் மற்றோர் இயல்பு உற்பத்தியின் சமூகக் கூறுதான். தனியொருவன் செயலின் விளைவாக இல்லாமல், சமூகம் முழுதும் கைகோர்த்துச் செயல்புரிவதன் விளைவாகவே உள்ளது உற்பத்தி. அது சமூக விளைபொருள். இந்தச் சமூக விளைபொருள் உற்பத்திக்காரணிகளிடையே பகிர்ந்தளிக்கப் பெற வேண்டும். அப்போது தான் மாற்றோ நுகர்வோ நிகழ முடியும். எனவே, சமூக விளைபொருளின் பகிர்வு (Distribution) பொருளியலின் நான்காவது பகுதி ஆகிறது.

இவ்வாறு 'முருகன் வழி'யில் சொல்வதானால், மனிதன் எவ்வாறு செல்வத்தை உற்பத்தி செய்கிறான், நுகர்கிறான், மாற்றுகிறான், பகிர்கிறான் என்பதுதான் பொருளியலின் நுதல் பொருள் எனலாம்.[1]

## பொருளியலின் இயல்பு

ஆழ அகற்சிக் கூறுகளுடன் அறிவு வளர்ந்து கொண்டிருக்கிறது. இவ் விரு கூறுகளின் ஆக மொத்த விளைவு அறிவுத்துறை பல்வேறு பகுதிகளாகப் பகுக்கப்பட்டிருப்பது தான். இந்தப் பாகுபாடு பல்வேறு அடிப்படைகளில் இயற்றப்படுகிற போதிலும், அவற்றுளெல்லாம் மிகச் சிறந்தது பல்வேறு துறைகளுடைய இயல்பின் அடிப்படையில் இயற்றப்படுகிற ஒன்றுதான்.

நம் நாட்டு அறிஞர்கள் மிகப் பழங்காலத்திலேயே 'வித்தை' வேறு, 'கலை' வேறு எனப் பகுத்தாய்ந்து வந்தனர். 'சொல்லால் விளக்க முடிகிற, அல்லது, படித்தறிய முடிகிற எந்த வொரு செயலும்' வித்தை என்றும், 'ஊமையன் கூட எய்திவிட முடிகிற எந்த வொரு செயலும் 'கலை' என்றும், 'சுக்கிர நீதி' சொல்லும் இந்நாளில், முந்திய வகை 'அறிவியல்' (Science) எனப்பெறும். அறிவியலில் அறிவு பெறுவது நோக்கமாக இருக்கிறதெனில், கலை (Art) யில் செயற்பாடு குறிக்கோளாக இருக்கிறது எனலாம்.

இந்நாளைய ஆசிரியர்கள் அறிவியலிலும் இருவகைகளைக் காண்கின்றனர். 'இயல்புரை அறிவியல்' (Positive Science) ஒரு வகை; 'நெறியுரை அறிவியல்' (Normative Science) அடுத்த வகை. இயல்புரை அறிவியல் இயல்பை உரைப்பது; அதாவது காரண காரியத் தொடர்பினை மட்டும் விளக்குவது. அணுவைப் பிளந்தால் பேராற்றல் வெளிப்படும் எனக் காரண காரியத் தொடர்புடன் விளக்கும்போது இயல்புரை அறிவியலின் வரம்புக்குள் நின்றவர்களாவோம். இதற்கு மாறுபட்ட நிலையில், செயல் வகைகளின் நன்மை தீமை பற்றிப் பேசுவன நெறியுரை அறிவியலின் பாற்படும். இங்கு நெறிப்பட்டன, படாதன என்று முடிவு கட்ட வேண்டி வரும். அணுவைப் பிளந்து பெற்ற ஆற்றலை அழிக்கப் பயன்படுத்தலாகாது என நிறுவும்போது இயல்புரைப்பதை விட்டு விட்டு நெறி

[1] இந்த நால்வகைப் பாகுபாடு இந்நூலிலும் பின்பற்றப்பட்டுள்ளது. ஒவ்வொரு பகுதியும், இன்னும் விரிவாக அந்தந்தப் பகுதியின் தொடக்கத்தில் விளக்கம் பெறும்.

புரைக்க முயல்பவர்களாவோம். இவ்வாறு அறிவுத் துறைகளை இயல்புரை அறிவியல், நெறிபுரை அறிவியல், கலை என மூன்ருகப் பகுக்கலாம். இவற்றுள் பொருளியல்—எவ்வகைப்படும் எனப் பார்க்க வேண்டும்.

ஆங்கில நாட்டு நூலாளர். பொதுவாக, பொருளியல் ஓர் இயல் புரை அறிவியல் என்றே நிறுவி வருகின்றனர். பொருளியலின் நுதல் பொருளின் பாற்படும் விளைவுகளுக்குரிய காரணங்களை ஆய்வதும். காரணங்களின் விளைவை ஆய்வதுமே பொருளியல் துறையின் ஆராய்ச்சிப் போக்காக இருக்க வேண்டும் என்பது அவர்கள் கருத்து. ஸீனியர், கேர்ன்ஸ் போன்ருேர் இதில் தீவிரமான கருத்தைக் கொண்டிருந்தனர். அண்மைக் காலத்தில் இராபின்ஸும் இவர்கள் கருத்தையே கொண்டுள்ளார். இக் கருத்தை இவர்கள் வலியுறுத்தக் காரணங்கள் இரண்டெனலாம். பொருளியல் ஓர் அறிவியலே என்று சொல்லும்போது, உணர்ச்சி பேதங்களை அடிப்படையாகக் கொண்ட நெறி வகை நோக்கை அதில் புகுத்துவது பொருந்தாது என்பது அவர்கள் தரும் முதற் காரணம். இரண்டாவதாகப் பிற துறைகளில் இருப்பது போலப் பொருளியல் சிந்தனையிலும் ஒரு வகைச் சிறப்புத் தொழில் தேர்ச்சி இருப்பது நல்லது என அவர்கள் கருதுகின்றனர். காரண காரியத் தொடர்பை ஆய்வதை மட்டும் பொருளியல் நூலாளன் தன் பொறுப்பாக வைத்துக் கொண்டு, எதைச் செய்ய வேண்டும், எதைச் செய்யலாகாது என்பதை அரசியல் வாதிக்கும், அறவியல் தலைவர்க்கும் விட்டு விடுவதே நல்லது என்பது அவர்கள் கருத்து. எடுத்துக் காட்டாகச் சொல்வதானல், தோட்டத் தொழிலாளர் கூலி வீதம் மிகவும் குறைந்த அளவில் உள்ளது; இதற்குக் காரணம் தொழிலாளர் தம் எண்ணிக்கை மிகுதியே எனச் சுட்டுவதுடன், பொருளியல் நூலாளன் பொறுப்பு நின்று விடுகிறது என்பது இயல்புரை அறிவியல் சார்பாளர் கருத்து எனலாம்.

இந்தக் கருத்தை அப்படியே ஏற்றுக் கொள்ள முடியாது. பொருளியல் இயல்புரை அறிவியலாக மட்டும் தொடரும்போது, அதனல் பொது நலம் பலியாக நேரும் என்பதை இங்குக் கவனிக்க வேண்டும். பொருளியல் நூலாளன் நெறி காட்டத் தவறினல், பயிற்சி பெருத பிறர்—குறிப்பாக, அரசியல் வாதிகள்—தமக்குத் தோன்றுகிற நெறிகளைக் காட்டுவர்; சமூகமும் அதனை அப்படியே பின்பற்ற நேரும். வளர்ச்சி குன்றிய நாடுகளில் சில சமூகக் காரணிகள் பொருளியல் வளர்ச்சிக்குத் தடையாக உள்ளன. இங்கு இயல்பான குறிக்கோள் குறிப்பிட்ட சமூக நியதிகளாக இருக்குமே

யொழிய வருமானப் பெருக்கமாகவோ, பொருளியல் வளர்ச்சியாகவோ இருக்க வழியில்லை. இந் நிலைகளில் பொருளியல் நூலாளன் சரியான குறிக்கோள்களைச் சுட்டிக்காட்டுவதில் அசட்டையாக இருப்பது தவறு.

இந்த அசட்டை வேறொரு தீமைக்கும் வழி கோலிவிடலாம். குறிப்பிட்ட செயல் வகைகளை, அவற்றின் உண்மை இயல்பின் அடிப்படையில் தீயவை எனச் சுட்டிக் காட்டத் தவறினால், அவற்றை 'இவையே நல்லவை' எனப் பாமரர் கருதிவிட வழியுண்டு! உண்மையில், இயல்புரை அறிவியலானது தற்காலம் நிலவியுள்ள சமூக அமைப்பை, அதன் தீய கூறுகளுடன் அப்படியே ஏற்றுக்கொள்ளத் தூண்டுவதாகிறது.[1]

மேலும், கானன் சொல்வது போலப், பொருளியலை, இயல்புரை அறிவியலாகக் கொள்வது பொருளியல் நூலாளனைப் பொறுத்தவரை தற்கொலைக்கு ஒப்பானதாகும். பொருளியல் செய்கைகளின் நன்மை தீமை பற்றி எதுவும் சொல்லாத பொருளியல் நூலாளன் வெறும் ஏட்டுச் சுரைக்காயாகத்தான் கருதப்படுவான்; சமூகத்தில் அவனுக்கு எவ்வகையான செல்வாக்கும் இருக்க முடியாது.

எனவே, பொருளியல் நூலாளன் நிகழ்ச்சிகளின் காரண காரியத் தொடர்பினை மட்டுமல்ல, அவற்றின் நன்மை தீமைக் கூறுகளையும் சுட்டியாக வேண்டும். முன்னே குறிப்பிட்ட கூலிச் சிக்கலை எடுத்துக் கொண்டால், பொருளியல் நெறியுரை அறிவியல். கூலி வீதம் குறைந்த அளவில் இருப்பதைத் துணிச்சலுடன் கண்டிப்பதோடு, 'நேர்மையான' கூலி வீதம் எது என்பதை அறுதியிட்டுக் காட்டவும் முன் வரவேண்டும்.

முடிவாகச் சொல்வதானால், பொருளியலில் இரு கூறுகளைக் காணலாம். பொருளியலின் நுதல் பொருளாகிய ஒன்றன் காரண காரியத் தொடர்பினை விளக்கும்போது இயல்புரைக்கிறோம். அடுத்து அதன் நன்மை தீமைகளைக் குறிப்பிடும்போது நெறியுரைக்கிறோம். ஒன்றை விட்டு ஒன்றை விலக்க முடியாத அளவுக்கு இவ்விரண்டு கூறுகளும் ஒன்றையொன்று சார்ந்துள்ளன.

[1] இராபின்ஸ் போன்றோர் பொருளாதாரத்தின் இயல்புரைக் கூறு பற்றி அளவு மீறி வலியுறுத்தக் காரணம் அவர்களுக்குத் தடையிலாப் பொருளாதார அமைப்பின் மீதிருந்த பற்றுதலே யாகும் எனச் சொல்லப்படும். மார்க்ஸீய நோக்கு பொருளாதார ஆய்வில் படியாமலிருப்பதை நோக்கமாகக் கொண்டே இராபின்ஸ 'நலம்' பற்றி அவ்வளவு நுணுக்கமாகக் குறை கண்டார் என்று சொல்லப்படும்.

உண்மையில் நிகழ்வது எப்பொழுதும் நெறிப்பட இருந்தாக வேண்டும் என்றில்லை. எனவே, உண்மை நிலையை நெறிவழிப் பட்டதாக ஆக்கா விட்டால் பயனேது மில்லை ; அத்தனை அறிவும் வெறும் ஏட்டுச் சுரைக்காயாகவே இருந்து விடும். எனவே, பொருளியல், அறிவியல் மட்டுமன்று ; ஒரு கலையுங் கூட என்றாகிறது. உண்மை நிலையைக் குறிக்கோள் நிலைக்கு இசைந்ததாகக் கொண்டு வருவது தான் கலை. குறைந்த மட்டத்திலிருக்கும் கூலியை உயர்த்துவதற்கான வழிவகைகளைப் பரிந்துரைப்பது பொருளியல் நூலாளனின் தலையாய கடன். ஆலன் யங் (Alleyn Young) கருதுவதுபோல, இயற்கையை நுதல் பொருளாகக் கொண்டவர்கள், வேண்டுமானால், அறிவு அறிவுக்காகவே என வைத்துக் கொள்ளட்டும். ஆனால், பொருளியலின் நுதல் பொருள் மனிதன். அவன் மாறுபவன் மட்டுமல்லன் ; மாற்றத் தக்கவனும் ஆவான். (இத் தகையவை யல்ல இயற்கைக் கூறுகள்.) எனவே, மாறுதல் வேண்டி வந்தால், அதனைக் கொண்டுவரத் தயங்கலாகாது !

இதனால், பொருளியலின் இயல்பைப் பொருத்தவரை அது ஒளி தரும் அறிவியலும், பயன்படும் கலையுமாக ஒரே நேரத்தில் திகழ்கிற தெனலாம். ஆர். டி. பை (R. T. Bye) கூறுவது போல, பொருளியலில் சிறப்பான மூன்று பகுதிகள் இருப்பதாகச் சொல்லலாம்; தூய பொருளியல், பொருளியல் அறிவியல், செயல்படு பொருளியல்—ஆகிய மூன்றுமே அப் பகுதிகள். முதல் பகுதியில் எவ்வாறு பொருளியல் செயல்கள் நிகழ்கின்றன என்று ஆராய வேண்டும். அடுத்த பகுதியில் அச் செயல்கள் எந்த அளவுக்கு நெறிப்பட நிகழ்கின்றன என்று ஆராய வேண்டும். இங்கு, குறை நிறைகளைக் கண்டு குறிக்கோள்களை நிறுவவும் வேண்டும். இதன் முடிவாக, இறுதிப் பகுதியில் சீர்திருத்தங்களைப் பரிந்துரைக்க வேண்டும். முதல் பகுதியின் நோக்கம் விளக்குவது, இரண்டாம் பகுதியின் நோக்கம் குறை நிறை காண்பது, மூன்றும் பகுதியின் நோக்கம் சீர்திருத்துவது எனலாம்.

## பொருளியல் கோட்பாடும் நடைமுறையும்

பொருளியல் கோட்பாடுகளின் அடிப்படையில் நடைமுறைப் பொருளியல் கொள்கைகளை வகுக்கும்போது தொடக்கத்திலேயே வினா ஒன்று எழுகிறது. பொருளியல் கொள்கைகளின் அடிப்படை நோக்கம் என்னவாக இருக்க வேண்டும் என்பது தான் அவ் வினா. 'மிக வுயர்ந்த பொருளியல் நலம்' என்ற நோக்கமே இங்குச் சாலச் சிறந்தது என்பது பலர் கருத்து. தமக்குக் கிடைக்கிற பொருள்கள்,

பணிகள் வழியாக ஒரு சமுதாயத்தின் உறுப்பினர்கள் பெறுகிற நிறைவே பொருளியல் நலம். இந்த நிறைவின் ஆக மொத்த அளவு மிக மிக, நலமும் மிகுந்து செல்லும். ஆனால் உளவியல் சார்ந்த இந் நலத்தை நேரடியாக அளவிடுவதற்கான கருவி எதுவுமில்லை. இருந்தாலும், நலத்தைக் குறிப்பிடும் பிற சில அறி குறிகளைக் காட்ட முடியும்.

நாட்டு மக்களின் வருமான ஈட்டம் நலத்தின் ஓர் அறிகுறி; இது உற்பத்தியைப் பொருத்தது. உற்பத்தி மிகுதியாக இருந்தால், நலமும் மிகுதியாக இருக்கும். மிகவுயர்ந்த அளவு செல்வத்தை உற்பத்தி செய்யும் வகையில் நாட்டின் இயற்கை வளங்களையும் மனித உழைப்பையும ஆள வேண்டும். எனவே, உற்பத்தியைப் பெருக்கும் கொள்கைகள் பொருளியலாளரால் ஆதரிக்கப்படு கின்றன.

உற்பத்திப் பெருக்கம் என்று சொல்லும்போது, கிடைக்கிற வளங்களை யெல்லாம் பயன்படுத்துவது என்று கூற முடியாது; கிடைக்கிற நிலம், கிடைக்கிற உழைப்புக்கு எச்சமாகச் சில நேரங் களில் இருக்கலாம். அந்நிலையில் ஓரளவு நிலத்தைப் பயன்படுத் தாமல் இருப்பதில் தவறில்லை. ஏதாவதொரு காரணத்தால் உழைப் புப் பயன்படுத்தப் பெறாத நிலை நிலவுவது ஏற்றுக் கொள்ளத் தக்க தல்ல என்பதை இங்குக் கவனிக்க வேண்டும். ஏனெனில் வேலை யின்மையானது ஒழுக்கங் குன்றி இழிநிலை தோன்றக் காரண மாகிறது. மனிதனுடைய நலமே குறிக்கோளாக இருப்பதால், மிக வுயர்ந்த அளவு வேலை யுடைமை நிலவுவது நலத்துக்குப் பொருந்து கிற கொள்கையாகிறது.

அடுத்து, உற்பத்தியான செல்வத்தை எவ்வாறு பகிர வேண் டும் என்பதையும் நலத்தின் கண்ணோட்டத்தில் பார்க்க வேண்டும். சமூக நீதிக் கண்ணோட்டத்திலேயே இந்தச் சிக்கலை இங்கு அணுக வேண்டும். அளவிறந்த ஏற்றத்தாழ்வு நலம் தராது. எனவே, எவ்வாறாயினும் பொருளாதார ஏற்றத்தாழ்வு குறைக்கப்பட வேண்டும். எவ்வளவு குறைக்கப் பட வேண்டும் என்பதைப் பற்றி எதுவும் கூற முடியாது.

மனிதன் ஒரு பொருளை மேலும் மேலும் நுகரும்போது அப் பொருளிலிருந்து அவன் பெறுகிற இறுதி நிலைப் பயன்பாடு குறைந்து செல்லும் என்பது ஒரு பொருளாதார விதி.[1] இந்த விதியைப்

[1] குறைந்து செல் பயன்பாட்டு விதி

பணத்துக்குப் பொருத்தி, இதனுல் செல்வந்தனிடமிருந்து ஓரளவு பணமானது ஏழைகள் கைக்கு மாற்றிக் கொடுக்கப்பட்டால் அதனுல் சமூகப் பொருளியல் நலம் மேம்படும் என்று சொல்வதுண்டு. குறிப்பிட்ட விதி இந்த அளவுக்குச் செல்லவில்லை என்பதை ஆழ்ந்து சிந்தித்தால் அறிய முடியும்.) [1] பொருளியல் கோட்பாடுகளிலிருந்து கொள்கைகளை வகுக்கும்போது தோன்றுகிற சிக்கல்களுக்கு இது ஓர் எடுத்துக் காட்டு.

பொருளியலை ஒரு நெறியுரை அறிவியலாகக் கொண்டு கொள்கைகளைப் பரிந்துரைக்கும் முயற்சியைத் தான் மேலே கண்டோம். மாருகப் பொருளியலை ஓர் இயல்புரை அறிவியலாகக் கொள்ளும் போது, அதற்கும் பொருளியில் கொள்கைகளுக்கும் இடையேயுள்ள தொடர்பு இவ்வாறிருக்க முடியாது.

இங்குப் பொருளியல் கொள்கைகளைச் சீர் தூக்க, 'பொருளியல் நலம்' என்ற அளவு கோல் எதுவு மில்லை. அந்த அளவு கோலே பிறரால் பொருளியலாளனிடம் தரப்படுகிறது. விவசாய உற்பத்திப் பெருக்கக் குறிக்கோளில் நில உச்ச வரம்புக் கொள்கையொன்றை அரசு பின்பற்றுவதாக வைத்துக் கொள்வோம். இதன் தொடர்பான பொருளியலாளன் பணி இவ்வாறு தான் இருக்க முடியும்.

குறிப்பிட்ட கொள்கையின் குறிக்கோளை முதலில் உறுதிப் படுத்திக் கொள்ள வேண்டும். அடுத்து அந்தக் குறிக்கோளை அடையக் குறிப்பிட்ட முறையால் முடியுமா என்று பார்க்க வேண்டும்; முடியுமானுல் அவன் பணி அத்துடன் முற்றுப் பெறுகிறது! ஆனுல், உச்சவரம்புச் சட்டத்தால் நிலங்கள் துண்டுபடுகிற காரணத்தால் உற்பத்தி பெருகாமலிருக்க வகையுண்டு என்பதை அவன் அறியும் போது மேலும் ஆராய வேண்டும். அவனுடைய ஆராய்ச்சியால் அம் முடிவு வலியுறுமானுல் குறிப்பிட்ட கொள்கை தவறு என்று முடிவு கட்டலாம்.

குறிப்பிட்ட கொள்கையின் பக்க விளைவுகளையும் ஆய வேண்டும். மேலே சொன்ன கொள்கையால், குறிப்பிட்ட குறிக்கோள் நிறைவேறும் நிலையிலும், அதனுல் கிராமப்புற அமைதி குலையுமானுல் உற்பத்திப் பெருக்கம், அமைதிச் சூழல் ஆகிய இரு குறிக்கோள்களிலும் எது முதன்மையானது என்ற சிக்கல் தோன்றுவதையும் பொருளியலாளன் எடுத்துக் காட்ட வேண்டும்.

[1] பகுதி V—இல் 'வருமான ஏற்றத்தாழ்வுகள்' பார்க்க.

இறுதியாகப், பிற குறிக்கோள்களைத் தாக்காத வகையில் குறிப்பிட்ட குறிக்கோளை அடைய மாற்று வழிகள் உள்ளனவா என்றும் பார்க்க வேண்டும். நல்ல வித்து, நல்ல எரு போன்றவற்றை அளிப்பதன் வழியாக உற்பத்தியைப் பெருக்க முடியாதா என்றும் சிந்திக்க வேண்டும். இந்த மாற்று வழியைச் செயல் படுத்துவதற்குத் தடையாக இருப்பவைகளையும் சிந்தித் தறிய வேண்டும்.

இவற்றை யெல்லாம் புரிந்த பின்னர், குறிப்பிட்ட குறிக்கோளை அடையக், குறிப்பிட்ட கொள்கையால் இயலுமென்றும், அதன் பக்க விளைவுகள் பொருட்படுத்தப் படவில்லை என்றும், மாற்று வழிகள் செயல்படத் தக்கவையல்ல என்றும், பொருளியலாளன் முடிவு கட்டும்போது, அக் கொள்கையை அவன் ஆதரித்தவனாகிறான்.

## பொருளியலும் பிற சமூக அறிவியல்களும்

மனிதனை நுதல் பொருளாகக் கொண்டு அவனது சமூக வாழ்வு பற்றி ஆய்கிற அறிவியல்கள் பலப்பல. அவற்றுள் ஒன்று பொருளியல்—இந் நிலையில், பொருளியலின் வாய்ப்பெல்லையை அறிய வேண்டுமெனில், பொருளியலுக்கும் பிற சமூக அறிவியல்களுக்கும் இடையேயுள்ள எல்லைக்கோட்டைத் தெளிவாக வரையறுத்தாக வேண்டும்.

## பொருளியலும் சமூக இயலும்

மன்பதையின் கூட்டு வாழ்வை நுதல் பொருளாகக் கொண்ட அறிவியல் சமூக இயல். சமூகத்தின் தோற்றம், வளர்ச்சி, இயக்கம் என்பன பற்றி இத்துறை ஆய்கிறது. குடும்பம், வகுப்பு, அரசு என்று சமூக அமைப்பில் பல நிலைகள் காணக் கிடக்கின்றன. இவை யனைத்திலும் உறுப்பினன் என்ற வகையில் மன்பதை புரியும் செயல்களே சமூக இயலின் நுதல் பொருளாகின்றன. இவற்றுள் குடும்ப நிருவாகம் பற்றியதே பொருளியல் எனக் கிரேக்க அறிஞர்கள் வகை செய்தனர்; இவ்வாறு தொடக்கம் முதலே பொருளியலானது சமூக இயலின் ஒரு பகுதியாக நிலவி வந்ததை அறியலாம்.

சமூக இயல் மன்பதையின் சமூகச் செய்கைகளை முழு மொத்தமாக ஆய்கிறது. குடும்ப நிருவாகத்தின் சிக்கன நோக்கு, வகுப்புக் கட்டுப்பாட்டின் அறநியதிகள், அரச அமைப்பின் சட்ட வொழுங்குகள், குடியுரிமைகள், கடமைகள் ஆகிய வெல்லாம் சமூக இயலின் வாய்ப்பெல்லையினுள் வருகின்றன. இவற்றுள் ஒரு பகுதியையே பொருளியல் ஆய்கிறது.

இந்நிலையில், இவ்விரு துறைகளுக்கும் இடையே மிக நெருங்கிய பிணைப்பிருப்பதில் விந்தையில்லை. சமூகச் சூழல்கள் மன்பதையின் பொருளியல் செயல் வகைகளைப் பெரிதும் கட்டுப்படுத்துகின்றன. பொதுவாக, ஆசிய நாடுகளின் பொருளியல் வளர்ச்சியைத் தடை செய்வன சாதி முறைகளும், சமய வழிப்பட்ட சில மூட நம்பிக்கைகளும் ஆகிய சமூகக் காரணிகள் என்பதை உணரும்போது இந்தத் தொடர்பை அறியலாம்.

காரல் மார்க்ஸ் பொருளியல் காரணிகள்தாம் சமூக ஏற்பாடுகளைக் கட்டுப்படுத்துகின்றன என்று கூறுவார். பொருளியல் உறவுகளே சமூக ஏற்பாடுகளின் தோற்றுவாய் என்பது அவர் கருத்து.[1]

சமூக இயலின் இந்த அகற்சியை முதன்மைப்படுத்தும் வகையிலும், சமூக இயலுக்கும் பிற அறிவுத்துறைகளுக்கும் இடையேயுள்ள உள்ளார்ந்த தொடர்பை வலியுறுத்தும் வகையிலும் 'சமூக அறிவியல்' என்ற தனியொரு இயலை வளர்ப்பது சாலச்சிறந்தது எனக் கருதுவோரும் உண்டு. லட்விக் பான் மைஸஸ் (Ludwig Von Mises) 'மனித இனச் செய்கை இயல்' (Proxeology or Human Action) என்ற தனியொரு இயலை உருவாக்க வேண்டும் என்பார்.[2] மாறாக, மார்ஷல் போன்றோர் சமூகச் செயல் வகைகள் அத்தனையையும் பிணைத்துத் தனியோர் அறிவுத் துறையாக ஆக்குவது இயலாது என்று கருதுவர். அந்த அளவுக்குச் சமூகச் செயல் வகைகள் பரந்து கிடக்கின்றன என்பது அவர் கருத்து.

சமூக இயலும் பொருளியலும் நெருங்கிப் பிணைந்திருப்பதால் இரண்டுக்குமிடையே எல்லைக்கோடு கிழிப்பது அவ்வளவு எளிதன்று. இருந்தபோதிலும் இரண்டுக்குமிடையே ஆய்வு நோக்கைப் பொருத்தவரை அடிப்படையான வேறுபாடுள்ளது. சமூக இயலானது மனிதனுடைய செயல் வகைகள் சமூக அமைப்பை எவ்வாறு தாக்குகின்றன என்ற நோக்கில் ஆய்கிறது. ஆனால், பொருளியலோ மனிதனுடைய செயல் வகைகளில் சிக்கன நோக்கை ஆதாரமாகக் கொண்டிருப்பவைகளை மட்டும் ஆய்கிறது. மேலும், இராபின்ஸன் குருஸோவின் தனி மனித உலகில் கூட பொருளியலுக்கு இடமிருக்கிறது. இலயனல் இராபின்ஸ் போன்றோரது கருத்தை ஏற்றுக்கொண்டால் பொருளியல் ஆய்வில் சமூக உணர்வுக்கு இடமிருக்க வேண்டும் என்று கூட இல்லை!

[1] முந்திய அதிகாரம் பார்க்க.
[2] 'Human Action' by Ludwig Von Mises.

பொருளியலும் அரசியலும்

மன்பதையின் சமூகச் செயல் வகைகளின் ஒரு பகுதியை நுதல் பொருளாகக் கொண்டதே அரசியல். மனிதன் அரசின் தொடர்பாகப் புரியும் செயல்வகைகளே இத்துறையில் ஆராயப்படுகின்றன. தொடக்கத்தில் கண்டது போல குடும்பத்தின் மற்றொரு நிலையே அரசாக இருப்பதால், பொருளியலும் அரசியலும் மிக நெருங்கிய தொடர்புள்ளவையாகக் கருதப் பெற்று வந்ததில் வியப்பில்லை. ஒரு கட்டத்தில் ' அரசுசார் ' என்ற அடைமொழியைப் பொருளியல் நிலைபேருகப் பெற்று வந்ததையும் முன்பே கண்டோம்.

ஒரு நாட்டின் பொருளியல் அமைப்பே அங்குள்ள அரசின் இயல்பை முடிவு செய்கிறது. சமதருமக் கருத்தினர் இக் கோட்பாட்டை வலியுறுத்துபவர்களில் முதன்மையானவர்கள், ' பூர்ஷ்வாக்களின் செயற்குழுவே அரசு ' என்றும், முழுமையான பொதுவுடைமை நாட்டில், அரசு தானுகவே மறைந்து விடும் என்றும் அவர்கள் கருதுகின்றனர். இன்னும், ருஷிய – அமெரிக்க நாடுகளின் அரசியல் அமைப்புக்களில் வேறுபாடுகள் நிலவக் காரணம் அந்நாடுகளுடைய பொருளியல் அமைப்பு வேறுபாடுகளேயாகும். நம் நாட்டிலும் ஜனநாயகமுறையில் திட்டப் பொருளாதாரத்தைச் செயல்படுத்துவதிலுள்ள இடர்ப்பாடுகள் இந்த உண்மையை வலியுறுத்துகின்றன.

மேலும், பொருளியலானது அரசியலை மிகவும் சார்ந்துள்ளது என்பதை மறந்துவிடலாகாது. நம் நாட்டுப் பொருளியல் வளர்ச்சி அரசியல் விடுதலையைத் தொடர்ந்து ஏற்பட்டது தற்செயலாக நேர்ந்த ஒன்றன்று. பொருளாதாரம் செயல்படும் போது அரசியின் ஒத்துழைப்பு பல வழிகளிலும் வேண்டி வருகிறது. அரசு செயல்படு எல்லை விரிவடைந்து கொண்டிருக்கும் இந் நாளில் பொருளியல் செயல் வகைகள் அரசின் கட்டுப்பாட்டுக்குப் பணிய நேர்ந்துள்ளதில் விந்தையில்லை. இன்னும் பொதுவுடைமை நாடுகளில் பொருளியல் அறிவியல் ' அரசுசார் ' என்ற அடைமொழியுடன் (Political Economy) அழைக்கப் பெற்று வருவது இங்குக் குறிப்பிடத்தக்கது. பொருளியலின் கலைக்கூற்றைப் பற்றிச் சிந்திக்கும் போது அரசியல் சார்புநிலை அங்குத் தானுகவே தோன்றி விடுகிறது.

இவ்வளவு நெருங்கிய தொடர்புடைய இவ்விரண்டுக்கும் இடையே எல்லைக்கோடு கிழித்தாகவேண்டும் என்பதை இங்கு வலியுறுத்த வேண்டியதில்லை. இரு துறைகளின் குறிக்கோளின்

அடிப்படையிலேயே இக்கோடு கிழிக்கவேண்டியுள்ளது. திட்டப் பொருளாதாரத்தை எடுத்துக் கொள்வோம். அடிப்படையான அருமைப் பாட்டுக் கண்ணோட்டத்தில் பொருளியல் நூலாளர் இதனை அணுக, அரசியல் நூலாளர்களோ இது ஒரு நிருவாகச் சிக்கலே என்று கருதுகின்றனர். இதனால், பொருளியல் நோக்கு வேறு, அரசியல் நோக்கு வேறு என்றாகிறது.

அரசியலோடு மிக நெருங்கிய தொடர்புடையது வரலாறு. இறந்தகால அரசியல் நிகழ்ச்சிகளின் தொகுப்பே வரலாறு என்று பொதுவாகக் கருதப்பெறுகிறது. ஆனால், இறந்தகால நிகழ்ச்சிகள் பொருளியல் நிகழ்ச்சிகளாகவோ, சமூக நிகழ்ச்சிகளாகவோ கூட இருக்கலாம். எனவே, வரலாறு என்று சொல்லும்போது, அங்குத் தொகுத்துத் தரப்பெற்றுள்ள நிகழ்ச்சிகளைப் பொருத்து, அதில் பல் வேறு வகைகளைக் காணமுடியும். 'இறந்த காலம் நிகழ்காலம் படைக்கும்; நிகழ்காலம் வருங்காலம் வகுக்கும்' எனப் பொதுவாகச் சொல்லப் படுவதால், இறந்தகாலப் பொருளியல் வரலாற்றிலிருந்து பல்வேறு பொருளியல் கோட்பாடுகளை உண்டுபண்ணவும், அவற்றின் உண்மைகளைத் தெரிந்து கொள்ளவும் முடியும். மேலும், அரசியலும் சமூக இயலும் பொருளியலுடன் நெருங்கிய தொடர்பு கொண்டிருப்பதால், அரசியல் வரலாறும் சமூக வரலாறும் கூடப் பொருளியல் அறிவு பெற உதவுவன ஆகும்.

## பொருளியலும் சட்டவியலும்

சட்டங்கள் சமூகத்தால் இயற்றப்படுகின்றன. சமூக வாழ்வின் எல்லாத் துறைகளையும் இவை கட்டுப்படுத்துகின்றன. குடிமகனின் உரிமையை முடிவு செய்கிற அரசியல் சட்டங்கள், சமூக உறவுகளை ஒழுங்குபடுத்தும் சமூகச் சட்டங்கள், பொருளியல் நிலைகளைக் கட்டுப்படுத்தும் பொருளியல் சட்டங்கள் ஆகியவனைத்தும் ஒரே இடத்திலிருந்து தோன்றுவதால் ஒன்றுக்கொன்று மிக நெருங்கிய தொடர்புடன் உள்ளன. குடிமகன் அரசியலுரிமையே நாட்டுப் பொருளியல் அமைப்பை முடிவு செய்கிறது என்பதை இந்திய நாட்டின் கடந்த கால, நிகழ்கால வரலாறு மெய்ப்பிக்கிறது. சமூக உறவுகளை ஒழுங்குபடுத்தும் சொத்துரிமைச் சட்டங்கள் போன்றவை நாட்டு மக்களின் தராதரப் பொருளியல் நிலையை முடிவு செய்கிற காரணிகள் ஆகின்றன. இதுபோன்றே பொருளியல் சட்டங்கள் தொழில், உழைப்பு, நிலவுரிமை முதலிய பல பொருளியல் காரணிகளைத் தாக்குவதன் வழியாகப் பொருளியல் நிலையையும் கட்டுப் படுத்துவன ஆகின்றன.

இதறகெதிராகப பொருளியல சூழலும சட்டங்களின தோற றததையும இயலபையும நிருணயிபபதுணடு தொழிற புரட்சிககுப பினனரே தொழிறசாலைச சட்டங்கள தோனறின சில சமூகச சட்டங்களுககும பொருளியல சூழலகளே காரணம வேலையிலலா திருபபோர துயருதவிச சட்டங்கள தோனற உலகததொழில மநததததையொட்டி ஏறபட்ட பொருளியல சூழலகள தாம காரணம குடியேறற இறககச சட்டங்கள போனற சில அரசியல சட்டங்கள நாட்டுப பொருளாதாரததில அயலாாகது இருககும ஆதிககததை யொட்டியே பெருமபாலும இயறறபபட்டுளளன

பொருளியலின வாயபபெலலை பலவழிகளிலும சட்டததுககு உட்பட்டிருககிறது எனபதை மறநதுவிடலாகாது பொருளியலின அடிபபடை எடுகோளகளில ஒனறு, மககள, சட்டததை மதிதது நடககிறாரகள எனபதாகும எனவே, பொருளியல நூலாளா குறிபபாக பொருளியல கலைததுறையில ஈடுபட்டுளளவாகள தாம குறிபபிட்ட சட்டவரமபுகளை மீற முடியாத நிலையிலிருபபதை ஒரு போதும மறநதுவிடலாகாது

## பொருளியலும அறவியலும

மனபதையின நலவாழவே அறவியலின குறிககோள பொரு ளியலும நலவாழவையே குறிககோளாகக கொணடது எனவே இவவிரணடுககு மிடையே நெருஙகிய தொடாபிருபபது இயலபு மனிதனுடைய நலவாழவுககு உதவாத எநத அறிவுததுறையும பொருட்பயனறறது எனபதில கருதது வேறறுமைககு இடமிலலை

ஆனால், எது நல வாழவு எனபதில தான ஆழநத கருதது வேறறுமை நிலவுகிறது இடைககாலததில சமயததின அடிப படையில அறம நிறுவபபட்டதெனில இனறோ அரசியலின அடிபபடையில அறம உருவாகிக கொணடிருககிறது எனலாம முதலாளிததுவ அறம, சமதரும அறம, பொதுவுடைமை அறம எனப பலவகை அறஙகள இனறு நிலவக காணலாம இநநிலை யில அறததின அடிபபடையில அறிவியலொனறைப பேண முற பட்டால அதை நாளதோறும திருததிக கொணடிருககக வேணடியது தான !

இதனால் தான் பொருளியலும நெறியுரை இயலாக இனறி, இயலபுரை இயலாக இருககவேணடும என ஆசிரியாகள சிலா

கருதுகின்றனர்.[1] ஆனால் பொருளியல் ஒரு கலை என்ற நிலையை அடையும் போது, அங்கு அறவியலைப் புறக்கணிக்க முடியாது என்பதை, இங்கு, நினைவு கூர வேண்டும். 'உண்மையான பொருளியல் செய்கை, இறுதியில் அறவழிப்பட்ட செய்கையாகத் தான் இருக்கவேண்டும்' என்பார் ஸெலிக்மன் (Saligman). அற நோக்கில் நேர்மையற்றிருப்பது பொருளியலில் சரியானதாக இருக்க முடியாது.

அறவியலும் பொருளியலுக்கு ஒருவகையில் கட்டுப்பட்டே உள்ளது. அறவியலுக்கான அடிப்படை உண்மைகளைப் பொருளி யல் தருகிறது. கறுப்புச் சந்தை பற்றிய புள்ளி விவரங்களைப் பொருளியல் தரும்போது, அவற்றின் அடிப்படையில் கறுப்புச் சந்தையை ஒழிப்பதற்கான அறிவுரைகளை அறவியலால் பரிந் துரைக்க முடியும். சில நேரங்களில், பொருளியல் மாறுதல்கள் அறவியல் கோட்பாடுகளையே மாற்றியமைக்கத் தக்கவை ஆகி விடுகின்றன. முதலாளித்துவத்தின் தோற்றம் கிறித்தவ சமயத் தின் கோட்பாடுகளை மாற்றியமைத்து, புராட்டஸ்டான்டு (Protes-tant) பிரிவு தோன்றுவதற்குக் காரணமாயிற்று என அறிஞர்கள் கருதுவது இங்குக் குறிப்பிடத்தக்கது. நம் நாட்டிலும், பொருளியல் வளர்ச்சியைத் தொடர்ந்து பழைய அறக்கோட்பாடுகள் வலிமை குன்றிப் புத்தறமொன்று தோன்றி வருவது இங்குக் கவனிக்கத் தக்கது.

இவ்வாறு, பொருளியலும் அறவியலும் ஒன்றையொன்று சார்ந் துள்ளன என்பது உறுதியாகிறது. இரண்டுக்குமிடையே வேறுபாடு காட்டுவதைவிட ஒருமைப்பாட்டை உண்டுபண்ணுவதே பெருந் தன்மையானது எனலாம்.

[1] 'பொருளியலின் இயல்பு' என்ற தலைப்பில் கண்டவைகளை இங்கே மீண்டும் நினைவு கூர்க.

# 3. பொருளியல் விதிகள்

பொருளியல் அறிவியல்களில் ஒன்று. அறிவியல்களுக் கெல்லாம் பொதுவான சில இயல்புகள் உள்ளன. இவ்வியல்புகள் எந்த அளவுக்குப் பொருளியலில் உண்மையா யுள்ளன என்பதைத் தெளிவாக அறிந்து கொண்டால் தான் பொருளியலின் இயல்பான தன்மையை முற்றிலும் புரிந்து கொள்ள முடியும். இந்நோக்கத்துடன் அறிவியலின் சிறப்புக்கூறுகளைக் காணலாம். முதலில் அறிவியலில் ஒழுங்கானதொரு முறையில் காரண காரியத் தொடர்பு நிறுவப்பட வேண்டும்.[1] காரண காரியத் தொடர்பு உறுதியாக நிறுவப்படும் போது, இரண்டாவதாக, அறிவியலின் முடிவுகள் எப்போதும் துல்லியமானவையாகவும், வருமுன்னுரைக்கத் தக்கவையாகவும் இருந்தாக வேண்டும். வருமுன்னுரைக்க இயலுமென்றால், அவை, தவிர்க்க இயலாதன ஆகின்றன. அறிவியல் முடிவுகள் இவ்வாறு ஆய்ந்து தெளிந்து உறுதியாக நிறுவப்படுவதாலும், தவிர்க்க இயலாதபடி உண்மையா யிருப்பதாலும் விதிகள் எனப் பெறுகின்றன.

பொருளியல் அறிவியலிலும் இவ்வகை விதிகள் பலவுள்ளன. இவ்விதிகளை மார்ஷல் கீழ்வருமாறு பொருள் வரையறை செய்வார்: 'முதன்மையான செயல் ஊக்கிகளின் வலிமையைப் பணவிலை கொண்டு அளக்கமுடிகிற செயல் வகைகளுடன் தொடர்புள்ள சமூக விதிகளே பொருளியல் விதிகள், அல்லது பொருளியல் போக்குரை கூற்றுக்கள்.' இந்தப் பொருள் வரையறையை அலகிட்டுப் பார்த்தால் பொருளியல் விதிகளின் சில இயல்புகளைப் புரிந்து கொள்ள முடியும். முதலாவதாகப் பொருளியல் விதிகள் சமூக விதிகள் ஆகின்றன. அதாவது, அவை மன்பதையின் செயல் வகைகளை நுதல் பொருளாகக் கொண்டுள்ளன.[2] இரண்டாவதாக, இச்செயல்

[1] அடுத்த அதிகாரம் இவ்வியல்பினை விளக்குகிறது.

[2] இதிலிருந்து பொருளியல் விதிக்கும் பிற அறிவியல் விதிகளுக்கும் இடையே

களின் ஒரு பகுதியுடன் மட்டுமே பொருளியல் விதிகள் தொடர்பு கொண்டுள்ளன; பணத்துடன் தொடர்புறுத்தமுடிகிற செயல்வகைகளின் பகுதியே அப்பகுதி.[1] இங்கும், பொருளியல் விதிகள் காரண காரியத் தொடர்புகளைத் துல்லியமாகச் சொல்லத்தக்கவை என்பதைச் சுட்டிக்காட்டுவது போலச் செயல் ஊக்கிகளின் வலிமையைப் பணத்தால் அளக்க முடியும் எனக் குறிப்பிட்டுள்ளார் மார்ஷல். இறுதியாகப் பொருளியல் விதிகள் போக்குரை கூற்றுக்களே என்றும் அவர் சுட்டியுள்ளார்)

(பொருளியல் விதிகள் போக்குரை கூற்றுக்களா யிருப்பதைத் தனியாகக் கவனிக்க வேண்டும். பொருளியல் விதியொன்றை எடுத்துக் காட்டாகக் கொண்டு ஆராய்ந்தால் எளிதாயிருக்கும். பொருளியல் புலமையில்லாதோரும் புரிந்து கொள்ள முடிகிற மிக எளிய விதியாகிய தேவை விதியை எடுத்துக் கொள்வோம். விலை இறங்கினால் தேவை அளவு பெருகும் என இவ்விதி சொல்கிறது. இது பணத்துடன் தொடர்புறுத்த முடிகிற செயல் வகைகளில் ஒன்றே. தேவை அளவு மாறக் காரணம் குறிப்பிட்ட பொருளின் மீதுள்ள விருப்பத் தீவிரம் மாறுவது தான். இந்த விருப்பத் தீவிர மாறுதல் தான் விலையில் எதிரொலிக்கிறது. இதனால், தேவை விதி குறிப்பிடுகிற நிகழ்ச்சிக்கு அடிப்படையான செயல் ஊக்கியின் தீவிரம் (வலிமை) பணத்தால் அளக்கப்பட்டதாகிறது. விலை மாறுதலால் தேவை அளவு எவ்வளவு மாறியுள்ளது என்பதையும் துல்லியமாக அளந்து சொல்ல முடியும்.[2] இவையனைத்தும் உண்மையாகவே இருந்தபோதிலும் இந்த விதி எங்கணும் எந்நிலையிலும் பொருந்துவதாக இருக்குமா என்ற வினா எழுகிறது. குறிப்பிட்ட மனிதன் விவேகமாகச் செயல்படுபவனாக இல்லாமலிருந்தால் இறங்கிய விலையில் மிகுதியாக வாங்க வேண்டும் என்றில்லை; அவனது சமூக,

யுள்ள வேறுபாடு தெளிவாகிறது. பௌதிக விதிகளும் வேதியியல் விதிகளும் இயற்கைப் பொருள்களையே நுதல் பொருளாகக் கொண்டுள்ளன. உயிரியல் துறையானது உயிரினங்களை நுதல் பொருளாகக் கொண்டுள்ளது. ஆனால், பொருளியல் விதிகளின் நுதல் பொருளோ மனிதனின் சமூகச் செயல் வகைகள் ஆகின்றன.

[1] சமூகச் செயல்களுடன் தொடர்புள்ள வேறு சில விதிகளும் உள்ளன. அரசு விதிகள் இவ்வகைப் படுவன; இவற்றைச் சட்டங்கள் என அழைக்கிறோம். சட்டங்கள் மனிதனுடைய செயல் வகையைக் கட்டுப்படுத்துகின்றன; அவற்றை மீறினால் அரச தண்டனை கிடைக்கும். இவை தவிர மரபு விதிகள் சிலவுள்ளன; உற்றார் உறவினருடன் உள்ள உறவை மரபுவிதிகள் கட்டுப்படுத்துகின்றன. இவற்றை மீறினால் தண்டனை எதுவும் இல்லாவிடினும், சமூகத்தின் வெறுப்புக்கு அதனால் ஆளாக நேரும். இவற்றுக்கெல்லாம் மாறுபட்ட நிலையில் பொருளியல் விதிகள் செயற்கையாக இல்லாமல், இயல்பான காரண காரியத் தொடர்பினை விளக்குவன என்பது இங்குக் கருதத்தக்கது.

[2] நுகர்வு இயலில் தேவை நெகிழ்ச்சிக் கோட்பாட்டைப் பார்க்க

அரசியல், பொருளியல் நிலை மாறினாலும் தேவை விதி உண்மையாகாது போகலாம். கூட்டுக்குடும்பத்தைச் சார்ந்தவர்கள், பொதுவுடைமை அரசியலமைப்புக்கு உட்பட்டவர்கள், வருமான வீழ்ச்சிக்கு ஆளானவர்கள் விலையிறக்கத்தால் மிகுதியாகக் கவரப்படுவதில்லை. இது போன்றே, உயிரியல் நிலவியல் கூறுகளும் பொருளாதார விதிகளின் நடைமுறையைக் கட்டுப்படுத்தத்தக்கன. விலை இறங்கிவிட்ட காரணத்தால் முன்னைவிட மிகுதியாக உணவுப் பொருள்களை நுகர முனைந்தால் 'இடும்பைகூர் வயிறு இருநாளைக்கு ஏலென்றால் ஏலாதே!' நிலத்தின் பரப்பும் அதனையொட்டிய போக்குவரத்து இடர்ப்பாடுகளும் விலை இறக்க நிகழச்சியின் விளைவை எங்கணும் உண்மையாகாதபடி தடுத்து விடுகின்றன. எனவே, தேவை விதி, குறிப்பிட்ட சில நிலைகளில் மட்டுமே உண்மையாகும் எனச் சொல்ல வேண்டியுள்ளது. மேலே சொன்ன நிலைகளை வகை தொகை செய்தால், பொதுவாக, அவற்றை மூவகைப்படுத்தலாம்: முதலாவதாக, மனிதன் விவேகத்துடன் செயல்படுவதாக எடுத்துக் கொள்ள வேண்டும். இரண்டாவதாக சமூக, அரசியல் பொருளியல் அமைப்புக்கள் குறிப்பிட்டவாறுள்ளன என்று எடுத்துக் கொள்ள வேண்டும். மூன்றாவதாக, உயிரியல் நிலவியல் உண்மைகளை மீற முடியாது என எடுத்துக் கொள்ள வேண்டும். இம்மூன்றையும் பொருளியல் ஆய்வின் பொதுவான எடுகோள்களாகக் கொண்டு, இந்த எடுகோள்களின் அடிப்படையிலேயே விதிகளை நிறுவ வேண்டியுள்ளது. இந்த எடுகோள்களில் எவையேனும் மாறநேர்ந்தால், விதியானது உண்மையாயிருக்க வழியில்லை. அந்த அளவுக்கு விதி தவிர்க்க இயலாததாகவோ, உறுதிப்பாடுள்ளதாகவோ இருக்க முடியாது. இந்நிலையில், பொருளியல் விதிகள் பொதுவான போக்குகளை மட்டும் உரைக்கின்றன என்று சொல்வதே பொருத்தமாயிருக்கும். வேறு சொற்களில்கூறுவதானால், பொருளியல் விதிகள், சில நிபந்தனைகளை யொட்டியே உண்மையாகின்றன. இந்த நிபந்தனைகளையெல்லாம், குறிப்பிட்ட காரணமல்லாத 'மற்றவை' என ஓரினப் படுத்தி, 'மற்றவை மாறாதிருப்பின்' குறிப்பிட்ட காரணத்தால் குறிப்பிட்ட காரியம் நிகழும் எனச் சொல்வதே பத்திரமான வழியாகிறது. எனவே தான், பொருளியல் விதிகள் 'ஏறக்குறைய உறுதியாயுள்ளன; ஏறக்குறைய வரையறுக்கப் பெற்றுள்ளன' என்பார் மார்ஷல்.

பொருளியல் விதிகளில் மட்டுமே இந்நிலை காணப்படுகிறது என்று கொள்ளலாகாது. கிட்டத் தட்ட எல்லா அறிவியல் விதிகளும் இவ்வாறே உள்ளன. நீரை $100^0$ சூடேற்றினால், அது கொதிநிலையை அடையும் என்பது விதி. ஆனால் வெற்றிட மண்டிலத்திற்கும், மாமலை உச்சிக்கும் இவ்விதி பொருந்தாது. குறிப்பிட்ட அளவு

வளிமண்டில அழுத்தம் நிலவும் போதே இந்தக் கொதிநிலை மட்ட விதி உண்மையாகிறது. புகழ் பெற்ற புவியீர்ப்பு விதியுங் கூட சில எடுகோள்களின் அடிப்படையிலேயே நிறுவப்பட்டுள்ளதாக மார்ஷல் விளக்கியுள்ளார். இவ்வாறு எல்லா அறிவியல்களிலும் சில எடுகோள்களின் அடிப்படையிலேயே விதிகள் நிறுவப்படுகின்றன; பொருளியலும் இதற்கு விலக்காகாது.

எடுகோள்களின் அடிப்படையில் விதிகள் நிறுவப்படும் போது அந்த எடுகோள்கள் பொய்த்துப் போனால், விதியும் உடன் பொய்த்துப் போகவே வழியுண்டு. இதனால், பொருளியல் விதிகள் உறுதிப் பாடற்றவை எனச் சொல்வதுண்டு. பிற அறிவியல் விதிகளுடன் ஒப்பிடும்போது, இந்த உறுதிப் பாடின்மைக் கூறு சற்று மிகுதியாகவே பொருளியல் விதிகளில் காணப்படுகிறது. இதற்குக் காரணங்கள் இல்லாமலில்லை. முதற்காரணம் பொருளியலின் நுதல் பொருள் தான். பொருளியலின் நுதல் பொருள் மனிதன். மனிதனே ஐயறிவுடைய உயிர்களைப் போன்றில்லாமல், உரிமையுடன் செயல் படத்தக்கவன். ஒப்பான இருநிலைகளில் வெவ்வேறு முறைகளில் செயல்பட அவனுக்கு உரிமையுண்டு. முன்பு ஆலைத்துணி கட்டியவன் இப்போது கைத்தறித்துணி கட்டுபவனாகலாம்; இந்நிலையில் ஆலைத்துணியின் விலைமாறுதல்கள் அவனை எவ்வழியிலும் தாக்க முடியாது.[1] இரண்டாவதாக, ஆறறிவுடைய மனிதன் இறந்தகால நிகழ்ச்சிகளிலிருந்து பாடங்கற்றுக் கொள்வதன் வழியாகச் சிலமுடிவுகள் ஏற்படாத படி தடுத்துவிட முடியும். நோய்க்கூறு கண்டவுடன் நோய் வராதபடித் தடுத்துவிடக்கூடிய அறிவு மனிதனுக்கிருக்கிறது. வான் பொய்த்தால் பஞ்சம் வருமென முன்னுரைக்கலாம். ஆனால், இதனால் பஞ்சம் வந்தாக வேண்டும் என்றில்லை. கடந்தகாலப் பட்டறிவால், அயலிடங்களிலிருந்து பொருள்களை, வரவழைத்துத், தாங்களே கையிருப்புச் செய்து கொள்ள மக்களுக்கு வகையுண்டு. இதனால், எதிர் பார்த்த பஞ்ச முடிவு ஏற்படாமலே போகலாம். 'பொருளியலானது தன்னுடைய கண்டுபிடிப்புக்களால், தன்னுடைய முடிவுகளைத் தானே அழித்துக் கொள்கிறது' என்பார் டர்பின் (Durbin). இதனை இயல்வதாக்கும் வகையில், பொருளியலில், காரணங்கள் முழுமையாகச் செயல்படுவதற்கிடையே கால இடைவெளி யொன்றும் தோன்றுகிறது.

[1] சமதருமக் கருத்தினர் பொருளியல் பற்றிக் கொண்டுள்ள கருத்தே வேறு சமூக உறவுகள் பல்வேறு கட்டங்களில் குறிப்பிட்ட வகையில் தான் இருக்க முடியும் என்பது அவர்கள் கருத்து. ஒரு கட்டம் தன்னைவிட உயர்வான அடுத்த கட்டத்திற்குத் தானாகவே வழிவகுக்குமென்று அவர்கள் கருதுகிறார்கள். இந்த உண்மைகளை யொட்டிய விதிகளே பொருளியல் விதிகள். எனவே பொருளியல் விதிகள் தவிர்க்கஇயலாதவை. 'பொருளியல் விதிகள் செயற்படுவதற்குரிய எந்திரம் இல்லா

எடுத்துக்காட்டாக, விலை இறக்கமானது தேவை அளவைத் தாக்குவதற்குக் காலம் பிடிக்கும். இந்தக் கால இடைவெளியில் காரணங்களும் காரியங்களுங் கூட மாற நேரலாம்: விலைமட்டம் மாறலாம்; தேவைப்படுபவன் போக்கும் மாறலாம். இவற்றால், எதிர்பார்த்த முடிவு ஏற்படாது போவதற்கு வாய்ப்பு மிகுதியாக உண்டு. மேலும், ஆய்வகங்களில் சோதனை நடத்தி உண்மைகளைத் தெளிவதற்குரிய வாய்ப்பும் பொருளியலில் இல்லை. மனிதனுடைய செயல் வகைகளில் சோதனை நடத்தித் தெளிவது மிகவுங் கடினமான செயல். ஒரு சர்வாதிகார ஆட்சியில், ஒரு வேளை, மக்களுடைய செயல் வகைகளை ஒரே தன்மையனவாக ஆக்கி விடலாம்; ஆனால், அங்கு இயல்பான மனிதனைப் பற்றியல்ல, செயற்கை மனிதன் ஒருவனைப் பற்றியே கற்பவர்கள் ஆவோம்!

இவற்றாலெல்லாம் பொருளியல் விதிகள் உறுதிப்பாடு குன்றியவைகளாயுள்ளன. எனவே, 'பொருளியல் விதிகள் எளிமையும் துல்லியமும் உடைய புவியீர்ப்பு விதிகளோடல்லாது, கடலெழுச்சி (வேலி ஏற்ற இறக்க) விதிகளோடே ஒப்பிடத்தக்கன.' என்பார் மார்ஷல். கடலெழுச்சி விதிகளின்படி, பொதுவாகப் பௌர்ணமி, அமாவாசை நாட்களில் கடலெழுச்சி மிகுதியாயிருந்து, அலைகளும் பலமாயிருக்கும். ஆனால், அந்நாட்களில், கட்டாயம், அலைகள் பலமாக இருந்தாக வேண்டும் என்றில்லை. ஏனெனில் அலையின் நிலை பல காரணிகளைச் சார்ந்துள்ளது. காற்றின் வேகம், மழை, புவியதிர்ச்சி முதலியவற்றில் எதிர்பாராதவாறு ஏற்படும் மாறுதல்கள் அலையெழுச்சியைப் பௌர்ணமி, அமாவாசை நாட்களில் கூடத் தடுத்து விடலாம். எனவே, கடலெழுச்சி விதிகள் உறுதிப்பாடற்ற போக்குரை கூற்றுக்களே. பொருளியல் விதிகளின் இயல்பும் இது தான்.

மாறாக, புவியீர்ப்பு விதியோ மிகவும் துல்லியமானது; உறுதிப்பாடுள்ளது. பிறவெல்லாவற்றையும் புவியானது குறிப்பிட்ட வேகத்தில் தன்பால் ஈர்க்கிறது. எனவேதான் கல்லொன்றை விண்வெளியில் எறிந்தால், அது எங்கணும் எப்பொழுதும் புவிநோக்கியே வீழ்கிறது. இந்த ஈர்ப்பாற்றலின் வேகத்தையும் கணக்கிட்டு அறிய முடியும். இதனால், இவ்விதி துல்லியமானதும் ஆகிறது. இந்தத் துல்லியமான விதியின் அடிப்படையில் வான நூலாளர் வரும்

மலில்லை. பொருளியல் விதிகளை மீறுவதால் ஏற்படும் விளைவுகளின் வழியாகக்கட்டாயப்படுத்துகிற எந்தவொரு ஏற்பாட்டின் துணையும் இல்லாமலே பொருளியல் விதிகள் தாமாகவே செயல்படுகின்றன. வேறு வழியில் இதனைச் சொல்வதானால், பொருளியல் விதிகளை மீறுபவர்களை அவை தாமாகவே பழிவாங்கிக் கொள்கின்றன' என்பார் ஸ்ட்ரிமிலின் (Strimilin). இக்கருத்து மனிதனது செயல்படு உரிமையில் நம்பிக்கை வைக்கவில்லை என்பது கருதத்தக்கது.

பொருளுரைக்க முடிகிறது; கோள் மறைப்பு என்று நிகழும் என்பதை அவர்களால் முன்னுரைக்க முடியும். ஆனால், பொருளியல் நூலாளர்களால் இவ்வளவு துல்லியமாகவும் உறுதியாகவும் முன்னுரைக்க முடியாது.

இந்நிலையில், பொருளியல் விதிகள் துல்லியமானவை யல்ல; உண்மைக்குப் பொருந்துபவையல்ல; பயனுள்ளவைகளும் அல்ல என்று குறை கூறப்படுகிறது. ஆழ்ந்து சிந்தித்தால் இந்தக் குறை கூறல்கள் மிகைப்படுத்தப் பட்டுள்ளன என்பதை உணர முடியும்.

பொருளியல் விதிகள் துல்லியமானவையல்ல என்று சொல்லக் காரணம் அவை பல்வேறு எடுகோள்களின் அடிப்படையில் நிறுவப் பட்டிருப்பது தான். ஆனால், எடுகோள்களின் அடிப்படையில் நிறுவப்பட்டிருப்பதாலேயே விதிகள் துல்லியமானவையல்ல என்று சொல்வதானால், துல்லியமான விதிகளை எந்த அறிவியலிலும் காண முடியாது. எனவே, எடுகோள்களை அடிப்படையாகக் கொண்டிருப்ப தல்ல, அந்த எடுகோள்களின் அடிப்படை தான் விதிகளின் துல்லியத்தை முடிவு செய்கிறது எனலாம். எடுகோள்களின் அடிப்படை வலிமையுடனிருந்தால், அவற்றைக் கொண்டு அடைய முடிகிற முடிவும் துல்லியமாக இருந்தாக வேண்டும். இந்தக் கண்ணோட்டத்தில், பொருளியலின் முத்திறப் பொது எடுகோள்களை நோக்கினால், அவற்றின் அடிப்படை உறுதி மிக்கதென உறுதியாகச் சொல்ல முடியும். எனவே, அவற்றின் அடிப்படையில் நிறுவப்படுகிற பொருளியல் விதிகளின் துல்லியத்தில் ஐயுறுவது சரியன்று.

மேலும், எடுகோள்களை விளக்கமாகச் சுட்டும் போது தான், குறிப்பிட்ட விதி துல்லியமாகும் என்பதும் இங்குக் கவனிக்கத்தக்கது. எடுகோள்களின் எண்ணிக்கை மிகமிக, விதி விலக்குகளை மேலும் மேலும் தெளிவுபடுத்தியவர்களாவோம்: அந்நிலையில், விதியானது மேலும் துல்லியமாகிறது.

பொருளியல் விதிகளின் துல்லியத்தை இயற்கை அறிவியல் விதிகளுடன் ஒப்பிட்டுப் பார்ப்பது முறையல்ல என்பதையும் இங்குக் கவனிக்க வேண்டும். பொருளியல் ஒரு சமூக அறிவியல். எனவே, பொருளியல் விதிகளைப் பிற சமூக அறிவியல் விதிகளுடன் ஒப்பிட்டுப் பார்ப்பது தான் பொருத்தமாயிருக்கும். அப்படிப் பார்க்கும் போது, பொருளியல் விதிகள் பிறசமூக அறிவியல் விதிகளை விடத் துல்லியமானவை எனத் துணிந்து சொல்லலாம். ஏனெனில், பொருளியல் முடிவுகளை அளந்து சொல்லப் பணமெனும் அளவு கோலொன்று

உள்ளது. பிற சமூக அறிவியல்கள் இப்பேற்றினைப் பெற்றிருக்க வில்லை.

பொருளியல் விதிகள் எடுகோள்களின் அடிப்படையில் நிறுவப் படுவதால், அவை உண்மைக்குப் புறம்பானவை என்று சொல்வ துண்டு. இக்கருத்தும் தவறே. மேலே சொன்ன எடுகோள்களில் எவையும் உண்மையுலகுக்குப் பொருந்தாதவைகளாக இல்லை. மேலும், வரலாற்றுண்மைகளாலும், புள்ளி விவரங்களின் அடிப்படை யிலும் நிறுவப்பட்டுள்ள பொருளியல் விதிகள் வேறுள்ளன. இவற் றை உண்மையுலகுக்குப் பொருந்தாதவை என ஒரு போதும் தள்ளி விட முடியாது.

பொருளியல்விதிகள் துல்லியமற்றவைகளாகவும், உண்மைக்குப் பொருந்தாதவைகளாகவும் இருந்தால், அவை பயனற்றுப் போக லாம். ஆனால், மேலே கண்டது போல முதலிரு குறைகளுக்கும் இடமில்லாதிருப்பதால், பொருளியல் விதிகளின் பயன் பற்றி ஐயுறு வதற்கும் இடமில்லாது போகிறது. பொருளியலானது வெறும் அறி வியல் மட்டுமன்று, ஒரு கலையுமாகும். அது, ஒரு கலையாகும் போது, பொருளியல் விதிகளின் செயற்பாடு நடைமுறைச்சிறப்பு உள்ளதா கிறது. உலகப் பெருந் தொழில் மந்தத்தை எதிரிடுவதற்கான கொள்கைகளை உருவாக்க, அடிப்படைப் பொருளியல் விதிகளே கை கொடுத்துதவின. இன்றையத் திட்டப் பொருளாதாரத்தின் நடை முறையும் பொருளியல் விதிகளின் அடிப்படையையே சார்ந்துள்ளது.

பொருளியல் விதிகள் எடுகோள்களின் அடிப்படையில் நிறுவப் பட்டுள்ள காரணத்தால், அவற்றை மீறிவிடலாம்; அதனால் அவை பயனற்றவை எனச் சொல்வதிலும் பொருளில்லை. மனிதனால் மீற முடியாத பொருளியல் விதிகள் பலவுள்ளன. மனிதனால் கட்டுப் படுத்த முடியாத உணர்ச்சிகளையும். [1] புற உலகின் தவிர்க்க முடி யாத சில நியதிகளையும், [2] அடிப்படையாகக் கொண்ட எத்தனையோ விதிகள் உள்ளன. மேலும், பெரும்பான்மை விதிகள் மனிதன் விவேகத்துடன் செயல்படும் போது உறுதியாக நிகழ்ந்தேறத்தக் கன. இறுதியாகத் தனியொரு மனிதன் செயல் வகையை உறுதி யாக முன்னுரைக்க முடியாவிட்டாலும், மனிதக் கூட்டமொன்றின் செயல்வகையை உறுதியாக முன்னுரைக்க முடியும் என்பதையும் இங்குக் கருதவேண்டும். தனியொரு தொழிலாளி வெகுண்டெழுந் தால் ஆலையின் கண்ணாடிப் பலகணியின் மீது கல்லெறிவதற்குரிய

[1] எ. கா. குறைந்து செல் பயன்பாட்டு விதி.
[2] எ. கா. மாறும் வீத விதி.

துணிச்சல் இல்லாதவனுயிருக்கலாம்; ஆனால், தொழிலாளர் கூட்டமொன்று வெகுண்டெழுந்து விட்டாலோ பலகணிகள் பல பலியாகலாமென உறுதியாக முன்னுரைக்க முடியுமல்லவா? பொருளியல் விதிகளும், இவ்வாறு மனித சமூகத்தின் செயல் வகைகளையே நுதல் பொருளாகக் கொண்டிருப்பதால், அவை உறுதிப்பாடுள்ளவையாகவும், அதனால் பயனுள்ளவையாகவும் இருப்பது தெளிவு.

பொருளியல் விதிகளின் இயல்பு பற்றிய வேறொரு கருத்து வேற்றுமையும் இங்குக் கருதத்தக்கது. தொன்னூலாளரும், இந்நாளில் இராபின்ஸ் போன்றோரும், பொருளியல் விதிகளுக்குக் கால வரையறையோ, நாட்டெல்லையோ இல்லை என்று கருதுவர். பௌதிக விதிகளைப் போலப் பொருளியல் விதிகளும் எங்கணும் எப்பொழுதும் உண்மையாக இருப்பதாக இவர்கள் கருதுவர். மாறாக, ஜெர்மானிய நாட்டு வரலாற்று மரபினர், குறிப்பிட்ட வரலாற்றுக் கட்டங்களுக்கு மட்டுமே பொருளியல் விதிகள் பொருந்தும் எனக் கருதினார்கள். வேடர் சமூகத்துக்குப் பொருந்துகிற விதிகள் தொழில் சமூகத்துக்குப் பொருந்தா என்பது அவர்கள் கருத்து.

இன்று நிலவும் பொருளியல் கோட்பாடுகள் இங்கிலாந்து நாட்டுச் சூழலில் இங்கிலாந்து நாட்டு நலத்தைப் பெருக்கும் நோக்கில் புனையப் பெற்றன என்றும், அவை இன்று வளர்ச்சி குன்றியிருக்கும் நாடுகளுக்குப் பொருந்துவதில்லை என்றும் மிர்தல் (Gunnar Myrdal) போன்ற அறிஞர்கள் கருதுகின்றனர். இங்கிலாந்து நாட்டில் அன்று நிலவிய பாங்கு-கடன் ஏற்பாடுள், போக்குவரவு-தொடர்பு முறைகள், சொத்துரிமை-நிலவுரிமை நியதிகள், பொருள்-காரணி அங்காடிகள், சட்ட-அரசியல் அமைப்புக்கள், சமூக நிறுவனங்கள், கல்வித்திட்டங்கள், பண்பாடு, மனித குல நோக்கங்கள் முதலிய 'பொதுச்சூழ்நிலைகள்' இந்தப் பிற நாடுகளில் இல்லை என்று சுட்டப்படுகிறது. வளர்ச்சியடைந்துள்ள நாடுகளுக்குப் பொருந்துகிற எடுகோள்கள் இந்நாடுகளுக்குப் பொருந்தா என்றும் சொல்வதுண்டு.

இக்கருத்தை பாயெர் (P. T. Bauer) போன்ற அறிஞர்கள் ஏற்றுக் கொள்வதில்லை. தேவை, அளிப்பு, ஆய்வு, அதன் முடிவுகள், கிடைக்கிற வாய்ப்புக்களில் மிகுதியான நிகர நன்மை பயக்கிற செயல்களையும் தொழில்களையும் மக்கள் நாடிச் செல்லும் போக்கு, உற்பத்தி வளங்களின் போட்டி–நிரப்புத் தொடர்புகளை யொட்டிய விளைவுகள் முதலியவை வளர்ச்சி குன்றிய நாடுகளுக்கும் பொருந்துவன தாம் என்பது இவர்களுடைய கருத்து. வளங்களின் அருமைப்பாடே மேலே குறிப்பிட்டவைகளுக்கெல்லாம் அடிப்படையாக இருப்

பதால், அவை வளர்ச்சி குன்றிய நாடுகளுக்கும் பொருந்துவன வாகவே உள்ளன.

வேறோர் உண்மையும் இதன் தொடர்பாகக் கவனிக்கத் தக்கது. இந்நாளைய பொருளியல் நூற்கள் குறிப்பிடுகிற விதிகள் ஒரு சம தருமச் சமூகத்துக்குப் பொருந்துமா என்பது சிக்கலானதொரு வினா. சமதருமக் கருத்தினர் பொருளியலை அணுகியுள்ள முறையே வேறு எனப் பார்த்துள்ளோம். உண்மையில், ஆடம் ஸ்மித்திலிருந்து தொடங்கிய அந்தப் பழைய மரபிலிருந்து சமதருமக் கொடிவழி கிட்டத்தட்டப் பிரிந்து விட்டதென்றே சொல்வதுண்டு. இருந் தாலும், சமதரும அமைப்பிலும் அருமைப் பாட்டுச்சிக்கல் இயல் பாயுள்ளது; அதனால் அடிப்படை விதிகள் அந்த அமைப்புக்கும் பொருந்தாமலிருக்க வழியில்லை.

பேராசிரியர் ஆஸ்கார் லாங்கே (Oscar Lange) நால்வகை விதிகள் சமதருமச் சமூகத்துக்குப் பொருந்துவனவாக இருக்கின்றன என்பார்:

1. சில விதிகள் எல்லாப் பொருளாதார அமைப்புக்களுக்கும் பொதுவாக உள்ளன. உற்பத்தி விதிகளை இவற்றுக்கு எடுத்துக் காட்டாகக் கொள்ளலாம். உற்பத்திப் பருமன் மிகும் போது, குறிப் பிட்ட நிலை வரை உற்பத்திச் செலவுகள் குறைந்து செல்லும் என்பது முதலாளித்துவ அமைப்பில் மட்டுமல்லாது, சமதரும அமைப்பிலும் உண்மையாகவே உள்ளது.

2. சில விதிகள் முதலாளித்துவ அமைப்பில் சிறப்பாகவும், வேறு சில சமதரும அமைப்பில் சிறப்பாகவும் செயல்படுபவைகளாக உள்ளன. முதலாளித்துவ அமைப்பில் உற்பத்தியை ஊக்குவிப்பது மிகவுயர்ந்த இலாபம் தேடும் நோக்கம்; உற்பத்தி அமைப்பு தனி யார் சொத்துரிமையை அடிப்படையாகக் கொண்டிருப்பதாலேயே இது நிகழ்கிறது. மாறாக, உற்பத்திக் காரணிகளெல்லாம் சமதரும அமைப்பில் சமூக உரிமையாக உள்ளன. எனவே, இங்கே சமூக விருப்பங்கள் மிகவுயர்ந்த அளவு நிறைவு பெறும் வகையில் உற் பத்தி நிகழ்கிறது.

3. சில விதிகள் சில அமைப்புக்களுக்கே சிறப்பாக உள்ளன. சொந்த நுகர்வுக்காக உற்பத்தி நிகழும் அமைப்புக்களில் தேவை விதியோ, இறுதி நிலைப் பயன்பாட்டு விதியோ செயல் படுவதில்லை.

இவ்விதிகளும் முதலாளித்துவ-சமதருமச் சமூகங்களில் செயல் படுபவைகளாகவே உள்ளன. இரு அமைப்புக்களிலும் நுகர்வோர் தம்முரிமை மறுக்கப்படாமலிருப்பதே இதற்குக் காரணம்.

4. பொருளாதாரங்களின் உயர்மட்ட அமைப்பினை ஒட்டிய விதிகள் சிலவுள்ளன. ஒவ்வொரு பொருளியல் அமைப்புக்கும் குறிப்பிட்டவொரு உற்பத்தி முறைநிலவுகிற போதிலும், பொருளாதார உயர்மட்ட அமைப்பு நிலைபேருக இருப்பதில்லை. முதலாளித்துவ நாடொன்றில் ஒற்றை நாணயத் திட்டம் நடைமுறையிலிருந்தால் ஒருவகைப் பண விதிகள் செயல்படும்; இரட்டை நாணயத்திட்டம் இருந்தால் வேருெரு வகைப் பணவிதிகள் செயல்படும். சமதரும நாட்டிலும் இவ்வாறு நாணயத் திட்டம் மாறும் போது, செயல்படுகிற விதிகளின் தன்மைகளும் மாறவே செய்யும். 7

# 4. பொருளியல் ஆய்வுமுறைகள்

அறிவியலில் சில முடிவுகளை எட்டுகிறோம். இம்முடிவுகள் துல்லியமாகவும் உறுதிப்பாடுள்ளவையாகவும் இருப்பதாகக் கொள்கிறோம். முடிவுகள் இவ்வியல்புகளைப் பெற வேண்டுமெனில் அவற்றை எட்டுகிற முறையில் தனிக்கவனஞ் செலுத்த வேண்டும். காரண காரியத் தொடர்புகளை நிறுவும் போது, அவற்றை ஐயந்திரிபற்ற வகையில் உறுதி செய்ய வேண்டுமெனில் பிழையற்ற ஆய்வு முறைகளைக் கையாள வேண்டும்.

ஆய்வு முறை என்றால் என்ன என முதலில் பார்க்கலாம். 'அடிப்படை உண்மைகள் உறுதிப் படுத்தப்பட்டு, செயல் முறை சரியானதென நிரூபிக்கப்பட்டு, முடிவுகள் நிறுவப்படுகிற முறை' தான் ஆய்வுமுறை என்பார் நீஸ் (Knies). உண்மைகளின் உறுதிப்பாடு அவற்றுக்கு ஆதரவாகத் தரமுடிகிற சான்றுகளை ஒட்டியது. செயல் முறை சரியானதென நிரூபிக்க நடைமுறை நிகழ்ச்சிகளை நுணுகி ஆராய வேண்டும். இவ்விரண்டிலுமிருந்து காரணகாரியத் தொடர்பொன்றைக் காணமுடியுமெனில், அதனை முடிவாக வெளியிடலாம். இவ்வாறு முடிவுகளை எட்ட வேண்டுமெனில் சான்றுகளைத் திரட்டுவதும், நடைமுறை நிகழ்ச்சிகளைச் சோதித்தறிவதும், காரண காரியத் தொடர்பைக் கண்டு பிடிப்பதும் ஆகிய பல்வேறு படிகளைக் கடந்தாக வேண்டும். இந்தப் படிகளையே முறைகள் என்று சொல்கிறோம்.

நம் நாட்டுத் தருக்க நூலாளர் பிரத்தியட்சம், அநுமானம், ஆகமம்,[1] உவமானம், அருத்தாபத்தி,[2] அபாவம்[3] என்ற அறு

[1] அறநூற் கருதுக்களின் அடிப்படையில் முடிவுகளை எட்டுவது தான் ஆகம முறை.
[2] வேறெந்தக் காரணத்துக்கும் வழியில்லாததால், குறிப்பிட்ட காரணத்தால் தான் காரியம் நடந்திருக்குமென முடிவுகட்டுவதுதான் அருத்தாபத்தி முறை (எ. கா. பகலுண்ணான் பருத்திருக்க, இரவில் உண்டான் என முடிவுகட்டுவது.)
[3] இயல்பாய் இல்லதனை இல்லதெனச்சொல்வது தான் அபாவ முறை.

வகை ஆய்வுமுறைகளைத் தந்துள்ளனர். இவற்றுள் முதலிரண்டு முறைகளுமே மேனாட்டறிஞர்களால், பொதுவாக ஆளப் பெற்று வருகின்றன. மேனாட்டுச் சூழ்நிலையில் வளர்ந்த பொருளியலிலும் இவ்விரு முறைகளே கடைப்பிடிக்கப்பட்டு வருகின்றன. இவ்விரண்டையும், முறையே, தொகுத்தறிமுறை (Inductive Mtehod), பகுத்தறி முறை (Deductive Method) என்று சொல்வர்.

பழங்கால ஆசிரியர்கள் பகுத்தறி முறையையே ஆண்டு வந்தனர். சில அடிப்படை உண்மைகளை ஆதாரமாக வைத்துக் கொண்டு சில முடிவுகளைத் தெரிவிக்கிற முறையே பகுத்தறி முறை எனப்படும். தொன்னூலாளர்களில் ஒருவராகிய ரிக்கார்டோ வின் கருத்தொன்றை இங்கு எடுத்துக் காட்டலாம்: மக்கள் தன்னல நாட்டம் உடையவர்கள்; ஒவ்வொருவரும் தமக்கு நன்மை தருவது எது என்பதை மிக நன்கு அறியத் தக்கவர். இவ்விரு எடுகோள்களின் அடிப்படையில் வேறொரு முடிவைப் பகுத்தறியலாம். குறிப்பிட்டவொரு தொழிலில் கூலிவீதம் உயர்ந்தால், பிற தொழிலில் ஈடுபட்டுள்ளவர்களும் குறிப்பிட்ட தொழிலிலேயே குவிய முற்படுவார்கள். (உயர் கூலி பெறும் வாய்ப்பு தமக்கு நன்மை தருவது; ஆதலால் தன்னல நாட்டமுள்ளோர் குறிப்பிட்ட தொழிலைத்தான் தேர்ந்தெடுப்பார்.) இதனால், அத்தொழிலில் (மிகுதியான தொழிலாளர் சேர்வதால்) கூலி வீதம் இறங்க முற்பட்டு, இறுதியில் இயல்பாக நிலவும் கூலிமட்டத்தைச் சென்று அடையும் என்று முடிவு கட்டுவர் ரிக்கார்டோ.

தொன்னூலாளர் பகுத்தறிமுறையைக் கையாண்டதற்குக் காரணங்கள் இல்லாமலில்லை. பயன் தரும் வகையில் விசாரணைகள் நடத்தி உண்மைகளைக் கண் கூடாகத் தெளிய அந்நாளில் வாய்ப்பில்லாமல் இருந்தது. போதிய புள்ளி விவரங்கள் கிடைக்கவில்லை; வரலாறும் அவ்வளவு விரிவாக இறந்தகால நடப்புகளைச் சொல்லவில்லை. இந்நிலையில், உண்மைகளைத் தெளிவதற்குள்ள ஒரே வழி தெளிவிளக்கமான ஆதார உண்மைகளின் அடிப்படையில் ஆழ்ந்து, சிந்தித்து, முடிவுகளை எட்டுவது தான். மேலும், அந்நாளில், வானநூல், அறவியல் போன்ற பிற இயல்களும் பகுத்தறி முறையையே ஆண்டு வந்ததால் பொருளியல் நூலாளரும் அதே முறையே அடியொற்ற முன்வந்தனர். இறுதியாக, அந்நாளில் ஆட்சிசெலுத்தி வந்த தடையிலாப் பொருளாதாரக் கொள்கையும் சிந்தனையுலகில் புதிய முறைகளைப் புகுத்தத் தடையாகவே இருந்தது.

பகுத்தறி முறையின் வகைகளில் ஒன்றே கணிதஇயல் முறை. பொருளியல் செய்கைகளின் அடிப்படை தேர்வுச் சிக்கல் எனக்

கண்டோம். இரண்டு பரிமாணங்களை ஒப்பு நோக்குவது தான் தேர்வு. எனவே, பொருளியல் காரணங்களின் விளைவுகளை 'எவ்வாறு' என்று மட்டுமல்ல, 'எவ்வளவு' என்றும் அளந்து சொல்ல முடியும். எனவே, அண்மைக் காலத்தில், வடிவகணித எழுத்தியற் கணித உண்மைகளைப் பெரியதோரளவில் பொருளியல் ஆய்வில் கையாண்டு வருவதில் வியப்பில்லை. இங்கிலாந்தில் எட்ஜ்வொர்த் (Edgeworth), ஜெவான்ஸ் (Jevons) ஆகியோரும், பிரெஞ்சு, இத்தாலிய நாட்டறிஞர்களும் கணித இயல் முறையை முதன்மையாக ஆண்டு வந்தனர். இந்நாளில் 'அளவியல் பொருளியல்' (Econometrics) தனியொரு துறையாகும் அளவுக்கு வளர்ந்துள்ளது.

கணித இயல் முறையில் சில நன்மைகள் உள்ளன. முடிவுகளைத் துல்லியமாக அளந்து சொல்ல முடியாத ஓர் அறிவுத்துறை, அறிவியல் என்ற பெயருக்கே தகுதியற்றது என்பார் கெல்வின் (Kelvin). இந்த அறிவியல் தகுதியைப் பொருளியலுக்கு அளிப்பது கணித இயல் முறை தான்.[1] இந்த முறையின் இன்னொரு சிறப்பாவது, சார்பு நிலையிலுள்ள பல்வேறு பொருளியல் காரணிகளின் எதிரெதிர் செயல்களை விளக்குவதற்கு இது ஓர் எளிய முறையாக இருப்பதாகும்.[2] மேலும், சில தலைப்புக்களை விளக்குவதற்குக் கணித இயல் முறையன்றி வேறு வழியில்லை.[3]

மார்ஷல் போன்றோர் இம்முறையில் சில குறைபாடுகளைச் சுட்டிக் காட்டியுள்ளனர். கணித உண்மைகளை அளவுக்கு மீறி ஆளமுற்பட்டால், அந்த ஆய்வானது பாமரனுக்குப் புரியாமலாகிவிடும். பாமரனுக்காக எந்த அறிவியலும் ஆயப்படவில்லை என்பது உண்மையே யாயினும், பொருளியல் போன்ற நடைமுறைச் சிறப்புள்ள அறிவியல் முடிவுகளும், அவற்றை எட்டிய முறைகளும் எல்லார்க்கும் புரியுமாறு இருந்தால் தான் பயனுண்டு. மேலும், கணித உண்மைகளுக்கு அடிப்படையாக இருக்க வேண்டிய மனிதச் செயல் வகைகளை மறந்து விட்டு, அக்கணித உண்மையிலேயே மூழ்கி விட்டால் நடைமுறைக்குப் பொருத்தமில்லாத சில பொருளியல் 'விளையாட்டுப் பொம்மைகள்' உருவாகுவது தான் மிஞ்சும். இறுதியாகப் பொருளியல் காரணிகளின் எதிரெதிர் செயல் இரசாயனக் கலவைகளின் கூட்டுச்செயல் போன்று இருக்கிறதேயொழிய, ஏதோ எந்திரப் பகுதிகளின் இயக்கம் போன்றில்லை. அதாவது, ஒன்றன் செயல் மற்றொன்றன் செயலை மீறுவதாக அமைந்து, எதிர்பாராத

[1] தேவை நெகிழ்ச்சிக் கோட்பாடு பார்க்க.
[2] மதிப்பு நிருணயம் பார்க்க.
[3] சமநோக்கு வளைகோடுகள் பார்க்க.

சில சங்கிலித் தொடர் நிகழ்ச்சிகள் தோன்றக் காரணமாகி விடலாம். கணித இயல் முறை பற்றி முடிவாக இவ்வாறு தான் சொல்ல வேண்டியுள்ளது. மண்வெட்டியும் மண்வாரி எந்திரமும் ஒரே தொழிலைத்தான் செய்கின்றன; ஆனால், பிந்தியது குறிப்பிட்ட தொழிலைத் திறம்படச் செய்து முடிக்கிறது. இதுபோல, கணித இயல் முறையானது பிற முறைகளால் செய்யமுடியாத ஒன்றைச் செய்வதாகச் சொல்லமுடியாது; செய்வதைத் திருந்தச் செய்கிறது என்பது தான் அதன் சிறப்பு.

இனி, தொகுத்தறி முறையை ஆராயலாம். இம்முறையில் கண்கூடான சமூக உண்மைகளைக் கவனமாக ஆய்வதன் வழியாக முடிவுகளை எட்டமுடிகிறது. இந்த உண்மைகளை வரலாறும் புள்ளி விவரங்களும் தருகின்றன. இறந்தகால நிகழ்ச்சிகளை வரலாறு தருகிறது. புள்ளி விவரமோ நடப்பு நிகழ்ச்சிகளை ஓரினப்படுத்தித் தருகிறது. இந்த உண்மைகளின் ஒப்புமை வேற்றுமையிலிருந்து முடிவுகளைக் காணமுடியும். பலதடவை (அல்லது, பல இடங்களில்) மீண்டும் மீண்டும் நடந்த ஒரு நிகழ்ச்சிக்குத் தொடர்ந்து ஒரே தோற்றுவாய் இருந்தால், உடனே, அந்த நிகழ்ச்சிக்கு அந்தத் தோற்றுவாயே காரணம் என முடிவுகட்டி விடலாம். பிறப்புவீதம் குறைந்த அளவிலிருக்கும் நாடுகளெல்லாம் ஏழைமைப் பட்டிருப்பதைக் கண்டார் மால்தஸ் (Malthus). இதிலிருக்கும் ஏழைமையே குறைந்த பிறப்பு வீதத்துக்குக் காரணம் எனத் தொகுத்தறிந்து ஒரு முடிவுக்கு வந்தார் அவர். இதுபோல வேற்றுமைகளைக் காண்பதிலிருந்தும் முடிவுகளுக்கு வரலாம். ஒன்றே யொன்றைத் தவிரப் பிற எல்லாவற்றிலும் ஒப்பாயிருக்கும் இருநிலைகளை எடுத்துக் கொண்டு, இவற்றின் விளைவுகளிலுள்ள வேறுபாட்டுக்குக் காரணம் முதலில் கண்டவொரு வேறுபாடுதான் என்ற முடிவுக்கு வந்து விடலாம். இரு நாடுகளை எடுத்துக் கொண்டு ஒரு நாடு தடையிலா வணிகக் கொள்கையையும், மற்றொன்று தொழிற்காப்புக் கொள்கையையும் பின்பற்றும் போது, முதல் நாடு மட்டும் செழிப்பாக இருந்தால் இதற்குக் காரணம் தடையிலா வணிகக் கொள்கையே என முடிவு கட்ட முடியும். ஜெர்மானிய நாட்டு வரலாற்று மரபினர் இம் முறையைப் பரப்பியவர்களில் குறிப்பிடத்தக்கவர்.

இம்முறையிலும் சில நன்மைகள் உள்ளன. கண்கூடான உண்மைகளின் அடிப்படையில், இங்கே, முடிவுகளை நிறுவுவதால், முடிவுகள் தக்க ஆதாரத்துடன் திகழ்கின்றன. ஐயம் எழுப்புபவர்களுக்கு வரலாற்று உண்மைகளையும் புள்ளி விவரங்களையும் சான்றுகளாகக் காட்ட முடியும். பகுத்தறி முறையில் எட்டுகிற முடிவுகளைச்

சோதித்தறியவும் இம்முறையைப் பயன்படுத்தலாம். முடிவுகள் பற்றிக் கருத்து வேற்றுமைகள் இருந்தால், அவற்றைத் தீர்க்க இம்முறை சாலச் சிறந்த ஒன்றாகும். இறுதியாக, இவற்றின் அடிப்படையில் சரியான கொள்கைகளை இயற்றுவதும் மிக எளிது.

இம்முறையிலும் சில குறைகள் இல்லாமலில்லை. ஆதாரமாகக் கொண்டுள்ள புள்ளி விவரங்கள் உண்மையாயிருந்தால் தான், அவற்றின் அடிப்படையாக நாம் கொள்கிற முடிவுகளும் உண்மையாயிருக்க முடியும். மேலும், இரு நிகழ்ச்சிகளிடையே காரணகாரியத் தொடர்புள்ளதா என்பதையுங் கவனிக்க வேண்டும். ஒன்றையடுத்து வேறொன்று நிகழ்வதாக வைத்துக் கொள்வோம். இங்கு இரண்டாவது நிகழ்ச்சி எப்பொழுதும் முதல் நிகழ்ச்சியின் விளைவாகத் தான் இருக்கவேண்டும் என்றில்லை; அது தற்செயலாக நேர்ந்த ஒன்றாகக் கூட இருக்கலாம்.

இவற்றின் பொருள், பொருளியல் முடிவுகளை அடைவதற்கு இவ்விரண்டு முறைகளில் சிறந்தது எது எனத் தேர்வது எளிதன்று என்பது தான். பகுத்தறி முறை எளியது ; உறுதிப்பாடுள்ளது. ஆனால், இங்கே அடிப்படை வலிவுள்ளதாக இருக்கவேண்டும். தொகுத்தறி முறையின் அடிப்படை கண்கூடான உண்மைகளே ; ஆனால், இங்கும், கையிலுள்ள விவரங்களின் மெய்ம்மை பற்றித் தெளிவாக அறிந்து கொள்ள வேண்டும். ஆகவே, இரு முறைகளையும் கலந்தாளுதல் மிகவும் பொருத்தமாயிருக்கும் எனக் கொள்வது பொருத்தமானதே. உண்மைகளைத் தொகுத்தறியும் போது சில காரண காரியத் தொடர்புகள் புலனாகலாம். அடுத்து அத்தொடர்புகளின் உண்மையைப் பகுத்தறிய வேண்டும். அப்போதும் தொடர்புகள் வலியுறுமானால், பின்னர் அவற்றின் நடைமுறை யுண்மையை மீண்டும் சோதித்துப் பார்க்கலாம். இந்தச் சோதனையிலும், தொடக்கத்தில் கண்ட காரணகாரியத் தொடர்பு வலியுறுமானால், அதனை ஒரு விதியாகக் கொள்வதில் தவறில்லை. இவ்வாறு தொகுத்தறிந்தும் பகுத்தறிந்தும் கொள்கிற முடிவுகள் 'இரட்டைத் தாழ்ப்பாள்கள்'! எனலாம். ஸ்க்மால்லெர் (Schmoller) கூறியது போல வலது காலும் இடது காலும் எவ்வாறு நடப்பதற்கு உதவுகின்றனவோ, அது போலப் பகுத்தறி முறையும் தொகுத்தறி முறையும் ஆகிய இரண்டும் வேண்டும் எனக் கொள்வது ஏற்புடையதே.

மேலும், இவ்விரு முறைகளும் குறிப்பிட்ட துறைகளுக்குச் சிறப்பாகப் பொருந்துகின்றன என்பதையுங் கவனிக்க வேண்டும். புள்ளி விவரங்கள் ஏராளமாகக் கிடைக்கிற உற்பத்தி இயலில் தொகுத்தறி

முறையைத் திறம்பட ஆளலாம். பெரிதும் உளப்பாங்கைச் சார்ந்துள்ள பகிர்வு-மாற்று இயல்களில் பகுத்தறி முறைக்கே வாய்ப்புள்ளது. இது போன்ற, கோட்பாடுகளை விளக்க முன்வரும் போது பகுத்தறி முறையும், நடைமுறைகளை ஆயும் போது தொகுத்தறி முறையுமே சாலப் பொருந்துகின்றன.

## பொருளியல் ஆய்வுக் கருவிகள்

பொருளியல் ஆய்வு முறைகளின் அடிப்படையில் பொருளியல் ஆய்வுக் கருவிகளும் இருவகையின எனலாம். தருக்க முறையில் முடிவுகளை நிறுவ அளவை இயல் கருவிகள் உதவுகின்றன : இங்கு விருப்புவெறுப்பற்ற கூர்த்த சிந்தனையே ஒரு தனிக்கருவி.

முடிவுகள் எல்லாம் 'இதனால் இது' என்றவாறு தொடர்புநிலை ஒன்றைச் சுட்டுவதாகவே உள்ளன. இந்தத் தொடர்பைச் சரி நுட்பமாகப் புலப்படுத்த கணிதம் பல கருவிகளைப் பொருளியலாளனுக்குத் தந்துள்ளது.

எழுத்தியலில் (Algebra) இரு மாறிகளிடையே யுள்ள தொடர்பினைப் புலப்படுத்தச் சிறந்த வழியொன்று இருக்கிறது: y–ஆனது x-ஐச் சார்ந்திருந்தால் y=f (x) என்று எழுதி, y, x-இன் சார்பலன் (Function) எனக் குறிப்பிடலாம். x- இன் மதிப்புக்குத் தக்கவாறு y-இன் மதிப்பும் மாறும் என்பதே இதன் பொருள். இனி, x-இன் பல்வேறு மதிப்புக்களுக்குத் தகுந்த y-இன் மதிப்பைக் கண்டு பிடித்து அதனை ஒரு வரைபடத் தாளில் பகர்த்தலாம். இப்போது கிடைக்கிற பல புள்ளிகளை ஒரு கோட்டில் சேர்த்தால், அந்தக் கோடு y=f (x) என்ற சார்பலனின் வரைபடமாகும். இதிலிருந்து குறிப்பிட்ட தொடர்பின் போக்கை மட்டுமன்று; அளவையுங்கூடக் கணித்தறியலாம். ஒரு மாறி மாறுவதால், அடுத்த மாறி எந்த வீதத்தில் மாறுகிறது என்பதன் தொடர்பான கணிதப் பிரிவு 'வகை நுண்ணியற் கணக்கு' (Differential calculus) எனப் பெறும். இம்முறையின் வழியாகக் குறிப்பிட்ட தொடர்புகளை ஒட்டியவைகளை வருமுன்னுரைக்கவும் இயலலாம்.

சார்பலன் கோட்பாட்டின் தொடர்பாக வரை படங்களுக்குச் செல்லும் போது எழுத்தியல் வடிவக் கணிதக் கருவிகளும் பயன் படலாம். எப்பொழுதுமே, வரைபடங்கள் வழியாக விளக்கும் போது, அவை படிப்பவனுடைய கண்ணிலும் கருத்திலும் ஒரே நேரத்தில் தைக்கின்றன என்பது இங்கு நினைவுகூரத் தக்கது. முக்கோணக்

கணக்கு (Trigonometry) உண்மைகளுங் கூடப் பொருளியலாளர்க்குக் கருவிகளாகலாம். கோடுகளின் விகிதங்களைக் காணுதல் முக்கோணக் கணக்கின் நுதல் பொருள்களில் ஒன்று ; ஆதலால் தொடர்புகளின் அளவினை-விகிதத்தைக்-காண முக்கோணக் கணக்குக் கருவிகள் உதவும்.

பொருளியல் கோட்பாடுகளை உலக நடை முறையைக் கொண்டு மெய்ப்பிக்கும் போது, புள்ளி விவர ஆய்வு சிறப்பான உதவி புரிகிறது. குறிப்பிட்ட நிகழ்ச்சிக்கான காரணிகள் பற்றிய விவரங்களைத் தொகுத்து அவற்றிடை நிலவும் தொடர்பினைப் புள்ளி இயல் சுட்டிக் காட்ட முடியும். இரு மாறிகளிடையே யுள்ள தொடர்பின் அளவு 'இணைப்புக் குணகம்' (Correlation Coefficient) என்று புள்ளி இயலில் கூறப் பெறும்.

மேலும், பொருளியல் செய்கைகளின் விவரத்தை நன்கு பாகுபடுத்தித் தருவதும் புள்ளி இயலே ஆகும். ஓரியல்பு இல்லாத மக்கள் தொகுதிகளின் செயல் பற்றிக் கற்கும் போது, அத்தொகுதிகளைப் பல்வேறு அடிப்படைகளில் வகை தொகை செய்து, அவற்றில் சில 'தற்செயல் மாதிரி' (Random Samples) களின் செயல்களைக் கற்றறிந்து, அதன் வழியாக மக்கள் தொகுதிகளின் ஆக மொத்தச் செயல் வகைகளையும் அறியப் புள்ளி இயல் கருவிகள் பயன்படுகின்றன.

செயல்படு பொருளியலில் கணிதத்தையும், புள்ளி இயலையும் இணைத்து ஆராய வேண்டிய நிலை இயல்பாகவே தோன்றுகிறது. தூய பொருளியலில் சார்பு உறவுகளை மட்டும் கூறினால் போதும். ஆனால், அவற்றின் அடிப்படையில் செயல்பட வேண்டிய செயல்படு பொருளியலாளர்க்கு அவ்வுறவுகளின் துல்லியமான அளவு பற்றிய அறிவு இன்றியமையாது வேண்டும். இங்குக் கணித இயல் கருவிகளைப் பயன்படுத்த வேண்டும். அந்த உறவு அளவுகள் நடைமுறைக்குப் பொருந்துவனவாக இருந்தால் தான் செயல்பாடு பொருளுள்ளதாக இருக்கும். எனவே, குறிப்பிட்ட உறவுகளை நடை முறையிலிருந்தே ஆய்ந்து அளந்து நிறுவ வேண்டும். இங்குப் புள்ளி இயல் கருவிகளைப் பயன்படுத்த வேண்டும். இவ்வாறு, தூய பொருளியல், கணிதம், புள்ளி இயல் ஆகிய மூன்றும் கலந்த நிலையில் தோன்றியுள்ளது தான் அளவியல் பொருளியல் (Econometrics) எனப்படும்.

இக்காலப் பொருளியல் மேலும் மேலும் கணிதத்தைச் சார்ந்து வருகிற நிலையில் கணக்கிடும் எந்திரங்களை (Computer) ப் பயன்படுத்துவதற்குள்ள வாய்ப்பும் மிகுந்து வருகிறது. பொருளி

யல் செயல்கள் மாபெரும் அளவில், தனியொரு தலைமையிடத்தி லிருந்து செயல்படுத்தப் பெற்று வருவதால், மாறிகளின் எண்ணிக் கை மிகுந்து, இட வேண்டிய கணக்குகளின் எண்ணிக்கையும் மிகவும் பெருகிவருகிறது. இங்கு, கணக்கிடும் எந்திரங்களே மனி தனுக்கு உதவத் தக்கவையாக உள்ளன.

இவ்வாறு, முதன் முதலில் சொற்களிலேயே கோட்பாடுகள் தரப்படுகின்றன. அடுத்து, அக்கோட்பாடுகளின் உள்ளுறவுகள் அல்லது அவை தொடர்பான அளவுக் கூறுகள்-கணிதச் சின்னங் களில் பகர்த்தப் படுகின்றன. பின்னர் இந்தச் சின்னங்கள் பற்றிய நடை முறை உண்மைகளை எந்திரத்துக்கு ஊட்டி, அதனிடமிருந்து வருமுன்னுரைகளும், நடைமுறைக் கொள்கைகளும் வருவிக்கப்படு கின்றன.

## தேக்கநிலை ஆய்வும் இயக்கநிலை ஆய்வும்

பழங்கால ஆசிரியர்கள் பொருளியல் செய்கைகளை ஆராயும் போது, 'மற்றவை மாருதிருப்பின்' என்ற அடிப்படை எடுகோளை விடாப்பிடியாகப் போற்றி வந்தனர். இதனால், உண்மைக்குப் பொருந்துகிற முடிவுகளைச் சில நேரங்களில் எட்ட முடியாமல் ஆக லாம் எனப் பிறர் ஐயுற்று வந்தனர். இந்த ஐயத்துக்கு இடமில்லாத வகையில் பொருளியல் முடிவுகளைச் சரிநுட்பமாக்க வேண்டுமெனில், 'மற்றவை' மாறினாலும் என்ன நிகழுமென்பதை ஆய்ந்தாக வேண் டும் என்ற கருத்து பத்தொன்பாவது நூற்றுண்டின் பிற்பகுதியில் வலிமையடைந்தது. இதன் விளைவாக, இந்நாளில் பொருளியல் ஆய்வானது தேக்கநிலை (Static) நோக்கிலும், இயக்கநிலை (Dyna- mic) நோக்கிலும் நடத்தப்பட்டு வருகிறது.

'தேக்கநிலை', 'இயக்கநிலை' என்ற இரு சொற்களும் பௌதிகத்தி லிருந்து பொருளியல் பெற்ற சொற்களாகும். ஒரு பொருள் இயங்கிக் கொண்டிருக்கும் போது, அது, இயக்க நிலையில் இருப்பதாகவும், அது இயங்காதிருக்கும் போது தேக்கநிலைப் பட்டிருப்பதாகவும் பௌதி கம் கூறும். ஆனல், பொருளியலில் இவ்விரு சொற்களும் சற்றே வேறு பட்டதொரு கருத்தில் ஆளப்படுகின்றன. இருநிலைகளையும் வேறு படுத்திக் காட்டும் கூறு 'மாறுதலே' யொழிய, 'இயக்கம்' அல்ல என்றே பொருளியல் ஆய்வில் கொள்ளப் படுகிறது. மாறுதல்களே ஏற்படாத ஒரு பொருளியல் அமைப்பைத் தேக்கநிலைப் பட்டது என்றும், மாறுதல்கள் ஏற்பட்டுக் கொண்டிருக்கும் ஒரு பொருளியல் அமைப்பை இயக்கநிலைப் பட்டது என்றும் சொல்லலாம்.

மாறுதல்களே ஏற்படாத அமைப்பு என்று சொல்லும் போது, அது ஓர் உயிரற்ற அமைப்பாக இருக்க நேரலாம். எனவே, தேக்க நிலை அமைப்பு எனச் சொல்லும் போது, மாறுதல்களே இல்லை எனக் கொள்வது பொருந்துமா என்ற ஐயம் எழுப்பப்படுகிறது. ஒரே சீரான மாறுதல்கள் ஏற்பட்டு, பொருளியல் அமைப்பு ஒரே நிலையில் கால அளவில், மார்க்கண்டேயனாக-இருப்பது தான் தேக்கநிலை எனச் சொல்வது பொருத்தமாயிருக்கும்.[1] ஸ்டைக்லர் சொல்வது போல, மக்களது சுவைநிலை, வள அமைதி, தொழில் நுட்பத்தரம் ஆகிய மூன்றும் மாறாதிருக்கிற ஓர் அமைப்பையே தேக்கநிலைப்பட்டுள்ளதாகச் சொல்லலாம்.[2] இம்மூன்று காரணிகளும் மாறிக் கொண்டிருந்தால், அதற்கு ஆளான பொருளியல் அமைப்பு ஒரே சீராக இருக்க முடியாது என்பது தெளிவு.

மாறுதல்கள் ஏற்படக் காலம் பிடிக்கும். எனவே, தேக்கநிலைக்கும் இயக்க நிலைக்கும் இடையேயுள்ள வேறுபாடு, இரண்டிலும் எடுகோளாகக் கொள்ளப் பட்டுள்ள காலக் கூறையே பொருத்துள்ளது என்றும் சொல்லலாம். தேக்கநிலை ஆய்வில் காலக் கூற்றைக் கருத்தில் கொள்ளவில்லை. ஆனால், இயக்கநிலை ஆய்விலோ கால அளவில் மாறிச் சொல்கிற கூறுகளை ஆராய்கிறோம். முதல்வகை ஆய்வில், குறிப்பிட்ட காலத்தில் என்ன நிகழ்கிறது என்பதையே ஆய்கிறோம்; இரண்டாவது வகை ஆய்விலோ காலப்போக்கில் என்ன நிகழ்கிறது என ஆய்கிறோம். இவ்வாறு 'நாள் குறித்தல்' (Dating)தான் இவ்விரு வகை ஆய்வுக்கும் இடையேயுள்ள அடிப்படை வேறுபாடு என ஆசிரியர்கள் குறிப்பிடுகின்றனர்.

தேக்கநிலை ஆய்வின் மிகப்பெருங்குறை, அது பெரும்பாலும் புனைந்துரையாய்ப் போவதற்குரிய வாய்ப்பு இருப்பது தான். உண்மைக்கு அப்பாற் பட்ட தேக்கநிலை எடுகோள்களின் அடிப்படையிலேயே இங்கு ஆய வேண்டி யுள்ளது. எனவே தான் இயக்கநிலை ஆய்வு இந்நாளில் அதிகச் செல்வாக்குப் பெற்றுள்ளது.

இயக்கநிலை ஆய்வின் சிறப்பை ஒரு சிறிய எடுத்துக் காட்டுடன் விளக்கலாம். குறிப்பிட்ட காலத்தில் ஒரு பொருளின்

[1] இந்திய நாட்டுத் திட்டங்களின் தொடக்க காலச் சாதனைகள் பற்றிய கட்டுரையொன்றில், அசோக மேத்தா (Asoka Mehta) அக்கால இந்தியா 'தேக்கநிலையில் முன்னேற்றம்' ('Progress in Stagnation') கண்டது எனக் குறிப்பிடுவார். திட்டத்தின் விளைவாக உற்பத்தி, வருமானம் முதலியவை பெருகிய போதிலும், அதேயளவுக்கு மக்கள் தொகையும் பெருகிய தால் நிகர முன்னேற்றம் எதுவும் ஏற்பட வழியில்லாதாயிற்று. இதனால் தேக்கநிலைதான் முன்னேறியது என்பார் அவர்.

[2] இதுபற்றி கிளார்க் (Clark) கொண்டுள்ள கருத்தை பகிர்வு இயலில் 'இலாபம்' என்ற அதிகாரத்தில் காண்க.

அளிப்பு அதன் நடப்பு அங்காடி விலையை மட்டுமல்ல, உற்பத்தியாளர்கள் எதிர்பார்க்கிற அதன் எதிர்கால விலையையும் பொருத்துள்ளது. நடப்பு விலை எவ்வளவு தான் கவர்ச்சிகரமாக இருந்தாலும், உற்பத்தியளார்கள் அளிப்பை மிகுக்கமாட்டார்கள். எதிர்கால விலை தான் அவர்களுக்கு முக்கியம். ஏனெனில் உற்பத்தியாகக் காலம் பிடிப்பதோடு, அதனை அங்காடிக்குக் கொண்டுவரவும் காலச் செலவாகும். மேலும், கச்சாப் பொருள்கள், உழைப்பாளர், எந்திரங்கள் போன்ற உற்பத்திக் கருவிகளின் அளிப்பையும் பொருத்ததே உற்பத்தி. இந்நிலையில் இந்தக் காரணிகளை 'மற்றவை மாறுதிருக்க' என்ற கூண்டினுள் அடைத்து வைத்துவிட்டு ஆராயப் புகுவது அவ்வளவு சரியன்று.

இலயனல் இராபின்ஸ் இயக்கநிலை ஆய்வையே மெய்யான ஆய்வு முறை என்பார். இவ்வகை ஆய்வின் சில சிறப்புக்களையும் அவர் குறிப்பிட்டுள்ளார். அருமைப் பாட்டின் தோற்றம் பல்வகைப் பட்டது; மாறிக் கொண்டிருப்பது. எனவே அதன் இயல்பை மிகக் கவனமாக விளக்க வேண்டும். ஒரு நிலையில் அரிதாயிருப்பது வேருெரு நிலையிலும் அரிதாயிருக்க வேண்டுமென்றில்லை. 'அருமைப் பாடு' என்பதே ஒரு தொடர்பு காட்டும் சொல்தான். இயக்கநிலை ஆய்வானது குறிப்பிட்ட நிலைக்குப் பொருளியல் கோட்பாடுகளின் ஆட்சி பொருத்தமானதாக இருக்குமா என்பதைத் தெளிந்தறியத் துணை நிற்பதால், இங்கே சிறந்ததாகிறது. மேலும், இயக்கநிலை ஆய்வானது எடுகோள்களின் உண்மையையும் உணர்த்தி விடுகிறது. உண்மைக்குப் பொருந்துகிற இயக்கநிலை பற்றி ஆயும் போது தான் உண்மைக்குப் பொருந்துகிற எடுகோள்களையும் தேர்ந்தெடுக்க முடியும். வழக்கமான எடுகோள்கள் பொருந்தாதவை என அறிய முடிந்தால் அவற்றை ஒதுக்கி விடலாம்; வேண்டிவருகிற புதிய எடுகோள்களைச் சேகரிக்கலாம்; சில நேரங்களில் புதிய கோட்பாடுகளுங்கூட உருவாக்கப்படலாம். இயக்கநிலை ஆய்வானது மாறுதல்களின் போக்கைப் புலப்படுத்துவதா யிருப்பதால் வரும் பொருளுரைப்பதற்கு வாய்ப்பு மிகுதி. இதனால், பொருளியலின் அறிவியல் கூறு வலிமையடைகிறது.

## நுண்ணியல் ஆய்வும் பேரியல் ஆய்வும்

இந்நாளைய ஆசிரியர்கள் பொருளியல் ஆய்வை இருவேறு கோணங்களிலிருந்து நடத்தி வருகின்றனர். தனியொரு செயல்படு அலகின் கோணத்திலிருந்து ஆய்வது ஒரு வகை. செயல்படுகிற அலகுகளின் ஆகமொத்தக் கோணத்திலிருந்து ஆய்வது அடுத்த

வகை. இவ்விரு வகைகளும், முறையே, நுண்ணியல் (Micro) ஆய்வு, பேரியல் (Macro) ஆய்வு எனப் பெறும்.

நுண்ணியல் ஆய்வில் தனியொரு மனிதன், குடும்பம் அல்லது நிறுவனத்தின் ஒழுகலாறு ஆய் பொருளாகிறது. தனிமனிதன் எவ்வாறு மிகவுயர்ந்த அளவு நிறைவு பெறுகிறன், தனியொரு நிறுவனம் எவ்வாறு மிகவுயர்ந்த இலாபம் பெறுகிறது, தனியொரு பொருளின் விலை எவ்வாறு நிருணயமாகிறது, தனியொரு உழைப்பாளியின் கூலி எவ்வாறு முடிவாகிறது என்றெல்லாம் நுண்ணியல் பொருளாதாரத்தில் ஆயப்பெறுகிறது.[1]

பேரியல் ஆய்வில் பொருளியல் ஏற்பாடு முழுதுமே ஓர் அலகாக எடுத்துக் கொள்ளப் படுகிறது. நாட்டுப் பொருளாதாரத்தின் ஆக மொத்தநிலை, மொத்த உற்பத்தி, மொத்தச் சேமிப்பு, மொத்த முதலீடு, மொத்த வருமானம், விலைமட்டம் போன்றவைகளே இங்கு ஆய்பொருளாகின்றன. மிகப் பழங்காலத்தில் இயற்கை மரபினரின் சில கருத்துக்களில் இவ்வகை ஆய்வின் கூறுகள் இருந்த போதிலும், அண்மைக் காலத்தில் கெயின்ஸ் பிரபு (Lord Keynes) வின் கோட்பாடுகளே பேரியல் ஆய்வைப் பெருவழக்காக்கி யுள்ளன.[2]

ஆடம் ஸ்மித்தும், அவரைப் பின்பற்றியவர்களும் தம்முடைய கருத்துக்களை நுண்ணியல் கண்ணோட்டத்திலேயே விளக்கி வந்தனர். தன்னல நாட்டச் சூழலில் செயலாற்றும் ஒரு 'பொருள்வய' மனிதன்தான் அவர்களுடைய கதாநாயகன். தனிமனிதன் தன்னுடைய சொந்த நலம் கருதிச் செயல்படும் போது, தன்னை அறியாமலே சமூக நலத்துக்கும் வழிகோலி விடுகிறன் என்பது அவர்களுடைய கருத்து. எனவே, பேரியல் நோக்கில் அவர்கள் சிந்திக்காமல் இருந்ததில் விந்தையில்லை.

மேலும், விலை ஏற்பாடானது பொருளாதாரம் முழுவதையும் ஒழுங்குபடுத்தத் தக்கது என்றும் அவர்கள் கருதினர். தனியொரு பொருள் அங்காடி பற்றியே அவர்கள் ஆய்ந்தனர். அங்காடியில், குறிப்பிட்ட விலைகளின் குறிப்பிட்ட அளவு வாங்குவோர்க்குத் தேவை. கிடைக்கிற விலையில் எவ்வளவு விற்க முடியும் என்பதை விற்போர் முடிவு செய்கின்றனர். பொருளின் தேவையும்

[1] ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளும் அலகு மிகச்சிறியதாக-நுண்ணியதாக-இருப்பதால் தான் 'நுண்ணியல்' என்று பெயர்.

[2] ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளும் அலகு பெரிய அளவில் இருப்பதால் தான் பேரியல் என்ற பெயர்.

அளிப்பும் சமமாக இருந்தால், அங்குச் சம நிலை இயல்பாகவே தோன்றுகிறது. வாங்குவோர் - விற்போர் இருவருடைய தன்னலமும் நிறைவேறி விடுகிறது. குறிப்பிட்ட அளவு பொருளுக்கு நுகர்வோர் தரச் சித்தமாக இருக்கும் விலை உயர்வாக இருந்து, தொடர்புள்ள விற்போர் இயல்பு கடந்த இலாபம் பெறுவதாக இருந்தால், தன்னல நாட்டச் சூழலில், போட்டி ஏற்பட்டுப் புதிய புதிய விற்பனையாளர் அத்தொழிலில் புக வழியேற்படுகிறது. வாங்குவோர் விற்போர் தன்னலப் பேணல், இவ்வாறு உற்பத்திக் காரணி உரிமையாளர்களின் தன்னலத்தையும் தாக்குகிறது: அவர்கள் இயல்பு கடந்த இலாப வாய்ப்பைப் பயன் படுத்திக் கொள்ளும் வகையில் குறிப்பிட்ட தொழிலைச் சார்கின்றனர். இதனால், இறுதியில், உற்பத்தி பெருகுவதால், மிகுதியான அளிப்பை நுகர்வோர் வாங்க வைப்பதற்காக விற்போர் விலையைக் குறைத்தாக வேண்டும். இப்போது சமநிலை மீள்கிறது. இவ்வாறு, விலை, தேவை, அளிப்பு ஆகியவற்றில் ஏற்படும் மாறுதல்களால் சம நிலை ஒன்று அங்காடியிலும் ஆகமொத்தப் பொருளாதாரத்திலும் இயல்பாகவே ஏற்பட்டு விடுகிறது.[1]

எனவே, நுண்ணியல் பொருளியலில் தனியொரு வாங்குவோன், தனியொரு விற்போன், தனியொரு காரணி உரிமையாளன் ஆகியோருடைய செயல்களைக் கற்கிற போதிலும், ஒவ்வொருவர் செயல் நோக்கமும் தன்னலம் பேணுவதாக இருப்பதாலும், அவர்களுடைய செயல்களையெல்லாம் விலை ஏற்பாடானது அங்காடியில் ஒருங்கிணைத்து விடுவதாலும் மொத்த உற்பத்தி, மொத்த முதலீடு முதலியவற்றைப் பற்றிச் சிந்திக்க வேண்டிய அவசியமில்லாது போயிற்று.

தொன்மைப் பொருளியலாளர்களின் முதன்மையான எடுகோள்களில் ஒன்று பொருளாதாரத்தில் வேலை நிறைவு நிலவுகிறது என்பதாகும். வேலை நிறைவும், மொத்த உற்பத்தி குறிப்பிட்ட அளவினதாகவும் இருக்கும் போது ஆகமொத்தப் பொருளாதாரத்தில் அடிப்படையான மாறுதல்கள் ஏற்பட வழியில்லை அல்லவா? இதனாலும் தொன்மை மரபினர் பேரியல்-ஆய்வுக்குச் சிறப்புத் தராதிருந்தனர்.

மேலும், அவர்களுடைய ஆய்வு முறையும் இந்தப் போக்குக்கு இசைவானதாகவே இருந்தது, 'மற்றவை மாறாதிருப்பின்' என்பது அவர்களுடைய முதன்மையான எடுகோள்களில் ஒன்று. இந்த

[1] 'நுகர்வோர் இறைமை' பார்க்க.

எடுகோள்களின் அடிப்படையில் மாறிகளின் பின்னல் விளைவுகளைக் கருதாமலேயே தம்முடைய கருத்துக்களை விளக்க அவர்களால் முடிந்தது. இந்தப் பின்னல் விளைவுகளே பேரியல் பொருளியலின் அடிப்படை.

ஆனால், இந்நாளில் பேரியல் ஆய்வு முறையே செல்வாக்குடன் திகழ்ந்து வருகிறது. இதற்குக் காரணங்கள் இல்லாமலில்லை. முதலாவதாக, அரசின் பொருளியல் கொள்கைகளை நிறுவவும் செயல் படுத்தவும் பேரியல் ஆய்வு இன்றியமையாததாகும். போல்டிங் (K. E. Boulding) கூறியது போல, அரசானது பெருங் கூட்டத்தினிடையே செயாலற்ற வேண்டும். பொதுவான விலைமட்டம், நாட்டு உற்பத்தி, நாட்டு வருமானம், நாட்டுச் சேமிப்பு போன்றவைகளே அரசைக் கவர்கின்றன. இவை பற்றி அறிய பேரியல் ஆய்வே துணை செய்யும். மேலும், ஆகமொத்தமாக ஆய்ந்தால் தான் பொருளியல் அமைப்பானது எவ்வாறு செயல்படுகிறது என்பதை அறிய முடியும். பேரியல் ஆய்வு, நுண்ணியல் ஆய்வுக்குத் துணைசெய்வது என்பதையும் இங்குக் கவனிக்க வேண்டும். பல நிறுவனங்கள் எவ்வாறு செயல் படுகின்றன என்பதை நன்கறிந்த பின்னரே, குறிப்பிட்டவொரு நிறுவனத்தின் செய்கை பற்றி உண்மையான முடிவுக்கு வர முடியும். இறுதியாகத் தனிப்பட்ட அலகுகளின் செயல் போக்கிலிருந்து ஆக மொத்த அலகுகளின் போக்கைத் தெரிந்து கொள்ள முடியாது என்பதையுங் கவனிக்க வேண்டும். போல்டிங் பொருத்தமானதோர் உவமை வழியாக இதனை விளக்குவார்.[1] மரங்கள் பல சேர்ந்தது தான் ஒரு காடு. அதனால் தனியொரு மரத்தின் போக்கும், காட்டின் போக்கும் ஒப்பானபடி இருக்க வேண்டும் என்றில்லை. தனியொரு மரம் முளைத்து வளர்ந்து சரிந்து விழுந்து விடலாம்; ஆனால், காடோ அன்றிருந்தமேனிக்குத் தொடர்ந்து இருக்க முடியும். வீழ்ந்த மரங்களின் இடத்தைப் புதிய மரங்கள் நிரப்பும் போது, காட்டின் அமைப்பும் உருவும் மாறாது நிலவும். மேலும், தனியொரு மரம் எளிதில் தீப்பற்றிக் கொள்வதில்லை; காடோ அடிக்கடி தீப்பற்றிக் கொள்ளத் தக்கது. தனியொரு மரம் சுற்றுப் புறத்தின் தட்ப வெப்ப நிலையைத் தாங்கத் தக்கதாயில்லை; காடோ அத்தகையதன்று. இவ்வாறு தனிமனிதன் வேறு. மக்கள்கூட்டம் வேறு. தனிமனிதனுக்குப் பொருந்துவது மக்கள் கூட்டத்துக்குப் பொருந்துவதில்லை. தனிமனிதன் செலவைச் சுருக்கினால், அந்தச் சிக்கனத்தைப் பாராட்டலாம். ஆனால், எல்லோரும் ஒரு சேரச் செலவைச் சுருக்கினால்,

[1] 'A Reconstruction of Economics' by K. E. Boulding.

பொருள்களின் தேவை குன்றி வேலையின்மை ஏற்படுவது தவிர்க்க இயலாத தாகிவிடும்.[2]

பேரியல் ஆய்வில் குறைகளே இல்லை என்று சொல்ல முடியாது. மொத்தத்தின் விளைவுகளை ஆராயும் போது, அம்மொத்தத்தின் இயல்பினை நன்கு கவனிக்க வேண்டும். ஒன்றுடனொன்று தொடர் பில்லாத வற்றின் மொத்தத்தை ஆயப்புகுவது கேலிக் கூத்தாகும். இங்கும், போல்டிங் ஓர் எடுத்துக்காட்டைத் தந்துள்ளார். 6 ஆப்பிள் + 7 ஆப்பிள் = 13 ஆப்பிள் என்று மொத்தத் தொகை ஆக்கினால் அதில் பொருளுண்டு. 6 ஆப்பிள் + 7 ஆரஞ்சு = 13 பழங்கள் என்று மொத்தத் தொகை ஆக்கினாலும் நேரான பொருளுண்டு. ஆனால், 6 ஆப்பிள் + 7 பலநிலை மாளிகைகள் எனக் கூட்டி எழுது வதில் பொருளே யில்லை. எனவே, ஒப்பான இயல்புள்ள பொருள் களுடைய மொத்தத்தினைத் தான் ஆய்கிறோமா என்று கவனிக்க வேண்டும். மேலும், சிலவகைப் பேரியல் ஆய்வில் சுவையில்லாது போகலாம். பொதுவான விலைமட்டம் பற்றிய ஆய்வு இதற்கோர் எடுத்துக்காட்டு. இறுதியாக, ஆகமொத்தமல்ல, அந்த மொத்த மானது அமைந்துள்ள முறைதான் மிகவும் முக்கியமானது. இங்கு, மொத்தத்தைக் கூறுபோட்டு ஆயவேண்டிய கட்டாயம் ஏற்படு கிறது.

நுண்ணியல் ஆய்வும் பேரியல் ஆய்வும், உண்மையில், ஒன்றுக் கொன்று எதிரானவை யல்ல. அடிப்படையில் இரண்டும் ஒன்றை யொன்று நிரப்புவனவே. ஒரு நிறுவனத்தின் விற்பனை அதன் விலையை மட்டும் சார்ந்திருக்க வில்லை; சமுதாயத்தின் ஆகமொத்த வாங்கும் ஆற்றலையும் பொருத்துள்ளது. நிறுவனம் எவ்வளவு தான் விலையைக் குறைத்தாலும் நுகர்வோரிடம் வாங்கும் ஆற்றல் இல்லை யேல் விற்பனையானது உயர வழியில்லை. இங்கு நுண்ணியல் பொருளி யலும் பேரியல் பொருளியலும் ஒன்றையொன்று சார்ந்துள்ளது தெளி வாகிறது. நாட்டு வருமானம், நாட்டு உற்பத்தி ஆகியவற்றை அறிய வேண்டு மெனில் பேரியல் பொருளியல் வேண்டும். கோடிக் கணக்கான நிறுவனங்களும் தனிமனிதர்களும் மேற்கொள்ளும் தொழில் முடிவுகளின் விளைவே நாட்டு வருமானமும் நாட்டு உற்பத்தி யும் ஆகும். இவற்றை அறிய வேண்டுமெனில் நுண்ணியல் பொரு ளியல் வேண்டும். இவ்வாறு, இருவகை ஆய்வுகளுமே வேண்டு மெனக் கொள்வதுதான் சரி.

[2] இந்நிலைக்கான எடுத்துக் காட்டுக்கள் பலவற்றை ஸாமுவல்ஸன் தமது நூலில் தந்துள்ளார் ('Economics' by P. A. Samuelson.)

**சமநிலை ஆய்வு**

பேராசிரியர் ஸ்டைக்லர் (Stigler) பொருளியலே சமநிலை ஆய்வு தான் என்பார். ஒன்றுக்கொன்று எதிரான இரு ஆற்றல்கள் ஒரு பொருளில் சமநிலை அடையும் போது, அப்பொருள் சமநிலையில் இருப்பதாகச் சொல்லப்படும். சுவரில் அறையப்பட்ட ஆணியொன்றில், கயிற்றில் கட்டப்பட்ட கல்லொன்றைத் தொங்க விட்டால், அது இங்கும் அங்கும் அசைந்து இறுதியில் மையத்தில் நிற்கும். அந்த மையப் புள்ளி சமநிலைப் புள்ளி. அந்தப்புள்ளியில் எதிரெதிர் ஆற்றல்கள் சரிசமமாக இருந்து, கயிறு தொடர்ந்து அசையாதபடி ஆக்குகின்றன. இவ்வாறு அசையா நிலையைச் சமநிலையாகக் கொள்வது பொருளாதாரத்தில் பொருந்தாது. ஏனெனில், அத்தகைய அசையா நிலை, அல்லது மாருத நிலையில், பொருளாதாரம் செத்த நிலையிலேயே இருக்கும். பொருள்கள் உற்பத்தியாகிக் கொண்டிருக்கின்றன. இதுவே ஓர் அசைவு தான்; மாறுதல் தான். எனவே, பொருளாதாரத்தில் சமநிலை என்று சொல்லும் போது, உற்பத்தியும் நுகர்வும் நிலைத்த வீதத்தில் மாறிக் கொண்டிருப்பதாகக் கொள்வதே சரி. இவ்வாறு, மாறுதல்களின் வீதம் மாருமலிருப்பதே பொருளியலில் சமநிலை என்று சொல்லப்படுகிறது.

பொருளியலில் சமநிலை பலவகைப்படும். 'நிலையான சமநிலை' 'நடுநிலையான சமநிலை' 'நிலையற்ற சமநிலை' (Stable, Neutral and Unstable Equilibria) என்ற முத்திறப் பாகுபாடு ஒன்றைப் பேராசிரியர் பிகு இயற்றி யுள்ளார். சிறிய அளவில் மாறுதல்கள் ஏற்பட்டால், பழைய நிலைக்கு மீண்டு விடுகிற நிலைதான் நிலையான சமநிலை. நங்கூரமிட்டுள்ள கப்பல் இந்நிலைக்கு எடுத்துக் காட்டு. சிறிய அளவில் மாறுதல் ஏற்பட்டால், அந்த அளவுக்கு (ஆனல், மேலும் தொடர்ந்து மாருத அளவுக்கு) மாறி விடுகிற நிலை, நடுநிலையான சமநிலை. பக்கவாட்டில் வைக்கப் பட்டுள்ள முட்டை இந்நிலைக்கு எடுத்துக் காட்டு. சிறிய அளவு மாறுதல்கள் தொடர்ந்த மாறுதல்களைக் கொணர்ந்து பழைய நிலையை விட்டு விலகிச் சென்று விடும் போது தான் நிலையற்ற சமநிலை தோன்றுகிறது. செங்குத்தாக நிறுத்தப்படும் முட்டை இதற்கோர் எடுத்துக் காட்டு.

சமநிலை ஏற்படுவதற்கு வேண்டிய காலத்தின் அடிப்படையில் குறுங்காலச் சமநிலை, நெடுங்காலச் சமநிலை என்ற இருவகைப் பாகுபாட்டை மார்ஷல் இயற்றியுள்ளார். மார்ஷலின் மதிப்புக் கோட்பாடு இந்த முறையில் விளக்கப்படுகிறது.

'குறிப்பிட்ட சமநிலை', 'பொதுச் சமநிலை' (Particular and General equlibria) என்று வேறொரு பாகுபாடும் உண்டு. ஒரேயொரு மாறியுடன் (Variable) தொடர்பான சமநிலை குறிப்பிட்ட சமநிலை. பல்வேறு மாறிகள், அல்லது பொருளாதாரம் முழுமையும், சமநிலை எய்துவதே 'பொதுச் சமநிலை' ஆகும். தனியொரு விலை, தனியொரு நுகர்வோன், தனியொரு நிறுவனம் அல்லது தனியொரு தொழில் எய்தும் சமநிலையே குறிப்பிட்ட சமநிலை. தனியொரு விலையானது குறிப்பிடத்தக்க மாறுதல்கள் எதுவுமின்றிக் கிட்டத்தட்ட நிலைத்து நிற்பது விலைச் சமநிலை. குறிப்பிட்ட செலவீட்டின் வழியாக மிகவுயர்ந்த அளவு நிறைவு பெறும் போது நுகர்வோன் சமநிலை அடைகிறான். இலாபத்தை மேலும் பெருக்கவோ சுருக்கவோ ஆர்வமில்லாத நிலையில் செயல்படும் போது நிறுவனம் சமநிலை எய்துகிறது. இது போன்று, இறுதிநிலை நிறுவனம் தனக்கு இயல்பான இலாபத்தைப் பெறும் போது தொழில் சமநிலை ஏற்படுகிறது. அந்நிலையில் தொழிலானது மேலும் விரியவோ சுருங்கவோ முயலாதிருக்கும்.

பொதுச் சமநிலை, பொருளாதாரம் முழுவதையும் ஓர் அலகாக எடுத்துக் கொள்கிறது. பொருளாதாரத்தில் ஒன்றுக்கொன்று தொடர்புள்ள பல ஆற்றல்கள் செயல் படுகின்றன. ஓர் உட்குழிந்த தட்டில் இடப்பட்ட மூன்று கோலிக் குண்டுகளைப் போல ஒன்றன் இருப்பு அடுத்ததைச் சார்ந்துள்ளது. பேராசிரியர் மேயர்ஸ் (A. L. Meyers) இத்தகைய பொதுச் சமநிலை (ஒரு தேக்க நிலைச் சூழலில்) கீழ்வரும் நிலைகளில் அமையும் என்பார். விலைகள் எல்லாம் நெடுங்காலச் சமநிலை விலைகளாக இருக்கவேண்டும்; ஒவ்வொருவனும் தனக்கு மிகவுயர்ந்த அளவு நிறைவு தரும் வகையில் தன்னுடைய வருமானத்தைச் செலவிட வேண்டும்; ஒவ்வொரு நிறுவனமும் தொழிலிலும், விலைகளிலும், உற்பத்தியிலும் சமநிலை அடைந்திருக்க வேண்டும்; உற்பத்திக் காரணிகள் தேவையும் அளிப்பும் சமநிலை விலையில் சமமாக இருக்க வேண்டும். சுருக்கமாகச் சொல்வதானால், 'மாறுவதற்கான பொருளாதார ஊக்கி எதுவுமில்லாத நிலையே பொதுச் சமநிலை'.

இறுதியாக, மேலே கண்ட சமநிலை தேக்கநிலைச் சமநிலை ஆகும். இதற்கு மாறாகப் பொருளியல் மாறிகள் குறிப்பிட்ட வீதத்தில் மாறிக் கொண்டிருந்தால் அதனை இயக்கநிலைச் சமநிலை என்று சொல்லலாம். நடைமுறையில் இவ்வாறு நிகழ்வதில்லை; ஆதலால் இயக்கநிலைச்சமநிலைக்கோட்பாடு அவ்வளவு சிறப்பானதன்று என்று சொல்லப்படும்.

சமநிலை பற்றி ஆயும் போது இரண்டு உண்மைகளை மறந்து விடலாகாது. சமநிலை, செல்வச் செழிப்பின் அறிகுறி என்று கொள்ளல் தவறு. தொடர்புள்ள சூழ்நிலைகளுக்குத் தக்கவாறு பொருளாதாரச் சூழ்நிலை ஏற்படுகிறது. வளர்ச்சி குன்றிய நாடுகளில் வறுமைச் சூழலிலேயே சமநிலை ஏற்பட்டு விடலாம்; செல்வந்த நாடுகளில் சமநிலையின்மையும் நிலவலாம். போல்டிங் கூறுவது போல, பத்தொன்பதாவது நூற்றுண்டைய சீனு சமநிலையிலேயே இருந்தது. ஆனால், அந்நாளில் அமெரிக்கப் பொருளாதாரம் சமநிலையில் இல்லை. இருந்தாலும் அமெரிக்காதான் செல்வம் மிக்கதாகவும் முன்னேற்றப் போக்கினதாகவும் இருந்தது.

இது போன்றே சமநிலை நீதியானது, நியாயமானது எனக் கொள்வதும் தவறு. தஞ்சையில் பண்ணையாள் கூலி மிகக் குறைவு: காரணம் அவர்களுடைய எண்ணிக்கை மிகுதி. தேவை-அளிப்புச் சமநிலையில் நிறுவப் பெற்ற சமநிலை வீதம் தான் அது. இதனைக் காரணமாகக் காட்டி அதனை நியாயமானது எனக் கொள்வது தவறு. இராபின்ஸ் கூறுவது போல 'சமநிலை' வெறும் சமநிலைதான்.

சமநிலை ஆய்வின் முதன்மையான சிறப்பு இது தான்: சமநிலைப் போக்கை அறிந்திருந்தால், பொருளியல் செய்கைகளின் வருங்காலத்தை முன்னுரைக்க முடியும். சமநிலை விலை தெரிந்திருந்தால், நடப்பு விலை எவ்வாறு சமநிலை மட்டத்தை அடையும் என்பதை முன்னுரைக்கலாம் அல்லவா?

## மேலும் படிக்கத்தக்க நூற்கள்

சி. வேலாயுதம் - 'பொருளாதாரம் - I'
கேர்ன்கிராஸ் - 'பொருளாதாரம் - ஓர் அறிமுகம்'
J. N. Keynes - 'The Scope and Method of Political Economy'
Lionel Robbins - 'An Essay on the Nature and Significance of Economic Science'
Alfred Marshall - 'Principles of Economics'
F. Zuethen - 'Economic Theory and Method'

பகுதி II

# நுகர்வு

'அவியல் பொரியல் துவையல் தீயல்
பச்சடி தொவரன் கிச்சடி சட்டினி
சாம்பார் கூட்டுத் தயிர்ப்புளி சேரி
சேனை ஏத்தன் சேர்த்தெரி சேரி
பருப்பு பப்படம் பாயசம் பிரதமன்
பழமிவை யோடு படைப்புப் போட...'

(கவிமணி)

# 1. நுகர்வும் விருப்பங்களும்

ஆடம் ஸ்மித்தை முதல்வராகக் கொண்ட தொன்மை மரபினர் நுகர்வுக்குப் போதிய சிறப்புத் தந்ததாகச் சொல்ல முடியாது. தொழிற் புரட்சியை யொட்டி, அந்நாளில், காட்டுவெள்ளமெனப் பெருகிக் கொண்டிருந்த உற்பத்தியும் அதையொட்டிய சிக்கல் களுமே ஆய்வாளர்களைப் பெரிதுங் கவர்ந்தன. ஆனல், வளர்ந்து செல்லும் உற்பத்தியின் இறுதி நோக்கம் பற்றி, நாளடைவில், அறி ஞர்கள் சிந்திக்கத் தொடங்கினர். உற்பத்திப் பெருக்கம் மக்கள் நலத்துக்கு வகை செய்ய வேண்டாமா என்ற கேள்வி எழுந்தது. இதன் எதிரொலியாக, மக்கள் நலம் பற்றியும் அதன் ஒரு பெருங் கூறுகிய மக்கள் நுகர்வுநிலை பற்றியும் கருத்துக்கள் வெளிப் போந் தன. இந்தக் கருத்துக்களை நுட்பமாகச் சொல்ல இயலும் வகை யில், ஆய்வு முறைகளிலும்-குறிப்பாகக் கணித இயலில்-பல புதுமை கள் தோன்றின. இதனல் 19-வது நூற்றுண்டின் பிற்பகுதியில் நுகர்வு பற்றிய கோட்பாடுகள் பல திட்பநுட்பத்துடன் வெளி வர லாயின.[1]

'நுகர்வு' என்ருல் என்ன? 'நுகர்வு' என்ற சொல்லை 'உற்பத்தி' என்ற மற்ருெரு சொல்லின் எதிர் மறையாகக் கொண்டு, பொருள் களை 'ஆக்குவது' உற்பத்தி என்ருல், அவற்றை 'அழிப்பது' தான் நுகர்வு எனக் கொள்வோருண்டு. ('நுகர்வு' என்பதற்கு ஈடான 'கன்ஸம்ப்ஷன்' - Consumption – என்ற ஆங்கிலச் சொல்லுக்கு 'அழித்தல்' என்ற பொருளும் உண்டு.) ஆனல், நுகர்வு, பொருள்

[1] தற்காலப் பொருளியல் நூல்களில் நுகர்வுக்கு உரிய இடம் விரிவானதாக இல்லை. இதற்குக் காரணங்கள் இரண்டு எனலாம். பேரியல் ஆய்வு பெருவழக்காகியுள்ள இந்நாளில், பெரிதும் தனிமனிதன் செய்கையை நுணுக்கமாக ஆயும் நுகர்வுக்கு உரிய இடம்சுருங்கிக்கொண்டே வருகிறது. மேலும், 'பொருளியல் வளர்ச்சிக் கோட்பாடு கள்' பற்றி ஆர்வத்துடன் சிந்திக்கும் இக்கால அறிஞர்கள், அவற்றின் தொடர்பாக உற்பத்திக்குத்தான் முதன்மை நல்க முற்படுகிருர்கள்.

அழிவை ஒரு போதும் குறித்து நிற்பதில்லை. இந்த நிலவுலகில் மனிதனால் எதனையும் ஆக்கவோ அழிக்கவோ முடியாது. எனவே, ஒரு பொருளை ஒருவன் நுகர்வதாகச் சொல்லும் போது, அச்செயலால் அவன் பெறும் மனநிறைவுதான் குறிப்பு முக்கியத்துவமுள்ளது. ஒரு வீட்டை, ஒருவன் நுகர்கிறான் என்று சொல்லும் போது, அதனை இடித்துத் தகர்க்கிறான் என்றல்ல, அதில் குடியிருந்து மகிழ்கிறான் - மனநிறைவு பெறுகிறான் - என்பது தான் பொருள்.[1] எனவே, 'மனிதனுடைய விருப்பங்களை நிறைவேற்றுவதற்காகப் பொருள்களை நேரடியாகப்[2] பயன்படுத்துவது' தான் நுகர்வு எனப்படும். கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறியும் ஐம்புலன்களில் எது நிறைவு பெற்றாலும், அப்போது நுகர்வு நிகழ்கிறது.

பொருளியல் செயல்வகைகளின் தொடக்கமும் முடிவும் நுகர்வே. நுகரவேண்டும் என்ற வேட்கையே தொழில் முயற்சிகளுக்கு அடிப்படை. நுகர்வதற்காகத் தான் செல்வம் உற்பத்தி செய்யப்பெறுகிறது. இவ்வாறு பொருளியல் முயற்சியின் இறுதிக் குறிக்கோளும் நுகர்வு தான். இது பற்றியே ஜெவான்ஸ், பேட்டன் (Patten) போன்ற ஆசிரியர்கள் பொருளியல் ஆய்வில் நுகர்வுக் கோட்பாடுகள் முதலிடம் பெறுகின்றன என்று கருதுகின்றனர்.

கெயின்ஸ் பிரபுவின் புதுமைப் பொருளியலிலும் நுகர்வு சிறப்பானதோர் இடம் பெற்றுள்ளது. வேலையின்மைக்கு மிக முக்கியமான காரணமாயிருப்பது நுகர்வுநிலை என்பது அன்னார் கருத்து. ஒரு நாட்டின் வேலைநிலை அங்கு உற்பத்தியாகும் பொருள்களின் ஆயத்தநிலைத் தேவையைச் சார்ந்துள்ளது. தேவையில்லாத பொருள்களை உற்பத்தி செய்ய யாரே முன் வருவர்! அந்நிலையில் பலர்க்கு வேலையுமில்லை. பொருள்களின் ஆயத்தநிலைத் தேவை அவற்றை வாங்குவதில் மக்களிடுஞ் செலவைப் பொருத்துள்ளது.

[1] நுகர்வை அழித்தல் பொருளில் ஆள்பவர்களில் சிலர், 'பொருள் அழிவு' என்று சொல்லும் போது, பொருளின் உருவத்தன்மை அழிவதையல்ல, அதன் பயன் அழிவையே குறிப்பிடுவதாகச் சொல்வார்கள். ஒரு பொருளை நுகரும் போது அதன் பயன் அறவே அழிந்து விட்டதாகச் சொல்ல முடியாது என்பதை இங்குக் கவனிக்க வேண்டும். சுருட்டைப் புகைத்து விட்டால், அது பின்னர் சுருட்டு என்ற முறையில் பயன்படாவிட்டாலும், சாம்பல் என்ற முறையில் தொடர்ந்து பயன் தரலாம். செட்டி நாட்டுச் சீமையில் இடிந்த வீடுகளின் காரையும் செங்கல்லும் மிகுந்த பயனுள்ளவையாகத் திகழ்வது இங்குச் சிந்திக்கத் தக்கது.

[2] பொருள்களை உற்பத்திக்கும் பயன்படுத்த முடியும். அவ்வாறு பயன்படுத்தப் பெறும் பொருள்கள், நுகர் பொருள் உற்பத்தியைப் பெருக்கி இறுதியில் ஏராளமாக நுகர வகை செய்யலாம். இங்கு, குறிப்பிட்ட பொருள்கள் மனநிறைவு பெறும் நோக்கில் நேரடியாகப் பயன்படுத்தப் பெறவில்லை. எனவே பொருள்களை 'நேரடியாகப் பயன்படுத்துவது தான் 'நுகர்வு' என்பது தெளிவாகிறது.

இச்செலவு, வருமானத்தையும், அதன் பகுதியை நுகர்வில் செல விடுவதில் இருக்கும் நாட்டத்தையும் பொருத்துள்ளது. இவ்வாறு, நுகர்வு, நாட்டின் வேலைநிலையைக் கட்டுப்படுத்துகிறது என்பார் கெயின்ஸ்.

## விருப்பங்கள்

'மனிதனுடைய விருப்பங்களை நிறைவேற்றுவதற்காகப் பொருள் களை நேரடியாகப் பயன்படுத்துவது நுகர்வு' என்று சொல்லும் போது, முதலில் விருப்பங்களின் இயல்புகளைக் கற்றறிய வேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

'வேட்கை', 'விருப்பம்', 'தேவை' - இவை மூன்றும் வெவ்வேறு கருத்துக்களில் ஆளப் பெறுகின்றன என்பதை இங்குப் புரிந்து கொள்ள வேண்டும். ஒரு பொருளின் மீதுள்ள ஆசையை 'வேட் கை' (Desire) குறித்து நிற்கிறது. அந்த ஆசையை நிறைவேற்று வதற்கான வழிவகையும், அதனைச் செலவிடுவதற்கான சித்தமும் இருந்தால், அந்நிலையில் அப்பொருளின் மீது 'விருப்பம்' (Wants) ஏற்படுகிறது. அந்த விருப்பம் உண்மையிலேயே நிறைவு செய்யப் படும் போது 'தேவை' (Demand) தோன்றுகிறது. கண்ணாடிப் பெட்டிக்குள்ளிருக்கும் மிட்டாயைக் காணும் போது சிறுகுழந்தை யின் வாயில் நீர் சுரக்கிறது. அது வெறும் 'வேட்கை'யே. மிட்டாய் வாங்குவதற்காகத் தாயிடம் 50 காசு பெற்றுவிட்ட பின்னர், அக் குழந்தை மிட்டாயை 'விரும்பு' வதாகிறது. ஆனால், 20 காசு மிட்டாயுடன் குழந்தை நுகர்வை நிறுத்திவிட்டால், அதன் 'தேவை' யெல்லாம் 20 காசுக்கு மட்டுமே என்றாகிறது.

### விருப்பங்களின் சிறப்பியல்புகள்.

மனிதனுக்கு மனிதன் விருப்பங்களின் இயல்பு வேறுபட்டிருந் தாலும், பொதுவாக விருப்பங்களுக்குச் சில சிறப்பியல்புகள் உள்ளன :

**1. விருப்பங்கள் அளவிறந்தன:** ஒரே நேரத்தில் மனிதனுக்குப் பல விருப்பங்கள் இருப்பதுடன், இவற்றின் எண்ணிக்கை, வகை ஆகி யனவும் கணத்துக்குக் கணம் வளர்ந்து கொண்டிருக்கின்றன. ஆதி மனிதன் விருப்பம் உணவிலிருந்து தொடங்கியது. விரைவில் தட்ப வெப்பத்திலிருந்து தற்காக்கக் குடியிருப்பு, மானத்தைக் காக்க ஆடையணிகள் என்றவாறு அது வளர்ந்து விட்டது. இன்றோ,

உணவு, உடை, உறையுள் ஆகிய அடிப்படை விருப்பங்களில் தாம் எத்தனை எத்தனை வகைகள்! உண்மையில், மக்களை மாக்களிடமிருந்து பிரித்தறிய உதவி செய்கிற ஒரு தனி வேறுபாடு இந்த விருப்பங்களின் எண்ணிக்கையும் வகையும் தாம்.

விருப்பங்களின் எண்ணிக்கை பெருகப் பெருக, அந்த அளவுக்கு உழைப்பும் உற்பத்தியும் பல்கிப் பெருகும். பதினெட்டாம் நூற்றாண்டில் மக்களுடைய விருப்பங்கள் சிலவாகவே இருந்தமையால், அவற்றை நிறைவேற்ற வாரத்தில் மூன்று நாள் உழைத்தால் போதும் என்ற நிலை இருந்ததாம்! இன்றும் மலேசியா, இலங்கை போன்ற நாடுகளில் மக்கள் உழைப்பு, பொதுவாகக் குறைவாக இருப்பதற்குக் காரணம் அந்நாட்டவரின் விருப்பங்கள் மிகச் சிலவாக இருப்பது தான் என்று சொல்லப்படும். மேலும், விருப்பங்களின் வகை பெருகும் போது, பொருள்களின் வகையும் பெருகுவது இயல்பு. இது 'பொருள் வேறுபாடு'[1] களுக்குக் காரணமாகிறது. சிகரெட்டுகளிலும், சோப்புகளிலும், பவுடர்களிலும் ஏராளமான வகைகள் நிலவுவதற்குக் காரணம் விருப்பங்களின் வகை வேறுபாடு தானே?

**2. விருப்பங்கள் ஒவ்வொன்றும் நிறைவெய்தக் கூடியன:** விருப்பங்கள் எண்ணற்றவையாயினும், ஒவ்வொரு விருப்பமும் அவ்வப்போது நிறைவெய்த முடியும். பசித்திருப்பவன் உண்ணும்போது, அவனது அவ்விருப்பம் நிறைவெய்துகிறது. இவ்வாறின்றி, ஒரு விருப்பம் எந்நிலையிலும் நிறைவெய்தாதிருந்தால், அந்த விருப்பத்தை நிறைவு செய்வதிலேயே - அதாவது, அதனை நிறைவேற்றுவதற்கு வேண்டியவற்றை உற்பத்தி செய்வதிலேயே - மனிதனது வாழ்க்கை முழுதும் கழியும்; பிறவற்றைப் பற்றி அவன் சிந்திக்கக் கூட மாட்டான். இந்த உண்மையின் அடிப்படையில், நுகர்வுக் கோட்பாடுகளுக்கு அடிப்படையாகத் திகழும் குறைந்து செல் பயன்பாட்டு விதி விளக்கப் பெற்று வருகிறது.

**3. விருப்பங்கள் திரும்பத் திரும்பத் தோன்றுவன:** ஒரு முறை நிறைவெய்தி விட்ட விருப்பம் ஒருபோதும் திரும்பவும் தோன்றாது என்பதில்லை. எந்நேரத்திலும் அது திரும்பவும் தோன்றலாம். உணவுண்ணும் போது ஒருவனது பசி தணிகிறது. ஆனால், சிலமணி நேரத்திற்குள் அதே பசி மீண்டும் தலை தூக்குகிறது. இவ்வாறு ஒரு விருப்பம் அடிக்கடி ஒருவனிடம் தோன்றுமெனில், அது அவனுடைய பழக்கம் ஆகி விடுகிறது. ஒருவன் புகை பிடிப்பவனாகவும், பொடி போடுபவனாகவும் ஆவது இந்த அடிப்படையில் தான்.

[1] மாற்று இயலில் நிறைகுறைப் போட்டி பார்க்க.

விருப்பங்கள் திரும்பத்திரும்பத் தோன்றுவதற்கு ஒழுங்கான கால இடைவெளிகள் இருக்க வேண்டும் என்றில்லை. உணவின் மீதுள்ள விருப்பம் ஒழுங்கான இடைவெளிகளுடன், ஒரு வேளை, திரும்பத்திரும்பத் தோன்றலாம். ஆனால், வேறு சில விருப்பங்கள், நெடுங்காலம் அடிமனத்தில் புதையுண்டு கிடந்து, தக்க தூண்டுதல் ஏற்படும்போது திடீரென வெளிப்படலாம். விளம்பரங்களில் ஏற்படும் மயக்கம் இவ்வழி விளைவதாகும்.

**4. விருப்பங்கள் போட்டியிடும் இயல்பின:** பல விருப்பங்கள் ஒரே நேரத்தில் தோன்றுகின்றன. ஆனால், அனைத்தையும் நிறைவேற்றுவதற்கான வழிவகைகளோ சிலவாயுள்ளன. இதுவே பொருளியல் செய்கைகளின் தோற்றுவாய். எனவே, விருப்பங்களைத் தரப் படுத்தி, [1] மிக முக்கியமானவற்றை மட்டும் குறிப்பிட்ட காலத்தில் நிறைவு செய்ய வேண்டியிருக்கிறது. விருப்பங்களின் இவ்வியல்பு தான் சம இறுதி நிலைப் பயன்பாட்டு விதியின் அடிப்படை.

இங்கோ, ஜெவான்ஸ் ஒரு சுவையான கருத்தைத் தந்துள்ளார். விருப்பங்கள் வரிசையில் மிகத் தாழ்ந்த நிலையிலுள்ள மிகவும் முக்கியமான விருப்பங்களே முதலில் நிறைவு செய்யப் படுகின்றன என்பது அவர் கருத்து. பசி, தாகம் போன்ற இயற்கை விருப்பங்கள் நிறை வேற்றப்பட்ட பின்னரே, கல்வி, பொழுது போக்கு போன்ற அறிவறிந்த விருப்பங்கள் நிறை வேற்றப்படுதல் உலகவியல்பு.

விருப்பங்களிடையே யுள்ள போட்டி கால அளவிலும் நிகழத் தக்கதே. பம் பாவர்க் (Bohm Bawerk) என்ற ஆஸ்திரிய நாட்டறிஞர் இவ்வுண்மையை விளக்கி யுள்ளார். மனிதனுடைய கட்புலனுக்கு ஒரு வரம்புள்ள காரணத்தால், வருங்கால விருப்பங்கள், நிகழ்கால விருப்பங்களோடு ஒப்பிடும் போது, அவனுடைய கண்ணோட்டத்தில் குறைந்த அளவு தீவிரமுள்ளவையாகவே தோன்றுகின்றன. வருங்காலத்தில் பேரளவு நிறைவு கிடைப்பதை விட, நிகழ்காலத்தில் குறிப்பிட்ட அளவு நிறைவு கிடைப்பதையே மனிதன் விரும்புகிறன். 'நாளைக்குக் கிடைக்கும் பலாக்காயை விட, இன்றைக்குக் கிடைக்கும் களாக்காயே மேல்' இதுவே பம் பாவர்க்கின் வட்டிக் கோட்பாட்டின் அடிப்படை.

[1] விருப்பங்களை மூவகையாகப் பிரிப்பது வழக்கம். அவை, இன்றியமையா விருப்பங்கள், வசதிவிருப்பங்கள், போக விருப்பங்கள் என்பன. அடிப்படையானவையும் மிகத் தீவிரமானவையும் ஆகிய விருப்பங்கள் இன்றியமையா விருப்பங்கள். வாழ்வை எளிதாகவும் மகிழ்ச்சி நிரம்பியதாகவும் ஆக்க உதவுகிற விருப்பங்கள் வசதி விருப்பங்கள். எம்முறையிலும் நுகர்வோனது திறமையை மிகுக்க உதவாத விருப்பங்களே போக விருப்பங்கள்.

இந்தப் போட்டிக்கு விதி விலக்குகள் இல்லாமலில்லை. சில இடங்களில் விருப்பங்கள் நிரப்புந்தன்மையன ஆகவும் இருப்பதுண்டு. குறிப்பிட்டவொரு விருப்பம், இன்னொரு விருப்பத்தையும் எழுப்பி, இரண்டும் ஒன்றை யொன்று நிரப்புவனவாக அமைந்துவிடுகின்றன. பேனாவும் மையும், மோட்டாரும் பெட்ரோலும் இவ்வகைப்படுவன.

**5. விருப்பங்கள் மாற்றுக்கால் உடையன :** அதாவது ஒரு விருப்பத்தை நிறைவேற்றப் பல்வேறு மாற்று வழிக ளுள்ளன. பசியைத் தணித்துக் கொள்ள சோறு, ரொட்டி, சப்பாத்தி, பழங்கள் என்று பல்வேறு வழிகள் உள்ளன அல்லவா ?

# 2. பயன்பாடும் பயன்பாட்டு விதிகளும்

'மனிதனுடைய விருப்பங்களை நிறைவேற்றுவதற்காகப் பொருள்களை நேரடியாகப் பயன்படுத்துவது' தான் நுகர்வு என்று குறிப்பிடும் போது, பொருள்கள் எவ்வாறு விருப்பங்களை நிறைவேற்றத் தக்கவை ஆகின்றன என்ற வினா எழுகிறது. மனிதனுடைய விருப்பங்களை நிறைவேற்றுவதற்குப் பொருள்களுக்கு இருக்கும் ஆற்றல் 'பயன்பாடு' (Utility) என்று பொருளாதாரத்தில் குறிப்பிடப்படுகிறது.

'பயன்பாடு' வேறு, பயன் வேறு என்பதை முதலிலேயே புரிந்துகொள்ள வேண்டும். ஒரு பொருள், விருப்பத்தை நிறைவேற்றும் ஆற்றல் உள்ளதாயிருக்கலாம்; ஆனால், பயனற்றதாயிருக்கலாம். சிகரெட்டுகள் உடல் நலத்துக்குத் தீங்கிழைப்பவை யாதலால் பயனற்றவையே; ஆனால் புகை பிடிப்பவனது விருப்பத்தை நிறைவு செய்யும் ஆற்றல் அவற்றிற்கு இருப்பதால், அவையும் புகை பிடிப்பவனுக்குப் பயன்பாடுள்ளவையே.[1]

பயன்பாடு ஒருவனது உள்ளத்தை யொட்டியது. ஒருவன் ஒரு பொருளுக்கு அளிக்கும் முக்கியத்துவத்தைப் பொருத்தே அதன்

[1] 'பயன்பாடு' என்ற சொல்லுக்கு அடியாக இருக்கும் 'பயன்' என்றசொல் நல்லது, கெட்டது என்ற பாகுபாட்டிற்கு இடமளிக்கிறது. ஜெவான்ஸ், எட்ஜ்வொர்த் போன்ற ஆசிரியர்கள் பயன்பாடு நல்லதை-மகிழ்ச்சியைச் சுட்டுகிறது எனக் கொண்டு, பயன்பாட்டுப் பெருக்கமே நலப்பெருக்கம் என்றும் முடிவு கட்டினர். ஒவ்வொருவனும் அவனவன் விருப்பப்படிச் செயலாற்ற உரிமை யிருந்தால், எல்லாருமே தாம் பெறும் பயன்பாட்டை மிகுத்துக் கொள்ள முயல்வார்களென்றும், ஆதலால் தடையற்ற பொருளியல் அமைப்பே சாலச் சிறந்ததென்றும் இவ்வாசிரியர்கள் முடிவு கட்டினர்.

இக்கருத்தை ஏற்றுக் கொள்ளாத பிற ஆசிரியர்கள் 'பயன்பாடு' என்ற சொல்லில் 'பயன்' என்ற பகுதி இருப்பதே இந்தக் குழப்பத்துக்குக் காரணமெனக் கொண்டு, ஒரு பொருளின் நிறைவுதரும் ஆற்றலுக்கு வேறு பெயர் சூட்டியுள்ளனர். அவற்றுள் சில: விக்ஸ்டீட்டின் 'முக்கியத்துவம்' (Significance), பரீட்டோ (Pareto) வின் 'நிறைவு தரும் ஆற்றல்' (Ophelmite), பிஷரின் (Fisher) விரும்பப் பெறுந் தன்மை', ரே (Rae) யின் 'அவாவுறுத்துந் தன்மை', வெப்லனின் (Veblen) 'சேவையாற்றல்', வால்ராஸின் (Walras) 'அருமைத் தன்மை', டாசிக் (Tausig) கின் 'விற்கப்படுந் தகுதியுடைமை.

பயன்பாடும் அமைகிறது. புகைபிடியாதவனுக்கு சிகரெட்டு பயன்பாடுள்ளதாயில்லை. ஒரே மனிதனுக்குக் காலத்தையும் இடத்தையும் பொருத்து ஒரு பொருளின் பயன்பாடு வேறுபடுகிறது. ஒருவன் பசியோடிருக்கும் போது உண்டியின் பயன்பாடு மிகுதியாயிருக்கும். இது போன்றே உலகம் சுற்றும் தமிழனுக்கு இலண்டன் 'வீராச்சாமி ஓட்டல்' சிற்றுண்டி விடுதியில் பெறமுடிகிற இட்டிலியிருந்து கிடைக்கும் பயன்பாடு, சொந்த நாட்டில் அதே இட்டிலியிலிருந்து அவன் பெறும் பயன்பாட்டை விடக் கூடுதலாயிருக்கும்! எனவே, பொருளின் உள்ளார்ந்த தன்மையெதையும் பொருத்ததல்ல பயன்பாடு; அந்தப் பொருள் நிறைவு செய்யும் விருப்பத்தின் தீவிரத்தைப் பொருத்திருக்கிறது அது. ஒரு பொருளுக்கும் அதனை நுகர்வோனுக்கும் இடையே விருப்ப நிறைவு காரணமாகத் தோன்றும் தொடர்பே பயன்பாடு.

## குறைந்து செல் பயன்பாட்டு விதி

ஒரு பொருளின் நிறைவுதரும் ஆற்றல் பயன்பாடு. இவ்வாற்றல், பொருளின் கையிருப்பு மாறும் போது எவ்வாறு மாறுகிறது என்பதைப்பற்றிச் சிந்தித்தால் பெரியதோர் உண்மை புலப்படும். முதல் கவளம் உணவு சுவை மிக்கதாயிருக்கும்; அடுத்த கவளம் சற்றே சுவை குன்றியதாகத் தோன்றும்; மூன்ருவது கவளமோ இன்னும் குறைந்த சுவையுடையதாகத் தோன்றும். இது பற்றித்தானே நாமும் 'பழகப் பழகப் பாலும் புளிக்கும்', என்கிரோம். இந்தப் பட்டறிவை ஒரு விதியாக்கி அறிவுலகுக்கு முதலில் அளித்தவர் கோசன் (Gossen) என்ற ஜெர்மானிய அறிஞர். 'தனியொரு நிறைவின் அளவு, அந்த நிறைவு பெறும் செயலில் தொடர்ந்து ஈடுபட்டுக் கொண்டிருக்கும் போது, தெவிட்டல் நிலையை எட்டுவது வரை குறைந்து கொண்டே செல்லும்' என்பார் கோசன். வேறு சொற்களில் கூறுவதானல், ஒரு பொருளின் கையிருப்புக் கூடக்கூட, அதிலிருந்து பெறும் பயன்பாடு குறைந்து கொண்டே செல்லும்.

உளநூல் அடிப்படையிலும், தருக்கவியல் அடிப்படையிலும் இந்நிலைக்குக் காரணங் காட்டலாம்.

பழங்கால ஆசிரியர்கள் குறைந்து செல் பயன்பாட்டு விதியை உளவியல் கருத்துக்களின் அடிப்படையிலேயே விளக்கி வந்தனர். வீபர் பெக்னர் விதி (Weber Fechner Law) என்ற உளவியல் கோட்பாடே அவர்களுக்குக் கைகொடுத்து உதவியது. சூழ்நிலையிலிருந்து எழும் தூண்டலின் செறிவு, புலனுணர்வு உறுப்புக்களை அடைந்து பிந்தியவற்றை இயங்க வைக்கிறது. தூண்டலின் செறிவு ஓரேயள

வாக இருப்பினும் அதனாலேற்படும் புலனுணர்வு மட்டும் மாறிக் கொண்டே இருக்கும். தூண்டலின் அளவு 1, 2, 4, 8 எனப் பெருக்கல் விருத்தியில் பெருகும் போது புலனுணர்வு 1, 2, 3, 4 எனக் கூட்டல் விருத்தியிலேயே பெருகிச் செல்லும் என வீபர் பெக்னர் விதி கூறுகிறது. பொருள்களை நுகரும் போது தூண்டல் ஏற்படுகிறது; இத் தூண்டுதலால் புலனுணர்வு மாறுவதை நுகர்வு எனக் கொள்ளலாம். தூண்டல்கள் பெருகும் விகிதத்திலே புலனுணர்வு பெருகாது என்பது விதி என்றால், நுகரும் பொருளின் அளவு பெருகும் போது அதனாலேற்படும் புலனுணர்வாகிய நிறைவு சம வீதத்தில் பெருகாது என்று ஏற்படுகிறது.

தற்கால ஆசிரியர்கள், குறைந்து செல் பயன்பாட்டு விதியைத் தருக்கமுறையில் நிறுவி வருகின்றனர். இங்கே மூவகை விளக்கங்கள் உள்ளன எனலாம். முதலில் விருப்பங்கள் எண்ணற்றவையாயினும், தனியொரு விருப்பம் நிறைவெய்தக் கூடியதே. இதன் பொருள், ஒரு நிலைக்குப் பின் தெவிட்டு நிலையை எட்டியாக வேண்டும் என்பதே. பொருள் மீதுள்ள விருப்பத்தின் தீவிரம் படிப்படியாகக் குறையும் போது தான், இறுதியில் தெவிட்டு நிலை ஏற்படும். எனவே, ஒரு விருப்பத்தை நிறைவு செய்ய ஒரு பொருளைப் பயன்படுத்தும் போது, அவ்விருப்பத்தின் தீவிரம் படிப்படியாகக் குறைவதால், பொருளின் பயன்பாடும், இயல்பாகவே, படிப்படியாகக் குறைந்தாக வேண்டும். இரண்டாவதாகப் பொருள்கள் ஒன்றுக்கொன்று சரியான பதிலீட்டுப் பொருள்களல்ல என்பதையும் கருத வேண்டும். பல்வேறு பொருள்களையும் பொருத்தமான சில விகிதங்களில் சேர்த்து நுகர வேண்டும். x அளவு ரொட்டியை, y அளவு வெண்ணெயுடன் சேர்த்து நுகர வேண்டும் என்று வைத்துக் கொள்வோம். இப்போது, வெண்ணெயின் அளவு(y)மாறாதிருக்க, ரொட்டியின் அளவு மட்டும் x+1 என மிகும்போது, குறையாதிருக்க வழியில்லை. மூன்றாவதாகப் பயன்பாடு மட்டும் இவ்வாறு குறைந்து செல்லாவிடில், ஒரு பொருளை வாங்கி நுகர முற்படுபவன் அப்பொருளன்றி வேறு எப்பொருளையும் வாங்க முன்வரமாட்டான்! ஆனால், உண்மை அப்படியல்லவே? இவ்வாறு, பொருளின் கையிருப்பு மிக மிக அதன் பயன்பாடு குறைந்து கொண்டே செல்வது தேற்றம்.

குறைந்து செல் பயன்பாட்டு விதி சில எடுகோள்களின் அடிப்படையிலேயே விளக்கப்படுகிறது. முதலாவதாக, ஒரே நேரத்தில் தொடர்ந்து, இடையறாது, நுகர்வு நிகழ்வதாக எடுத்துக் கொள்ள வேண்டும். அடுத்து, நுகரும் பொருளின் அடுத்தடுத்த அலகுகள் ஒரே தன்மையனவாக இருக்க வேண்டும். அலகுகளின் அளவும்

நியாயமானதாக இருக்கவேண்டும். நுகர்வோனது தன்மை - அவனுடைய விருப்பு வெறுப்புக்கள் - மாருது இருக்க வேண்டும்.

உணவுப் பொருள்களில் ஒன்றை எடுத்துக்காட்டாகக் கொண்டு இவ்விதியை விளக்குவது ஆசிரியர்கள் வழக்கம். ஒருவன் மாங்கனியை விரும்புவதாக வைத்துக் கொள்வோம். முதல் மாங்கனியை அளவற்ற ஆசையோடு அவன் தின்பான். மேலும் மேலும் மாங்கனிகளைத் தின்னத்தின்ன அவற்றின் மீதுள்ள அவன் ஆசை குறைகிறது.[1] முடிவில் வெறுப்பும் தட்டுகிறது. எனவே, மிகத் தீவிரமான விருப்பத்தை நிறைவு செய்ய ஆளப்பெறும் முதல் மாங்கனியிலிருந்து கிடைக்கும் பயன்பாடு, அதைவிடக் குறைந்த அளவே தீவிரமான விருப்பத்தை நிறைவு செய்ய ஆளப்பெறும் இரண்டாம் மாங்கனியிலிருந்து கிடைக்கும் பயன்பாட்டை விடக் கூடுதலாகவே இருக்கும். இவ்வாறே, மூன்ரும் மாங்கனியிலிருந்து பெறும் பயன்பாடு இரண்டாவதிலிருந்து பெற்றதைவிடக் குறைவாகவேயிருக்கும். அடுத்தடுத்து நுகரும் மாங்கனியிலிருந்து கிடைக்கும் (இறுதி நிலைப்) பயன்பாடு இவ்வண்ணம் குறைந்து கொண்டே செல்கிறது. இந்தப் போக்கு உணவு வகையில் மட்டுமல்ல, எல்லாவித நுகர்வுகளிலும் காணப்படுகிறது. இது தான் குறைந்து செல் பயன்பாட்டு விதி. மார்ஷலின் சொற்களில் கூறுவதானுல், 'ஒரு பொருளின் கையிருப்பு குறிப்பிட்டளவு மிகுதியாகும்போது, அம்மிகுதியால் ஒருவன் பெறும் அதிகப்படிப் பயன்பாடு, ஏற்கெனவேயுள்ள இருப்பு ஒவ்வொருமுறை மிகுதியாகும் போதும், குறைந்து கொண்டே செல்கிறது' எனலாம்.

செல்வப் பொருள்களின் ஒரு தனி இயல்பு அவற்றைப் பலவழிகளில் பயன்படுத்த முடியும் என்பதாகும். எனவே, ஒரு பொருளைப் பலவிருப்பங்களை நிறைவு செய்வதில் ஆளும் போதும் அதன் பயன்பாடு குறைந்து செல்கிறதா எனப் பார்க்க வேண்டும். மெங்கர் (Menger) என்பார் இம்முறையில் குறைந்து செல் பயன்பாட்டு விதியை விளக்கியுள்ளார். மாங்கனியையும் பலவழிகளில் ஆளமுடியும். ஆனுல், மாங்கனி மிகவும் அரிதாகக் கிடைத்தால், அதனை அப்படியே நறுக்கித் தின்று சுவைக்கிரும். இன்னும் மிகுதியாகக் கிடைத்தால், அதனை உண்டி வகைகளில் கலந்து உண்கிரும்; அதனிலும் அபரிமிதமானுல், சாறு பிழிந்து பதன் படுத்தி எதிர்காலத்துக்கெனச் சேர்த்து வைக்கிரும். இதனிலும் ஏராளமாகக் கிடைத்தால் மாட்டுக்கு நறுக்கிப் போடத் தயங்க மாட்டோம். அதிகப்படியாகக் கிடைக்கும் மாங்கனியை வெவ்வேறு வழிகளில் ஆள்கிரும்.

[1] இதனைக் குறைந்து செல் விருப்பத் தீவிரம் (Principle of Diminishing Satisfaction) என்பார் கோசன்.

ஆனல், தொடர்ந்து நிறைவு செய்யப் பெறும் ஒவ்வொரு விருப்பமும் தீவிரங் குறைந்தவை என்பது கருதத்தக்கது. எனவே, அடுத்தடுத்துக் கிடைக்கும் மாங்கனிகள் வெவ்வேறு விருப்பங்களை நிறைவு செய்வதில் ஆளப்பெறுகிற போதும், அவற்றிலிருந்து அதிகப்படியாகக் கிடைக்கும் பயன்பாடு குறைந்து செல்லும் என்பது உண்மையாகிறது.

நுகரும் பொருளின் அடுத்தடுத்த அலகுகள், தன்மையில் வேறுபடுவதால், பயன்பாடு குறைந்து செல்வதாகக் கருதி விடலாகாது. எல்லா அலகுகளும் ஒரே தன்மையுள்ளவை தாம். ஆனல், அடுத்தடுத்த அலகுகளைக் குறைந்த தீவிரமுடைய விருப்பங்களை நிறைவு செய்வதில் ஆள்வதால் தான் பயன்பாடு குறைந்து செல்கிறது. ஒரு பொருளின் நிறைவு தரும் ஆற்றலே பயன்பாடு. அப்பொருள் மிகவும் தீவிரமான விருப்பத்தை நிறைவு செய்ய ஆளப் பெற்ருல், அது, அவ்வளவு தீவிரமான விருப்பத்தை நிறைவு செய்வதால், அதன் நிறைவு தரும் ஆற்றல்-அல்லது, பயன்பாடும்-மிகுதியாகவே இருக்கும். எனவே, அடுத்தடுத்துத் தின்னும் மாங்கனி, அடுத்தடுத்து வரும் குறைந்து செல் தீவிர விருப்பத்தை நிறைவு செய்வதில் ஆளப் பெறுவதால் தான், அதன் நிறைவு தரும் ஆற்றல்-அல்லது, பயன்பாடு-குறைந்து செல்கிறது.

இங்கே, புரிந்து கொள்ள வேண்டிய மற்ருேர் உண்மை இது. பயன்பாடு குறைந்து செல்கிறது என்று சொல்லும் போது, பொருளின் அடுத்தடுத்த அலகுகளால் மிகுதியாகக் கிடைக்கும் இறுதி நிலைப் பயன்பாடு (Marginal utility) குறைந்து செல்வதாகச் சொல்கிருேமே யொழிய, பொருளின் நுகர்வால் கிடைக்கும் மொத்தப் பயன்பாடு (Total utility) குறைவதாகச் சொல்லவில்லை. மொத்தப் பயன்பாடு தெவிட்டல் நிலையை எட்டுவது வரை வளர்ந்து செல்லத் தக்கதே. கீழ்வரும் அட்டவணை இதனை விளக்கும் :

| மாங்கனிகளின் எண்ணிக்கை | இறுதி நிலைப் பயன்பாடு | மொத்தப் பயன்பாடு |
|---|---|---|
| 1 | 100 | 100 |
| 2 | 80 | 180 |
| 3 | 60 | 240 |
| 4 | 40 | 280 |
| 5 | 20 | 300 |
| 6 | 0 | 300 |
| 7 | –20 | 280 |

'மொத்தப் பயன்பாடு', 'இறுதிநிலைப் பயன்பாடு' என்ற கருத்துக்களை முதன்முதலில் நுட்பமாக விளக்கியவர் ஜெவான்ஸ்.[1] அவரது கருத்துப்படி, குறிப்பிட்ட நேரத்தில் நுகரும் ஒரு பொருளின் எல்லா அலகுகளிலிருந்தும் கிடைக்கிற பயன்பாட்டின் கூட்டுத் தொகையே மொத்தப் பயன்பாடு. மேலேயுள்ள அட்டவணையின்படி, இரண்டு கனிகள் நுகர்ந்தால் முதற் கனியிலிருந்து 100-உம், இரண்டாம் கனியிலிருந்து 80-உம் ஆக, மொத்தப் பயன்பாடு 180 ஆகிறது. இத்தொகை நான்கு கனிகள் நுகரும் போது 280-உம் ஆறு கனிகள் நுகரும் போது 300-உம், ஏழு கனிகள் நுகரும் போது 280-உம் என்றாகிறது.[2]

பொருளின் எந்த அலகுடன் நுகர்வு நிறுத்தப் படுகிறதோ, அந்த அலகிலிருந்து கிடைக்கும் பயன்பாடே இறுதிநிலைப் பயன்பாடு என்பார் ஜெவான்ஸ். மேலேயுள்ள அட்டவணையில், நான்கு கனிகளுடன் நுகர்வு நிறுத்தப்பட்டால், இறுதிநிலைப் பயன்பாடு 40; ஆறு கனிகளுடன் நிறுத்தப்பட்டால் 0; ஏழு கனிகளுடன் நிறுத்தப்பட்டாலோ – 20 என்றவாறிருக்கும்.

பொருளின் நுகர்வு எந்த அலகுடன் நிறுத்தப்படும் என்ற வினா இங்கு எழுகிறது. நுகர்வின் நோக்கம் நிறைவு பெறுவது. எனவே, ஒருவன் தொடர்ந்து ஒரு பொருளை நுகரும்போது, அந்தப் பொருளிலிருந்து மிகவுயர்ந்த அளவு நிறைவு பெறுவதே அவன் நோக்கம். பொருளின் எந்த அலகுடன் நிறைவு மிகவுயர்ந்த அளவினதாகிறதோ, அத்துடன் நுகர்வு நிறுத்தப்படும்.

நுகர்வோன் நிறைவு எப்போது மிகவுயர்ந்த அளவினதாகும் என இனிப் பார்ப்போம். மேலேயுள்ள அட்டவணையை எடுத்துக் கொண்டால், நுகர்வோன் ஆறு கனிகளை நுகரும் போது நிறைவு மிகவுயர்ந்த அளவினதாகிறது. ஏனெனில், அடுத்த கனி அவனுடைய நிறைவைக் குறைக்க முற்படுகிறது. ஆறும் கனியைத் தின்னும் போது கிடைக்கும் இறுதிநிலைப் பயன்பாடு 0; அப்போது மொத்தப் பயன்பாடு - நிறைவு - மிகவுயர்ந்த அளவை எட்டுகிறது. எனவே, இறுதிநிலைப் பயன்பாடு 0 ஆவதுவரை நுகர்வு தொடரும், அல்லது, அந்நிலையில் தான் நுகர்வு நிறுத்தப்படும் என்றாகிறது.

[1] இறுதிநிலைப்பயன்பாட்டை, 'பயன்பாட்டின் கடைசிப் படியளவு' (Final degree of Utility) என்று வழங்குவார் ஜெவான்ஸ்.

[2] இங்கு, 100, 80, 300 என்று குறிப்பிடப் பெறும் எண்கள் பயன்பாட்டைச் சுட்டுகின்றன. மனநிறைவை அளக்க மீட்டர்களோ, கிலோக்களோ இல்லை. 100, 200, 300 என்று சொல்லும் போது, அவை வெவ்வேறு நிலையிலுள்ள பயன்பாடு மட்டங்களைக் குறிக்கின்றன என்று கொள்வோம். பயன்பாட்டை அளவிட்டறிவது பற்றிய சிக்கல் கீழே விளக்கப் பெறுகிறது.

இம்முடிவு முற்றிலும் சரியன்று. இது இலவசப் பொருள்களுக்கே பொருந்தும். இன்றைய உலகில் எல்லாப் பொருள்களும் இலவசமாகக் கிடைப்பதில்லை; பணத்தைக் கொடுத்தே பொருள்களை வாங்க வேண்டியுள்ளது. எனவே, பொருள்கள் வழி வரும் நிறைவுக்கு எதிராகப் பணத்தை நல்கவேண்டிய நிறைவிழப்பு ஏற்படுகிறது. பொருளினைத் தொடர்ந்து நுகர்பவன், அதன் அடுத்தடுத்த ஒவ்வோர் அலகிலிருந்தும் கிடைக்கிற பயன்பாட்டை, அவ்வலகுக்குக் கொடுக்க வேண்டிய பணத்துடன்-அதாவது அப்பொருளின் விலையுடன் - ஒப்பிட்டாக வேண்டும். குறிப்பிட்ட அலகிலிருந்து கிடைக்கும் பயன்பாடு, அதற்கென நல்கும் விலையைவிட மிகுதியாயிருந்தால், அவ்வலகை நுகர்வதோடு, அடுத்ததையும் வாங்க முற்படுகிறான். இவ்வாறு தொடர்ந்து நுகரும் போது, ஒரு கட்டத்தில் ஓர் அலகின் பயன்பாடும், அதன் விலையும் சமமாயிருக்கும். அத்துடன் நுகர்வு நிறுத்தப்படும். தொடர்ந்து நுகர்ந்தால் (குறைந்து செல் பயன்பாட்டு விதியின் இயக்கத்தால்) அடுத்த அலகின் பயன்பாடு நடப்பு விலையை விடக் குறைவாயிருக்கும். இவ்வாறு, நடப்பு விலையில் இறுதியாக நுகரப் பெறும் அலகு இறுதிநிலை அலகு; அது தரும் பயன்பாடே இறுதிநிலைப் பயன்பாடு.

மேலே கண்ட அட்டவணையில் பயன்பாட்டைக் குறித்து நிற்கும் எண்களைக் காசுகளென வைத்துக் கொண்டால், இவ்வுண்மையை எளிதில் புரிந்து கொள்ளலாம். மாங்கனியின் நடப்புவிலை 40 காசு என்று வைத்துக் கொள்வோம். இப்போது, நுகர்வோன் நான்கு கனிகளே வாங்குவான். ஐந்தாவது கனி வாங்கும் போது 40 காசு விலை கொடுத்து 20 காசுப் பயன்பாட்டைப் பெற வேண்டியுள்ளது. எனவே, நுகர்வு நான்காம் கனியுடன் நிறுத்தப்படும். அதுவே இறுதிநிலை அலகு; அதிலிருந்து கிடைக்கும் பயன்பாடே இறுதிநிலைப் பயன்பாடு. [1]

இங்கே, இறுதிநிலையைப் பற்றிய வேறிரு உண்மைகள் குறிப்பிடத்தக்கன. இறுதிநிலை என்பது மாருதவொரு நிலையன்று. பொருளின் அளிப்பையும் விலையையும் பொருத்து அது மாறிக் கொண்டிருப்பதாகும். பொருளின் அளிப்பு மிகும் போது, அதனை அவ்வளவாக முக்கியத்துவமில்லாத விருப்பங்களை நிறைவு செய்வதில் ஆள முடியும். அப்போது, அப்பொருளின் இறுதிநிலை மட்டம் மாற நேர்கிறது. பொருளின் அளிப்பு அதன் தேவைக்கும் எச்சமாக

[1] இந்த உண்மையின் அடிப்படையில், ஒரு பொருளின் இறுதிநிலைப் பயன்பாடு பூஜ்யமாக இருந்தால், அதற்கென விலை எதுவும் தரப் பெறாது என்பதும் தெளிவாகிறது. காற்று, சூரியவெளிச்சம் போன்ற இலவசப் பொருள்களின் நிலை இதுவே.

வளர்ந்து விட்டால் அது ஓர் இலவசப் பொருளாகக் கூட மாறி விட லாம்.[1] இது போன்றே, பொருளின் விலை இறங்கினாலும் மிகுதி யான அலகுகள் நுகரப் பெற்று இறுதி நிலை மட்டம் மாறலாம். மே லேயுள்ள அட்டவணையில், மாங்கனியின் நட்பு விலை 20 காசாக இறங்கினால், ஐந்தாவது அலகு இறுதி நிலை அலகாகி விடும்.

இறுதிநிலைப் பயன்பாட்டின் போக்குப் பற்றிய சில உண்மை களை அட்டவணையிலிருந்து அறியலாம். இறுதிநிலைப் பயன்பாடு நேர்க்கணியமாகவோ, பூஜ்யமாகவோ, எதிர்க்கணிய மாகவோ இருக்கலாம். இறுதிநிலை அலகின் நுகர்வு ஓரளவேனும் நிறைவு தருமானால், இறுதிநிலைப் பயன்பாடு நேர்க்கணியமா யிருப்பதாகச் சொல்லலாம். அட்டவணையில் ஐந்தாவது அலகு வரை ஒவ்வோரல கும் ஓரளவேனும் பயன்பாடு தருவதால், அது வரை இறுதிநிலைப் பயன்பாடு நேர்க்கணியமாயிருக்கிறது. ஆனால், ஆறுவது அலகின் நுகர்வு நிறைவு–நிறைவின்மை இரண்டில் எதனையும் தரவில்லை : இந்நிலையில் இறுதிநிலைப் பயன்பாடு பூஜ்யமாகிறது. இறுதிநிலை அலகின் நுகர்வு நிறைவிழப்புக்குக் காரணமா யிருந்தால், இறுதி நிலைப் பயன்பாடு எதிர்க்கணியமா யிருப்பதாகக் கொள்ள வேண் டும். ஏழாவது அலகு தரும் பயன்பாடு இத்தகையது.

மொத்தப் பயன்பாடு, இறுதிநிலைப் பயன்பாடு இரண்டுக்கு மிடையே நிலவும் முத்திற உறவையும் இங்குக் குறிப்பிடலாம் :

1. இறுதிநிலைப் பயன்பாடு குறைந்து செல்லும் போது, அதே காரணத்தால், மொத்தப் பயன்பாடு தொடக்கத்தில்[2] குறைந்து செல் வீதத்தில் வளர்ந்து செல்கிறது. இரண்டாவது மாங்கனி யால் மொத்தப் பயன்பாடு 80% மிகுதியாகும்போது, மூன்றுவது மாங்கனியால் விளையும் மிகுதி 33·33 % மட்டுமே.

2. மொத்தப் பயன்பாட்டின் இவ்வளர்ந்து செல்லும் போக்கு ஆறுவது கனியுடன் நின்று விடுகிறது. அந்நிலையில் மொத்தப் பயன்

[1] தமிழகத்தில் பள்ளிப்படிப்பு இலவசமாக்கப் படுவதற்கு முதற்படியாகப் பள்ளி களின் எண்ணிக்கை மிகுக்கப் பட்டது. இது போன்று கல்லூரிப் படிப்பு இலவச மாக்கப் படவேண்டுமெனில், அதற்குப் பெரியதொரு தடங்கலாக இருப்பது கல்லூரி களில் படிப்பு வாய்ப்புக்களைப் பெருக்குவதிலுள்ள நிதிவகைச் சிக்கல் தான். இவற்றி லிருந்து அளிப்புக்கும் இலவசப்பொருள்களுக்கும் இடையேயுள்ள தொடர்பை அறிந்து கொள்ளலாம்.

[2] தொடக்கத்தில் ஒரு சில அலகுகள் வளர்ந்து செல் வீதத்தில் பயன்பாடு தர லாம். நல்ல பசியோடிருப்பவன், முதலாவது சில கவளங்களிலிருந்து அதிகமதிகம் பயன்பாடு பெறலாம். எனவே, குறிப்பிட்ட வொரு நிலைக்குப் பின்னரே நிறைவு குறைந்து செல்ல முற்படும் எனலாம்.

பாடு மிகவுயர்ந்த அளவினதாகவும் இறுதிநிலைப் பயன்பாடு பூஜ்ய மாகவும் உள்ளன. இந்நிலை தெவிட்டல் நிலை (Point of Satiety) அல்லது மிகவுயர்ந்த நிறைவு மட்டம் எனப் பெறும்.

3. ஒரு பொருள் தெவிட்டி விட்டால், அதனை மேலும் நுகர்ந்தால் வெறுப்புத் தட்டும்; நிறை விழப்பு ஏற்படும். இதனால், இறுதிநிலைப் பயன்பாடு எதிர்க்கணியமாகி, அதே நேரத்தில்-அதே காரணத்தால் - மொத்தப் பயன்பாடும் குறைந்து செல்கிறது. அட்டவணையில் ஏழாவது அலகு இந்நிலையைச் சுட்டுகிறது. [1]

மேலே கண்ட உண்மைகளை வரைபட மொன்றன் வழியாகவும் காட்டலாம் :




படத்தில், செங்குத்து அச்சில் பொருளின் (மாங்கனியின்) பல்வேறு அலகுகள் தரும் பயன் பாட்டின் அளவு குறிக்கப் பட்டுள்ளது.

[1] பயன்பாடு எதிர்க்கணியமாவது வரை, நடைமுறையில், நுகர்வு தொடருமா என ஐயுறுவோருண்டு. கல்லூரி விடுதியில் இட்டிலி தின்னும் போட்டி நிகழ்கிறதென்றால், வாந்தி வருவதையும் அடக்கிக் கொண்டு வயிறு வலிக்கத் தின்பவர்கள் இல்லையா? அந்தணர் இல்லங்களில் நீத்தார் கடன் சடங்கினை யொட்டிப் படையலை வயிறு வலிக்கத் தின்பதையே வழக்கமாகக் கொண்டவர்கள் இல்லையா? இவர்களெல்லாம் பயன்பாடு எதிர்க்கணியமாவது வரை தொடர்ந்து நுகர்பவர்கள் எனலாம். இருப்பினும், பணம் புழங்கும் சமுதாயத்தில் பயன்பாடு எதிர்க்கணியமாவது வரை நுகர்வது வழக்கமில்லை. ஏனெனில், பணத்தைத் தந்து வாங்குகிற பொருளிலிருந்து நிறை விழப்பே கிட்டுவதெனில், விவேகமாகச் செயல்படும் எவரும் அந்தச் செய்கையில் ஈடுபட மாட்டார்கள்

A. B. C. D. E. F. G. என்ற புள்ளிகள், பொருளின் முதல் அலகு முதல் ஏழாவது அலகு வரை ஒவ்வொன்றும் அடுத்தடுத்து மிகுதியாகத் தருகிற (அதாவது, இறுதிநிலைப்) பயன் பாட்டைச் சுட்டிக் காட்டுகின்றன. இப்புள்ளிகளை இணைத்தால் கிடைக்கும் வளைகோடு கீழ் நோக்கி வளைந்து செல்கிறது. இதற்குக் காரணம் அடுத்தடுத்த அலகுகளின் - இறுதிநிலைப் – பயன்பாடு குறைந்து செல்வது தான். மொத்தப் பயன்பாட்டின் போக்கும், இதே முறையில், a. b. c. d. e. f. g. என்ற புள்ளிகளால் சுட்டிக்காட்டப் பட்டுள்ளது இப் புள்ளிகளை இணைப்பதால் கிடைக்கும் வளைகோடு f புள்ளி வரை மேல் நோக்கிச் சென்று, பின்னர்க் கீழ் நோக்கிச் சரிய முற்படுகிறது. இக்கோடு 'f' வரை மேல் நோக்கிச் செல்லக் காரணம், அது வரை இறுதிநிலைப் பயன்பாடு நேர்க்கணியமா யிருப்பதால், மொத்தப் பயன்பாடு வளர்ந்து செல்வது தான். அதன் பின்னர் அது கீழ் நோக்கிச் சரியக் காரணம், இறுதிநிலைப்பயன்பாடு எதிர்க்கணியமாகி விட்டமை தான். இறுதிநிலைப் பயன்பாடு எதிர்க் கணியமாகி விட்ட நிலையை 'F' புள்ளிக்குப் பின் இறுதி நிலைப் பயன்பாடு அடிமூல வரை (ox) க்கும் கீழே இறங்குவதிலிருந்து அறிய முடியும். 'F' 'f' புள்ளிகளை இணைக்கும் கோட்டிலிருந்து 'f' மட்டத்தில் தான் மொத்தப் பயன்பாடு மிகவுயர்ந்த அளவினதாயிருப்பது புலப்படும். இறுதிநிலைப் பயன்பாடு பூஜ்யமாகும் போது ('F' புள்ளி அடிமூலவரையில் இருப்பதன் பொருள் இதுவே), மொத்தப் பயன்பாடு மிகவுயர்ந்த அளவினதாயிருக்கும் என்பதும் இதிலிருந்து புலப்படுகிறது.

சிலர் இவ்விதிக்குச் சில விலக்குகள் இருப்பதாகச் சொல்கிறார்கள்:

1. பணத்துக்கு இவ்விதி பொருந்தாது என்பது சிலர் கருத்து. பணத்தைக் கொண்டு பல்வேறு பொருள்களை வாங்கி நுகரமுடியுமாதலால், பணம் மிகமிக, அதனைப் புதிய புதிய பொருள்களில் செலவிட்டுப் பயன்பாட்டைப் பெருக்கிக் கொள்ள முடியும் என்று சொல்லப் படுகிறது. இது உண்மையன்று. பணம் அரிதாயிருக்கும் போது, அதனை மிகவும் முக்கியமான – அதாவது மிகுதியான பயன்பாடு தருகிற – பொருள்களை வாங்குவதில் செலவிடுவதிலிருந்தும், பணம் மிகும் போது அதனை வேண்டாத பொருள்களில் செலவிடுவதிலிருந்தும் பணத்துக்கும் இவ்விதி பொருந்தும் என்பது தெளிவாகிறது.

2. மது அருந்துவோர்க்கு இவ்விதி பொருந்தாது என்று கூறுவதுண்டு. மதுவை அருந்த அருந்த அதன் மீதுள்ள விருப்பம்

பெருகுவதாகச் சொல்லப்படும். இதுவும் உண்மையன்று. மது-வருந்துவோன் ஒரு நிலைக்கு மேல் குமட்டல் நிலைக்கு ஆளாகி, அத்துடன் நுகர்வை நிறுத்த முற்படுவதிலிருந்து, இங்கும் இவ்விதி செயல்படுவதை அறிந்து கொள்ளலாம்.

3. தொல் பொருள் (நாணயங்கள், தபால்தலைகள் முதலியவை) சேகரிப்போர்க்கும் இவ்விதி பொருந்தாதென்று கூறுவோருண்டு. மேலும் மேலும் தபால்தலை சேகரிக்கும் போது, குறிப்பிட்டவனுடைய மனநிறைவு மிகலாம். ஆனால், அடுத்தடுத்துச் சேகரிக்கப் பெறும் தலைகள் வெவ்வேறு வகையினதாக இருந்தால் தான் நிறைவு வளர்ந்து செல்ல முடியும் என்பதைக் கவனிக்க வேண்டும். இது போன்றே பேராசிரியர் டாசிக் (Taussig) போன்றோர், தரமான இசையைத் தொடர்ந்து கேட்கும் போதும், நல்ல இலக்கியங்களைப் படிக்கும் போதும் நிறைவு மிகுந்து செல்லும் என்பார்கள்; உண்மையே. ஆனால் நம் வானொலி 'இசை அமுதம்' நிகழ்ச்சிகளில் தரப்பெறுவதுபோல, ஒருமுறை ஒலிப்பதிவான கச்சேரியையே மீண்டும் மீண்டும் கேட்டால் நிறைவு குறையவே செய்யும்.

இவ்வாறு, குறைந்து செல் பயன்பாட்டு விதி ஒரு பொது விதியாகத் திகழ்கிறது. இனி, இவ்விதியின் முக்கியத்துவத்தைப் பார்க்கலாம். நுகர்வுக்கு அடிப்படையான இவ்விதி, மாற்றிலும் பகிர்விலும் அடிப்படையான சில கருத்துக்களுக்கு வழி கோலியுள்ளது :

ஒரு பொருளை மேலும் மேலும் வாங்கும் போது அதன் இறுதி நிலைப் பயன்பாடு குறைந்து செல்வதை நுகர்வோர் அனைவரும் அறிவர். எனவே, அதே பொருளை மேலும் மேலும் வாங்குவதில் பொருளில்லை. அதனை வாங்குவதற்குப் பதிலாக வேறுயாதாயினும் ஒரு பொருளை வாங்குவதே நல்லது என நுகர்வோன் உணர்கிறான். இவ்வுணர்வு நுகர்வோன் செய்கைகளுக்கு அடிப்படையாயிருக்கிறது. பல்வகைப் பொருள்களிடையே தன் வருமானத்தைச் செலவிடுவதில் நுகர்வோன் ஒரு நடைமுறையைப் பின்பற்றுகிறான். இந்த நடைமுறை, சம இறுதிநிலைப் பயன்பாட்டு விதி, அல்லது பதிலீட்டு விதி எனப்பெறும்.

குறைந்து செல் பயன்பாட்டு விதியை ஆதாரமாகக் கொண்டே, தேவை விதியும் விளக்கப் பெற்று வருகிறது. பொருளை வாங்கும் போது ஒருவன் தரச் சித்தமாயிருக்கும் விலையானது, பொருளின் இறுதிநிலைப் பயன்பாட்டுக்குச் சமமாயிருக்கும். எனவே, இறுதிநிலைப் பயன்பாடு குறைவாக இருந்தால், விலையும் குறைவாகவே

இருப்பது இயல்பு. உற்பத்தியாளர்கள் பொருளை மிகுதியாக அளித்தால், அதன் இறுதிநிலைப் பயன்பாடு குறைந்து விடுகிறது. இந்நிலையில், அப்பொருளை விற்க வேண்டுமெனில், அதன் விலையைக் குறைத்தாக வேண்டும் என்பது தெளிவாகிறது.

இறுதியாக, பகிர்வு பற்றிய கோட்பாடுகளில் இவ்விதி செயல்படுவதைப் பார்க்கலாம். குறைந்து செல் பயன்பாட்டு விதி பணத்துக்கும் பொருந்துவதே; வருமானம் பெருகப் பெருக, அதிலிருந்து பெறும் இறுதிநிலைப் பயன்பாடு குறைவாகவே இருக்கும். எனவே, பெரிய அளவில் வருமானமுள்ளவர்களிடமிருந்து வளர்ந்து செல் வீதத்தில், அரசு வரி பிரித்தெடுத்தால், செல்வந்தர் இழக்கும் நிறைவு, பேரளவில் இராது. இதனால் வளர்வீத வரிமுறை வரவேற்கத் தக்கதாகிறது. இதே அடிப்படையில் சமதருமவாதிகள் வலியுறுத்தும் மற்றொரு கருத்து புரட்சிகரமானது. பணத்தின் இறுதிநிலைப் பயன்பாடு (பணம் மிக்குள்ள) செல்வந்தனுக்கு, (பணம் சிறிதளவேயுள்ள) ஏழைக்குக் கிடைப்பதை விடக் குறைவாகவே இருக்கிறது. எனவே, செல்வந்தனிடமிருந்து ஓரளவு செல்வமானது ஏழைகள் கைக்கு மாற்றிக் கொடுக்கப் பட்டால், அதனால் (செல்வந்தனுக்கு ஏற்படும்) இழப்பு குறைவாகவும், (ஏழைக்கு ஏற்படும்) ஆதாயம் மிகுதியாகவு மிருக்கும். இத்தகைய செல்வ மாற்ற வழங்கீடு ஏற்பட வேண்டும் என்பது சமதரும வாதிகள் கோரிக்கை. [1]

இவ்வளவு சிறந்த குறைந்து செல் பயன்பாட்டு விதியில் குறை காண்போரும் உளர். ஒரே பொருளைத் தனியாக – அதுவும் சிறிய சிறிய பகுதிகளாகத் – தொடர்ந்து நுகரும்போது என்ன நிகழும் என்பதையே விதி விளக்குகிறது. ஆனால், நடைமுறையில் பல்வேறு பொருள்களைச் சேர்த்து நுகர்வதே வழக்கம். [2] ஒரு பொருளைச் சிறு சிறுபகுதிகளாக நுகர்வதும் நடைமுறையிலில்லை. வீடு போன்ற நெடு

[1] குறைந்து செல் பயன்பாட்டு விதி இந்த அளவுக்குச் செல்கிறதா என்பது ஐயமே. ஒரு பொருளின் குறிப்பிட்ட அளவிலிருந்து இருவர் பெறும் பயன்பாடு ஒரே அளவினதாயிருக்கும் எனச் சொல்ல முடியாது. N-ஐ விடப் பெரிய தொகையாக M என்று வைத்துக் கொள்வோம். குறைந்து செல் பயன்பாட்டு விதியிலிருந்து A என்பவன் M அளவு பணத்திலிருந்து பெறும் இறுதிநிலைப் பயன்பாடு அவன் N அளவு பணத்திலிருந்து பெறுவதை விடக்குறைவு தான். B-என்பவனுக்கும் இது பொருந்துவதே. ஆனால். இதிலிருந்து M அலகிலிருந்து A பெறும் இறுதிநிலைப் பயன்பாடு, N அலகிலிருந்து B பெறும் இறுதிநிலைப் பயன்பாட்டை விடக் குறைவாக இருக்கும் என்றோ, அல்லது M அலகிலிருந்து B பெறும் இறுதிநிலைப் பயன்பாடு N அலகிலிருந்து A பெறும் இறுதிநிலைப் பயன்பாட்டை **விடக் குறைவாக இருக்கும் என்றோ முடிவு கட்டி** விட முடியாதல்லவா?

[2] சம இறுதிநிலைப் பயன்பாட்டு விதி இந்தக் குறையை ஒரு வகையில் நிரப்புகிறது.

நாள் பயன்தரும் பொருள்களைப் பகுதி பகுதியாக நுகர்வதென்பது இயலாதவொன்று. மேலும், இவ்விதிக்கு அடிப்படையாகச் சுட்டப்பட்ட உளவியல் விதியே பொருத்தமானதல்ல என்று குறிப்பிடப்படுகிறது. குறிப்பிட்ட உளவியல் விதி 'புலனுணர்வு' பற்றிச் சொல்கிறதே யொழிய மனநிறைவு பற்றிக் குறிப்பிடவில்லை.[1] மேலும், மக்கள் விவேகமாகச் செயல்படும் போதுதான், பொருளின் விலையும் இறுதிநிலைப் பயன்பாடும் சமமாயிருக்கும். ஆனால், 'மனத்தூண்டுதல்கள், இயல்புணர்ச்சிகள், பழக்க வழக்கங்கள், மரபுகள், காலவண்ணங்கள், கூட்டஇசிவுகள் ஆட்டுவிக்கிறபடி ஆடுபவன், மனிதன்![2] இறுதியாக, உளவுணர்வை யொட்டிய பயன்பாட்டைத் துல்லியமாக அளக்க முடியாத காரணத்தால், அந்த அளவுக்கு அதன் நடை முறைப் பயன் குன்றுகிறது என்பதையும் மறக்க முடியாதென்பார்கள்.[3]

**சம இறுதிநிலைப் பயன்பாட்டு விதி**

நுகர்வோன் ஒரே நேரத்தில் பல்வேறு பொருள்களை வாங்குவது இயல்பு. குறிப்பிட்ட ஒரு பொருளைத் தொடர்ந்து வாங்கும் போது, அதன் இறுதிநிலைப் பயன்பாடு குறைந்து செல்கிறது. எனவே, ஒரு கட்டத்தில், அந்தப் பொருளில் தொடர்ந்து செலவிடுவதற்குப் பதிலாக, இதுவரை அவன் வாங்க முன்வராத, அல்லது, குறைவாகவே வாங்கியுள்ள, இன்னொரு பொருளில் செலவிடுவது ஆதாயகரமானதாகத் தோன்றுகிறது. இந்நிலையில் நுகர்வோன் எவ்வாறு செயல்படுவான் என்பதையே சம இறுதிநிலைப் பயன்பாட்டு விதி சொல்கிறது. இவ்விதியையும் கோசன் தம் இரண்டாவது விதியாக அறிமுகப் படுத்தினார்.

இவ்விதியும் சில எடுகோள்களின் அடிப்படையிலேயே நிறுவப்படுகிறது. முதலாவதாக, நுகர்வோன் செலவிடச் சித்தமாயிருக்கும் வருமானம் வரையறுக்கப் பட்டுள்ளது. (ரூ. 7. என்று வைத்துக் கொள்வோம்.) அடுத்து, நுகர்வோனது சுவைநிலை விருப்பம் முதலியவை மாறாதிருப்பதாகவும், அவன் நோக்கம் மிகவுயர்ந்த அளவு நிறைவு பெறுவதே என்றும், தொடர்ந்து பொருளை வாங்குவதில் செலவிடும் பணத்தின் இறுதிநிலைப் பயன்பாடு மாறாதிருப்பதாகவும்

[1] விதியைத் தருக்க முறையிலும் நிறுவ முடியும் என்பதை இங்குக் கவனிக்க வேண்டும்

[2] மனிதன் விவேகமாகச் செயல் படுவான் என்பது பொருளாதார ஆய்வின் அடிப்படை எடுகோள்.

[3] பயன்பாட்டை அளவிடுவது பற்றிய கருத்து வேற்றுமையில் தோன்றிய மற்றொரு கோட்பாடு பின்னர் விளக்கப் பெறுகிறது.

வைத்துக் கொள்வோம். கீழேயுள்ள அட்டவணையில், நுகர்வோன் வருமானம் A, B, C என்ற மூன்று பொருள்களில் தொடர்ந்து செலவிடப் பெற்றால் பெற முடிகிற பயன்பாடு குறிப்பிடப் பெறுகிறது.

| ஒவ்வொரு பொருளிலும் செலவிடப் பெறும் ரூபாய் அலகுகள் | ஒரு ரூபாய் செலவிடும் போது கிடைக்கும் பயன்பாடு A | B | C |
|---|---|---|---|
| I | 10 | 8 | 6 |
| II | 9 | 6 | 5 |
| III | 8 | 5 | 4 |
| IV | 6 | 4 | 3 |
| V | 5 | 3 | 2 |
| VI | 4 | 2 | 1 |
| VII | 3 | 1 | 0 |

நுகர்வோன் மிகவுயர்ந்த அளவு நிறைவு பெற வேண்டுமெனில், அட்டவணையின் படி, அவன் A-இல் ரூ. 4-ம், B-இல் ரூ. 2-ம், C-இல் ரூ. 1-ம் செலவிடும் போது தான் இயலும். அப்போது தான் அவன் பெறுகிற மொத்தப் பயன்பாடு (A-இல் 33+B-இல் 14+C-இல் 6 =53) மிகவுயர்ந்த அளவினதாயிருக்கும். வேறு எந்த முறையில் செலவிட்டாலும், நிறைவு மிகவுயர்ந்த அளவினதாக இருக்க முடியாது. இவ்வாறு செலவிடும் போது, அவன் மூன்று பொருள்களிலும் செலவிடுகிற இறுதி ரூபாயிலிருந்து பெறுகிற பயன்பாடு (அதாவது, ரூபாயின் இறுதிநிலைப் பயன்பாடு) சமமாயிருப்பது கவனிக்கத்தக்கது. பொருள்களை வாங்கும் போது, A-இல் செலவிட்ட இறுதி ரூபாயின் பயன்பாடு, B-இல் செலவிட்ட இறுதி ரூபாயின் பயன்பாட்டைவிட மிகுதியாக இருந்தால், A-ஐ மிகுதியாகவும் B-ஐக் குறைவாகவும் வாங்குவதன் வழியாக நுகர்வோன் தனது நிறைவை மிகுத்துக் கொள்ள முடியும். A-இல் ரூ. 3-ம், B-இல் ரூ. 3-ம் C-இல் ரூ. 1-ம் செல விட்டு விட்டதாக வைத்துக் கொள்வோம். இப்போது A-இல் செலவிட்ட இறுதி ரூபாயிலிருந்து பெறுகிற பயன்பாடு 8; ஆனால் B-இல் செலவிட்ட இறுதி ரூபாயின் பயன்பாடோ 5. இப்போது, B-இல் செலவிட்ட இறுதி ரூபாயை A-இல் மாற்றிச் செலவிட்டால் பயன்பாடு மிகுவதற்கு வழியேற்படுகிறது. இவ்வகை மாற்றம் எதுவும் நிகழாதிருக்க வேண்டுமெனில் ரூபாயின் இறுதி நிலைப் பயன்பாடு எல்லாச் செலவினங்களிலும் சமமாக இருக்க வேண்டும் என்பது தெளிவு. இதனை மார்ஷல் பின்வருமாறு கூறுவார் : 'பயன்துறைகள் பலவற்றில் ஆள இயல்கிற பொருளொன்று

ஒருவனிடம் இருக்குமானுல், எல்லாத் துறைகளிலும் சமமான பயன்பாடு கிடைக்கும் வகையில், அதனை, அவன் அவற்றிடையே பகிர்ந்திடுவான்.'

இங்கே ஒருண்மையைக் குறிப்பிட்டாக வேண்டும் மேலே, இறுதிநிலைப் பயன்பாடு சமமாக இருக்கிறது என்று சொல்லும் போது, A, B, C, என்ற பொருள்களின் பயன்பாடல்ல, அவற்றில் செலவிடும் பொதுவான பணத்தின்-அல்லது, இறுதிநிலை ரூபாயின்-பயன்பாடே சமமாக இருப்பதாகக் கொள்கிரும்.

ஒரு பொருளில் செலவிடும் பணத்தின் இறுதிநிலைப் பயன்பாட்டை எவ்வாறு கணக்கிடுவது என்ற வினு இங்கு எழுகிறது. பொருளின் இறுதிநிலைப் பயன்பாட்டை அதன் ரூபாய் விலை கொண்டு வகுத்தால் கிடைப்பதுதான் பணத்தின் - ரூபாயின் - இறுதிநிலைப் பயன்பாடு. எனவே, பல்வேறு பொருள்களில் செலவிடும் பணத்தின் இறுதிநிலைப் பயன்பாடு சமமாயிருக்க வேண்டும் என்று சொல்லும் போது சமன்பாடொன்று இவ்வாறு உருவாகிறது :[1]

$$\frac{\text{A-இன் இறுதிநிலைப் பயன்பாடு}}{\text{A-இன் விலை}} = \frac{\text{B-இன் இறுதிநிலைப் பயன்பாடு}}{\text{B-இன் விலை}}$$
$$= \frac{\text{C-இன் இறுதிநிலைப் பயன்பாடு}}{\text{C-இன் விலை}}$$

இந்தச் சமன்பாடு தேவை விதிக்கு ஆதாரமாக இருக்கிறது என்பதை இங்குக் கவனிக்க வேண்டும். A-இன் விலை இறங்கினுல் என்ன நிகழும் எனப் பார்ப்போம். இப்போது A-இன் இறுதிநிலைப் பயன்பாட்டை A-இன் விலை கொண்டு வகுத்தால் கிடைக்கும் ஈவு, பிற இரண்டு பொருள்களதும் இறுதிநிலைப் பயன்பாடுகளை அவ்வவற்றின் விலை கொண்டு வகுத்தால் கிடைக்கும் ஈவுகளை விடக் கூடுதலாகி விடுகிறது. எனவே, சமநிலை பிறழ்கிறது. A-இல் செலவிடும் இன்னொரு ரூபாயிலிருந்து பெறமுடிகிற பயன்பாடு, பிற இரண்டிலும் செலவிடப் பெறுகிற இறுதி ரூபாயிலிருந்து பெற முடிகிற பயன்பாட்டை விட உயர்ந்த வீதத்தில் இருக்கிறது. எனவே, A-இல் இன்னும் மிகுதியாகச் செலவிடுவதால் நிறைவு மிகுவதற்கு வாய்ப்பிருக்கிறது. A-இன் விலை இறங்கினுல், அதன் தேவை இயல்பாகவே, இவ்வாறு பெருகுகிறது.

[1] வேறு சொற்களில் கூறுவதானுல், பொருள்களின் இறுதிநிலைப் பயன்பாடுகள் அவற்றின் விலைகளுக்கு இடையேயுள்ள விகிதத்திற்கேற்ப அமைய வேண்டும். A-இன் விலை ரூ. 2, B-இன் விலை ரூ. 1, C-இன் விலை ரூ. 0·50 என்றவாறிருந்தால், A-இன் இறுதிநிலைப் பயன்பாடு, B-இன் இறுதிநிலைப் பயன்பாட்டைப் போல் இரண்டு மடங்காகவும், C-இன் இறுதிநிலைப்பயன்பாட்டைப் போல் நான்குமடங்காகவும் இருக்க வேண்டும்

இவ்விதி சுட்டும் உண்மையை ஒரு வரைபடத்தின் மூலமும் விளக்கிக் காட்ட முடியும்:




படத்தில் நுகர்வோன் வருமானம் $0\,0^1$. A-இலும் B-இலும் இவ்வருமானத்தைச் செலவிடும் போது கிடைக்கும் பயன்பாடு கீழ் நோக்கிச் செல்லும் இரு கோடுகளின் வழியாகச் சுட்டிக் காட்டப் படுகிறது. (ஒப்பு நோக்குவதற்கு எளிதாயிருக்கும் என்ற நோக்கில் B-இன் பயன்பாடு சற்று மாறியதொரு முறையில் வரைந்து காட்டப் பட்டுள்ளது). சம இறுதிநிலைப் பயன்பாட்டு விதியின்படிச் செய லாற்றும் போது, நுகர்வோன் A-இல் OM-உம், B-இல் $O^1M$-உம் செலவிட வேண்டும். அப்போது, இரண்டிலும் செலவிடும் ரூபாயின் இறுதிநிலைப் பயன்பாடு (MN) சமமாக இருக்கிறது. இதற்கு மாறாக, A-இல் குறைவாகவும் ($OM^1$), B-இல் மிகுதியாகவும் ($O^1M^1$) செல விட்டால், A-இல் ரூபாயின் இறுதிநிலைப் பயன்பாடு $M^1N^1$ ஆகவும், B-இல் ரூபாயின் இறுதிநிலைப் பயன்பாடு $M^1P$ ஆகவும் இருக்கிறது. இப்போது, B-இலிருந்து மாற்றி A-இல் மிகுதியாகச் செலவிடப் பெறும் ஒவ்வொரு ரூபாயும், B-இலிருந்து பெற முடிகிறதை விட மிகுதியாகப் பயன்பாடு தருவது தெளிவு. எனவே, A-லும், B-இலும் செலவிடுகிற ரூபாயின் இறுதிநிலைப் பயன்பாடு சமமாக இருக்கும் வகையில் செலவுத் திட்டத்தை அமைப்பதொன்றே நிறைவை மிகவுர்ந்த அளவினதாக்கும் என்பது நிறுவப் பெறுகிறது.

இவ்விதி முதன்மையானதொரு விதி. இவ்விதியின்படி செயற் படும் போது தான் நிறைவு மிகவுயர்ந்த அளவினதாகும். ஆதலால் இதனை 'மிகவுயர்ந்த அளவு நிறைவு விதி'( Law of Maximum Satisfaction) என்று சொல்வதுண்டு. 'பதிலீட்டு விதி'(Law of Subs-

titution) என்பது இவ்விதியின் மற்றொரு பெயர். மிகவுயர்ந்த அளவு நிறைவு பெறும் வகையில் ஒரு பொருளுக்குப் பதிலாக மற்றொரு பொருளை இடுவதாலேயே இதற்கு இப்பெயர் இடப்பட்டுள்ளது.[1]

இவ்விதியிலும் சில குறைபாடுகள் உள்ளன. இறுதிநிலைப் பயன்பாட்டையே அளவிட்டு அறியமுடியாத போது அவற்றை எப்படிச் சமன்படுத்த முடியும் என்பது முதல் ஐய வினா. இரண்டாவதாக, இவ்வளவு நுட்பமாக ஒவ்வொரு பொருளின் இறுதிநிலைப் பயன்பாட்டையும் மனிதன் எடைபோட்டுப்பார்ப்பானா என்பதும் ஐயமே. அறியாமை காரணமாக, நுகர்வோரில் பலர் விலையையோ, அல்லது குறிப்பிட்ட அளவு செலவீட்டிலிருந்து பெறும் நிறைவின் தீவிரத்தையோ அறியாதவர்கள் ஆகலாம். மேலும், சில பொருள்கள் பழக்க வழக்கத்தாலும், சமூக நியதிகளாலும் வாழ்வின் பிரிக்க முடியாத பகுதிகள் ஆகிவிட்டன. பிறப்பு, இறப்பு, மணவினைச் சடங்குகளில் நம் நாட்டில் செய்கிற செலவினங்கள் இவ்வகைப் படுவன ஆகும். இவற்றின் இறுதிநிலைப் பயன்பாடு சிறிதாக இருந்தாலுங் கூட இச்செலவீடுகளைத் தவிர்ப்பதென்பது பெரும்பாலும் இயலாதவொன்றாகவே இருக்கிறது. இறுதிநிலைப் பயன்பாடுகளைச் சமன்படுத்த உதவும் வகையில் பொருள்களைத் துண்டு போட முடியுமா என்பது இனனொரு சிக்கல். பழம் வாங்குவதிலிடும் ஒரு ரூபாய்ச் செலவை, மிகவுயர்ந்த அளவு நிறைவு கருதி வீடு வாங்குவதிலும், மகிழ்ந்து வாங்குவதிலுமாகச் செலவிட இயல்வதில்லை. ஒருவனால் ஒரு வீடு முழுவதையும் வாங்க முடியும்; வீட்டில் 1/10000 பகுதியை வாங்க முடியுமோ! இயல்பாகவே சேர்த்து நுகரப் பெறும் பொருள்களிடையே யுள்ள உறவையுங் கருத வேண்டியுள்ளது. இரு பொருள்களும் (சோடிச் செருப்புக்களைப் போல) நிரப்புப் பொருள்களாயிருந்தால், இரண்டையும் முடிவான சில விகிதங்களிலேயே

[1] பதிலீட்டு விதி பொருளியலின் எல்லாத் துறைகளிலும் பொதுவிதியாகத் திகழ்கிறது. உற்பத்தியாளன் உற்பத்திக் காரணிகளைச் சேர்த்தாளும் போது இவ்விதியின் படியே செயற்படுகிறான். உற்பத்தித் திறனை மிகவுயர்ந்த அளவினதாக ஆக்க வேண்டுமெனில் ஒரு காரணிக்குப் பதிலாக இன்னொன்றை ஆளவேண்டி ஏற்படும். உழைப்புக்குப் பதிலாக முதலை இட்டால் ஆதாயம் பெருக வகையுண்டு எனில் அவ்வாறே செய்கிறான். ஆனால், ஒரு கட்டத்தில் அப் பதிலீட்டு வினை நிறுத்தப்படுகிறது. ஒவ்வொரு காரணியிலும் செலவிடுகிற இறுதி ரூபாய் சமமான வருவாயைத் தரும்போதே பதிலீட்டுக்கு முடிவு ஏற்படுகிறது.

மாற்றிலும் பதிலீட்டு விதிக்கு இடமுண்டு. ஒருவன் தன்னிடம் ஏராளமாயிருப்பதைக் கொடுத்து விட்டு, அரிதாயிருப்பதை வாங்குகிறான். கொடுத்து வாங்கப்பெறும் பொருள்களின் இறுதிநிலைப் பயன்பாடு சமமாவது வரை இக்கொடுக்கல் வாங்கல் தொடரும்.

பகிர்விலும் இவ்விதி செயற்படுகிறது. ஒவ்வொரு காரணிக்கும் ஊதியம் அவற்றின் இறுதிநிலை வினைத்திறனையே பொருத்துள்ளது. தான் கொடுக்கும் ஊதியமும், குறிப்பிட்ட காரணியின் இறுதிநிலை வினைத்திறனும் சமமாவது வரை தொடர்ந்து அதனை ஒருவன் ஆள்கிறான். இதனிலும் மிகுதியான ஊதியம் நல்க வேண்டி ஏற்பட்டால், அக் காரணிக்குப் பதிலாகப் பிறவற்றை இடுகிறான்.

சேர்த்து நுகர முடியும். மாருக, இரு பொருள்களும் (தேயிலையும் காப்பியும் போல) போட்டிப் பொருள்களாயிருந்தால், நுகர்வோன் இரண்டுக்குமிடையே வேறுபாடு காட்ட வேண்டியதில்லை. மேலும், சம இறுதிநிலைப் பயன்பாட்டு விதி, நுகர்வோனின் வரவு செலவுத் திட்டம் குறிபிட்டவொரு கால வரையறைக்குள் செயற் படுவதாகக் கற்பித்துக் கொள்கிறது. ஆனுல், நெடு நாள் உழைக்கும் (மேசை, நாற்காலி போன்ற) பொருள்களை வாங்கும் போது, அவற்றிலிருந்து கிடைக்கும் பயன்பாடு அந்தக் காலக்கூறில் மட்டுமல்ல, தொடர்ந்து வரும் காலக் கூறுகளிலும் நுகரக் கிடைக்கிறது. இது மற்றுமொரு சிக்கல். இறுதியாக, இன்றைய உலகில், சர்வாதீன உற்பத்தி, விளம்பரங்கள் போன்றவற்ருல், நுகர்வோன் பதிலீடு செய்வதற்குத் தன்னுரிமை யற்றவனுயுள்ளான் என்பதையுங் கவனிக்க வேண்டும்.

எவ்வாருயினும், இறுதிநிலைப் பயன்பாட்டு விதி சுட்டும் ஓர் உண்மையை மறக்க முடியாது: ஒருவன் தன்னுடைய பல்வேறு விருப்பங்களையும் அவற்றின் தராதர முதன்மைக்கேற்ப வரிசைப் படுத்தி, மிகத்தீவிர விருப்பங்களை முதலிலும், தீவிரங் குறைந்த விருப்பங்களைத் தொடர்ந்து வரிசையாகவும் நிறைவேற்றும் வகையில் தன்னிடமுள்ள வழிவகைகளைச் செல விடுகிருன் என்பதே அவ்வுண்மை. எனவே, சாப்மன் (Chapman) என்பார் கூறுவது போல, 'காற்று வெளியில் எறியப்பெற்ற ஒரு கல், ஒரு வகையில், மண்ணை நோக்கி வீழ்ந்தாக வேண்டும் என்று வற்புறுத்தப்படுவது போல, பதிலீட்டு, அல்லது சம இறுதிநிலைச் செலவீட்டு விதியின் படி நம்முடைய வருமானங்களைப் பகிர்ந்தாகவேண்டும் என்று வற்புறுத்தப் படவில்லை தான்; ஆனுல் நாம் அனைவரும் விவேகமுள்ளவர்களாக இருப்பதால், குறிப்பிட்ட அளவு திருத்தமாக இல்லாமலே, உண்மையில், அப்படித்தான் செயல் படுகிருேம்.'

# 3. சமநோக்கு வளைகோடுகள்

ஜெவான்ஸ் முதல் மார்ஷல் ஈருகவுள்ள நூலாசிரியர்கள் நுகர்வோர் நடத்தையைப் பயன்பாட்டுக்கோட்பாட்டின் துணைகொண்டே விளக்கிவந்தனர். இவ்விளக்கத்தில் முக்கியமாக மூன்று குறைபாடுகள் இருப்பதாகத் தற்கால ஆசிரியர்கள் கருதுகின்றனர்.

பழங்கால ஆசிரியர்கள் விளக்கம் நுகர்வோன் குறிப்பிட்டவொரு பொருளில் மட்டும் நாட்டஞ் செலுத்துவதாகக் கருதி வந்தது. ஆனால், நடைமுறையில், நுகர்வோன் குறிப்பிட்டவொரு பொருளை மட்டுமல்ல, பொருள்களின் குறிப்பிட்ட சேர்மானங்களிலேயே நாட்டஞ் செலுத்துகிறான். குறிப்பிட்ட நேரத்தில், இத்தனை மாங்கனிகள் என்றல்ல, இத்தனை மாங்கனிகளுடன் இவ்வளவு சோறும், இத்துணைப் புகையிலையும் சேர்ந்தவொரு பொருள்கள் சேர்மானம் வேண்டுமென்றே நுகர்வோன் விரும்புவான். இம்முறையில் நுகர்வோன் நடத்தை விளக்கப்பட்டால் தான் அது நடைமுறைக்குப் பொருத்தமாயிருக்கும்.

பயன்பாட்டை ஒன்று, இரண்டு, மூன்று என எண்ணல் அளவைப்படிக் கணக்கிட முடியாது என்பது இக்கால ஆசிரியர்கள் குறிப்பிடும் இன்னொரு குறைபாடு. பயன்பாட்டை அளவிட்டறிய முடியும் என்று சொல்லும் போதெல்லாம், பயன்பாட்டின் பல்வேறு மட்டங்களை முதலாவது, இரண்டாவது, மூன்றாவது என அடுக்கல் அளவைப்படி வரிசைப் படுத்திக் காட்ட முடியும் என்று கொள்வதே பொருத்தமாயிருக்கும் என்பது இவ்வாசிரியர்கள் கருத்து. குறிப்பிட்ட பொருள்கள் சேர்மானத்திலிருந்து பெறும் பயன்பாடு, இன்னொரு சேர்மானம் அதே பொருள்களிலிருந்து பெறும் பயன்பாட்டுக்குக் குறைவாகவோ, மிகுதியாகவோ, அல்லது சமமாகவோ இருப்பதாகச் சொல்ல முடியும். இவ்வாறு இரு சேர்மானங்களிலிருந்து பெறும் பயன்பாடு கூடுதல் குறைவாக இருக்கிறது என்று சொல்லும்

போது கூட, அக் கூடுதல் குறைவு எவ்வளவு என்று சொல்ல முடியாது. 3 மாங்கனி+2 தட்டுச் சோறு என்ற சேர்மானம் தரும் பயன்பாடு, 2 மாங்கனி+2 தட்டுச் சோறு என்ற சேர்மானம் தரும் பயன்பாட்டை விட மிகுதியாக இருக்கலாம். (முதல் சேர்மானத்தில் கூடுதலாக ஒரு மாங்கனி கிடைப்பது தான் இதற்குக் காரணம்). ஆனால், எவ்வளவு மிகுதியாகக் கிடைக்கிறது என்று அளந்து சொல்ல முடியாது. இவ்வாறு, பல்வேறு பயன்பாட்டு மட்டங்களை ஒப்பிட்டு வரிசைப் படுத்துவதன் வழியாகவே நுகர்வின் அடிப்படைக் கோட்பாடுகளை விளக்க முடியும் என்பது இக்கால ஆசிரியர்கள் கருத்து.

இறுதியாகப், பயன்பாட்டுக் கோட்பாட்டின் துணை கொண்டு நுகர்வோன் செயல் வகையை விளக்கும் போது, வருமானத்தின் இறுதிநிலைப் பயன்பாடு மாறுதிருக்கிறது என எடுத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. மாங்கனி விலை 40 காசாக இருந்தால் 4 கனிகள் வாங்குவானெனில், நுகர்வோன் மாங்கனியிலிடும் ஆகமொத்தச் செலவு ரூ. 1·60. நுகர்வோன் மொத்த வருமானமே இந்த ரூ. 1·60 என வைத்துக் கொள்வோம். இப்போது, முதல் மாங்கனிக்குத் தன்னிடமிருக்கும் ரூ. 1.60 வருமானத்திலிருந்து 40 காசு தருகிறான். ஆனால், இரண்டாம் மாங்கனியை வாங்கும் போதோ, தன்னிடம் அப்போது மீந்திருக்கும் ரூ. 1.20 வருமானத்திலிருந்து 40 காசு தருகிறான். இப்போது இரண்டு மாங்கனிகளுக்கும் தந்ததென்னமோ 40, 40 காசுகள் தாம். ஆனால் ரூ. 1.60 ல் உள்ள 40 காசும், ரூ 1.20 இலுள்ள 40 காசும் ஒரே அளவு பயன்பாட்டைத் தருவதாகச் சொல்ல முடியாது. குறைந்து செல் பயன்பாட்டு விதி பணத்துக்கும் பொருந்துவதால், மேலே குறிப்பிட்ட இரண்டாவது 40 காசு மிகுதியாகப் பயன்பாடு தந்தாக வேண்டும். எனவே, ஒரு பொருளை ஒருவன் தொடர்ந்து வாங்கும் போது, பொருளின் கையிருப்புப் பெருகுவதால் அதன் இறுதிநிலைப் பயன்பாடு குறைந்து செல்வதைப் போன்று, அதே நேரத்தில் நுகர்வோனது வருமானம் குறைந்து செல்வதால் அதன் இறுதிநிலைப் பயன்பாடு வளர்ந்து செல்வதும் இயல்பானதாகிறது. இந்நிலையில், பொருள்கள் சேர்மானங்களை நுகர்வோன் வாங்கும் போது, அதனால் வருமானத்தில் ஏற்படும் விளைவுகளையும் சேர்த்து ஆராய வேண்டும். அப்போது தான் நுகர்வோன் நடத்தை பற்றிய கோட்பாடுகள் சரி நுட்பமாயிருக்க முடியும்.[1]

[1] பயன்பாட்டுக் கோட்பாட்டின் இம்மூன்றுவது குறைபாட்டை உணர்ந்தவராக, மார்ஷல், தம் விளக்கம் முக்கியமானதோர் எடுகோள்களின் அடிப்படையிலேயே நிறுவப்படுவதாகச் சொல்வார். நுகர்வோர், பொருளை மிகச்சிறிய அலகுகளாகத் தொடர்ந்து

இம் மூவகைத் திருத்தங்களையும் அறிமுகப்படுத்தி, பரீட்டோ (Pareto), ஹிக்ஸ் (Hicks), ஆலன் (Allen) போன்ற ஆசிரியர்கள் நுகர்வு பற்றிச் 'சம நோக்கு வளைகோடுகள்' (Indifference Curves) என்ற புதிய கோட்பாடொன்றைத் தந்துள்ளனர்.

நுகர்வோன் ஒருவன், தான் விரும்புகிற பல்வேறு பொருள்களின் சேர்மானங்களை, அவற்றின் முக்கியத்துவத்தை யொட்டி வரிசைப்படுத்திச் சொல்ல முடியும். எளிமை கருதி, நுகர்வோன் x, y, என்ற இருபொருள்களை விரும்புவதாக வைத்துக் கொண்டு, அவற்றின் பல்வேறு சேர்மானங்கள் பற்றிய அவனது விருப்பத்தராதரத்தைக் கீழ் வருமாறு ஒரு பட்டியல் போட்டுக் காட்டலாம் :

| வளைகோடு I | வளைகோடு II | வளைகோடு III | வளைகோடு IV |
|---|---|---|---|
| 5y + 1x | 6·5y + 1x | 9·5y + 1x | 14y + 1x |
| 3″ + 2″ | 4 ″ + 2″ | 6 ″ + 2″ | 8″ + 2″ |
| 2″ + 3″ | 3 ″ + 3″ | 5 ″ + 3″ | 6·5″ + 3″ |
| 1″ + 6″ | 2 ″ + 6″ | 4 ″ + 6″ | 5″ + 6″ |
| 0·5″ + 10″ | 1·5″ + 10″ | 3 ″ + 10″ | 4″ + 10″ |

அட்டவணையில் முதல் பத்தியினுள் மேலிருந்து கீழாக x, y–ஆகியவற்றின் ஐந்து சேர்மானங்கள் தரப்பட்டுள்ளன. இவற்றுள் முதல் சேர்மானத்தில் 5y-உம் 1x-உம் கிடைக்க, இரண்டாம் சேர்மானத்தில் 2y குறைவாகக் கிடைக்கிற போதிலும் மிகுதியாகக் கிடைக்கும் 1x, அக்குறைவை ஈடுகட்டத் தக்கது என வைத்துக் கொண்டால், இவ்விரு சேர்மானங்களிலிருந்து நுகர்வோன் பெறும் நிறைவு சமமாகவே இருக்கும். இந்நிலையில், இவ்விரண்டு சேர்மானங்களில் குறிப்பிட்ட வொன்றை நுகர்வோன் விரும்பித் தேர்வதில்லை: இரண்டையும் அவன் சமமாகவே நோக்குகிறுன். இது போன்றதே முதல் பத்தியில் எஞ்சியிருக்கும் மூன்று சேர்மானங்களது நிலையும். இரண்டாம், மூன்றும், நான்காம் பத்திகளை எடுத்துக் கொண்டாலும், ஒவ்வொரு பத்தியினுள்ளும் மேலிருந்து கீழாகத் தரப்பட்டுள்ள ஐந்து சேர்மானங்களிலிருந்தும் நுகர்வோன் சமமான நிறைவையே பெறுகிறுன்; அதாவது அச்சேர்மானங்களைச் சமமாகவே நோக்குகிறுன்.

நுகர்கிறுர்என்பதே அந்தஅளடுகோள். இவ்வாறு நுகரும்போது, பொருளில் தொடர்ந்து இடுகிற செலவின் அளவு மிகக் குறைவாகவே இருக்கும். அந்நிலையில் வருமான அளவில் ஏற்படும் மாறுதல் மிகமிகச் சிற்றளவினதாகவே இருக்கும்; அதனுல் வருமானத்தின் பயன்பாட்டில் ஏற்படும் மாறுதல்கள் புறக்கணித்து விட்டதாகும் அளவுக்கு மிகச் சிற்றளவினதாகவே இருக்கும்.

ஆனால், முதல்பத்தியினுள்ளே தரப்பட்டுள்ள சேர்மானங்களும், இரண்டாம் பத்தியினுள்ளே தரப்பட்டுள்ள சேர்மானங்களும் சம நிறைவைத் தருவனவல்ல என்பதைக் கவனிக்க வேண்டும். இரண்டாம் பத்தியிலுள்ள ஒவ்வொரு சேர்மானத்திலும், முதல் பத்தியிலுள்ள ஒவ்வொரு சேர்மானத்தையும் விட மிகுதியாக y உள்ளது. எனவே, இரண்டாம் பத்தியிலுள்ள ஒவ்வொரு சேர்மானமும் முதல் பத்தியிலுள்ள ஒவ்வொரு சேர்மானத்தையும் விட மிகுதியான நிறைவையே தருகின்றன.[1] இப்போது, நுகர்வோன், இவ்விரண்டு பத்திகளிலுமுள்ள சேர்மானங்களைச் சமமாக நோக்க முடியாது. ஒன்றை - அதாவது, இரண்டாம் பத்தியிலுள்ளவற்றை - அவன் விரும்பித் தேர்வது இயல்பு. இதே உண்மை மூன்றும், நான்காம் பத்திகளில் தரப் பெற்றுள்ள சேர்மானங்களுக்கும் பொருந்தும்.

பத்திகள் சுட்டும் இந்த உண்மைகளை ஒரு வரை படத்தின் வழியாகவும் காட்டலாம்.




படத்தில் x பொருள் கிடைக்கோட்டிலும், y பொருள் செங்குத்துக் கோட்டிலும் காட்டப் பெறுகின்றன. முதல் பத்தியிலுள்ள 5 சேர்மானங்களையும் A, B, C, D, E, என 5 புள்ளிகள் காட்டி நிற்கின்றன. அப்புள்ளிகளை இணைக்கும் போது வளைகோடு I கிடைக்கிறது. இவ்வளைகோடு x, y பொருள்களின் குறிப்பிட்ட சேர்மானங்களைக் குறிப்பிடுகிறது. இச் சேர்மானங்களெல்லாம் சம நிறைவைத் தருகின்றன. இவ்வளைகோடு குறித்து நிற்கும் எல்லாச் சேர்மானங்களையும் நுகர்வோன் சமமாக நோக்குகிறன் என்பதே இதன்

[1] ஆனால் எவ்வளவு மிகுதியாகத் தருகிறது என்று சொல்லவில்லை.

பொருள். எனவே இவ்வளைகோடு சமநோக்கு வளைகோடு எனப் பெறும்.

II, III, IV எனக் குறிப்பிடப் பெற்றுள்ள பிற வளைகோடுகள், முறையே இரண்டாம் மூன்றும் நான்காம் பத்திகளில் தரப்பெற்றுள்ள சேர்மானங்களைக் குறித்து நிற்கின்றன. இரண்டாம் பத்தியில் தரப்பெற்றுள்ள ஒவ்வொரு சேர்மானமும், முதல் பத்தியில் தரப்பெற்றுள்ள ஒவ்வொரு சேர்மானத்தையும் விட மிகுதியான நிறைவைத் தருகின்றன. எனவே, சமநோக்கு வளைகோடு II சுட்டி நிற்கும் சேர்மானங்கள், சமநோக்கு வளைகோடு I சுட்டி நிற்கும் சேர்மானங்களை விட மிகுதியான நிறைவைத் தருகின்றன. மிகுதியான நிறைவைத் தரும் சமநோக்கு வளைகோடு II, முதல் வளைகோட்டுக்கு வலப்புறம் கிடக்கக் காண்கிறோம். இதிலிருந்து பொதுவானதோர் உண்மை புலப்படுகிறது. ஒன்றுக்கு மேற்பட்ட சமநோக்கு வளைகோடுகள் இருந்தால், குறிப்பிட்ட எந்த வொரு வளைகோட்டையும் விட, அதன் வலப்புறமுள்ள வளைகோடுகளெல்லாம் மிகுதியான நிறைவைக் காட்டி நிற்கின்றன.

இனி, இந்தச் சமநோக்கு வளைகோடுகளின் சில பண்புக் கூறுகளைப் பார்க்கலாம்.

1. சமநோக்கு வளைகோடுகள் எப்போதும் வலப்புறம் நோக்கிக் கீழே சரிந்து செல்கின்றன. ஒரு பொருளின் அளவு வளர்ந்து செல்லும் போது, அடுத்த பொருளின் அளவு குறைந்து செல்லாவிட்டால், நுகர்வோன் முந்திய சேர்மானத்திலும் விரும்பித் தேர்கிற புதியதொரு சேர்மானமே கிடைக்கும். பல்வேறு சேர்மானங்களிலிருந்து சம நிறைவு பெற வேண்டுமெனில் அவற்றில் ஒரு பொருளின் அலகுகள் மிகும்போது, அடுத்த பொருளின் அலகுகள் இன்றியமையாத படி குறைந்தாக வேண்டும். இதனால் சம நோக்கு வளைகோடுகள் வலப்புறம் நோக்கிக் கீழே சரிந்தாக வேண்டும்.[1]

2. ஒரு பொருளின் அலகுகள் மிகும்போது, அடுத்த பொருளின் அலகுகள் குறைந்து சென்றால் தான் நிறைவு சமமாக இருக்கும் என்று செல்லும்போது, அதன் கருத்து, அளவில் குறைந்து செல்லும் (y) பொருளுக்குப் பதிலாக, அளவில் வளர்ந்து செல்லும் (x)

[1] சமநோக்கு வளைகோடொன்று வலப்புறம் நோக்கி மேலே சரிந்து செல்வதாக வைத்துக் கொள்வோம். இப்போது, இவ்வளைகோட்டில் ஏதாவது இரண்டு புள்ளிகளை எடுத்துக் கொண்டால், அவையிரண்டும் சுட்டுகிற நிறைவு ஒருபோதும் சமமாயிருக்க முடியாது. சமநோக்குவளைகோடுகள் படுகிடையாகவோ. செங்குத்தாகவோ சென்றாலும் இதுவே நிலை. இவ்வுண்மைகளை அடுத்த பக்கத்திலுள்ள படங்கள் விளக்கத்தக்கன:

பொருளை இடுகிறோம் என்பது தான். சம நோக்கு வளைகோடுகள் கீழ்நோக்கிச் சரியக் காரணம் இப் பதிலீடுதான். சமநோக்கு வளை










கோடுகள் கீழ்நோக்கிச் சரிகிற போது, அவற்றின் வடிவம் நேர் கோடாகவோ, குழிவாகவோ இராது தோற்றுவாய் நோக்கிக் குவிந்திருக்கக் காண்கிறோம். இது, சமநோக்கு வளைகோடுகளின் இரண்டாவது பண்பாகும்.

ஒரு வளைகோட்டின் வடிவம் அதன் சரிவை-அல்லது சரிவு வீதத்தையே-பொருத்துள்ளது. சமநோக்கு வளைகோடுகள் சரியக் காரணம் பதிலீடு எனில், அச்சரிவின் வீதம் அப்பதிலீட்டின் வீதத்தையே சார்ந்திருப்பது தெளிவு. இன்னுமோர் அலகு x-ஐப் பெறுவதற்காக நுகர்வோன் இழக்கச் சித்தமாயுள்ள y-இன் அளவு தான் y-இன் இறுதிநிலைப் பதிலீட்டு வீதம். இந்த இறுதிநிலைப் பதிலீட்டு வீதத்தின் போக்கே சம நோக்கு வளைகோட்டின் சரிவையும் வடிவத்தையும் நிருணயிக்கிறது.

முன் அட்டவணையிலுள்ள பத்திகளை ஊன்றிப்படித்தால், இறுதிநிலைப் பதிலீட்டு வீதத்தின் இயல்பான போக்கைப் புரிந்துகொள்ள முடியும். முதல் பத்தியையே எடுத்துக் கொள்வோம் : அங்கே, 5y+1x முதல் சேர்மானம்; பின்னர் y-க்குப் பதிலாகத் தொடர்ந்து நுகர்வோன் x-ஐ இட்டு வருகிறான். தொடக்கத்தில் (இரண்டாம் சேர்மானத்தில்) ஒரு x, இரண்டு y-களை ஈடுசெய்யத்தக்கதா யிருக்கிறது, ஆனால் (மூன்றாம் சேர்மானத்தில்) அடுத்தவொரு x, ஒரு y-ஐ ஈடுசெ

முதல் படத்தில் A சேர்மானத்தில் கிடைப்பதை விட மிகுதியாக x-உம், y-உம் B சேர்மானத்தில் கிடைப்பதால் A-ஐயும் B-ஐயும் நுகர்வோனால் சமமாக நோக்கமுடியாது. இரண்டாம் படத்தில் A சேர்மானத்தில் கிடைப்பதை விட மிகுதியான x, B-சேர்மானத்தில் கிடைப்பதால் A-ஐயும் B-ஐயும் நுகர்வோனால் சமமாக நோக்கமுடியாது. இது போன்றே மூன்றும் படத்தில் B-சேர்மானத்தில் A-இல் கிடைப்பதைவிட மிகுதியாக y கிடைக்கிறது; இதனால் A-ஐயும் B-ஐயும் சமமாக நோக்கமுடியாது. எனவே சரியானதொரு சமநோக்கு வளைகோடு கீழ்நோக்கிச் சரிந்தாக வேண்டும் என்பது ஒருதலை.

யத் தக்கதாயிருக்கிறது. பின்னர் (நாலாம் சேர்மானத்தில்) அடுத்த மூன்று x-களும் ஒரு y-ஐ ஈடுசெய்யத் தக்கனவாகவேயுள்ளன. இறுதியில் (ஐந்தாம் சேர்மானத்தில்) அடுத்தநான்கு x-களும் அரை y-ஐத் தான் ஈடுசெய்யத் தக்கனவாகின்றன. y-இன் இறுதிநிலைப் பதிலீட்டு வீதத்தின் போக்கைக் கீழ்வரும் அட்டவணை தெளிவாக்குகிறது :

| சேர்மான எண் | சேர்மான விளக்கம் | y இன் இறுதிநிலைப் பதிலீட்டு வீதம் |
|---|---|---|
| 1 | 5y + 1x | — |
| 2 | 3" + 2" | 2 : 1 (1x = 2y) |
| 3 | 2" + 3" | 1 : 2 (1x = 1/2 y) |
| 4 | 1" + 6" | 1 : 3 (1x = 1/3y) |
| 5 | 0·5" + 10" | 1/2 : 4 (1x = 1/8y) |

இவ்வாறு x-இன் கையிருப்பு மிகமிக, ஓர் அலகு x-க்கு மாற்றாக, நுகர்வோன் இழக்கச் சித்தமாயிருக்கிற y-இன் அளவு குறைகிறது.



அதாவது, y-க்குப் பதிலாக x-ஐ இடும் போது, y-இன் இறுதிநிலைப் பதிலீட்டு வீதம் குறைந்து செல்கிறது.[1] இதனால் தான் சமநோக்கு வளைகோடுகள் தோற்றுவாய் நோக்கிக் குவிந்திருக்கின்றன.

அடுத்துள்ள படத்தில் x-இன் $MM^1$, $M^1M^2$, $M^2M^3$, $M^3M^4$ அலகுகள் சம அளவின. இவை ஒவ்வொன்றும் தொடர்ந்து ஈடு செய்ய முடிகிற y-இன் அடுத்தடுத்த அளவுகள் முறையே $NN^1$, $N^1N^2$, $N^2N^3$, $N^3N^4$ என்பவை: இவை ஒவ்வொன்றும் தொடர்ந்து ஒன்றைவிட ஒன்று குறைந்த அளவினதாக இருப்பதிலிருந்து, ஓரேயளவினதான x அலகுகள், குறைந்து செல் அளவினதான y அலகுகளையே ஈடு செய்யத் தக்கன என்பது தெளிவாகிறது. இதனால், சம நோக்கு வளைகோடுகள் தோற்றுவாய் நோக்கிக் குவிந்திருக்கும் இயல்பின என்பதும், அவ்வியல்புக்குரிய காரணமும் தெளிவாகின்றன.[2]




முதல் படத்தில் சமநோக்கு வளைகோடு நேர்கோடாயிருந்தால் பதிலீட்டு வீதம் மாறாதிருக்கும் என்பது புலப்படும். x அலகுகளின் அளவு மட்டுமல்ல, அவை ஈடு செய்யும் y அலகுகளும் சம அளவின

[1] இதற்குக் காரணம் x மிகமிக அதன் இறுதிநிலைப் பயன்பாடு குறைவதும், y குறையக் குறைய அதன் இறுதிநிலைப் பயன்பாடு உயர்வதும் தான். இவ்வாறு, இவ்விளக்கத்தில் குறைந்து செல் பயன்பாட்டு விதியின் உண்மை புலப்படக் காணலாம்.

[2] சமநோக்கு வளைகோடுகள் தோற்றுவாய் நோக்கி குவிந்திராவிட்டால் என்ன நடக்கும் என்பதை அடுத்த பக்கத்திலுள்ள படங்கள் விளக்குகின்றன.

தாகவே உள்ளன. இதன் பொருள் y-இன் பதிலீட்டு வீதம் மாறு திருக்கிறது எனபது தான். இரண்டாவது படத்தை எடுத்துக் கொண்டால், அங்கே, ஒரே அளவினதாக இருக்கும் x-இன் அடுத் தடுத்த அலகுகள் தொடர்ந்து மிகுதியான y அலகுகளை ஈடுகட்டத் தக்க தாயிருப்பது புலப்படும். இங்கே இறுதிநிலைப் பதிலீட்டு வீதம் வளர்ந்து செல்கிறது ; அதனால், சமநோக்கு வளைகோடு குழிந்திருக் கிறது.

3. இரண்டு சம நோக்கு வளைகோடுகள் ஒன்றை யொன்று வெட்டா என்பது இன்னொரு பண்புக் கூறுகும். அடுத்துள்ள




படத்தில் இரண்டு சம நோக்கு வளைகோடுகள் ஒன்றை யொன்று வெட்டினுல் என்ன நிகழுமென்பது விளக்கப் பெறுகிறது. A, C- எனும் இரண்டு சேர்மானங்கள் சம நோக்கு வளைகோடு I-இல் உள்ளன. இவை முறையே O N அலகு Y+OM அலகு X, $ON^2$ அலகு Y+$OM^1$ அலகு x ஆகிய இரு சேர்மானங்களிலிருந்து பெறும் நிறைவு சமமெனச் சொல்கின்றன. இனி, சமநோக்கு வளைகோடு II-இல் A, B எனும் இரு சேர்மானங்கள் உள்ளன. இவை, முறை யே ON அலகு Y+OM அலகு x, $ON^1$ அலகு Y+$OM^1$ அலகு x ஆகிய இரு சேர்மானங்களிலிருந்து பெறும் நிறைவு சமமெனச் சொல்கின்றன. இதனால்,

$$ON+OM = ON^2+OM^1$$
$$ON+OM = ON^1 + OM^1$$

∴ $ON^2 + OM^1 = ON^1 + OM^1$

∴ $ON^2 = ON^1$ – என்ற விந்தையான முடிவுக்கு வரவேண்டி ஏற்படும் : இது நடவாத ஒன்று : $ON^1$ அலகு Y, $ON^2$ அலகு Y-ஐவிட விரும்பத்தக்கது. எனவே, சமநோக்கு வளைகோடுகள் ஒன்றையொன்று வெட்டா.

நுகர்வோன் எவ்வாறு சமநிலை எய்துகிறுன் என்பதை இந்தச் சமநோக்கு வளைகோடுகளின் துணை கொண்டு இனிப் பார்க்க வேண்டும்.

இரு பொருள்களின் பல்வேறு சேர்மானங்களி லிருந்து நுகர்வோன் பெறும் நிறைவு பற்றியும் அவன் விருப்பத் தேர்வு பற்றியுமே சமநோக்கு வளைகோடுகள் பேசுகின்றன. இச்சேர்மானங்களில் நுகர்வோன், எதனைக் குறிப்பிட்ட நேரத்தில் தேர்ந்தெடுப்பான் என்பது வேறிரு காரணிகளைப் பொருத்துள்ளது. நுகர்வோன் வருமானமும், பொருள்கள் விலையுமே அவ்விரு காரணிகள். எனவே, சமநோக்கு வளைகோடுகளின் துணை கொண்டு நுகர்வோன் ஒழுகலாற்றினை விளக்கவேண்டுமெனில், இவ்விரு காரணிகளையும் சமநோக்குப் படத்தினுள் கொண்டுவர வேண்டும். விலைவீதக் கோடொன்றைப் புகுத்துவதன் வழியாக இது இயலும்.

நுகர்வோன் வருமானம் ரூ. 6 ஆக வரையறுக்கப் பட்டிருப்பதாக வைத்துக் கொள்வோம். இவ் வருமானத்தைக் கொண்டு x, y இரு பொருள்களை வாங்க இருப்பதாக வைத்துக் கொள்வோம். x-இன் விலை ரூ. 2 என்றும் y-இன் விலை ரூ. 1 என்றும் வைத்துக் கொண்டால், நுகர்வோன் தன் வருமானம் முழுதையும் x-இல் செலவிட்டால் 3 அலகு x மட்டும் வாங்கலாம் ; y-இல் செலவிட்டால் 6 அலகு y மட்டும் வாங்கலாம் ; இரு பொருள்களிலும் பகிர்ந்து செலவிட்டால், கீழ் வரும் சேர்மானங்களை வாங்கலாம் :

| X | | Y |
|---|---|---|
| 3 | + | 0 |
| 2 | + | 2 |
| 1 | + | 4 |
| 0 | + | 6 |

இதனையும் ஒரு கோடாக உருவாக்கலாம். செங்குத்துக் கோட்டில் y-உம், கிடைக்கோட்டில் x-உம் குறிப்பிடப் பட்டுள்ளன. LM கோடு, கையிலிருக்கிற (ரூ. 6) வருமானத்தைக் கொண்டு, நடப்பு விலையில் வாங்க முடிகிற x, y இரு பொருள்களுடைய பல்

வேறு சேர்மானங்களைக் குறிக்கிறது. இக்கோட்டில் N, S என்ற இரு புள்ளிகளை எடுத்துக் கொண்டால், இவற்றில், முறையே 4y+1x-உம், 2y+2x-உம் சேர்மானங்களை நுகர்வோன் வாங்க முடியும் என்பது தெரிகிறது. இக்கோடு விலைவீதக் கோடு எனப் பெறும்.[1] இக்கோட்டின்சரிவு x பொருளின் விலைக்கும், y பொருளின் விலைக்கும்




இடையேயுள்ள வீதத்தையே சார்ந்துள்ளது. பொருள்களின் விலை மாறும் போது இவ்வீதமும் அதையொட்டி மாற, விலைவீதக் கோட்டின் சரிவும் இன்றியமையாத படி மாறிவிடும்.

அடுத்துள்ள படத்தில், மேலே கண்ட விலைவீதக்கோடொன்று (L M) ஒரு சமநோக்கு வளைகோடு படத்தில் புகுத்தப் பட்டுள்ளது. L M கோடு, நடப்பு விலையில், இருக்கிற வருமானத்தைக் கொண்டு,

[1] இவ் விலைவீதக்கோடும் பொருள்களின் பல்வேறு சேர்மானங்களைச் சுட்டிக் காட்டுகிறது; சமநோக்கு வளைகோடுகளும் பொருள்களின் பல்வேறு சேர்மானங்களைத் தான் சுட்டிக் காட்டுகின்றன. ஆனால், இவற்றிடையே மிக முக்கியமான வேறுபாடொன்று உண்டு. சமநோக்கு வளைகோடுகள் சுட்டும் சேர்மானங்கள் குறிப்பிட்ட அளவு நிறைவைச் சுட்டிக்காட்டுகின்றன. ஆனால், விலைவீதக் கோடு சுட்டும் சேர்மானங்களோ நடப்பு விலையில் வாங்க முடிகிற இருபொருள்களின் சேர்மானங்களை மட்டுமே சுட்டிக் காட்டுகின்றன; அச்சேர்மானங்களிலிருந்து பெறமுடிகிற நிறைவைப் பற்றி எதுவுங் கூறவில்லை, சமநோக்கு வளைகோடுகளை வரையும்போது, குறிப்பிட்ட பொருள்களின் விலைமட்டத்தைக் கருதவில்லை என்பதும் இங்குக் கருதத்தக்கது,

நுகர்வோனுல் வாங்க முடிகிற x, y-இரண்டினதும் பல்வேறு சேர் மானங்களைக் காட்டி நிற்கிறது. I, II, III எனக் குறியிடப் பெற் றுள்ள சமநோக்கு வளைகோடுகளோ x, y இரண்டினதும் பல்வேறு சேர்மானங்களிலிருந்து நுகர்வோன் பெறுகிற நிறைவைச் சுட்டிக் காட்டுகின்றன. N புள்ளி குறிப்பிடும் x, y சேர்மானத்தை வாங்கும் போது நுகர்வோன் குறிப்பிட்ட அளவு நிறைவு பெறுகிருன் என் பதை அப்புள்ளியைத் தன்னிடம் கொண்டிருக்கும் சமநோக்கு வளை




I சொல்கிறது. ஆனுல், N புள்ளியிலிருந்து P புள்ளிக்குச் சென்ருல், (அதாவது, அப்புள்ளி குறித்து நிற்கும் OT அலகு Y+OR அலகு x வாங்கினுல்) அவன் பெறும் நிறைவை, அப்புள்ளியைத் தன்னிடம் கொண்டிருக்கும் சமநோக்கு வளைகோடு II சொல்கிறது. சமநோக்கு வளைகோடு II-இல் P புள்ளி இருப்பதால், இப்போது நுகர்வோன் பெறுகிற நிறைவு, வளைகோடு I-இல் உள்ள N புள்ளியில் பெற முடிந்ததை விட, மிகுதியாயிருக்கும் என்பது உறுதி.[1] வேறு சொற்களில் கூறுவதானுல், N புள்ளி சுட்டும் x, y சேர்மானங்களை விட, P புள்ளி சுட்டும் x, y சேர்மானங்கள் மிகுதியான நிறைவைத் தருகின்றன. P புள்ளியுடன் நில்லாது, தொடர்ந்து வாங்கி S புள்ளி யை நுகர்வோன் எட்டிவிட்டால் (அப்புள்ளி சமநோக்கு வளைகோடு I-இல் இருப்பதால்) நிறைவு குறைய முற்படுகிறது. எனவே, OT அலகு Y+OR அலகு x வாங்கும் போது தான் நுகர்வோன் நிறைவு

[1] சமநோக்கு வளைகோடு II, சமநோக்கு வளைகோடு I-இன் வலப்புறம் இருப்ப தால் முந்திய வளைகோடு சுட்டும் சேர்மானங்களெல்லாம் பிந்திய வளைகோடு சுட்டும் சேர்மானங்களை விட மிகுதியான அளவு நிறைவைத் தருகின்றன.

மிகவுயர்ந்த அளவினதா யிருக்கும்.[1] இங்கு, N-க்கும் S-க்கும் இல்லாத எந்தத் தனித்தன்மை P-க்கு இருக்கிறதெனப் பார்க்க வேண்டும். P-இல் விலை வீதக்கோடு சமநோக்கு வளைகோடொன்றைத் தொட்டு நிற்கிறது. அதாவது, இரண்டு கோடுகளுடைய சரிவுகளும் அங்குச் சமமா யுள்ளன. சற்று விளக்கமாகச் சொல்வதானால், விலை வீதக் கோட்டின் சரிவு சுட்டும் பொருள்களின் விலை வீதமும், சமநோக்கு வளைகோட்டின் சரிவு சுட்டும் பொருள்களின் இறுதிநிலைப் பதிலீட்டு வீதமும் சமமாயுள்ளன. இந்நிலையில் தான் நுகர்வோன் சமநிலை அடைகிறான்.[2]

இந்தச் சமநிலை மாறுவதற்கு இரண்டு காரணங்களே இருக்க முடியும்.[3] 1. நுகர்வோன் வருமானத்தில் ஏற்படும் மாறுதல்கள் ; 2. குறிப்பிட்ட பொருள்களி னுடைய விலைகளில் ஏற்படும் மாறுதல்கள்.

x, y பொருள்களின் விலைகள் மாறாதிருக்க, நுகர்வோன் வருமானத்தில் மாறுதல் உண்டானால் அதனாலேற்படும் விளைவுகளை அடுத்துள்ள படத்தின் துணைகொண்டு ஆராயலாம். இங்கே LM விலை வீதக் கோடாக இருக்கும் போது, நுகர்வோன் P-யில் சமநிலை அடைகிறான். அடுத்து அவனது வருமானம் மிகுவதாக வைத்துக் கொள்வோம். இப்போது, வருமானம் முழுவதையும் x-இல் செலவிட்டால் $OM^1$-உம், y-இல் செலவிட்டால் $OL^1$-உம் வாங்க முடியும். பொருள்களின் விலையில் மாறுதல் எதுவும் இல்லையாதலால், புதிய விலை வீதக் கோடாகிய $L^1 M^1$ முன்னைய விலை வீதக் கோடாகிய LM-க்கு இணையாகச் சமதூரக் கோடா யுள்ளது.[4] இப்போது, நுகர்வோன் $P^1$-இல் சமநிலை அடைகிறான். இவ்வாறு, வருமானம்

[1] படத்தில் சமநோக்கு வளைகோடு III மிகவுயர்ந்த அளவு நிறைவு தரும் சேர்மானங்களைக் குறித்து நிற்பது உண்மையே. ஆனால், LM கோடு சுட்டும் சேர்மானங்களை வாங்கும் அளவுக்கு மட்டுமே நுகர்வோன் வருமானமும் பொருள்கள் விலையும் உள்ளன. எனவே, இருக்கிற நிலையில் நுகர்வோனால் எட்ட முடிகிற மிகவுயர்ந்த சமநோக்கு வளைகோடு, II ஆகத்தான் இருக்க முடியும்.

[2] இம்முடிவு, ஏற்கெனவே சமஇறுதிநிலைப் பயன்பாடு விதியின் தொடர்பாகக் கண்ட முடிவுதான் என்பதைக் கவனிக்க வேண்டும். அங்கும், பொருள்களின் இறுதிநிலைப்பயன்பாடுகள் அவற்றின் விலைகளுக்கு இடையேயுள்ள விகிதத்திற்கேற்ப அமைய வேண்டுமென்று குறிப்பிட்டிருந்தோம். பொருள்களின் இறுதிநிலைப் பயன்பாட்டு வீதமே, இறுதிநிலைப் பதிலீட்டு வீதம் என்று இங்குக் குறிப்பிடப் பெறுவதை முன்பே கண்டுள்ளோம்.

[3] நுகர்வோன் விருப்பநிலை மாறவில்லை என்பது இவ்விளக்கத்தின் அடிப்படையான எடுகோள்.

[4] விலைவீதக் கோடுகளின் வடிவம் அவற்றின் சரிவைப் பொருத்தது. இச்சரிவோ பொருள்களின் விலைவீதத்தைப் பொருத்தது. விலைவீதம் மாறவில்லையென்று நாம் எடுத்துக் கொண்டுள்ளதால் புதிய விலைவீதக் கோட்டின் சரிவும் மாறவழியில்லை. எனவே புதிய விலைவீதக் கோடு முன்னைய விலைவீதக் கோட்டின் சரிவைத்தான் உடையதாக இருக்க வேண்டும்.

மேலும் மேலும் வளர்ந்து சென்றால், விலைவீதக் கோடு மேலும் மேலும் வலப்புறம் நகர்ந்து செல்லும். P, $P^1$, $P^2$ என்றவாறு பல சமநிலைகள் கிடைக்கின்றன. இவற்றை இணைத்தால் கிடைக்கும் கோட்டை 'வருமானம்-நுகர்வுக் கோடு' என்பர். விலை மாறாதிருக்க,




வருமானம் மட்டும் மாறினால், நுகர்வு எவ்வாறு மாறும் என்பதை இக்கோடு காட்டுகிறது.

வருமானம்–நுகர்வுக்கோடு, பெரும்பாலும் மேல் நோக்கி வலப்புறம் சரிவதாகவே இருக்கும். இதன் பொருள் நுகர்வோன் வரு

மானம் உயரும் போது, இரு பொருள்களுடைய நுகர்வும் வளர்ந்து செல்கிறது என்பது தான். படத்திலும் x, y பொருள்களின் நுகர் வளவு முறையே OR, OR¹, OR² என்றும், OT, OT¹, OT² என்றும் வளர்ந்து செல்வதைக் காணலாம்.

ஆனல் (புன்செய்த் தானியங்கள் மரவள்ளிக் கிழங்கு போன்ற) மட்டப் பொருள்களைப் பொருத்தவரை, வருமானம்–நுகர்வுக் கோடு, ஒரு நிலைக்குப் பின் பின்னேக்கி வளைந்து செல்லலாம். கீழேயுள்ள படம் இதனை விளக்குகிறது. இங்கே, வருமானம் மிகுந்து செல்லும்




போது மட்டப்பொருளாகிய x-இன் நுகர்வளவு OR, OR¹, OR² எனக் குறைந்து செல்வதைப் பார்க்கலாம். இதற்குக் காரணம் வருமானம் உயரும் போது மட்டப்பொருள்கள் கைவிடப்பட்டு உயர்வகைப் பொருள்களை வாங்குவது வழக்கமா யிருப்பது தான்.[1]

இனி, வருமானம் மாருதிருக்கும் போது, குறிப்பிட்ட வொரு பொருளின் விலை மாறினல், அதனலேற்படும் விளைவுகளை ஆராய லாம். அடுத்துள்ள படத்தில் y.இன் விலை மாருதிருக்க, x-இன் விலைமட்டும் இறங்குவதாக வைத்துக் கொள்வோம். இதனல்

[1] மட்டப் பொருள்கள் 'கிஃபன் பொருள்கள்' (Giffen goods) என்று அறியப் பெறும். சர் ராபர்ட் கிஃபன் என்பவர் ரொட்டி, உருளைக்கிழங்கு போன்ற மலிவான பொருள்களின் தேவை இவ்வாறிருக்கும் எனக் குறிப்பிட்ட காரணத்தால் அவர் பெய ராலேயே இப்பொருள்கள் வழங்கப் படுகின்றன.

மாருதிருக்கிற வருமானத்தைக் கொண்டு, வாங்க இயல்கிற y-இன் அளவு (OL) மாருதிருக்க, x-இன் அளவு மட்டும் அதன் விலை இறங்க இறங்க OM, $OM^1$, $OM^2$, என்றவாறு வளர்ந்து செல்லக் காண்கிரேம். இதனல் LM, $LM^1$, $LM^2$, என்று புதிய விலைவீதக் கோடுகள் கிடைக்கின்றன. நுகர்வோன் சமநிலை விதிகளுக்கு இணங்க P, $P^1$, $P^2$ என்று புதிய சமநிலைகள் பல கிடைக்கின்றன. இவற்றை




இணைத்தால் கிடைக்கும் கோடு 'விலை-நுகர்வுக் கோடு' எனப் பெறும். இக்கோடு ஒரு பொருளின் விலை மாறினல், அதன் நுகர்வளவு எவ்வாறு மாறுகிறது என்பதைக் காட்டுகிறது. x-இன் விலை இறங்கும் போது, OR, $OR^1$, $OR^2$, என்றவாறு மிகுதியாக x நுகரப்பெறுகிறது. பொருளின் விலை குறையும் போது தேவை அளவு பெருகுவதை இங்குப் பார்க்கிரேம். இதுவே, நுகர்வின் அடிப்படை விதி. இவ்விதியைச் சமநோக்கு வளைகோடுகள் துணைகொண்டு இவ்வாறு நிறுவ முடிகிறது. [1]

மேலே விளக்கியபடி ஆயும் போது, வேருேர் உண்மையையும் புரிந்து கொள்ள முடிகிறது. வருமானம் மாறும் போது, விலைவீதக்

[1] ஆரும் அதிகாரத்தில் விலை-நுகர்வு கோட்டிலிருந்து தேவைப் பட்டியலையும் தேவை வளைகோட்டையும் வருவிக்கும் முறை தரப்பட்டுள்ள படம் பார்க்க,

கோடுகள் சமதூரக் கோடுகளாக நகர்ந்து சமநோக்கு வளைகோடுகளைத் தொடும் போது, வருமானம்-நுகர்வுக் கோட்டைப் பெறுகிறோம். விலை மாறும் போதோ விலைவீதக் கோடுகள் வெவ்வேறு சரிவுடையவைகளாகிச் சமநோக்கு வளைகோடுகளைத் தொடும்போது விலை-நுகர்வுக் கோட்டைப் பெறுகிறோம். ஆக, ஒவ்வொரு சமநோக்கு வளைகோட்டையும் இருவகைக் கோடுகள் தொடுகின்றன. ஆதலால், ஒரு பொருளின் நுகர்வளவு, வருமான விளைவு, பதிலீட்டு விளைவு என்ற இரு சத்திகளுக்கு ஒரே நேரத்தில் உட்படுவதை அறிய முடிகிறது.

ஒரு பொருளின் விலை இறங்கும் போது, நுகர்வோனின் உண்மை வருமானம் மிகுகிறது.[1] அதே நேரத்தில் அடுத்த பொருளை விட மலிவாகி, விட்ட அப்பொருள் அடுத்த பொருளுக்குப் பதிலாக இடப்படுகிறது. மேலேயுள்ள படம் இதனை விளக்குகிறது. இங்கே X பொருளின் விலை இறங்குகிறது. இப்போது $LM^1$ புதிய விலை

[1] ஒரு ரூபாய் விலையில் 8 பேனா வாங்குபவன், பேனா விலை அரை ரூபாய் ஆகும் போது அதே 8 பேனா வாங்க மொத்தம் ரூ. 4 செலவிட்ட பின், முன்னர் பேனாவில் செலவிட்ட ரூ. 4 மிச்சமாக இருக்கிறது. இந்த மிச்சத்தை முன்னிலும் அதிகமாகப் பேனா வாங்குவதிலோ அல்லது பிறபொருள்கள் வாங்குவதிலோ செலவிட முடியும். இதனால், நுகர்வோன் வருமானமானது 8 பேனாக்களும் பிறவும் என்றவாறு மிகுகிறது.

-வீதக் கோடு. நுகர்வோன் சமநோக்கு வளைகோடு II-ஐ எட்டு கிறன். இதற்குக் காரணம் விலை இறக்கம் தான். விலை இறங்காத நிலையிலும் நுகர்வோனுல் சமநோக்கு வளைகோடு II-ஐ எட்ட வழி யொன்றுண்டு. அவன் வருமானம் மிகவேண்டும் என்பதே அவ் வழி. இங்கே, சமநோக்கு வளைகோடு II-ஐ நுகர்வோன் எட்ட வேண்டுமெனில் எந்த அளவுக்கு வருமானம் மிக வேண்டும் என்று பார்ப்போம். LM விலைவீதக் கோட்டுக்குச் சமதூரக் கோடாக, சமநோக்கு வளைகோடு II ஐத் தொடும் முறையில் கோடொன்று வரைந்தால், இந்த அளவை அறியலாம். இப்போது $OL^1$ வருமானம் இருந்தால் சமநோக்கு வளைகோடு II ஐ எட்டமுடியுமென்று தெரிய முடிகிறது. வேறு சொற்களில் கூறுவதானுல், x-இன் விலை இறக்கம் வருமானத்தில் $LL^1$ மிகுதிக்குச் சமம். $LM^1$ விலைவீதக் கோடாயிருந்தால் $OR^2$ வாங்கப் பெறும். ஆனுல், விலை மாருத நிலையில் வருமானம் மட்டும் மாறியிருந்தால் $OR^1$ வாங்கப் பெறும். எனவே, விலை இறக்கத்தால் தேவை $OR^2$ எனப் பெருகும் போது, அதில் $RR^2$ மாறுதலுக்குக் காரணம் 'வருமான விளைவு' என்பது போதரும்.

இனி, எஞ்சியுள்ள $R^1$ $R^2$ மாறுதலுக்குக் காரணமென்ன ? x-இன் விலை இறக்கத்தால் ஏற்பட்ட 'பதிலீட்டு விளைவு' தான் அதற்குக் காரணம் : x-இன் விலை இறங்கும் போது y-இன் விலை மாருதிருப்பதால், மலிந்துவிட்ட பொருளை மற்றப் பொருளினிடத்தில் பதிலீடு செய்வது இயல்பு. இவ்வாறு, விலை இறங்கும் போது, முன்னை விட மிகுதியாக வாங்குவதற்குக் காரணம் விலை இறக்கத்தால் ஏற்படும் வருமான விளைவும் பதிலீட்டு விளைவுமே என்பது தெளிவாகிறது. மேலும், வருமான விளைவால் நுகர்வோன் ஒரு சமநோக்கு வளைகோட்டிலிருந்து மற்ருென்றுக்கு (P-இலிருந்து Q-க்கு) நகர்வதாகவும், பதிலீட்டு விளைவால் ஒரே சமநோக்கு வளைகோட்டில் ஓரிடத்திலிருந்து மற்ருேரிடத்துக்கு (Q-இலிருந்து $P^1$-க்கு) நகர்வதாகவும் சொல்லலாம்.

இந்தச் சமநோக்கு வளைகோடுகள் கோட்பாடு முந்திய பயன்பாட்டுக் கோட்பாட்டிலிருந்து எந்த அளவுக்கு வேறுபட்டிருக்கிறது என்ற வினு இங்கு எழுகிறது. முதலில் பழைய கோட்பாட்டில் பயன்பாடானது 1, 2, 3 என இயலெண் (Cardinal numbers) முறையில் அளவிடப் பெற்றது. இதன் பொருள் பயன்பாட்டைக் கூட்டிக் கழித்து அளவிட முடியும் என்பது தான். ஆனுல் இது நடைமுறைக்குப் பொருந்தாதவொன்று. இந்தக் குறைபாட்டை அகற்றும் வகையில் சமநோக்கு வளைகோடுகள் நிறைவை வரிசைப்

படுத்தியே (Ordinal numbers) தருகின்றன: பல்வேறு சேர்மானங்கள் எவ்வளவு கூடுதல் குறைவாக நிறைவு தருகின்றன என்று கூட இங்குக் கருதவில்லை ! இது ஒரு சிறப்பு.

பழைய பயன்பாட்டுக் கோட்பாடும் புதிய உருவத்தில் இங்குத் தரப்பட்டுள்ளது. இறுதிநிலைப் பயன்பாட்டை இறுதிநிலைப் பதிலீட்டு வீதம் என இங்குக் குறிப்பிடுகிறோம். இதனைப் 'புதிய மொந்தையில் பழைய கள்' என்று ஒதுக்கி விட முடியாது. இறுதிநிலைப் பதிலீட்டு வீதம் தனியொரு பொருளின் அளவைப் பொருத்த தன்று; பிற பொருள்களின் அளவையும் அது பொருத்துள்ளது: y-இன் இறுதிநிலைப் பதிலீட்டு வீதம் y-இன் அளவை மட்டுமல்லாது, x-இன் அளவையும் பொருத்துள்ளதாகிறது. இது ஆய்வு முறைக் கண்ணோட்டத்தில், நடைமுறைக்குப் பொருந்துகிற ஒன்றாயிருக்கிறது.

வருமான விளைவு, பதிலீட்டு விளைவு ஆகிய இருவேறு விளைவுகளால் தேவை மாறுதல்கள் ஏற்படுகின்றன என்பதைப் புதிய கோட்பாடு அழகாக விளக்குகிறது. இதனால், மார்ஷலைப் போல, வருமான விளைவுகள் புறக்கணிக்கத் தகுமளவுக்குச் சிற்றளவின என்ற எடுகோளை வைத்துக் கொண்டு, தொடர்ந்து ஆய வேண்டிய கட்டாயம் ஏற்படவில்லை. இது பெரியதொரு சிறப்பு.

இப்புதிய விளக்கத்தில் சில குறைபாடுகள் உள்ளன என்பதைக் குறிப்பிட்டாக வேண்டும்: 'சமநோக்கு' தனை நேரடியாக அளக்க முடியாது என்பது முதல் குறைபாடு. நுகர்வோர் விருப்பத் தராதரத்தை நடைமுறையில் காணவோ காட்டவோ இயலாது.[1] நட்ட ஆபத்துக்களும் உறுதியின்மையும் நிலவும் சூழ்நிலையில் நுகர்வோன் எவ்வாறு செயல்படுவான் என்பதைச் சமநோக்கு வளைகோடுகளின் துணைகொண்டு நிறுவ முடியாது.[2] சமநோக்கு வளைகோடுகள் ஆய்வுமுறை அவ்வளவு எளிதன்று என்பதையும் மறந்துவிடலாகாது; இரண்டுக்கு மேற்பட்ட பொருள்களின் சேர்மானம் பற்றி ஆய முற்பட்டால் இவ்வுண்மை புலப்படும். சமநோக்கு வளைகோடு

[1] அங்காடியிலே மாறுதல்களை அடுத்து நுகர்வோன் எவ்வாறு செயல்படுகிறான் என்பதைக் கண்டறிந்து அதிலிருந்து நுகர்வோன் விருப்பத் தேர்வுகளைக் கணித்தறியலாம் என்பது பேராசிரியர் ஸாமுவல்சன் (Prof. Samuelson) கருத்து. அவருடைய 'வெளிப்படுத்தப்பெற்ற விருப்பத் தேர்வுக் கோட்பாடு' (Theory of Revealed Preference) இந்த அடிப்படையிலேயே விளக்கப்படுகிறது.

[2] பெர்நவ்லி (Bernouli), நியூமன் (Nuemann), மார்கென்ஸ்டெர்ன் (Morgenstern) போன்ற பேராசிரியர்கள் நட்ட ஆபத்துச் சூழலில் தனிமனிதன் எவ்வாறு செயல்படுவான் என்பதை விளக்கி, அதிலிருந்தே பயன்பாட்டு விதிகளை வருவிக்கமுடியுமென நிறுவியுள்ளனர்.

கள் ஆய்வுமுறை நுண்ணியல் ஆய்வு முறையின்பாற் படுகிறது என்பதும் இங்குக் கருதத்தக்கது; மக்கள் குழுவின் சமநிலையை இவற்றின் துணைகொண்டு விளக்கமுடியாது. 'பயன்பாடு' இங்கும் புதிய உருவில் புதிய பெயரில் புறக்கடை வழியாக நுழைக்கப்பட்டுத் தான் இருக்கிறது! எனவே தான் பேராசிரியர் ஷும் பீட்டர் (Schum Peter) சமநோக்கு வளைகோடுகள் எதையும் புதிதாக நிறுவி விடவில்லை; பழைய முடிவுகளில் எதனையும் பொய் யென்று நிறுவி விடவும் இல்லை என்பார்!

# 4. நுகர்வோர் எச்சப்பாடு

சில நேரங்களில் ஒரு பொருள் 'கொள்ளை மலிவாகக் கிடைக் கிறது' என்ற பேச்சைக் கேட்கிறோம். இதன் கருத்து, குறிப்பிட்ட பொருள் குறைந்த விலையில் கிடைக்கிறது என்பது மட்டுமல்ல; புன்செய்த் தானியங்கள், மரவள்ளிக்கிழங்கு போன்ற சில மட்டப் பொருள்கள் முதலியவற்றின் விலை எப்போதுமே குறைவாகத் தான் இருக்கிறது. இருந்தும், அவை கொள்ளை மலிவாகக் கிடைப்பதாகச் சொல்வதில்லை. எனவே, ஒரு பொருள் கொள்ளை மலிவாகக் கிடைக் கிறது என்று சொல்லும் போது, அப்பொருளுக்கு உயர்ந்த விலை தர நாம் சித்தமா யிருப்பதாகவும், ஆனால், உண்மையில், குறைந்த விலைக்குக் கிடைப்பதால் தான் அவ்வாறு சொல்கிறோம் என்றும் ஆகிறது. இதிலிருந்து ஒரு பொருளுக்கு நுகர்வோர் தரச் சித்தமா யிருக்கிற விலைக்குச் சமமாக அதன் அங்காடி விலையும் இருந்தாக வேண்டும் என்றில்லை என்பது தெளிவாகிறது; இவ்விரு விலைமட்டங் களிடையே யுள்ள வேறுபாட்டினால் நுகர்வோர் ஓர் எச்சநிறைவை அடைகின்றனர்; அதனால் தான் கொள்ளை மலிவு எனும்போது, நுகர்வோர் உள்ளம் குதூகலிக்கிறது. இந்த எச்சநிறைவை நுணுகி யாராய்ந்து 'நுகர்வோர் எச்சப்பாடு' என்ற கோட்பாட்டைத் தந்துள் ளார் மார்ஷல்.

கோட்பாட்டை விளக்கும் முன்பு அதன் அடிப்படை எடுகோள் களைச் சுட்ட வேண்டும். முதலாவதாகக் குறிப்பிட்ட பொருளில் செலவிடுகிற பணத்தின் இறுதிநிலைப் பயன்பாடு மாறாதிருக்கிறது என்று எடுத்துக் கொள்ள வேண்டும். அடுத்து, குறிப்பிட்ட பொரு ளின் பயன்பாடு முழுக்க முழுக்க அதன் அளிப்பை மட்டுமே சார்ந் துள்ளதெனக் கொள்ள வேண்டும். மூன்றாவதாகக், குறிப்பிட்ட பொருளுக்குப் பதிலீட்டுப் பொருளாக எதுவுமில்லை என்றும், இறுதி யாக, நுகர்வோனது விருப்பநிலை மாறாதிருக்கிறது என்றும் வைத்துக் கொள்ள வேண்டும்.

நுகர்வோன் மாங்கனிகளையே நுகர்வதாக வைத்துக் கொள்வோம். முதல் மாங்கனியிலிருந்து நுகர்வோன் 50 காசுப் பயன்பாடு பெறுவதாகக் கொள்வோம் : மாங்கனியே இல்லாமல் போவதை விட, அந்த முதல் மாங்கனிக்கு 50 காசு வரை நல்க நுகர்வோன் முன்வருவான் என்பதே இதன் பொருள். இது போன்று, இரண்டாம் கனியிலிருந்து 30 காசுப் பயன்பாடும், மூன்ரும் கனியிலிருந்து 15 காசுப் பயன்பாடும் நுகர்வோன் பெறுவதாக வைத்துக் கொள்வோம். இப்போது, மாங்கனியின் அங்காடி விலை 15 காசாக இருந்தால், நுகர்வோன் 3 கனிகள் வாங்கிக் கொண்டு அவற்றின் விலையாக 45 காசு தருவான். ஆனால், இம் மூன்று கனிகளில் இருந்து அவன் பெறும் பயன்பாடோ (முதல் கனியிலிருந்து 50, இரண்டாம் கனியிலிருந்து 30, மூன்ரும் கனியிலிருந்து 15, ஆக) 95 காசாகும். எனவே, 45 காசு தந்து 95 காசுப் பயன்பாட்டைப் பெற நேர்கிறது ! இங்கே நுகர்வோன் 50 காசு எச்சப் பயன்பாடு பெறுகிருன். இந்த எச்சமே நுகர்வோன் எச்சப்பாடு என்பார் மார்ஷல். இது மொத்தப் பயன்பாட்டுக்கும் மாற்று மதிப்புக்கும் இடையேயுள்ள வேறுபாடு. நுகர்வோன் நுகரும் எல்லா அலகுகளும் தருகிற பயன்பாட்டின் கூட்டுத் தொகை மொத்தப் பயன்பாடு. மொத்த மாற்று மதிப்பு, பொருள்களுக்கு மாருகத் தரும் பணமதிப்பு-அதாவது நுகரும்பொருள் அலகுகளின் எண்ணிக்கையினதும், பொருள் விலையினதும் பெருக்குத் தொகை, விலை, பொருளின் இறுதிநிலைப் பயன்பாட்டுக்குச் சமமாக இருக்குமாதலால், மொத்த மாற்று மதிப்பு, பொருள் அலகுகளின் எண்ணிக்கையைப் பொருளின் இறுதிநிலைப் பயன்பாட்டால் பெருக்கும் போது கிடைக்கும் தொகை என்றும் சொல்லலாம். பொருளின் மொத்தப் பயன்பாடே ஒருவன் அதற்கு அளிக்கச் சித்தமாயிருக்கும் தொகை ; மாற்று மதிப்பு அவன் உண்மையில் தருகிற தொகை. எனவே, இவ்விரண்டுக்கும் இடையேயுள்ள வேறுபாடு நுகர்வோர் எச்சப்பாடு எனலாம்.

இந்தக் கோட்பாடு குறைந்து செல் பயன்பாட்டு விதியிலேயே தொக்கி நிற்கிறது. தொடர்ந்து ஒரு பொருளை நுகரும் போது, பிந்திய அலகுகளிலிருந்து பெறும் பயன்பாட்டை விட, முந்திய அலகுகளிலிருந்து மிகுதியான பயன்பாட்டைப் பெற முடியும் என்பது குறைந்து செல் பயன்பாட்டு விதியின் கருப்பொருள். இதே நேரத்தில் பொருளின் ஒவ்வோர் அலகுக்கும் தருகிற விலையில் மாறுதல்கள் எதுவுமில்லை : அங்காடியில் ஒரு பொருளின் எல்லா அலகுகளுக்கும் ஒரே விலையே நிலவுகிறது. இவ்விலையானது பொருளின் இறுதிநிலை அலகுகளிலிருந்து பெறும் பயன்பாட்டுக்குச் சமமாகு

போது, தொடர்ந்து வாங்குவது நிறுத்தப்படுகிறது. எனவே, இறுதி நிலை அலகு தவிரப் பிற அலகுகளிலுருந்து ஓர் எச்சமான பயன்பாடு கிடைப்பது தெளிவு. இந்த எச்சப் பயன்பாடு தான் நுகர்வோர் எச்சப்பாடு.

நுகர்வோர் எச்சப்பாட்டைக் கீழேயுள்ள படத்தின் வழியாகவும் விளக்கலாம். படத்தில் OK விலையில் OM அலகுகள் வாங்கப் பெறுகின்றன. எனவே நுகர்வோன் விலையாகத் தருவது OK×OM=




OMPK. ஆனால், OM அலகுகளை வாங்கும் போது நுகர்வோன் பெறும் மொத்தப் பயன்பாடு OMPD ஆகும். இங்கே, KPD நுகர்வோர் எச்சப்பாடு.

இத்தகைய எச்ச நிறைவு பெறக் காரணம், மார்ஷல் குறிப்பிடுவது போலச் சூழ்நிலை தான். பொருளாதார, சமூக, தொழில் நுணுக்க, சட்டச் சூழ்நிலைகளால் ஒரு பொருள் கொள்ளை மலிவாகி விடுகிறது. அப்போது, இந்த எச்சப்பாடும் தோன்றி விடுகிறது. தொலைவிடங்களுக்குச் செய்திகளை அனுப்ப ஒருவன் எவ்வளவும் தரச் சித்தமாயுள்ளான்; ஆனால் பத்துக் காசு அஞ்சலட்டை இதற்குப் போதுமானது. இங்கு, நுகர்வோன் எச்சப்பயன்பாடு பெறமுடிகிறது. இதற்குக் காரணம் நுகர்வோனோ, அவனது சொந்த ஆற்றலோ அல்ல; சூழ்நிலை தான்.

மார்ஷலால் விளக்கப் பெற்ற இக்கோட்பாட்டை ஆசிரியர்கள் பலர் குறை கூறியுள்ளனர். அவர்கள் கருத்துக்களை இனிப் பார்க்கலாம்.

நிக்கோல்சன் (Nicholson), கானன், நைட் (Knight) போன்றவர்கள் இக்கோட்பாடு உண்மைக்குப் புறம்பானது, கற்பிதமானது, பயனற்றது என்றெல்லாம் கூறுவர். நூறு ரூபாய் வருமானத்திலிருந்து பெறும் பயன்பாடு ஆயிரம் ரூபாய்க்குச் சமம் என்று சொல்வதில் பொருளில்லை என்பது இவர்கள் கருத்து. ஆனால், மார்ஷல் சுட்டிக் காட்டியது போல, இருட் கண்ட ஆப்பிரிக்காவின் உட்பகுதிகளில் ஆயிரம் ரூபாயுடன் வாழும் ஒருவனால், நவநாகரீக இங்கிலாந்தில் நூறு ரூபாயுடன் வாழும் மற்றொருவன் பெறுகிற அளவு நிறைவைப் பெறமுடியாது என்பது உண்மையல்லவா? இங்கிலாந்தில் நுகர முடிகிற பல பொருள்களை ஆப்பிரிக்காவில் நினைத்துக் கூடப் பார்க்க முடியாதே! அந்த அளவுக்கு, ஆப்பிரிக்க நாட்டில் வாழ்வோனிடம் மிகுதியான வருமானமிருந்தும், அவனால் பெறமுடிகிற நிறைவின் அளவு மிகக் குறைவாகத் தான் இருக்கும்.

பேட்டன் (Patten) என்பார் மற்றொரு குறை பாட்டைச் சுட்டுகிறார். ஒரு பொருளை மேலும் மேலும் வாங்கும் போது, முதலில் வாங்கிய அலகுகளுடைய பயன்பாடும் குறைந்து செல்வதாகவும், எனவே நுகர்வோர் எச்சப்பாட்டைத் துல்லியமாக அளக்க முடியாது என்றும் அவர் கூறுவார். ஆனால், பேராசிரியர் பிகு கூறுவது போல் நுகர்வு மிகச் சிற்றளவே மிகும்போது, முதலில் நுகர்ந்த அலகுகளின் பயன்பாடு குறைந்து செல்ல வேண்டும் என்றில்லை. மேலும், மார்ஷல் கூறுவது போல, தேவை வளைகோடு இறுதிநிலைப் பயன்பாட்டை அடிப்படையாகக் கொண்டதே யொழிய, சராசரிப் பயன்பாட்டை யல்ல என்பதையும் இங்குக் கருத வேண்டும்.

நுகர்வோன் ஒவ்வோர் அலகுக்கும் தரச் சித்தமாயிருக்கிற விலையை அறிய முடிந்தால் தான் நுகர்வோர் எச்சப்பாட்டைத் துல்லியமாக அளக்க முடியும். முன்னுள்ள படத்திலும் D முதல் P வரை தேவை வளைகோட்டின் வடிவம் எவ்வாறிருக்கும் என்பதை அறிந்தால் தான் நுகர்வோன் எச்சப்பாட்டை KPD எனத் துல்லியமாகச் சொல்ல முடியும். நடைமுறையில் இது அவ்வளவு எளிதன்று. நடப்பு விலை ஓரளவு மாறினால் என்ன நிகழும் என்பதை மட்டுமே ஓரளவு ஊகித்து அறிய முடியும்; எஞ்சியதெல்லாம் வெறும் கற்பனை தான். இந்தக் குறைபாட்டுக்கும் மார்ஷல் தக்க பதில் தந்துள்ளார். நடப்பு விலை சிறிதே மாறினால் என்ன நிகழும் என்

பதை மட்டும் அறிய முடிந்தாலே, நடைமுறைக்கு அது போதுமானது தான். எனவே, தேவை வளைகோட்டைத் தொடக்கம் முதல் அறிய முடியாமலிருப்பது ஒரு பெருங்குறையல்ல.

நுகரும் பொருள்களின் இயல்பு வேறுசில சிக்கல்களைக் கொண்டு வருகிறது. பேராசிரியர் டாசிக் சொல்வதுபோல, இன்றியமையாப் பொருள்களிலிருந்து பெறும்நுகர்வோர் எச்சப்பாடு அளவிடற்கரியது. இப்பொருள்களைப் பெற எதனையுந் தரச் சித்தமாயிருப்பது இயல்பு. இந்தச் சிக்கலுக்குத் தீர்வழி யொன்றை பேட்டன் தருகிறார் : இப்பொருள்களின் நுகர்வில், தொடக்கத்தில் துன்பந்தீர் நிலையொன்று ஏற்பட்டு,சற்றுத் தாழ்ந்தே இன்பந்தரு நிலை தோன்றுகிறது. இந்த இரண்டாவது நிலை தோன்றிய பின்னரே நுகர்வோன் எச்ச நிறைவு எதையும் பெற முடியும். இந்த நிலைக்குப் பின்னர், நுகர்வோர் எச்சப்பாடு, நிச்சயம் தோன்றும். விலை மதிப்பு கருதி மட்டும் நுகர்கிற ஆடையணிகள் அனைய பொருள்களில் இந்த எச்ச நிறைவு தோன்றாது போகலாம் என்றும் ஒரு கருத்து நிலவுகிறது. இவற்றின் நடப்பு விலை குறைந்தால் எச்ச நிறைவு ஏற்பட வழியில்லை என்பது தான் காரணம். மேலும், குறிப்பிட்ட பொருளுக்குப் பதிலீட்டுப் பொருள்கள் உள்ளனவா என்றும் பார்க்க வேண்டும். தேயிலையே இல்லாத நிலையில் காப்பிக்குத்தரச் சித்தமாயிருக்கிற விலை வேறு ; தேயிலையென ஒன்றிருக்கும் போது, காப்பிக்குத்தரச் சித்தமாயிருக்கிற விலை வேறு. இவற்றுள் எந்த விலையை நுகர்வோர் எச்சப் பாட்டைக் கணக்கிடப் பயன்படுத்துவது என்ற சிக்கல் தோன்றுகிறது. இங்கே, மார்ஷல் குறிப்பிடுவதுபோலப் பதிலீட்டுப் பொருள்களையெல்லாம் ஓரினப்படுத்தி, அவ்வினத்தின் தேவை, விலை இரண்டையும் ஒட்டு மொத்தமாக ஆயலாம். தேயிலையையும் காப்பியையும் பொதுவாகப் 'பானங்கள்' என்ற இனத்தினுள் அடக்கிவிட்டால், பதிலீட்டுப் பொருள்களையொட்டிய சிக்கலுக்கு இடமில்லை.

நுகர்வோர் எச்சப்பாட்டுக் கோட்பாட்டின் மிகப் பெரிய குறைபாடு, குறிப்பிட்ட பொருளில் செலவிடுகிற பணத்தின் இறுதிநிலைப் பயன்பாடு மாறவில்லை என்ற அதன் எடுகோள் தான். ஒரு பொருளைத் தொடர்ந்து வாங்கிக் கொண்டிருக்கும் போது, கையிருப்பிலுள்ள பணத்தின் அளவு குறைந்து செல்கிறது. இதனால், தொடர்ந்து ஒவ்வொரு முறை பொருளை வாங்கும் போதும் அதில் செலவிடும் பணத்தின் இறுதிநிலைப் பயன்பாடு வளர்ந்து செல்கிறது. இதனைப் புறக்கணித்தால், நுகர்வோர் எச்சப்பாடு பற்றிய நம் அளவீடு துல்லியமாக இராது. இந்த இடரை எதிர்பார்த்த மார்ஷல், குறிப்பிட்ட

பொருளில் செலவிடுகிற பணத்தின் அளவு மிகக் குறைந்தது என்றும், ஆதலால், பணத்தின் இறுதிநிலைப் பயன்பாட்டில் விலையும் மாறுதல்கள் புறக்கணிக்கத்தக்கன என்றும் அமைதி கண்டார். இந்தச்சிக்கலைத் தவிர்ப்பதற்காக ஹிக்ஸ் ஒரு மாற்று விளக்கத்தைத் தந்துள்ளார். அவரது கருத்துப்படி விலை இறக்கத்தால் நுகர்வோனின் பண வருமானத்தில் ஏற்படும் உயர்வே நுகர்வோர் எச்சப்பாடு.[1] 15 காசு விலையில் 5 கனிகள் வாங்கச் சித்தமாயிருந்து, கனி விலை 5 காசாக இறங்கும் போது, அதே 6 கனிகளை வாங்குவானெனில், இப்போது அவனிடம் 60 காசு எச்சமாயுள்ளது. இந்த எச்சத்தைக் கனியிலோ அல்லது பிறபொருள்களிலோ செலவிட்டு அவனுல் நலம் பெருக்கிக் கொள்ள முடியும்.

கோட்பாட்டின் விளக்கத்தில் மேலே கண்ட சில குறைபாடுகள் புலப்பட்டாலும், உண்மை வாழ்வில் அத்தகையதோர் எச்சப்பாடு இருப்பதை மறக்க முடியாது. எனவே, பொருளாதாரப் பகுத்தாய்விலும் நடைமுறையிலும் இக் கோட்பாடு சிறப்பான பங்கு பெற்றிருப்பதில் விந்தையில்லை. கோட்பாட்டின் முக்கியத்துவத்தைக் கீழ்வருமாறு தொகுத்துச் சொல்லலாம்:

1. ஒரு பொருளின் பயன்மதிப்புக்கும் மாற்று மதிப்புக்கும் இடைபேயுள்ள வேறு பாட்டை இக்கோட்பாடு தெளிவாகப் புலப்படுத்துகிறது. உப்பு, தீப்பெட்டி போன்ற பொருள்களின் பயன் மதிப்பு மிகுதி; ஆனல், அவற்றின் மாற்று மதிப்போ குறைவு. இதனல் அவற்றிலிருந்து பெறுகிற நுகர்வோர் எச்சப்பாடும் மிகுதியாயுள்ளது. ஒரு பொருளுக்குத் தரும் விலை அதிலிருந்து பெறுகிற நிறைவைத் துல்லியமாக அளக்கவில்லை என்பது இதிலிருந்து தெரிகிறது.

2. பொருளாதாரச் சூழ்நிலைகளின் சிறப்பையும் இக்கோட்பாடு குறிப்பாக உணர்த்தி நிற்கிறது. வளர்ச்சி யடைந்துள்ள நாடுகளில் குறிப்பிட்ட அளவு வருமானத்தைக் கொண்டு பெற முடிகிற நிறைவை வளர்ச்சி குன்றிய நாடுகளில் பெறமுடியாது என்பது இங்கு அறிவுறுத்தப் படுகிறது.

3. பன்னட்டு வணிகத்தின் வழியாக ஒரு நாடு பெறும் ஆதாயத்தையும் இக்கோட்பாட்டின் வழி அளந்தறியலாம். பன்னட்டு வணிகத்தில் ஈடுபடுவதன் வழியாக மலிவு விலையில் பிற நாடுகளிலிருந்து பொருள்களை இறக்குமதி செய்து நுகர முடியும். பன்

[1] 104 ஆம் பக்கத்திலுள்ள படம் LL[1] இதனையே குறிக்கிறது

ளுட்டு வணிகம் மட்டும் இல்லையெனில், அப்பொருள்களை உள்நாட்டிலேயே உற்பத்தி செய்து உயர்ந்த விலையில் பெற வேண்டும். இவ்வாறு உயர்விலை தரச் சித்தமாயிருந்தும், பன்ளுட்டு வணிகத்தால் குறைந்த விலையில் பொருளைப் பெற முடிகிறது. இங்கே நுகர்வோர் எச்சப்பாடு தோன்றுகிறது. இந்த எச்சப்பாடே பன்ளுட்டு வணிகத்தில் கிடைக்கும் ஆதாயம்.

4. முற்றுரிமை உற்பத்தியாளனுக்கும் இக்கோட்பாடு ஒரு வகையில் உதவி செய்கிறது. குறிப்பிட்ட பொருளிலிருந்து நுகர்வோர் எச்சநிறைவு பெறுகிருர்களென முற்றுரிமையாளன் அறியும் போது, அப்பொருளின் விலையை ஏற்றி வைக்க அவனுல் முடியும்.[1] நுகர்வோன் ஏறிய விலை தரவும் சித்தமா யிருப்பதால், முற்றுரிமையாளன் விலையை ஏற்றும் போது, பொருளின் தேவை பாதிக்கப் பெருது : முற்றுரிமையாளன் இலாபமும் உயர்கிறதே யன்றிக் குறைகிறதில்லை.

5. நிதியமைச்சர் வரிவிதிக்கும் போதும் இக்கோட்பாடு கருத்தில் வைத்திருக்கத் தக்கது. புதிய வரியொன்றை விதிக்கும் போது, அதனுல் விளையும் விலையேற்றத்தால் மக்கள் எவ்வாறு பாதிக்கப் படுவார்கள் என்பதைக் கவனிக்க வேண்டும். நுகர்வோர் எச்ச நிறைவு பெற்று வருகிற பொருள்கள் மீது அமைச்சர் எளிதில் வரி சுமத்த முடியும். இவற்றுக்கு உயர் விலை தர மக்கள் சித்தமாயிருக்கிருர்கள் ; ஆகவே, வரி விதிப்பால், பொருளின் தேவை எவ்வகையிலும் குறைய வழியில்லை. வெள்ளையர் உப்பின் மீதும், இக்கால அரசு தீப்பெட்டி மீதும் வரி விதித்தது இந்த அடிப் படையில் தான்.

6. பொதுத் துறைத் தொழில்கள் விலை நிருணயிக்கும் போதும் இக்கோட்பாடு பயன்படுகிறது. பேரளவு உற்பத்தியால் உற்பத்திச் செலவு குறைவதற்கு வாய்ப்பிருப்பின், அத்தகு பொருள்களின் உற்பத்தியைப் பெருக்கி, நுகர்வோர் எச்சப்பாடு பெருகுவதற்கு அரசு வகை செய்ய வேண்டும். பிம்ப்ரி (Pimpri) யிலுள்ள அரசினர் பென்சிலின் தொழிற்சாலை இதற்கோர் எடுத்துக் காட்டு. முன்பெல்லாம் இறக்குமதியான பென்சிலினை உயர்ந்த விலை கொடுத்தும் பெற்றுவந்த நாம், இப்போது மிகக் குறைந்த விலையில் அதனைப் பெற முடிகிறது. இதற்குக் காரணம் பிம்ப்ரியில் பேரளவில் பென்சிலின் உற்பத்தியாவது தான். இதனுல் நுகர்வோர் எச்சப்பாட்டுக்கு வழியேற்படுகிறது. மேலும் அரசு அளிக்கும் பொருள்களின் உற்

[1] கீழே வேறுபாடுகாட்டும் முற்றுரிமை பார்க்க.

றத்திச் செலவு உயர்வாயிருந்தாலும், அவற்றைக் குறைந்த விலைக்கு நட்டமே ஏற்பட்டாலுங் கூட—விற்க ஏற்பாடு செய்தால், நட்டங்களை ஈடுகட்டும் அளவுக்கு நுகர்வோர் எச்சப்பாடு தோன்ற வகையுண்டு என்பதையும் கவனிக்க வேண்டும் : அஞ்சல் அட்டையொன்றை யொட்டி 15 காசு செலவாகிறது அரசுக்கு ; ஆனால் அதனை 10 காசுக்குத் தருகிறது அரசு. இவ்வாறு நுகர்வோர் எச்சப்பாட்டைப் பெருக்குவதே அரசு மேற்கொண்டதன் குறிக்கோளாக இருக்க வேண்டுமென நலவியல் கருத்தினர் வலியுறுத்துகின்றனர். நுகர்வோர் எச்சப்பாடு சமூக நலனை அளவிடுங் கருவி என்பது இவர்கள் கருத்து.

# 5. நுகர்வோர் இறைமை

'முதலாளித்துவ அமைப்பில் நுகர்வோனே மன்னன், அல்லது இறை' என்ற கருத்து ஆசிரியர் பென்ஹாம் (Benham) அவர்கள் தமது 'பொருளாதாரம்' என்ற நூலில் நன்கு விளக்கியுள்ள ஒரு கருத்தாகும்.[1] முதலாளித்துவப் பொருளியல் அமைப்பில் எல்லார்க்கும் செயல் சுதந்திர முண்டு : நுகர்வோர் எதையும் விரும்பலாம் ; உற்பத்தியாளர்க்கும் எந்தப் பொருளையும் உற்பத்தி செய்யத் தன்னுரிமையுண்டு. ஆனால் எல்லாரதும் அடிப்படை நோக்கம் ஒன்றே-மிகவுயர்ந்த அளவு ஆதாயம் பெறவேண்டும் என்பதே. எனவே தன் ஆதாயத்தை மிகவுயர்ந்த அளவினதாக ஆக்க வேண்டும் என்று கருதும் உற்பத்தியாளன், நுகர்வோர் விருப்பத்தராதரத்தை நன்கறிந்து அவர்கள் தேவைப்படுகிற பொருள்களை உற்பத்தி செய்வதில் ஈடுபடுகிறான். இவ்வாறு முதலாளித்துவ அமைப்பில் எதனை உற்பத்தி செய்ய வேண்டும் என்று ஆணையிடுவது உண்மையில், நுகர்வோர் குலமே. இவ்வாறே, புதியதோர் உற்பத்தி முறை கண்டுபிடிக்கப் பெற்றால், அதனை ஆளவேண்டும் என்ற நுகர்வோர் விருப்பத்துக்கும் உற்பத்தியாளர் இசைந்தாக வேண்டும். புதிய உற்பத்தி முறை பொருளின் உற்பத்திச் செலவைக் குறைப்பதாக இருந்தால், அதனை ஆள்பவன் குறைந்த விலைக்குப் பொருளை விற்க முடியும் ; இதனால் அந்த உற்பத்தியாளனையே நுகர்வோர் நாடுகின்றனர். எனவே, பிற உற்பத்தியாளரும் அந்த உற்பத்தி முறையை ஆள முன் வராவிடில் நட்டமடைய நேரும். இவ்வாறு, ஒரு முதலாளித்துவ அமைப்பில் எதனை எவ்வாறு உற்பத்தி செய்ய வேண்டும் என்பதை நிருணயிப்பது நுகர்வோர்களே. நுகர்வோர் விரும்பாத பொருள்களை உற்பத்தி செய்வோன் பெறுவது ஆதாயமல்ல ; நட்டமே.

[1] தொன்மை மரபினர், பொருள்விலை என்ற 'மாயக்கர'மே பொருளியல் செய்கைகளைக் கட்டுப்படுத்துவதாகக் கூறிவந்தனர். இந்தப் பொருள்விலைக்குப் பின்னால் நுகர்வோன் விருப்பத் தேர்வு, உண்மையில், செயல்படுகிறது எனக் கூறுவதில் தான் நுகர்வோர் இறைமைக் கோட்பாட்டின் புதுமை மிளிர்கிறது.

பென்ஹாம் தந்துள்ள ஓர் எடுத்துக் காட்டுடன் இவ்வுண்மையை விளக்கலாம். நுகர்வோர் விருப்ப நிலை மாறுவதாக வைத்துக் கொள்வோம்: பார்லிக்குப் பதிலாக, கோதுமையில் மிகுதியான நாட்டம் செலுத்துவதாக வைத்துக் கொள்வோம். விற்பனைக்கு வரும் பொருள்களின் அளவு மாருதிருந்தால் கோதுமை விலை ஏறுவதும், பார்லி விலை இறங்குவதும் இயல்பு. இதனால், முன்னைவிட மிகுதியாகக் கோதுமையும் குறைவாகப் பார்லியும் உற்பத்தியாகும். நிலமும் பிறகாரணிகளும் பார்லி உற்பத்தியிலிருந்து வெளியேறி, கோதுமை உற்பத்தியில் ஈடுபடுத்தப் படுகின்றன. இதன் பொருள் இவ்விரு துறைகளிடையே ஒதுக்கீடு செய்யப்படும் உற்பத்திக் காரணிகள் அளவு மாறுகிறது என்பது தான். இதனிடையே உற்பத்தி முறைகளில் மாறுதல் ஏற்பட்டால், உற்பத்திக் காரணிகள் சேர்மான விகிதங்களும் மாற நேரும். இவற்றாலெல்லாம் உற்பத்திக் காரணிகள் ஈட்டுகிற வருமானத்திலும், மாறுதல்கள் இயல்பாகவே, ஏற்பட்டு வருகின்றன.

இவ்வாறு, ஒரு ஜனநாயக நாட்டில் வாக்குச் சீட்டுக்கு இருக்கும் ஆற்றல், முதலாளித்துவ அமைப்பில் நுகர்வோன் விருப்பத் தேர்வுக்கும் இருக்கிறது எனலாம். ஜனநாயக அமைப்பில் வாக்குச் சீட்டுக்கள் மாறுதலை விரும்பினால், அடுத்த நொடியில் அம்மாறுதல் நடைமுறையில் ஏற்பட்டு விடுகிறது. இது போன்றே நுகர்வோன் விருப்பத் தேர்வு ஒரு முதலாளித்துவ அமைப்பில் பொருளியல் செய்கைகளை யெல்லாம் கட்டுப் படுத்துகிறது எனலாம்.[1]

இங்கே, இவ்வளவு தன்னுரிமையுடன் நுகர்வோன் செயல்பட இயலுமா-அல்லது, நுகர்வோர் விருப்பங்கள் பொருளியல் அமைப்பையே மாற்றியமைக்கும் அளவுக்கு வன்மையுள்ளனவா-என்பதை ஆராயவேண்டும். உண்மையில் ஒரு முதலாளித்துவ அமைப்பில் நுகர்வோர் இறைமையைக் கட்டுப் படுத்துகிற தடைகள் பல நிலவுவதை ஆசிரியர்கள் சுட்டிக் காட்டுகின்றனர்.

முதலாவதாக, உற்பத்திக் காரணிகள் அளிப்பிலும் தொழில் நுணுக்க அறிவு பெறுவதிலும் இயற்கையாகவே சில வரையறைகள்

[1] பேராசிரியர் மைஸஸ், இந்த ஒப்புமையில் ஒரு சிறிய வேறுபாடிருப்பதையும் புலப்படுத்தியுள்ளார். ஜனநாயக அமைப்பில் பெரும்பான்மை வைத்ததே சட்டம். ஆனால். இங்கோ சிறுபான்மை வாக்குகளுக்கும் உரிய மதிப்புண்டு. உலகத்தில் பெரும்பாலோர் நோயாளிகள் அல்லர்; இருந்தாலும் சிறுபான்மை நோயாளிகள் விரும்பித்தேர்கிற மருந்து வகைகளும் உற்பத்தியாகத் தானே செய்கின்றன? கோதுமை ரொட்டி மட்டுமல்ல, ஆட்டா ரொட்டியும், நல்ல இலக்கியங்களோடு நசிவு இலக்கியங்களும் உற்பத்தியாக இதுவே காரணம். எனவே, ஜனநாயக அமைப்பின் பெரும்பான்மை ஆட்சிமுறையல்ல, விகிதாச்சாரப் பிரதிநிதித்துவ ஆட்சி முறையே இங்கு ஒப்பு நோக்கப் பொருந்துவதென நாமும் கூறலாம்.

உள்ளன. நுகர்வோன் விரும்புகிருன் என்பதற்காக எல்லாப் பொருள்களேயும் உற்பத்தி செய்துவிட முடியாது. உற்பத்திக் காரணிகளின் அருமைப்பாடு அடிப்படையானதொரு பொருளியல் சிக்கல். விண்வெளிக் கப்பல் வேண்டுமென மத்திய ஆப்பிரிக்க நுகர்வோர் விரும்பிஞல், அது நடைமுறையில் இயல்கிற ஒன்றல்ல. இது போன்றே, தொழில் நுணுக்க அறிவு பல பொருள்களின் உற்பத்தியை இன்னும் ஏட்டுச் சுரைக்காய் நிலேயில் தான் வைத்துள்ளது.

அரசும் நுகர்வோர் இறைமையைக் கட்டுப் படுத்தும் அளவுக்குச் சில கட்டுப்பாடுகளே விதித்துள்ளது. நம் நாட்டின் சில பகுதிகளில் போதைப் பொருள் நுகர்வு அறவே தடை செய்யப் பட்டுள்ளது. பொருள்கள் மீது வரியை விதித்து, விலேயை ஏற்றி, நுகர்வோர் விருப்பத் தேர்வைக் கட்டுப் படுத்துவது எங்கும் பெரு வழக்காகியுள்ளது. உணவுப் பொருள் பங்கீடும், பங்கீட்டில் வழங்கப் பெறும் பொருள்கள் சேர்மானமும் நுகர்வோர் விருப்பத்துக்கு ஒரு நாளும் இசைந்திருப்பதில்லே! இங்கெல்லாம் நுகர்வோன் தனது தன்னுரிமையை இழப்பதோடு, குறிப்பிட்ட பொருள்களேத் தன் விருப்பத்துக்கு மாருக நுகர்ந்தாக வேண்டும் எனக் கட்டாயப் படுத்தப் படுவதையும் பார்க்கிரேம். இந்திய நாட்டில், அரசச் சட்டங்கள் மட்டுமல்ல, சமூக சமயக் கட்டுப்பாடுகளும் நுகர்வோர் செயல் உரிமையைப் பறித்து நிற்கின்றன.

விற்பனே முற்றுரிமை நிலவுவது மூன்ருவதொரு தடையாகும். உற்பத்தியைக் கட்டுப்படுத்தி நுகர்வோன் விரும்புகிற அளவு பொருள்கள் கிடைக்காதபடி முற்றுரிமையாளனுல் தடுத்து விட முடியும். மேலும் உற்பத்திக் காரணிகள் பெயர்ச்சியைத் தடை செய்யவும் அவனுல் இயலும்.

இன்றைய உலகில், நுகர்வோர் விளம்பரங்களால் பெரிதுங் கவரப் பெற்றுள்ளனர். எனவே, நுகர்வோன் தன்னிச்சையாகச் செயல் படுவதாகக் கூறுவதில் பொருளில்லே. அமெரிக்க நாட்டில் ரூ. 750 கோடி ஆண்டு தோறும் விளம்பரங்களில் செலவிடப் பெறுகிறது என்பதை அறியும் போது, விளம்பரங்களின் முக்கியத்துவத்தை உணரலாம். விளம்பரங்கள் கொணரும் கட்டுப்பாட்டுக்கு அவ்வளவு முக்கியத்துவம் தரவேண்டியதில்லே என்பார் பென்ஹாம். விளம்பரப்படுத்தப் பெறும் பொருள்களிடையே தனது விருப்பத்துக்கிசைந்த ஒன்றைத் தெரிவுசெய்ய நுகர்வோர்க்கு உரிமையிருக்கிறது. மன்னன் ஒருவனுக்கு அவனுடைய அடிமைகள் கூட ஆலோசனே கூறலாம்; புகழ் மாலே பாடலாம்; என்ருலும், மன்னன் மன்னனுகத் தான் இருக்கிருன் என்பார் பென்ஹாம்.

தற்காலப் பேரளவு உற்பத்தி அமைப்பில் அங்காடியில் வரும் பொருள்களெல்லாம் தரப்படுத்தப் பெற்றவைகளாகவே இருக்கின்றன. இதனால், நுகர்வோன் விரும்பினாலும், தனது தனிவிருப்பத்திற்கிசைந்த பொருள்களைப் பெற வழியில்லை. அந்த அளவுக்கு அவனது சுதந்திரம் மட்டுப்படுகிறது. இங்கும், பென்ஹாம், தரப்படுத்தப் பெற்ற பொருள்களிடையிலும், விலை வேறுபாடிருப்பதால், அங்கே நுகர்வோன் விருப்பத் தேர்வு செய்யச் சுதந்திரமுள்ளவனாகவே இருக்கிறான் எனக் குறிப்பிடுவார்.

மற்றொரு பெரிய தடை நுகர்வோர் வருமானம் வரையறைக்குட்பட்டிருப்பது தான். பெரும்பான்மை நுகர்வோர் ஏழைகளாக இருப்பதால், அவர்களுடைய தெரிவெல்லாம் மலிவான பொருள்களுக்குள் அடங்கி விடுகிறது. நுகர்வோர் விருப்பம் உற்பத்தியில் எதிரொலிக்கிறது என்று சொல்லும் போது எல்லா நுகர்வோர்களது விருப்பமுமல்ல, பணமுள்ளவர்கள் விருப்பமே உற்பத்தியைக் கட்டுப் படுத்துகிறது என்று சொல்ல வேண்டும்.

இவ்வளவு தடைகளுக்கிடையே, நுகர்வோர் இறைமை செல்லாக் காசாகி விடலாம் என்பது ஒரு புறமிருக்க, இந்த இறைமை நிலவுவது நல்லது தானா என்ற வினாவும் எழுப்பப்படுகிறது. இந்தக் கேள்விக்குப் பதில் சொல்ல முற்படுவது ஒருவகையில், பொருளாதார ஆய்வின் வரம்புக்கு அப்பாற் பட்டது தான்.[1] இருப்பினும் இவ்வினாவை ஒட்டிய சிந்தனையில் பொருளியல் அறிஞர்கள் கட்சி கட்டி நின்றுள்ள காரணத்தால், அவர்கள் கருத்தை ஓரளவேனும் அறிந்திருப்பது நல்லதே.

ஒரு சிலர் கருத்துப்படி, நுகர்வோன் தன்னுடைய விருப்பங்களைத் தெரிவு செய்ய முழுச் சுதந்திரம் உள்ளவனாக இருந்தாக வேண்டும். விருப்பம், சுவை முதலியவற்றை யொட்டிய சிக்கல்களை அரசின் முற்றுரிமையாக விட்டு விடுவது நல்லதல்ல என்பது இவர்கள் கருத்து.

இக்கருத்தை எதிர்ப்பவர்கள், இந்தச் சுதந்திரத்தைப் பெறுவதற்குரிய தகுதி நுகர்வோர்க்கு இல்லையெனக் கூறுகின்றனர். பொருளியல் சிக்கல்களைப் பொருத்தவரை நுகர்வோர் தற்குறிகளே என்பது இவர்கள் கருத்து. நசிவு இலக்கியங்களையும், 'டப்பா' சங்கீதத்தையும், தீய மருந்துகளையுமே மக்கள் தெரியாத்தனமாகத்

[1] பென்ஹாம் நூலின் கடைசிப் பதிப்பில் நுகர்வோர் இறைமைக் கோட்பாடு பற்றிய விளக்கம் இடம் பெறவில்லை என்பது இங்குக் கருதத்தக்கது.

தெரிவு செய்து வருகின்றனர். கம்பளித் துணியெனச் சொல்வதில் எவ்வளவு பருத்தி கலந்திருக்கிறது என்பதையோ, மஞ்சள் பொடி என விற்கப் படுவதில் எவ்வளவு ஈயம் கலந்திருக்கிறது என்பதை யோ பெரும்பான்மை நுகர்வோர் அறிந்து கொள்ளும் நிலையிலில்லை ! நுகர்வோர் உணர்ச்சி வயப்பட்ட நிலையில் தான் செயல் படுகிறார் களே யொழிய, ஆர அமரப் பகுத்தாய்ந்து நுகர்வு பற்றி முடிவெடுப்ப தில்லை. பழக்க வழக்கங்களுக்கும், சமூக ஒழுங்குகளுக்கும், சொந்த நம்பிக்கைகளுக்கும் மனிதன் அடிமை. வெப்லன் (Veblen) கூறு வது போல அடுத்தவனைப் போல நடக்க வேண்டும் என்ற ஆசை கூட நுகர்வைக் கட்டுப்படுத்துகிறது. நுகர்வோர் பெரும்பாலும் விவேக முள்ளவர்களாகச் செயலாற்றுவதில்லை என்பது இவற்றி லிருந்து தெரிகிறது.[1]

நுகர்வோர் இறைமையை ஆதரிப்போர் நுகர்வோர் தற்குறித் தனத்தை ஒப்புக் கொள்கின்றனர். ஆனால், அதே நேரத்தில், நுகர்வோர்க்குச் சுதந்திரம் அளித்தால் தான் தவறு செய்யும் போ தெல்லாம் பாடம் படிக்க நேர்ந்து, தொடர்ந்து திருந்திக் கொள்ள வாய்ப்புக் கிடைக்குமெனக் கூறுகின்றனர். எனவே, தவறு செய் வதும் அனுமதிக்கத் தக்கதே என்பது இவர்கள் கருத்து. இதற்குப் பதில் கூறுவது போல, பார்பாரா வூட்டன் (Barbara Wootton) போன்ற ஆசிரியர்கள் இவ்வாறு பாடம் கற்பித்தல் பாழ்ச் செலவு மிக்கதெனச் சுட்டிக் காட்டுகின்றனர். ஒரு முறை தவறினாலும் கூட அந்த அளவுக்குப் பொருள் நட்டமும் நலஇழப்பும் ஏற்படும். மேலும், தவறான நுகர்வோர் விருப்பத் தேர்வு, தவறான முறையில் நாட்டின் செல்வ வளங்கள் ஆளப் பெறுவதற்கும் காரணமாகி விடலாம். எனவே, நுகர்வோன் வேண்டுவனவற்றை அளிக்காது, அவனுக்கு வேண்டியவற்றை அளிப்பதே நல்லது என இவர்கள் கருதுகின்ற னர்.

'நுகர்வோர் இறைமை' வேண்டியதில்லை எனப் பொதுவாகக் கருதி வரும் சமதருமக் கருத்தினர் மற்றொரு வாதத்தையும் எழுப்பி யுள்ளனர். செல்வநிலை ஏற்றத் தாழ்வுகள் மலிந்துள்ள இன்றைய முதலாளித்துவ அமைப்பில் நுகர்வோர் ஆணையின் வழி எல்லாச் செய்கைகளும் நிகழ்கின்றன என்று சொல்லும் போது, செல்வந்தர் ஆணை மட்டுமே செல்வாக்கு உள்ளதாகத் திகழ்கிறது. எனவே,

[1] சிக்கன வாழ்க்கை நடத்துவது எப்படி, அன்றாட வாழ்க்கைக்குத் தேவை யான வற்றை எங்கெங்கு வாங்குவது என்பன போன்ற சிக்கல்களில் மக்களுக்கு வழிகாட்டுவ தற்காகத் தனியொரு துறையை நிறுவி, அதற்கு பெட்டிபர்னஸ் என்ற பெண்மணியை அமெரிக்க ஜனாதிபதி ஜான்ஸன் நியமித்தது இங்கு நினைவு கூரத்தக்கது.

உண்மையிலேயே நுகர்வோர் ஆணை வலிமை மிக்கதாக இருக்க வேண்டுமெனில், நுகர்வோரிடையே சமத்துவம் நிலவ வேண்டும். எவ்வளவு தான் வரி விதித்தாலும் போதாது ; அச் சமத்துவம் நிலை பெற வேண்டுமெனில், தனியார் சொத்துரிமையை ஒழித்து, உற்பத்தி வழிவகைகளை யெல்லாம் அரசின் கட்டுப்பாட்டின் கீழ்க் கொண்டுவர வேண்டும். அந்நிலையில், முதலாளித்துவத்தின் அடிப்படைத் தேர்வுரிமை மறைந்தொழிந்து போகலாம் ; அத்துடன் நுகர்வோர் இறைமையும் அழிய நேரலாம். ஆனால், சமூக நலக் கண்ணோட்டத்தில், இது தவிர்க்க இயலாதது என்பார்கள் சமதருமக் கருத்தினர்.

கருத்தியல் கோட்பாடுகளை விட்டுவிட்டு, நடைமுறைக்கு வருவோ மானால், முதலாளித்துவ நாடெனப் புனைந்துரைக்கப்படும் இடங்களிலும், நுகர்வோன் தன்னுரிமை பல வழிகளில் வரையறுக்கப் பட்டிருப்பதைத் தான் பார்க்கிறோம். அந்நாடுகளில் நுகர்வோன் உரிமைகளுக்குப் பாதுகாப்புத் தரச் சட்டத்தின் உதவியை அரசு நாடி நிற்பதைப் பார்க்கிறோம். கலப்படத் தடுப்புச் சட்டங்கள், முற்றுரிமை ஒழிப்புச் சட்டங்கள் போன்றவை இத்தகையவை. உலகெங்கும் வளர்ந்து வரும் நுகர்வோர் கூட்டுறவியக்கம் நுகர்வோர் சுதந்திரம் அவ்வளவு பத்திரமாயில்லை என்று தான் குறிப்பிடுகிறது.

இதே நேரத்தில், நுகர்வோர் விருப்பத் தேர்வை ஒரேயடியாகப் புறக்கணித்து விட முடியாதென்பதைச் சோவியத் நாட்டின் அண்மைக்கால வரலாற்றிலிருந்து பார்க்கலாம். நுகர்வோர் வாங்க விரும்பாத பொருள்களை உற்பத்தி செய்வதால், பொருள் தேக்கம் அவ்வப்போது ஏற்படுவதை உணர்ந்த சோவியத் அரசு, நுகர்வோர் விரும்புகிற பொருள்களை உற்பத்தி செய்வதற்குள்ள சுதந்திரத்தைத் தனிப்பட்ட நிறுவனங்களுக்கு நல்க முன் வந்துள்ளது. இதனால் நிறுவனங்களின் நிகரலாபம் உயர்ந்துள்ளதாக அரச அறிக்கைகளே ஒப்புக் கொள்வதிலிருந்து,[1] நுகர்வோர் இறையாற்றலுள்ளவர்கள் என்பதை ஏற்றுக் கொள்ளாதிருக்க வழியில்லையே !

[1] Report of A. N. Kosygin to the 23rd Congress of the C. P. S. U.

# 6. தேவையும் தேவை நெகிழ்ச்சியும்

விருப்பமொன்று நிறைவேற்றப்பெறும் நிலையில் தோன்றுவது தான் தேவை. எனவே, ஒரு பொருளின் மீது (1) வேட்கை உண்டாகி, (2) அதனை வாங்குவதற்கு வேண்டிய வழிவகைகளைப் பெற்றிருந்து, (3) அவ்வழி வகைகளைச் செலவிட்டு அதனை வாங்க ஆயத்தமாகும் போது தான் தேவை ஏற்படுகிறது. பொருளின் மீது உண்டாகும் வேட்கை உடல், உள உந்தல்களை ஒட்டியது : பெரிதும் பொருளியலுக்கு அப்பாற்பட்ட காரணிகளைச் சார்ந்துள்ளது. வழிவகைகள் நுகர்வோனின் வருமானத்தைச் சார்ந்துள்ளன. இந்த வழிவகைகளைச் செலவிட ஆயத்தமாவது பொருளின் விலையைப் பொருத்துள்ளது : குறிப்பிட்ட பொருளின் விலையை மட்டுமல்ல; தொடர்புள்ள பிற பொருள்களின் விலையையும் பொருத்துள்ளது. இவ்வாறு தேவையை நிருணயிக்கும் பொருளியல் காரணிகள் நுகர்வோன் வருமானம், குறிப்பிட்ட பொருளின் விலை, பிற பொருள்களின் விலை ஆகிய மூன்றும் எனலாம். இவற்றுள் இரண்டாவது காரணிக்கு முதன்மை நல்கி விட்டு, பிற இரு காரணிகளும் தேவையைக் கட்டுப்படுத்தும் சூழல்கள் என்ற வகையில் பகுத்தாய்வது வழக்கம். இதற்குக் காரணம் இல்லாமலில்லை. பொருளியல் பகுத்தாய்வில் நடுநாயகமாகத் திகழ்வது விலைநிருணயச் சிக்கல். இந்தச் சிக்கலை விளக்கும் வகையிலேயே பிற தலைப்புக்களை ஆய்கிறோம். எனவே, தேவை பற்றி ஆயும் போதும் அதற்கும் விலைக்கும் இடையேயுள்ள தொடர்பே முக்கியம். மரபைப் பின்பற்றி விலைசார் தேவைக்கு முதன்மை தருகிற போதிலும், பிற இரு காரணிகளும் தேவையை எவ்வாறு கட்டுப் படுத்துகின்றன என்பதையும் நாம் ஆராயலாம்.

## விலைசார் தேவை

விலையை யொட்டி தேவை அளவு மாறுகிறது. ஒரு விலையிலிருக்கும் தேவை அளவு, இன்னொரு விலையிலிருக்கும் தேவை

அளவிலிருந்து மாறுபட்டிருக்கிறது. பல்வேறு விலைகளில் ஒரு பொருள் எவ்வளவு தேவைப் படுகிறது என்பதை ஓர் அட்டவணை போட்டுக் காட்டலாம். தேவைக்கும் விலைக்கும் இடையேயுள்ள தொடர்பைச் சுட்டிக் காட்டும் அப்பட்டியலைத் தேவைப் பட்டியல் என்கிறோம்.

இத்தகைய பட்டியல்களை ஒரு தனி மனிதனுக்கோ, அல்லது, அங்காடி முழுவதற்குமோ தயாரிக்கலாம். பல்வேறு விலைகளில் தனியொருவனுக்கு ஒரு பொருள் எவ்வளவு தேவைப்படுகிறது என்பதைச் சுட்டிக் காட்டும் பட்டியல் தனி மனிதன் தேவைப் பட்டியலாகும். எடுத்துக் காட்டாகக் கீழ் வருவதைக் குறிப்பிடலாம்.

| ஒரு மீட்டர் துணியின் விலை | தேவை அளவு (மீட்டர்களில்) |
|---|---|
| ரூ. 5 | 3 |
| " 4 | 5 |
| " 3 | 8 |
| " 2 | 12 |

பல்வேறு விலைகளில் அங்காடியில் ஒரு பொருள் எவ்வளவு தேவைப் படுகிறது என்பதைச் சுட்டிக் காட்டும் பட்டியல் அங்காடித் தேவைப் பட்டியல். அங்காடியிலுள்ள வாங்குவோர் அனைவரதும் தேவை அளவுகளின் கூட்டுத் தொகையே அங்காடியின் தேவை அளவு. அங்காடியில் வாங்குவோர் நால்வர் இருப்பதாக வைத்துக் கொண்டு வரையப் பெற்ற ஓர் அங்காடித் தேவைப்பட்டியல் கீழே தரப் பட்டுள்ளது.[1]

| ஒரு மீட்டர் துணியின் விலை | வாங்குவோர் ஒவ்வொருவருக்கும் தேவைப்படும் அளவு | | | | மொத்தத் தேவை அளவு (மீட்டரில்) |
|---|---|---|---|---|---|
| | A | B | C | D | |
| ரூ 5 | 3 | 2 | 0 | 0 | 5 |
| 4 | 5 | 4 | 2 | 0 | 11 |
| 3 | 8 | 7 | 5 | 3 | 23 |
| 2 | 12 | 10 | 8 | 5 | 35 |

[1] நடைமுறையில் ஒரு பொருளின் தேவைப்பட்டியலைத் தயாரிப்ப தென்பது அவ்வளவு எளிதல்ல. அடிக்கடி ஏறி இறங்கிக் கொண்டிருக்கும் விலைகளால், தேவை எவ்வளவு மாறுகிறது என்பதற்கு யாராலும் கணக்கு வைத்திருக்க முடியாது.

தேவைப் பட்டியலை ஒரு வரைபடத் தாளில் பகர்த்தினால், தேவை வளைகோட்டைப் பெறமுடியும். அடுத்துள்ள படத்தில் செங்




குத்து அச்சில் விலையும், கிடை அச்சில் தேவை அளவும் குறிக்கப்பட்டுள்ளன. D D. கோடு தான் தேவை வளைகோடு. இவ்வளை கோடு இடமிருந்து வலமாகக் கீழ்நோக்கிச் சரிகிறது.

தேவைப் பட்டியலில் இருந்தும் தேவை வளைகோட்டின் இயல்பான போக்கிலிருந்தும் விலைமாறுதல்களுக்கும் தேவை அளவுக்கும் இடையேயுள்ள தொடர்பைப் புரிந்து கொள்ள முடியும். விலை இறங்க இறங்கத் தேவை அளவு வளர்ந்து செல்லக் காண்கிறோம். இந்த உண்மையே தேவை விதி எனப்பெறுகிறது. விலை இறங்கும் போது தேவை அளவு பெருகுகிறது ; விலை ஏறும் போதோ தேவை அளவு சுருங்குகிறது என்பது தான் தேவை விதி.

நடைமுறையில் இவ்விதி செயற்படக் காண்கிறோம். தரமான நூல்களின் மலிவுப் பதிப்புக்கள் ஏராளமாக விற்பது இதற்கோர்

கடந்த காலப் புள்ளிவிவரங்களை அடிப்படையகக் கொண்டு நிகழ்காலத்துக்குப் பொருந்துகிற பட்டியல்களைத் தயாரிக்க முயல்வதும் சரியல்ல. ஏனெனில், காலப்போக்கில் நுகர்வோன் வருமானம், பழக்க வழக்கம், விருப்பு வெறுப்பு, பிற பொருள் விலைகள் முதலிய பல காரணிகள் மாறிவிடலாம் எனவே, வாங்குவோரிடம்- அல்லது அவர்களில் அறிவுக் கூர்மை படைத்தவரிடம் மட்டும்-ஒவ்வொரு விலையிலும் அவர்கள் எவ்வளவு எவ்வளவு வாங்க ஆயத்தமாயிருக்கிறார்கள் என விசாரித்தறிவதே பொருத்தமான வழி. சோதனையாகப் பல்வேறு விலைகளை மாற்றிமாற்றி நிறுவி, அம்மாறுதல்களின் விளைவைத் தொகுத்தறிவதன் வழியாகவும் தேவைப் பட்டியலொன்றை அரசால் நிறுவ முடியும். ஆனால், அந்த அளவுக்கு அரசு செல்லுமா என்பது ஒரு புறமிருக்க, அதனால் பொருளியல் அமைப்பில் ஏற்படும் சீர்குலைவுகள் வேறுள்ளன என்பதும் இங்குச் சிந்திக்கத் தக்கது.

எடுத்துக் காட்டு. விலை இறங்கும் போது ஏற்கெனவேயுள்ள நுகர்வோர் மிகுதியாக வாங்குவதோடு புதிய நுகர்வோரும் வாங்க முன் வருகின்றனர். இவ்வாறே, விலை ஏறும் போது குறிப்பிட்ட பொருளை இன்றியமையாது வேண்டுவோர் மட்டுமே வாங்குகின்றனர். இதுவே தேவை விதிக்கு அடிப்படைக் காரணம் எனச் சொல்லலாம்.

மேலே கண்டவை நடைமுறைக்குப் பொருந்துவனவாக இருக்கலாம். ஆனால், அந்த நடைமுறைக்குப் பின்னுள்ள கருத்தியல் காரணத்தையும் நாம் புலப்படுத்தியாக வேண்டும். தேவை விதி பற்றிய கருத்தியல் விளக்கங்கள் இரு வகைப் படுகின்றன.

தொன்னூலாளர் தேவை விதி குறைந்து செல் பயன்பாட்டு விதியை அடிப்படையாகக் கொண்டது. ஒரு பொருளின் ஓர் அலகுக்குத் தரும் விலை அந்த அலகின் பயன்பாட்டைப் பொருத்திருக்கிறது; மிகுதியாகப் பயன்பாடு தந்தால் மிகுதியாகவும், குறைவாகத் தந்தால் குறைவாகவுமே ஒருவன் விலை தர முன் வருவான். குறைந்து செல் பயன்பாட்டு விதியின் படி, பொருள் அளிப்பு மிகுந்து கொண்டே போனால், அதன் இறுதிநிலைப் பயன்பாடு குறைந்து கொண்டே செல்லும். எனவே, அப்பொருளில் மேலும் ஓர் அலகை ஒருவன் வாங்க வேண்டுமெனில் (பயன்பாடு குறைகிற காரணத்தால், அதற்கிசைய) விலையைக் குறைத்துத் தரவேண்டும். விலை குறைந்தால், தேவை அளவு பெருகும் என்பதை இவ்வாறு விளக்கலாம்.

மார்ஷல் போன்றோர், தேவை விதிக்கு அடிப்படையாக இருப்பது குறைந்து செல் பயன்பாட்டு விதி மட்டுமல்ல, அதற்கிணையான சம இறுதிநிலைப் பயன்பாட்டு விதியுமாகுமென விளக்கி வந்தனர். நுகர்வோன் மிகவுயர்ந்த அளவு நிறைவு பெற வேண்டுமெனில், ஒவ்வொரு பொருளிலுஞ் செலவிடும் இறுதிநிலை ரூபாயிலிருந்து அவன் பெறுகிற பயன்பாடுகள் சமமாயிருக்க வேண்டும். இந்தப் பொருள்களில் ஏதாவதொன்றன் விலை இறங்கினால், அவன் தன் நுகர்வுத் திட்டத்தை மாற்றியமைக்க வேண்டும். குறிப்பிட்ட பொருளின் விலையிறக்கம் அதன் இறுதிநிலைப் பயன்பாட்டுக்கும், ரூபாயின் இறுதிநிலைப் பயன்பாட்டுக்கு மிடையே ஒரு சமநிலையின்மையைக் கொணர்கிறது. விலையிறக்கம் அப்பொருளில் செலவிடும் ரூபாயின் இறுதிநிலைப் பயன்பாட்டை உயர்த்தி விடுவதே இதற்குக் காரணம். சம நிலைக்கு மீள வேண்டுமெனில் இந்த இறுதிநிலைப் பயன்பாட்டைக் குறைத்தாக வேண்டும். இதற்கு வழி அந்தப் பொருளை முன்னிலும் அதிகமாக வாங்குவதில் ரூபாயைச் செலவிடுவது தான். இப்போது, விலை இறங்கும் போது தேவை அளவு

பெருகுவது இயல்பாகிறது.

மேலே கண்ட விளக்கம் பயன்பாட்டை அளக்க முடியும் என்ற எடுகோளின் மீது நிறுவப் பட்டுள்ளது. இந்நாளைய ஆசிரியர்கள் இந்த எடுகோளை ஏற்றுக் கொள்வதில்லை. எனவே, ஹிக்ஸ் போன்றோர் ஒரு பொருளின் விலை இறங்கும் போது அதன் தேவை அளவு பெருகுவதற்கு வேறொரு காரணத்தைத் தருகின்றனர். இவர்கள் கருத்துப்படி விலை மாறுதலின் விளைவுகள் வருமான விளைவுகள், பதிலீட்டு விளைவுகள் என இருவகைப் படும்.

விலை இறக்கம் நுகர்வோனின் உண்மை வருமானம் மிகுவதற்குச் சமம். துணி விலை, மீட்டர் ரூ 3-இலிருந்து, ரு. 2-ஆக இறங்கி விட்டால், அதன் விளைவாக, நுகர்வோன் வழக்கமாக வாங்கும் அளவு துணியை வாங்கி விட்ட பிறகும் வருமானத்தில் ஓர் அளவு மிச்சம் ஏற்படுகிறது. இது, உண்மையில் அவனது வருமானம் மிகுந்ததற்குச் சமம். குறிப்பிட்ட பொருளில் நுகர்வோன், வழக்கமாக, மிகுதியாகச் செலவிடுவானானால், இந்த மிச்சத்தின் அளவு பெரிதாயிருக்கும். இந்த மிச்சத்தைக் குறிப்பிட்ட பொருளையே மேலும் வாங்குவதில் செலவிடலாம் : வருமானம் மிகும் போது எல்லாப் பொருள்களையும் நுகர்வோன் மிகுதியாக வாங்க முன் வருவது இயல்பு.

பிற பொருள்களின் விலைமாறாத நிலையில், ஆதாரப் பொருள்களின் விலை இறங்கும் போது, பிற பொருள்களுக்குப் பதிலாக, நுகர்வோன், அவற்றை மிகுதியாக வாங்க முன் வருவது இயல்பு. இப்போது தனது வாழ்க்கைத் தரத்தை மிகவும் மலிவாக அவனால் பேண முடிகிறது. இதுவே விலைமாறுதலின் பதிலீட்டு விளைவு. இவ்விரு விளைவுகளாலும், விலை இறங்கும் போது தேவை அளவு பெருகுகிறது என்பது தான் இங்குக் கவனிக்க வேண்டிய உண்மை. [1]

ஆர். டி. பை. (R. T. Bye in 'Principles of Econ ›mics') தமது நூலில் தேவை விதிக்கு நான்கு காரணங்களைத் தந்துள்ளார். முதல் காரணம் குறைந்து செல் பயன்பாட்டு விதி தான். இரண்டாவது க ரணம் ஒரு பொருள் பலவழிகளில் பயன்படத் தக்கதாயிருப்பது. விலை இறங்க இறங்கப் பொருளை முக்கியத்துவங் குறைந்த துறைகளிலும் பயன் படுத்த முயல்வதால், அதன் தேவை அளவு பெருகுவது இயல்பு. மூன்றாவதாக, மக்கள் வேட்கைத்தரத்தில் வேறுபாடுகள் இருப்பதும் தேவைவிதிக்குக் காரணமாகிறது. ஒரு பொருளின் மீதுவேட்கை மிக்கவர் மட்டும் அதனை ஏறிய விலையிலும் வாங்கமுன்வரும் போது, அதன் மீது வேட்கை குறைந்தவர்களும் விலை இறங்கும் போது அதனை வாங்க முன்வருவதால் தேவை அளவு பெருகுவது இயல்பு. இறுதிக் காரணம் மக்கள் வெவ்வேறு அளவு வருமானமுள்ளவராக இருப்பது. ஒரு பொருள் குறைந்த அளவிலேயே கிடைக்கப்பெற்றால் ஏற்ற விலை தந்து செல்வந்தர் மட்டும் அதனைப் பெற்று விடுகின்றனர். ஆனால், அதன் அளவு பெருகும்போது, அதைப் பிறர்க்கும் விற்றாக வேண்டிய நிலை எற்படுகிறது; விலையைக்குறைத்தால் தான் அது இயலும்.

விலை நுகர்வுக் கோட்டிலிருந்தும் தேவைப் பட்டியலையும், தேவை வளைகோட்டையும் வருவிக்கலாம். கீழேயுள்ள படத்தில்




OY-இல் பணத்தையும், OX-இல் பொருளையும் அளப்பதாக வைத்துக் கொள்வோம். X பொருளின் விலை தொடர்ந்து இறங்கும் போது LM, LM,[1] LM[2] என்ற புதிய விலைக்கோடுகளைப் பெறுகிறோம். முதலில் நுகர்வோன் P புள்ளியில் சமநிலை எய்தும்போது, X-இன் விலை OL/OM ஆக இருக்கிறது. அவ்விலையில் நுகர்வோன் OR அளவு வாங்குகிறான்; OL/OM[1] விலையில் OR[1] வாங்குகிறான். இவ்வாறே OL/OM[2] விலையில் OR[2] வாங்குகிறான். OL, ரூ. 120 என்றும், OM, OM[1], OM[2], ஆகியவை முறையே 6, 8, 12 அலகு பொருள் என்றும் வைத்துக் கொள்வோம். இப்போது ஒரு தேவைப் பட்டியல் கீழ் வருமாறு உருவாகிறது :

| X-பொருளின் விலை | X-பொருள் தேவை அளவு |
|---|---|
| OL/OM (ரூ 20) | OR |
| OL/OM[1] (ரூ. 15) | OR[1] |
| OL/OM[2] (ரூ. 10) | OR[2] |

இதனை ஒரு வரைபடத்தில் பகர்த்தினால், முன்பக்கத்தில் தாழே யுள்ள படத்தில் இருப்பது போலக்கீழ்நோக்கிச் சரியும் தேவை வளை கோடு (DD) கிடைக்கும்.

தேவை விதி பொதுவான தொரு விதியாக இருந்த போதிலும் சில விதி விலக்குகள் இல்லாமலில்லை. பென்ஹாம் நான்கு விதி விலக்குகளைக் குறிப்பிடுவார் :

1. விலை ஏறும் போது, மேலும் விலை ஏறலாம் என்ற அச்சத்தால், சிலர் இப்போதுள்ள ஏறிய விலையிலேயே மிகுதியான அளவு வாங்கிவிட முன்வரலாம். இந்தப் போக்கை அரசியல் நெருக்கடிக் காலங்களில் பெரும்பான்மையாகவும், பங்கு அங்காடியில் வழக்கமாகவும் காணலாம்.

2. நகைகள், வைரங்கள் போன்ற ஆடம்பரப் பொருள்களை ஏறிய விலை தந்தும் செல்வந்தர் வாங்குவார்கள். தங்களிடம் விலையுயர்ந்த பொருள்கள் இருப்பதாகப் பிறர்க்குக் காட்டவே இவற்றை வாங்குகின்றனர். ஆகவே, இவற்றின் விலை ஏற ஏற, தேவை அளவும் ஏறலாம்.[1]

3. வாங்குவோர் விலைமாறுதல்களை அறியாதவர்களாயிருக்கும் போது, முன் போன்ற அதே அளவில் அவர்கள் தொடர்ந்து வாங்கிக் கொண்டிருக்கலாம்.

4. அரிசி போன்ற இன்றியமையாப் பொருள்களின் தேவை அளவும், விலை மாறும் போது மாறாதிருக்கலாம். அரிசி விலை இறங்கியுள்ள காரணத்தால் 'இரு நாளைக்கு ஏலென்றால் ஏலாதே இடும்பை கூர் வயிறு !'

இவை தவிர கிஃப்பன் என்பார் மட்டப்பொருள்களைப் பொருத்த வரையிலும் தேவை விதி அவ்வளவு உண்மையாக இராது எனச் சுட்டுவார். 19-ஆம் நூற்றாண்டில் ரொட்டி விலை உயர்ந்த போது, தொழிலாளர் ஏராளமாக ரொட்டி வாங்க முன் வந்தனர். தமது வயிற்றுப் பாட்டுக்காக ஏராளமாக ரொட்டியை நுகராமலிருக்க அவர்களால் முடியவில்லை. இறைச்சி போன்ற பிற பொருள்களில் வழக்கமாக இடுகிற செலவைக் குறைத்து, ரொட்டியில் மிகுதியாகச் செலவிட அவர்கள் முன் வந்தனர். தேவை விதிக்கு விலக்கான

1 " வைரங்கள் பெருஞ் செலவு பிடிப்பவை, அதுவும் வீகம்ஸீயில் வாங்குவதென்றால் ! " என்ற வீகம்ஸீ வணிகநிறுவனத்தின் விளம்பரம் இங்குக்கருதத்தக்கது!

இத்தகைய மட்டப் பொருள்கள் இன்று 'கிஃப்பன் பொருள்கள்' என்றே கூறப் பெறுகின்றன.

தேவை விதியை விளக்கும் போது, தேவைச் சூழல்கள் மாற வில்லை என்ற எடுகோளை நிறுவிக் கொண்டோம். இந்த எடுகோளை அகற்றி விட்டால் என்ன நிகழும் எனப் பார்க்க வேண்டும். தேவைச் சூழல் மாறும் போது தேவையானது மாறுவதியல்பு. நுகர் வோன் வருமானம், தொடர்புள்ள பிற பொருள் விலைகள், அவன் விருப்பு வெறுப்புக்கள் முதலியவற்றில் ஏற்படும் மாறுதல்கள் தேவை யையும் மாற்றிவிடத் தக்கன. இப்போதும், முன்னைவிடக் கூடுதலாக வோ குறைவாகவோ வாங்கலாம். இந்த கூடுதல் குறைவையும், விலை மாறுதலால் ஏற்படும் கூடுதல் குறைவையும் தனித்தறிய வேண்டும்.

| ஒரு மீட்டர் துணியின் விலை | மொத்தத் தேவை (மீட்டரில்) | தேவைச் சூழல் மாறிய பின் மொத்தத்தேவை(மீட்டரில்) |
|---|---|---|
| ரூ 5 | 5 | 8 |
| ரூ 4 | 11 | 23 |
| ரூ 3 | 23 | 30 |
| ரூ 2 | 35 | 50 |

மேலேயுள்ள பட்டியலில் இரண்டாவது பத்தியில் ரூ. 5 விலை யில் 5 அலகுகள் வாங்குவது குறிக்கப் பெற்றுள்ளது. ஆனால் விலை ரூ. 5 மாறாத நிலையிலும், தேவைச் சூழல் மாறும் போது, முன்னை விட மிகுதியாக–8 அலகுகள்–வாங்குவதாகக் குறிப்பிடப் பெறுகிறது. இவ்வாறே, ஒவ்வொரு விலை மட்டத்திலும் முன்னைவிட மிகுதியாக வாங்குவதைப் பார்க்கிறோம். இவ்வாறு, தேவைச் சூழலில் ஏற் பட்ட மாறுதலால், நடப்பு விலையில் முன்னை விட மிகுதியாக வாங்க வோ அல்லது முன்பு வாங்கிய அதே அளவு இப்போது ஏறிய விலை யில் வாங்கவோ செய்தால் தேவை பெருகுவதாகச் சொல்லலாம். இதே போன்று தேவை சுருங்குவதாகச் சொல்லும் போது, நடப்பு விலையில் முன்னைவிடக் குறைவாக வாங்குவதாகவோ, அல்லது முன்பு வாங்கிய அதே அளவு இப்போது இறங்கிய விலையில் வாங்கு வதாகவோ பொருள் படுகிறது.

இதனை ஒரு வரைபடத்தின் வழியாகவும் விளக்கலாம் : படத் தில் DD தேவைச் சூழல் மாறும்முன்பு இருந்த தேவை வளைகோடு. தேவைச் சூழல் மாறிய பின் புதிய தேவை வளைகோடுகள் கிடைக் கின்றன. தேவைச் சூழலால் தேவை பெருகும் போது, $D^1D^1$ என்ற புதிய தேவை வளைகோடு, பழைய தேவை வளைகோட்டின்

வலப்புறம் உருவாகிறது ; தேவை சுருங்கும் போதோ $D^2D^2$ என்ற




புதிய தேவை வளைகோடு, பழைய தேவை வளைகோட்டின் இடப் புறம் உருவாகிறது.

தேவைச் சூழல் மாறாதிருக்க, விலைமட்டும் மாறுவதால் தேவை அளவு மாறும் போது, ஒரு தேவை வளைகோட்டின் ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்கு, நுகர்வோன், இடம் பெயர்கிறான். விலை மாறாதிருக்க, தேவைச் சூழல் மாறுவதால் தேவை மாறும் போது, ஒரு தேவை வளைகோட்டிலிருந்து மற்றொருதேவை வளைகோட்டுக்கு, நுகர்வோன் இடம் பெயர்கிறான். படத்தில் A என்ற புள்ளியிலிருந்து வலமும் இடமுமாகச் செல்லும் அம்புக் குறிகள், A குறிப்பிடும் விலைமட்டத்தில் தேவைச் சூழல் மாறுதலால் முன்னைவிட மிகுதியாகவோ குறைவாகவோ வாங்க நேர்வதைச் சுட்டிக் காட்டுகின்றன. இதே போன்று A-இயிலிருந்து மேலும் கீழுமாகச் செல்லும் அம்புக் குறிகள், A குறிப்பிடும் அதே அளவு, தேவைச் சூழல் மாறுதலால், முன்னை விட உயர்ந்த அல்லது குறைந்த விலைகளில் வாங்க நேர்வதைச் சுட்டிக் காட்டுகின்றன.[1]

இனி, தேவைச் சூழலால் தேவை மாற நேரும் போது, அதன் போக்கு எவ்வாறிருக்கும் எனப் பார்க்க வேண்டும் ; அதாவது தேவைச் சூழல் மாறுதல் எப்போது தேவையைப் பெருக்குகிறது,

[1] விலைமாறுதல், தேவை சூழல் மாறுதல் இவ்விரண்டினாலும் தேவையில் ஏற்படும் மாறுதல்களைப் பிரித்தறிவதற்காக முதல் காரணத்தால் ஏற்படும் மாறுதல்களைத் 'தேவை அளவு' மாறுதல்களென்றும், இரண்டாவது காரணத்தால் ஏற்படும் மாறுதல்களைத் 'தேவை' மாறுதல்களென்றும் குறிப்பிடுகிறோம்.

எப்போது தேவையைச் சுருக்குகிறது எனப் பார்க்க வேண்டும். தேவைச் சூழலின் முதன்மையான பொருளாதாரக் காரணிகள் வருமானமும், தொடர்புள்ள பிறபொருள்களின் விலையுமே யாகும். எனவே, இவ்விரு காரணிகளும் தேவையை எவ்வாறு பாதிக்குமென ஆய்வது நம் கடன். இதனை அடுத்த இரு கிளைத் தலைப்புக்களில் நிறைவேற்றலாம்.

## வருமானஞ் சார் தேவை

பல்வேறு வருமான மட்டங்களில் ஒரு பொருள் எவ்வளவு தேவைப் படுகிறது என்பதைப் பற்றிய ஆய்வே வருமானஞ் சார் தேவையை யொட்டியது. மற்றவை மாறுதிருக்க, வருமானம் மிகும் போது, பெரும்பாலும், தேவையும் மிகுந்து செல்வது வழக்கம். இந்த உண்மையை ஒரு வரை படத்தில் காட்ட முயன்றால் வருமானஞ் சார் தேவை வளைகோடு மேல்நோக்கிச் சரிவதாகத் தான் இருக்கும். (இந்தப் போக்குக்கு இயல்பான விலை சார் தேவை வளை கோட்டின் போக்குக்கு முற்றிலும் மாறுபட்டது என்பது கவனிக்கத் தக்கது.)

இந்தப் பொது விதிக்கு மட்டப் பொருள்கள் விதி விலக்கு. வருமானம் மிகும் போது இவற்றின் தேவை குறைந்து செல்வது இயல்பு. நம் நாட்டில், சமீப காலத்தில், பொதுவான வருமான வளர்ச்சியின் விளைவாகப் புன்செய்த் தானியங்களை நுகர்வோர் தொகை குறைந்து, அதனுல் இவற்றின் தேவையும் முன்னைவிடக் குறைவாக இருப்பது இதனை விளக்கும். இப்பொருள்களின் வருமானஞ் சார் தேவை வளைகோடு கீழ் நோக்கிச் சரிவதாக இருக்கும்.

## பின்னிய தேவை

தொடர்புள்ள மற்றொரு பொருளின் பல்வேறு விலை மட்டங்களில், குறிப்பிட்ட பொருள் எவ்வளவு தேவைப் படுகிறது என்பதைப் பற்றிய ஆய்வே பின்னிய தேவை (Cross Demand) யை யொட்டியது. இங்கே ஒன்றன் தேவை அடுத்ததன் விலையுடன் பின்னிக் கிடப்பதாலேயே இப் பெயர் பெற்றது. பொருள்களிடையே நிலவும் தொடர்பு இங்கு மிகவும் முக்கியமானது. இத்தொடர்பு இருவகைப்படும்: ஒன்று போட்டித் தொடர்பு; அடுத்தது நிரப்புத் தொடர்பு. தேயிலையும் காப்பியும் ஒரே தேவையை நிறைவேற்றத் தக்கவை; எனவே ஒன்றுடன் ஒன்று போட்டியிடுகின்றன: இவை பதிலீட்டுப் பொருள்கள். இவற்றுள், ஒரு பொருளின் (தேயிலை) விலை ஏறினுல், அதற்குப் பதிலாக அடுத்த பொருளைப் (காப்பி)

பயன்படுத்த முடியுமாதலால் இவ்விரண்டாவது பொருளின் தேவை மிகுவது இயல்பு. மாறாக ஒரு பொருளின் (தேயிலை) விலை இறங்கினால், அதனை அடுத்த பொருளுக்குப் (காப்பி) பதிலாக இடமுடியுமாதலால், இவ்விரண்டாவது பொருளின் தேவை குறைவது இயல்பு. இவ்வாறு, தேயிலை விலை சார்ந்த காப்பியின் தேவை வளைகோட்டை வரைய முற்பட்டால், அது மேல் நோக்கிச் சரிவதாக இருக்கும்.

பேனாவும் மையுமாகச் சேர்ந்து ஒரு தேவையை நிறைவேற்றுகின்றன: இவை ஒன்றையொன்று நிரப்புகின்றன. இவை நிரப்புப் பொருள்கள் எனப் பெறும். இவற்றுள் ஒரு பொருளின் (பேனா) விலை ஏறினால், அதன் தேவை மட்டுமல்ல, அத்துடன் சேர்த்துத் தேவைப் படுகிற அடுத்த பொருளின் (மை) தேவையும் மிகுகிறது. இவ்வாறு, பேனாவின் விலை சார்ந்த மையின் தேவை வளைகோட்டை வரைய முற்பட்டால், அது கீழ் நோக்கிச் சரிவதாக இருக்கும்.

## விற்போன் நோக்கில் தேவை

பொருளை வாங்கும் போது, வாங்குவோன் பணத்தைச் செலவிடுகிறான். அச்செலவு விற்போனுக்கு வருவாய் ஆகிறது. இதனால் வாங்குவோன் தேவையைப் பொருத்தே விற்போன் வருவாய் அமைகிறது. தேவையின் போக்கை யொட்டியே விற்போன் வருவாய்ப் போக்கும் அமைகிறது. அடுத்துள்ள பட்டியலி லிருந்து தேவைக்கும் விற்போன் வருவாய்க்கும் இடையே யுள்ள தொடர்பை ஆயலாம்.

| பொருள் அளவு | தேவை விலை | மொத்த வருவாய் | சராசரி வருவாய் | இறுதிநிலை வருவாய் |
|---|---|---|---|---|
| 1 | 10 | 10 | 10 | 10 |
| 2 | 9 | 18 | 9 | 8 |
| 3 | 8 | 24 | 8 | 6 |
| 4 | 7 | 28 | 7 | 4 |
| 5 | 6 | 30 | 6 | 2 |
| 6 | 5 | 30 | 5 | 0 |
| 7 | 4 | 28 | 4 | -2 |
| 8 | 3 | 24 | 3 | -4 |

முதலிரு பத்திகளும் தேவை விதியை அடிப்படையாகக் கொண்டுள்ளன. பொருள் அளிப்பு பெருகப் பெருக அதனைக் குறைந்த

விலைக்கே விற்க முடியும். மூன்ருவது பத்தியில் பொருளின் பல் வேறு அலகுகளை விற்பதால் விற்போன் பெறும் வருவாய் குறிப்பிடப் பட்டுள்ளது. மேலும் மேலும் விற்கும் போது மொத்த வருவாய் குறைந்து செல் வீதத்தில் வளர்ந்து செல்கிறது ; ஒரு நிலைக்குப் பின் மொத்த வருவாய் குறைந்து செல்கிறது. அடுத்த பத்தியில் பொருளின் மேலும் மேலும் அலகுகளை விற்கும் போது விற்போன் பெறுகிற சராசரி வருவாய் குறிப்பிடப் படுகிறது ; இதுவும் பொருள் விலையும் ஒன்றே. பொருள் அலகுகள் எண்ணிக்கையை விலையால் பெருக்கினல் கிடைக்கிற தொகை மொத்த வருவாய் ; இத்தொகையைப் பொருள் அலகுகள் எண்ணிக்கையால் வகுத்தால் கிடைக்கிற தொகை சராசரி வருவாய் ; இந்நிலையில் பொருள் விலையும் சராசரி வருவாயும் ஒன்ருகத்தான் இருக்க முடியும் இறுதியாகப் பொருளின் அடுத்ததோர் அலகை விற்பதால் மொத்த வருவாயில் ஏற்படுகிற மாறுதல் இறுதிநிலை வருவாய் எனக் குறிப்பிடப் படுகிறது.

சராசரி வருவாயும் இறுதிநிலை வருவாயும் ஒரு சேரக் குறைந்து செல்வதைப் பட்டியலி லிருந்து அறியலாம். இரண்டும் குறைந்து செல்கிற போதிலும், எல்லா நிலைகளிலும் இறுதிநிலை வருவாய் சராசரி வருவாயை விடக் குறைவாக இருப்பதையும் பார்க்கிருேம். இவ்வுண்மை அடுத்துள்ள படத்தில் இரு வளைகோடுகள் வழியாகக் குறிப்




பிடப் பட்டுள்ளது. படத்தில் சராசரி வருவாய் வளைகோடும் (AR) இறுதிநிலை வருவாய் வளைகோடும் (MR) கீழ் நோக்கிச் சரிந்து செல்கின்றன. ஆனல், இறுதிநிலை வருவாய் வளைகோடானது எப்பொழுதும் சராசரி வருவாய் வளைகோட்டுக்குத் தாழ்வாகவே செல்கிறது.

## தேவை நெகிழ்ச்சி

குறிப்பிட்ட பொருளின் விலை, நுகர்வோன் வருமானம், தொடர்புள்ள பிற பொருள்களின் விலை ஆகிய மூன்று பொருளாதாரக் காரணிகளும் தேவையில் மாறுதல்களை ஏற்படுத்தத் தக்கன. இந்த மாறுதல்கள் இன்றியமையாதபடி ஒவ்வொரு நிலையிலும் ஏற்படுகிற போதிலும், அம்மாறுதல்களின் அளவு எல்லா இடங்களிலும் சமமாக இருக்க வேண்டும் என்றில்லை. விலை (அல்லது, வருமானம்) குறிப்பிட்ட அளவு மாறும் போது தேவையும் குறித்த அளவு தான் மாறும் என்ற நியதியில்லை. எனவே, இந்த மாறுதல்கள் ஏற்படுவது மட்டுமல்ல, இவை எந்த அளவுக்கு ஏற்படுகின்றன என்பதைப் பற்றியும் மார்ஷல் போன்றோர் சிந்திக்க முற்பட்டனர். இந்தச் சிந்தனையிலிருந்து உருவாகியது தான் தேவை நெகிழ்ச்சிக் (Elasticity of Demand) கோட்பாடு.

தேவை மாற மூன்று காரணிகள் பொறுப்பு எனச் சொல்வதால், அம்மாறுதல்களின் அளவை யொட்டிய நெகிழ்ச்சிக் கோட்பாட்டை ஆயும் போதும் விலைசார் நெகிழ்ச்சி, வருமானஞ்சார் நெகிழ்ச்சி, பின்னியநெகிழ்ச்சி எனப்பகுத்து ஆய வேண்டும்.

குறிப்பிட்ட அளவு விலை மாறும் போது, எந்த அளவுக்குத் தேவை மாறுகிறது என்பதையே விலை சார் நெகிழ்ச்சி குறிப்பிடுகிறது. எனவே, இந்த நெகிழ்ச்சியைத் துல்லியமாக அளக்க வேண்டுமெனில், முதலில் விலை எந்த அளவுக்கு மாறியுள்ளது என்பதையும், அடுத்து தேவை எந்த அளவுக்கு மாறியுள்ளது என்பதையும் அளந்தறிய வேண்டும். ரூ. 2 விலை ஏறியுள்ளதாக வைத்துக் கொள்வோம். இந்த ரூ. 2, விலை மாறுதலின் உண்மை நிலை பற்றி எதுவுஞ் சொல்ல வில்லை. ரூ 1000 விலையில், ரூ 2 ஏறியிருக்கலாம் ; அல்லது ரூ 1 விலையில், ரூ 2 ஏறியிருக்கலாம் ! எனவே விலை மாறுதலின் உண்மை அளவை அறிய வேண்டுமெனில், ஏற்கெனவே இருந்த விலை எவ்வளவு ? இப்போது ஏற்பட்டுள்ள மாறுதல் ஏற்கெனவேயிருந்த விலையின் எந்தவிகிதம் ? என்பனவற்றை அறிய வேண்டும். இவ்வாறு, விலைமாறுதலின் அளவுவிலையில் ஏற்பட்டுள்ள மாறுதலை, ஏற்கெனவே இருந்த விலையால் வகுப்பதால் கிடைக்கும் ஈவு என்று சொல்லலாம். ஏற்கெனவே ரூ 10 என்றிருந்த விலையில் ரூ 2 ஏறியிருந்தால், 2/10 அல்லது 1/5 விலை மாறியுள்ளது. இதுவே விலை மாறுதலின் அளவு. இது போன்றே தேவை மாறுதலின் அளவு, தேவையில் ஏற்பட்டுள்ள மாறுதலை ஏற்கெனவே இருந்த தேவையால் வகுப்பதால் கிடைக்கும் ஈவு என்று சொல்லலாம். இப்போது விலை மாறுதலின் அளவும், தேவை மாறுதலின் அளவும் இரு

பின்னங்களாகக் கிடைக்கும். எளிமை கருதி இவ்விரண்டு பின்னங்களையும் சதவீதமாக்கிக் கொள்ளலாம். விலைசார் நெகிழ்ச்சி, விலை மாறுதலால் தேவை மாறும் வீதமேயாதலால், இந்த நெகிழ்ச்சியின் அளவு தேவை மாறுதலின் சத வீதத்தை, விலை மாறுதலின் சத வீதத்தால் வகுக்கும் போது கிடைக்கிற ஈவு தான். எளிய சமன் தொடரொன்று உருவாகிறது :

$$\text{விலைசார் தேவை நெகிழ்ச்சி} = \frac{\text{தேவை மாறுதலின் சதவீதம்}}{\text{விலை மாறுதலின் சதவீதம்}}$$

இந்த ஈவு ஒன்ருகவோ, ஒன்றுக்கு மேற்பட்டோ, ஒன்றுக்குக் குறைவாகவோ இருக்கலாம். இந்த அடிப்படையில் தேவை நெகிழ்ச்சியும் ஒன்றுக்குச் சமமாகவோ, ஒன்றுக்கு மேற்பட்டோ, ஒன்றுக்குக் குறைவாகவோ இருக்கலாம் என்பார் மார்ஷல். விலையில் ஏற்பட்ட குறிப்பிட்ட வீதம் மாறுமானுல், தேவை நெகிழ்ச்சி ஒன்றுக்குச் சமம் ($e=1$) எனலாம். மாருக, விலையில் ஏற்பட்ட குறிப்பிட்ட வீத மாறுதலின் விளைவாகத் தேவை அளவு அதைவிட உயர்ந்ததொரு வீதத்தில் மாறுமானுல் தேவை நெகிழ்ச்சி ஒன்றுக்கு மேற்பட்டிருக்கிறது ($e>1$) எனலாம். இது போன்றே, விலையில் ஏற்பட்ட குறிப்பட்ட வீத மாறுதலின் விளைவாகத் தேவை அளவு அதைவிடக் குறைந்ததொரு வீதத்தில் மாறுமானுல், தேவை நெகிழ்ச்சி ஒன்றுக்குக் குறைவாக ($e<1$) இருக்கிறது எனலாம். சில எடுத்துக் காட்டுக்களின் துணையுடன் இவற்றை விளக்கலாம்.

ஒரு பேனுவின் விலை ரூ 5. இலிருந்து ரூ. 4 ஆக ஒரு ரூபாய் குறைவதால் தேவையானது ஒரு பேனுவிலிருந்து இரண்டு பேனுவாக மிகுவதாக வைத்துக் கொள்வோம். இப்போது விலையானது 20% இறங்கியுள்ளது. அதனுல், பேனுவின் தேவையோ 100% மிகுந்துள்ளது. இப்போது, மேலே கண்ட சமன் தொடரை ஆண்டால், தேவை நெகிழ்ச்சி $=100/20=5$. விலை 20 சதவீதமே மாறியிருக்க, தேவையோ 100 சதவீதம் மாறியுள்ளது. இங்கே, தேவை நெகிழ்ச்சி ஒன்றுக்கு மேற்பட்டதாக ($e>1$) இருக்கிறது.

இன்னெரு எடுத்துக் காட்டைப் பார்ப்போம். பேனுவின் விலை ரூ. 2-இலிருந்து ரூ 1 ஆகக் குறைந்தால் தேவையானது 4 பேனுவிலிருந்து 5 பேனுவாக மிகுவதாக வைத்துக் கொள்வோம். இப்போது தேவை நெகிழ்ச்சி $=25/50=1/2$. விலை 50 சதவீதம் மாறியிருக்க, தேவையோ 25 சதவீதமே மாறியிருக்கிறது. இங்கே, தேவை நெகிழ்ச்சி ஒன்றுக்குக் குறைவாக ($e<1$) இருக்கிறது.

நெகிழ்ச்சியைக் கணிக்க வேண்டியிருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். P-உம் $P^1$-உம் தொட்டடுத்து இருப்பதாகக் கொள் வோம்.



$$\text{தேவை நெகிழ்ச்சி} = \frac{\text{தேவை மாறுதலின் சதவீதம்}}{\text{விலை மாறுதலின் சதவீதம்}}$$

$$= \frac{\frac{RPI}{OQ} \times 100}{\frac{PR}{QP} \times 100}$$

$$= \frac{RPI}{OQ} \times \frac{QP}{PR}$$

$$= \frac{RPI}{PR} \times \frac{QP}{OQ}$$

முக்கோணங்கள் $PRP^1$-உம் PQB-உம் வடிவொத்திருத்தலால் வடிவொத்த நேர்கோண முக்கோணத் தேற்றத்தின் படி $\frac{RPI}{PR} = \frac{QB}{PQ}$.

$$\text{இப்போது, தேவை நெகிழ்ச்சி} = \frac{RPI}{PR} \times \frac{QP}{OQ}$$

$$= \frac{QB}{PQ} \times \frac{QP}{OQ}$$

$$= \frac{QB}{OQ}$$

$$= \frac{QB}{NP}$$

முக்கோணங்கள் ANP-உம் PQB-உம் வடிவொத்தவையாதலின் $\frac{QB}{OQ} = \frac{PB}{AP}$. இப்போது, AP-ஐ விட PB நீளமாக இருந்தால் தேவை நெகிழ்ச்சி மிக்கதென்றும், குட்டையாயிருந்தால் குறைந்த தென்றும், சமமாயிருந்தால் நெகிழ்ச்சி ஒன்றுக்குச் சமம் என்றும் அறியலாம்.

ஏகதேசமான சில பொதுமைகளை இங்குக் குறிப்பிடலாம் : நெகிழ்ச்சி ஒன்றுக்குச் சமமாயிருந்தால் தேவை வளைகோடானது நீள்சதுரக் குவிபிறை வளைகோடாக (Rectangula- Hy; e-bola) இருக்கும் ; நெகிழ்ச்சி ஒன்றுக்கு மேற்பட்டிருந்தால், தேவை வளைகோடானது ஏறக்குறையப் படுகிடையாயிருக்கும் ; தேவை நெகிழ்ச்சி ஒன்றுக்குக் குறைந்திருக்கும் போது தேவை வளைகோடு கிட்டத் தட்டச் செங்குத்தாகவே இருக்கும்.

இவை தவிர, வேறிரு நிலைகளையும் குறிப்பிடலாம். தேவையானது நிறைந்த நெகிழ்ச்சியுடனோ (Perfectly elastic), நிறைந்த நெகிழ்ச்சி யின்மையுடனோ (Perfectly inelastic) இருக்கலாம். அப்போது, தேவை வளைகோடு, முதல் நிலையில் படுகிடையாக x அச்சுக்குச் சமதூரமாகவும், இரண்டாவது நிலையில் செங்குத்தாக y அச்சுக்குச் சமதூரமாகவும் இருக்கும்.

இந்த ஐந்து நிலைகளையும் அடுத்துள்ள ஐந்து படங்களும் காட்டுகின்றன. எல்லாப் படங்களிலும் DD தேவை வளைகோட்டைச் சுட்டுகிறது : OP இலிருந்து OQ ஆக விலை நேர்பாதியாகக் குறைவதாக வைத்துக் கொள்வோம். விலை நேர்பாதியாகக் குறையும் போது தேவை அளவும் சரியாக இரட்டிப்பதை முதல் படத்தில் காணலாம் ; மொத்தச் செலவீடும் இரு நிலைகளிலும் சமமாகவே உள்ளது. (OPRM=OQSN) எனவே, இங்கு தேவை நெகிழ்ச்சி ஒன்றுக்குச் சமம். விலை நேர்பாதியாகத் குறையும் போது, தேவை அளவு இருமடங்குக்கும் மிகுதியாக வளர்வதை, இரண்டாம் படத்தில் காணலாம் ; மொத்தச் செலவீடும் இங்கு வளர்ந்துள்ளது. (OQSN <OPRM). இதனால், இங்குத் தேவை நெகிழ்ச்சி ஒன்றுக்கு

மேற்பட்டதாகிறது. விலை நேர்பாதியாகக் குறையும் போது, தேவை அளவு இருமடங்கை விடக் குறைவாக வளர்வதை, மூன்றும்




படத்தில் காணலாம்; மொத்தச் செலவீடும் இங்குக் குறைந்துள்ளது (OQCN > OPRM). இங்குத் தேவை நெகிழ்ச்சி ஒன்றுக்குக் குறைவாக இருப்பது தெளிவு.

இவ்வாறு ஒரு பொருளின் விலைசார் நெகிழ்ச்சி பல்வேறு வகைப் பட்டிருப்பதைப் பார்க்க முடிகிறது. பொதுவாகக் குறிப்பிடுவ தானால், விலையில் ஏற்படும் ஒரு சிறிதளவு மாறுதலின் விளைவாகத் தேவையின் அளவு மிகுதியானபடி மாறினால், அப்போது தேவை யானது நெகிழ்ச்சியாயிருப்பதாகவும், விலையில் ஏற்படும் ஒரு பெரிய மாறுதலின் விளைவாகத் தேவையின் அளவு சிறிதே மாறினால், அப் போது தேவையானது நெகிழ்ச்சி யற்றிருப்பதாகவும் சொல்ல லாம்.

இயல்பாகவே, பொருள்களின் தேவை, நெகிழ்ச்சியாக (அல் லது, நெகிழ்ச்சியற்று) இருப்பதேன் என்ற வினா எழுகிறது. விலை சார் தேவை நெகிழ்ச்சியை மட்டும் எடுத்துக் கொண்டால், அது பொருளின் இயல்பு, விலைமட்டம், கால அளவு ஆகிய மூன்று காரணி களைப் பொருத்துள்ளது எனலாம்.

பொருளின் இயல்பு அதன் முக்கியத்துவத்தையும், அது பயன் படும் துறைகளின் எண்ணிக்கையையும் ஒட்டி நெகிழ்ச்சியைப் பாதிக்கிறது. இன்றியமையாப் பொருள்களை என்ன விலையானாலும் வாங்கித்தான் ஆக வேண்டும். எனவே, விலையிலேற்படும் சிறு

மாறுதல்கள் இவற்றின் தேவையை அவ்வளவாகப் பாதிப்பதில்லை. இவற்றின் தேவை, இயல்பாகவே, நெகிழ்ச்சியற்றிருக்கும். மாருகப் போகப் பொருள்களும் வசதிப் பொருள்களும் இல்லாமலும் வாழ முடியும். இவற்றின் விலை ஏறும் போது, தேவை அளவு பெரிதும் குறைகிறது. எனவே, இவற்றின் தேவை, நெகிழ்ச்சியா யிருக்கும். பொருள்கள் பயன்படு துறைகளின் எண்ணிக்கையும் தேவை நெகிழ்ச்சியைப் பாதிக்கிறது. மின்சாரம் போன்ற பலபயனுள்ள பொருள்களின் விலை ஏறினால், மிக முக்கியமான துறைகளில் மட்டும் பயன்படுத்தி விட்டு, விலை இறங்கும் போது பிறவெல்லாத் துறை களிலும் பயன்படுத்த முன்வருவது இயல்பு. இங்கே, விலை இறக்கம் தேவை அளவைப் பேரளவில் மிகுப்பதால், தேவை நெகிழ்ச்சி யாயிருப்பது வழக்கம்.

விலை மட்டமும் பொருள்களின் தேவை நெகிழ்ச்சியைப் பாதிக்கிறது. இயல்பாகவே உயர்ந்த விலையும் குறைந்த விலையும் கொண்ட பொருள் வகைகளின் தேவை நெழ்ச்சி யற்றிருப்பது இயல்பு. விலையுயர்ந்த பொருள்களைச் செல்வந்தன் மட்டுமே வாங்குவதால், அவற்றின் விலையிலேற்படும் சிறு மாறுதல்கள் தேவை அளவைப் பாதிப்பதில்லை. இது போன்றே விலை மிகக்குறைந்திருக்கும் போதும், தேவைப்படுபவர் அனைவரும் ஏற்கெனவே வேண்டு மட்டும் வாங்கி விடுகிற காரணத்தால், விலையிலேற்படும் சிறு மாறுதல்கள் தேவை அளவைப் பாதிப்பதில்லை.

குறுகிய காலத்தில் நெகிழ்ச்சி குறைவாக இருந்தாலும், விலை இறக்கம் நீடித்தால், காலப் போக்கில் நெகிழ்ச்சி மிகலாம். இதற்குக் காரணங்கள் சிலவுண்டு: முதலாவதாக, தமது தேவைத் திட்டத்தை நுகர்வோர் மாற்றுவதென்பது அவ்வளவு எளிதன்று; பழக்கத்தில் ஊறிப்போன மனிதன் தன்னுடைய விருப்பத் தேர்வுகளை உடனடியாக மாற்றிவிட முடியாது. இரண்டாவதாக, அவ்வாறு மாற்ற வேண்டுமெனில் வேறு சில துணைப் பொருள்களும் வேண்டி வரலாம்; அவற்றைப் பெறக் காலம் பிடிக்கலாம். மின்சாரம் மலிந்து விட்டதென்று வீட்டில் மின் விளக்கு ஏற்ற வேண்டுமெனில், முதலில் வீடு முழுதும் மின் தொடர்புச் சாதனங்களைப் பொருத்தியாக வேண்டுமே! இறுதியாக, விலை இறக்கத்தை எல்லாரும் அறியக் காலம் பிடிக்கும். அப்போது தான் விலை இறக்கத்தின் முழுப் பயனையும் தெரிந்து கொள்ள முடியும்.

இவை தவிர, வருமானம், பிறபொருள்களின் விலை மாறுதல்கள் ஆகிய காரணிகளும் பொருளின் தேவை நெகிழ்ச்சியைப் பாதிக்கின்றன. அவற்றை இனித் தனித்தனியாக ஆராயலாம்:

## வருமானஞ் சார் நெகிழ்ச்சி

நுகர்வோன் வருமானம் குறிப்பிட்ட அளவு மாறும் போது, ஒரு பொருளின் தேவை எந்த அளவுக்கு மாறுகிறது என்பதையே வருமானஞ் சார் தேவை நெகிழ்ச்சிக் கோட்பாடு சொல்கிறது. வருமானஞ் சார் நெகிழ்ச்சியை அளக்க உதவுகிற சமன் தொடர் இது:

$$\text{வருமானஞ் சார் தேவை நெகிழ்ச்சி} = \frac{\text{தேவை மாறுதலின் சதவீதம்}}{\text{வருமான மாறுதலின் சதவீதம்}}$$

வருமானம் எவ்வாறு மாறுகிறதோ, அவ்வாறே தேவையும், பெரும்பாலும், மாறுகிறது. வருமானம் வளர்ந்தால் தேவை பெருகும் ; வருமானம் குறைந்தால் தேவையும் குறையும். ஆனால், மட்டப் பொருள்களின் தேவை மட்டும் இதற்கு விதி விலக்கு. எனவே, பொதுவாக, வருமானஞ் சார் நெகிழ்ச்சி நேர்க்கணியமாகவே இருக்கும்.

## பின்னிய நெகிழ்ச்சி

வேறொரு பொருளின் விலை குறிப்பிட்ட அளவு மாறும் போது, குறிப்பிட்ட பொருளின் தேவை எந்த அளவுக்கு மாறுகிறது என்பதையே பின்னிய தேவை நெகிழ்ச்சிக் கோட்பாடு சொல்கிறது. பின்னிய தேவை நெகிழ்ச்சியை அளக்க உதவுகிற சமன் தொடர் இது :

$$\text{A பொருளின் பின்னிய தேவை நெகிழ்ச்சி} = \frac{\text{A பொருள் தேவை மாறுதலின் சதவீதம்}}{\text{B பொருள் விலை மாறுதலின் சதவீதம்}}$$

தொடர்புள்ள இரு பொருள்கள் பதிலீட்டுப் பொருள்களாகவோ, நிரப்புப் பொருள்களாகவோ இருக்கலாம். தன் பதிலீட்டுப் பொருளின் விலை எவ்வாறு மாறுகிறதோ, அவ்வாறே குறிப்பிட்ட ஒரு பொருளின் தேவையும் மாறும் ; அதாவது ஒன்றன் விலை ஏறினால் அடுத்ததன் தேவை மிகும். எனவே, பதிலீட்டுப் பொருள்களின் பின்னிய தேவை நெகிழ்ச்சி நேர்க்கணியமாகவே இருக்கும்.

மாறாகத் தன் நிரப்புப் பொருளின் விலை எவ்வாறு மாறுகிறதோ அதற்கு எதிராகவே குறிப்பிட்டவொரு பொருளின் தேவையும் மாறும். அதாவது ஒன்றன் விலை ஏறினால், அடுத்ததன் தேவை குறையும். எனவே, நிரப்புப் பொருள்களின் பின்னிய தேவை நெகிழ்ச்சி எதிர்க்கணியமாகவே இருக்கும்.

மேலே கண்ட தேவை நெகிழ்ச்சிக் கோட்பாடு பொருளாதார ஆய்விலும் நடைமுறையிலும் வகிக்கிற முக்கியத்துவத்தை இறுதியாகப் பார்க்கலாம்.

பொருள்களின் விலை நிருணயத்தில், தேவை நெகிழ்ச்சி இரு வகைகளில் முக்கியமாயுள்ளது. முதலாவதாக முற்றுரிமை உற்பத்தியாளன் தன் பொருளின் விலையைத் திட்டப்படுத்தும் போது, அதன் தேவை நெகிழ்ச்சியை அறிந்திருக்க வேண்டும். தேவை, நெகிழ்ச்சியுள்ளதாயிருந்தால், குறைந்த விலையில் தான் ஏராளமாக விற்க முடியும் ; நெகிழ்ச்சியற்றிருந்தால், உயர் விலையிலும் தேவை அளவு பெரிதுங் குறைந்துவிட வழியில்லை. ஆதலால், அங்கே உயர் மட்டத்தில் விலை விதிக்க முடியும். இதே கொள்கையை, வாங்குவோரிடையே அவன் வேறுபாடு காட்டும் போதும் கடைப் பிடிக்கலாம். இரண்டாவதாகக் கூட்டு விளைபொருள்களின் விலை நிருணயத்திலும் பொருள்களின் தேவை நெகிழ்ச்சி யறிந்து செயல்பட வேண்டும். (நெல்லும்வைக்கோலும்போன்ற) கூட்டுவிளைபொருள்களின் கூட்டுற்பத்திச் செலவை இருபொருள்களின் விலைகளில் பகிர்ந்து ஏற்ற வேண்டும். இங்கே, நெகிழ்ந்த தேவை யுள்ள பொருளின் விலை மீது, கூட்டுற்பத்திச் செலவின் சிறிய தொரு பகுதியைச் சுமத்துவது தான் நல்லது. இல்லையேல் அப்பொருளை விற்க முடியாது போகலாம்.

பகிர்விலும் நெகிழ்ச்சிக் கோட்பாடு இடம் பெறுகிறது. உற்பத்திக் காரணிகள் பெறும் வெகுமதி, அவற்றின் தேவை நெகிழ்ச்சியை யொட்டியது. நெகிழ்ச்சியற்ற தேவையுள்ள காரணிகளால் உயர்ந்த அளவு வெகுமதியைப் பெறமுடியும். மாறுக-எடுத்துக் காட்டாக-உழைப்பின் தேவை மிகவும் நெகிழ்ந்திருந்தால், தொழிற் சங்கங்களால் உயர்ந்த கூலி வீதங்களுக்காகப் போராடி வெற்றி பெற முடியாது.

நாட்டின் நிதியமைச்சனுக்கும் இக்கோட்பாடு பற்றிய அறிவு வேண்டும். தான் பல்வேறு பொருள்கள் மீது வரி விதிக்கும் போது, இவ் வரி விதிப்பால் குறிப்பிட்ட பொருள்களின் தேவை எவ்வாறு மாறுமென்பதை அறிந்த பின்னரே, அமைச்சனல் வரி விதிப்பின் வழி குறிப்பிட்ட அளவு நிதி திரட்ட இயலுமென உறுதி கொள்ள முடியும். தேவை நெகிழ்ச்சியுடனிருக்கும் பொருள்கள் மீது வரி விதித்தால், மிகுதியான வருவாயை அரசால் எதிர் பார்க்க முடியாது. வரி விதிப்பால் ஏற்படும் விலையேற்றம் பொருளின் தேவை அளவைப் பெரிதும் குறைத்து விடுவதே இதற்குக் காரணம்.

பன்னாட்டு வணிகத்தில் ஒரு நாடு பெறும் ஆதாயமும், குறிப்பிட்ட பொருள்களின் தேவை நெகிழ்ச்சியையே பொருத்துள்ளது. நாட்டின் இறக்குமதிகளது தேவை நெகிழ்ச்சி யாகவும், ஏற்றுமதிகளது தேவை நெகிழ்ச்சி யற்றும் இருந்தால், வணிகத்திலிருந்து ஆதாயம் மிகப் பெற முடியும். ஏனெனில், குறிப்பிட்ட நாடு அயல் நாட்டுப் பொருள்களைக் குறைந்த விலையில் தான் பெற விரும்புகிறது ; ஆனால், அந்நாட்டுப் பொருள்களை உயர் விலை கொடுத்தும் பெற அயல் நாடுகள் சித்தமாயுள்ளன.

இறுதியாக, பயிர்த் தொழிலில், செழிப்பை யொட்டிய மிகுந்த உற்பத்தி ஏழைமைக்குக் காரணமாவதன் உட்பொருளைப் புரிந்து கொள்ளவும் இக்கோட்பாடு பற்றிய அறிவு உதவுகிறது. உணவுப் பொருள்களின் தேவை நெகிழ்ச்சி யற்றிருப்பது இயல்பு. எனவே உணவு உற்பத்தியாளர் மிகுதியாக உற்பத்தி செய்யும் போது, இறங்கிய விலையிலும் ஏராளமாக விற்பனை செய்ய வழியில்லை ; இதனால் தேக்கம் ஏற்பட்டுப் பயிரிடுவோர் குலம் வருந்த நேரிடுகிறது.

## மேலும் படிக்கத்தக்க நூற்கள்

சி. வேலாயுதம் - 'பொருளாதாரம் - I'
கேர்ன்கிராஸ் – 'பொருளாதாரம்-ஓர் அறிமுகம்'
பென்ஹாம் – 'பொருளாதாரம்'
Alfred Marshall - 'Principles of Economics'
Stonier & Hague - 'A Text-Book of Economic Theory'
Edward Nevin - 'Text-Book of Economic Analysis'
K. E. Boulding - 'Economic Analysis'
D. S Watson - 'Price Theory and its Uses'
A. L. Meyers - 'Elements of Modern Economics'
G. J. Stigler - 'The Theory of Price'

பகுதி III

# உற்பத்தி

'மனைவியர் வேலை வகையினைக் கேளும்
தொழுவத்துச் சாணம் வழிக்க ஒருத்தி ;
தொட்டித் தண்ணீர் சுமக்க ஒருத்தி ;
அடுக்களைச் சமையல் ஆக்க ஒருத்தி ;
அண்டையில் அகலா திருக்க ஒருத்தி ;
அத்தனை பேர்க்கும் அடிமை யாளாய்
ஏழை பாவி யானும் ஒருத்தி....'

(கவிமணி)

# 1. உற்பத்தியும் உற்பத்திக் காரணிகளும்

இயற்கை மரபினர் உற்பத்திக்கு வகுத்த பொருளிலக்கணம் மிகக் குறுகியதா யிருந்தது. அவர்கள் கருத்துப்படி 'எச்சமாக உண்டு பண்ணுவதே' உற்பத்தி. ஒன்று பலவாக - எச்சமாக - வெளிப்படும் நிலை பயிர்த் தொழிலில் மட்டுமேயுண்டு. விளைவுப்பறித் தொழில்களும் இந்நிலையின. எனவே, இக்கருத்துப்படி இவ்விரு தொழில்களிலுமே, உண்மையில் உற்பத்தி நிகழ்வதாகச் சொல்ல முடியும்; பொருள்களை உருமாற்றும் பொறியாக்கத் தொழில்களை உற்பத்தி செய்வன என்று கருத வழியில்லை. பின்னர், ஆடம் ஸ்மித் உருவப் பொருள்களை இயற்றும் போதெல்லாம் உற்பத்தி வினை நிகழ்வதாகக் கூறி, பொறியாக்கத் தொழில்களிலும் உற்பத்தி நடப்பதாக அமைதி கண்டார். அன்னாரும், மருத்துவர், ஆசிரியர் போன்றோரது பணியை உற்பத்தி எனக் கொள்ளவில்லை [1] என்பது இங்குக் கருதத்தக்கது.

அருவப் பொருள்களின் ஆக்கத்தை உற்பத்தியின் ஒரு பகுதியாக ஏற்க மறுப்பதிலுள்ள கோளாற்றை ஸீனியர் போன்ற ஆசிரியர்கள் சுட்டிக் காட்ட முன்வந்தனர். உருவப் பொருள்கள் ஆக்கமே உற்பத்தி எனில், துண்டுத் தோல்களைக் கொண்டு செருப்பொன்றைத் தைப்பவன் உற்பத்தி செய்கிறவனாகவும், அச் செருப்புக்கு மெருகுகிடுபவன் உற்பத்தி வினையில் ஈடுபடாதவனாகவும் ஆகும் நிலை ஏற்படுகிறது. எனவே, 'நுகர்வுக்குரிய வாய்ப்பைப் பெருக்கும் வகையில் அரிய வளங்களை ஆக்குதல்' தான் உற்பத்தி என்பார் ஸீனியர். மனிதனுடைய விருப்பங்களை நிறைவேற்றுவதற்காகத் தான் உற்பத்தி நிகழ்கிறது. எனவே, மனிதனுடைய விருப்பங்களை நிறைவேற்ற உதவுகிற எல்லா முயற்சியும் உற்பத்தி

[1]. இன்னும் பொதுவுடைமை நாடுகளில் உற்பத்தி பற்றிய புள்ளி விவரங்களில் அருவப் பணிகள் இடம் பெறுவதில்லை என்பது இங்குக் கவனிக்கத் தக்கது.

வினைகளே. இங்கே 'படைப்பு'க்கும் 'உற்பத்தி'க்கும் இடையே கோடு ஒன்றை இழுத்துக் கொள்ள வேண்டும். 'படைப்பு' வேறு, 'உற்பத்தி' வேறு. வெறுமையிலிருந்து ஏதாவதொன்றைப் பிறப்பித்தலே படைப்பு. மனிதனுடைய விருப்பத்தை நிறைவு செய்யும் வகையில், ஒன்றன் உருவத்தை அல்லது இடத்தை, அல்லது காலத்தை மாற்றியமைப்பது தான் உற்பத்தி. மனிதனுடைய விருப்பங்களை நிறைவு செய்வதற்குரிய ஆற்றலை - அல்லது பயன்பாட்டைப் - படைப்பதும் பெருக்குவதுமே உற்பத்தி.

பயன்பாட்டைப் படைப்பதும் பெருக்குவதுமே உற்பத்தி என்று சொல்வதிலும் ஒரு சிறிய இடர் உள்ளது. பசித்தவொருவனுக்கு அன்னமிடுவதன் வழியாக, அவ்வன்னத்தின் பயன்பாடு மிகுக்கப் படுகிறது. ஆனால், அதனையும் உற்பத்தி என்று சொல்ல முடியுமோ? முடியாது. எனவே, பேராசிரியர் நிக்கோல்சன் சொல்வது போல 'பொருளியல் பயன்பாட்டை, அல்லது மாற்று மதிப்பை, இயற்றுவது தான் உற்பத்தி' என்று கொள்ள வேண்டும்.

இவ்வகைப் பயன்பாடு உருவப் பொருள்கள் வழிமட்டுமல்ல, பணிகள் பலவற்றின் வழியாகவும் கிடைக்கிறது. எனவே, பணி புரிவதும் உற்பத்தியைச் சார்ந்ததே. பொருள்களும் பணிகளும் நிறைவு செய் ஆற்றலைப் பெறும் வகையில் நுகர்வோர் கரத்தைச் சென்றடையவும் வேண்டும் : இதற்கு உதவுவன போக்கு வரத்துத் தொடர்புச் சாதனங்கள். பயன்பாட்டை இயற்றுவதில் இவற்றுக்கும் பங்கிருப்பதால் இவற்றின் பணியும் உற்பத்தியினுள் அடங்கும்.

பொருள்களின் உருவத்தையும், இடத்தையும், காலத்தையும் மாற்றியமைப்பது தான் உற்பத்தி என்று சொல்லும் போது, இவை யனைத்தும் இந்நாளில் தொழில் நுட்பத்தையே சார்ந்திருப்பது நினைவுக்கு வரும். எனவே, உற்பத்தி பற்றிப் படிக்கும் போது, தொழில் நுட்பம் பற்றியே படிக்கப் போகிறோம் என்ற அவசர முடிவுக்கும் வந்து விடலாகாது. வழிவகைகளை ஒரேவொரு வகையில் மட்டுமே ஆளவியலும் போது தோன்றுவது தான் தொழில் நுட்பச் சிக்கல். ஆனால், வழிவகைகளைப் பல வகைகளில் ஆளவியலும் போது தான் ஒரு பொருளியல் சிக்கல் தோன்றுகிறது. மரக்கட்டையைக் கொண்டு தீப்பற்ற வைக்க மட்டுமே முடியுமெனில், எவ்வளவு எளிதில் இது கைகூடுமென ஆய்வது தான் தொழில் நுட்பம். ஆனால், மரக்கட்டையைக் கொண்டு தீப்பற்ற வைக்கலாம் ; வேலி கட்டவும் செய்யலாம் என்ற நிலை ஏற்படும் போது தோன்றுகிற தேர்வுச் சிக்கலே பொருளியல் சிக்கல். எனவே, பொருளியலும் அதன் உட்பகுதி

யாகிய உற்பத்தியும் தொழில் நுட்பத்திலிருந்து வேறுபட்டவை என்பது தேற்றம்.

இன்றைய பொருளியல் அமைப்பில் உற்பத்தி பெற்றுள்ள முதன்மையான இடத்தை விளக்க வேண்டும் என்றில்லை. உற்பத்தியின் அளவு தான் பொருளியல் வளர்ச்சியின் அளவு. வளர்ச்சி குன்றிய நாடுகளின் தலையாய சிக்கல் எவ்வாறு உற்பத்தியைப் பெருக்குவது என்பது தான். பொருளியல் செய்கைகளின் உற்பத்தி முதன்மையானது என்று சொல்லும் போது, அதுவே பொருளியல் செய்கை என்று கருதி விடலாகாது.[1] பொருளியல் செய்கைகளின் ஒருபகுதியே உற்பத்தி. நுகர்வு, மாற்று, பகிர்வு போன்றவையும் பொருளியல் செய்கையின் பகுதிகளே.

## உற்பத்தி காரணிகள்

'பொருளியல் பயன்பாடு, அல்லது மாற்றுமதிப்பை இயற்றுவதே உற்பத்தி' என்று சொல்லும் போது, இவற்றை எவ்வாறு இயற்றுவது என்ற வினா எழுகிறது. இவ்வினாவினுள்ளே வேறிரு வினாக்கள் அடங்கியுள்ளன எனலாம்: 1. எதனில் இயற்றுவது? 2. எதைக் கொண்டு இயற்றுவது? என்பன அவ்விரு வினாக்கள்.

மனிதனால் எதனையும் சுயம்புவாகப் படைக்க முடியாது ; ஆதலால் இயற்கை தந்துள்ளவற்றில் தான் அவன் பொருளியல் பயன்பாட்டை இயற்ற வேண்டும். இதற்கென இயற்கை தந்துள்ளவை மண், நீர், காற்று, வெப்பம், ஆறுகள், மலைகள், கனிவளங்கள், அணுவின் அக ஆற்றல் முதலியவை. இவற்றுக்கு 'நிலம்' என்ற ஒரு பொதுப் பெயரைப் பொருளியல் நூலோர் சூட்டியுள்ளனர். இயற்கை வளங்கள் என்ற பெயர் இன்னும் மிகப் பொருத்தமாயிருக்கும் எனச் சொல்லலாம். இயற்கையால் இலவசமாகத் தரப்பெறுவதால், நிலத்தின் அளிப்பு மனிதனது கட்டுப் பாட்டுக்கு உட்பட்டதல்ல என்பது தெளிவு. நிலம் பல்வகைப் பட்டிருப்பதும் நடைமுறையில் அறிந்த வொன்றே. நிலம் இடம் பெயரத் தக்கதல்ல என்பது இன்னொரு கூறு.

அடுத்து, நிலத்தில் பொருளியல் பயன்பாட்டை எதனைக் கொண்டு இயற்றுவது என்ற வினா எழுகிறது. மனித உழைப்புத் தான் இங்கு வேண்டும். 'உழைப்பு' என்ற சொல்லுக்கும் பொருளியலில் தனியொரு பொருளுண்டு. உடலைக்கொண்டும் மூளையைக்

[1]. பொதுவுடைமை வாதிகள் இவ்வாறு கருதுவர்.

கொண்டும் வருமானக் கண்ணேட்டத்துடன் செய்யும் அலுவல்களெல்லாம் உழைப்பே. அன்ருட வழக்கில், விறகு வெட்டியின் வேலையை 'உழைப்பு' எனச் சொல்லும் போது, விஞ்ஞானியின் விரிவுரையை 'உழைப்பு' என்று கூறுவதில்லை; ஆனல், பொருளியலில் இவ்விரண்டும் உழைப்பே. அன்பினுலோ அல்லது சொந்த மகிழ்ச்சி கருதியோ வருமானத்தைக் கருதாது படுகிற பாடெல்லாம் உழைப்பாகா. மாணவர்கள் தம்முடைய சமூகப் பணிகளின் பகுதியாக 'உழைப்புவாரம்' எனக் கொண்டாடுகிருர்களே, அது பொருளியல் கருத்துக்களின்படி உழைப்பு ஆகாது!

இவ்வாறு, உற்பத்திக்குக் காரணமாக இருப்பவை நிலமும் உழைப்புமே எனப் பண்டைப் பேராசிரியர்கள் கொண்டனர். நிலம் செயல்படு காரணியெனில், உழைப்பு அதில் செயலாற்றும் காரணி எனலாம்.

நாளடைவில், குறிப்பாகத் தொழில் புரட்சிக்குப் பின், நிலத்துக்கும் உழைப்புக்கும் ஈடாக, எந்திரங்களும் 'பொருளியல் பயன்பாட்டை' இயற்றுவதற்கு அவசியமென்பது தெளிவாயிற்று. இயற்கை வழிகளில் உழைப்பை ஆண்டு உண்டுபண்ணிய சில பொருள்களே எந்திரங்கள். இவ்வகைப் பொருள்கள் பிறபொருள்களைப் போன்று உடனடியாக நுகரப்பெருமல், உற்பத்தியில் ஆளப் பெறுகின்றன. இவ்வாறு உற்பத்தியில் ஆள்கிற செல்வப் பொருள்கள் 'முதல்' என்று அழைக்கப் பெற்றன.

'முதல்' என்பதற்குப் பொருளிலக்கணம் கூறுவதில் ஆசிரியர்களிடையே கருத்தொற்றுமை இல்லை. இருந்த போதிலும் பிறவிரு காரணிகளிலிருந்து இதனை வேறுபடுத்திக் காட்டும் தனிக்கூறுகளைக் காட்ட முடிந்தால், அதிலிருந்து முதல் என்ருல் என்ன என்ற வினுவுக்கு எல்லாரும் ஒப்புக் கொள்கிற ஒரு விடையைக் காணமுடியும். நிலத்துக்கு மாறுபட்ட நிலையில், முதல், மனிதனுல் இயற்றப் படுகிறது.[1] ஆனுல், மனிதனுல் இயற்றப்பட்டவைகளெல்லாம் முதலாகி விட முடியாது. ஏனெனில், மனிதனது கடந்தகால உழைப்பில் உருவாகிய வொன்று, மீண்டும் உற்பத்தியில் ஆளப்பெறும்

[1] அமெரிக்க ஆசிரியர்கள் சிலர் நிலமும் ஒருவகை முதலே என்று சொல்கிருர்கள். நிலம் சொந்தமாகச் செயல்படத்தக்கதன்று; மனிதன் அதில் செயல் படாதவரை அது உற்பத்தித் திறனற்றுக் கிடக்கும். நிலத்துக்குச் செயல் திறன் ஊட்டுபவன் மனிதன். அது பயிர் விளைவிக்கிறதெனில், அப்போது, மனிதனின் கடந்தகால உழைப்பின் குவியலாகவே அது அமைகிறது. எனவே நிலமும் முதலே என்பார் காரே (Carey). ஆயினும் நிலத்தின் உற்பத்தித்திறன் அதில் செலவிடுகிற உழைப்பை மட்டுமல்ல, அதன் மண்வளத்தையும் பொருத்துள்ளது. இந்த மண்வள ஆற்றல் இயற்கை தந்தது; எனவே நிலமாகிறது. மேலும், முதலைப் போன்றல்லாது நிலத்தின் அளிப்புக்கு இயற்கை ஒரு நிலைபேருன வரையறை கட்டியுள்ளது என்பதையுங் கவனிக்க வேண்டும். எனவே, நிலம் வேறு, முதல் வேறு எனப் பகுத்தாய்வதே நல்லது.

போது தான் அது 'முதல்' ஆகிறது. இந்த உற்பத்தியின் வழியே வருமானம் கிடைக்கிறது. எனவே, வருமானம் தருகிற நிலமல்லாத சாதனங்களெல்லாம் முதல் தாம். இந்நிலையில், பேராசியர் ஹேயக் (Hayek) வகுக்கும் பொருளிலக்கணம் பொருத்தமானதாகத்தோன்று கிறது. தொடர்ந்து பொருளை உற்பத்தி செய்ய உதவுகிற நிலமும் உழைப்புமல்லாத அனைத்துமே முதல்தான் என்பார் அவர். இவ்வாறு கச்சாப் பொருள்கள், எந்திரங்கள், வினைமுற்றுப் பொருள்கள், குறிப்பிட்ட நேரத்தில் விற்பனையாகாதிருக்கும் கையிருப்புப் பொருள் கள் அனைத்தும் முதல்தாம்.

நிலமும் உழைப்பும் முதலும் மட்டுமல்ல, 'அமைப்பு' என்ற இன்னொரு காரணியும் பொருளியல் பயன்பாட்டை இயற்ற அவசியமென நன்கு வலியுறுத்தியவர் மார்ஷல். ஒரு தொழில் நிறுவனத்தை உருவாக்கி, அதனை இயக்கிச்செல்லும் பணியே 'அமைப்பு.' அமைப்பின் பணி முக்கியமாக இரண்டெனலாம் : 1. நிருவாகப் பொறுப்பு ; 2. நட்ட ஆபத்து ஏற்பு. கொள்கையளவில் முக்கிய மான முடிவுகளை எடுக்கும் நிருவாகப் பொறுப்பு அமைப்புக்குரியது. எதனை, எங்கு, எவ்வாறு, எவ்வளவு உற்பத்தி செய்ய வேண்டும் என முடிவுகட்டுவது அதன் பொறுப்பு. பொருளியல் மொழியில் சொல்லுவதானால் தொழிலின் பருமனையும், உற்பத்திக் காரணிகள் சேர்மான விகிதத்தையும் நிருணயிப்பது அமைப்பு. அமைப்பி னடுத்த பணியின்னும் சிறப்பானது. ஏற்கெனவே தெரிவிக்கப்பெற்ற தேவைக்குத் தக்கவாறல்ல, எம்முறையிலும் அறிய வியலாத எதிர் காலத்தேவையை எதிர் நோக்கியே, இந்நாளில், உற்பத்தி நிகழ் கிறது. இந்த எதிர் நோக்கில் தவறு ஏற்பட்டால் அங்கே நட்ட ஆபத்து தொக்கி நிற்கிறது. இந்த நட்ட ஆபத்தைத் துணிச்ச லுடன் ஏற்றுக்கொள்ள முன்வருவது அமைப்பு. எனவே, அமைப் பைத் 'தொழில் துணிவு' ( Enterprise ) என அழைப்பதுண்டு.[1]

இக்கால ஆசிரியர்கள் மேலே கண்ட நான்குவகைப் பாகுபாட் டைப்[2] பொதுவாக ஏற்றுக் கொள்கிற போதிலும், இப்பாகுபாட்டில் நிறைவு பெறாத ஆசிரியர்கள் சிலருமுளர். இதன் தொடர்பாக அவர்கள் தெரிவிக்கும் கருத்துக்கள் இரண்டு:

முதலாவதாக, காரணிகள் அனைத்தும் ஒப்பான இயல்புடையன என்று சொல்ல முடியாது. இரண்டு துண்டு நிலமோ, அல்லது

1. நிருவாகப் பொறுப்பு வேறு, தொழில்துணிவு வேறு என ஜே. கே. மேத்தா போன்றோர் கருதுகின்றனர்.

2. டேர்ல் (Dearle) என்பார் 'அரசு' என்ற ஐந்தாவது காரணியையும், மேத்தா 'தொழில் துணிவு' என்ற மற்றொரு காரணியையும் புதிதாக இணைத்துப் பேசுவர்.

இரண்டு உழைப்பாளரோ அல்லது இரு அலகு கச்சாப் பொருள்களோ ஒப்பான இயல்புடையன எனச் சொல்ல முடியாது. எனவே, நான்கு காரணிகளல்ல, இந்த நான்கிலுமே எண்ணற்ற வகைகள் காணக் கிடக்கின்றன. உற்பத்தியில் ஆள்கிற காரணிகளுக்கு எண்ணிக்கையில்லை என்பதே இதன் பொருள்.

இரண்டாவதாக, இக்காரணிகளை ஒன்றனிடத்தில் இன்னொன்று ஆளமுடிவதால், இவற்றிடையே வேறுபாடு காண்பதில்பொருளில்லை என்றும் சொல்வதுண்டு. கைத்தறியில் மிகுதியான உழைப்பு; குறைவான முதல். ஆனால், நெசவாலையிலோ உழைப்பின் இடத்தில் எந்திரங்கள் (முதல்) ஆளப்படுகின்றன. இங்கே, ஒரு பொருளின் உற்பத்தியில், உழைப்பின் இடத்தில் முதல் ஆளப்பெறுவதால் இரண்டுக்குமிடையே வேற்றுமையில்லை என்றாகிறது.

பேராசிரியர் வீசர் (Weiser), உற்பத்திக் காரணிகளில் இரு வகைகளே உள்ளன எனச் சாதிப்பார். ஒரு பயனுடையவை, பல பயனுடையவை என்பவையே அவ்விரு வகைகள். முதல்வகைக் காரணிகளை ஒரே யொரு துறையில் மட்டுமே ஆளமுடியும்; அவற்றைப் பிறதுறைகளில் பயன் படுத்த முடியாது. பெரும்பாலும், நிலம் இத்தகையது. உழைப்பாளரிலும் குறிப்பிட்ட சிலர் (பல் மருத்துவர், வயது முதிர்ந்த வாயிற்காப்பாளன் போன்றோர்) பிற அலுவலுக்குப் பொருத்த மற்றவரா யிருக்கலாம். முதலிலும் (உருக்கு ஊதுலை, தண்டவாளங்கள் முதலிய) இவ்வகையுண்டு.

பலபயனுடையவை, மாற்றுத் துறைகளிலும் ஆள இயல்வன. நிலமும் பயிரிடுவதற்கு மட்டுமல்ல, கட்டடம் கட்டுவதற்கும் பயன் பயன்படுத்தப் படலாம். பயிற்சி பெறுத் தொழிலாளர்களை எந்தத் தொழிலிலும் எளிதில் ஈடுபடுத்தலாம். சுத்தியல் போன்ற கருவிகளையும் பல துறைகளிலும் ஆளலாம். அமைப்பும் பலபயனுடையதே.

தற்கால ஆசிரியர்கள் ஒருபயனுடைத் தன்மை, பிறகாரணிகளைவிட மிகுதியாக நிலத்தில் காணப்படுவதால், ஒரு பயனுடைத் தன்மையைக் காரணிகளின் ஒரு கூறாகக் கருதி அதனை 'நிலக்கூறு' எனச் சுட்டுகின்றனர். இந்த நிலக் கூறு, உழைப்பிலும் முதலிலுங் கூடக் காணக் கிடக்கலாம்.

மேலே சொன்ன கருத்துக்களிளெல்லாம் ஓரளவு உண்மை இருக்கிற போதிலும், நிலம், உழைப்பு, முதல், அமைப்பு என்று பேசும் போது, அவற்றிடையே அடிப்படையான உள்ளார்ந்த

சில தன்மை வேறுபாடுகள் இருப்பதைத் தான் சுட்டிக்காட்டு கிறோம். மேலும், இந்த நான்கு காரணிகளும் பெறுகிற ஊதியங்களின் தன்மையிலும் ஆழமான சில வேறுபாடுகளைப் பார்க்கலாம். உழைப்பாளன் பெறுகிற திட்டவட்டமான கூலியும், அமைப்பாள னுக்குக் கிடைக்கிற முன்னுணர முடியாத இலாபமும், அவரவர் ஊதியம் என்பது உண்மையே யாயினும், தன்மையில் மிகவும் வேறு பட்டன அல்லவா ? எனவே, நாமும் மரபுக்குப் பொருத்தமான நால் வகைப் பாகுபாட்டையே நூல்முழுவதும் தொடர்ந்து ஆளலாம்.

# 2. உற்பத்திக் காரணிகள் பெருக்கம்

உற்பத்தியின் அளவு உற்பத்திக் காரணிகளை யொட்டியது. ஆசிய நாடுகள் பல, அண்மைக் காலம் வரை மிகவும் பிற்பட்டிருக்கக் காரணம், அவற்றின் உற்பத்தி மிகவுங் குறைவாக இருந்தமை தான். இக்குறைந்த உற்பத்திக்குக் காரணம் இந்நாடுகளில் உற்பத்திக் காரணிகள் (குறிப்பாக, முதல்) மிகவும் அரிதாக இருந்தமை தான். இவ்வாறு, உற்பத்திக் காரணிகளின் அளிப்பு, உற்பத்தியையும் பொருளியல் நிலையையும் நிருணயிக்கும் மிக முக்கியமான காரணியாகிறது. எனவே, உற்பத்திக் காரணிகளின் இயல்பான அளிப்புப் பற்றியும், அவற்றை எவ்வாறு பெருக்குவது என்பது பற்றியும் அடுத்தபடியாக ஆராய வேண்டும்.

## நிலம்

ஓர் உற்பத்திக் காரணி என்ற முறையில் நிலத்தை இருவகையில் அணுகலாம். நிலப்பரப்பு என்ற குறுகிய நோக்கிலும், இயற்கை வளங்கள் என்ற பரந்த கண்ணோட்டத்திலும் நிலத்தின் அளிப்புப் பற்றி ஆராயலாம்.

பயிர்கள் நிற்கவும், தொழிற்சாலைகள் காலூன்றவும், போக்குவரத்துச் சாதனங்கள் ஊர்ந்து செல்லவும் நிலப்பரப்பு இன்றியமையாது வேண்டும். இங்கு, நிலத்தின் மிக முக்கியமான தன்மை அதன் பரப்பளவு வரையறைக்கு உட்பட்டிருப்பது தான். இதன் பொருள் நிலத்தின் அளிப்பைப் பெருக்க முடியாது என்றாகிறது. ஆனால், இவ்வரையறை, மீற இயலாத ஒன்றல்ல. ஹாலந்து போன்ற நாடுகளில் கடலிலிருந்து ஓரளவு நிலப்பரப்பை மீட்டுள்ளனர்; இங்கிலாந்திலும் இத்தாலியிலும் சதுப்பு நிலங்களைப் பண்படுத்தி மாற்றியுள்ளனர். இந்தியாவிலும் புதர் மண்டிக் கிடந்த

தண்டகாரணியப் பகுதி, இன்று உற்பத்திக்குப் பயன்படும் வகையில் சீர்திருத்தப் பட்டுள்ளது. பாசன வசதி செய்து கொடுக்கப் பெற்றால் தரிசு நிலங்களும் பாலைவனங்களுங் கூடப் பயிரிடத் தக்கன வாக மாறிவிடும். உரிமை பெற்ற இந்தியாவில், முதல் மூன்று திட்டங்களிலுமாக, 44 மில்லியன் ஏக்கர் நிலப்பரப்புப் புதிதாகப் பயிரிடக் கிடைத்துள்ளது: அதாவது, பரப்பளவில் ஒரு பீகார் மாநிலமே புதிதாகப் பயிரிடக் கிடைத்துள்ளது !

மிகுதியாக உற்பத்தி செய்யவே மிகுதியாக நிலம் வேண்டும் எனச் சொல்லும் போது, உற்பத்திக் காரணிகளை ஒன்றனிடத்தில் மற்றொன்றைப் பதிலீடு செய்ய முடியும் என்பதைக் கவனிக்க வேண்டும். பயிர் செய் கலை முன்னேற்றம் புதிய கருவிகள், புதிய எருவகைகள், புதிய விதைகள்–இருக்கிற நிலத்திலேயே மேலுமதிகம் உற்பத்தி செய்வதை இயல்வதாக்கியுள்ளது. வளர்ச்சியடைந்துள்ள நாடுகளில், விளைச்சல், நிலத்தைமட்டுமல்ல, முதலையே சார்ந்துள்ளது. இது தவிர, தனியொரு நாட்டை எடுத்துக் கொண்டால், மிகுதியான உணவுப்பொருள்களை அயல்நாடுகளிலிருந்து இறக்குமதி செய்வதற்குள்ள வாய்ப்பு அதற்கிருந்தால், அதன் விளைவு உள்நாட்டில் நிலத்தின் அளிப்பு மிகுந்ததற்குச் சமம் என்றே கொள்ள வேண்டும்.

இனி, நிலத்தின் அளிப்பை, 'இயற்கை வளங்கள்' என்ற பரந்த கண்ணோட்டத்தில் ஆராயலாம். நாட்டின் கிடப்பு, தட்பவெப்ப நிலை, நீர்வளம், கனிவளம் ஆகிய பலவற்றின் அளிப்பை இங்கு ஆராய வேண்டும். ஓரளவுக்கு இவற்றின் அளிப்பு இயற்கையால் கட்டுப்படுத்தப் பட்டுள்ளதை மறுக்க முடியாது. ஆனால், இயற்கை வளங்களின் முக்கியத்துவம், அவற்றின் உள்ளார்ந்த தன்மையை மட்டுமல்ல, தொழில் நுட்ப முன்னேற்றம், தொழில் துணிவோர் தோற்றம், முதல் வளம், பயிற்சி பெற்ற தொழிலாளர் அளிப்பு ஆகியவற்றையும் சார்ந்துள்ளது என்பதைக் கவனிக்க வேண்டும். இந்த நூற்றுண்டின் முற்பகுதியில் உரேனியம் (Uranium) பொருளாதார முக்கியத்துவ முடையதெனக் கருதப்படவில்லை. அந்நாளில் நாடுகளின் கனிவளங்கள் பட்டியலில் உரேனியம் இடம் பெறுவதே அரிது. ஆனால், தொழில் நுட்ப முன்னேற்றத்தைத் தொடர்ந்து, அணு ஆற்றலுண்மை அறியப் பெற்றதும், அதே உரேனியம் முக்கியமானதொரு கனிவளம் ஆகிவிட்டது. நெய்வேலியில் பழுப்பு நிலக்கரி பல நூற்றுண்டுகளாக மண்ணடியே புதைந்து கிடக்கிறது ; ஆனால், அதனைப் பயன்படுத்த எவரும் முன்வராத காரணத்தால் அது செயலளவில் உற்பத்திக்குக் கிடைக்கவில்லை, எனவே, தொழில் துணிவோர் தோற்றமும் இயற்கை வளங்களின் அளிப்பைக்

கட்டுப்படுத்துவ தாகிறது. ஆசாமிலும் குஜராத்திலும் நிலத்தினடியேயுள்ள எண்ணெய் ஊற்றுக்களை உற்பத்தியில் ஆள்வதற்கு முதன் முதலில் வேண்டி வந்தவை எண்ணெய் இறைக்கும் கருவிகள். இங்கே, இயற்கை வளங்களின் அளிப்பு முதல் வளங்களின் அளிப்பைச் சார்ந்திருப்பதைப் பார்க்கிறோம். இறுதியாகப் பிற்பட்ட நாடுகளில் பயிற்சி பெற்ற தொழிலாளர்களின் அருமைப்பாடு இயற்கை வளங்கள் உரியபடி உற்பத்தியில் ஆளப் பெறுவதில் தடைகளைக் கொண்டு வருகின்றன என்பதையுங் கவனிக்க வேண்டும். இந்தியா உள்ளிட்ட எல்லா நாடுகளதும் வளர்ச்சி வரலாறு இதனையே சொல்கிறது. இவ்வாறு, இயற்கை வளங்களின் அளிப்பு தேக்க நிலையிலுள்ளதல்ல, அதனை இயக்குகிற சக்திகள் பலப்பல உள்ளன என்று முடிவு கட்டலாம்.

## உழைப்பு

உழைப்பு, பிற காரணிகளிலிருந்து சில வகைகளில் வேறுபட்டுள்ளது. இவ் வேறுபாடுகளில் சில, உழைப்பின் அளிப்பைக் கட்டுப்படுத்துவன ஆகின்றன. முதலாவதாக, உழைப்பு வேறு, உழைப்பாளர் வேறு என்று சொல்ல முடியாது ; உழைப்பை அளிக்கும் போது உழைப்பாளியும் உடனிருந்தாக வேண்டும். மாறாக, நிலத்தையும் முதலையும் அவற்றின் உரிமையாளரிடமிருந்து பிரித்து விட முடியும். எனவே, உழைப்பின் அளிப்பு, முதலில், உழைப்பாளர் அளிப்பைச் சார்ந்துள்ளது ; உழைப்பாளர் அளிப்பு மக்கள் தொகையைச் சார்ந்துள்ளது. இந்நிலையில், உழைப்பின் அளிப்புப் பற்றிச் சிந்திக்கும் போது, மக்கள் தொகைக் கோட்பாடுகள் பற்றி ஆராய வேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

இரண்டாவதாக, உழைப்பாளர்கள் அனைவரும் ஒப்பான தன்மை யுள்ளவர்களாக இருப்பார்களென எதிர் பார்க்க முடியாது. இங்கு, உழைப்பின் திறமை பற்றித் தனியாக ஆயவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. இந்தியா போன்ற நாடுகளில் உழைப்பாளர்

1. 'மக்கள் தொகை' என்று பொதுவாகச் சொல்வதை விட, 'உழைக்க முடிகிற மக்கள் தொகை' என்று சொல்வதே பொருந்தும். குழந்தைகளும் வயது முதிர்ந்தவர்களும் உழைக்க முடியாது. 15-60 வயது மட்டத்தினரே உழைக்க முடிகிறவர்களாகக் கருதப்படுகின்றனர். நம் நாட்டில், 1961-இல் 15-55 வயது மட்டத்தினர் மொத்த மக்கள் தொகையில் 51·1 சதவீதமே. மேலும் உழைக்க முடிகிறவர்களெல்லாம் உழைத்தாக வேண்டும் என்றில்லை. நம் நாட்டில் அரைக்கோடிக்கும் அதிகமாயிருக்கும் சாமியார்கள் இத்தகையவர். இந்தியப் பெண்களில் பெரும் பகுதியும் 60 சதவீதம் பெருஞ் செல்வந்தரும் இவர்களைப் போன்றவரே. வேலை நேரக் கட்டுப் பாடுகளும், வேலை விலகல்விதிகளும், ஓய்வு நல்கும் திட்டங்களுங் கூட உழைப்பின் அளிப்பைக் கட்டுப் படுத்தத்தக்கன.

எண்ணிக்கைக்குக் குறைவில்லை. இருந்தாலும், குறைந்த மக்கள் தொகை கொண்ட அமெரிக்கா போன்ற நாடுகளுடன் ஒப்பிடும் போது, செயலளவில் உழைப்பின் அளிப்பு மிகுதியா யில்லை எனச் சொல்வதில் தவறில்லை. எனவே, உழைப்பின் அளிப்புப் பற்றிப் பேசும் போது உழைப்பின் திறமை பற்றியும் தனியாக ஆராய வேண்டும்.

மூன்ருவதாக, எந்திரத்திலிருந்து மாறுபட்டவன் தொழிலாளி என்பதை மறந்து விடலாகாது. தன்னுடைய விருப்பு வெறுப்புக் களைப் பொருத்தே அவன் வேலை செய்கிருன். மன நிறைவோடு இருந்தால் தான் உற்பத்தியில் கவனஞ் செலுத்தி ஏராளமாக உற் பத்தி செய்ய முன்வருவான். எனவே, உழைப்பின் அளிப்பு உழைப் பாளர் எண்ணிக்கையையும் அவர்தம் திறமையையும் மட்டுமல்ல, அவர்களுடைய முயற்சியையும் பொருத்துள்ளது.

## மக்கள் தொகைக் கோட்பாடுகள்

### மால்தஸின் கோட்பாடு

பதினெட்டாம் நூற்ருண்டின் பிற்பகுதியில், இங்கிலாந்தின் பொருளியல் நிலை மெச்சத் தகுந்ததாயில்லை. தொழிற் புரட்சியின் உடனடி விளைவுகளால் தொழிலாளர் பலவழிகளில் அவதியுற்றிருந் தனர். பிரெஞ்சு நாட்டுடன் நடந்து கொண்டிருந்த போர்களின் விளைவாக ஐரோப்பிய நாடுகளிலிருந்து உணவுப்பொருள் இறக்குமதி குன்றிய காரணத்தால் நாடெங்கும் உணவுப் பற்ருக்குறை நிலவி யது. இயற்கையாகவே, சிந்தனையாளர் இது பற்றி ஆராய முற் பட்டனர். இந்த இழிநிலை இடைக் காலத்ததே என்றும், எதிர் காலத்தில் மக்கள் குலம் இன்புற்று உயரப் போகிறதென்றும் சிலர் நம்பிக்கை கொண்டிருந்தனர். இந்நிலை தொடர்ந்தால், எதிர் காலமும் இருள் மண்டியதாகவே இருக்கும் என மற்ருெரு கருத்தும் நிலவியது. இக்கருத்தை ஓரளவு வெறியுடன் வெளியிட்டவர் தாமஸ் இராபர்ட் மால்தஸ் (Thomas Robert Malthus) என்ற பாதிரியா ராவர். இந்த இழிநிலைக்கெல்லாம் காரணம் மக்கள் தொகைப் பெருக்கமே என்பது இவர்கள் கருத்து. தம்முடைய கருத்துக்களை 'சமூகத்தின் எதிர்கால முன்னேற்றத்தைத் தாக்கும் வகையிலான மக்கள் தொகைக் கோட்பாடு பற்றிய ஒரு கட்டுரை' [1] என்ற நூலின்

1. 'Essay on the Principle of Population as it Affects the Future Improvement of Society'.

வழியாக 1798-இல் முதன் முதலாக வெளியிட்டார். அன்னார் கருத்துக்களை இனித் தொகுத்தறியலாம்.

தம்முடைய இனத்தைப் பெருக்க வேண்டும் என்ற நாட்டம் உயிரினங்கள் அனைத்துக்குமே பொது. இருப்பிடமும் ஊட்டப் பொருள்களும் கிடைப்பது வரை உயிரினங்கள் தம்முடைய இனத்தைப் பெருக்குவது இயற்கை.[1] இதற்கு மனித இனமும் விதிவிலக்கன்று என்பது மால்தஸின் அடிப்படைக் கருத்து. இருப்பிடமும் ஊட்டப் பொருள்களாகிய உணவுப் பொருள்களும் கிடைப்பது வரை மனித இனமும் பெருகிச் செல்லத் தக்கது. இவ்வாறு, உணவு உற்பத்தியையே மக்கள் தொகை சார்ந்திருப்பதால் இவ்விரண்டிற்கு மிடையே ஒரு நெருங்கிய பிணைப்பு இருப்பதாக மால்தஸ் நிறுவுகிறார்.[2]

அடுத்து, இவ்விரண்டும் கால அளவில் எவ்வாறு மாறுகின்றன என்பதை மால்தஸ் நுணுக்கமாக விளக்க முனைந்தார். மக்களிடையே மாறுதலின்றி நிலைத்திருக்கும் பாலுணர்ச்சியின் விளைவாக, மக்கள் தொகையானது கால அளவில் அதிவேகமாக வளரத்தக்கது. ஆனால், வளர்ந்து செல்லும் மக்கள் தொகையைப் பேணுவதற்கு வேண்டிய உணவுப் பொருள் உற்பத்தியோ, அவ்வளவு வேகமாக வளரத்தக்கதன்று. மக்கள் உழைப்பதற்கு ஏற்ப நிலத்தின் விளைவு இருப்பதில்லை என்பது பட்டறிவில் கண்ட உண்மை என்பார் மால்தஸ்.[3] கணிதத் துறையில் நல்ல புலமையுடைய அவர், இந்த உண்மையை விளக்குவதற்காக உணவுஉற்பத்தி கூட்டல்வாய்ப்பாடு போலவும், மக்கள் தொகை பெருக்கல் வாய்ப்பாடு போலவும் பெருக முற்படும் என்பார். கீழ்வரும் பட்டியல் இந்தக் கணித உண்மையை விளக்கும்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| கால அளவு | 0 | 25 | 50 | 75 | 100 | 125 | ஆண்டுகளில் |
| மக்கள் தொகை | 2 | 4 | 8 | 16 | 32 | 64 | எண் |
| உணவுப் பொருள் | 2 | 4 | 6 | 8 | 10 | 12 | டன் |

1. 'அறுப்புக் காலத்தில் எலிக்கு அஞ்சு பெண்சாதி' என்பது தமிழ் நாட்டுப் பழமொழி.

2. இந்தப் பிணைப்பை ஒரேயடியாக மறுத்துவிட முடியாது. பத்தொன்பதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் அயர்லாந்தில் ஏற்பட்ட உருளைக் கிழங்குப் பஞ்சத்தை யொட்டி அங்கு மக்கள் தொகை பேரளவில் குறைந்தது. ஒரு காலத்தில் ஐக்கிய அரசின் நேர் பாதி மக்கள் தொகையைக் கொண்டிருந்த அயர்லாந்து இந்நாளில் 10 சதவீத மக்கள் தொகையையே கொண்டுள்ளது. இந்திய நாட்டில் உணவுப்பஞ்சத்தால் முன்னொரு காலத்தில் தொடர்ந்து ஏற்பட்ட பட்டினிச் சாவுகளும் உணவுப் பொருள் அளிப்புக்கும் மக்கள் தொகைக்கும் இடையேயுள்ள பிணைப்பையே சுட்டிக் காட்டுகின்றன.

3. குறைந்து செல் விளைவு விதியின் இயக்கமே இதற்குக் காரணமென மால்தஸ்

ஒரு நாட்டின் மக்கள் தொகை குறிப்பிட்ட ஆண்டில் 2 ஆகவும், உணவு உற்பத்தி 2 டன்னாகவும் இருந்தால், 25 ஆண்டுகளுக்குப் பின்[1] மக்கள் தொகை 4 ஆகப் பெருகும் போது உணவும் 4 டன் எனப் பெருகும். ஆனால், 75 ஆண்டுகளில் மக்கள் தொகை 16 ஆகும் போது, உணவு 8 டன் மட்டுமே ஆகும். 125 ஆண்டுகளில் மக்கள் தொகைக்கும் உணவு உற்பத்திக்கும் இடையேயுள்ள வீதத் தொடர்பு 64 : 12 என்றும், இரு நூற்றாண்டுகளில் 512 : 18 என்றும், மூன்று நூற்றாண்டுகளில் 8192 : 26என்றும் பெருக முற்படும்.

இவ்வாறு மான் வேகத்தில் மக்கள்தொகையும், ஆமை வேகத்தில் உணவுப் பொருள் உற்பத்தியும் வளருமெனில், இவ்விரண்டுக்குமிடையே சமநிலையெதுவும் இல்லாததாகிறது. இந்நிலையில் ஆற்றல் மிக்க தடைகள் சில தோன்றி இழந்த சமநிலை பேண உதவுகின்றன என்பார் மால்தஸ். இத்தடைகள் இறப்பு வீதத்தைக் கூட்டி மக்கள் தொகையை உணவுப் பொருள் அளவுக்குக் குறைத்து விடுகின்றன. இவை தீச்செயலும் துன்பங்களும் என்பார் மால்தஸ். மனிதன் ஈடுபடும் நலக்கேடான தொழில்கள், வாழ்க்கை வசதிக் குறைவு, விபசாரம், போர்கள் முதலியன தீச்செயல்கள் ; இயற்கை விதிகளால் தோன்றும் பஞ்சம், கொள்ளை நோய்கள் முதலியன துன்பம். இத்தடைகளுடன், தமது நூலின் பிந்திய பதிப்புக்களில், ஒழுக்கக் கட்டுப்பாடு என்ற வேறொரு தடையையும் மால்தஸ் குறிப்பிட்டுள்ளார். ஒழுக்கக் கட்டுப்பாடு என்பது மணமின்றித் தனிவாழ்க்கை நடத்துவது, வயதான பின் மணம் புரிதல், மணமான பின்னும் 'திருநீலகண்டராக' இருத்தல் ஆகியவை.[1] இவை பிறப்பு வீதத்தைக் குறைக்கும் நோக்கத்துடன் மனிதனால் தன் பகுத்தறிவைக் கொண்டு கடைப் பிடிக்கப்படுபவை. இவை யிரண்டும் முறையே இயல்புத் தடைகள், தவிர்ப்புத் தடைகள் (Positive checks, Preventive checks) என்று சொல்லப் பெறும்.

இந்த விளக்கங்களின் அடிப்படையில் மால்தஸ் கொண்ட முடிவு

வெளிப்படையாகக் கூறாவிட்டாலும் அவர் மனத்துள்ளிருப்பது இதுவே. மால்தஸின் கோட்பாட்டைக் குறைந்து செல் விளைவு விதியுடன் இணைத்து விளக்கியவர் ஆசிரியர் மில்.

1. 25 ஆண்டுக் கால அளவை மால்தஸ் எடுத்தாளக் காரணம் ஒன்றுண்டு. தமது கருத்தை வலியுறுத்தப் பல நாடுகளின் நடப்பை அவர் கற்றறிந்த போது, உணவுப் பொருள் பெருக்கத்தில் தடையேதுமில்லாத அமெரிக்க நாட்டில், அந்நாளில், மக்கள் தொகை 25 ஆண்டுகளில் இரட்டிப்பதைக் கண்டறிந்தார். பின்னர், அதனை ஒரு பொது நியதியாக நிறுவிக் கொண்டார்.

2. இப்போது பரக்கப் பேசப்படுகிற குடும்பக்கட்டுப்பாடு முறைகள் பற்றி மால்தஸ் நினைத்தது கூட இல்லை.

இதுதான் : மேலே சொன்ன தவிர்ப்புத் தடைகள் எதுவும் செயல் படாதிருந்தால், உணவுப் பொருள் உற்பத்தியையும் விஞ்சியதொரு வேகத்தில் மக்கள் தொகை வளர முற்படும். இவ்வளர்ச்சி, இறுதியில், இயல்புத் தடைகளைத் தோற்றுவிக்கும். இயல்புத் தடைகள் துன்பமயமானவை. எனவே, தவிர்ப்புத் தடைகளால், இத்துன்ப நிலை ஏற்படாமல், வருமுன் காத்துக் கொள்வது நல்லது. அவர் நாளைய இங்கிலாந்தின் அவதிக்கெல்லாம் காரணம் மக்கள் தொகைப் பெருக்கமே என்றும் இதிலிருந்து மால்தஸ் முடிவு கட்டுகிறார்.

இனி, இக்கோட்பாட்டின் குறைநிறைகளை ஆராயலாம்.

ஒரு கோட்பாட்டின் மெய்ம்மை, அது செயலளவில் எந்த அளவுக்குப் பொருத்தமாயிருக்கிறது என்பதைப் பொருத்துள்ளது. மால்தஸின் கருத்துப்படி 25 ஆண்டுகளுக்கு ஒரு முறை மக்கள் தொகை இரட்டிக்கும் போது, அந்த அளவுக்கு உணவு உற்பத்தி வளராதிருக்க வேண்டும். ஆனால், நடைமுறையில், ஐரோப்பிய நாடுகளில் மக்கள் தொகை கால்நூற்றாண்டு காலத்திற்குள் இரட்டித்ததாகத் தெரிய வில்லை.[1] பிரான்ஸ் போன்ற நாடுகளில் மக்கள் தொகைப் பெருக்கமல்ல, சுருக்கமே சமீபகாலச் சிக்கலாக இருக்கிறது.[2] முன்பெல்லாம் எண்ணிக் கூடப் பார்க்க முடியாத அளவுக்குப் பயிர்த்தொழில் உற்பத்தியை விஞ்ஞான முன்னேற்றம் பெருக்கி வருகிறது. செயற்கை எரு, புதுவகை விதைகள், பூச்சிக் கொல்லிகள், நோய் மருந்துகள், திற மிக்க உழுபடைகள், ஆகிய பல பயிர்த்தொழில் உற்பத்தியைப் பல்கிப் பெருக வைத்துள்ளன.[3]

இரண்டாவதாக, வறுமைப் பிணி நீங்கி மக்களுடைய வாழ்க்கைத் தரம் உயர உயர, மக்களிடையே பாலுணர்ச்சியும், அதன் எதிரொலியாக மக்கள் தொகை வளர்ச்சி வேகமும் குறைந்து வரு

1. இதற்குக் காரணம் தடைகள் கடைப்பிடிக்கப்பட்டமை தான். தடைகளெதுவும் இயங்காத நிலையில் மக்கள் தொகை மேற் கூறியவாறு இரட்டிக்க வேண்டும் என்பது தான் மால்தஸின் கோட்பாடு.

2. பிரான்ஸில் மக்கள் தொகை குறைவதற்குக் காரணம் உணவுபற்றாக் குறையல்ல, நிலத்தின் அருமைப்பாடு தான். பிரெஞ்சு மக்கள் அயல் நாடுகளில் சென்று குடியேற விருப்பமில்லாமல் இருப்பதும், நெப்போலியப் போர்களால் ஏற்பட்ட அவல நிலையைக் கண்ட பிரெஞ்சுப்பெண்கள், பட்டாளத்துக்கு ஆளனுப்ப விரும்பாத காரணத்தால் பிள்ளைப் பேற்றினை வெறுத்ததும் இன்னபிற சமூகக் காரணிகளுமே மக்கள் தொகைச் சுருக்கத்தைக் கொணர்ந்தன. ஒரு கத்தோலிக்க நாடாகிய பிரான்ஸ் எந்த அளவுக்குக் குடும்பக் கட்டுப்பாடு முறைகளைக் கடைப் பிடித்திருக்கும் என்பதில் ஆசிரியர்கள் ஐயமெழுப்பியுள்ளனர்.

3. உயிரினங்களுக்குப் பொதுவான இனப்பெருக்க நாட்டத்தை மனித குலத்துக்குப் பொருத்தி, மக்கள் தொகை மிக வேகமாக வளரும் எனச் சொன்ன மால்தஸ், அதே நாட்டத்தால் பயிர் வகைகளும் பேரளவில் வளரும் என்பதைப் போதிய அளவு வலியுறுத்தாதது விந்தை தான் !

கிறது என்பதுங் கருதத்தக்கது.[1] இஸ்ரேல் போன்ற புதிய நாடுகளிலும், கிழக்கு ஐரோப்பிய நாடுகள் பலவற்றிலும் வாழ்க்கைத் தர உயர்வு மக்கள் தொகைப் பெருக்கத்தை மட்டுப் படுத்தியுள்ளது என்பது அண்மைக் கால நிகழ்ச்சிகள். பேராசிரியர் ஹக்ஸ்லி (Huxley) போன்ற உயிரியல் அறிஞர்கள், ஓர் இனம் ஒரு வளர்ச்சிக் கட்டத்திலிருந்து அடுத்த உயர் கட்டத்துக்கு முன்னேறிச் செல்லும் போது, அதன் இனப் பெருக்க வளம் குறைகிறது என்றே கருதுகின்றனர்.[2]

மூன்ருவதாக, வளர்ந்து செல்லும் மக்கள்தொகை, உணவு உற்பத்திப் பெருக்கத்தை மட்டுமே சார்ந்துள்ளதென மால்தஸ் சாதிப்பதும் சரியன்று. அவர் தாய் நாட்டிலேயே, அவரது நூல் வெளியான அந்த நூற்ருண்டிலேயே, மக்கள் தொகைப் பெருக்கத்தால் நாடு நலியவில்லை என்பதைக் கவனிக்க வேண்டும். அமெரிக்கா, ஆஸ்திரேலியா, தென்னுப்பிரிக்கா, தென்னமேரிக்காவில் சில குடியேற்ற நாடுகள் முதலியவை இக்காலத்தில் திறக்கப் பெற்றன. இதே நேரத்தில் போக்குவரவு வசதிகளும் திறமை மிக்கனவாயின. இதனுல் புதிய உலகத்தின் உணவுப் பொருள் இங்கிலாந்தில் இறக்குமதி யாயிற்று. இவ்விறக்குமதியை இயல்வதாக்கும் வகையில், இங்கிலாந்தும் தொழில் வளமிக்க நாடாகிப் பிற நாடுகளுக்கு ஏராளமாக ஏற்றுமதி செய்ய முடிந்தது. எனவே, ஒரு நாட்டின் மக்கள் தொகை அந்நாட்டில் உற்பத்தி யாகும் உணவுப் பொருள் அளவையல்ல, ஆங்கு உற்பதி யாகும் ஆகமொத்த உற்பத்தியையே சார்ந்துள்ளது. இந்த நூற்ருண்டில் ஹாலந்து, பெல்ஜியம், ஜப்பான் போன்ற நாடுகளெல்லாம் தத்தம் மக்கள்தொகையை உணவு இறக்குமதிகளின் வழியாகவே பேணிக் கொண்டிருக்கின்றன.[3]

நான்காவதாக, கானன் போன்ருேர் மக்கள் தொகை பெருகும்

1. இதற்குக் காரணம் தவிர்ப்புத் தடைகள் கடைப் பிடிக்கப் பட்டமை தான் எனில், மால்தஸின் கோட்பாடு பொய்த்துப் போகவில்லை; தடைகள் இல்லாவிட்டால் மக்கள் தொகை பெருக முற்படும் என்பதுதானே மால்தஸின் கோட்பாடு ?

2. நிகழ்கால அமெரிக்காவின் போக்கொன்று மால்தஸின் கருத்தைச் சரிவைப்பதாக இருக்கிறது. இராஸ்டோவ் (W. W. Rustow), தம் நூலில், நிகழ்கால அமெரிக்காவில், நிறையப் பிள்ளைகள் கொண்ட குடும்பமே உயர்ந்த வாழ்க்கைத் தரத்தின் பகுதியாகக் கருதப்படுவதாகக் குறிப்பிடுவார். 1930-க்குப் பின் அமெரிக்கக் குடும்பத்தின் சராசரி அளவு (உறுப்பினர் எண்ணிக்கை) 2-இலிருந்து 4-ஆக மிகுந்துள்ள நிலை இதனை வலியுத்துகிறது.

3. உணவுப் பொருள்களைப் பிற நாடுகளிலிருந்து வரவழைப்பதற்கு எதிராக, உணவு வேண்டுகிற எச்ச மக்கள் தொகையைப் பிறநாடுகளுக்கு அனுப்புவதும் மக்கள் தொகைச் சிக்கல் தீர்வதற்குரிய வழிகளில் ஒன்று. இத்தாலி, இங்கிலாந்து போன்ற நாடுகள் ஓரளவு இந்த வழியையும் கையாண்டுள்ளன. ஆனுல்; ஆஸ்திரேலியா ரொடீஷியா போன்ற சில நாடுகள் தவிர வேறெங்கும் குடியேறுவதற்குரிய வாய்ப்புகள் இன்றில்லை என்பதை இங்கு எண்ணிப் பார்க்க வேண்டும்.

போதெல்லாம் மனங் கவல்வது அறிவீன மென்பர். வாயொன்று தோன்றும் போதெல்லாம் இரு கரங்களும் வெளிப்படுகின்றன ; அக் கரங்கள் தருகிற உழைப்பால் உற்பத்தியும் பெருக வாய்ப்பிருக்கிறது. மனிதன்ஒரு நுகர்வோனென வலியுறுத்திய மால்தஸ், அவன் ஓர் உற்பத்தியாளனுங்கூட என்பதை மறந்து விட்டார் ! கெயின்ஸ் பிரபுவும் இதே கருத்தை யுடையவர். மக்கள் தொகை பெருகினுல், பொருள்களின் தேவைமிகுந்து முதலின்தேவையும் இலாப வாய்ப்பும்பெருகும் போது, முன்னேறிய நாடுகளில் முதலீடு பெருகி தனிநபர் வருமானமும் வாழ்க்கைத்தரமும் உயர வழியுண்டு என்பார் அவர். எங்கல்ஸ் (Engels) சொல்வது போல, விலங்குகள் உணவைத் தேடித்திரிவன; மனிதனே உணவைப் படைத்துத் தருபவன்.[1]

ஆசிரியர் ஸெலிக்மன் மற்ெருரு சிறு குறை பாட்டைச் சுட்டிக் காட்டுவார். உணவுப் பொருள் உற்பத்தி போதுமானதாக இருந்தாலும், அது தக்க படி பகிர்ந்தளிக்கப் படாவிட்டால் மக்கள் தொகை அதனுல் பாதிக்கப்படும் என்பது அவர் கருத்து.[2] மக்கள் தொகைச் சிக்கல் அதன் அளவை மட்டும் ஒட்டிய தன்று ; திறம் பட்ட உற்பத்தியையும், சமமான பகிர்வையும் ஒட்டியது. அது வெறும் எண்ணிக்கைச் சிக்கலல்ல ; செல்வச் சிக்கல் என்பார் ஸெலிக்மன்.

மால்தஸின் கணிதமுறை விளக்கத்தையும் கானன் போன்ருேர் ஏற்றுக் கொள்வதில்லை. மக்கள் தொகையும் உணவுப் பொருள் உற்பத்தியும் சில கணிதச் சட்டங்களின் படிச் செயல் படுமென எதிர்பார்க்க முடியாது : உண்மையிலும் அவ்வாறில்லை.[3]

1. இந்தக் கருத்துக்களை, குறைந்து செல் விளைவு விதியின் இயக்கத்தைச் சுட்டிக்காட்டி, மில் போன்ருேர் மறுத்துரைக்கின்றனர். வாயுடன் கைகளும் தோன்றுகிற போதிலும், வாய் கேட்கிற அளவுக்குக் கைகளால் உற்பத்தி செய்ய முடியாது என்பது இவர்கள் கருத்து. ஆனல், ஸெலிக்மன் போன்ருேர், இயலறிவு வளர வளர, குறைந்து செல் விளைவு விதியின் செயல் படு எல்லை இன்னும் பின்னேக்கிச் சென்று கொண்டிருக்கிறது எனச் சுட்டிக்காட்டுவர்.

2. ஜார் ஆட்சியில் ருஷ்ய நாட்டில் ஏராளமான உணவு உற்பத்தி இருந்தும் உற்புத்தியாளர்களாகிய நிலக்கிழார்கள், அதனை உள் நாட்டில் பகிர்ந்து கொள்ளாது வெளி நாடுகளுக்கு ஏற்று மதி செய்து இலாபம் அடைவதிலேயே நாட்டம் வைத்ததால் அந்நாளில் அந்நாட்டில் பஞ்சமே நிலவியது. தொழில் மந்தம் ஏற்படும் போதெல்லாம் சிக்கல்களுக்கு அடிப்படைக் காரணம் அமித மக்கள் தொகையல்ல, அமித உற்பத்தியே எனக் காண்கிருேம். அத்தகைய கட்டங்களில் உற்பத்திக்கும், மக்களுடைய வாங்கும் ஆற்றலுக்கும் இடையேயுள்ள பொருத்த மின்மையே சிக்கல்களை உண்டாக்குவதைப் பார்க்கிருேம். இங்கு புகிர்வின் சிறப்பு தெளிவாகிறது, நம் நாட்டின் இந்நாளைய உணவுச் சிக்கல், உற்பத்தி மட்டுமல்ல, உணவுப் பொருள்களைப் பல்வேறு வகுப்பினரிடையேயும் இடங்களிடையேயும் சமமாகப் பகிர்ந்தளிப்பதும் அல்லவா ?

3. கணித உவமைகளைத் தமது கோட்பாட்டை எளிய வகையில் புரிய வைப்பதற்கு ஒரு கருவியாகத் தான் மால்தஸ் கையாண்டாரே யொழிய, வேறெந்தச் சிறப்பும் அவற்றுக்கு அளிக்கவில்லை.

இறுதியாக, மால்தஸின் நம்பிக்கை யிழந்த சிந்தனைப் போக்கையும் குறை கூறுவோருண்டு. எதிர் காலத்தை இருள் மண்டிக் கிடப்பதாகப் பயமுறுத்தும் மால்தஸின் கருத்தை[1] ஏற்றுக் கொள்வது தவறு மட்டுமல்ல, ஆபத்தும் நிரம்பியது எனலாம். மக்கள் தொகைப் பெருக்கத்தைச் சாவும் துன்பமுமே இறுதியில் தடுக்கத் தக்கவை எனில், மக்கள்குலத்தை முன்னேற்றுவதற்காகச் செய்யப் படும் முயற்சிகளெல்லாம் விழலுக்கிறைத்த நீர் தானே? பொருளியல் வளர்ச்சியும் மக்கள்குல மேம்பாடும் பேய்த்தேர்கள் என்பது தானே இதன் பொருள்?

இந்தக் குறைபாடுகளையெல்லாம் ஆர அமர ஆயும் போது, மால்தஸ், உணவுப் பொருள் உற்பத்திக்கு அளவிறந்த முதன்மை நல்கியதே அடிப்படைத் தவறு எனத் தோன்றும். உணவு உற்பத்திக்குப் பதிலாக, ஒரு நாட்டின் செல்வ உற்பத்தியைக் கணக்கில் எடுத்திருக்க வேண்டும் என்று சொல்லும் போது, ஒரு நாடு மிகுதியாகச் செல்வத்தை உற்பத்தி செய்து அதனை அயல் நாடுகளுக்கு ஏற்றுமதிசெய்து, அங்கிருந்து உணவுப் பொருள்களை இறக்குமதி செய்யமுடியுமென நம்புகிறோம்.[2] இங்கும், மால்தஸின் அடிப்படைக் கோட்பாடு அடிபட்டுப் போகவில்லை. இப்போதும், நாட்டின் மக்கள் தொகையளவு (இன்னொரு நாட்டில் உற்பத்தி யாகிற போதிலும்) உணவுப் பொருளைத்தான் இறுதியில் சார்ந்துள்ளது. எனவே, உலகத்தையே ஓர் அலகாக எடுத்துக்கொண்டால், உலகத்து மக்கள் தொகை உலகத்து உணவுப் பொருள் உற்பத்தியையே சார்ந்துள்ளதென்பது தெளிவு.[3]

[1] வளர்ச்சியடைந்துள்ள நாடுகளின் பல்வேறு வளர்ச்சிக் கட்டங்களை ஆராய்ந்த இந்நாளைய அறிஞர்கள், மக்கள்தொகை வளர்ச்சியிலும் 3 கட்டங்கள் இருப்பதாகச் சொல்கின்றனர்: ஏறிய பிறப்பு இறப்பு விகிதங்கள் செயல்படும் நிலை முதற் கட்டம்; அடுத்து, வேகமாகக் குறைந்து செல்லும் இறப்பு வீதத்தாலும. மெல்லவே குறைந்து செல்லும் பிறப்பு வீதத்தாலும் மக்கள்தொகை வேகமாக வளரும் கட்டம். இறுதியில் தாழ்வானதொரு மட்டத்தில் நிலைகொள்ளும் குறைந்த பிறப்பு இறப்பு வீதங்கள் கட்டம். தொழில்மயமாகிவிட்ட நாடுகளெல்லாம் மூன்றாவது கட்டத்தை எட்டியிருக்கப் பிற நாடுகள் இரண்டாவது கட்டத்தையே அடைந்துள்ளன. இதனால் சமீப எதிர் காலம் நம்பிக்கை தருவதாகச் சொல்ல வழியில்லை?

[2] இந்த வாய்ப்பில்லாத காரணத்தால், வளர்ச்சி குன்றிய நாடுகளைப் பொருத்த வரை மால்தஸின் கோட்பாடே, நடைமுறையில், உண்மையாக இருக்கிறது.

[3] உலகளாவிய நிலையில் மக்கள்தொகைச் சிக்கல் பற்றிச் சிந்தித்தால் உணவு உற்பத்தி பல வழிகளிலும் வளர்வதற்கு வாய்ப்பிருப்பதாகச் சொல்லலாம். ஒற்றை உயிர்ஊறுப் பாசி வகைகளிலிருந்து கூட சத்துள்ள உணவினைப் பெற முடியுமெனத் தற்கால விஞ்ஞானம் கூறுகிறது. உடையிலும், பருத்தியின் இடத்தை 'டெரிலினும்' 'டெக்ரானும்' ஆகிய சில இரசாயனப் பொருள்கள் பிடித்துள்ளன. தொழில் துறைக் கச்சாப் பொருள்களை எடுத்துக் கொண்டால் உலோகங்கள் பலவற்றுக்குப் பதிலாக பிளாஸ்டிக் பயன்படுத்தப்பெற்று வருகிறது. இருக்க இடம் வேண்டுமெனில் புதிய அண்டப் பகுதிகள் இருக்கவே இருக்கின்றன. (இங்கு காரல் ஸாக்ஸ் ('Standing Room Only' by Karl Sax என்பார், கோடிக்கணக்கில் செலவு பிடிக்கிற,

## உத்தம மக்கள்தொகைக் கோட்பாடு

மால்தஸின் கோட்பாட்டில் உணவு உற்பத்திக்கு அளவு மீறிய முக்கியத்துவம் வழங்கியிருப்பதில் குறை கண்ட சிந்தனையாளர்கள், ஒரு நாட்டின் மக்கள் தொகை, உணவு உற்பத்தியை யல்ல, ஆக மொத்த உற்பத்தியையே பொருத்துள்ளது எனக் கருதத் தலைப்பட்டனர். இதே நேரத்தில் சில நாடுகளில் தொடர்ந்து மக்கள் தொகை பெருகிக் கொண்டிருந்த போதிலும், பொருளியல் நிலை சற்றும் பாதிக்கப்படவில்லை என்பதும், ஆனால், வேறு சில நாடுகள் மக்கள் தொகைப் பெருக்கத்தால் நலிந்து கொண்டிருக்கின்றன என்பதும் சிந்தனையாளர் கவனத்துக்கு வந்தன. இந்தச் சூழ்நிலையில், ஒவ்வொரு நாட்டுக்கும் உத்தமமான (Optimum) மக்கள் தொகை யொன்றிருப்பதாகவும், அத்தொகை அந்தந்த நாடுகளது ஆக மொத்த உற்பத்தியையே சார்ந்துள்ளதாகவும் ஆசிரியர்கள் சிந்திக்க முற்பட்டனர். இச் சிந்தனை முடிவை, கானன், கார் ஸான்டர்ஸ் (Carr Saunders) போன்றோர் ஒரு கோட்பாடாக்கித் தந்துள்ளனர்.

இக் கோட்பாடு, மிக முக்கியபான சில எடுகோள்களின் அடிப்படையில் நிறுவப்பட்டுள்ளது. முதல் எடுகோள், நாட்டின் முதல் வளமும், பிற உற்பத்திக் காரணிகளும், தொழில் நுணுக்க அறிவும் குறிப்பிட்ட அளவில் மாருதிருக்கின்றன என்பதாகும். அடுத்து, உழைக்கும் மக்கள் தொகை குறிப்பிட்ட நேரத்தில் செய்கிற வேலையின் அளவும், வேலை நேரமும் மாருதிருக்கின்றன என்று வைத்துக் கொள்ள வேண்டும். மொத்த மக்கள் தொகையில் உழைப்பவர் சதவீதம் மாருதிருக்கிறது என்பது இன்னொரு எடுகோள். இறுதியாக, அயல் நாட்டுடன் வணிகஞ் செய்வதற்குள்ள வாய்ப்புக்களும் மாருதிருக்கின்றன என்று வைத்துக் கொள்ள வேண்டும்.

இந்த எடுகோள்களின் அடிப்படையில், குறிப்பிட்ட நாடு பேண வேண்டிய உத்தமமான மக்கள் தொகை அளவு எது என்ற வினு எழுகிறது. இவ்வினுவுக்கு விடையாக, கார் ஸான்டர்ஸ் மிகவுயர்ந்த அளவு பொருள்சார் நலந் தருகிற மக்கள் தொகையே உத்தமமான மக்கள் தொகை என்பார். ஒவ்வொருவரும் அடைகிற பொருள் சார் நலத்தின் அளவு அவரவர் உண்மை வருமானத்தைப் பொருத்துள்ளது. எனவே, மிகவுயர்ந்த நலமடைய மிகவுயர்ந்த அளவு

2000 பேர் ஒரே நேரத்தில் செல்லவல்ல விண்வெளிக் கப்பல்கள் ஆண்டுதோறும் எட்டரைக் கோடிக்குக் குறையாமல் பூமியிலிருந்து சென்று வந்தால்தான் மக்கள் தொகைச் சிக்கலைச் சமாளிக்க முடியும் என்பார்) சுருக்கமாகச் சொன்னல், மனிதனது, அறிவுப் புலனுக்கும் நுகர்வுப் புலனுக்கும் இடையேயுள்ள போட்டியில் எது வெற்றிபெறும் என்பதைப் பொருத்ததே நிலவுலகின் எதிர்கால மக்கள்தொகைச் சிக்கல்.

வருமானத்தைப் பெற வேண்டும் என்கிறது.[1] மிகவுயர்ந்த அளவு வருமானம் என்று சொல்லும் போது, நாட்டின் ஆகமொத்த வருமானமல்ல, மக்களுடைய தலா வருமானமே மிகவுயர்ந்த அளவினதாக வேண்டும் எனச் சொல்லப்படுகிறது என்பதைக் கவனிக்க வேண்டும். வருமானத்துக்கும் மக்கள் தொகைக்கும் இடையே நெருங்கிய தொடர்பிருக்கிறது. இயற்கை வளங்கள் மீது உழைப்பைச் செலவிடும் போது தோன்றுகிற விளைபொருள் அளவே நாட்டின் உண்மை வருமானம். இதிலிருந்து இவ்விளைபொருள் இயற்கை வளங்களையும் உழைப்பையும் சார்ந்துள்ளது என்கிறது. இயற்கை வளங்களின் அளவு மாறவில்லை என்ற எடுகோளில், உழைப்பின் அளிப்பு—அல்லது, மக்கள் தொகை மாறுமானால், மேலே சொன்ன விளைபொருளின் அளவும் மாறும். இந்த மாறுதல்களின் போது, குறிப்பிட்ட வொரு கட்டத்தில், அது மிகவுயர்ந்த அளவினதாயிருக்கும் : அந்த அளவு எந்த மக்கள் தொகை மட்டத்தில் ஏற்படுகிறதோ, அதுவே உத்தமமான மக்கள் தொகை.[2]

உண்மையில் நிலவியுள்ள மக்கள் தொகை, இந்த உத்தம அளவினதாக இராவிட்டால், என்ன நிகழும் எனப் பார்க்கலாம். உத்தம அளவில்தான் தலா வருமானம் மிகவுயர்ந்த அளவினதாக இருக்க வேண்டும் என்று சொல்லும் போதே, பிற அளவுகளில் இவ் வருமானங் குறைவாகத்தான் இருக்க முடியும் என்கிறது. அதாவது, உண்மை மக்கள் தொகையானது. உத்தம மக்கள் தொகையை விட மிகுதியாகவோ, குறைவாகவோ இருந்தால் தலா வருமானம் குறைவாகவே இருக்கும்.

இவ்வுண்மை புரிந்துகொள்ளத் தக்கதே. ஒரு நாட்டில் நிலவும் மக்கள் தொகை உத்தம அளவைவிடக் குறைவாக இருப்பதாக வைத்துக் கொள்வோம். இதனால் விளையுங் கேடு மூவகைப் படும். முதலாவதாக, நாட்டின் செல்வ வளங்களை நன்கு பயன்படுத்தப் போதுமான அளவு தொழிலாளர்கள் இல்லை. இதனால், உற்பத்தியும் வருமானமும் குறைவாகத்தான் இருக்க முடியும். அடுத்து, தொழிலாளர்களிடையே வேலைப்பகுப்புக்கு வாய்ப்பில்லாக் காரணத்தால், பேரளவு உற்பத்திக்கு வழியில்லை. மூன்றுவதாக, உற்பத்தி

[1] 'மிகவுயர்ந்த அளவு பொருள்சார் நலம் மிகவுயர்ந்த அளவு தலா உண்மை வருமானமாகத்தான் இருக்க வேண்டும் என்றில்லை. . . ஆனால். செயலளவில் இரண்டும் சமமென எடுத்துக் கொள்ளலாம்' என்பார் கார் ஸாண்டர்ஸ்.

[2] நாட்டு வருமானம் உத்தமமான முறையில் பகிர்ந்தளிக்கப்பட்டுள்ளது என்ற எடுகோளின் அடிப்படையிலேயே இவ்வாறு நிறுவுகிறோம்.

யாகும் பொருள்களை உள்நாட்டில் வாங்குவதற்கு ஆளில்லை.[1] இதனாலும் உற்பத்தி மட்டுப்படும்.[2] இந்நிலையில், மக்கள் தொகை பெருகினால் இயற்கை வளங்கள் நன்கு பயன்படுத்தப் பட்டு, வேலைப் பகுப்பு ஏற்பட்டு, உள்நாட்டு அங்காடி விரிவடைந்து, உற்பத்தியும், அதைத் தொடர்ந்து வருமானமும் பெருகும். எனவே, மிகவுயர்ந்த அளவு வருமானம் ஈட்டும் கண்ணோட்டத்தில் பார்த்தால், இங்கே உண்மை மக்கள் தொகை போதாதென்று அறிய முடிகிறது. இதனைப் போதா மக்கள் தொகை என்றே சொல்வார்கள்.

ஓரளவுக்கு மேல் மக்கள் தொகை பெருகுவதில் பொருளில்லை. நாட்டின் முதல் வளமும் பிற உற்பத்திக் காரணிகளும் வரையறைக் குட்பட்டன என்ற எடுகோளை நினைக்கும் போது மக்கள் தொகை தொடர்ந்து பெருகினால் அப்பெருக்கத்துக்குத் தொழில் தரப் போதிய வளங்கள் இல்லை என்பது தெளிவாகிறது. இதன் விளைவாகத் தலா உற்பத்தியும், தலா வருமானமும் இயல்பாகவே குறைந்து விடுகின்றன. மேலும், பெருகிச் செல்லும் மக்கள் தொகை அரிதாக அகப்படும் வளங்களை அடைய அங்கங்கே நெருக்கும் போது, மக்கள் தொகையின் தொழில் வகைப் பங்கீடு மாறுகிறது. இந்தியா போன்ற நாடுகளில் நிகழ்ந்துள்ளது போல, மேலும் மேலும் மக்கள் பயிர்த் தொழில் போன்ற எளிதில் புக முடிகிற தொழில்களைச் சார முற்படுகின்றனர். இதனால் உற்பத்தித் திறன் குன்றி வருமானம் குறைந்து செல்கிறது. இந்நிலைக்கான போக்குவழி மக்கள் தொகையைக் குறைப்பதொன்றே. எனவே, இந்த அளவு மக்கள் தொகையை அமித மக்கள் தொகை என்பார்கள்.

அடுத்துள்ள படம் அவ்வுண்மைகளை விளக்கத் தக்கது. இங்கே, கிடை அச்சில் மக்கள் தொகையும், செங்குத்து அச்சில் தலா வருமானமும் அளக்கப் படுகின்றன. I எனக் குறிக்கப் பட்டுள்ள வளைகோடு தலா வருமானத்தின் போக்கைச் சுட்டுகிறது. மக்கள் தொகை $OM^3$ ஆக இருந்தால், தலா வருமானம் $M^3P^3$ ஆக இருக்கும் ; மக்கள் தொகை $OM^1$ ஆக இருந்தால் தலா வருமானம் $M^1p^1$ ஆக இருக்கும் ; ஆனால், மக்கள் தொகை OM ஆக இருக்கும்

[1] இங்கிலாந்தும் ஜெர்மனியும் தம் பொருள்களைக் குடியேற்ற நாடுகளில் விற்றழித்ததன் வழியாகத் தம் நாடுகளில் உயர்ந்த அளவு வருமானத்தைப் பேணி வந்தன என்பது இங்குக் கருதத் தக்கது.

[2] படைத்துறைக் கண்ணோட்டத்தில் பார்த்தாலும் குறைந்த அளவு மக்கள் தொகை நலந்தருவதல்ல. இதனாலேயே 17, 18 ஆவது நூற்றாண்டுகளில், முறையே பதினாலாம் லூயியும், நெப்போலியனும் மக்கள்தொகைப் பெருக்கத்தை வரவேற்க முன் வந்தனர். இந்த நூற்றாண்டிலும் அமெரிக்கா, ஜெர்மனி, இஸ்ரேல் போன்ற நாடுகள் மக்கள்தொகைச் சிக்கலைப் படைத்துறைக் கண்ணோட்டத்திலும் அணுகி வருகின்றன.

போதே அது மிகவுயர்ந்த அளவினதாக (MP) ஆக இருக்கிறது. இதிலிருந்து OM தொகையே அளவு எனச் சொல்லலாம். உண்மை




மக்கள் தொகை இதைவிட மிகுதியாகவோ ($OM^1$) குறைவாகவோ ($OM^3$) இருந்தால், தலா வருமானம் குறைவாகவோ (முறையே $M^1P^1 + M^3P^3$) இருக்கும்.

உத்தம அளவானது நிலையான ஒன்றல்ல என்பது இங்குக் கருதத்தக்கது. மேலே கண்ட எடுகோள்களில் (வளங்களின் அளவு, தொழில் நுட்பத் தரம், அயல்நாட்டு வணிகத்துக்குரிய வாய்ப்பு முதலியனவற்றில்) ஏதாவதொன்று மாறினால், அதன் விளைவாக உத்தம அளவு மாறி விடும். இப்போது உண்மையில் அமித மக்கள் தொகை கொண்டுள்ள நாட்டில், வளங்கள் புதிதாகக் கண்டு பிடிக்கப் பெற்றுப் பயன்படுத்தப் பெற்றால், அதன் இப்போதைய மக்கள் தொகை போதா மக்கள் தொகையாகக்கூட மாறிவிடலாம். மேலேயுள்ள படத்தின் வழியாகவும் இதனை விளக்கலாம். I குறித்து நிற்கும் வளைகோடே தலாவருமானத்தின் போக்கைச்சுட்டுவதாக வைத்துக் கொள்வோம். இப்போது உண்மை மக்கள் தொகை $OM^2$

என்று வைத்துக் கொள்வோம்; நாட்டில் அமித மக்கள் தொகையுள்ளது. இந்நேரத்தில் புதிதாக வளங்கள் கண்டு பிடிக்கப் பெற்ருல், புதிய வாய்ப்புக்கள் தோன்றுகின்றன. II குறித்து நிற்கும் புதிய வளைகோடு தலா வருமானத்தின் புதிய போக்கைச் சுட்டுவதாகிறது. முன்னிலும் மிகுதியான வளங்கள் கிடைப்பதால், ஒவ்வோரளவிலும் மக்கள் தொகையால் ஈட்ட முடிகிற வருமானம் முன்னைவிடக் கூடுதலாக இருக்கிறது. புதிய வளைகோடு, பழைய வளைகோட்டின் உயர்வாகக் கிடக்கக் காரணம் இதுவே. இதனுல் முன்பு அமித அளவாக இருந்த $OM^2$ மக்கள் தொகை இப்போது போதா மக்கள் தொகை ஆகி விடுகிறது; $OM^2$ மக்கள் தொகையே இப்போது உத்தம அளவினது; அதைவிடக் குறைவாக இருக்கும் $OM^1$ போதா மக்கள் தொகையையே சுட்டி நிற்கிறது.

இப்புதிய கோட்பாடு மால்தஸின் கோட்பாட்டை விட எந்த அளவுக்குச் சிறந்தது என்பதை இனிப் பார்க்கலாம்:

மக்கள் தொகையை வெறும் உணவுஉற்பத்தியோடு ஒப்பிடாது, ஆகமொத்த உற்பத்தியோடு ஒப்பிட்டு ஆய்கிறது இப்புதிய கோட்பாடு. பொருள்களின் தேவைக் கண்ணோட்டத்தில் அல்லாமல், பொருள்களின் அளிப்புக் கண்ணோட்டத்தில் மக்கள்தொகைச் சிக்கலைப் புதியகோட்பாடு அணுகுகிறது. இது வரவேற்கத் தக்கதொரு முதல் மாறுதல். இரண்டாவதாக, மால்தஸின் கண்ணோட்டத்தில் மக்கள் தொகையில் ஏற்படும் ஒவ்வொரு மிகுதிப்பாடும் தீமை பயப்பதே. ஆதாமுக்குப் பின் ஏவாள் ஒருத்தி தோன்றியது கூடத் தீயதே! ஆனுல், உத்தம அளவுக் கோட்பாட்டின் படி, நாடு போதா மக்கள் தொகையைக் கொண்டிருக்கும் போது மக்கள் தொகையைப் பெருக்கியாக வேண்டும் என்ற கருத்து வலியுறுகிறது. மூன்ருவதாக, மால்தஸின் கோட்பாடு ஒரு நாடு பேண முடிகிற மிகவுயர்ந்த அளவு மக்கள் தொகையைப் பற்றிப் பேசியது. ஆனுல் நாடு அறிய வேண்டியது மிகவுயர்ந்த அளவினையல்ல, உத்தமமான அளவினைத்தான் என்பது நினைவு கூரத் தக்கது. இதன் தொடர்பாகப் புதிய கோட்பாடு வெறும் ஏட்டுச் சுரைக்காயாக இராது, நடைமுறைக்கு உதவுவதாக இருப்பது இன்னெரு சிறப்பு. நாட்டில் போதா மக்கள் தொகை இருந்தால், அதனைப் பெருக்குவதற்கு முயல வேண்டும்;[1] அமித மக்கள் தொகை

[1] ஜெர்மனி, ருஷிய நாடுகளின் வரலாற்றைப் படித்தால், மக்கள்தொகைப் பெருக்கத்திற்குரிய வழிகளின் பட்டியலொன்றைப் பெறலாம். நிறையக் குழந்தைகள் பெறுவோர்க்குப் பட்டங்கள், பரிசுகள், உதவித் தொகைகள், வரிவிலக்குகள் முதலியனவும், மணமாகாதோர்க்கு வரிவிதிப்பு, குடியிருப்பு வசதியின்மை முதலியனவும் இப்பட்டியலில் இடம் பெறுபவைகளில் சில.

இருந்தால், அதனைக் குறைக்க முயல வேண்டும். இங்கும் தவிர்ப்புத் தடைகளைக் கடைப் பிடிக்கச் சொல்லும் மால்தஸின் வழி [1] மட்டுமல்ல, நாட்டு வளங்களை, தொழில்நுட்ப அறிவை, அயல் நாட்டு வணிக வாய்ப்புக்களைப் பெருக்கச் சொல்லும் புதிய வழியொன்றும் இருப்பது கவனிக்கத் தக்கது. [2] இறுதியாக, புதிய கோட்பாடு எதிர்காலம் இருள்மண்டிய நரகக் குழியாக இருக்குமென அச்சுறுத்தவில்லை; ஒளிமயமான எதிர்காலம் உள்ளதென நம்பிக்கையுடன் பேசுகிறது புதிய கோட்பாடு. மக்கள் நலம் பேணும் வகையில் மக்கள் தொகை அளவைச் சரிக்கட்டிக்கொள்ள இயல்வதில் புதிய கோட்பாட்டுக்கு நம்பிக்கை இருக்கிறது. [3] மற்றொரு வகையிலும் புதிய கோட்பாடு நம்பிக்கை தருகிறது. மால்தஸின் கருத்துப்படி மக்கள் தொகை அமிதமாகி விட்டதற்கு அறிகுறி பஞ்சம், போர் முதலியவற்றால் ஏற்படும் சாவுகள். ஆனால், உத்தம மக்கள் தொகைக் கோட்பாட்டின் படி, அமித மக்கள் தொகை இருந்தால் சாவுகளின் எண்ணிக்கையொன்றும் அதிகரிக்கப் போவதில்லை; மக்களது தலா வருமானமே ஓரளவு குறைந்து செல்ல முற்படும்: இதனைத் தடுத்து நிறுத்தி விட்டால், மக்கள் தொகைச் சிக்கலை உயிர் நட்டம் ஏற்படாமலே சமாளித்து விடலாம்.

இவ்வாறெல்லாம் உத்தம மக்கள் தொகைக் கோட்பாடு பழைய கோட்பாட்டை விடச் சிறந்ததாகத் தோன்றுகிற போதிலும், அதன் சில குறைபாடுகளை மறந்து விட முடியாது:

[1] எச்சமாயிருக்கும் மக்கள் தொகையை அயல்நாடுகளில் குடியேற வைப்பதும் ஒரு வழி. இந்தக் குடியிறக்கம் மக்கள் தொகையின் தன்மையைப் பாதிக்கலாம்; திறமையும் முயற்சியும் மிக்கவர் அயல்நாடு சென்றுவிட்டால் எஞ்சியிருப்பவர் குறைந்த தரத்தவர் ஆகிவிடலாம்.

[2] மக்கள் தொகையைக் குறைப்பதைவிட, வளங்களையும் பிறவற்றையும் பெருக்குவதே சிறந்த வழி. முதல் வழியைக் கடைப்பிடிக்கும் போது, மக்கள் தொகையின் தொழில் வழிப் பகிர்வு பாதிக்கப் படலாம். மக்கள் தொகையைக் குறைக்கும் போது பிறப்பு இறப்பு விகிதங்கள் பாதிக்கப்படலாம். இதனால் இளையோர் தொகை குறைந்து முதியோர் தொகை பெருகலாம்; விளைவு இளையோர் விரும்பும் பொருள்களின் தேவை குறைந்து, முதியோர் விரும்பும் பொருள்களின் தேவை பெருகலாம். இத்தேவை மாற்றம் குறிப்பிட்ட தொழில்களில் ஈடுபடும் தொழிலாளரது வேலைவாய்ப்பைப் பாதிக்கிறது. வேலையின்மை முதலிய தொல்லைகள் ஏற்படலாம்.

[3] ஒரு நாட்டில் மக்கள் தொகை அளவை எவ்வளவு சரிக்கட்டிக்கொள்ள வேண்டும் என்பதை அறிய, டால்டன் (Dalton) வாய்ப்பாடொன்றைத் தந்துள்ளார்:

$$M = \frac{A-O}{O}$$

இதில் M என்பது மக்கள் தொகையின் பொருத்தமின்மை (Maladjustment) யைக் குறிக்கிறது: O - உத்தம மக்கள்தொகை, A உண்மை (actual) மக்கள் தொகை. இங்கே, M நேர்க்கணியமாக இருந்தால் மக்கள் தொகை அமிதமாயுள்ளதென்றும், எதிர்க்கணியமாயிருந்தால் போதாதென்றும் அறியலாம். இந்த வாய்பாடு நடைமுறையில் அவ்வளவாகப் பயன்படுவதில்லை. ஏனெனில் உத்தம மக்கள் தொகையாகிய O எவ்வளவென முன்னறிய வழியில்லை.

வருமானம் நேர்மையானபடிப் பகிர்ந் தளிக்கப் பெறுகிறது என்ற நம்பிக்கையிலேயே மொத்த வருமானப் பெருக்கம், தலா வருமானப் பெருக்கத்தையும் இயல்பாகக் கொணர்கிறது எனக் கொள்கிறோம். இது எப்பொழுதும் உண்மையாக இருப்பதில்லை. இந்திய நாட்டில், அண்மைக் காலத்தில் உற்பத்தி பல துறைகளிலும் பெருகியுள்ள போதிலும், அது சமமாகப் பகிர்ந்தளிக்கப் பெறாத காரணத்தால், தலா வருமானத்தில் குறிப்பிடத்தக்க அளவு முன்னேற்றமில்லை என அறிகிறோம். இது போன்றே, பிற எடுகோள்களும் நடைமுறைக்குப் பொருந்தாதவைகளாகவே உள்ளன. மக்கள் தொகைப் பெருக்கம், அதனாலேற்பட்ட தேவை மிகுதி, பொருள்களின் விலையேற்றம், இலாபவாய்ப்புப் பெருக்கம் ஆகியவைகளே தொழிற் புரட்சியை யொட்டித் தோன்றிய புதிய கண்டு பிடிப்புக்களுக்குக் காரணம். எனவே, மக்கள் தொகை மாறும் போது தொழில் நுட்ப அறிவும் மாறி விடலாம். வேலை நேரம் முதலியவை மக்கள் தொகை மாறும் போது மாறாதிருக்குமெனக் கொள்வதும் பொருத்தமானதல்ல. வளர்ந்து செல்லும் மக்கள் தொகைக்கு வேலை வாய்ப்புத் தரவேண்டும் என்ற நோக்கத்தோடு, நம் நாட்டிலும் சில மாநிலங்களில் வேலையிலிருந்து ஓய்வு பெறும் வயதைக் குறைத்துக் கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். மக்கள் தொகை மாறும் போது, மொத்த மக்கள் தொகையில் உழைப்பவர் சதவீதம் மாறாதிருக்கும் என எண்ணுவதும் தவறே. இங்கிலாந்து நாட்டு வரலாற்றை எடுத்துக் கொண்டால், 1891-க்கும் 1953க்கும் இடையே 60 வயதுக்கு மேற்பட்டவர் தொகை மொத்த மக்கள் தொகையில் 7 சதவீதத்திலிருந்து 17 சதவீதமாக மாறியுள்ளது. இதன் பொருள் மக்கள்தொகையில் உழைப்பவர் சதவீதம் குறைந்துவிட்டது என்பது தான். இது போன்றே, மக்கள் தொகை பெருகும் போது அயல் நாட்டு வணிகத்திற்குரிய வாய்ப்பும் மாறுமென இங்கிலாந்து, ஜெர்மானிய நாட்டு வரலாறுகள் மெய்ப்பிக்கின்றன.

உத்தம மக்கள் தொகைக் கோட்பாட்டின் வேறொரு குறை உத்தம அளவு எது என்பதை நடைமுறையில் கணக்கிட்டுச் சொல்ல முடியாது என்பது தான். இத்துறையில் ஆராய்ந்த அறிஞர்களிடையே கருத்தொற்றுமை யில்லை என்பதே இதனை விளக்கும். உலகத்தின் உத்தம மக்கள் தொகை 5,200 மில்லியன் என்பார் ஈஸ்ட் (F.M. East); பென்க் (Penck) என்பவரோ 15,900 மில்லியன் என்பார்!

மேலும், தலா வருமானத்தை மிகவுயர்ந்த அளவினதாக்குவது மட்டும் அரசின் நோக்கமாக இருந்தால் போதாது. உடல் நலமிக்க, கல்வித்தர மிக்க, ஒழுக்கக் கூறுடைய மக்கள் தொகையைப் பெறுவதே ஓர் அரசின் நோக்கமாக இருக்க முடியும். இந்தத் தொகை

உத்தம அளவினதை விடக் குறைவாக இருந்தாலும், அதுவே நல்லது. மேலும், ஜெர்மனி போன்ற நாடுகளின் மக்கள் தொகைக் கொள்கை படைத் துறைத் தேவைகளை நிறைவேற்றுவதையே தலையாய நோக்கமாகக் கொண்டிருக்கிறது. வளர்ந்து செல்லும் தமது பகையினமாகிய அரேபியர்களின் எண்ணிக்கைக்கு ஈடுகட்டும் வகையில் யூதர்கள் தொகையை எவ்வாறு பெருக்குவது என்ற அரசியல் நோக்கமே இஸ்ரேல் நாட்டின் இன்றைய மக்கள் தொகைக் கொள்கையை விளக்குகிறது. எனவே, நல்ல தொரு மக்கள் தொகைக் கொள்கை, பொருளியல், சமூக, படை நல, அரசியல் நோக்கங்களை நிறைவேற்றத் தக்கதாக இருக்க வேண்டும் என்பது தெளிவு.

**உழைப்பின் திறமை.**

போர்ப் பிற்கால ஜெர்மனியும் ஜப்பானும் மக்கள் தொகை வளர்ச்சியை ஒரு மதிப்பரிய சொத்தாகவே கருதின. இந்தியா போன்ற பிற நாடுகள் மக்கள் தொகை வளர்ச்சியை ஒரு தலைவலி எனக் கருதும் காலத்தில் ஜெர்மனியும் ஜப்பானும் அதனை வேறு வகையில் கருதக்காரணம், அவ்விரு நாடுகளிலும், உழைக்கும் மக்கள் திறமை மிக்கவராகத் திகழ்ந்தமை தான். உழைப்பாளர் திறமையுடன் திகழ வேண்டும் என்பது இதிலிருந்து தெளிவாகிறது.

தொழிலாளர் திறமையை எவ்வாறு அறிவது ? அவர்களுடைய வினைதிறனே திறமையைக் காட்டுகிறது. வினைதிறனை உற்பத்தி அளவிலிருந்து அறிய முடியும். மிகுதியாக உற்பத்தி செய்பவனே மிகுந்த திறமையுடையவன். இந்தத் திறமையானது ஆளுக்கு ஆள் வேறுபடுகிறது. தொழிலாளியின் வேலை செய்யும் திறமையும் வேலை செய்யும் விருப்பமுமே அத்திறமையை நிருணயிக்கும் மிகச் சிறந்த காரணிகள்.

ஒருவனது வேலைசெய்யும் திறமை, அவனது உள்ளார்ந்த ஆற்றலையும் உற்பத்தி முறைகளையும் பொருத்தது. ஒருவனது உள்ளார்ந்த ஆற்றல் அவனது இனத்தையும் மரபுவழிப் பண்பையும் பொருத்துள்ள தாகக் கூறுவதுண்டு. உழைப்பவன் திறமை அவனது உடல் வலிமையை ஒட்டியது. உடல் வலிமையோ அவரவர் இனத்தைப் பொருத்துள்ளது என்பது சிலர் கருத்து. மலேசியாவில் சீனர்களும், கிழக்காப்பிரிக்காவில் இந்தியர்களும், மேற்காப்பிரிக்காவில் லெபனனியர்களும் அந்தந்த நாட்டு மக்களை விடத் திறமை மிக்கவராக இருப்பதிலிருந்து இந்தக்கருத்தின் உண்மை புலப்படும்.[1]

[1] 'Economic Analysis and Policy in Under-developed Countries' by **P. T. Baner P. 74.**

மரபு வழிப் பண்பும் உழைப்பவரது திறமையைத் தாக்குகிறது. பெற்ரோர் உடல் வலிமையுள்ளோராயிருந்தால் மக்களும் வலிமையுள்ளோராக இருப்பது வழக்கம். எனவே, ஓரளவுக்கு உடல் நலமானது பரம்பரைச் சொத்தெனலாம். ஒரு முதலாளித்துவ அமைப்பில் தனியார் சொத்துரிமையும் வருமான ஏற்றத் தாழ்வுகளும் இருப்பது வரை உழைக்கும் திறமை மரபுவழிப் பண்பாக அமைந்து விடுவதைத் தவிர்க்க முடியாது.

உழைப்பவர் திறமை, அவர்கள் வழக்கமாக நுகர்ந்து வரும் பொருள்களது அளவை—அல்லது, அவர்கள் வாழ்க்கைத் தரத்தைச் சார்ந்துள்ளது. ஊட்ட மிக்க உண்டி, இதமான உடை, சுகமான இருப்பிடம் ஆகியவை மனிதனது உடல் நலத்தையும் உடல் வலிமையையும் மிகுக்கின்றன. நல்ல வாழ்க்கைத் தரம் கல்விக்கும் மொழிப் பயிற்சிக்கும் வகை செய்கிறது. பொதுக் கல்வி ஆழ்ந்த அறிவையும், தொழிற்கல்வி செயலறிவையும் வளர்த்து உழைப்பவன் திறமையை மிகுக்கின்றன. வளர்ந்து கொண்டிருக்கும் நாடுகளில் கல்வித் தரத்தை உயர்த்தும் முயற்சியின் அவசியத்தை இங்குக் குறிப்பிடலாம். ருஷ்யாவும் ஜப்பானும் திறமை உருவாக்கத்திற்காக மேற்கொண்ட முயற்சி பிற நாடுகளுக்கு முன் மாதிரியாகத் திகழ்கிறது எனலாம்.

உழைப்பவன் உள்ளார்ந்த ஆற்றலைச் சில புறக்காரணிகளும் பாதிக்கின்றன. வேலைநேரமும் வேலைச்சூழலும் இக்காரணிகளுள் மிக முக்கியமானவை எனலாம். அதிக நேரம் வேலை செய்பவன், குறைந்த நேரம் வேலை செய்பவனை விட மிகுதியாக உற்பத்தி செய்வான் என்ற கருத்து தற்காலத்தில் ஏற்றுக்கொள்ளப் படுவதில்லை. எந்திரமோ களைப்பின்றி அறுபது நாழிகையும் தொடர்ந்து வேலை செய்யத் தக்கது. மனிதன் அத்தகையவன் அல்லன். எனவே, வேலை நேரத்தைக் குறைப்பதும், வேலைக் கிடையில் சிறிது ஓய்வளிப்பதும் தொழிலாளியின் களைப்பை நீக்கிப் புத்துணர்ச்சியோடு வேலை செய்ய உதவுகின்றன.

ஒருவனது வேலை செய்யும் திறமை, உற்பத்தி முறைகளையும் பெரிதும் பொருத்துள்ளது. மேலைநாடுகளில் தொழிலாளி திறமை மிக்கவனாகத் திகழக் காரணம் அவன் பழகிவரும் திறன் மிக்க உற்பத்தி முறைகள் தாம்.

உழைப்பவனது வேலை செய்யும் விருப்பம் வருமானம் ஈட்டுவதில் அவனுக்கிருக்கும் நாட்டம், வேலையளிப்பவனுடன் உள்ள நல்லுறவு, வேலை செல்வது பற்றிய மனநோக்கு ஆகியமூன்று காரணிகளைப் பொருத்துள்ளது.

மிகுதியான வருமானம் ஈட்ட வேண்டும் என்ற நோக்கம் உழைப்பவனுக்கு இருந்தால், கடினமாக உழைக்கவும், திறமையை மிகுத்துக் கொள்ளவும் அவன் முன்வருவது இயல்பு. 'போதுமென்ற மனமே பொன் செய்யும் மருந்து' என்ற நோக்கில் குறைந்த அளவு வாழ்க்கைத் தரத்துடன் நிறைவு பெறுகிறவர்களாகவும் தமது விருப்பங்களை வளர்ப்பதில் நம்பிக்கை யில்லாதவர்களாகவும், நடப்பு வருமானத்துடன் அமைதியடைகிற வர்களாகவும் இருந்தால் தமது உழைப்பின் அளவையோ திறமையையோ மிகுத்துக் கொள்வதில் ஆர்வமிராது. 'இரங்கத் தக்க மனநிறைவு' (Pathetic contentment) என இதனை டாக்டர் வி. கே. ஆர். வி. ராவ் குறிப்பிடுவார்.

வேலையளிப்பவனுடன் நிலவும் நல்லுறவு வேலை செய்யும் விருப்பத்தைக் கட்டுப் படுத்தும் இரண்டாவது காரணி. வேலையளிப்போன் நலனும், வேலை செய்வோன் நலனும் ஒருங்கிணையும் போது தான் நன்கு உழைப்பதில் விருப்பமிருக்கும். எனவே தொழில் தகராறுகள் இயன்ற மட்டும் தவிர்க்கப்பட வேண்டும். இதற்கொரு வழி நேர்மையான கூலி வீதங்களுக்கு வகை செய்வதாகும். தொழிலாளியை ஆர்வத்துடன் வேலை செய்யத் தூண்டும் வகையில் இலாபப் பங்குகள், போனஸ்கள் முதலியவையும் வழங்கப்பட வேண்டும், வேலை யொழுங்குகளும் இயன்ற மட்டும் எளிதாயிருக்க வேண்டும். 'சம்பளம் அரைப்பணமானாலும் சலுகை இருக்க வேண்டும்' என்ற பழமொழி இங்குச் சிந்திக்கத் தக்கது.

இதன் தொடர்பாக 'உயர் கூலிச் சிக்கனங்கள்' (Economy of High Wages) என்ற கோட்பாடு விளக்கப் பெற்று வருகிறது. நல்ல முறையில் கூலி தந்தால் உழைப்பாளியின் வாழ்க்கைத் தரம், திறமை ஆகிய வனைத்தும் உயர்ந்து உற்பத்தித் திறனும் மிகுதியாகிறது. எனவே, குறைந்த விளைதிறனுக்குக் காரணமாக இருக்கும் குறைந்த கூலி மட்டத்தை முதலில் உயர்த்துவதன் வழியாகத் தான், அடுத்து விளைதிறனையும் உயர்த்த முடியும். அமெரிக்கத் தொழிலாளர் ஒரே நேரத்தில் திறன் மிக்கவராகவும், உயர்கூலி பெறுபவராகவும் இருப்பது தற்செயலாக நேர்ந்த ஒன்றல்ல; அமெரிக்கக் கூலிவீதம் உயர்வாக இருக்கக் காரணம் விளைதிறன் உயர்வாக இருப்பது; விளைதிறன் உயர்வாக இருப்பதற்குக் காரணங்களில் ஒன்று உயர் கூலி வீதங்களே யாகும்.

வேலை செய்வது பற்றிய மனநோக்கு அடுத்தவொரு காரணியாகும். ஒழுக்க நியதிகள், சமய நம்பிக்கைகள், கடமையுணர்ச்சி முதலியன தொழிலாளியின் மனப் போக்கையும், அதன் வழியாக

வேலை செய்வது பற்றிய அவனது நோக்கத்தையும் தாக்குகின்றன. இவை, தொழிலாளியின் வீட்டுச் சூழ்நிலையையும் நாட்டுச் சூழ்நிலையையும் ஒட்டியுள்ளன. வீட்டுச் சூழ்நிலையே அவனது மனத்தைப் பண்படுத்துகிறது. நாட்டுச் சூழ் நிலை; வேலை செய்வோர் காப்பீடு ஏற்பாடுகளைச் செய்தளித்தால், உழைப்பவர் நம்பிக்கையுடன் வேலையில் ஈடுபடுவது இயல்பு. தனது உழைப்பின் பயனைத் தன்னால் உறுதியாக நுகரமுடியும் என்ற உறுதிப்பாடு இருந்தால் உழைப்பவன் உண்மையாக உழைப்பான் என எதிர்பார்க்கலாம். இதுவும் அரசால் ஏற்படுத்தப் பெற வேண்டிய ஒன்று.

### உழைப்பாளர் முயற்சி

உழைப்பின் அளிப்பு உழைப்பாளர் தொகையையும் திறமையையும் மட்டுமல்ல, அவர்களுடைய முயற்சியையும் பொருத்துள்ளது. இம்முயற்சி, ஓரளவு வேலை நேரத்தையும், ஓரளவு வேலை நேரத்தில் எவ்வளவு ஊக்கத்துடனும் கவனத்துடனும் உழைப்பவன் வேலையில் ஈடுபட்டுள்ளான் என்பதையும் பொருத்துள்ளது.

## முதல்

நிலத்திலிருந்தும் உழைப்பிலிருந்தும் வேறுபட்ட நிலையில் முதல் முற்றிலும் செயற்கைப் பொருளே. இதனால், முதலின் அளிப்பு மனிதனது கையில் உள்ளது : அதாவது முதலை ஆக்குவது மனிதனே. முதலின் அளிப்பு 'முதல் ஆக்கம்' என்று அறியப் பெறுவது இது பற்றித்தான்.

### முதல் ஆக்கம்

எந்திரங்களையும் பிற உற்பத்திக் கருவிகளையும் உற்பத்தி செய்வதில் நாட்டின் செல்வ வளங்கள் செலவிடப் பெறும் போது, முதல் ஆக்கம் நிகழ்கிறது. செல்வ வளங்கள் இயல்பாகவே வரையறைக்குட்பட்டன. மேலும், இவ்வளங்களைக் கொண்டு எல்லாப் பொருள்களையும்-நுகர்வுப் பொருள்களையோ அல்லது உற்பத்திப் பொருள்களையோ-உற்பத்தி செய்யவும் இயலும். ஆனால், செல்வ வளங்களின் இயல்பான வரையறையால், இவற்றைக் கொண்டு நுகர்வுப் பொருள்களிலும் உற்பத்திப் பொருள்களிலும் ஏதேனும் ஒன்றைத் தான் உற்பத்தி செய்ய இயலுமே யொழிய இரண்டையும் ஒரே நேரத்தில் உற்பத்தி செய்ய இயலாது. இந்நிலையில் வளங்கள் அனைத்தையும் நுகர்வுப் பொருள் உற்பத்தியில் செலவிட்டுவிட்டால், உற்பத்திப் பொருள்களை ஆக்குவதற்கு வளங்கள் இல்லாது போகும். 'மாவைத் தின்றால் பலகாரமில்லை'! எனவே, முதல் ஆகவேண்டு

மெனில் நாட்டு வளங்களில் ஒரு பகுதி உற்பத்திப் பொருள்கள் உற்பத்திக்கென ஒதுக்கிக் கொடுக்கப்பட வேண்டும்; அந்த அளவுக்கு நுகர்வுப் பொருள்களை உற்பத்தி செய்ய முடியாது போகிறது. நுகர்வுப் பொருள்கள் உற்பத்தியாகவில்லையெனில், நுகர்வு குன்றுகிறது என்பது அதன் பொருள். இவ்வாறு, முதல் ஆக்கம் நுகர்வைத் தவிர்ப்பதன் வழியாகத் தான் இயலும் என்பது தெளிவாகிறது.[1]

தனிமனிதனை ஓர் அலகாக எடுத்துக் கொண்டு ஒரு சிறிய எடுத்துக் காட்டுடன் இதனை விளக்கலாம். ஒருவன் ஒரு நாளில் தன் கைகளால் 3 மீன் பிடிக்க முடியுமென வைத்துக் கொள்வோம். இங்கே, முதல் இல்லாமலே உற்பத்தி நடக்கிறது. ஆனால், முதலை ஆண்டால்—அதாவது, அவன் படகும் வலையுங் கொண்டு மீன் பிடித்தால்-ஒரு நாளில் 30 மீன் பிடிக்க முடியுமென வைத்துக் கொள்வோம். இந்த முதலை-அதாவது படகையும் வலையையும்-அவன் எவ்வாறு பெற முடியும் என்பது தான் வினா. மீன் பிடிப்பதில் வழக்கமாகச் செலவிடும் உழைப்பைச் சிலகாலம் (ஒரு மாதமென்று வைத்துக் கொள்வோம்) படகு கட்டுவதிலும் வலைபின்னுவதிலும் அவன் செலவிட வேண்டும். படகு கட்டுவதிலும் வலைபின்னுவதிலும் ஈடுபட்டிருக்கும் இந்த ஒரு மாத காலத்தில் நுகர்வதற்கு மீன் பிடிக்க முடியாது. எனவே, படகையும் வலையையும் பெற இரு வழிகளே யுள்ளன. ஒரு வழி, அவன் ஒரு மாத காலத்திற்குத் தன் நுகர்வைத் தவிர்க்க வேண்டும்.[2] இரண்டாவது வழி, யாரிடமாவது 90 மீன் கடனாகப் பெற முடியுமானால், அவற்றைக் கொண்டு தன் நுகர்வுத் தேவைகளை ஒரு மாதகாலம் நிறைவேற்றிக் கொண்டு, படகையும் வலையையும் செய்து முடித்த பின், அவற்றின் உதவியால் முன்னிலும் மிகுதியாக மீன் பிடித்து, எச்சமாகக் கிடைப்பதில் ஒரு பகுதியைக் கடன் தந்தவனுக்கு (வட்டியுடன்) கொடுத்துக் கடனைத் தீர்த்து

[1] சோவியத் நாட்டு வரலாறு இந்த உண்மையை நன்கு விளக்கும். பொதுவுடைமையினர் ஆட்சிக்கு வந்ததும், நாட்டு முன்னேற்றத்திற்கு எந்திரங்கள் உடனடியாக வேண்டும் என்பதை உணர்ந்தனர். எந்திரங்களை இயற்றுவதற்கு வேண்டிய எஃகையும் பிற கருவிகளையும் ஆக்குகிற தொழில்களுக்கே அவர்கள் முதன்மை நல்கினர். இதனால் துணியாலைகளும் சர்க்கரையாலைகளும் போன்ற நுகர்வுப் பொருள்களின் தொழில்களைப் புறக்கணிக்க வேண்டி வந்தது; மக்களுக்குப் போதிய நுகர்வுப் பொருள்கள் கிடைக்கவில்லை. 10 ஆண்டுகளுக்குள் முதற் கருவிப் பொருள்களை உற்பத்தி செய்வதில் சோவியத் நாடு மகத்தான வெற்றிபெற்று விட்டதெனில், அந்த இடைக் காலத்தில் மக்கள் நுகர்வுத் தரம் தாழ்ந்த படியில் இருந்தமையே அதற்குக் காரணம்.

[2] ஒரு மாதம் வரை தொடர்ந்து நுகராதிருக்க அவனால் முடியாதுதான். ஆகவே, ஒவ்வொரு நாளும் குறிப்பிட்ட நேரம் மீன்பிடிக்காமலிருந்து, அந்நேரத்தைப் படகு செய்வதிலும் வலை பின்னுவதிலும் செலவிடலாம். இங்கு அவன் பிடிக்கிற மீனின் தொகை குறைவதால், அந்த அளவுக்கு அவன் நுகர்வு தவிர்க்கப்படுவது தெளிவு.

விடலாம். அதன் பின் படகும் வலையும் அவனுக்குச் சொந்தமாகி விடுகின்றன. வேண்டிய முதல் அவனுக்குக் கிடைத்து விடுகிறது. இவ்வாறு ஒருவன் தனது நுகர்வைக் குறைப்பதன் வழியாகவோ, அடுத்தவன் தனது நுகர்வைக் குறைத்து கொண்டு கொடுக்கும் கடன் வழியாகவோ [1] தான் முதலை ஆக்க முடியும் என்பது தெளிவாகிறது.[2]

முதல் ஆக்கம் நிகழ்காலத்தில் கிடைக்கும் நுகர்வுப் பொருள்களின் அளவைக் குறைப்பது உண்மை. ஆனால், முதலை ஆண்டு உற்பத்தி செய்யும் போது, எதிர் காலத்தில் நுகர்வுப் பொருள்கள் உற்பத்தி வளர ஏதுவாகிறது. எனவே, முதல் ஆக்கத்தால் நுகர்வு ஒரேயடியாகத் தவிர்க்கப் பட்டு விட்டதாகச் சொல்வதில் பொருளில்லை என்பார் மார்ஷல். நுகர்வானது தள்ளி வைக்கப் படுகிறது என்று சொல்வதே பொருத்தமாக இருக்கும். எனவே, குறிப்பிட்ட காலத்துக்கு நுகர்வைத் தள்ளி வைப்பதைக் காத்திருத்தல் என்று மார்ஷல் குறிப்பிட்டு, முதல் ஆக வேண்டுமெனில் நுகர்வோர் காத்திருக்க வேண்டும் என்று சொல்வார். [3]

இன்றைய பொருளாதார அமைப்பு ஒரு பணப் பொருளாதார அமைப்பு. பணப் பொருளாதார அமைப்பிலும் மேலே கண்ட முறையில் தான் முதல் ஆக்கம் நிகழ்கிறது. நுகர்வோர் தம் பணத்தை நுகர்வுப் பொருள்களில் செல விடுகின்றனர். தம் பணம் அனைத்தையும் அவர்கள் நுகர்வில் செலவிட்டு விட்டால், இந்த நுகர்வுப் பொருள்கள் தேவையை நிறைவேற்றுவதற்காக நாட்டின் வளமனைத்தும் இவற்றின் உற்பத்தியிலேயே ஈடுபடுத்தப்படும். இதனால், முதல் கருவிப் பொருள்கள் உற்பத்தியாக வழியில்லை. எனவே, நுகர்வுப் பொருள்களை வாங்குவதில் செலவிடுவதைத் தவிர்ப்பதன் வழியாகவே முதல் கருவிப் பொருள்களை ஆக்கமுடியும்.

[1] தனி மனிதன் எவ்வாறு கடன் வாங்குவதன் வழியாக முதல் ஆக்க முடியுமோ, அவ்வாறே ஒரு நாடும் பிற நாடுகளிலிருந்து கடன் வாங்குவதன் வழியாக முதல் ஆக்க முடியும். இதுதான் அயல்நாட்டுக் கடன் உதவியின் அடிப்படை.

[2] முதலாட்சி உற்பத்தி முறையின் வேறுசில தனி இயல்புகளும் தெளிவாகப் புலப்படுகின்றன. முதலாட்சி உற்பத்தி முறை சுற்றுமுறை யென்பது தெரிய வருகிறது. மீனை நேரடியாகப் பிடிப்பதற்குப் பதிலாக, முதலாவதாக, படகையும் வலையையுஞ்செய்து பின்னர் அவற்றைக்கொண்டு மீன் பிடிப்பதால் இது சுற்றுமுறையாகிறது. இச் சுற்றுமுறை காலச் செலவு கொள்வது என்பதுங் குறிப்பிடத் தக்கது. படகையும் வலையையும் செய்வதில் செலவிட்டுள்ள காலமே இவ்வாறு குறிப்பிடப்படுகிறது அடுத்ததாக, காலச் செலவு கொள்ளும் இச் சுற்றுமுறை உற்பத்தியை மிகுக்க வல்லது: கைகளால் பிடிக்க முடிகிறதைவிட மிகுதியாகப் படகையும் வலையையுங் கொண்டு மீன் பிடிக்க இயல்வது இதனை விளக்கும்.

[3] மேலே சொன்ன எடுத்துக் காட்டிலும் சில காலம் மீன் நுகர்வைத் தவிர்க்கிற போதிலும் அக்கால முடிவில் முன்னிலும் மிகுதியாக மீன் நுகர வழியேற்படுகிறது.

இந்தத் தவிர்ப்பையே சேமிப்பு என்கிறோம். எனவே சேமிப்புக்களே முதல் ஆக்கத்திற்குத் தோற்றுவாயாக உள்ளன.

ஒரு பணப் பொருளாதாரத்தில் முதல் ஆக்கம் மூன்று நிலையாக நிகழ்கிறது. முதலாவதாக, மக்கள் சேமிக்க வேண்டும். நுகர்வைக் குறைப்பதன் வழியாகவே இது இயலும். மக்களுடைய சேமிப்புக்கள் முதலீடு செய்யப் படாவிட்டால் பயனெதுவுமில்லை. சேமித்த பணம் அப்படியே பெட்டியில் பூட்டி வைக்கப்படுமானால், அது வீணே குவித்து வைக்கப் பட்டது ஆகிறது. பொன்னிலும் மண்ணிலும் போடப்பட்டாலும் இதுவே நிலை. மாறாக, எந்திரங்கள் போன்ற முதல் கருவிப் பொருள்களையும் புதிய கம்பெனிகளது பங்குகளையும் வாங்குவதிலோ, ஒரு பாங்கில் வைப்புத் தொகையாகப் போடுவதிலோ இச்சேமிப்புக்கள் பயன்படுத்தப் படவேண்டும். (பாங்குகள் உற்பத்தியாளர்க்கு இதனைக் கடனாக உதவும்). இவ்வாறு, இரண்டாவதாக, மக்கள் சேமிப்புக்கள் பாங்கிகள், காப்பீட்டுத் தொழிலகங்கள், முதலீட்டு நிறுவனங்கள் போன்றவற்றைச் சென்று அடைய வேண்டும். இறுதியாக, இச்சேமிப்புக்கள் முதல் கருவிப் பொருள்களை உற்பத்தி செய்யும் வகையில் முதலீடு செய்வோர்க்குக் கிடைக்க வேண்டும். பணச் சேமிப்புக்கள் முதல் கருவிப் பொருள்களாக உருமாறும் இந்த இறுதிக்கட்டம் மிகவும் முக்கியமானது. இருப்பினும், முதலிரு நிலைகளைத் தொடர்ந்தே இந்த இறுதிக் கட்டம் ஏற்பட முடியும்.

இவ்வாறு சேமிப்புக்களே முதல் ஆக்கத்தை நிருணயிப்பன என்று சொல்லும் போது, சேமிப்புக்கள் எவற்றைப் பொருத்துள்ளன என்ற வினா இயல்பாகவே எழுகிறது. சேமிப்பானது, சேமிக்கும் ஆற்றல், சேமிக்கும் விருப்பம், சேமிக்க வசதிகள் ஆகிய மூன்று காரணிகளாலும் நிருணயிக்கப் பெறுகிறது.

சேமிக்கும் ஆற்றலானது ஒருவனால் எவ்வளவு சேமிக்க இயலும் என்பதைச் சுட்டிக் காட்டுகிறது. மேலே கண்டது போல, வருமானத்தில் நுகர்வதிலிட்ட செலவு போக எஞ்சுவதே சேமிப்பு. எனவே ஒருவனது சேமிக்கும் ஆற்றல் அவனுடைய வரவையும் செலவையும் பொருத்தது என்பது தெளிவாகிறது. வருமானம் ஏராளமாயிருந்தால் சேமிக்கும் ஆற்றலும் மிகுதியாக இருக்கும். வருமானம் நாட்டின் பொருளாதார வளர்ச்சியைப் பொருத்தது. திறமையான உற்பத்தி முறை நிலவும் நாட்டைச் சார்ந்தவர்கள் மிகுதியாகச் சேமிப்பார்கள் என எதிர்பார்க்கலாம்.

இங்கே, சேமிப்புக்கும் வருமானத்துக்கும் இடையே யுள்ள விந்தையான தொடர்பொன்றைப் பார்க்கலாம், வளர்ச்சி குன்றிய

நாடுகளில் வருமானம் குன்றியிருப்பது இயல்பு. இங்கு வருமானம் குன்றியிருக்கக் காரணம் திறமையான உற்பத்தி முறை இல்லாமற் போனதுதான். எனவே, வருமானத்தை உயர்த்த வேண்டுமெனில் உற்பத்தி முறையைத் திறமையுள்ளதாக ஆக்கவேண்டும். உற்பத்தி முறையைத் திறமையுள்ளதாக ஆக்க வேண்டுமெனில் முதல் வேண்டும். முதல் வேண்டுமெனில் சேமிப்பு பெருக வேண்டும்; சேமிப்பு வேண்டுமெனில் வருமானம் உயர வேண்டும். இவ்வாறு, வருமானம் உயர வேண்டுமெனில் சேமிப்பு உயர வேண்டும்; சேமிப்பு உயர வேண்டுமெனில் வருமானம் உயர வேண்டும்! என்று ஆகிறது. வளர்ச்சி குன்றிய நாடுகளை எதிரிடும் நச்சுச் சக்கரமே இந்த விந்தையான தொடர்பு தான்? இந்த நச்சுச் சக்கரத்தை ஏதாவதோர் முனையில் உடைப்பது தான் பொருளாதாரவளர்ச்சியின் மிகச் சிக்கலான கட்டமாக இருக்கிறது.

வருமானத்தை யொட்டிச் சேமிக்கும் ஆற்றலை நிருணயிக்கும் இன்னொரு காரணி வரி நிலையாகும். கடுமையான வரிகள் சேமிப்பைத் தடை செய்கின்றன. வரிகள் உயர்வாக இருக்கும் போது, சேமிப்பதற்கான எச்சம் எதுவும் மக்கள் வருமானத்தில் இராது. மிதமான வரிகளே சேமிப்பதற்கு ஊக்கம் அளிக்கின்றன. தனிப்பட்டவன் கண்ணோட்டத்தில் பார்க்கும் போது, வரிகள் வளர வளரச் சேமிப்புக் குறைந்து செல்வது உண்மை. ஆனால், மொத்தக் கண்ணோட்டத்தில் பார்க்கும் போது வரிகளால் உண்மையில் நிகழ்வது சேமிப்பே என்பதையும், சேமிக்கும் ஆள் தான் மாறுகிறது என்பதையும் உணர முடியும். நுகர்வில் இடுகிற செலவைக் குறைத்து முதலீட்டை இயல்வதாக்குவதால், வரிகளும் சேமிப்பின் விளைவையே தருகின்றன. தனிப்பட்டவர் சேமிப்பதற்குப் பதிலாக, அச்சேமிப்பு அரசைச் சென்று அடைவதே வேறுபாடு. மேலும், மக்கள் சேமிக்கத் தாமாக முன் வரவில்லையெனில், சேமிக்கப்பட வேண்டிய தொகையை மிகுதியான வரிகள் வழியாக அரசு பிரித்தெடுப்பது அதன் சமூகக் கடன்களுள் ஒன்று.[1]

சேமிக்கும் விருப்பம், மக்களுக்குச் சேமிப்பின் மீதுள்ள ஆர்வத்தையும் மன உறுதியையும் குறித்து நிற்கிறது. முற்றிலும் உளவியல்,

[1] மக்கள் சேமிப்பை அரசு பெறுவதற்கு மற்றொரு வழியும் உண்டு. நாட்டின் பணவீக்கத்தைக் கொணர்ந்தால் நுகர்வுப் பொருள்களின் தேவையை ஓரளவுக்குக் குறைக்க முடியும். குறிப்பிட்ட அளவு வருமானம் முன்னைவிடக் குறைவான அளவு நுகர்வோர் பொருள்களையே வாங்க முடியும். இதனால், நாட்டு வளங்களை முதல் கருவிகள் உற்பத்தியில் ஈடுபடுத்த முடியும். நுகர்வுப் பொருள்களின் தேவை குறையும் போது, அவற்றை உற்பத்தி செய்ய முன்னிலும் குறைந்த அளவே வளங்கள் அவசியப்படுவதால், எஞ்சிய வளங்களை முதல் கருவிப் பொருள்கள் உற்பத்திக்கு மாற்றிக் கொள்ளலாம். இவ்வாறு முதலீட்டுக்குக் கிடைக்கும் சேமிப்பு 'கட்டாயச் சேமிப்பு' (Forced Savings) எனப்படும்.

சமூகக் காரணிகளால் இது நிருணயிக்கப் பெறுகிறது. எதிர்காலத்துக்கு முன்னேற்பாடு செய்ய வேண்டும் என்ற விருப்பம், குடும்பப் பற்று, முன்னேறும் ஆர்வம், பழக்கவழக்கம் முதலியவை இக்காரணிகளில் சில. இவை தவிர, சேமிக்கும் விருப்பத்தைக் கட்டுப்படுத்துகிற மற்றொரு பொருளியல் காரணி வட்டிவீதம் ஆகும். வட்டி வீதம் உயரும் போது, மிகுதியாகச் சேமிக்க வேண்டும் என்று விரும்புவது இயல்பு. ஊக வணிகத்தில் ஈடுபடுவோர் சேமிப்பானது வட்டிவீதத்தையே பொருத்துள்ளது. ஆனால், மேலே கண்ட அளவியல் சமூகக் காரணங்களுக்காகச் சேமிப்போர் வட்டி வீதத்தை ஒப்பிட்டுப் பாராமலே சேமிப்பவர்கள் என்பதைக் கவனிக்க வேண்டும்.

சேமிக்க வேண்டுமெனில் அதற்குரிய வசதிகளும் இருக்க வேண்டும். இந்த வசதிகளைப் பாங்குகள், காப்பீட்டுத் தொழிலகங்கள், முதலீட்டு நிறுவனங்கள் முதலியவை தந்து உதவுகின்றன. சேமித்த பணத்தைப் பத்திரமாகவும் பயன் தரும் வகையிலும் முதலீடு செய்ய இந்நிறுவனங்கள் வேண்டும். நாட்டில் உறுதியானதும், நிலையானதுமான ஒரு நாணய முறை நடப்பி விருந்தால், அதனாலும் சேமிப்பதற்கான வசதிகள் உண்மையில் பெருகுகின்றன. இறுதியில், மக்களது உயிர்க்கும் சொத்துக்கும் நிலையான பாதுகாப்புத் தருகிற அரசாங்கம் இருந்தால் தான், அதன் நிழலில் சேமிப்புக்கள் செழித்து வளர முடியும்.

## அமைப்பு

இயற்கை வளங்களும், உழைப்பும், முதலும் மட்டுமன்றி, இம்மூன்றையும் ஆதாயந்தரும் வகையில் ஆள்வதற்காகத் திறன் மிக்க அமைப்பும் வேண்டும் என்பதைப் பல நாடுகளின் வரலாற்றிலிருந்து அறிய முடியும். இங்கிலாந்து நாட்டுத் தொழிற் புரட்சி வெற்றி நடை போடக் காரணம், அப் புரட்சியினூடே தோன்றிய ஒரு புதிய வகை (கூட்டுப் பங்குக் கம்பெனி) அமைப்பு என்பது வரலாறு. எனவே, உற்பத்திப் பெருக்கம் அமைப்பின் பெருக்கத்தையும் சார்ந்திருப்பது வெளிப்படை.

அமைப்பின் பெருக்கம் என்று சொல்லும் போது, அமைப்பாகிய உற்பத்திக் காரணி பெருகுவதையே குறிப்பிடுகிறோம். நிருவாகம், நட்டஆபத்து ஏற்பு-இவ்விரண்டுமே அமைப்பின் முதன்மையான பணிகள். எனவே அமைப்பின் பெருக்கம் என்று சொல்லும் போது இவ்விரு பணிகள் புரிய முன் வருவோர் - அமைப்பாளர், தொழில் துணிவோர்-தொகை பெருகுவதையே அது குறிப்பிடு

கிறது. வரலாற்றுக் கண்ணேட்டத்தில் பார்த்தால், இவ்வமைப்பாளர் தொகைப் பெருக்கத்திற்கான முயற்சி இன்றும் தொடர்ந்து கொண்டிருப்பதை அறிய முடியும். தொடக்கத்தில் தனி மனிதனே ஓர் அமைப்பாளஞகப் பணியாற்றினுன். தனி மனிதன் ஆற்றலையும் விஞ்சி, அமைப்பின் பணிகள் சிக்கலாகிய போது, அவன் தன்னைச் சார்ந்தவர்களையும் கூட்டாளிகளாகச் சேர்த்துக்கொண்டு புதியதோர் அமைப்பு முறையை உருவாக்கினுன்: கூட்டுவியாபாரம்(Partnership) தோன்றியது. அமைப்பின் பணிகள் இன்னும் மிகச் சிக்கலாகிய போது, ஏராளமான பேர் இணைந்து கொண்டு மற்றுஞ் சில அமைப்புக்களை உருவாக்கினர். 'கூட்டுப் பங்குக் கம்பெனிகளும்,' (Joint-Stock Companies) 'கூட்டுறவுச் சங்கங்களும்' (Co-operative Societies) தோன்றின. இன்ரே அமைப்பின் பணியைச் செவ்வனே நிறைவேற்ற அரசால்தான் இயலும் என்ற கருத்து உறுதியாகி, அரசே முன்னின்று அமைப்பாளஞகப் பணிபுரிய முன்வந்துள்ளது. அமைப்பின் பரிணுமம் இது. இப்பரிணுமத்திற்குக் காரணம் ஓர் உற்பத்திக் காரணி என்ற முறையில் அமைப்பைப் பெருக்க வேண்டும் என்ற ஆர்வந்தான்.

இதன் தொடர்பாக மேலே சொன்ன அமைப்பு வகைகளை ஒவ்வொன்ருக ஆராயலாம்.

## தனியாள் தொழில்

ஒரு நிறுவனத்தை நிருவகித்து அதில் ஏற்படும் நட்ட ஆபத்துக்களை ஏற்றுக் கொள்ளவும் தனியொரு மனிதன் சித்தமாக இருக்கும் ஏற்பாடு தான் தனியாள் தொழில் முறை ஆகும். வேண்டிய முதலையும் அவன் தன் பொறுப்பிலேயே திரட்டிக் கொள்கிருன். முதலாளித்துவ நாடுகளில் பெரும்பாலும் விவசாயத்திலும், சில்லறை வியாபாரத்திலும், வட்டாரத் தேவைகளை நிறைவு செய்யும் தொழில்களிலும் இம்முறையே நடப்பிலுள்ளது.

இவ்வமைப்பின் மிக முக்கியமான சிறப்பு ஆடம்ஸ்மித், காரல் மார்க்ஸ் போன்றவர்கள் குறிப்பிட்ட தந்நல நாட்டம் முழு வேகத்துடன் செயல்பட இங்கு வாய்ப்பிருப்பது தான். தானே தனக்குத் தலைவஞக இருப்பதால், தன்னிச்சையுடன் செயல்பட்டுத் தனது திறமை முழுதும் வெளிப்படும் வகையில் அமைப்பாளன் செயல் படுவான். நட்ட ஆபத்தைத் தனியாக நின்று தாங்க வேண்டியிருப்பதால் எதையும் விஞக்கமாட்டான். மிகவுயர்ந்த அளவு ஆதாயந் தரும்வகையில் அனைத்தும் பயன்படுத்தப்படும். அமைப்பெளிமை, நேரடிக் கண்காணிப்பு, தொழிலாளர் வாடிக்கையாளருடன் ஆள்கிற உறவு ஆகிய பிற நலன்களும் இந்த அமைப்பில் உள்ளன.

இருப்பினும் மிகப் பெரிய தொழில்களுக்கு இம்முறை ஏற்ற தன்று. அத்தொழில்களை நடத்தப் போதுமான அளவு முதலைத் தனியொருவனால் அளிக்க முடியாது. மேலும், நட்ட ஆபத்தைத் தனியொருவனே ஏற்றுக் கொள்ள வேண்டும். தொழில் நிறுவனத் தின் கடன் முழுவதற்கும் ஒருவனே (அவன் சொத்து முழுதுமே) பொறுப்பு. இறுதியாக, இம்முறையில் தோன்றும் நிறுவனங்கள் நீண்டநாள் நிலைத்து நிற்பதும் ஐயத்திற்குரியதே. நிறுவனத்தைத் தொடங்கியவன் இறக்க நேர்ந்தால், அல்லது அவன் பின்னோர் போதிய அளவு திறமையில்லாதவர்களாக இருந்தால், தொடர்ந்து தொழில் நடத்த வழியில்லை.

### கூட்டு வியாபாரம்

ஒரு சிலர் [1] கூட்டாக ஒரு நிறுவனத்தை நிருவகித்து அதில் ஏற் படும் நட்ட ஆபத்துக்களையும் ஏற்றுக் கொள்ள இசையும் ஏற்பாடு தான் கூட்டு வியாபாரம். அவரவர் தர வேண்டிய முதலின் பங்கு, தத்தம் பொறுப்புக்கள், உரிமைகள் ஆகியவற்றை ஓர் ஒப்பந்தத்தின் வழியாகக் கூட்டாளிகள் நிறுவிக் கொள்கின்றனர். நிறுவனத்தின் பொறுப்புக்களுக்குக் கூட்டாளிகள் கூட்டாகவும் தனித்தனியாகவும் பொறுப்பு எனச் சட்டம் வகை செய்கிறது. ஒரு சிலரது திறமை, பயிற்சி, செல்வாக்கு ஆகியவற்றை யொட்டி நிலைக்கிற சட்ட நிபுணர்கள், மருத்துவர்கள், கணக்கர்கள், கட்டடக்கலைஞர்கள் போன்றவர் தொழில்களில் இம்முறை பெரும்பாலும் நிலவக் காண லாம்.

தனியாள் தொழில் அமைப்பைப் போலக் கூட்டு வியாபாரத்தி லும் அமைப்பாளர்க்கு நேரடி ஆதிக்கம் இருக்கும் ; வேண்டிய முத லையும் குறிப்பிடத் தக்க அளவு திரட்ட இயலும். பருமச் சிக்கனங் களையும் ஓரளவு இம்முறையில் பெற முடியும்.

ஆனல், நாணயமான கூட்டாளிகள் கிடைக்காவிட்டால், இம் முறை நட்ட ஆபத்தை மிகுத்து விடத் தக்கதாகும். கடன் பொறுப் புக்கள் வரையறுக்கப்படாத காரணத்தால் இவ்வாபத்து மிகவே வழியுண்டு. இறுதியாக, இதன் ஆயுளும் அற்பமானதே. கூட் டாளியொருவன் இறந்தாலோ, விலகினலோ, நொடித்துப் போன லோ சட்டப்படிக் கூட்டு வியாபாரம் கலைக்கப்பட்டு விடும்.

[1] இவர்கள் எண்ணிக்கையைச் சட்டம் வரையறுத்துள்ளது. கூட்டு வியாபார முறையில் பாங்குத் தொழில் நடத்தும் போது பத்துப் பேர்க்கு மிகாமலும், ஏனைய தொழில்களில் இருபதுக்கு மேற்படாமலும் கூட்டாளிகள் இருத்தல் வேண்டும் என்பது நம் நாட்டுச் சட்டம்.

### கூட்டுப் பங்குக் கம்பெனி

தொழிற் புரட்சிக்குப் பின் பேரளவுத் தொழில் பெருவழக்காயிற்று. இத்தொழில்களை நிறுவ ஏராளமாக முதல் வேண்டும். அமைப்பை எதிர்நோக்கிய முதல் சிக்கல் இது. அடுத்து, ஏராளமான முதலுடன் நிகழும் தொழில்களிலுள்ள நட்ட ஆபத்தும் பேரளவில் இருப்பது தவிர்க்க இயலாதது. இத்தொழில்களில் கட்டடங்கள் எந்திரத் தொகுதிகள் போன்ற நிலைமுதல் வகைகளில் நீண்ட காலத்துக்கு முதலீடு செய்வதாலும், தேவையை எதிர்பார்த்து முன்னரே உற்பத்தி நிகழ்வதாலும் நட்ட ஆபத்துக்களுக்கு வாய்ப்பு மிகுதி. இந்த நட்ட ஆபத்தை இயன்ற மட்டும் குறைப்பது இரண்டாவது சிக்கலாயிற்று. இவ்விரு சிக்கல்களையும் ஒருங்கே சமாளிக்கும் வகையில் உருவாகியது தான் கூட்டுப் பங்குக் கம்பெனி.

'பல துளி பெருவெள்ளம்'. தனியொருவனாலோ, அல்லது கூட்டாளிகள் சிலர் சேர்ந்தோ தர முடியாத அளவு முதலைப் பலர் சேர்ந்து தர முடியும். இதன் அடிப்படையில், கூட்டுப்பங்குக் கம்பெனியும் தனக்கு வேண்டிய முதலைச் சமமதிப்புள்ள சிறுசிறு கூறுகளாகப்–பங்குகளாகப்–பகுக்கிறது. இப் பங்குகளுக்குப் பணம் தருவோர்–பங்காளர்கள்-கம்பெனிக்கு முதல் ஈந்து அதன் உரிமையாளர்கள் ஆகின்றனர். [1]

இப்பங்குகள் இருவகைப்படும்: அவை பொது முறைப் (அல்லது, சாதாரணப்) பங்குகள், சலுகைப் பங்குகள் என்பன. [2] சலுகைப் பங்குகளுக்கு (Preference Shares) உள்ள சலுகை, குறிப்பிட்ட வீதத்தில் கம்பெனியின் இலாபத்தில் பங்குபெற அவற்றுக்கு முன்னு

[1] கம்பெனியின் முதல் பல்வகைப்படும். கம்பெனியைப் பதிவுசெய்யும் போது அதன் ஒழுங்கு முறைகளையும் விதிகளையும் வகுத்து, கம்பெனிப் பதிவாளர் (கம்பெனிச் சட்ட ஆட்சியாளர்) இசைவாணை பெற வேண்டும். பதிவாளர் எவ்வளவு முதல் எழுப்பிக் கொள்ள இசைவாணை வழங்கினாரோ, அந்த அளவே இசைவாணை பெற்ற முதல் (Authorised Capital) ஆகும். இதன் அளவு தான் கம்பெனியால் திரட்ட முடிகிற முதலின் மிகவுயர்ந்த அளவு. அடுத்து, கம்பெனி தனக்கு உடனடியாக வேண்டிய அளவு பங்கினை வெளியிடுகிறது. இந்தப் பங்குகளின் மதிப்பு வெளியிட்ட முதல் (Issued Capital) எனப் பெறும். இந்தப் பங்குகளில், பங்காளர் உண்மையில் வாங்குகிற பங்குகளின் மதிப்பு ஒப்புக்கொள்ளப்பட்ட முதல் (Subscribed Capital) எனப்படும். இந்த அளவுப் பங்குகளுக்குப் பணம்தர பங்காளர் ஒப்புக்கொண்டிருப்பதால் இப் பெயர் அமைந்துள்ளது. குறிப்பிட்ட நேரத்தில் இந்த முதலின் ஒரு பகுதியையே பணமாகத் தரும்படி பங்காளர்களைக் கம்பெனி கோரலாம். அவ்வாறு அவர்கள் உண்மையில் செலுத்திய தொகையே 'செலுத்திய முதல்' (Paid-up Capital) அல்லது வாங்கிய முதல் எனப்படும். இறுதியில் ஒப்புக்கொள்ளப் பெற்ற முதல் முழுவதையும் தர வேண்டிய பொறுப்பு பங்காளர்களுக்கு உண்டு.

[2] தள்ளி வைக்கப்பெற்ற பங்குகள் (Deferred Shares) என்று ஒரு வகையும் முன்பு இருந்தது. பிறவகைப் பங்காளர்க்கு உரிய பங்குவீதம் எல்லாம் வழங்கப்பட்டபின், எஞ்சியிருப்பது இவ்வகைப் பங்காளர்க்கு வழங்கப்பட்டது.

ரிமை அளிக்கப்பட்டு உள்ளது. சாதாரணப் பங்காளர்க்கு இலாபப் பங்கீடு செய்வதற்குமுன், சலுகைப் பங்குகளுக்கு உறுதி செய்யப் பட்டுள்ளபடி 'பங்கு வீதம்' (Dividend) தரவேண்டும். மேலும், கம் பெனி கலைக்கப்பட்டால், சாதாரணப் பங்குகளை திருப்பித் தரும் முன்பே, சலுகைப் பங்காளர்க்குரிய பங்குத் தொகை திருப்பித் தரப்படும்.[1] சலுகைப் பங்குகளில் இருவகையுண்டு. குறிப்பிட்ட ஆண்டில் பங்கு வீதம் தரத் தவறினால், அடுத்த தடவை பங்கு வீதம் தரும்போது, தரத்தவறிய ஆண்டின் பாக்கியையும் சேர்த்துத் தரவேண்டுமென விதி செய்யப் பெற்றுள்ள 'குவியும்' (Cumulative) சலுகைப் பங்குகள் ஒரு வகை உண்டு. பங்கு வீதம் இங்கு குவிந்து கொண்டே போவதால் இப்பெயர் இடப்பட்டுள்ளது. இவ் விதி செய்யப் பெறாத குவியாச் சலுகைப் பங்குகள் என இன்னொரு வகை உண்டு. கம்பெனி மிகுதியாக இலாபம் ஈட்டினாலும், முன்பே உறுதி செய்யப் பெற்றுள்ள வீதத்திலேயே சலுகைப் பங்குகளுக் குப் பங்குவீதம் வழங்கப்படும் என்பதை இங்குக் கவனிக்க வேண் டும்.

சாதாரணப் பங்காளர்களிடையே கம்பெனியின் நிகர இலாப மானது, இறுதியில், பகிர்ந்தளிக்கப் பெறுகிறது. கம்பெனியின் இலாப நட்டம் இவர்களையே சாரும். எனவே, இவர்கள்தாம், உண்மையில், கம்பெனியின் அமைப்பாளர்கள் ஆகிறார்கள்.[2]

பங்காளர் பல்லாயிரவர்களாகவும், பல இடங்களைச் சார்ந்தவர் களாகவும் இருப்பதால், நிருவாகத்தை நடத்துவதற்காகப் பங்காளர் கள் கூடி 'இயக்குநர் குழு' (Board of Directors) ஒன்றைத் தேர்ந் தெடுக்கின்றனர். 'பங்குக்கு ஒரு வாக்கு' என்ற முறையில் இத்தேர் தல் நடக்கிறது. இயக்குநர்கள் தங்களுக்குள்ளேயே ஒரு 'நிருவாக இயக்குநரை' (Managing Director) நியமித்துக் கொள்வார்கள்; அல்லது, ஒரு 'பொது நிருவாகி'யை (General Manager) சம்பளத் துக்கு அமர்த்துவார்கள். இதனால், கம்பெனி அமைப்பில் உரிமை ஒருவரிடமும், பொது நிருவாகம் வேறொருவரிடமும் ஆக அமைந்து விடுகிறது.

[1] சலுகைப் பங்குகளுக்கும் பிற பங்குகளுக்கும் இடையேயுள்ள மற்றொரு வேறு பாடு சலுகைப் பங்காளர் வாக்குரிமை பொதுவாகக் கட்டுப்படுத்தப் பட்டிருப்பதுதான்.

[2] பங்குகள் வழி திரட்டிய முதல் போதாததாய் இருந்தால் கம்பெனி கடன் பத்தி ரங்களை வெளியிடும். இவை பங்குகள் அல்ல. இவற்றை வாங்கிப் பணம் தருவோர் அக் கம்பெனிக்குக் கடன் கொடுப்பவரேயொழிய, கம்பெனியின் உரிமையாளர்கள் அல்லர். இவர்களுக்குக் கிடைக்கும் வெகுமதி குறிப்பிட்ட வீத வட்டியே யொழிய இலாபப் பங்கல்ல. இவர்களுக்கும் பங்காளர்களுக்குமிடையேயுள்ள வேறுபாட்டிலிருந்து இன்றையத் தொழிலுலகில் முதலாளிவேறு, அமைப்பாளன் வேறு என்பதைப் புரிந்து கொள்ளலாம்: வட்டிக்கு உரியவன் முதலாளி; இலாப நட்டப் பொறுப்பை ஏற்பவன் அமைப்பாளன்.

இனி, கூட்டுப் பங்குக் கம்பெனிகளில் நட்ட ஆபத்து ஏற்பின் நிலையைப் பார்க்க வேண்டும். கம்பெனியில் முதலீடு செய்பவனை நால்வகை நட்ட ஆபத்துக்கள் எதிர்நோக்கி நிற்பதாகச் சொல்லலாம் : 1. முதல் முழுவதையும் இழந்து விடலாம் ; 2. முதலீட்டில் கிடைக்கும் வருமானம் நிலையற்றதாக இருக்கலாம் ; 3. வேண்டும் போது முதலைத் திரும்பப் பெறமுடியாமல் இருக்கலாம் ; 4. தொழில் நொடித்துப் போக நேர்ந்தால், பங்காகத் தந்தது போக மேலும் பணம் தர வேண்டி வரலாம் ; அல்லது, அவனுடைய பிற சொத்துக்களும் அதனால் பாதிக்கப்படலாம். இந்த நால்வகை ஆபத்துக்களையும் சமாளிக்க, கம்பெனி அமைப்பில் வழிகள் உள்ளன.

கம்பெனி நட்டத்தில் மூழ்கி மூடப்பட்டால், முதல்வகை ஆபத்துத் தோன்றுகிறது. கம்பெனி நிருவாகப் பொறுப்பு அத்துறையில் தேர்ச்சி மிக்குள்ள ஒரு பொது நிருவாகியிடம் ஒப்படைக்கப்பட வழியிருப்பதால், பொதுவாக, கம்பெனிகளில் இந்த இடர் ஏற்படாது என்றே எதிர்பார்க்கலாம். இரண்டாம் ஆபத்தைப் பொறுத்தவரை, நிலையான வருமானத்தை விரும்புவோர் சலுகைப் பங்குகளை வாங்கிக் கொள்ளலாம். கம்பெனிகளின் பங்குகளை விரும்புகிறபோது விற்பதற்கு வசதியிருப்பதால் மூன்றுவது ஆபத்தும் குறைகிறது.[1] இதனை இயல்வதாக்கும் வகையில் பங்குகளை விற்பதிலும் வாங்வகுதிலும் ஈடுபடும் பங்கு அங்காடி நாட்டின் முதன்மையான தொழில் நகரங்களில் உள்ளது. நான்காவது ஆபத்தைத் தவிர்ப்பதற்கென்றே, கம்பெனியின் கடன் பொறுப்புக்கள் சட்டப்படி வரையறுக்கப்பட்டுள்ளன. அதாவது ஒரு கம்பெனியில் நூறு ரூபாய் மதிப்புக்குப் பங்கு வாங்கினுல், அந்த நூறுரூபாயோடு, (அல்லது, சில நேரங்களில் அதன் சிலமடங்கு அளவோடு) பங்காளரின் பொறுப்பு நின்று விடுகிறது. கம்பெனியின் கடன் பொறுப்புக்கள் இந்த அளவுக்கு மேல் அவனைக் கட்டுப்படுத்துவதில்லை. இவ்வாறு, இயல்பாகத் தோன்றுகிற நட்ட ஆபத்துக்களைக் குறைப்பதற்கான வழிகள், கம்பெனி அமைப்பில் காணக் கிடைக்கின்றன.

கூட்டுப் பங்குக் கம்பெனியின் மற்ருெரு சிறந்த கூறு அதனுல் ஏராளமாக முதலைத் திரட்ட முடியும் என்பது தான். முதல் ஏராள

[1] கம்பெனிகள் — தனியார் (Private) கம்பெனிகள், பொதுக் (Public) கம்பெனிகள் என இரு வகைப்படும். தனியார் கம்பெனி தன் பங்குகளைப் பொதுமக்களுக்கு விற்பனை செய்ய முடியாது. இந்த உரிமையுடைய பொதுக் கம்பெனிப் பங்காளர்கள் தம் பங்குகளைப் பிறர்க்கு மாற்றித் தருவது எளிது. கூட்டு வியாபாரத்துக்கு மாறுபட்ட நிலையில் கம்பெனிகளில் கடன் பொறுப்புக்கள் வரையறுக்கப்பட்டுள்ளன. இந்த வாய்ப்பைப் பயன் படுத்திக் கொள்வதற்காகத் தனியார் சிலர் சேர்ந்து உருவாக்கிக் கொள்ளும் நிறுவனமே தனியார் கம்பெனி ஆகும். தனியார் கம்பெனியின் மிகவுயர்ந்த அளவு 50 உறுப்பினரே இருக்க முடியும். பொதுக் கம்பெனியில் குறைந்த அளவு 7 பேர் இருக்க வேண்டும் ; மிகவுயர்ந்த அளவு என எதுவும் இல்லை.

மாக இருந்தால், பேரளவுத் தொழில்களைத் தொடங்கி நடத்த முடியும். உரிமை ஓரிடத்திலும் நிருவாகம் மற்றோரிடத்திலும் இருப்பதால், முதல்வளமற்ற நிருவாகிகள் தம்முடைய திறமையைக்காட்ட வாய்ப்பளிப்பதோடு, அதனால் முதலும் நல்ல பயன்தர வகை ஏற்படுகிறது. சிறிய மதிப்பிலான பங்குகளும், கடன் பொறுப்புக்கள் வரையறுக்கப்பட்டிருப்பதும், சிறு சேமிப்புக்கள் கூட முதலீடு செய்யப்படுவதை ஊக்குவிக்கின்றன. கம்பெனிகள் நிரந்தரமானவை என்பதும் கவனிக்கத் தக்கது : பங்காளர்கள் வரலாம், போகலாம் ; கம்பெனி அதனால் பாதிக்கப் படுவதில்லை ; அது தொடர்ந்து நிலவும்.

கம்பெனி முறையில் ஒரு சில குறைகளும் உள்ளன. கம்பெனியின் நிருவாகத்தில் ஜனநாயகம் ஏற்படுவதற்குப் பதிலாகச் ‘சிலவர் நாயகம்’ தோன்ற வாய்ப்பு மிகுதி. பல இடங்களில் சிதறுண்டு கிடக்கும் பல்லாயிரம் பங்காளர்களில் பெரும்பான்மைப் பங்கை வைத்திருக்கும் ஒரு சிலர் வைத்ததே சட்டம். இயக்குநர் குழுவை மாற்றி விடுவது அவ்வளவு எளிதன்று. இக்குழுவினர் தந்நலக்காரராக இருந்து விட்டால், பாமரர்களாகிய பங்காளர் பலர் பாதிக்கப் படுவர். பல்வேறு கம்பெனிகளில், குறிப்பிட்ட அளவு பங்குகளை எடுத்துக்கொண்டு தனித்தனியே அவற்றில் ஆதிக்கம் பெற்று அந்த ஆதிக்கத்தால் அக்கம்பெனிகளிடையே ஓர் உறவை உண்டு பண்ணிக்கொண்டு, மற்றும் பல கம்பெனிகளுடன் கொடுக்கல் வாங்கல் தொடர்பு வைத்துக் கொண்டு, முடிவில் ஒரு பெரிய தொழிற் பேரரசின் மாமன்னர்களாக, ஒரு சிலர் ஆகி விடுவது வழக்கம். டாட்டாவும் பிர்லாவும் போன்ற கோடீசுவரர்கள் பலகோடி ரூபாய் முதலுடன் தொழில் நடத்துகிறார்கள் எனில், அந்தத் தொகையில் ஒரு சிறிய பகுதியே அவர்களது சொந்தப் பணம் என்பது இங்குக் கருதத் தக்கது. அமெரிக்கா போன்ற நாடுகளில் இவ்வாறு தழைக்கிற முற்றுரிமை ஆற்றலை ஒழிப்பதற்காக எத்தனையோ சட்டங்களை அரசு இயற்றியுள்ளது.

கம்பெனி முறையின் மற்றொரு குறை அதன் நிருவாகத் திறமை பற்றியது. சம்பளத்துக்கு வேலை செய்யும் நிருவாகி தொழிலில் போதிய அக்கறை காட்டாமல் போகலாம். நிருவாகக் குழுவினர் ஆணைப்படி அவர் செயலாற்ற வேண்டியிருப்பதால், தன்னிச்சைப் படிச் செயலாற்ற இயலாதவராகத்–தனது திறமையைக் காட்ட வாய்ப் பில்லாதவராக–ஆகிவிடலாம்.

கம்பெனி முறையின் குறைகளை ஆராயும்போது அவையெல்லாம், பெரிதும் தனிப்பட்டவர் குறையே யொழிய, கூட்டுப் பங்குக்

கம்பெனியின் உள்ளார்ந்த குறைகள் எனச் சொல்ல முடியவில்லை என்று தான் முடிவு கட்ட வேண்டும். ஒரு முதலாளித்துவ அமைப்பின் உள்ளார்ந்த சில இயல்புகளே கம்பெனி முறைகளின் குறைகளாக உள்ளன. எனவே, இன்றுள்ள நிலையில் இவ்வமைப்பின் பணியைக் குறைத்துக் கூற முடியாது. இங்கிலாந்து, அமெரிக்கா, ஜெர்மனி போன்ற நாடுகளின் கடந்த இரு நூற்றாண்டு காலச் சாதனைகள் கம்பெனி முறையின் கீழ் நிகழ்ந்தேறியவை என்பதை மறக்க முடியாது.

கூட்டுறவு

கூட்டுப் பங்குக் கம்பெனிகளின் நோக்கம் இலாபந் தேடுவது; ஆனால், இலாபந் தேடுவதற்காக நேர்மை யற்ற வழிகளையுங் கூட இக்கம்பெனிகள் கடைப் பிடிக்க முற்பட்டன: நுகர்வோர்க்கு அதிக விலைகளை விதித்தன; உழைப்பாளர்க்குக் குறைந்த கூலிகள் தந்தன; கடன் வாங்குவோர்க்குக் கடுவட்டி விதித்தன. இவ்வாறு பலவகையிலும் சுரண்டப்பட்ட நுகர்வோரும், உழைப்பாளரும், கடனாளிகளும் சுரண்டலில் இருந்து விடுபடும் வகையில் புதியதோர் அமைப்பு முறையை உருவாக்கினர். அதுதான் கூட்டுறவு முறை. இங்கும், பலர், சிறுசிறு பங்குத்தொகைகளை அளித்து ஒரு கூட்டுறவுச் சங்கத்தை நிறுவித் தொழிலொன்றில் ஈடுபடுகின்றனர்.

கூட்டுறவு முறையில் நிருவாகப் பொறுப்பு எவரிடமுள்ளது? நட்ட ஆபத்தை ஏற்பவர் எவர்? எனப் பார்க்கலாம். கம்பெனியைப் போல இங்கே உரிமை வேறு நிருவாகம் வேறு எனப் பிரிக்கப் பட்டிருப்பதில்லை. உரியவர்களே நிருவாகிகள்; அதுவும் ஊதியம் எதையும் எதிர்பாராமல், உரியவர்கள் நிருவாகப் பொறுப்பை ஏற்க வேண்டும் என எதிர்பார்க்கப் படுகிறது. கூட்டுறவுத் தொழில் நிறுவனத்தின் அலுவல்கள் எல்லாம், மதிப்புக் கருதி உறுப்பினர்களாலேயே நிறைவேற்றப் படுகின்றன.

நட்ட ஆபத்தை ஏற்பவர் உறுப்பினர்களே. சில இடங்களில் பொறுப்புக்கள் வரையறுக்கப் படாதிருப்பதுண்டு; சிறிய அளவில் தொழில் புரியும் சங்கங்கள் இவ்வாறிருக்கும். ஆனால், பெரும்பாலும் — கம்பெனி முறையில் இருப்பது போன்றே — இங்கும் பொறுப்புக்கள் வரையறுக்கப் படுகின்றன. உறுப்பினர்களின் எண்ணிக்கையைப் பெருக்குவதற்கும், வசதியுள்ளவர்கள் சங்கத்தில் சேரவும் இவ்வேற்பாடு அவசியம் எனக் கருதப் படுகிறது.

கூட்டுறவு முறை இக் காலத்தில் ஒரு சிறப்பான இடத்தைப் பெற்றுள்ளது. இலாபக் கண்ணோட்டத்தையும் தந்நல நாட்டத்

தையும் இயல்பாகக் கொண்டுள்ள முதலாளித்துவத்துக்கும், பணி செய் நோக்கையும் கூடி வாழும் நினைவையும் இயல்பாகக் கொண்டுள்ள சமதருமத்துக்கும் இடையே ஒரு நடுவணதான முறையாகக் கூட்டுறவு மிளிர்கிறது. இலாபக் கண்ணோட்டமானது கூட்டுறவில் மறைந்து போகாத நிலையில், இலாபமானது உழைப்புக்குத் தக்கவாறு பகிர்ந்தளிக்கப் பெற வகை செய்யப் பட்டுள்ளது. பணிசெய் நோக்கை வலியுறுத்தும் வகையில் நிருவாகக் கடமைகூட மதிப்புக் கருதிச் செய்யவேண்டிய ஒன்று என ஆக்கப்பட்டுள்ளது. தந்நல முனைப்பைத் தட்டியடக்கும் வகையில் பொதுநல நோக்குக்கு முதலிடம் தரப் பெறுகிறது. 'ஒவ்வொருவரும் எல்லார்க்கும், எல்லாரும் ஒவ்வொருவர்க்கும்' என்ற புனித விதி செயல்முறையின் அடிப்படையாக இருக்கிறது. உண்மையான ஜனநாயகத் திட்டமும் இங்கு நடைமுறையில் உள்ளது; உறுப்பினர் அனைவரும் சமம்; 'ஒருவருக்கு ஒரு வாக்கு' என்பது விதி; 'பங்குக்கு ஒரு வாக்கு' என்ற நியதி இல்லை.

கூட்டுறவு ஏற்பாட்டில் மேலே சொன்ன நிறைகள் இருந்தாலும், குறைபாடுகளும் உள்ளன. அதன் நிறைகளே குறைகள் எனச் சொன்னாலும் தவறில்லை. உறுப்பினர்களே நிருவாகப் பொறுப்பை ஏற்கும்போது திறமையை எதிர்பார்க்க வழியில்லை; சுரண்டப்படுகிற வலியற்றவரிடம் உயர்தர நிருவாகத் திறமை இருக்க முடியாது. இந்தியா போன்ற நாடுகளில், கூட்டுறவுச் சங்கங்களின் நிருவாகப் பொறுப்பை உறுப்பினர்களுடன் பங்கு போட்டுக்கொள்ள அரசு முன்வருவது இங்குக் கவனிக்கத் தக்கது. மேலும், உறுப்பினர்களுடைய வறுமை, நிருவனத்திலும் எதிரொலிக்கும்; கூட்டுறவுச் சங்கத்தால் திரட்ட முடிகிற முதலுக்கு வரையறையுண்டு. தமிழகத்தில் மாவட்டத்துக்கு ஒன்று என்ற திட்டத்தில் தொடங்கப் பெற்றுள்ள கூட்டுறவு நூற்பாலைகளை எடுத்துக் கொண்டால், அவற்றில் அரசின் பங்கே பேரளவில் இருப்பது இதனை விளக்கும். பொறுப்புக்கள் வரையறுக்கப்பட்டும், படாமலும் இருக்கும் நிலைமை கூட்டுறவு முறையில், புதிய துறைகளில் துணிச்சலுடன் ஈடுபடுவதற்குரிய வாய்ப்பையும் குறைக்கிறது. கனரகத் தொழில்களில் கூட்டுறவுகள் ஈடுபடுவது பெரும்பாலும் விதிவிலக்காகவே இருக்கிறது.

### பொதுத் தொழில் முயற்சி

தொழில் துறையில் அரசு நேரடியாக ஈடுபடுவது கடந்த ஐம்பது ஆண்டுகளாக உலகெங்கும் பெரு வழக்காகி உள்ளது. சோவியத் நாட்டில் அரசியல் அடிப்படையில் தொடங்கிய இந்த

ஈடுபாடு, 1930-க்குப்பின் தொழில் மந்தத்தைத் தடுக்கும் வகையில் முதலாளித்துவ அமெரிக்காவில் நுழைந்து, இன்று பின்தங்கிய நாடுகளுடைய வளர்ச்சித் திட்டங்களின் பிரிக்க இயலாத கூறாக ஆகியுள்ளது.

அரசு நேரடியாகத் தொழில் நடத்தும்போது, அங்கு நிருவாக நட்ட ஆபத்து ஏற்புப் பணிகள் எவ்வாறு நிகழ்ந்தேறுகின்றன எனப் பார்க்கலாம். திறமை மிக்க நிருவாகிகளை அமர்த்துவதற்குரிய ஆற்றலை அரசிடம் மிகுதியாக எதிர்பார்க்கலாம். வசதி பேரளவில் இருப்பதால் தேர்ச்சி மிக்க நிருவாகிகளை — வேண்டுமானால் அயல்நாடுகளிலிருந்து வரவழைத்தும் — அரசால் அமர்த்த முடியும். நட்ட ஆபத்தை ஏற்பதிலும் அரசைத் தவிர வேறெவரும் இப் பணிக்கு மிகப் பொருத்தமானவராக இருக்க முடியாது. நெய்வேலி பழுப்பு நிலக்கரித் திட்டத்தின் தொடக்கக் கால நட்ட ஆபத்து வாய்ப்புக்களை எண்ணும்போது, தனியார் எவரும் அதில் இதுவரை ஈடுபடாமல் இருந்ததில் வியப்பில்லை என்று தானே சொல்ல வேண்டும்?

இதே நேரத்தில் அரசுத் தொழில் முயற்சியில் சில குறைபாடுகள் உள்ளன என்பதை மறந்து விடலாகாது. அரசு ஊழியர்கள் தொழில் நிருவாகிகளாக வெற்றி பெறுவது கடினம். தந்நலம் காரணமாகத் தனியார் துறையில் உண்டாகும் கட்டுப்பாடு, மேற்பார்வை முதலியவற்றைப் பொதுத் தொழில்களில் காண்பது அரிது. அரசுத் தொழில் நிருவாகிகள், அரசியல்வாதிகளின் விருப்பங்களுக்கு விட்டுக்கொடுக்க வேண்டிய கட்டாயமும் ஏற்படலாம். மேலும், அரசுத்துறை சிக்கனமற்ற செயலுக்கும் காரணமாகி விடலாம். மதுரையில் (அண்மைக் காலம் வரை இருந்த) அரசின் கோழிப் பண்ணையின் மொத்தச் செலவையும், மொத்த உற்பத்தியையும் ஒப்பு நோக்கினால் ஒரு முட்டைக்கு ரூ. 1.50 செலவேற்படுவதாகக் கூறியது இங்குக் கருதத் தக்கது. இதற்கொரு காரணம் வேண்டாத பல அலுவலாளர் நியமிக்கப்படுவதுதான்.[1]

நட்ட ஆபத்து ஏற்பைப் பொறுத்தவரை, இங்கு இறுதியில் பொறுப்பேற்பவர் வரிசெலுத்துபவர்களே ஆவர். இந்த அள

[1] மேலே சொன்ன மதுரைப் பண்ணையில் அமர்த்தப் பெற்றிருந்த அலுவலர் சிலர் கீழ்வருமாறு: நிருவாகத் தனி அலுவலாளர்; முட்டை விற்பனை அலுவலாளர், கோழி வளர்ப்பு - விரிவு அலுவலாளர்: உண்டி வகைகளுக்குக் கோழியைத் தயார்ப்படுத்தித் தர ஒரு நிபுணர்; தயார்ப்படுத்தப் பெற்ற கோழியைக் குளிரில் உறைய வைப்பதற்கு ஒரு அலுவலாளர், பறவைகளிடையே நோய் வருவதைத் தடுக்க ஒரு நிபுணர், முட்டைகளைத் தரப்படுத்துவதற்கு ஒரு அலுவலாளர்....

(The 'Hindu'— 1-4-'67)

வுக்கு, நிருவாகிகளிடையே பொறுப்புணர்ச்சி குன்றலாம். பொறுப்புணர்ச்சி இல்லாத காரணத்தால் வளங்களும் சாதனங்களும் பாழாக்கப்படலாம். இந்திய அரசின் தொழில்களில் இந்துஸ்தான் எந்திரக் கருவிகள் நிறுவனம், இந்திய விமானக் கார்ப்பரேஷன் போன்றவை தொடக்கத்தில் பெரு நட்டத்திலேயே ஓடிக்கொண்டிருந்ததை இங்கே நினைவு கூறலாம். நம் நாட்டில் முதலீடு செய்யப்பெற்றுள்ள ஒவ்வொரு நூறு ரூபாயும் பொதுத்துறையிலிருந்து ரூ. 9-உம், தனியார் துறையிலிருந்து ரூ. 31-உம் ஆதாயந் தருவதாக ஓர் ஆராய்ச்சி முடிவு கூறும்.[1]

இந்தியா போன்ற வளர்ச்சி குன்றிய நாடுகளில், அதுவும் தொடக்க நிலையில், இதுபோன்ற சில குறைபாடுகள் ஏற்படலாம். அரசியல் நிருவாகத்தில் பழக்கப்பட்டவர்கள் பொருளாதார நிருவாகத்தில் பழகுவதற்குச் சில நாள் ஆகும். 'நாட்' விமானங்களும், 'வைஜயந்த்' டாங்கிகளும் பொதுத் துறையில் உருவாகியவை தாமே? மேலும், தனியார் துறை துணியாத சில தொழில்களைத் தொடங்க அரசன்றி வேறெவராலும் இயலாதல்லவா? தமிழக அரசின் தமிழ்ப் பாடநூல் நிறுவனத்தின் பணியே இதற்கோர் எடுத்துக்காட்டு. தரமான நூல்களை மிகக் குறைந்த விலைக்கு விற்று, தமிழ் பயிற்சி மொழியாக ஆவதை ஊக்குவிக்கத் தனியார் வெளியீட்டகங்கள் முன் வருவது அரிது. எனவே, பொதுத் தொழில்களுக்குப் பொறுப்பானவர்கள் நாணயமும், திறமையும், கடமையுணர்வும், பற்றுறுதியும் உள்ளவர்களாயிருந்தால் அவற்றுலும் நலம் பேண முடியும் என்பதில் ஐயமில்லை.

[1] 'Report on a Study on Government Undertakings' by the Economic and Scientific Research Foundation, Delhi.

# 3. உற்பத்திக் காரணிகள் சேர்மானம்

'அரிசி ஆழாக்கானாலும் அடுப்புக்கட்டி மூன்று வேண்டும்' என்பதுபோல, எந்தப் பொருளையும் உற்பத்தி செய்ய நான்கு உற்பத்திக் காரணிகளையும் ஒன்று சேர்த்தாக வேண்டும். உற்பத்திக் காரணிகளாகிய வழிவகைகள் அருகியனவாக இருப்பது பொருளாதாரச் சிக்கல்களின் அடிப்படை. எனவே, அடிப்படையான இந்த அருமைப்பாடு, உற்பத்திக் காரணிகளைச் சேர்க்கும் முயற்சியிலும் சிக்கல்களைத் தோற்றுவிக்கிறது. எந்தக் காரணி பிறவற்றுடன் ஒப்பிடும்போது மிகவும் அருகி இருக்கிறதோ அதனை இயன்ற மட்டும் குறைவாகவும், எச்சமாகக் கிடைக்கும் காரணிகளை மிகுதியாகவும் ஆள முயல்வது இயல்பு. அதாவது, உற்பத்திக் காரணிகள் வெவ்வேறுவீதத்தில் ஒன்று சேர்க்கப் படுகின்றன; அல்லது காரணிகளின் சேர்மான வீதம் மாற்றப்படுகிறது. இந்த முயற்சி குறுகிய காலத்தில் தவிர்க்க இயலாது என்றே தோன்றுகிறது.

ஆனால், நெடுநாட்களுக்குப் பிறகு ஓரளவேனும், உற்பத்திக் காரணிகள் அனைத்தையும் மிகுக்க இயலலாம்; உண்மையில் இதுதான் பொருளாதார வளர்ச்சியின் குறிக்கோளும் சாதனையும் ஆகும். அந் நிலையில், உற்பத்திக் காரணிகள் அனைத்தையும் ஒரே வீதத்தில் மிகுதியாக ஒன்று சேர்க்க முடியும். அதாவது, உற்பத்திக் காரணிகள் குறிப்பிட்ட வீதத்தில், ஆனால், முன்னைவிட மிகுதியான அளவில் ஒன்று சேர்க்கப்படும். இப்போது, குறிப்பிட்ட உற்பத்தியலகின் பருமன் மிகுந்துள்ளதாகச் சொல்லப் படும்.

இவ்வாறு, உற்பத்திக் காரணிகள் சேர்க்கப் படும்போது, (1) ஒரு காரணியைப் பிறவற்றுடன் மேலும் மேலும் சேர்க்கும் போது, உற்பத்தி – அல்லது 'விளைவு' (Return) - எவ்வாறு மாறும்

என்பதையும், (2) எல்லாக் காரணிகளையும் ஒரே வீதத்தில் மிகுதியாகச் சேர்க்கும்போது, உற்பத்தி - அல்லது, விளைவு – எவ்வாறு மாறும் என்பதையும் தனித்தனியாக ஆய்ந்தாக வேண்டும். முதல் வகை ஆய்வு 'மாறும் வீத விதி' (Law of Variable Proportions) என்ற தலைப்பிலும், அடுத்த வகை ஆய்வு 'பருமச் சிக்கனங்கள்' (Economics of Scale) என்ற தலைப்பிலும் விளக்கப்பட்டு வருகின்றன.

## மாறும் வீத விதி

இவ் விதி கீழ்வரும் எடுகோள்களின் அடிப்படையில் நிறுவப்படுகிறது :

1. பிற எல்லாக் காரணிகளும் மாருதிருக்க, குறிப்பிட்ட ஒரு காரணியின் அளவை மட்டும் காரணிகள் சேர்மானத்தில் மாற்ற இயலும். நிலம், உழைப்பு, முதல், அமைப்பு ஆகியவற்றில் எந்தக் காரணியின் அளவையும் காரணிச் சேர்மானத்தில் மாற்ற இயலும் என்பதே இந்த எடுகோளின் பொருள்.

2. இவ்வாறு, மாருதிருக்கும் காரணிகளுடன் மாறுங் காரணியைக் குறைவாகவோ மிகுதியாகவோ சேர்க்க, தொழிலின் வினை முறை தடையாக இல்லை. அதாவது உற்பத்தியின் தொழில்நுட்பக் குணங்கள் மாறத் தக்கன.

3. மாறுங் காரணியின் எல்லா அலகுகளும் ஒரே தன்மையானவை. காரணிகளின் சேர்மானவீத மாறுதலால் விளைவில் ஏற்படும் மாறுதல்களுக்குக் காரணம் காரணி அலகுகளின் திறமையிலுள்ள ஏற்றத்தாழ்வுகள் அல்ல என்பதுதான் இதன் பொருள்.

4. இறுதியாக, உற்பத்தி முறைகள் மாருதிருக்கின்றன ; புத்தாக்கங்களும் பிற சீர்திருத்தங்களும் நடைமுறையில் இல்லை.

இந்த எடுகோள்களின் அடிப்படையில் மாறும் (அதாவது, ஆளப் பெறுகின்ற அலகுகளின் எண்ணிக்கை மாறிக் கொண்டிருக்கும்) காரணியின் அடுத்தடுத்த அலகுகள், மாருதிருக்கிற காரணிகளுடன் சேர்க்கப்படும் போது என்ன நிகழும் என இனிப் பார்க்கலாம். பின்வரும் அட்டவணை இங்கு நமக்குதவும்.

பின் வரும் அட்டவணையில் எந்திரத் தொகுதியானது மாருக் காரணி என்றும், உழைப்பானது மாறுங் காரணி என்றும் எடுத்துக் கொள்ளப்படுகின்றன. x அளவு மாருக் காரணியுடன்,

குறிப்பிட்ட நிறுவனம் உற்பத்திசெய்யத் தொடங்குகிறது. உழைப்பாளர்கள் 1, 2, 3, 4... என அடுத்தடுத்து ஆளப்படுகின்றனர்.

| சேர்மான எண் | மாறாக் காரணி | மாறும் காரணி | மொத்த விளைவு | இறுதிநிலை விளைவு | சராசரி விளைவு |
|---|---|---|---|---|---|
| I | x அலகு | 1 அலகு | 10 அலகு | 10 அலகு | 10 அலகு |
| II | ,, | 2 ,, | 22 ,, | 12 ,, | 11 ,, |
| III | ,, | 3 ,, | 36 ,, | 14 ,, | 12 ,, |
| IV | ,, | 4 ,, | 44 ,, | 8 ,, | 11 ,, |
| V | ,, | 5 ,, | 50 ,, | 6 ,, | 10 ,, |
| VI | ,, | 6 ,, | 48 ,, | –2 ,, | 8 ,, |

மேலேயுள்ள அட்டவணையைக் கூர்ந்து கவனித்தால், தொடக்கத்தில் மாறுங் காரணியின் சராசரி விளைவு வளர்ந்து செல்வதையும், பின்னர் அது குறைய முற்படுவதையும் காணலாம். மூன்றுவது சேர்மானம்வரை மாறுங் காரணியின் வளர்ச்சி வீதத்தைவிட வேகமாக, விளைவானது வளர்ந்து செல்கிறது. எடுத்துக்காட்டாக, உழைப்பாளர் எண்ணிக்கை ஒன்றிலிருந்து இரண்டாக இரட்டிக்கப் படும்போது, மொத்த விளைவோ 10-இலிருந்து 22 அலகுகளாக இரு மடங்கினும் மிகுதியாக வளர்கிறது. ஆனால், தொடர்ந்து மாறுங் காரணியை ஆளும்போது IV, V, VI சேர்மானங்களில், மாறுங் காரணியின் வளர்ச்சி வீதத்தைவிடக் குறைந்த வீதத்திலேயே மொத்த விளைவானது வளர்கிறது. எடுத்துக் காட்டாக, உழைப் பாளர் எண்ணிக்கை 3-இலிருந்து 4 ஆக 1/3 மடங்கு வளரும்போது மொத்த விளைவானது 36-இலிருந்து 44 அலகாக 1/3 மடங்கைவிடக் குறைவாகவே வளர்ந்துள்ளது.

இந்த உண்மையை வேறு வழியிலும் சொல்லலாம்: ஒரு நிறுவனம் மேலும் மேலும் மாறுங் காரணியை ஆளும்போது, அக் காரணியின் இறுதிநிலை விளைவும் குறிப்பிட்ட கட்டம் (அட்டவணையில் சேர்மானம் III) வரை வளர்ந்துசென்று, பின்னர் குறைந்து சென்று விடுகிறது. 'ஓர் உற்பத்திக் காரணிகள் சேர்மானத்தில், குறிப் பிட்ட ஒரு காரணியின் வீதத்தை மிகுத்தால், ஒரு நிலைக்குப்பின், அக் காரணியின் இறுதிநிலை உற்பத்தியும் சராசரி உற்பத்தியும் குறைந்து செல்லும்' என்பார் பென்ஹாம்.

இதனை ஒரு வரைபடத்தின் வழியாகவும் காட்டலாம். படத்தில் TR வளைகோடு, மொத்த விளைவின் போக்கையும், AR, MR வளைகோடுகள், முறையே, சராசரி இறுதிநிலை விளைவுகளின் போக்கையும் சுட்டுகின்றன. படத்திலிருந்து, இறுதிநிலை விளைவு எதிர்க்




கணியமாகும் போது, மொத்த விளைவும் குறைந்து செல்ல முற்படுவதையும் புரிந்து கொள்ள முடியும். மேலும், சராசரி விளைவும், இறுதிநிலை விளைவும் தொடர்ந்து வளர்ந்து செல்லும் போது, பிந்தியது வேகமாக வளர்ந்து சென்று விரைவில் இறங்கிச் செல்வதையும் பார்க்கலாம். இது போன்றே இவ்விரு விளைவுகளும் குறைந்து செல்லும் கட்டத்தில் இறுதிநிலை விளைவு மிகுதியான வீதத்தில் குறைந்து செல்வதையும் காணலாம்.

இந்தப் போக்கின் காரணங்களை இனி ஆராய வேண்டும். தொடக்க நிலைச் சேர்மானங்களில் மாறுக் காரணியாகிய எந்திரத் தொகுதி முற்றிலும் பயன்படுத்தப் படவில்லை. எனவே, உழைப்பாளர் அடுத்தடுத்து அமர்த்தப்படும் போது, எந்திரத் தொகுதி முழுமையாகப் பயன்படுத்தப் படுகிற காரணத்தால் விளைவு மிக வகையுண்டு. இரண்டு உழைப்பாளர் ஒரேவொரு உழைப்பாளன் உற்பத்தி செய்வதில் இரு மடங்குக்கும் அதிகமாக உற்பத்தி செய்யக் காரணம் இதுவே. மேலும், உழைப்பாளர் எண்ணிக்கை இரட்டிக்கும் போது கடினமான வேலைகளைப் பங்கு போட்டுக் கொண்டும், ஒருவர்க்கொருவர் உதவியும் உற்பத்தியை இரு மடங்கினும் மிகுதியாகப் பெருக்க வழி ஏற்படுகிறது. 'ஆள் மெத்தக் கூடினால் மீன் மெத்தப் பிடிக்கலாம்' என்பது பழமொழி. இதனை,

'அமைப்பில் ஏற்படும் சீர்திருத்தங்கள்' என மார்ஷலும், ஜோன் ராபின்சனும் (Joan Robinson) குறிப்பிடுவார்கள்.

தொடர்ந்து, உழைப்பாளர் எண்ணிக்கை வளர வளர உழைப்பாளர் சராசரி உற்பத்தி, இவ்வாறு வளர்ந்து செல் வீதத்தில் பெருகலாம். ஆனல், மேலே சேர்மானம் IV-ஐ எட்ட எட்ட, எந்திரத் தொகுதி முழுக்க முழுக்கப் பயன்படுத்தப்பட்டு விட்டதால், அதில் வீணடிப்பு இல்லாமல் ஆகிறது. ஆனல், அதே நேரத்தில் தொடர்ந்து வளர்ந்து செல்லும் மாறுங் காரணியாகிய உழைப்போ வீணுகிக் கொண்டிருக்கிறது. உழைப்புக்கு வேலை தரும் நிலையில் எந்திரத் தொகுதி இல்லாமலிருப்பதே இதற்குக் காரணம். இப்போது உழைப்பாளர் பகிர்ந்து கொள்ள வேலையில்லை ; ஒருவர்க்கொருவர் உதவ முடியாத நிலையில் தகராறுகளே முளைக்கின்றன. முடிவு உற்பத்தியில் எதிரொலிக்கிறது ; உழைப்பாளரது சராசரி இறுதிநிலை விளைவுகள் குறைந்து செல்ல முற்படுகின்றன.

நடைமுறைக்குப் பொருந்துகிற ஓர் எடுத்துக் காட்டைப் பார்க்கலாம். சிறிய நெல் அரவை ஆலை யொன்றை எடுத்துக் கொள்வோம். இங்கேயுள்ள எந்திரத் தொகுதி மிகவுயர்ந்த அளவு 4 பேர்க்கு வேலை தரத் தக்கது என வைத்துக் கொள்வோம். இப்போது ஓரேவொரு தொழிலாளி மட்டும் வேலை செய்வதாக இருந்தால், நெல்லை அளப்பது, எந்திர உரலில் அள்ளிப் போடுவது, எந்திர ஓட்டத்தை ஒழுங்கு படுத்துவது, அரைக்கப்பட்ட நெல்லை அள்ளிக் கொடுப்பது ஆகிய நால்வர் வேலையை அவன் ஒருவனே கவனிக்க வேண்டி இருக்கிறது. இதனல், அலுவல் வேகமாக நடைபெருது. எந்திரத் தொகுதியின் ஆற்றல் பயன்படுத்தப்படாமல் வீணுக்கப் படுகிறது ; உற்பத்தி குறைவாகவே இருக்கும். இந்நிலையில் மற்ருெருவன் அவனுடன் சேர்ந்தால் இருவருமாக ஓரளவு வேலையைப் பகிர்ந்து கொள்ள முடியுமாதலால் உழைப்பாளர் சராசரி உற்பத்தி வளர்கிறது. இப்படியே 4 தொழிலாளர் அமர்த்தப்படுவது வரை அவர்களுடைய சராசரி உற்பத்தி வளர்ந்து கொண்டே செல்லும். அதுவரை வீணுகிக் கொண்டிருந்த எந்திரத்தின் ஆற்றலும், அப்போது முழு நிறைவாகப் பயன்பட்டு விடுகிறது. ஆனல், அதன் பின்னரும் தொழிலாளர் அமர்த்தப்பட்டால் அவர்களுக்கு அங்கு வேலை யில்லை. ஒருவன் வேலையில் அடுத்தவன் தலையிட்டு அனைத்தும் குழம்புவதாகவே முடியும். இதனல், சராசரி உற்பத்தி குறைந்து செல்லும் ; ஒரு நிலையில் மொத்த உற்பத்தியும் குறைந்து செல்லலாம். இவ்வாறு, எந்திரத் தொகுதியாகிய மாருக் காரணியும், தொழிலாளர்களாகிய மாறுங்

காரணியும் இரு வேறு நிலைகளில் வீணுவதால்தான் மாறுங் காரணியின் சராசரி, இறுதிநிலை விளைவுகள் கூடிக் குறைந்து செல்கின்றன என்பது தெளிவாகிறது.

மாறும் வீத விதியை நுட்பமாக விளக்கியுள்ள ஜோன் ராபின்சன், அதன் முதற் கட்டமாகிய வளர்ந்து செல் விளைவு விதி செயலறிவு சார்ந்த ஒன்று என்றும், இரண்டாவது கட்டமாகிய குறைந்து செல் விளைவு விதி தருக்கவியலின்படி தவிர்க்க இயலாதது என்றும் குறிப்பிடுவார். எல்லாத் தொழில்களிலும், தொடக்க நிலையில் நிலம், நிலை முதல் போன்ற சில காரணிகள் மாறு நிலையிலேயே உள்ளன. அப்போது உழைப்புப் போன்ற மாறுங் காரணிகளை மேலும் மேலும் ஆளும் போது, அந்த மாறுங் காரணிகளின் சராசரி உற்பத்தி வளர்ந்து செல்வதை நடைமுறையில் பார்க்கிறோம். எனவே, மாறும் வீத விதியின் இம் முதற் கட்டம் செயலறிவு சார்ந்த ஒன்று. வேறு சொற்களில் கூறுவதானால், காலப் போக்கிலேயே காரணிகள் தமக்குள் சரிக்கட்டிக் கொள்கின்றன. ஆனால், ஒரு தடவை சரிக்கட்டிக் கொண்ட பிறகு, ஒரு காரணியை மட்டும் மேலும் மேலும் மிகுத்துச் செல்வதால், அக் காரணியின் சராசரி விளைவு வளர்ந்து செல்ல முடியாது என்பதற்குக் காரணம் காட்டவே வேண்டியதில்லை; ஏனெனில், அதன் பின்னரும் சராசரி விளைவு வளர்ந்து செல்லுமெனில், காரணிகளை எப்படியும் சேர்த்துக் கொள்ளலாம் அல்லது எதையும் உற்பத்தி செய்ய ஒரேவொரு காரணி மட்டும் போதும் என்றெல்லாம் முடிவு கட்ட வேண்டி வரும்! காரணிகளை நான்காகப் பகுக்கும் போதே, எந்தப் பொருளையும் உற்பத்தி செய்ய இவை நான்கும் வேண்டும் என்று சொல்லும் போதே, குறிப்பிட்டவொரு காரணியை மட்டும் ஆள்வதால் மேலும் மேலும் உற்பத்தி செய்ய முடியாது என்பது தான் அதன் பொருள். எனவே தான் ஜோன் ராபின்சன் குறைந்து செல் விளைவு விதி தருக்க இயலின்படித் தவிர்க்க இயலாதது எனச் சொல்வார்.

இந்த உண்மையை வேறொரு வகையிலும் விளக்கலாம். எந்திரத் தொகுதியும் உழைப்பும் நிறைவான பதிலீட்டுப் பொருள்கள் அல்ல. இதனால் ஒன்றன் இழப்பை மற்றொன்றை மிகுதியாக ஆள்வதால் ஈடுசெய்ய முடியாது. அட்டவணையில் கருத்தைச் செலுத்திக் கவனித்தால் மாறுங் காரணியை மூன்று அலகுகளுக்கு மேல் ஆண்டால், உழைப்பானது எந்திரத் தொகுதிக்கு ஏற்ற நிறைவான பதிலீட்டுப் பொருளல்ல என்பது தெளிவாகிறது. 36 அலகுகளுக்கு மேல் உற்பத்தி செய்ய வேண்டுமெனில் எந்திரத் தொகுதியையும், உழைப்பையும் ஒன்றுக்கு மூன்று என்ற விகிதத்தில் மிகுதியாக

ஆண்டு பார்க்கலாம் என்றுதான் சொல்லத் தோன்றும். (இப்படிச் செய்யும் போது உற்பத்தியின் பருமன் மிகுகிறது.[1])

இவ் விதியின் குறைபாடு, முக்கியமாக அதன் எடுகோள்களி லேயே காணக் கிடக்கிறது. மாறுங் காரணியை மாருக் காரணி யுடன் இவ்வாறு பல வகைளில் ஒன்று சேர்ப்பதைத் தொழில்நுட்ப அமைப்பு அனுமதிக்குமா என்று பலர் ஐயுறுகின்றனர். இந்த ஐயத்துக்கு அவசியம் இல்லை யென்று ஆசிரியர்கள் பென்ஹறாம்,

[1] ஒரு காரணியின் இடத்தில் மற்றென்றை ஆள்வதற்கு அடிப்படை, காரணி களின் தராதர அருமைப்பாடுதான் என்பது வெளிப்படை. மேலே சம இறுதி நிலைப் பயன்பாட்டு விதியின் தொடர்பாகக் கண்டதுபோல், இந்தப் பதிலீட்டு வினையானது ஒரு குறிப்பிட்ட கட்டத்துடன் நிறுத்தப்பட்டு விடுகிறது. ஒவ்வொரு காரணியிலும் செலவிடுகிற இறுதி ரூபாய் சமமான வருவாயைத் தரும்போது, அந்தப் பதிலீடு ஒரு முடிவுக்கு வருகிறது. வேறு சொற்களில் கூறுவதானல், காரணிகளின் இறுதிநிலை விளைதிறன் அவற்றின் விலைகளுக் கிடையேயுள்ள வீதத்திற்கேற்ப அமைய வேண்டும். இந்தச் சமன்பாட்டைக் கொணர்வதற்காகப் பல்வேறு காரணிகளை மிகுதியாகவும் குறைவாகவும் ஆள்வதிலிருந்தே உற்பத்திமுறை உழைப்பு செறிந்ததா முதல் செறிந்ததா என்பதை அறியலாம். எனவே, உற்பத்தி முறையின் இயல்பு காரணிகளி டையே நிகழும் இப் பதிலீட்டையே சார்ந்துள்ளது எனலாம்.

இவ் வுண்மையைச் சமநோக்கு வளைகோடுகள் முறையைக் கொண்டும் நிறுவ லாம். சம அளவு உற்பத்தி செய்ய முடிகின்ற இரு காரணிகளின் சேர்மானங்களை வளைகோடு I குறித்து நிற்கிறது. இவ் வளைகோட்டை சம அளவு (Isoquant) வளை கோடெனலாம். II, III வளைகோடுகள் I சுட்டும் உற்பத்தி அளவைவிட மிகுதியான




அளவு உற்பத்தியைத் தருகிற காரணிகள் சேர்மானங்களைத் தருகின்றன. இவ்வளை கோடுகள் கீழ்நோக்கிச் சரியக் காரணம் குறைந்து செல் விளைவு விதியின் இயக்கமே. இந் நிலையில் எவ்வளவு காரணிகள் அமர்த்தப்படும் என்பது அவற்றின் தராதர விலை யையே பொருத்துள்ளது. இந்தத் தராதர விலையை RS கோடு சுட்டுகிறது இக் கோட்டின் சரிவு இவ்விரு காரணிகளின் விலைகளுக்கு இடையே நிலவும் விகிதத்தைச் சுட்டுகிறது. சமநோக்கு வளைகோடுகளின் தொடர்பாகப் பார்த்தது போல, இங்கும் மிகவுயர்ந்த அளவு விளைவினைப் பெற OM + OP சேர்மானத்தை ஆள வேண்டும் என்பது தெளிவு. A-உம், C-உம் சுட்டும் சேர்மானங்களில் விளைவு குறைவாக இருப் பதால், B சேர்மானமே விரும்பித் தேரப்படுகிறது. இங்கு, சம அளவு வளைகோடும் காரணிகள் விலைவிகிதக் கோடும் தொடுவரை நிலையிலிருப்பது தெளிவாகிறது. இதன்

கேர்ன்கிராஸ்[1] போன்றவர்கள் சுட்டிக் காட்டுகின்றனர். ஒரு வாடகைக் காருக்கு ஒரு காரோட்டி என்ற விகிதத்தைக்கூட, ஒரே வாடகைக் காரை இரண்டு மூன்று பேர் மாற்று முறையில் ஓட்டி, மாற்றலாம் என பென்ஹாம் கூறுவார். உற்பத்தி முறையில் மாறுதல்கள் ஏதுமில்லை எனக் கொள்வதையும் சில ஆசிரியர்கள் ஏற்றுக் கொள்வதில்லை. இங்கும் குறைந்த காலத்தில் இந்த ஈடு கோள் ஏற்புடையதே எனச் சொல்லாம்.

இவ் விதியைக்—குறிப்பாகத் தருக்கவியலின் பாற்படும் அதன் இரண்டாவது பகுதியைத்—தொன்மை மரபினர் பயிர்த் தொழிலுக்கு மட்டுமே பொருத்தி விளக்கி வந்தனர். மார்ஷலும் இதற்கு விதிவிலக்கல்லர். அவர் இந்தப் போக்கைக் குறைந்து செல் விளைவு விதி எனக் குறிப்பிட்டார். 'நிலத்தைப் பயிரேற்றுவதில் ஆள்கிற உழைப்பினதும் முதலினதும் ஒரு மிகுதிப்பாடு, அத்துடன் பயிரிடு முறையில் திருத்த மெதுவும் நேரிடா விட்டால், பொதுவாகத் தன் வீதத்தைவிடக் குறைவாகவே நிலத்தின் விளை பொருள் அளவை மிகுக்கும்' என்பது மார்ஷலின் கூற்று. அதே நேரத்தில், சுரங்கங்கள், வனங்கள், மீன் வளங்கள் போன்ற விளைவுப்பறித் தொழில்களுக்கும் இவ் விதி பொருந்தும் என்பார் அவர். ஆனால், இக்கால ஆசிரியர்கள் இவ் விதியானது தொழில்கள் அனைத்துக்கும் பொது விதி என்பார்கள். பயிர்த் தொழிலாயினுஞ் சரி, ஆலைத் தொழிலாயினுஞ் சரி, உற்பத்தி செய்ய வேண்டுமெனில் உற்பத்திக் காரணிகளை ஒன்று சேர்த்தாக வேண்டும். இந்தச் சேர்மான முயற்சியில் பிற காரணிகளின் அளவு மாறாதிருக்க, ஒரு காரணியின் அளவை மட்டும் மிகுத்துச் சென்றால், அதனால் விளைவில் ஏற்படும் வளர்ச்சி குறைந்து செல்வது இயல்பு. இது எல்லாத் தொழில்களுக்குமே பொதுவானது.

தொன்மை மரபினர் இவ்விதியைப் பயிர்த் தொழிலைக் கொண்டு விளக்கியதில் ஒரு சில உண்மைகள் இருப்பதை மறந்து விடலாகாது. முதலாவதாக, நிலமானது இயல்பிலேயே ஒரு மாறாக் காரணியாக இருக்கிறது. இந் நிலையில், குறிப்பிட்ட அளவு நிலத்தில் பிற காரணிகளை மேலும் மேலும் ஆளும்போது, உற்பத்தி வளர்ச்சி குறைந்து செல்வது தவிர்க்க இயலாதது ஆகிறது. எனவே, நிலத்தையே நம்பியிருக்கும் பயிர்த் தொழிலில் இவ் விதி முனைப்பாகச் செயல்படுவது உண்மை. மேலும், இந்தக் காரணத்

பொருள் சம அளவு விளை கோட்டின் சரிவு சுட்டும் பதிலீட்டு வீதமும், காரணிகள் விலை விகிதக் கோடு சுட்டும் காரணிகள் விலை விகிதமும் சமமாயிருக்கின்றன என்பது தான்.

[1] 'பொருளாதாரம் ஓர் அறிமுகம்' அலெக் கேர்ன்கிராஸ், பக்கம் 500.

தால் இவ் விதி பயிர்த் தொழிலில் விரைவில் செயல்பட முற்பட்டு விடுகிறது. அதாவது, வளர்ந்து செல் விளைவுக் கட்டத்தின் காலம் பயிர்த் தொழிலில் குறைவாக இருக்கும். இறுதியாக, குறைந்து செல் விளைவு விதி நிலத்தின் பரப்பளவை விரித்துப் பயன்படுத்தும் போதும் உண்மையாகிறது. நிலங்கள் அனைத்தும் ஒப்பான தன்மையுள்ளவை அல்ல. எனவே, மேலும் மேலும் நிலத்தை ஆள்வதாகச் சொல்லும் போது, பயிரிடும் நிலத்தின் பரப்பினை விரிக்கலாம். அப்போது மட்டமான நிலங்களே புதிதாக ஆளக் கிடைக்கின்றன: இவற்றின் விளைவு குறைவாகவே இருக்கும். இவ்வாறு, மேலும் மேலும் மட்டமான நிலத்தையே ஆண்டுவந்தால், விளைவும் தொடர்ந்து குறைந்து செல்வது இயல்பு.

இந்தக் குறைந்து செல் விளைவு விதி பொருளாதாரத்தின் அடிப்படை விதிகளில் ஒன்று. இதன் அடிப்படையில் தான் மால்தஸ் தம் விதியை நிறுவினர். தொழில் நுட்பப் புத்தாக்கங்கள், பெரும்பாலும் இவ்விதியைப் புறங்காணும் கருத்தில் எழுந்தவையே. இந்த விதி மட்டும் செயல்படவில்லையேல், பொருளாதாரச் சிக்கலை ஒரு வழியாகத் தீர்த்து விடவும் முடியும்! இன்றைய விஞ்ஞான அறிவு எழுச்சி இவ் விதியைத் தூக்கி யெறிந்து விட்டதாகவும் சொல்ல முடியாது. இதிலிருந்து, இவ் விதி உலக அமைப்பின் நிலைபேருன விதிகளில் ஒன்று என முடிவு கட்டுவதில் தவறில்லை என்றே சொல்லலாம்.

## பருமச் சிக்கனங்கள்

உற்பத்தியின் பருமன் அல்லது உருவ அளவு, அதில் ஆள்கிற காரணிகளின் அளவைப் பொருத்துள்ளது. எல்லாக் காரணிகளையும் ஏராளமாக ஆண்டு உற்பத்தி செய்யும் போது, உற்பத்தியின் பருமன் மிகுந்துள்ளது—அல்லது, பேரளவில் உற்பத்தி நிகழ்கிறது—என்று சொல்லலாம். இவ்வாறு, பருமன் மிகும்போது, அதனுல் உற்பத்தி எவ்வாறு பாதிக்கிறது என்பதைச் சிந்தித்தால், சில உண்மைகளை அறியலாம். காரணிகள் சேர்மானத்தில் எல்லாக் காரணிகளதும் அளவு ஒரே வீதத்தில் மிகுந்தால், அதே வீதத்தில் உற்பத்தியும் மிகுந்தாக வேண்டும் என்ற கட்டாயமில்லை; குறிப்பிட்ட வீதத்தை விட மிகுதியாகவோ குறைவாகவோ உற்பத்தியானது மிகலாம். இவ்வாறு உற்பத்திப் பருமன் மிகும் போது, மாருவிளைவோ, வளர்ந்து செல் விளைவோ, குறைந்து செல் விளைவோ ஏற்படலாம்.

இந்த விளைவுப் போக்குகளைப் பொருத்தே உற்பத்திச் செலவும் அமைகிறது. உற்பத்திப் பருமன் மிகும் போது, அதே வீதத்தில்

விளைவும் வளர்ந்து சென்றால், உற்பத்தி மிகும் போது சராசரி உற்பத்திச் செலவு மாருதிருக்கும். உற்பத்திப் பருமன் மிகும் போது, வளர்ந்து செல் வீதத்தில் விளைவும் வளர்ந்து சென்றால், உற்பத்தி மிகும்போது சராசரி உற்பத்திச் செலவு குறைந்து செல்லும். மாருக, உற்பத்திப் பருமன் மிகும் போது, குறைந்து செல் வீதத்தில் விளைவும் வளர்ந்து சென்றால், உற்பத்தி மிகும் போது சராசரி உற்பத்திச் செலவு வளர்ந்து செல்லும். நால்வகைக் காரணிகளின் குறிப்பிட்ட வீதச் சேர்மான மொன்றை ஓர் அலகாக எடுத்துக் கொள்வோம். இதன் மொத்த மதிப்பு ரூ. 100 என வைத்துக் கொள்வோம். இந்த அலகால் 100 பொருள் அலகுகளை உற்பத்தி செய்ய முடியுமெனில் பொருளின் சராசரி உற்பத்திச் செலவு ரூ. 1. இனி, காரணிகள் அளவை இரட்டிப்பதாக வைத்துக் கொள்வோம். இப்போது மொத்த உற்பத்திச் செலவு ரூ. 200. இதனுல், உற்பத்தியும் சரியாக (200 அலகுகள் என) இரு மடங்கு ஆகு மெனில், சராசரி உற்பத்திச் செலவு, மாருது (ரூ. 1 ஆகவே) இருக்கிறது; உற்பத்தி இரு மடங்கை விட மிகுதியாக (250 என) வளருமானல், சராசரி உற்பத்திச் செலவு (80 காசாகக்) குறைகிறது; உற்பத்தி இரு மடங்கை விடக் குறைவாகவே (180 என) வளருமானல், சராசரி உற்பத்திச் செலவு (ரூ. 1.25 என) வளர்கிறது. இவ்வாறு, பருமனில் ஏற்படும் மாறுதல்கள் உற்பத்திச் செலவைத் தாக்குகின்றன. இதனுல் சில செலவுச் சுருக்கங்கள் அல்லது 'சிக்கனங்கள்' ஏற்பட வழியிருப்பதால், பரும மாறுதல்களால் விளைவில் ஏற்படும் மாறுதல்களைப் 'பருமச் சிக்கனங்கள்' (Economics of Scale) என்று அழைப்பதுண்டு.

### வளர்ந்து செல் விளைவு

உற்பத்திப் பருமன் மிகும் போது, விளைவு வீதம், பெரும்பாலும் வளர்ந்து செல்ல வகையுண்டு; இதனுல் சராசரி உற்பத்திச் செலவும் குறைந்து செல்ல வழியிருப்பதால், சில சிக்கனங்கள் இயல்பாகவே தோன்றுகின்றன. இவற்றை 'அகச் சிக்கனங்கள், புறச் சிக்கனங்கள்,' (Internal and External Economics) என்று இரு வகைப் படுத்தியுள்ளார் மார்ஷல்.

ஒரு நிறுவனம் அகச் சிக்கனங்களைப் பெறுவதற்குக் காரணம் அதன் அகத்தையே காணக் கிடைக்கும். மாருகப், புறச் சிக்கனங்களோ, நிறுவனத்துக்குப் புறமிருந்து செயல்படும் சில காரணிகளால் ஏற்படுகின்றன. அகச் சிக்கனங்கள் தனியொரு நிறுவனத்தின் உற்பத்திப் பருமன் மிகும் போது, அது மட்டும் அடைகிற சில சிக்கனங்கள். உற்பத்திப் பருமன் மிகும் போது, தொடர்புள்ள பல

நிறுவனங்களையும் தாக்குகிற சூழ்நிலை வசதிகளால், குறிப்பிட்ட நிறுவனம் பெறுகிற சிக்கனங்களே புறச் சிக்கனங்கள்.

தமிழகமெங்கும் அண்மைக் காலத்தில், நகரங்களை அடுத்துள்ள சிற்றூர்களில் பால் வழங்கும் தொழிலில் குறிப்பிடத் தக்க அளவு மாறுதல்கள் ஏற்பட்டுக் கொண்டிருப்பதைப் பார்க்கலாம். ஏராள மான கறவை மாடுகளைப் பேணிப் பேரளவில் பால் உற்பத்தி செய் யப் பலர் முன்வந்து கொண்டிருக்கின்றனர். வீட்டுத் தொழுவில் பல மாடுகள் கறக்குமானால், குறைந்த விலையில், அவற்றுக்கான தீவனத்தை மொத்தமாக வாங்க முடியும். இது ஒரு சிக்கனம். இந்தச் சிக்கனம் மிகுதியான கறவை மாடுகளைப் பேணுபவனுக்கு, அதனாலேயே, கிடைக்கிற நன்மை; இதில் வேறு எவரும் பங்கு பெற முடியாது. இது ஒரு வகை அகச் சிக்கனம். இவ்வாறு பலர் கறவை மாடுகள் பேண முன்வரும் போது, அடுத்து ஒரு பால் பதனிடு நிலையத்தை நிறுவுவது இயல்பாகவே நடந்து விடுகிறது. இதனால், கறவை மாடுகள் பேணுவோர் அனைவரும் தாம் கறந்த பாலைக் கெட்டுப் போகாமல் பாதுகாத்து வைக்க முடிகிறது. இது மற்றுமொரு சிக்கனம். இச் சிக்கனம் எந்தவொரு உற்பத்தியாள னுக்கும் என்று இல்லாமல், எல்லார்க்கும் பொதுவாக இருக்கிறது; இது ஒரு வகைப் புறச் சிக்கனம்.

இந்த அகப், புறச் சிக்கனங்களை, இனி விரிவாக ஆராயலாம். அகச் சிக்கனங்கள் ஐவகைப்படும்.

### 1. தொழில் நுட்பச் சிக்கனங்கள்

உற்பத்தியின் பருமன் மிகும் போது, முதன் முதலாக வேலைப் பகுப்புக்கு வாய்ப்புக் கிடைக்கிறது. தனியொருவன், பொருளை முழுதாகச் செய்து தருவதற்குப் பதிலாகப், பொருளின் உற்பத்தி பல்வேறு செயல் பகுதிகளாகப் பகுக்கப் பெற்று, ஒவ்வொரு செயல் பகுதியிலும் வெவ்வேறு தொழிலாளர் முழு நேரமும் ஈடுபட்டிருப் பதே வேலைப் பகுப்பு. இவ் வேலைப் பகுப்பு மிகுதியான உற்பத்தி யைக் கொணரத் தக்கது. சமூக நலப் பணிகளில் ஈடுபடும் மாண வரும் வேலைப் பகுப்பின் நலனை உணர்ந்திருக்க முடியும். மாண வர்கள் ஒவ்வொருவரும் தனித் தனியாக மண்ணை வெட்டி, கூடை யிலிட்டு, அதனைத் தூக்கி தலையில் வைத்து, நெடுந் தூரம் சென்று கொட்டுவதற்குப் பதிலாக, ஒருவர் மண் வெட்டவும், அடுத்தவர் மண்ணைக் கூடையிலிடவும், மூன்றுமவர் தலையில் தூக்கி வைக்க வும், நாலாமவர் கொஞ்ச தூரம் கொண்டு செல்லவும் இறுதியில் ஒருவர் அதனை வாங்கிக் கொட்டவும் அஞ்சல் முறையில் முன் வந்தால், பிந்திய நிலையில், மிகுதியான அளவு வேலை நடந்து முடி

வதைக் காண முடியும். வேலைப் பகுப்பினால் குறைந்த செலவில் மிகுதியாக உற்பத்தி செய்ய முடியும் என்பதை முதன் முதலில் அழகாக விளக்கிய பெருமை ஆடம் ஸ்மித்துக்கு உரியது.[1]

உற்பத்தியின் பருமன் மிகும் போது, அடுத்து, நவீன எந்திரங்களை நிறுவிப் பயனடைவதற்கு வாய்ப்பு இருக்கிறது. சான்றாக, அச்சிடுந் தொழிலை எடுத்துக் கொள்ளலாம். கையச்சு எந்திரத்துடன் ஒப்பிடும்போது, சுழல் அச்சு (Rotary Press) திறமை மிக்கது என்பது தெரிந்ததே. ஆனால், சுழல் அச்சை ஆளவேண்டுமெனில் அதனை நன்கு பயன்படுத்தும் அளவுக்கு உற்பத்தியானது பெரிய அளவில் நிகழ்ந்தாக வேண்டும். இவ்வாறு, உற்பத்திப் பருமன் மிகுவதாலேயே நவீன எந்திரங்களை ஆள வாய்ப்புக் கிடைத்து, உற்பத்திச் செலவு குறைய முற்படுகிறது.

இத்தகைய எந்திரங்களை ஓரளவு சிறிய உருவில் செய்து தர முடியும் என வைத்துக் கொண்டாலும், பெரிய எந்திரங்களின் உற்பத்தித் திறன் சிறிய எந்திரங்களின் வீதத்தைவிட மிகுதியாக இருக்கும் என்பது இங்குக் கவனிக்கத் தக்கது.[2] சாதாரண ஓடுக்குப் பேருந்து ஏற்றிச் செல்லும் பயணிகளை விட ஒரு மடங்கு மிகுதியான அளவு பயணிகளை ஈரடுக்குப் பேருந்து ஏற்றிச் செல்லத் தக்கது. ஆனால், அதே நேரத்தில் அதற்குக் காரோட்டி ஒருவன் போதும்; எந்திரமும் இரு மடங்கு திறன்பட்டிருக்க வேண்டும் என்று இல்லை; கட்டடச் செலவும் இருமடங்காக இருப்பதில்லை; இவற்றால் அதன் உற்பத்திப் பணிச் செலவும் குறைவாக—சிக்கனமாக—இருக்கும்.[3]

[1] வேலைப் பகுப்பால் உற்பத்தி பெருகுவதற்கு ஆடம் ஸ்மித் மூன்று காரணங்களைக் குறிப்பிட்டார். முதலாவதாகத் தொழிலாளியின் கைத்திறன் மேம்படுகிறது. 'சித்திரமும் கைப் பழக்கம்' அல்லவா? இரண்டாவதாக, வேலையில் ஒரு செயல் பகுதியிலிருந்து மற்றொரு செயல் பகுதிக்கு மாறுவதால் ஏற்படும் கால தாமதம் குறைகிறது. மூன்றாவதாக, எந்திரங்கள் கண்டுபிடிக்கப் பெற்று, உழைப்புக் குறைவதால் பல மனிதர்கள் வேலையை எந்திரத்தின் உதவியால் ஒரு மனிதன் செய்ய முடிகிறது.

[2] பருமச் சிக்கனங்கள், உற்பத்தி முறை மாறவில்லை என்ற எடுகோளுடன் விளக்கப்பட வேண்டும் என்றும், அந் நிலையில் இதுவே தலையாய சிக்கனமாக இருக்கும் என்றும் கூறுவதுண்டு.

[3] ஸ்டைக்லர் தமது நூலில் ('The Theory of Price' by Stigler) மின்சார மோட்டார்களின் விலைவீதப் பட்டியல் ஒன்றுடன் இவ்வுண்மையை விளக்குவார்: ஒரு குதிரை வலன் மின்சார மோட்டாரின் விலை 59 டாலர்; 1000 குதிரை வலன் மின்சார மோட்டாரின் விலை 5819 டாலர். இந்நிலையில் ஒரு குதிரை வலன் சிறிய மின்சார மோட்டாரை ஆள்பவனுக்கு ஒரு குதிரை வலனுக்கு 59 டாலர் செலவாகும் போது, 1000 குதிரை வலன் பெரிய மின்சார மோட்டார் வைத்திருப்பவனுக்கோ ஒரு குதிரை வலனுக்கு 5.8 டாலரே செலவாகிறது. எனவே, பெரிய எந்திரங்களை ஆள்வதிலேயே ஒரு சிக்கனம் இருப்பது தெளிவாகிறது.

மேலும், உற்பத்திப் பருமன் மிகும் போது, பொருளின் உற்பத்தியில் தொடர்புள்ள பல நிலைகளைப் பிணைக்க முடிகிறது. இரும்பு எஃகுத் தொழில் இதற்கோர் எடுத்துக் காட்டு. தேனிரும்பு செய்வதற்குரிய ஊதுலைகள், அவ் விரும்பை எஃகுப் பாளங்களாக மாற்றுவதற்கும், அப் பாளங்களைப் பழுப்பிரும்பு, இரும்புக் கட்டிகள், துண்டங்கள் போன்ற வினைமுற்றுப் பொருள்களாக்கவும், பின்னர் அவற்றைத் தகடுகள், தகரங்கள், கம்பிகள், தண்டவாளங்கள் முதலியனவாக மாற்றுவதற்கும் உரிய வினைமுறைகள் அத்தனையையும் ஒரு பெரிய நிறுவனத்தில் பிணைத்து வைப்பது இயல்பு. இப் பிணைப்பால், உலோகம் ஓர் உற்பத்தி நிலையிலிருந்து மற்றொன்றுக்குச் சூடாகவே செல்லும் போது எரிபொருள் சிக்கனம் ஏற்படுகிறது. ஓர் உற்பத்தி நிலையிலிருந்து அடுத்த நிலைக்கு வினைமுற்றுப் பொருள்களை எடுத்துச் செல்ல வேண்டிய போக்குவரத்துச் செலவும் மிச்சப்படும். கழிவுப் பொருள்களையும் ஆதாயகரமாகப் பயன்படுத்த முடியும். உலோகத்தை வினைமுற்றிய பொருளாக்கும் போது கழிக்கப்படும் துண்டுகளை மறுபடியும் ஊதுலைகளில் பயன்படுத்த முடியும். இவற்றாலும் செலவு சுருங்கிச் சிக்கனம் ஏற்படுகிறது.

## 2. கொள்வினை—விற்பனைச் சிக்கனங்கள்

உற்பத்திப் பருமன் மிகும் போது, கொள்வினை—விற்பனையிலும் சிக்கனம் ஏற்படுகிறது. கச்சாப் பொருள்களைப் பேரளவில் கொள்முதல் செய்யும் போது, விலைகளில் சலுகை பெற முடியும்; மிகுதியாக வாங்கும் போது, விலையைக் கழித்துக் கொடுப்பது எங்கெங்கும் வழக்கம். மிகுதியாக உற்பத்தி செய்யும் போது, விளம்பரங்கள் வழியாகவும் விற்பனையாளர்களை நியமிப்பதன் வழியாகவும் பெரிய நிறுவனங்களால் தம்முடைய பொருள்களுக்கு நல்ல விலை பெற முடியும்.

## 3. நிதி வசதிச் சிக்கனங்கள்

உற்பத்திப் பருமன் மிகும் போது, நிறுவனத்துக்கு நிதி வசதியும், குறைந்த வட்டியில் ஏராளமாக எளிதில் கிடைக்கும். அவற்றின் முதல் வளம் பேரளவில் இருப்பதே இதற்குக் காரணம். 1942-இல் அமெரிக்கப் பாங்குகள் சிறிய நிறுவனங்களுக்கு $5\frac{1}{2}$%, நடுத்தர நிறுவனங்களுக்கு $4\frac{1}{2}$%; பெரிய நிறுவனங்களுக்கு 3%; மிகப் பெரிய நிறுவனங்களுக்கு $1\frac{3}{4}$% வட்டி விதித்ததாகக் கூறப்படுவதிலிருந்து இது தெளிவாகிறது. நிறுவனங்களின் அளவு பெரிதாகப் பெரிதாக அவற்றால் தர முடிகிற ஈட்டின் மதிப்பும் பெருகுவதால், பாங்குகள் குறைந்த வட்டிக்குக் கடன் தர இசைகின்றன. பெரிய நிறுவனங்

களுடைய பங்குகளுக்கும் கடன் பத்திரங்களுக்கும் அங்காடியில் நல்ல விற்பனை இருப்பதாலும் நிதி வசதியை எளிதில் பெற முடிகிறது.

4. நிருவாகச் சிக்கனங்கள்

உற்பத்திப் பருமன் மிகும்போது, தேர்ச்சி பெற்ற நிபுணர்களை ஒவ்வொரு துறையிலும் அமர்த்தி, திறம்படச் செயலாற்றி உற்பத்திச் செலவைச் சுருக்க முடியும். உலகப் புகழ் பெற்ற 'இம்பீரியல் கெமிக்கல் இன்டஸ்ட்ரீஸ் லிமிட்டெட்' நிறுவனத்தில் 14 தனித் துறைகள் ஒவ்வொன்றும் ஒரு இயக்குநர் குழுவின் மேற்பார்வையில் இயங்கி வருகின்றன. இவை தவிர ஏழு துறைகள் வெவ்வேறு தனி இயக்குநர் தலைமையில் செயல்பட்டு வருகின்றன. இவற்றால், நிருவாகம் திறம் மிக்கவர் கையில் இருப்பது இயல்பு.

5. ஆபத்து ஏற்புச் சிக்கனங்கள்

உற்பத்திப் பருமன் மிகும்போது நட்ட ஆபத்துக்களையும் திறம்படச் சமாளிக்க முடியும். இந்த ஆபத்துக்களுக்குக் காரணமான உறுதியின்மைகளைக் குறைக்க, பொதுவாக, நான்கு வழிகளுள்ளன. உற்பத்தியைப் பன்முகப் படுத்துவது ஒரு வழி. மாபெரும் நூல் வெளியீட்டகங்கள் புதிய இலக்கிய நூல்கள் வெளியிடுவதில் ஏற்படும் நட்ட ஆபத்தைத் தாம் வெளியிடும் பாடப் புத்தகங்கள், மலிவுப் பதிப்புக்கள் போன்றவற்றில் கிடைக்கும் ஆதாயத்தைக் கொண்டு ஈடுகட்டிக் கொள்ள முடியும். இங்கு உற்பத்தி பல் வகைப் படுகிறது; அல்லது, பன்முகப் படுகிறது. அங்காடியைப் பன்முகப்படுத்திக் கொள்வது மற்றொரு வழி. 'டி. வி. எஸ்' போன்ற உந்து வண்டி மாமன்னர்கள் பயணிகள் போக்குவரத்துத் துறை அரசுரிமையாக்கப் படுவதில் தொக்கி நிற்கும் நட்ட ஆபத்தைக் குறைத்துக் கொள்ளும் வகையில், தமது பணியை —அல்லது அதற்குரிய அங்காடியை — பொருள்கள் போக்குவரத்துத் துறையில் முன்பே விரிவுபடுத்தி வருவது இதற்கோர் எடுத்துக்காட்டு. தமக்கு வேண்டிய கச்சாப் பொருள்களின் அளிப்பில் ஏற்படுகிற உறுதியின்மையைத் தவிர்க்கும் வகையில் கச்சாப் பொருள் வழங்குமிடங்களைப் பன்முகப் படுத்தவும் பெரிய நிறுவனங்களால் இயலும். நகர்ப்புறங்களிலுள்ள பெரிய திரைப்படக் கொட்டகைகள், அரசின் மின் துறையை மட்டும் நம்பியிராமல் தமக்கெனத் தனியாக மின்சார மோட்டார்களை நிறுவிக் கொள்வது இதற்கோர் எடுத்துக்காட்டு. இறுதியாக, உற்பத்தி முறைகளைப் பன்முகப் படுத்துவதன் வழியாகவும் பெரிய நிறுவனங்களால் நட்ட ஆபத்துக்களை எளிதில் சமாளிக்க முடியும். சென்ற போர்க் காலத்தில் பெட்ரோல் பஞ்சம் ஏற்பட்ட

போது பெரிய நிறுவனங்களால் தம்முடைய பேருந்துகளை நிலக் கரியைக் கொண்டு ஓட்ட முடிகிற வகையில் மாற்றியமைத்துத் தொடர்ந்து பணிபுரிய முடிந்ததை இதற்கோர் எடுத்துக்காட்டென லாம்.

இந்த அகச் சிக்கனங்களெல்லாம் ஏற்பட ஒரே காரணம் உற்பத் திக் காரணிகளின் 'பகுபடாத் தன்மை' (Indivisibility) தான் என்பார் ஸ்டைக்லர். நிறுவனத்திலுள்ள எந்திரத்தைக் குறை வாகப் பயன் படுத்தினாலும் முதலீட்டுச் செலவென்னமோ மாறப் போவதில்லை. ஓர் அச்சு எந்திரத்தைப் பயன்படுத்தினால் 1000 இதழ்கள் அச்சிட முடியுமென வைத்துக் கொண்டால், 100 இதழ் கள் உண்மையில் அச்சாகும் போது எந்திரத்தின் பத்திலொரு பகுதியை மட்டும் ஓட்டினால் போதும் எனச் சொல்ல முடியாது; எந்திரம் முழுதும் ஓட வேண்டியது தான். இவ்வாறு அதிகமதிகம் இதழ்களை அச்சிடும் போது, சராசரி உற்பத்திச் செலவு குறைந்து கொண்டே செல்கிறது. எனவே, எந்திரம் பகுபடாக் காரணத் தால் அதன் முழுத் திறன் அளவை எட்டுவது வரை உற்பத்திச் செலவு குறைந்து கொண்டே செல்கிறது. இதனை எந்திரத்தின் பகுபடாத் தன்மை என்பார் ஸ்டைக்லர். இதுபோன்றே கொள் வினை விற்பனை பகுபடாத் தன்மை, நிதி வசதிப் பகுபடாத் தன்மை, ஆராய்ச்சி பகுபடாத் தன்மை என வேறு சிலவும் உள்ளன என்பார் அவர்.

—

மேலே கண்ட ஐவகைச் சிக்கனங்களும் தனியொரு நிறுவனத் தின் அகத்தே (அதன் பருமன் மிகுவதை யொட்டி) நிகழும் சில ஏற்பாடுகளால் அது மட்டுமே பெறுகிறவை. இதற்கு மாறாக புறச் சிக்கனங்கள் சில சூழ்நிலை வசதிகளால் தோன்றிக் குறிப்பிட்ட தொழிலில் ஈடுபட்டுள்ள எல்லா நிறுவனங்களுக்கும் பொதுவாகக் கிடைக்கின்றன. இவை, பெரிதும் தொழிலின் ஓரிடச் செறிவால்[1] விளைபவை. ஒரே தொழிலில் ஈடுபட்டுள்ள பற்பல நிறுவனங்கள் குறிப்பிட்டவொரு இடத்தில் நிலைகொள்ளும் போது, அங்கு அத் தொழில் செறிந்து கிடப்பதாகச் சொல்லப்படும். அந் நிலையில், சிறந்த போக்குவரத்துச் சாதனங்கள், பயிற்சி பெற்ற தொழிலாளர் கள், புதிய உற்பத்திக் கருவிகள் ஆகிய வசதிகள் அவ்விடத்தி லுள்ள எல்லா நிறுவனங்களுக்கும் பொதுவாகக் கிடைக்கின்றன. இதுபோன்றே, தொழில் நுட்பம் பற்றிய தகவல்கள் வெளியாகும் போது, அதன் பலனைத் தொழிலிலுள்ள ஒவ்வொரு நிறுவனமும் அடைய முடியும். மேலும், தொழிலின் ஓரிடச் செறிவு துணைத்

[1] பிற்சேர்க்கை பார்க்க.

தொழில்கள் பல அவ்விடத்தில் தோன்ற வழி செய்கிறது. இத் தொழில்கள் அவ்விடத்திலுள்ள முதன்மையான தொழிலுக்கு எந்திரங்கள், கச்சாப் பொருள்கள், போக்குவரத்து வசதிகள், விற்பனை வசதிகள், நிதி வசதிகள் முதலியவற்றை அளித்து உதவுகின்றன. இந்த நலன்களைத் தனியொரு நிறுவனம் மட்டுமின்றித் தொழிலில் ஈடுபட்டு உள்ள ஒவ்வொரு நிறுவனமும் பெற முடிகிறது. தமிழ் நாட்டின் 'மாஞ்செஸ்டர்' என்று சொல்லப்படும் கோவையில் பஞ்சாலைத் தொழில் செறிந்து உள்ளது. இதனால், அங்கு பல துணைத் தொழில்கள் தோன்றியுள்ளன. நூலை வாங்குவதற்கான கைத்தறி, ஆலைகளுக்கு வேண்டிய எந்திர உறுப்புக்களை இயற்றுவது, கச்சாப் பொருளாகிய பருத்தி உற்பத்தி, ஆகிய பலவும் கோவை மாவட்டமெங்கும் பரக்கச் செழித்துள்ளன. நாட்டிலுள்ள பெரிய பாங்குகளனைத்தும் கோவையில் தம்முடைய கிளைகளைத் திறந்துள்ளன. அகலப் பாதை ரெயில்வே இணைப்பும் உண்டு. தென்னிந்தியத் துணித் தொழில் ஆராய்ச்சி நிறுவனமும் கோவையில் தான் பணி புரிகிறது. இன்னோரன்ன வசதிகள் கோவை வட்டத்திலுள்ள எந்தவொரு நிறுவனத்தினதும் அக நிலையால் அல்ல, பொதுவாக வளர்ந்துள்ள புறச் சூழ்நிலைகளால் ஏற்பட்டுள்ள காரணத்தால் தான் இவை 'புறச் சிக்கனங்கள்' எனப்படுகின்றன.

## குறைந்து செல் விளைவு

உற்பத்தியின் பருமன் மிகுந்து செல்லும்போது குறிப்பிட்டவொரு கட்டம் வரை மேலே சொன்ன சிக்கனங்கள் தோன்றிக் கொண்டிருக்கும். ஆனால், இவற்றின் தோற்றம் ஒரு கட்டத்தில் நின்று விடுகிறது. நிறுவனம் அளவு மீறிப் பருக்கும்போது, நிருவாகத்தின் திறமை குன்ற முற்படுகிறது. பிறவெல்லாக் காரணிகளையும் வரையறையின்றி மிகுத்துச் செல்ல முடியும் என வைத்துக் கொண்டாலும், தொழில் துணிவோனின் செயல்படு எல்லையை மிகுப்பதற்கு எல்லையொன்றுண்டு. மேலே குறிப்பிட்ட இம்பீரியல் கெமிக்கல்ஸ் நிறுவனத்தில் நிருவாக இயக்குநர் பதவி ஒழிக்கப்பட்டுள்ள நிலை இதனை விளக்கும். நிருவாக இயக்குநரின் பொறுப்பு வரையறையில்லாதபடி வளர்ந்து விட்டதால், அப் பதவி அகற்றப்பட்டு ஓர் இயக்குநரின் இடத்தில் செயல்படு இயக்குநர் பலர் நியமிக்கப் பட்டுள்ளனர். இதனால் நிருவாகச் செலவு வளர்ந்து பருமனால் ஏற்படும் விளைவு, பருமன் மிகுந்து உள்ள வீதத்தைவிடக் குறைந்து செல்ல முற்படுகிறது.[1]

[1] இங்கே மாறும் வீத விதி செயல்படுவதாகச் சொல்லலாம்.

மற்றொரு காரணமும் இதனை விளக்கும். நிறுவனம் விரிய விரிய, அரியனவான உற்பத்திக் காரணிகளைப் பிற தொழில்களி லிருந்து கவர்ந்திழுக்க வேண்டிய நிலை ஏற்படுகிறது. உற்பத்திக் காரணிகளுக்கு ஏறிய விலை நல்குவதன் வழியாகத்தான் இது இயலும். இதனாலும் சராசரிச் செலவு வளர்ந்து செல்ல முற்படுகிறது.

மாறா விளைவு

இரண்டு நிலைகளில் பருமனால் ஏற்படும் விளைவுகள் மாறாதிருக்கு மென நம்பலாம். முதலாவதாக, நிருவாகம் உட்பட உற்பத்திக் காரணிகள் அனைத்தும் மணலைப் போல் பாகுபடத் தக்கவையாகவும், மிகச் சிறிய அளவில் ஆளத் தக்கவையாகவும் இருக்க வேண்டும். இரண்டாவதாக, உற்பத்திக் காரணிகளின் அளிப்பு நிறைவான நெகிழ்ச்சி யுள்ளதாக இருக்க வேண்டும். இவ் விரண்டும் இல்லாத நிலையில், குறைந்து செல் விளைவு, இறுதியில், தவிர்க்க இயலாததாகவே ஆகி விடுகிறது.

## உத்தம நிறுவனம்

உற்பத்திப் பருமன் மிகும் போது, குறிப்பிட்ட நிலை வரை அகப் புறச் சிக்கனங்கள் தோன்றுகின்றன; அதன்பின் சிக்கனமின்மையே ஏற்படுகிறது. எனவே, நிறுவனத்தின் உத்தம அளவு எது — அல்லது 'உத்தம நிறுவனம்' (Optimum Firm) எது என்ற வினா எழுகிறது. உத்தம நிறுவனம் என்பது மிகவுயர்ந்த திறமையுள்ள நிறுவனம் என்றும், மிகவுயர்ந்த திறமையுள்ளது என்பதற்கு அடையாளம் அதன் சராசரி உற்பத்திச் செலவு இயன்ற மட்டும் குறைந்த அளவினதாக இருப்பது என்றும் சொல்லலாம். விளைவு விதிகளுடன் பொருத்தி இதனைச் சிந்திக்கும் போது இரு கருத்துக்கள் வலியுறுகின்றன. முதலாவதாக உத்தம நிறுவனத்தில் உற்பத்திக் காரணிகளெல்லாம் மிகச் சிறந்த வீதத்தில் சேர்க்கப் பட்டிருக்க வேண்டும். இரண்டாவதாக உத்தம நிறுவனமானது பருமச் சிக்கனங்களையும் மிக வுயர்ந்த அளவு பெற்றிருக்க வேண்டும். சுருக்கமாகச் சொன்னால் சேர்மான வீதத்திலிருந்தும், பருமனிலிருந்தும் வளர்ந்து செல் விளைவுகளை அந் நிறுவனம் பெறுவதாக இருக்க வேண்டும்.

இதனைக் பின்வருமாறு விளக்கலாம். y மாறுங் காரணி யென்றும், x மாறாக் காரணிகள் அனைத்தையும் பொதுவாகக் குறிப்பதாகவும் வைத்துக் கொள்வோம். உற்பத்திக் காரணிகளை மிகச் சிறந்த வீதத்தில் சேர்ப்பது நிறுவனத்தின் முதற் கடன்.

கீழேயுள்ள அட்டவணை, வீதமாறுதலின் விளைவுகளைச் சுட்டுவதாக வைத்துக் கொள்வோம். அதிலிருந்து 1x+3y சேர்மானமே

| காரணிகள் x y | மொத்த விளைவு | y-இன் சராசரி விளைவு |
|---|---|---|
| 1+1 | 10 | 10 |
| 1+2 | 22 | 11 |
| 1+3 | 36 | 12 |
| 1+4 | 44 | 11 |
| 1+5 | 50 | 10 |

சராசரி உற்பத்தியை மிகவுயர்ந்த நிலைக்குக் கொண்டு வரும் என்பது தெளிவாகிறது. உற்பத்திக் காரணிகள் சேர்மானங்களில் இதுவே உத்தமமான வீதம்.

இனி, அடுத்து உற்பத்திப் பருமனை நிருணயிக்க வேண்டும். கீழ்வரும் அட்டவணை பருமனால் ஏற்படும் விளைவுகளைச் சுட்டுவதாக வைத்துக் கொள்வோம்.

| காரணிகள் x y | மொத்த விளைவு | y-இன் சராசரி விளைவு |
|---|---|---|
| 1+3 | 36 | 12 |
| 2+6 | 78 | 13 |
| 3+9 | 126 | 14 |
| 4+12 | 168 | 14 |
| 5+15 | 180 | 12 |

1x+3y சேர்மானமே மிகச் சிறந்ததென அறிந்த தொழில் துணிவோன் அதே அளவில் காரணிகளை ஒரு சேர மிகுத்துச் சென்று உற்பத்திப் பருமனை மிகுக்கிறான். இதனால் விளைவில் ஏற்படும்

மாறுதல்கள் அட்டவணையில் உள்ளன. முதலில் இரு மடங்காகக் காரணிகளைப் பெருக்கி உற்பத்தி செய்யும் போது சராசரி விளைவு வளர்ந்து செல்கிறது. ஆனால், $4x+12y$ என்ற சேர்மானத்தை ஆளும் போது, சராசரி விளைவு வளர்ந்து சென்று மிகவுயர்ந்த மட்டத்தை எட்டி மாறாதிருக்கிறது. அதன் பின் குறைந்து செல் விளைவே ஏற்படுகிறது. எனவே $4x+12y$ என்ற சேர்மானம் தான் உத்தமப் பரும நிலைக்கு நிறுவனத்தை இட்டுச் செல்கிறது எனலாம். இந்த நிலையில் காரணிகள் சேர்மானமும், உற்பத்திப் பருமனும், இரண்டும் உத்தம விளைவைத் தருகின்றன ; நிறுவனத்தின் சராசரி உற்பத்திச் செலவும் மிகக் குறைந்த அளவினதா யிருக்கும்.

இந்த உத்தம அளவு நிலையான ஒன்றல்ல என்பது இங்குக் கருதத் தக்கது. மாறும் வீத விதியை விளக்கும் போது உற்பத்தி முறைகள் மாறாமலுள்ளன என்ற எடுகோளை அடிப்படையாகக் கொண்டிருந்தோம். எனவே, உற்பத்தி முறைகள் மாறும் போது உத்தமமான காரணிகள் வீதம் மாற நேரலாம். அதனை யொட்டி நிறுவனத்தின் உத்தம அளவும் மாறிவிடும். இதுபோன்றே காரணிகள் விலை மாறும் போதும் உத்தம அளவு தானாக மாறிவிடும்.

மேலும், உத்தம அளவு ஒன்றுக்கொன்று இணக்கமாயிராத பல்வேறு காரணிகளை யொட்டியது. நிருவாகக் கண்ணோட்டத்தில் உத்தம அளவாயிருப்பது தொழில் நுட்பக் கண்ணோட்டத்தில் அதம அளவாயிருக்கலாம் ; அல்லது நிதி வசதிக் கண்ணோட்டத்தில் உத்தம அளவாயிருப்பது விற்பனைக் கண்ணோட்டத்தில் அதம அளவாய்ப் போய் விடலாம். எனவே, பல்வேறு காரணிகளின் அடிப்படையில் பல்வேறு உத்தம அளவுகள் கிடைக்கலாம்.[1] இவற்றை யெல்லாம் சரிக்கட்ட வேண்டிய கடினமான பொறுப்பு அமைப்பாளனுக்கு உரியது.[2]

## பிற் சேர்க்கை

### தொழிலின் ஓரிடச் செறிவு

உலகெங்கும் குறிப்பிட்ட சில பகுதிகள் குறிப்பிட்ட சில தொழில்களில் மட்டும் சிறப்பாக ஈடுபட்டிருப்பதைப் பார்க்கலாம்.

[1] மேலேயுள்ள விளக்கத்திலும் மாறும் காரணியாகிய y-இன் சராசரி உற்பத்தி மிகவுயர்ந்த அளவினை எட்டுகிற நிலையைத் தான் பார்த்தோம்.

[2] அமைப்பாளனின் இத்தப் பெரும் பணியை விளக்கும் நூல் இது: 'The Structure of Competitive Industry' by E. A. G. Robinson. (Chap. VII)

இங்கிலாந்தில் இலங்காஷயர் பகுதியில் துணித் தொழில் சிறப்பான தொழிலாயிருக்கிறது. ருஷிய நாட்டில் யூரால் பகுதியில் இரும்புத் தொழில் முதன்மையான தொழிலாக இருக்கிறது. இந்திய நாட்டில் வங்காளப் பகுதியில் சணல் தொழிலே தனியொரு தொழிலாகத் திகழ்கிறது. இவ்வாறு, குறிப்பிட்ட தொழில்கள் மட்டும் சில இடங்களில் செறிந்துகிடப்பதற்குரிய காரணங்களைத் தொன்மை மரபினர் சிந்தித்ததாகத் தெரியவில்லை. மார்ஷல் இதுபற்றி ஓரளவு சிந்தித்த போதிலும், இதுபற்றித் தனியொரு கோட்பாட்டையே 1929–இல் உருவாக்கித் தந்த பெருமை ஆல்பிரட் வெபர் (Alfred Weber) என்ற ஜெர்மானிய அறிஞர்க்கு உரியது.

கச்சாப் பொருள்கள், உழைப்பு, கடத்தற் செலவுகள் ஆகிய மூன்றுமே தொழில்கள் வட்டார வாரியாகச் சிதறுண்டு கிடப்பதற்குக் காரணங்கள். இவற்றுள், கடத்தற் செலவே அடிப்படைக் காரணி என்பார் வெபர். கச்சாப் பொருள்கள் அகப்படுமிடத்தையும் பொருள் அங்காடியையும் இணைப்பதில் தான் கடத்தற் செலவு தோன்றுகிறது. (இச் செலவு கடத்தும் பொருளின் எடையையும் தொலைவையும் பொருத்தது) இவ்விரண்டு இடங்களையும் ஒப்பிட்டு எந்த இடத்தில் (அல்லது, இரண்டுக்குமிடையே ஓரிடத்தில்) கடத்தல் வசதி வாய்ப்பு மிக்கதாகத் திகழ்கிறதோ, அந்த இடத்திலேயே தொழில்கள் நிறுவப்படும்.

இக் கடத்தற் செலவைக் கச்சாப் பொருள்கள் சில வகைகளில் கட்டுப் படுத்துகின்றன. கச்சாப் பொருள்கள் இரு வகையின. செங்கல்லும் களிமண்ணும், தண்ணீரும் போல எங்கெங்கும் கிடைப்பவை ஒரு வகை. மர வகைகளையும் கனிவளங்களையும் போல குறிப்பிட்ட இடங்களில் மட்டுமே கிடைப்பவை மற்றொரு வகை. இவ் விரண்டாவது வகைப் பொருள்களைச் சார்ந்திருக்கும் தொழில்களைக் குறிப்பிட்ட இடங்களில் தான் நிறுவ முடியும்; எனவே, இவை ஓரிடத்தில் செறிந்து கிடப்பது இயல்பு. இப் பொருள்களையும் இருவகைப் படுத்தலாம். பருத்தியும் கம்பளியும் போன்ற சில 'தூய பொருள்கள்' (Pure Materials) எனப்படுகின்றன. நிலக்கரியும் கனிவளங்களும் போன்ற சில 'எடையிழக்கும் பொருள்கள்' (Weight-losing Materials) எனப்படுகின்றன. தூய பொருள்கள் உற்பத்தியில் ஈடுபடுத்தப் பெற்றால், வினை முற்றிய பொருளில் அவற்றின் எடை அப்படியே மாறாதிருக்கும்: பஞ்சு நூலாகவும் துணியாகவும் மாறினாலும் அதன் எடை அவ்வளவாக மாறுவதில்லை. இதற்கு மாறாக இரும்புக் கனியை எடுத்துக் கொண்டால் அதன் எடையில் பெரும் பகுதி இரும்பு உற்பத்தியில் வீணாகி இறுதியில் கனியை விடக் குறைவான இரும்பே கிடைக்கிறது;

எனவே, கனிவளங்கள் பொதுவாக எடையிழக்கும் பொருள்களா கின்றன. இவ் விரண்டாவது வகைப் பொருள்களைச் சார்ந்துள்ள தொழில்களைக் கச்சாப் பொருள் அகப்படுமிடத்திலேயே நிறுவுவது இயல்பு; தொலைவிடங்களில் நிறுவினால், உற்பத்தியின் போது வீணாகப் போகிற கச்சாப் பொருள் பகுதிக்கும் கடத்தற் செலவு ஏற்படுகிறது. மாறாக, பஞ்சாலைகளை எடுத்துக் கொண்டால், அவற்றைப் பருத்தி விளையும் இடத்தில்தான் நிறுவ வேண்டும் என்றில்லை. அவ்வாறு நிறுவினால், நூல் அல்லது துணியை அங் காடிக்கு எடுத்துச் செல்ல எவ்வளவு செலவாகுமோ, அதே செலவு தான் அவ்வாலையை அங்காடியினருகே நிறுவிக் கொண்டு, பருத்தி விளையும் இடத்திலிருந்து கச்சாப் பொருள்களை வரவழைக்கவும் ஆகும். 'தூய பொருள்கள்', தொழில்களைத் தம்பால் கவர்ந்தி ழுப்பதில்லை.

உழைப்பு எவ்வாறு தொழில்கள் ஓரிடத்தில் செறிவதைக் கட்டுப்படுத்துகிறது என்பதை, இங்குப் பார்க்க வேண்டும். மேலே, கடத்தற் செலவுக் கண்ணோட்டத்தில் உத்தமமானதாகத் தோன்று கிற இடத்தில் தொழில் நிலை கொள்ளுமெனப் பார்த்தோம். இந்த இடத்தை விட்டு விலகியதொரு நிலையில் தொழில்கள் செறிந்திருக்க வேண்டுமெனில் அதற்குக் காரணம் உழைப்புச் செலவாகவே இருக்கும். கடத்தற் செலவுக் கண்ணோட்டத்தில் ஓர் இடம் விரும் பத் தக்கதா யிருந்தாலும், அதனையும் விஞ்சிய தோரளவில் வேறோ ரிடத்தில் உழைப்புச் செலவு மிகக் குறைவாயிருந்தால், பிந்திய இடத்திலேயே தொழில் நிலை கொள்ளலாம். இந்த உழைப்பின் கவர்ச்சி வேறிரு காரணிகளைப் பொருத்துள்ளது என்பார் வெபர். பொருளின் மொத்த எடையில் உழைப்புச் செலவின் வீதமும், மொத்த உற்பத்தி வினையின் போது எடுத்துச் செல்ல வேண்டிய எடையுமே இவ் விரு காரணிகள். பொருளின் மொத்த எடையில் உழைப்புச் செலவு ஒரு சிறு பகுதியாகவும், மொத்த உற்பத்தி வினையின் போது எடுத்துச் செல்ல வேண்டிய எடை மிகுதியாக வும் இருந்தால், கடத்தற் செலவுக் கண்ணோட்டம் சுட்டுகிற இடத்தை நோக்கியே தொழில் நிலைக்கும். இவ்வாறு, இவ் விரு காரணிகளுக்கும் இடையேயுள்ள விகிதமாகிய 'உழைப்புக் குணகம்' தொழிலின் ஓரிடச் செறிவை நிருணயிக்கும் தலையாய காரணியா கிறது. உழைப்புச் செலவுகள் இடத்துக்கிடம் வேறுபட்டிருக்கும் போது, கடத்தற் செலவுக் கண்ணோட்டத்தில் உத்தமமாகத் தோன்றும் இடத்திலிருந்து குறிப்பிட்ட தொழில் மாறிச் செல்வது இந்த உழைப்புக் குணகத்தின் கணியத்தின் வீதத்தில் இருக்கும் என்பார் வெபர். இந்த மாறுதல்களை இயற்றுகிற இன்னொரு காரணி தொழிலின் புறச் சிக்கன வாய்ப்புக்கள்.

வெபரின் இக் கோட்பாட்டை டென்னிசன் (Dennison), ஸார் ஜன்ட் பிளாரன்ஸ் (Sargent Florence), ஆன்ட்ரே பிரதோல் (Andrea Predohle) போன்ருேர் குறை கூறியுள்ளனர். கோட்பாட்டின் எடுகோள்களே, இவ் வாசிரியர்கள் ஏற்றுக் கொள்வதில்லை. எடுத்துக் காட்டாக, கடத்தற் செலவு கடத்த வேண்டிய இடத்தையும் தொலைவையும் மட்டுமன்றி, போக்குவரவு முறை, கடத்த வேண்டிய பொருளின் தரம், வட்டாரத்தின் நிலவியல் கூறுகள் முதலிய பல காரணிகளேப் பொருத்துள்ளது. மேலும், இக் கோட்பாடு சுட்டும் சில எடுகோள்கள் இயக்க நிலேப் பட்டவை என்பதையுங் கருத வேண்டும். எடுத்துக் காட்டாக, உழைப்புச் செலவு கால அளவில் ஒரே இடத்திலேயே மாறத் தக்கது; அங்காடிகளும் ஒரே இடத்திலேயே நிலேகொள்ளுமென எதிர்பார்க்க லாகாது. மேலும், பல இடங்களில் தொழில்கள் நிறுவப்பட சமூக அரசியல் காரணங்கள் சில உள்ளன என்பதையும் மறந்துவிட லாகாது.

வெபர் கோட்பாட்டில் குறை கண்ட ஆசிரியர்கள் வேறு சில கோட்பாடுகளேத் தர முயன்றுள்ள போதிலும் அக் கோட்பாடுகள் தொழிலின் ஓரிடச் செறிவை அளப்பதற்குரிய சில வழிமுறைகளேத் தான் தந்துள்ளன. எந்தக் கோட்பாடும் தொழில்களின் ஓரிடச் செறிவைக் கருத்தியல் முறையில் சரிநுட்பமாக விளக்கத் தக்கதாயில்லை. இந் நிலேயில், ஆசிரியர்கள், குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட தொழில்கள் நிறுவிக் கொள்வதற்குரிய சில காரணங்களேத் தொகுத்துத் தந்துள்ளதைப் பார்க்கலாம் :

### 1. கச்சாப் பொருள் வசதி

எங்கெங்கும் அகப்படாது குறிப்பிட்ட சில இடங்களில் மட்டுமே கிடைக்கிற கச்சாப் பொருள்களேச் சார்ந்துள்ள தொழில்கள் அந்தந்த இடங்களில் மட்டுமே குவிவது இயல்பு. நிலக்கரி, உலோகம், சர்க்கரைத் தொழில்கள் இவ் வகைப்படும். மேலும், 'எடையிழக்கும்' பொருள்களாயிருந்தால் தமதிடத்தை நோக்கித் தொழில்களே அப் பொருள்கள் கவர்வதியல்பு. இங்கும் நிலக்கரி, உலோகம், சர்க்கரைத் தொழில்கள் தக்க எடுத்துக் காட்டுகளாகின்றன. நம் நாட்டில் பீகாரிலும் வங்காளத்திலும் இரும்பு—எஃகுத் தொழில் செறிந்து கிடக்க இதுவே காரணம்.

### 2. ஆற்றல் வசதி

எந்திரங்களே இயக்குவதற்குரிய ஆற்றல் வசதி தரும் நிலக்கரி, மின்சாரம், எண்ணெய் முதலியவை கிடைக்கும் இடங்களிலும் தொழில்கள் செறிந்து காணப்படுகின்றன. ஜாம்ஷெட்பூரில் டாட்டா

எஃகாலை நிறுவியிருப்பதற்குக் காரணம் அங்கு நிலக்கரி கிடைப்பது தான். கோவையில் பஞ்சாலைத் தொழில் தழைக்கக் காரணம் பைக்காரா மின்திட்டம் தரும் மலிவான மின்சாரந் தான்.

3. போக்குவரவு வசதிகள்

போக்குவரவு வசதிகள் இருக்கும்போது பொருள்களைக் குறைந்த செலவில் தொலைவிடங்களுக்கும் அனுப்ப முடியும். துறைமுகப் பட்டினங்களான பம்பாயும் கல்கத்தாவும் தொழில் வளம் மண்டிக் கிடப்பதற்கு இதுவே காரணம். கல்கத்தா நகர்ப் பக்கம் சணல் கிடைக்காத போதிலும், சணல் ஏராளமாக அகப்படுகிற உள்நாட்டு இடங்களை விட்டுவிட்டு நகர்ப் புறம் சணல் ஆலைகளை நிறுவுவ தற்குக் காரணம் போக்குவரவு வசதிகளே யாகும்.

4. தொழிலாளர் வசதி

பயிற்சி பெற்ற தொழிலாளர் போதுமானபடி அகப்படும் இடங் களில் தொழில்கள் வளர்வதியல்பு. ஜாம்ஷெட்பூரில், தொடக்கத் தில் 'சண்டால்' எனப்படும் திருந்தா மரபினர் ஆயிரக் கணக்கில் வேலை செய்யக் கிடைத்தமையும் ஒரு வாய்ப்பெனச் சொல்லப்படும்.

5. முதல் வசதி

பாங்குகளும் பிற நிதி நிறுவனங்களும் இருக்கும் இடங்கள் தொழில் தலங்கள் ஆவது இயற்கை. இந்திய முதல் வளத்தின் பெரும் பகுதி பம்பாயில் முடங்கிக் கிடப்பதால் தான் அந் நகர் மாபெரும் தொழில் நகரமாகத் திகழ்கிறது. பார்சிகளும் மார்வாரி களுமாகிய பெருஞ் செல்வந்தர்கள் பம்பாய் நகரை முற்றுகையிட் டுள்ள நிலையில் இது விந்தையில்லை யல்லவா ?

6. அங்காடி வசதி

தொழில்கள் அங்காடி நோக்கிச் செறிய முற்படுவது உண்டு. பெரும்பாலும் நுகர்வுப் பொருள் தொழில்களிலும், 'தூய' பொருள் களைச் சார்ந்துள்ள தொழில்களும் இவ் வகைப் படுகின்றன. நம் நாட்டில் துறைமுக நகரங்களில் குறிப்பிட்ட தொழில்கள் செறிந்து கிடக்கக் காரணம், அவை அயல் நாட்டு அங்காடியைச் சார்ந்திருந் தமை தான். பம்பாய் பஞ்சாலைத் தொழிலும், கல்கத்தா சணல் தொழிலும் எடுத்துக் காட்டுக்கள்.

7. அரசு ஆதரவு

காப்பு வரிகள், இலவச நிலம், போன்றவற்றின் வழியாக அரசு தொழில் வளர்ச்சிக்கு உதவுவதால் சில இடங்களில் தொழில்

கள் தோன்றி வளர அது ஒரு காரணமாகிறது. டாக்காவில் மஸ்லின் தொழிலும், மூர்ஷிதாபாத்தில் பட்டுத் தொழிலும் வளர்ந்ததற்குக் காரணம், முறையே பழங்கால இந்து முகமதிய மன்னர்களின் ஆதரவு தான். இந் நாளில் மாநில அரசுகள் அங்கங்கே தொழிற் பேட்டைகளை நிறுவி, குறிப்பிட்ட இடங்களில் தொழில்கள் நிலைக்க உதவி செய்து வருவது இங்குக் கருதத் தக்கது. நாட்டின் பாதுகாப்புக் கண்ணோட்டத்திலும் சில தொழில்கள் குறிப்பிட்ட சில தலங்களில் நிறுவப் படுகின்றன. நம் நாட்டின் வட வெல்லையில் போர் மேகங்கள் குமுறியதும், போர்க் கருவிகள் தொழில்கள் தெற்கே நிறுவப்படுவதே பத்திரமானது எனக் கருதியதை இங்கே குறிப்பிடலாம்: இவ் வகையில் வளர்ந்தவைதாம் ஆவடி 'டாங்கி'த் தொழிற்சாலையும், திருச்சி துப்பாக்கித் தொழிற்சாலையும்.

8. தலத்தின் பழந் தொடர்பு

ஓர் இடத்தில் ஏதாவதொரு காரணத்தால் தொழிலொன்று தொடங்கப் பட்டு, அது வெற்றிகரமாக நடந்தேறி விட்டால், புதிதாக அத் தொழிலில் ஈடுபடுவோர், அங்குப் பல வசதிகளும் கிடைப்பதால் அவ் விடத்தையே நாடுகின்றனர்.

9. இசைவான தட்ப வெப்ப நிலை

சில தொழில்கள் குறிப்பிட்டவொரு தட்ப வெப்ப நிலையில் மட்டுமே தழைப்பவைகளா யுள்ளன. 'பிலிம்' தொழிற்சாலை உதக மண்டலத்தில் நிறுவப் பெற்றதற்கு இதுவே காரணம். பெரும்பாலும், பயிர்த் தொழில் இக் காரணியை மட்டுமே பொருத்திருக்கிறது எனலாம்.

தொழிலின் இடச் செறிவால் விளையும் நன்மை தீமைகளையும் காணலாம். தொழிலாளர் குறிப்பிட்ட தொழிலில் பயிற்சி பெற்ற நிபுணர்களாகின்றனர்; அவர்கள் பெற்ற அறிவு அவர்களுடைய பின்னோர்க்கும் வழிவழியாகச் செல்கிறது. பல துணைத் தொழில்கள் அவ் விடங்களில் தோன்றுகின்றன. இவை, முதன்மைத் தொழிலுக்கு வேண்டிய கருவிகள், கச்சாப் பொருள்கள், போக்கு வரவு வசதிகள், நிதி வசதிகள் ஆகியவற்றை அளிக்கின்றன. உப பொருள்களும் நன்கு பயன்படுத்தப் படுகின்றன. கோவை பல தொழில்கள் சிறந்த ஒரு நகரமாக விளங்குவது இதற்கோர் எடுத்துக்காட்டு. குறிப்பிட்ட இடத்துக் கென்றே தனிப் புகழ் ஏற்படுகிறது. அந்த இடத்தில் உற்பத்தியாகின்ற பொருள்களை எளிதில் விற்க முடிகிறது. ஆரணியில் உற்பத்தியாகின்ற பட்டினையும், காஞ்சி

புரத்துப் பட்டு என்று சொன்னல் விற்க முடிகிறதிலிருந்து இந்த உண்மையை உணரலாம்.

தொழிலின் ஓரிடச் செறிவிலும் தீமைகள் சில இல்லாமலில்லை. ஒரு தொழிலில் ஈடுபடுவோர் அந்தத் தொழிலை மட்டுமே நம்பியிருக்க வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. அந்தத் தொழிலுக்கு ஏதாவது நேர்ந்தால், அவ் வட்டாரத்தில் உள்ளவர் அனைவரும் வருந்த நேர்கிறது. பஞ்சாலைத் தொழிலில் அண்மையில் ஏற்பட்டுள்ள சிக்கல் கோவை வட்டம் முழுவதையும் பாதித்துள்ளதிலிருந்து இந்த உண்மையைப் புரிந்து கொள்ளலாம். மேலும், நாட்டின் பாதுகாப்புக் கண்ணோட்டத்தில் பார்த்தால், குண்டு வீச்சால் குறிப்பிட்ட தொழில் நகரங்கள் அழிந்து போக நேர்ந்தால், நாடு முழுக்க அத் தொழிலின்றி நசிந்து போக நேரும். ருஷிய நாட்டில் கடந்த போர்ப் பிற்காலத்தில் நாட்டின் கிழக்குப் பகுதிகளிலும் ஏராளமான தொழில்களை நிறுவுவதற்கு இதுவே காரணம். மேலும், இதனல் நாட்டினுள்ளே பல்வேறு வட்டாரங்களிடையே பொருளியல் ஏற்றத் தாழ்வுகள் ஏற்பட்டு, அதனல் அரசியல் சிக்கல்கள் கிளைத்து விடலாம். எனவே, தொழில்களின் இட அமைதியை ஒழுங்கு படுத்துவதில் அரசு முதன்மையானதொரு பொறுப்பு வகிக்கிறது என்று சொன்னல் அது மிகையாகாது.

# 4. உற்பத்திச் செலவுகள்

பொருள்களை உற்பத்தி செய்ய உற்பத்திக் காரணிகளைச் சேர்த்தாள வேண்டும். இக் காரணிகளோ இயல்பிலேயே அரிதானவை. எனவே, இவற்றைப் பெற வேண்டுமெனில், இவற்றின் உரிமையாளர்க்கு உரிய ஊதியம் வழங்க வேண்டும். இவ் ஊதியம் நிறுவனத்தின் உற்பத்தியின் செலவின் பாற் படுகிறது. இவ் ஊதியமே உற்பத்திச் செலவு. இவ்வாறு, கச்சாப் பொருள்களுக்கு நல்கிய விலை, சம்பளங்கள்—கூலிகள், முதலுக்குரிய வட்டி, நிலத்துக்குரிய வாரம் கட்டடங்களுக்குரிய வாடகை, எந்திரத் தொகுதியின் தேய்மானச் செலவுகள், விற்பனைச் செலவுகள், அரசுக்கு நல்கிய வரிகள், இயல்பான இலாபம் உட்பட நிருவாகம் பெற்ற ஊதியம் முதலியன உற்பத்திச் செலவினுள் அடங்கும். இவை தவிர தொக்கி நிற்கும் சில செலவுகளும் உள்ளன. நிறுவன உரிமையாளனே அதில் உழைத்தால் அதற்குரிய கூலி, நிருவகித்தால் அதற்குரிய ஊதியம், கைமுதலை முதலீடு செய்திருந்தால் அதற்குரிய வட்டி, சொந்த நிலங்களையும் கட்டடங்களையும் உற்பத்தியில் ஆண்டிருந்தால் அதற்குரிய வாரம், வாடகை இவற்றையும் உற்பத்திச் செலவில் சேர்த்தாக வேண்டும்.[1]

மேலும், உற்பத்திச் செலவு என்று சொல்லும் போது, அச் செலவு எந்த அளவு உற்பத்தியைக் குறித்து நிற்கிறது என்றும்

[1] இங்குத் தான் கணக்கன் கண்ணோட்டத்திலும், பொருளியல் கண்ணோட்டத்திலுமுள்ள 'உற்பத்திச் செலவு' என்ற சொல்லின் பொருள் வேறுபடுகிறது. கணக்கன் தெளி விளக்கமான உற்பத்திச் செலவுகளை மட்டும் 'செலவு' எனக் கொண்டு வரவில் இச் செலவு போக எஞ்சியதை இலாபம் எனக் கொள்கிறான். உற்பத்தியாளனுக்குச் சொந்தமான நிலம், உழைப்பு, முதல் ஆகியவற்றுக்குரிய வாரம், கூலி, வட்டி முதலியனவோ, அல்லது தொழில் துணிவோனுக்குரிய இயல்பான இலாபமோ செலவுக் கணக்கில் ஏறுவதில்லை. ஆனால், பொருளியலில் தெளி விளக்கமான இனங்களுடன் தொக்கி நிற்கும் இனங்களையும் கூட்டிய பின் கிடைக்கும் தொகையே உற்பத்திச் செலவு எனக் கொள்ளப் படுகிறது. எனவே, பொருளியல் இலாபமானது கணக்கன் நிறுவும் இலாபத்தை விடக் குறைவாகவே இருக்கும். கணக்கன் சுட்டுவது கைச் செலவுத் தொகையே யொழிய உற்பத்திச் செலவுத் தொகை யன்று.

தெளிவாகக் குறிப்பிட வேண்டும். ஏனெனில் உற்பத்திச் செல வானது உற்பத்தியின் அளவை யொட்டி மாறிச் செல்வது.

'உற்பத்திச் செலவு' என்ற சொல்லைப் பல ஆசிரியர்கள் பல பொருள்களில் கையாண்டு வந்துள்ளனர். இங்கு, குறிப்பாக மூன்று பொருள்களில் இச் சொல் கையாளப்பட்டு வருவதைப் பார்க்கலாம்.

## பண உற்பத்திச் செலவுகள்

உற்பத்தியினுள் அடங்கியுள்ள முயற்சியையும் இழப்புக்களையும் ஈடுகட்டும் வகையில் கொடுக்கிற பணத்தின் தொகையே—'பண உற்பத்திச் செலவுகள்' (Money Costs) எனக் குறிப்பிடப்படுகிறது. உற்பத்திக் காரணிகள் பெறும் வாரம், கூலி, வட்டி, இலாபம் ஆகியவற்றின் கூட்டுத் தொகையே பண உற்பத்திச் செலவுகள். உற்பத்திக் காரணிகளது விலை, அமைப்பின் வடிவம், நிறுவனத் தின் பருமன் ஆகியவற்றை ஒட்டியது இந்தப் பண-உற்பத்திச் செல வின் அளவு. இக் கருத்தில் தான் இச் சொல், பொதுவாக, ஆளப் பெற்று வருகிறது.

## உண்மை உற்பத்திச் செலவுகள்

பழங்கால ஆசிரியர்கள், உற்பத்திக் காரணிகளுக்குத் தருகிற பண ஊதியத்தின் உள்ளே புகுந்து அவ் ஊதியம் எதற்காகத் தரப் பெறுகிறது—அல்லது, அது எதனை அளக்கிறது—என்று ஆராயப் புகுந்தனர். ஒருவன் உற்பத்திச் செயலொன்றில் ஈடுபடும் போது, அவன் உள்ளமும் உடலும் சிறுமைப் படுகின்றன. உழைக்கும் போது உடல் சிறுக்கிறது ; முதலைத் தரும் போது அதையொட்டிய நுகர்வுத் தவிர்ப்பால் உள்ளம் அமைதி இழக்கிறது ; இறுதியாக, நட்ட ஆபத்தை ஏற்க முன்வரும் போதோ உள்ளம் உலைகிறது. எனவே, இந்த உடல், உள்ள மாறுதல்களை ஈடுகட்டும் வகையில் ஊதியமளித்தால் தான் ஒருவன் உற்பத்தியில் ஈடுபட முன்வரு வான். இவ்வாறு, 'உண்மை உற்பத்திச் செலவுகள்' (Real Costs) இந்த உடல் — உள்ள மாறுதல்கள் தாம். 'நேரடியாகவோ, மறைமுகமாகவோ ஈடுபட்டுள்ள பல்வகை உழைப்பின் மெய் வருத் தம், அவ் வுற்பத்தியில் ஆண்டுள்ள முதலுக்கு வேண்டிய நுகர்வுத் தவிர்ப்பு — அல்லது காத்திருத்தல் — ஆகியவையே' உண்மை உற்பத்திச் செலவுகள்.

இந்த விளக்கம் பல வழிகளிலும் குறை நிரம்பியதாகவே இருக் கிறது.

1. இவ் விளக்கத்தின் அடிப்படையில் பண—உற்பத்திச் செலவுக்கும், உண்மை—உற்பத்திச் செலவுக்கும் இடையே நேரடித் தொடர்பு எதனையும் நிறுவ முடியாது. குறிப்பிட்ட அலுவல் எளிதாகி விட்டால், அந்த அளவுக்கு மெய் வருத்தம் குறைவதால், கூலியும் குறைந்தாக வேண்டுமே? எட்டுக் கட்டை சுருதியில் தொண்டை புண்ணாகப் பழம் பாடலிசைக்கும் தெருப் பாடகன் குறைவாகப் பெற, குறைந்த சுருதியில் மெல்லிசை பாடும் பின்னணிப் பாடகன் ஆயிரக் கணக்கில் பெறுவதற்குக் காரணம் எது என்ற வினா இங்கு இயல்பாகவே எழுகிறது.

2. இரண்டாவதாக, உழைப்பின் உண்மை—உற்பத்திச் செலவையும், முதலின் உண்மை உற்பத்திச் செலவையும் ஒப்பிட்டு அளப்பதற்கு உரிய அளவுகோல் எதுவுமில்லை. ஒரு ரூபாய்க் கூலி ஈடுகட்டியுள்ள மெய் வருத்தமும், ஒரு ரூபாய் வட்டி ஈடுகட்டியுள்ள உள வருத்தமும் சமம் என எந்த அடிப்படையில் சொல்வது?

3. நிலத்தின் அளிப்பில் எவ்வித முயற்சியோ இழப்போ இல்லை. இதனால், நிலத்துக்குரிய வாரம் உற்பத்திச் செலவிலும், அதன் வழியாகப் பொருள் விலையிலும் சேராது எனச் சொல்ல முடியாது. நகரங்களின் முக்கியமான கடை வீதிகளில் பொருள் விலைகள் சற்று உயர்ந்திருக்கக் காரணம் அங்கெல்லாம் நில வாரமும் கடை வாடகையும் உயர்ந்திருப்பது தானே?

4. இறுதியாக, இராபின்சன் குரூஸோவின் (ஒற்றை மனிதப்) பொருளியல், அமைப்பிலும், பண்ட மாற்று அமைப்பிலும் உண்மை உற்பத்திச் செலவுகளுள்ளன; ஆனால், அங்கெல்லாம் அவற்றுக்கீடான பண உற்பத்திச் செலவைக் கணக்கிட வழியேதுமில்லை என்பது கவனிக்கத் தக்கது.

## மாற்றீட்டு உற்பத்திச் செலவுகள்

உற்பத்திக் காரணிகளின் அருமைப்பாடு பொருளாதாரத்தின் அடிப்படைச் சிக்கல். இவை அரியனவாக இருப்பது மட்டுமன்றி, மாற்று உற்பத்தித் துறைகளில் ஆளத் தக்கவையும் ஆகும். எனவே, குறிப்பிட்டதோர் உற்பத்தித் துறையில் ஆளும் போது, அதனால், மற்றொரு உற்பத்தித் துறையில் காரணிகளை ஆள இயலாது போகிறது. குறிப்பிட்ட அளவு உற்பத்திக் காரணிகளைக் கொண்டு A-ஐ அல்லது B-ஐ உற்பத்திச் செய்ய முடியுமென்றும், ஆனால், தற்போது A உற்பத்தி செய்யப்படுவதாகவும் வைத்துக் கொண்டால், அதனால் இழக்கப் பெற்ற B தான் A-இன் உற்பத்திச் செலவு

எனப்படுகிறது. இரண்டு கோட்டை நெல் தருகிற நிலத்தை மாற்றிவிட்டு இரண்டு கட்டுக் கரும்பை உற்பத்திச் செய்ய முடியுமானால், இரண்டு கட்டுக் கரும்பின் உற்பத்திச் செலவு இரண்டு கோட்டை நெல் என்றாகிறது. இவ்வாறு கருதக் காரணம் அக் கரும்பு நிலத்தை மாற்றியிட்டால் கிடைப்பது இரண்டு கோட்டை நெல்லாக இருப்பது தான். இந்த 'மாற்றீட்டு உற்பத்திச் செலவு' (Alternative Cost), 'பிற வாய்ப்பு உற்பத்திச் செலவு' (Opportunity Cost) என்றும் சொல்லப்படும். இரண்டு கட்டுக் கரும்பு தருகிற நிலத்தின் பிற வாய்ப்பு இரண்டு கோட்டை நெல்லாக இருப்பதே இதற்குக் காரணம்.

இதனை வேறொரு முறையிலும் சொல்லலாம். குறிப்பிட்டதோர் உற்பத்தித் துறையில் காரணிகள் ஆளப் பெறுவது, அவற்றால் வேறொரு துறையில் எவ்வளவு ஈட்ட முடியும் என்பதைப் பொருத்துள்ளது. குறிப்பிட்டவொரு துறையில் உற்பத்திக் காரணிகளை ஆள வேண்டுமெனில், இன்னொரு மாற்றுத் துறையில் அதனை ஆண்டால் என்ன ஊதியங் கிடைக்குமோ அதனையாவது தந்தாக வேண்டும். இவ்வாறு, குறிப்பிட்ட துறைகளில் உற்பத்திக் காரணிகள் ஈட்டுகிற ஊதியம், அவை மாற்றுத் துறைகளில் ஈட்ட முடிகிற ஊதியத்துக்குச் சமமாக முற்படும். ஒரு ஏக்கர் நிலத்தில் கோதுமை பயிரிட்டால் ரூ. 30 ஆதாயமாகக் கிடைக்குமெனில், குறைந்த அளவு அந்த ரூ. 30 அதில் சணல் பயிரிடும் போது கிடைத்தாக வேண்டும். எனவே, சணல் நிலத்தின் உற்பத்திச் செலவு அந் நிலத்தின் பிற வாய்ப்பாகிய கோதுமையைப் பயிரிடும் போது கிடைப்பதற்குச் சமம் என்றாகிறது. பிற தொழில்களில் ஆளப்படுகிற முதலுக்கு 10% வட்டி கிடைக்குமெனில், துணித் தொழிலிலும் முதலின் உற்பத்திச் செலவு 10% என்றாகிறது. பொருளாதார எம். ஏ. படித்தவன் பாங்கு ஒன்றில் ரூ. 300 சம்பளமாகப் பெற்றால், கல்லூரி விரிவுரையாளர் தொழிலில் அவன் ஈடுபடும் போது ஏற்படும் உற்பத்திச் செலவு ரூ. 300 ஆக இருக்க வேண்டும். இது போன்றே, குறிப்பிட்ட தொழிலில், தொழில் துணிவோன் பெறுகிற இலாபம், பிற தொழில்களில் அவன் எதிர்பார்க்கிற இலாபத்துக்குச் சமமாயிருக்க வேண்டும். இவ்வாறு, ஒவ்வொரு துறையிலும் உற்பத்திக் காரணிகள் பெறும் ஆதாயம் அவற்றின் பிற வாய்ப்பையே பொருத்துள்ளது.

ஹெண்டர்ஸன் (Henderson), இராபின்ஸ், வீசர், டேவன் போர்ட் (Davenport) முதலிய அறிஞர்களால் விளக்கப் பெற்ற இக் கோட்பாடு, பொருளியலின் அடிப்படைத் தத்துவமாகிய அருமைப் பாட்டை அடிப்படையாகக் கொண்டுள்ளது ; உண்மை உற்பத்திச்

செலவுக் கோட்பாட்டைப் போல உடல்—உள்ள உணர்வுகளைப் பொருத்திருக்க வில்லை. இது ஒரு சிறப்பு. சர்வாதிகார நாடுகளின் செயல் முறைகளிலும் இவ் விளக்கம் பொருந்தி நிற்கக் காணலாம்: அந் நாடுகளில் டிராக்டர்கள் செய்வதில் ஆள்வதில் குறிப்பிட்ட அளவு வளங்களைப் போர்க்கப்பல்கள் செய்வதில் ஆண்டால், போர்க் கப்பல்களின் உற்பத்திச் செலவு, அவற்றின் உற்பத்தியால் உற்பத்தி செய்ய முடியாமற் போன டிராக்டர்களுக்குச் சமம் எனச் சொல்லலாம். மேலும், இக் கோட்பாட்டின் அடிப்படையில் பல்வேறு பொருள்களின் தராதர விலையை ஆடம் ஸ்மித் போன்றோர் விளக்கி வந்தனர் என்பதும் இங்குக் கவனிக்கத் தக்கது. இவர்கள் கருத்துப்படி ஒரு நாள் உழைப்பில் ஒரு மான் அல்லது இரு முயல்களை வேட்டையாடிப் பிடிக்க முடியுமெனில் ஒரு மானின் மதிப்பு, இரு முயல்களுக்குச் சமம் ஆகும்.

இக் கோட்பாட்டிலும் ஒரு சில பிழைகளுள்ளன:

1. மாற்றுத் துறைகளில் ஆள முடியாத காரணிகள் சிலவுள்ளன. இவற்றுக்கு மாற்றீட்டு உற்பத்திச் செலவு எதுவும் இல்லை. பெரும்பாலும், நிலம் இத்தகையதாகும். கோதுமை நிலத்தில் சணலும், சணல் நிலத்தில் கோதுமையும் விளையுமா என்பது ஐயமே.

2. பணத்தால் அளக்க முடியாத பிற நலன்களை இவ் விளக்கம் கருத்தில் கொள்ளவில்லை. ஒருவனுல், தற்போதிருக்கும் அலுவலை விட மிகுதியாகப் பிறிதோர் அலுவலில் ஈட்ட முடியும். இருப்பினும் இவ் வலுவலிலுள்ள தனி ஈடுபாடு, தன்னுரிமை, வசதிகள், இட அமைதி ஆகியவற்றைக் கருத்தில் கொண்டு குறைந்த ஊதியத்துக்கே அலுவல் புரிய முன் வரலாம்; இங்கே அவன் பெறும் ஊதியம், அவனுல் பிற வாய்ப்புக்களில் ஈட்ட முடிகிறதை விடக் குறைவாகவே இருக்கும்.

3. மேலும், உற்பத்திக் காரணியின் எல்லா அலகுகளும் ஒப்பான தன்மையுள்ளவையாக இருக்கும் போது தான் இவ் விளக்கம் பொருந்துவதாகும். காரணியின் வெவ்வேறு அலகுகள் வெவ்வேறு திறமையுள்ளவையாய் இருந்தால், அவை பெறும் ஊதியம் ஒரே தொழிலில் ஒரே அளவினதாக இருக்க முடியாது.

4. இறுதியாக, இவ் விளக்கம் நிறைவுப் போட்டி நிலவும் போதே உண்மையாயிருக்கும். அந் நிலையில் தான் உற்பத்திக் காரணிகள் பல்வேறு மாற்றுத் துறைகளிடையே, மிகவுயர்ந்த

அளவு ஆதாயந் தேடிப் பெயர்ந்து செல்ல முடியும். நடைமுறையில் நிறைவுப் போட்டி நிலவாத போது, இவ் விளக்கம் பயனுடையது எனச் சொல்ல முடியாது.

## நிலைத்த உற்பத்திச் செலவுகளும் மாறும் உற்பத்திச் செலவுகளும்

உற்பத்திச் செலவுகளை 'நிலைத்த உற்பத்திச் செலவுகள் மாறும் உற்பத்திச் செலவுகள்' (Fixed Costs and Variable Costs)என இரு வகைப்படுத்துவது உண்டு. உற்பத்தி அளவு மாறும் நிலையிலும் மாருமல் நிலைத்திருக்கிற உற்பத்திச் செலவினங்கள் நிலைத்த உற்பத்திச் செலவுகள்; உற்பத்தியானது தற்காலம் நிறுத்தப்பட்டிருக்கும் நிலையிலுங் கூட இவ் வின உற்பத்திச் செலவுகளை இட்டாக வேண்டும். கடன்களுக்குரிய வட்டி, வாடகை, தேய்மான ஈட்டுச் செலவுகள், நிரந்தர ஊழியர்களுக்குரிய ஊதியம் முதலியவை இவ் வினத்துள் வருவன. இவற்றுக்கு மாருக, உற்பத்தி அளவு மாறும் போது மாறுகிற செலவினங்கள் மாறும் உற்பத்திச் செலவுகள். சாதாரணத் தொழிலாளர்க்குரிய கூலியும், எரிபொருள் உட்பட கச்சாப் பொருள்களில் இடுகிற செலவும் இவ் வினத்தைச் சார்ந்தவை. உற்பத்தி கிடையாத போது இவ் வின உற்பத்திச் செலவுகளுக்கு அவசியமில்லை. ஆனல், அந் நிலையிலுங் கூட நிலைத்த உற்பத்திச் செலவுகள் தொடரலாம்: நிறுவனம் இறுதியாகக் கலைக்கப்படும் போது தான் நிலைத்த உற்பத்திச் செலவுகள் இல்லாமல் போகின்றன.

ஒரு நிறுவனத்தின் உற்பத்தி அளவு, நிலைத்த உற்பத்திச் செலவுகளை நேரடியாகச் சார்ந்திராத காரணத்தால், இவற்றை 'மறைமுக உற்பத்திச் செலவுகள்,' 'துணை உற்பத்திச் செலவுகள்' (Supplementary Costs)என்றும் குறிப்பிடுவதுண்டு. உற்பத்தியாகிற எந்தவொரு அலகினுலும் ஏற்படுவதாக இராமல், எல்லா அலகுகளுக்கும் பொதுவானதாக, அல்லது ஒவ்வொன்றினதும் தனி உற்பத்திச் செலவுக்கு மேல் இடப்படுகிற உற்பத்திச் செலவாக இருப்பதால், இவற்றைப் 'பொது உற்பத்திச் செலவுகள்' அல்லது 'மேல் உற்பத்திச் செலவுகள்' (Overhead Costs) என்று கூறுவதுமுண்டு. இவற்றுக்கு மாருக, மாறும் உற்பத்திச் செலவுகள் நேரடி உற்பத்திச் செலவுகள், 'முதன்மை உற்பத்திச் செலவுகள்' (Prime Costs) தனி உற்பத்திச் செலவுகள் என்றெல்லாம் கூறப்படுகின்றன.

மாறும் உற்பத்திச் செலவுகளை நிலைத்த உற்பத்திச் செலவுகளிலிருந்து வேறுபடுத்திக் காட்டுவது அவ்வளவு எளிதல்ல. மாறும்

உற்பத்திச் செலவுகள் சில நேரங்களில் நிலைத்த உற்பத்திச் செலவுகள் ஆகி விடலாம். தொழிலாளர்கள் ஒப்பந்த அடிப்படையில் குறிப்பிட்ட காலத்துக்கென அமர்த்தப் பட்டால், உற்பத்தி எதுவும் இல்லாத நிலையிலுங் கூட கூலியைத் தந்தாக வேண்டும். அந் நிலையில் அது நிலைத்த உற்பத்திச் செலவினம் ஆகிறது.

இவ் வகைப்பாடு பொருளியல், பகுத்தாய்வில் முதன்மையானதோர் இடம் பெற்றுள்ளது.

எந்தவொரு பொருளது விலையும், அதன் உற்பத்திச் செலவுக்குச் சமமாக இருக்க வேண்டும் என்பது பொது நியதி. ஆனால், இந் நியதியைக் குறுங் காலத்தில் கடைப்பிடிக்க வேண்டும் என்று இல்லை. தேவை இறங்கும் போது உற்பத்தியாளர்க்கு இரு மாற்று வழிகளுள்ளன. கட்டுப்படியாகவில்லை யென நிறுவனத்தையே மூடி விடலாம் ; அல்லது, குறைந்த விலைக்குப் பொருளை விற்க முன் வரலாம். நிறுவனத்தை மூடிவிட்டால், வாடிக்கையாளர்களை இழக்க நேர்ந்து, பின்னொரு காலத்தில் அதனைத் திறந்து நடத்துவது என்பது அவ்வளவு எளிதாக இல்லாமல் போகலாம். எனவே, உற்பத்தியாளர்கள் தற்காலம் குறைந்த விலைக்கே விற்றுவர முயல்வது இயல்பு. இந்தக் குறைந்த விலையானது கச்சாப் பொருள்களில் இட்ட செலவையும் தொழிலாளர்க்கு அளித்த கூலியையும் சரிக்கட்டத் தக்கதாயிருந்தால், — அதாவது மாறும் உற்பத்திச் செலவுகளுக்குச் சமமாயிருந்தால் — உற்பத்தியாளன் தொடர்ந்து விற்க முன் வருகிறான். இவ்வாறு, குறுங்கால விலை உற்பத்திச் செலவு முழுவதையும் சரிக்கட்ட முற்படாது, மாறும் உற்பத்திச் செலவுகளை மட்டும் சரிக்கட்ட நேரலாம்.

இவ்வாறன்றி ஆகூழ் காரணமாக, உற்பத்தியாளன் குறுங் காலத்தில் பெற முடிகிற விலை மாறும் உற்பத்திச் செலவுகளை மட்டுமல்லாது, நிலைத்த உற்பத்திச் செலவுகளை முற்றிலுமோ அல்லது பகுதியளவிலோ சரிக்கட்டத் தக்கதாக அமைந்து விடலாம். இப்போது, அவன் எச்சமாக ஒரு வருவாயைப் பெறுகிறான். இந்த எச்ச வருவாய் 'போலி வாரம்' எனப்படும். இந்த வருவாயானது நிலைத்த காரணிகள் குறுங் காலத்தில் பெறுகிற வருவாய். நெடுங் காலத்தில் விலையானது இரு வகை உற்பத்திச் செலவுகளையும் ஈடு கட்ட வேண்டுமாதலால், அப்போது 'போலி வாரம்' என ஒன்று இருக்க வழியில்லை.

கூட்டு விளைபொருள்களது மதிப்பை முடிவுகட்டும் போது, இவ் வகைப்பாடு மிகவும் முக்கியமானதாகிறது. பருத்தியும் பருத்தி

விதையும் கூட்டு விளைபொருள்கள் : இரண்டும் கூட்டாக உற்பத்தி யாவதால், அவற்றின் தனித்தனி உற்பத்திச் செலவைக் கணக்கிட்டறிய முடியாது. ஆனால், பருத்தியையும் பருத்தி விதையையும் அவற்றுக்குரிய தனித்தனி அங்காடிகளுக்கு அனுப்ப வேண்டுமெனில் வேறுசில தனிச் செலவுகள் உள்ளன. பருத்தியை விதை, பதர் நீக்கித் தூயதாக்கினால் தான் அதனை அங்காடியில் விற்க முடியும். இது மாறும் உற்பத்திச் செலவினுள் வருகிற ஓரினம். பருத்தியின் விலையைப் பொருத்த வரை, குறைந்த அளவு இவ்வின உற்பத்திச் செலவையாவது அது ஈடுகட்ட வேண்டும் எனச் சொல்லலாம். இரண்டுக்கும் பொதுவான பொது உற்பத்திச் செலவு, பொருள்களது தராதரத் தேவை நெகிழ்ச்சியின் அடிப்படையில் அவற்றிடையே பகிர்ந்து கொள்ளப்படும். பொது உற்பத்திச் செலவின் பெரும் பகுதி நெகிழாத் தேவையுள்ள பொருளின் மீது சுமத்தப்படுவது இயல்பு.

எவிலின் தாமஸ் (Evylin Thomas) இந்த வகைப்பாட்டின் வேறொரு முக்கியத்துவத்தைச் சுட்டுகிறார். பருமச் சிக்கனங்களைப் பேரளவில் பெறுவதற்காக உற்பத்தியைப் பெருக்க வேண்டிய நிலை உற்பத்தியாளர்க்கு ஏற்படுவது இயல்பு. ஆனால், பெருகியுள்ள உற்பத்தி முழுதையும் உள் நாட்டில் விற்றுத் தீர்க்க வேண்டும் என்றால் பொருளின் விலை இறங்க நேரும். எனவே, எச்சமாயிருக்கிற உற்பத்தியை அயல் நாடுகளில் விற்றுத் தீர்ப்பது நல்லது. அயல் நாட்டு அங்காடியைக் கைப்பற்ற வேண்டுமெனில் விலையைக் குறைத்தாக வேண்டும். இங்கும், அயல் நாட்டு விலையை மாறும் உற்பத்திச் செலவுகளை மட்டும் ஈடுகட்டப் போதுமான மட்டத்தில் வைத்துக் கொண்டு, பொருளை அங்குத் திணிக்க உற்பத்தியாளர் முன் வருவார். இந்த அயல் நாட்டுப் போட்டியை எதிரிட வேண்டிய அந்தப் பிற நாடும், தன்னாட்டுத் தொழிலை அழிவிலிருந்து தற்காக்க வேண்டுமெனில், அதே பொருளைக் குறைந்த விலைக்கு விற்க வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. அப்போதுதான் அயல்நாட்டுப் போட்டியைத் தாக்குப் பிடித்து நிற்க முடியும். இங்கும், மாறும் உற்பத்திச் செலவுக்குத் தக்கவாறு பொருள் விலையை வைத்துக் கொண்டு, போட்டியைச் சமாளிக்க முயற்சி நிகழும். குறிப்பிட்ட காலம் வரை, இவ்வாறு, வேண்டுமென்றே குறைந்த விலைக்கு விற்றுக் கொண்டிருக்க முடியும். இறுதியில் எந்த நாட்டின் உற்பத்திச் செலவு ஒப்பீட்டடிப்படையில் குறைவாக இருக்கிறதோ அந்த நாடு தான் நிலைத்து நிற்க முடியும்.

வேறொரு நிலையிலும், பொருளின் விலை மாறும் உற்பத்திச் செலவை மட்டும் ஈடுகட்டுவதாக அமைந்துவிட வகையுண்டு. உருக்கு

ஊதுலே, மின்சார நிறுவனங்கள் போன்ற சில இடங்களில், விலைப் பிடிப்புள்ள எந்திரங்களில் இடும் நிலைத்த உற்பத்திச் செலவுகள் பெரிய அளவில் இருக்கும். இங்கும், குறுங் காலத்தில் உற்பத்தியாளர் குறைந்த விலையை ஏற்றுக்கொள்ள முன்வரலாம். ஏனெனில் அவ் விலையை ஏற்றுக் கொண்டு தொடர்ந்து உற்பத்தி செய்யத் துணியாவிட்டால், விலைப் பிடிப்புள்ள எந்திரங்கள் வீணாகப் பயன் அற்றுப் போகலாம். எனவே, வேலையின்றி யிருப்பதற்குப் பதிலாக விலையானது மாறும் உற்பத்திச் செலவுகளைச் சரிக்கட்டத் தக்கதா யிருப்பினும் அதனை ஏற்றுக் கொண்டு தொடர்ந்து தொழிலில் ஈடு படுவது வழக்கம்.[1]

இறுதியாக, மொத்த உற்பத்திச் செலவை இவ்வாறு இரு வகைப்படுத்தி ஆயும் போது, உற்பத்திச் செலவு வளைகோடுகள் U-என்னும் ஆங்கில எழுத்தின் வடிவத்தில் இருப்பதற்குரிய காரணத்தையும் புரிந்துகொள்ள முடியும். உற்பத்தி பெருகப் பெருக, மிகுதியான உற்பத்தி அலகுகளிடையே நிலைத்த உற்பத்திச் செலவானது பகிர்ந்தளிக்கப் படுகிறது. இதனால், குறிப்பிட்ட வொரு கட்டம் வரை சராசரி உற்பத்திச் செலவு குறைந்து செல்கிறது; சராசரி உற்பத்திச் செலவு வளைகோடு கீழ்நோக்கிச் செல்கிறது. ஆனால், இன்னும் தொடர்ந்து உற்பத்தி வளருமானால், குறைந்து செல்லும் சராசரி நிலைத்த உற்பத்திச் செலவுகளால் ஈடுகட்ட முடியாத அளவுக்கு மாறும் உற்பத்திச் செலவுகள் வளர்ந்து செல்கின்றன; இதனால், சராசரி உற்பத்திச் செலவு வளர்ந்து செல்ல முற்படுகிறது: சராசரி உற்பத்திச் செலவு வளைகோடு மேல் நோக்கி ஏறுகிறது. இதனை அடுத்துள்ள அட்டவணை விளக்கும்:

## சராசரி உற்பத்திச் செலவும் இறுதிநிலை உற்பத்திச் செலவும்

மொத்த உற்பத்திச் செலவை, உற்பத்தியான அலகுகள் தொகையால் வகுக்கக் கிடைப்பதுதான் சராசரி உற்பத்திச் செலவு. பொருளின் இறுதிநிலையலகின் உற்பத்திச் செலவே, இறுநிநிலை உற்பத்திச் செலவு.

இவ் விரு வகைச் செலவுகளுக்கும் இடையேயுள்ள உறவை அட்டவணையிலிருந்து அறியலாம்.

[1] நெய்வேலியில் உற்பத்தியாகும் மின்சாரத்தின் உற்பத்திச் செலவு அலகுக்கு 7·8 காசு; ஆனால் தமிழ் நாடு மின்சார வாரியத்திற்கு, அலகு 5.2 காசு விலையில் மின்சாரம் விற்கப்படுகிறது. நட்டமாயினும், இவ்வாறு விற்கப்படுவதற்குக் காரணம் உச்ச நிலையளவில் தேவைப்படும் காலத்தில் 6 மில்லியன் அலகுகளும், இதர காலங்களில் 16 லட்சம் அலகுகளும் வாங்க வாரியம் இசைந்துள்ளதுதான், இவ்வாறு எல்லாக் காலங்களிலும் வாரியம் வாங்க இசைந்திருப்பதால், குறைந்த விலைக்கேனும் அதற்கு விற்றாக வேண்டிய நிலையிலுள்ளது நெய்வேலிப் பழுப்பு நிலக்கரி நிறுவனம்.

| மாறுங் காரணி அலகுகள் | நிலைத்த காரணி அலகுகள் | மொத்த உற்பத்தி (அலகுகள்) | மொத்த மாறும் உற்பத்திச் செலவு ரூ. | மொத்த நிலைத்த உற்பத்திச் செலவு ரூ. | மொத்த உற்பத்திச் செலவு ரூ. | சராசரி மாறும் உற்பத்திச் செலவு ரூ. | சராசரி நிலைத்த உற்பத்திச் செலவு ரூ. | சராசரி உற்பத்திச் செலவு ரூ. | இறுதிநிலை உற்பத்திச் செலவு ரூ. |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 0 | 10 | 0 | 0 | 40 | 40 | - | - | - | - |
| 1 | 10 | 5 | 5 | 40 | 45 | 1.00 | 8.80 | 9.00 | 1.00 |
| 2 | 10 | 13 | 10 | 40 | 50 | 0.77 | 3.08 | 3.85 | 0.62 |
| 3 | 10 | 23 | 15 | 40 | 55 | 0.65 | 1.74 | 2.39 | 0.50 |
| 4 | 10 | 38 | 20 | 40 | 60 | 0.53 | 1.05 | 1.58 | 0.33 |
| 5 | 10 | 50 | 25 | 40 | 65 | 0 50 | 0.80 | 1.30 | 0.42 |
| 6 | 10 | 60 | 30 | 40 | 70 | 0.50 | 0.67 | 1.17 | 0.50 |
| 7 | 10 | 68 | 35 | 40 | 75 | 0.51 | 0.59 | 1.10 | 0-62 |
| 8 | 10 | 75 | 40 | 40 | 80 | 0.53 | 0.53 | 1 07 | 0.71 |
| 9 | 10 | 81 | 45 | 40 | 85 | 0.56 | 0.49 | 1.05 | 0.83 |
| 10 | 10 | 86 | 50 | 40 | 90 | 0.58 | 0.47 | 1.05 | 1.00 |
| 11 | 10 | 89 | 55 | 40 | 95 | 0.62 | 0.45 | 1.07 | 1.67 |
| 12 | 10 | 91 | 60 | 40 | 100 | 0.66 | 0.44 | 1.10 | 2.50 |
| 13 | 10 | 92 | 65 | 40 | 105 | 0.71 | 0.43 | 1.14 | 5.00 |
| 14 | 10 | 92 | 70 | 40 | 100 | 0.76 | 0.43 | 1.20 | 5.00 |

1. சராசரி உற்பத்திச் செலவு இறங்கும் போது, அதைவிடக் குறைவாக இருக்கிறது இறுதிநிலை உற்பத்திச் செலவு.

2. சராசரி உற்பத்திச் செலவு ஏறும்போது, அதைவிட மிகுதி யாக இருக்கிறது இறுதிநிலை உற்பத்திச் செலவு.

3. சராசரி உற்பத்திச் செலவு எந்த நிலையில் மிகக் குறைவாக இருக்கிறதோ, அந் நிலையில் இறுதிநிலை உற்பத்திச் செலவு அதற் குச் சமமாக முற்படுகிறது.

அடுத்துள்ள வரைபடமும் இதனையே சுட்டுகிறது. இங்கே M.C. வளைகோடு இறுதிநிலை உற்பத்திச் செலவைக் குறிப்பிடு கிறது. A.C. வளைகோடு சராசரி உற்பத்திச் செலவைக் குறிப் பிடுகிறது. P. புள்ளி குறிப்பிடும் உற்பத்திக் கட்டம் வரை சராசரி உற்பத்திச் செல்வு குறைந்து செல்ல, இறுதிநிலை உற்பத்திச் செலவு




ஒவ்வொரு உற்பத்திக் கட்டத்திலும் சராசரி உற்பத்திச் செலவை விடக் குறைவாக இருப்பதை M.C. வளைகோடு A.C. வளைகோட் டுக்குத் தாழ்வாகக் கிடப்பதிலிருந்து உணரலாம். ஆனால், அதன் பின்னர் சராசரி உற்பத்திச் செலவு வளர்ந்து செல்லும்போது, இறுதி நிலை உற்பத்திச் செலவு ஒவ்வொரு உற்பத்திக் கட்டத்திலும் சராசரி உற்பத்திச் செலவை விட மிகுதியா யிருப்பதை M. C. வளைகோடு, A.C. வளைகோட்டுக்கு உயரத்திற் கிடப்பதிலிருந்து உணரலாம். P புள்ளியில் சராசரி உற்பத்திச் செலவு மிகக் குறைந்த அளவின

தாக இருப்பதை அப் புள்ளி A.C. வளைகோட்டின் மிகத் தாழ்ந்த மட்டத்தில் இருப்பதிலிருந்து உணர்ந்து கொள்ளலாம்.

## நெடுங்கால உற்பத்திச் செலவுகள்

குறுங் காலத்தில் எந்திரத் தொகுதியானது ஒரு குறிப்பிட்ட அளவினதாக உள்ளது. எனவே, இந்த எந்திரத் தொகுதியைக் கொண்டே எந்த அளவிலும் உற்பத்தி செய்ய வேண்டும். ஆனால், நெடுங் காலத்தில் தேவை மாறுதல்களுக்குத் தக்கவாறு உற்பத்தி அமைப்பை மாற்றுவதற்கு வாய்ப்பு மிகுதி. புதியனவும் பெரியன வுமான எந்திரங்களைக் கட்டவும் நிறுவவும் முடியும். ஒவ்வோர் அளவு உற்பத்திக்கும் ஒவ்வோர் அளவு எந்திரத் தொகுதி உள்ளது.




இவற்றுள் தன்னுடைய உற்பத்தி அளவினை மிகக் குறைந்த செல வில் எந்த எந்திரத் தொகுதியில் கொண்டுவர முடியுமோ அந்த எந்திரத் தொகுதியை உற்பத்தியாளன் தேர்ந்தெடுப்பது இயல்பு.

மேலேயுள்ள படத்தில் மூன்று அளவு எந்திரத் தொகுதிகளின் உற்பத்திச் செலவுப் போக்குச் சுட்டிக் காட்டப்படுகிறது. முதல் எந்திரத் தொகுதி மிகச் சிறியது. அதன் குறுங்கால சராசரி உற்

பத்திச் செலவு SAC[1] என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அதைவிடப் பெரியது இரண்டாம் எந்திரத் தொகுதி. இதன் குறுங்காலச் சராசரி உற்பத்திச் செலவு SAC [2] என்று குறிப்பிடப் பட்டுள்ளது. அதை விடப் பெரியது மூன்றும் எந்திரத் தொகுதி. இங்கு OM வரை உற்பத்தி செய்ய முதல் எந்திரத் தொகுதியே பொருத்தமானது; அதைவிட மிகுதியாக OM [1] உற்பத்தி செய்ய இரண்டாம் எந்திரத் தொகுதியே சிறந்தது. ஏனெனில், அங்குதான் OM [1] அளவைக் குறைந்த செலவில் உற்பத்தி செய்ய வாய்ப்பிருக்கிறது.




இவ்வாறு பலப்பல எந்திரத் தொகுதிகளை ஒன்றுக் கொன்று சற்றுப் பெரியனவாகக் காட்ட முடியும் என்று வைத்துக் கொள் வோம். அடுத்த படத்தில், இத்தகைய எந்திரத் தொகுதிகளின் குறுங்காலச் சராசரி உற்பத்திச் செலவுகள் SAC என்று சுட்டப் பட்டுள்ளன. இவற்றின் மிகக் குறைந்த மட்டங்களின் தொடுகோடு களை இணைத்தால் கிடைக்கும் LAC நெடுங்காலச் சராசரி உற்பத் திச் செலவு வளைகோடு ஆகிறது. கடிதத்தை உட்கொண்டிருக்கும் உறை போல, குறுங்காலச் சராசரி உற்பத்திச் செலவு வளைகோடு களை நெடுங்காலச் சராசரி உற்பத்திச் செலவு வளைகோடு உட் கொண்டிருப்பதால், இவ்வளைகோட்டை 'உறை வளைகோடு' (Envelope Curve) என்று சொல்வதுண்டு. எந்திரத் தொகுதிகளின் குறுங்காலச் சராசரி உற்பத்திச் செலவு வளைகோடுகளின் குறிப் பிட்ட பகுதியை உட்கொண்டிருப்பதால் இதனை 'எந்திரத் தொகுதி வளைகோடு' என்றும் சொல்லலாம்.

நெடுங்காலச் சராசரி உற்பத்திச் செலவு வளைகோட்டின் வடிவ மும் முதலில் இறங்கிப் பின்னர் ஏறுவதாகவே உள்ளது. தொடக் கத்தில் கீழ்நோக்கிச் சரியக் காரணம் முதலில் பருமச் சிக்கனங்கள் தோன்றி சராசரி உற்பத்திச் செலவைக் குறைக்க வாய்ப்பிருப்பது

தான். இறுதியில், இச் சிக்கனங்களுக்கு வாய்ப்பில்லாமல் போவதால் வளைகோடு மேல்நோக்கித் திரும்பி விடுகிறது.

குறுங்காலச் சராசரி உற்பத்திச் செலவும் முதலில் இறங்கிப் பின்னர் ஏறுகிறது. இதனால், அவ் வளைகோடு ஆங்கில 'U' போல இருக்கும். நெடுங்காலச் சராசரி உற்பத்திச் செலவும் முதலில் இறங்கிப் பின்னர் ஏறிச்செல்வதால், அதன் வடிவமும் 'U' போலவே இருக்கும் என்று கருதுவது இயல்பே. ஆனால், இது பற்றிய நடைமுறை நிலையை ஆராய்ந்த அண்மைக்கால ஆசிரியர்கள், நெடுங்காலச் சராசரி உற்பத்திச் செலவு வளைகோடு ஆங்கில 'L' போல இருக்கும் என்று கூறுவர். அதாவது, அவ் வளைகோடு முதலில் கீழிறங்கி, பின்னர் குறிப்பிட்டநிலை வரை கிடைக்கோடாக இருந்து, இறுதியில் சற்று மேல்நோக்கித் திரும்பும். நெடுங்காலத்தில், குறிப்பிட்ட மட்டத்தில், மிகக் குறைந்த அளவு மாருச் செலவில், மிகுதியாக உற்பத்தி செய்ய முடியும் என்பதே இதன் பொருள். இந்த எல்லையில் எல்லா அளவு எந்திரத் தொகுதிகளுக்கும் ஒரே மிகக் குறைந்த அளவு சராசரி உற்பத்திச் செலவே இருக்கும்.

## உற்பத்திச் செலவும் அளிப்பும்

உற்பத்திச் செலவானது அளிப்பை இரு முறைகளில் கட்டுப் படுத்துகிறது. முதலில், குறிப்பிட்ட நிறுவனம் உற்பத்தி செய்கிற உற்பத்தியின் அளவை அதுதான் முடிவு கட்டுகிறது. இரண்டாவதாக, உற்பத்தியில் ஈடுபடுகிற நிறுவனங்களின் எண்ணிக்கையையும் அதுதான் கட்டுப் படுத்துகிறது. உற்பத்திச் செலவு ஏறும் போது, மொத்த உற்பத்தி குன்றுவதற்கு இரு காரணங்களைச் சுட்டலாம். ஒவ்வொரு நிறுவனமும் வருவாய் தராத அலகுகளை உற்பத்தி செய்யாது நின்று விடுகின்றன. அடுத்து, சில நிறுவனங்கள் உற்பத்தியையே நிறுத்தி விடுகின்றன. இவ்வாறு, உற்பத்திச் செலவு ஏறினால், உற்பத்தியின் இறுதிநிலை அலகும், இறுதிநிலை உற்பத்தியாளனும் அரங்கிலிருந்தே அகன்றுவிட நேர்கிறது. வேறு சொற்களில் கூறுவதானால், இறுதிநிலை அலகுகளின் உற்பத்திச் செலவு, அல்லது, இறுதிநிலை நிறுவனங்களின் உற்பத்திச் செலவு தான், அளிப்பைக் கட்டுப்படுத்துகிறது.

இங்கே பொருளின் விலைக்கும் அதன் அளிப்புக்கும் இடையே நிலவும் பொதுவான உறவைச் சுட்டலாம். தேவையின் தொடர்பாக முன்பு கண்டது போல, இங்கும் அளிப்புப் பட்டியலொன்றை இயற்றலாம்.

கீழே உள்ள பட்டியல் சுட்டுவதுபோல, உயர்ந்த விலையில் மிகுதியாகவும், குறைந்த விலையில் குறைவாகவுமே ஒரு பொருள் அளிக்கப்படும் என்பது பொது விதி. இதனையே அடுத்துள்ள வரை

| ஒரு மீட்டர் துணியின் விலை | மொத்த அளிப்பு மீட்டரில் | அளிப்புச் சூழல் மாறிய பின் மொத்த அளிப்பு—மீட்டரில் |
|---|---|---|
| ரூ. 5 | 35 | 50 |
| ,, 4 | 23 | 30 |
| ,, 3 | 11 | 23 |
| ,, 2 | 5 | 8 |

படமும் காட்டுகிறது. இங்கே SS அளிப்பு வளைகோடு மேல்நோக்கிச் சரிந்து செல்வது இந்த உண்மையையே சுட்டிக் காட்டுகிறது.




இங்கும், குறிப்பிட்ட விலையிலுள்ள அளிப்பின் அளவு, விலை தவிர வுள்ள வேறு காரணங்களால் மாறும்போது, அளிப்புச் சூழல் மாறுவதாகவும், அதனால் அளிப்பு மாறுவதாகவும் சொல்லலாம்; இதனை அட்டவணையில் மூன்றுவது பத்தி சுட்டிக் காட்டுகிறது. வரை

படத்தில் $S^1S^1$, $S^2S^2$ என்ற புதிய வளைகோடுகள் உருவாகின்றன. $S^1S^1$ வளைகோடு அளிப்பு குறைவதையும், $S^2S^2$ அளிப்பு மிகுவதையும் உணர்த்தி நிற்கின்றன.

அளிப்பு விதிக்குக் குறிப்பாக இரண்டு விதிவிலக்குகள் உள்ளன. வளர்ச்சி குன்றிய நாடுகளில், குடும்பத்தின் ஆக மொத்தத் தேவையை நிறைவு செய்யும் நோக்கமே உழைப்பவர் எண்ணிக்கையைக் கட்டுப் படுத்துகிறது. இங்கே, கூலி வீதமானது குறைவாயிருந்தால் முதியோரும் சிறியோருங்கூட உழைக்க முன்வருகின்றனர். ஆனால், கூலி வீதமானது குறிப்பிட்ட அளவு உயர்ந்து விட்டால், குடும்பத்துக்கு வேண்டிய வருமானத்தை இப்போது குறைந்த அளவு உழைப்பவர்களைக் கொண்டு ஈடுசெய்ய முடியுமாதலால் முதியோரையும் சிறியோரையும் இப்போது வேலையில் ஈடுபடுத்துவதில்லை. இங்கு, உழைப்பின் விலையாகிய கூலி வீதம் உயரும் போது, அதன் அளிப்பு குறைய நேர்கிறது.

இதுபோன்றே, குறிப்பிட்ட அளவு வருமானத்தை எதிர்காலத்தில் பெற வேண்டும் என்ற நோக்கத்தில் சேமிக்க முன்வருவோரும் வட்டி வீதம் ஏறும் போது, குறைவாகச் சேமிப்பதியல்பு. இங்கும், சேமிப்பின் விலையாகிய வட்டி வீதம் ஏறும் போது, அதன் அளிப்பு குறைய முற்படுவதைப் பார்க்கலாம்.

இங்கே, உற்பத்திச் செலவு வளைகோட்டுக்கும், அளிப்பு வளைகோட்டுக்கும் இடையேயுள்ள வேற்றுமைகளைப் புரிந்து கொள்வது நல்லது. குறிப்பிட்ட நிறுவனத்தில் வெவ்வேறு அளவில் உற்பத்தி செய்ய ஏற்படும் செலவையே உற்பத்திச் செலவு வளைகோடு சுட்டுகிறது ; அளிப்பு வளைகோடோ தொழில் முழுவதையும் சுட்டி நிற்கிறது : வெவ்வேறு விலை மட்டங்களில் எவ்வளவு அளிக்கப்படும் என்பதைச் சுட்டி நிற்கிறது. அளிப்பு விலை, உற்பத்திச் செலவைச் சார்ந்திருப்பதால், ஒவ்வோர் அளிப்பு வளைகோடும் உற்பத்திச் செலவு வளைகோடு என்றே சொல்லலாம். ஆனால், ஒவ்வோர் உற்பத்திச் செலவு வளைகோடும் அளிப்பு வளைகோடாக இருக்க வேண்டும் என்றில்லை.

### அளிப்பு நெகிழ்ச்சி

விலையில் ஏற்படும் சிறியதொரு மாறுதல் தன் வீதத்திலும் அதிகமானதொரு மாறுதலை அளிப்பின் அளவில் கொணர்ந்தால், அளிப்பு நெகிழ்ச்சியாயிருப்பதாகச் சொல்லப்படும். இதற்கெதிரியாக நிகழும்போது அளிப்பு நெகிழ்ச்சியின்றி இருப்பதாகச்

சொல்லப்படும். விலைக்குத் தக்கவாறு அளிப்புச் சரிக்கட்டிக் கொள்வதிலுள்ள எளிமையையே அளிப்பின் நெகிழ்ச்சி அளக்கிறது. உற்பத்தியாளர் முன்னுள்ள மாற்று வழிகளின் அளவு, அவர்கள் உற்பத்தி செய்யும் பொருள்களின் எண்ணிக்கை, நிறுவனத்தைத் திறப்பதிலும் மூடுவதிலும் உள்ள எளிமை, பொருளின் தன்மை ஆகியவற்றைப் பொருத்துள்ளது அளிப்பு நெகிழ்ச்சி.

## மேலும் படிக்கத்தக்க நூற்கள்


சி. வேலாயுதம் ... 'பொருளாதாரம்—I'
கேர்ன்கிராஸ் ... 'பொருளாதாரம் ஓர் அறிமுகம்'
பென்ஹாம் ... 'பொருளாதாரம்'
Alfred Marshall ... 'Principles of Economics'
E. A. G. Robinson ... 'The Structure of Competitive Industry'
Joan Robinson ... 'The Economics of Imperfect Competition'
J. S. Bain ... 'Pricing, Distribution & Employment'
G. J. Stigler ... 'The Theory of Price'
J. L. Hansen ... 'A Text-Book of Economics'

பகுதி IV

# மாற்று

'வீடு விற்று, விளைநிலம் விற்று,
ஆடு மாடுகள் அனைத்தும் விற்று,
குடிக்கும் செம்பு குழியலும் விற்று,
பாத்திரம், பண்டம், பலவும் விற்று,
தண்டை, பாத சரங்களும் விற்று,
பதக்கம், சிற்றுருப் பாம்படம் விற்று,
தாலியை விற்றுப் பீலியை விற்று...'

(கவிமணி)

# 1. மாற்றும் அங்காடி வகைகளும்

மனிதனுடைய விருப்பங்களை நிறைவேற்றுவதற்காக—அல்லது நுகர்வதற்காக — உற்பத்தி நிகழ்கிறது. மிகப் பழங் காலத்தில் உற்பத்திக்கும் நுகர்வுக்கும் இடையே நேரடித் தொடர்பிருந்தது. ஆனால், சிறப்புத் தொழில் தேர்ச்சி பெருவழக்காகியுள்ள தற்காலத்தில், நுகர்வோர் தாம் விரும்புவனவற்றைத் தாமே உற்பத்தி செய்து கொள்ளாமல் பிறரிடமிருந்து அவற்றைப் பெற்று நுகர்ந்து வருகின்றனர். எனவே, பொருளியல் செய்கைகளில் மாற்று இன்றியமையாத ஒரு பகுதி ஆகிறது.

'மாற்று' என்ற சொல் தனியொரு கருத்தில் பொருளியலில் ஆளப் பெற்று வருகிறது என்பது இங்குக் கவனிக்கத் தக்கது. இருவரிடையே செல்வம் கைமாற்றிக் கொள்ளப்படுவது தான் மாற்று. ஆனால், இந்த மாற்று தன்னிச்சையாகவும் சட்டவழிப் பட்டதாகவும் இருக்க வேண்டும். அரசுக்குத் தண்டமாகச் செல்வம் மாற்றித் தரப்படுவதோ, அல்லது திருடனொருவன் செல்வத்தைத் தன் கைக்கு மாற்றிக் கொள்வதோ மாற்று ஆகாது.

இந்த மாற்றுக்கு வழி வகைகளின் அருமைப்பாடு தான் அடிப்படை. எண்ணற்ற விருப்பங்களை நிறைவு செய்ய வரையறைக்குட்பட்டிருக்கும் வழிவகைகளைப் பயன்படுத்தும் போது தோன்றுகிற தெரிவுச் சிக்கலின் இயக்கம் மாற்றில் மிகவும் முனைப்பாகத் தோன்றுகிறது. நுகர்வோர் விருப்பத் தேர்வு பொருள்கள் மதிப்பீடு செய்வதாகிறது. இவ்வாறு, மாற்றின் மையக் கூறாகிய 'மதிப்பு' அல்லது 'விலை' பொருளியலில் மிக முக்கியப் பகுதியாகிறது.

ஒரு பொருளின் மதிப்பைப் பணத்தின் வாயிலாகச் சொல்லும் போது அது பொருளின் 'விலை' எனப்படும். 'விலை' என்பது ஒரு பொருளின் பணமதிப்பு; பணத்துக்கும் ஒரு பொருளுக்கும் இடையேயுள்ள விகிதமே விலை. ஒரு பேனா இரண்டு ரூபாய் வீதத்திலும்,

ஒரு பென்சில் அரை ரூபாய் வீதத்திலும் கிடைக்குமானல் இந்த ரூபாய் வீதங்களை 'விலை' என்று சொல்கிறோம்.

வேறொன்றை இங்கே கவனிக்க வேண்டும். விலைகள் பொதுவாக, ஏறலாம் இறங்கலாம். போர்க் காலத்தில் ஏற்படுவது போல எல்லாப் பொருள்களுடைய விலையும் ஒரு சேர ஏறலாம்; அல்லது பொருளியல் மந்த காலங்களில் ஏற்படுவது போல எல்லாப் பொருள்களுடைய விலையும் ஒரு சேர இறங்கலாம். ஆனல், எல்லாப் பொருள்களுடைய மதிப்பும், இவ்வாறு ஒரு சேர ஏறவோ இறங்கவோ செய்யாது. ஒரு பொருளின் மதிப்பு அதற்கீடாகக் கிடைக்கும் மற்றொரு பொருளின் அளவை யொட்டியது. எனவே, ஒரு பொருளின் மதிப்பு ஏறுகிறதென்றல், அடுத்ததன் மதிப்பு இறங்கித்தான் ஆக வேண்டும். முன் கண்ட எடுத்துக் காட்டில் பேனவின் மதிப்பு ஏறுகிறதென்றல், ஒரு பேனவுக்கு மாற்றக 4 பென்சிலுக்குப் பதில் 5 பென்சில் கிடைத்தாக வேண்டும்; அப்போது பென்சிலின் மதிப்பு, இயல்பாகவே நான்கிலொரு பேன என்ற படியிலிருந்து, ஐந்திலொரு பேனவாக இறங்கி விடுகிறது. இதிலிருந்து இரு பொருள்களுடைய மதிப்பு ஒரே நேரத்தில் ஏறவோ இறங்கவோ முடியாது என்பது தேற்றம்.

தொன்மை மரபினர் போற்றி வந்த தடையிலாப் பொருளியல் அமைப்பில் ஒரு மாமன்னனின் ஆற்றல் 'விலை ஏற்பாட்டு'க்கு உண்டென்ற கருத்து மிகப் பழைய கருத்து. ஒரு பொருளின் விலை தான் நுகர்வுக்கு எல்லை கட்டுகிறது; உற்பத்தியைக் கட்டுப்படுத்துகின்றது; உற்பத்திக் காரணிகளின் ஒதுக்கீட்டைத் தீர்மானிக்கின்றது. அது மட்டுமல்ல; இவ் வேற்பாட்டைத் தடையின்றிச் செயல்பட விட்டால் மக்கள் நலம் மேம்படுமென்றும் தொன்னூலாளர் கருதினர். நுகர்வோன் விருப்பத் தேர்வை விலை எதிரொலிக்கும் போது, அதற்குத் தக்கவாறு உற்பத்தியும் இணங்கி நின்று, இறுதியில் செல்வ வளங்களும் மிகச் சிறந்த முறையில் ஆள்வதற்கு வழியேற்படலாம் என்பது அவர்கள் முடிவு. இக் கருத்தை இன்று ஏற்றுக் கொள்பவர் சிலரே.[1]

எவ்வாருயினும், இன்றைய உலகில், மாற்றும் சில சிக்கல்களுக்குக் காரணமாக விளங்குகிறது என்பதை மறுக்க முடியாது. அறிவியல் துறை முன்னேற்றத்தின் உதவியால், உற்பத்திச் சிக்கலை ஓரளவு புறங் கண்டு விட்டோம். ஆனல், பெருகிக் கொண்டிருக்கும் உற்பத்தியை மாற்றுவதில்தான் சிக்கலுக்கு மேல்

[1] இதனை முன்பே 'நுகர்வோர் இறைமை' அதிகாரத்தில் கண்டுள்ளோம்.

சிக்கல். முதலாளித்துவ அமைப்பில் உற்பத்தியைக் கடலில் கொட்டுவதும், நிலத்தில் உழுது புரட்டுவதும், தீயிலிட்டுப் பொசுக்குவதும் சில நேரங்களில் தவிர்க்க இயலாதது ஆகிவிடுவதைப் பார்க்கிறோம். செய்த பொருளை விற்க முடியாத நிலை என்றால், கோளாறு உற்பத்தியாலல்ல, மாற்றில்தான் என்றாகிறது.

பொருளியல் கருத்தியலை எடுத்துக்கொண்டால், 'மாற்று'ப் பற்றிய பகுத்தாய்வில் குறிப்பிடத்தக்க முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. விலை ஓர் அளவைக் குறிப்பிடுவதால், அதனை அளவுக் கணக்கெடுக்க முடிகிறது. எனவே இது பற்றி மிகவும் நுட்பமான கணிதவியல் சார்ந்த கோட்பாடுகள் பல அண்மையில் உருவாகியுள்ளதில் வியப்பில்லை.

## அங்காடி

இருவரிடையே செல்வம் கைமாற்றிக் கொள்ளப்படுவதே மாற்று என்று சொல்லும் போது, இம் மாற்று செயல்புரியும் அங்காடியைப் பற்றி முதலில் அறிந்துகொள்ள வேண்டும். அன்றாட வழக்கில் 'அங்காடி' என்ற சொல் வாங்குவோரும் விற்போரும் கூடுகிற ஓர் இடத்தைச் சுட்டி நிற்கிறது. ஆனால், பொருளியலில் இச் சொல்லை ஆளும்போது எந்தவொரு இடத்தையும் குறிப்பிடவில்லை. நெருங்கிய தொழில்வகைத் தொடர்பு கொண்டு, குறிப்பிட்ட பொருள் என்ன விலைக்கு விற்கிறது என்பதை நன்கறிந்திருக்கிற மக்கள் தொகுதியொன்றையே அங்காடி குறிப்பதாக ஆசிரியர்கள் சிலர் கூறுவர். குறிப்பிட்டவொரு பொருளின் விலை சமமாகும் வகையில் வாங்குவோரும் விற்போரும் தடையின்றிப் போட்டியிட்டுக் கொண்டிருக்கும் ஒரு வட்டாரத்தையோ, நிலப்பரப்பையோ அங்காடி குறிப்பதாக வேறு சில ஆசிரியர்கள் கூறுவர். இவர்கள் இரு சாராரும் கூறுகிற அடிப்படையுண்மைகளை ஏற்றுக்கொண்டு 'அங்காடி' கீழ் வருவன அனைத்தையுங் கொண்டிருப்பதாக முடிவு கட்டலாம்.

முதலில், அங்காடியில் கைமாறுகிற ஏதாவதொரு பொருள் (அல்லது, பணி) இருக்க வேண்டும். இப் பொருள் நுகர் பொருளாகவோ, உற்பத்திக் காரணியாகவோ கூட இருக்கலாம். இரண்டாவதாக, இப்பொருளுக்கு வாங்குவோரும் விற்போரும் இருக்க வேண்டும். மூன்றாவதாக, இவ்விரு சாரார்க்குமிடையே மிக நெருங்கிய தொடர்பிருக்கவேண்டும். நான்காவதாக இத்தொடர்புக்கு ஒரு நிலவெல்லை இருக்கலாம். இவ்வெல்லை நான்கு சுவர்களுக்குள்ளல்ல; வட்டார அளவினதாகவோ, உலகளாவியதாகவோ கூட இருக்கலாம். இறுதியாக, அங்காடி எல்லைக்குள் இப் பொருளுக்கு ஒரே

வொரு விலேதான் இருக்க முடியும். எனவே, உலகளாவிய அங்காடி என்று சொல்லும்போது, குறிப்பிட்ட பொருளுக்கு உலகெங்கும் ஒரே நிலே நிலவுவதாகவும், நான்கு சுவர்களுக்குள் ஒன்றுக்கு மேற்பட்ட விலேகள் நிலவினுல், அங்கு ஒன்றுக்கு மேற்பட்ட அங்காடிகள் நிலவுகின்றன என்றும் கொள்ள வேண்டும். இவ்வாறெனில் அங்காடியின் பரப்பல்ல, நிலவும் விலேயும் அவ் விலேக்குக் காரணமான விற்போர் வாங்குவோர் தொடர்புமே அங்காடியில் செயல்படும் மிக முக்கியமான சக்திகள் என்ருகின்றன.

இந்த விற்போர் வாங்குவோர் தொடர்பு எல்லா இடங்களிலும் ஒரே வகையினதாக இருக்கவேண்டும் என்றில்லே. எனவே, இத்தொடர்பின் இயல்பை அடிப்படையாகக் கொண்டு அங்காடிகளில் பல வகைகளே ஆசிரியர்கள் பகுத்துக் காட்டிவிடுகின்றனர்.

வாங்குவோர் விற்போரிடையே நிறைவுப் போட்டித் தொடர்பொன்றே நிலவும்—அல்லது, நிலவ வேண்டும்—எனக் கொண்டு 'நிறைவு அங்காடி' என்ற கருத்தினேத் தொன்மை மரபினர் விளக்கி வந்தனர். இந்தப் பொது வழக்குக்கு விதிவிலக்கு என்ற முறையில், போட்டியே நிலவாத அங்காடி ஒன்றைப்பற்றியும் சிந்தித்து அதனே 'விற்பனே முற்றுரிமை' அல்லது 'சர்வாதீனம்' என்ற பெயரில் அவர்கள் பின் மரபினர் சுட்டி வந்தனர். மார்ஷலுக்குப் பின் வந்த இக்கால ஆசிரியர்களோ நிறைவுப் போட்டியும் விற்பனே முற்றுரிமையும் வெறும் ஏட்டுச் சுரைக்காய்களே எனக்காட்டி, நடைமுறையில் இவ் விரண்டுங் கலந்த ஒரு வகைத் தொடர்பே நிலவுவதாகச் சுட்டிக்காட்டி, அதனே நிறைகுறைப் போட்டி நிலவும் 'நிறைகுறை' அங்காடி என்று அழைக்கலாயினர். இம் மூன்று வகை அங்காடிகளேயும் இனித் தனித்தனியே ஆராயலாம்:

### நிறைவுப் போட்டி

போட்டி நிறைவுடன் நிகழ்வதென்பது இரு நிலேகளில் மட்டுமே இயலும் என்பார் மீட் (Meade) [1]

1. உற்பத்திக் காரணிகள் மிகவுயர்ந்த ஊதியத்தைத் தேடி ஓர் அலுவலிலிருந்து மற்ருேர் அலுவலுக்குப் பெயர்ந்து செல்லத் தடையேதும் இருத்தலாகாது.

[1] 'An Introduction to Economic Analysis and Policy' by J. E. Meade.

2. தனியொரு வாங்குவோனோ விற்போனோ, தன்னுடைய சொந்த முயற்சியால் பொருளின் விலையைக் குறிப்பிடத்தக்க அளவு மாற்றிவிட இயல்கிற நிலை இருத்தலாகாது.

முதலாவது வரையறையின்படி நிலம், உழைப்பு, முதல், அமைப்பு ஆகியவை குறைந்த ஊதியமே தருகிற ஒரு தொழிலிலிருந்து பெரிய அளவில் ஊதியந்தருகிற மற்றொரு தொழிலுக்குப் பெயர்ந்து செல்லத் தடையேதும் இருத்தலாகாது என்றுகிறது. குறிப்பிட்ட தொழிலினுள் புகுவதற்கும், அங்கிருந்து வெளியேறுவதற்கும் தடையேதுமில்லை என்பதே இதன் பொருள்.

இரண்டாவது வரையறை பின்வரும் சூழ்நிலைகளில் தான் செயல்பட முடியும்.

அ. வாங்குவோரும் விற்போரும் எண்ணற்றிருக்க வேண்டும். வாங்குவோர் எண்ணற்றபடியிருந்தால் அவர்களில் தனியொருவன் பொருளை வாங்குவது பற்றித் தனது முடிவை மாற்றுவதால் (அதாவது முன்னைவிடக் கூடுதலாகவோ குறைவாகவோ வாங்க முன் வந்தால்) பொருளின் விலை மாறிவிடாது. இதுபோன்றே விற்போரும் எண்ணற்றபடி இருந்தால், அவர்களில் தனியொருவன் பொருளை விற்பது பற்றிய தனது முடிவை மாற்றுவதால் (அதாவது முன்னைவிடக் கூடுதலாகவோ குறைவாகவோ விற்க முன் வருவதால்) பொருளின் விலை மாறிவிடாது. கடல் நீரிலுள்ள ஒரு துளியின் நிலையிலேயே இந்த விற்போரும் வாங்குவோரும் உள்ளனர்.

ஆ. விற்பவரெல்லாரும் ஒப்பான தன்மையுள்ள பொருளையே விற்க வேண்டும். இந் நிலையில் விற்போரிடையே வாங்குவோர் பேதங் காட்ட வேண்டியதில்லை. எந்த விற்பனையாளனிடம் வாங்கினாலும் பலன் ஒன்றுதான்.

இ. அங்காடியில் நிலவும் விலையை வாங்குவோரும் விற்போரும் நன்கு தெரிந்திருக்க வேண்டும். விற்போர் பலரும் விதிக்கிற விலையை வாங்குவோர் நன்கு தெரிந்திருப்பதோடு, மிகக் குறைந்த விலையில் வாங்கவே அவர்கள் முன்வரவேண்டும்.

ஈ. இவற்றால் ஒரே விலை நிலவுவது நிறைவுப் போட்டியின் மிக முக்கியமான இயல்பாகிறது. தனது அளிப்பைக் கட்டுப்படுத்துவதால், தனியொரு விற்போனால் விலையை ஏற்றிவிட முடியாது. ஏனெனில் குறைந்த விலைக்குப் பிற விற்போர் விற்றுக்கொண்டிருக்கின்றனர். உற்பத்தியைக் கட்டுப்படுத்தியவனது மொத்த உற்பத்தி ஆக மொத்த அளிப்பின் மிகமிகச் சிறிய பகுதியேயாதலால், அந்தக்,

கட்டுப்பாடு அளிப்பைத் தாக்கி, அதன் வழியாக விலையையும் தாக்கத் தக்கதாயில்லை. இதுபோன்றே தனியோரு விற்பனையாளன் தனது உற்பத்தியைப் பெருக்குவதால், ஆகமொத்த அளிப்பு மாருத நிலையில் விலையும் மாறிவிட வழியில்லை; இதன் பொருள் தனியொரு விற்பனையாளனால் நடப்பு விலையில் எவ்வளவும் விற்கமுடியும் என்பதே: மிகுதியாக விற்பதற்குத் தனியொரு விற்பனையாளன் தன் விற்பனை விலையைக் குறைக்க வேண்டும் என்றில்லை. அங்காடியில் முடிவாகியுள்ள விலையை ஏற்றுக்கொண்டு, அதற்குத் தக்கவாறு தன்னுடைய செய்கைகளை வகுத்துக்கொள்ள வேண்டிய கடமையே நிறைவுப்போட்டியில் விற்பனையாளனுக்கு உரியது.

## விற்பனை முற்றுரிமை

விற்பனையில் போட்டியே இல்லாத நிலைதான் 'முற்றுரிமை'. அளிப்பு முழுதும் தனியொருவனின் கட்டுப்பாட்டின் கீழ் இருப்பதையே முற்றுரிமை சுட்டிக்காட்டுகிறது. முற்றுரிமையாளன் உற்பத்தி செய்கிற பொருளுக்கு மாற்றுப் பொருள்களே இருக்கமுடியாது. போட்டியில்லாக் காரணத்தால், வேறெவரும் தொழிலில் புக முடியாத நிலையில், உற்பத்திக் காரணிகளின் அளிப்பும்கூட அவனது கட்டுப்பாட்டின் கீழ் வரலாம். எனவே, முற்றுரிமையில், விற்பனையாளனுக்கு உற்பத்தியின்மீதும் விலையின் மீதும் முற்றுரிமை இருப்பதியற்கை.

இந்த முற்றுரிமை இயற்கையிலேயே ஏற்பட்டுவிடலாம்; அல்லது செயற்கையாகவும் இருக்கலாம். சில நாடுகள், குறிப்பிட்ட கனிவளங்களை இயற்கையின் அருட்கொடையாகப் பெற்று, அவற்றின் அளிப்பில் முற்றுரிமை பெற்றுவிடலாம். தென்னுப்பிரிக்கா வைரத்திலும், இந்தியா—பங்களாதேசம் சணலிலும், மலேசியா இயற்கை ரப்பரிலும் இவ்வாறு முற்றுரிமை பெற்றுள்ளன. செயற்கையில் தோன்றும் முற்றுரிமைகளில் சில சமூகத்தால் தோற்றுவிக்கப்படுகின்றன; மற்றுஞ் சில விற்பனையாளர்களே தோற்றுவித்துக் கொள்பவை. சமூக நலன் கருதிச் சில தொழில்களில் போட்டியைத் தடை செய்தாகவேண்டும். மின்சாரம் வழங்குவது, தொலைபேசி இணைப்பைத் தருவது, குழாய் வழி நீர் அளிப்பது போன்றவற்றில் போட்டி இருந்தால், அரிதான வளங்கள் பாழாகுவதுதான் மிஞ்சும். எனவே, இங்குச் சில முற்றுரிமைகள் தோன்றுவதை, சமூகத்தின் சார்பில் அரசு ஊக்குவிக்கிறது. மற்றுஞ் சில இடங்களில், உற்பத்தித் திறன் கண்ணோட்டத்திலும் அரசு, இந்த முற்றுரிமையை வழங்கி வருகிறது. புத்தாக்கங்களைப் பயன்படுத்துவதற்குரிய 'பேட்டன்ட்' (Patent) உரிமைகள், புத்தகப் பதிப்புரிமைகள் போன்றவை

இவ் வகைப்படும். தம்மிடையே போட்டியைத் தவிர்க்கும் நோக்கத்தில், போட்டியிடும் நிறுவனங்கள், தாமாகவே இணைந்து கொண்டு முற்றுரிமையைப் பெற்று விடுகின்றன. நம் நாட்டில், 'அசோஸியேட்டட் சிமிண்ட் கம்பெனி' என்ற நிறுவனமானது சில சிமிண்ட் கம்பெனிகள் தம்மிடையே போட்டியை விலக்குவதற்காகக் கூடிச் சேர்ந்து கொண்டு நிறுவிய ஓர் அமைப்பாகும்.

### நிறைகுறைப் போட்டி

மார்ஷலுக்குப் பின்வந்த ஆசிரியர்கள் நிறைவுப் போட்டியும் முற்றுரிமையும் முற்றிலும் கற்பித நிலைகளே என்ற முடிவுக்கு வந்தனர். நிறைவுப் போட்டியை எடுத்துக் கொண்டால், பெரும்பாலும், அது நடைமுறையில் நிலவவில்லை. உற்பத்திக் காரணிகள் மிக உயர்ந்த ஊதியத்தைத் தேடிப் பெயர்ந்து செல்வதை இயலாததாக்கும் வகையில் வேலை வரையறைகள், முதலீட்டுக் கட்டுப்பாடுகள் தொழில் ஒருங்குச் சட்டங்கள் உலகெங்கும் உள்ளன. விற்போர் வழங்கும் பொருள்களும் ஒப்பான தன்மையுள்ளவையல்ல. வர்த்தகக் குறிகளாலும் விளம்பரங்களாலும் அவை வேறுபடுத்திக் காட்டப்படுகின்றன. அங்காடியில் முடிவாகியுள்ள விலையையும் வாங்குவோர் நன்கு தெரிந்தவர்களாய் இல்லை; அந்த அளவுக்கு அவர்கள் அக்கறை எடுப்பதும் இல்லை. எனவே, நடைமுறையில் நிறைவுப் போட்டி நிலவவில்லை. இதுபோன்றே தனியொரு விற்போன் அளிப்பைக் கட்டுப்படுத்தும் நிலையும் வழக்கத்திலில்லை. இவ்வாறு நடைமுறையில் நிலவுவது நிறைகுறைப் போட்டியே.

நிறைகுறைப் போட்டியில் விற்பனையாளர் எண்ணிக்கை மிகுதியாய் இருக்கும். ஆதலால், அவர்களிடையே போட்டி நிலவுலாம். ஆனால், ஒவ்வொருவரும் விற்கிற பொருளானது வர்த்தகக் குறிகளாலும் விளம்பரங்களாலும் வாங்குவோர் முன் வேறுபடுத்திக் காட்டப்படுகிறது. இதன் கருத்து, விற்பனையாகும் பொருள்கள் நிறைவான பதிலீட்டுப் பொருள்களல்ல என்பதுதான். ஒவ்வொருவனும் வேறுபடுத்தப்பட்ட பொருளை விற்பதால் அந்த அளவுக்கு ஒவ்வொருவனும் முற்றுரிமை ஆற்றல் உள்ளவனாகவும் இருக்கிறான். எனவே, உண்மையில் போட்டியானது முற்றுரிமையாளர்களிடையே நிகழ்கிறது. இதனை முற்றுரிமைப் போட்டி எனச்சொல்வது இதுபற்றியே. முற்றுரிமை ஆற்றல் ஓரளவேனும் இருப்பதால், விற்பனையாளர் விலையை ஓரளவேனும் கட்டுப்படுத்த முடிகிற நிலையிலுள்ளனர். நடைமுறையில் இவ்வகையே தொழிலுலகில் நிலவுகிறது.[1]

[1] அங்காடியில் விற்போர் எண்ணிக்கை இரண்டாக இருந்தால் அந்நிலையை 'இருவர் விற்பனை' (Duopoly) என்றும், சிலவராயிருந்தால் 'சிலவர் விற்பனை' (Oligopoly) என்றும் சொல்லலாம்.

# 2. விலை நிருணயம் I

ஒரு பொருளின் மதிப்பு எவ்வாறு முடிவாகிறது என்பதை மிகப் பழங் காலந்தொட்டே ஆசிரியர்கள் சிந்தித்து வருகின்றனர். ஆடம் ஸ்மித், ரிக்கார்டோ போன்ற தொன்மை மரபினர் ஒரு பொருளின் மதிப்பு அதில் செலவிடப்பட்டுள்ள உழைப்பைப் பொருத்துள்ளது என்ற கருத்தை வலியுறுத்தி வந்தனர். பொதுவுடைமைக் கோட்பாட்டின் தந்தையாகிய காரல் மார்க்ஸ் இந்தக் கோட்பாட்டை மெருகிட்டளித்த பெருமைக் குரியவர்.

இக் கோட்பாட்டின் அடிப்படைக் கருத்துக்கள் இரண்டெனலாம்: (1) உழைப்பே மதிப்பின் தோற்றுவாய். பொருள்களின் உற்பத்தியில் மனித உழைப்புச் செலவிடப் பெற்றுள்ளதால் தான் பொருள்கள் மதிப்பிடப்படுகின்றன.[1] இயற்கை தருபவையனைத்தும் இலவசப் பொருள்களாக இருப்பதற்குக் காரணம், அவை மனித உழைப்பால் தோற்றுவிக்கப் படாமைதான். (2) உழைப்பே மதிப்பளவையுமாகும். அதாவது, பொருள்களின் தராதர மதிப்பு அவற்றில் செலவிட்டுள்ள உழைப்பைப் பொருத்திருக்கிறது. ஆடம் ஸ்மித் ஓர் எடுத்துக்காட்டின் துணை கொண்டு இதனை விளக்குவார். வேடர் சமுதாயமொன்றில் ஒரு நாள் உழைப்பைக் கொண்டு ஒரு மானையோ அல்லது இரண்டு முயல்களையோ பிடிக்க முடியுமெனக் கொண்டால், ஒரு மான் இரண்டு முயல்களுக்குச் சமம் என்ற வீதத்தில் மாற்று நடக்கும்.

[1] ரூ. 5 இரும்பு, லாடமாகும்போது அதன் மதிப்பு ரூ. 10.50 ஆகவும், ஊசியாகும்போது ரூ. 3585 ஆகவும், எடை நுண்ணளவைப் பொறியாகும்போது ரூ.2,50,000 ஆகவும், கடிகாரத்தின் சுருள் வில்லாகும்போது பல்லாயிரம் ரூபாய்களாகவும் வளருமென ரிப்லே (Repley) என்பார் தமது கேலிப் படமொன்றில் வரைந்து காட்டிய உண்மை இங்குச் சிந்திக்கத் தக்கது.

தற்கால ஆசிரியர்கள் இக் கோட்பாட்டை ஏற்றுக் கொள்வதில்லை: ஒரு பொருளின் உற்பத்திக்கு உழைப்பு மட்டும் காரணமெனச் சொல்வது சரியல்ல; உழைப்புத் தவிர வேறு சில காரணிகளும் உள்ளன. 'உழைப்பு' மதிப்பளவையாகப் பணியாற்றுவதிலும் சிக்கலுண்டு. உடலுழைப்பு, மன உழைப்பு, தேர்ச்சி பெற்ற உழைப்பு, தேர்ச்சி பெறாத உழைப்பு என உழைப்பிலேயே பல வகை உள்ளன. இவற்றுள் எதனைப் பொது அளவையாக ஆள்வது என்பதுதான் சிக்கல். மேலும், பிழைபடச் செலவிட்ட உழைப்பின் விளைவுக்கு மதிப்பில்லாது போவதிலிருந்து, உழைப்பனைத்தும் மதிப்பை உண்டுபண்ணும் எனக் கருத வழியில்லை என்றுகிறது: காலுக்குச் சேராத சோடிச் செருப்புக்கள் எடுத்துக்காட்டு. அடுத்து, குறைந்த உழைப்பே செலவாகியுள்ள, ஆனால், மிகவும் அரியனவாயுள்ள (வைரங்கள் போன்ற) பொருள்களின் உயர்ந்த மதிப்பையும் இக் கோட்பாடு கொண்டு விளக்க முடியாது. குறிப்பிட்ட அளவு உழைப்பால் ஏற்கனவே உருவாகியுள்ள ஒரு பொருளின் மதிப்பு கால அளவில் மாறுவதற்கும் இக் கோட்பாடு விளக்கந் தருவதில்லை: அறுவடைக்கு முன்னரும், பின்னரும் நெல்லின் விலை ஏறியிறங்குவதற்குரிய காரணத்தை இக் கோட்பாட்டிலிருந்து அறிய முடியாது! இதுபோன்றே, பெண்கள் தமது நகையை அழித்தழித்துச் செய்யும் போது, அதில் அதிகமதிகம் உழைப்புச் செலவிடப் பெற்றுள்ளபோதிலும் அதற்குத் தக்கவாறு அதன் மதிப்பு மிகுதியாக இராததில் இருந்தும் உழைப்புக் கோட்பாட்டின் பிழையை உணரமுடியும். இவ்வாறு சிந்திக்கும் போது, இக் கோட்பாட்டின் மிக முக்கியமான குறைபாடு, தேவைச் சூழலை இது ஒரேயடியாகப் புறக்கணித்து விட்டமை தான் என்று அறியலாம்.

இந் நிலையில், மார்க்ஸுக்குப் பின்வந்த ஆசிரியர்கள் வேறொரு கோட்பாட்டைத் தர முற்பட்டனர். உழைப்பு மட்டுமல்ல, முதலும் அமைப்புங்கூட மதிப்பைத் தோற்றுவிக்கின்றன என்பது இவர்கள் கருத்து. ஆடம் ஸ்மித்தே சில இடங்களில் இக் கருத்தை ஆதரிப்பதாகத் தோன்றுகிறது. ஸீனியர், உழைப்பு மட்டுமல்ல, நுகர்வுத் தவிர்ப்பும் உற்பத்திக்குக் காரணமாகும் என்றார். பின்னால் வந்த மில் உழைப்பும் நுகர்வுத் தவிர்ப்பும், நட்ட ஆபத்து ஏற்புங்கூட மதிப்புக்குத் தோற்றுவாயாக விளங்குகிறது என்றார். இவ்வாறு, இப் பேராசிரியர்கள் கருத்துப்படி ஒரு பொருளின் மதிப்பு அதன் உற்பத்திச் செலவால் நிருணயிக்கப்படுவதாகிறது. இக் கருத்துக்கும் உழைப்புக் கோட்டுக்கும்அடிப்படையில் வேற்றுமையில்லை; உழைப்புத் தவிரப் பிற காரணிகளும் உற்பத்திச் செலவைக் கணக்கிடுவதில் கருதப்படுவதுதான் ஒரே வேறுபாடு.

முந்திய கோட்பாட்டின் அடிப்படைக் குறைபாடுகள், இயல்பாகவே, இதற்கும் பொருந்துகின்றன. பொருளின் மதிப்பு அதன் உற்பத்திச் செலவுக்குச் சமம் என்று சொல்லும்போது, அவ்வுற்பத்திச் செலவை முடிவு செய்யும் புதிய சிக்கல் அங்கே தொடர்கிறது; பருத்தி—பருத்தி விதை போன்ற கூட்டு விளை பொருள்கள் ஒவ்வொன்றினதும் உற்பத்திச் செலவைப் பிரித்தறிவது அவ்வளவு எளிதல்ல. உற்பத்திச் செலவு ஒரே அளவினதாக இருக்கலாம். ஆனால், அவற்றின் மதிப்பு வேறுபட்டிருக்கும்; பழைய —புதிய நாளிதழ்கள் இதற்கோர் எடுத்துக்காட்டு. இதன் காரணத்தையும் இக் கோட்பாடு விளக்கும் நிலையிலில்லை. இதுபோன்றே, ஒரே மதிப்புள்ள இரு பொருள்களது உற்பத்திச் செலவு வெவ்வேறான தாகவும் இருக்கலாம்; குறிப்பிட்ட செய்தியைக்கொண்டு குமரியிலிருந்து தில்லி செல்லும் அஞ்சல் அட்டையினதும் சென்னை செல்லும் அஞ்சல் அட்டையினதும் விலை ஒன்றே : ஆனால், இரண்டையும் வெவ்வேறிடங்களில் சேர்ப்பதற்குரிய செலவு கூடுதல் குறைவாகவே இருக்கிறது. மேலும், குறுங் காலத்தில் ஒரு பொருளின் மதிப்பு, அதன் உற்பத்திச் செலவுக்குச் சமமாயிருக்க வேண்டும் என்றில்லை. இவ்வாறு, இக் கோட்பாட்டின் அடிப்படைக் கோளாறும், அது தேவைச் சூழலைப் புறக்கணித்து விட்டமை தான்.

இக் கட்டத்தில், ஜெவான்ஸ் போன்ற ஆசிரியர்கள், பொருளுக்குப் பயன்பாடு இருப்பதால்தான் அதற்கு மதிப்பு இருக்கிறது என்றும், எனவே ஒரு பொருளின் மதிப்பு அதன் பயன்பாட்டுக்குச் சமமாயிருக்கும் என்றும் பயன்பாட்டுக் கோட்பாடொன்றை உருவாக்கினர். இக் கோட்பாடு உற்பத்திச் செலவுக் கோட்பாட்டிற்கு எதிரிடையான தெனலாம். புதிய கோட்பாடு பயன்பாட்டையும் அதன் தொடர்பான தேவையையும் வலியுறுத்துகிறதெனில், தொடர்பான அளிப்பையும் வலியுறுத்துகிறது எனலாம்.

இப் புதிய கருத்தினரும், தொடக்கத்தில், பயன்பாட்டுக்கு அளவு மீறிய சிறப்பு வழங்கிப் பொருளின் அளிப்பை ஒரேயடியாகப் புறக்கணித்து விட்ட தவறுக்கு ஆளாகியிருந்தனர். அந் நிலையில் அவர்களால் பயன்பாடுமிக்குடைய காற்று, தண்ணீர் போன்ற பொருள்கள் மாற்றுமதிப்பு இல்லாதிருக்கக் காரணம் என்ன என விளக்க முடியவில்லை. ஆனால், பிற்கால ஆசிரியர்கள் இறுதி நிலைக் கோட்பாட்டை ஆண்டு இத் தவறினைத் திருத்த முற்பட்டனர். ஒரு பொருளின் மதிப்பு அதன் இறுதி நிலைப் பயன்பாட்டுக்குச் சமமாயிருக்கும் எனச் சொல்லும்போது, மறைமுகமாகப் பொருளின் அளிப்பைக் கருத்தில் கொண்டவர்களாகிறோம். பொருளின் இறுதி நிலைப் பயன்பாடு அதன் அளிப்பைச் சார்ந்ததல்லவா ? அளிப்பு

மிகுதியாக இருந்தால், இறுதிநிலைப் பயன்பாடு குறைவாக இருக்கும் என்பது குறைந்து செல் பயன்பாட்டு விதி கூறும் அடிப்படை உண்மை. எனவே, பொருளின் மதிப்பு அதன் இறுதிநிலைப் பயன்பாட்டைச் சார்ந்தது எனச் சொல்லும் போது காற்று, தண்ணீர் போன்ற இலவசப் பொருள்களின் அளிப்பு எச்சமாக இருப்பதால், அவற்றின் இறுதிநிலைப் பயன்பாடு இலதாகி, அதனால் மாற்று மதிப்பும் இல்லாதாகி விடுகிறது என விளக்க முடிகிறது.

இந்தச் சூழ்நிலையில் தான் மார்ஷல், மதிப்புப் பற்றிய தமது கருத்தைத் தமக்கே உரிய சமரச நோக்கில் விளக்க முன் வந்தார். பயன்பாட்டுக் கோட்பாட்டில் மார்ஷலுக்கு எவ்வளவு பற்றுதலிருந்ததோ, அதே அளவு ஆர்வம் தொன்மை மரபினரின் உற்பத்திச் செலவுக் கோட்பாட்டிலும் அன்னாருக்கு இருந்தது. எனவே, முன்னோர் கோட்பாடுகளை ஒருங்கிணைக்கும் முயற்சியில் அவர் ஈடுபட்டு, 'இரட்டைக் கோட்பாடு' ஒன்றை உருவாக்கி அருளினார். தேவை, அளிப்பு இரண்டும் ஒரு பொருளின் மதிப்பை முடிவு செய்கின்றன என்பது அவரது கோட்பாட்டின் அடிப்படை.

பொருள்களின் இயல்பைப் பொருத்தது தேவையினதும் அளிப்பினதும் இயக்கம். பொருள்களை மூவகைப்படுத்தி, இவ் வுண்மையை விளக்கியுள்ளார் மார்ஷல்.

முதலில், மறுபடியும் உருவாக்க முடியாத பொருள்களைப் பொருத்தவரை, அவற்றின் மதிப்பு முழுக்க முழுக்கத் தேவையையே சார்ந்துள்ளது. உற்பத்திச் செலவுக்கு இங்கே வேலையே இல்லை எனலாம். மகாகவி பாரதியின் கையெழுத்துப் படிவமொன்றின் தற்கால மதிப்பு அதன் தேவையையே பொருத்து உள்ளது. தேவை உயர்ந்தால் மதிப்பும் உயரும். [1]

இரண்டாவதாகத் தடையின்றி மறுபடியும் உருவாக்க இயல்கிற பொருள்களை எடுத்துக் கொண்டால், அவற்றின் மதிப்பு உற்பத்திச் செலவுக்குச் சமமாயிருக்க வேண்டும். இல்லையேல், அவை உற்பத்தியாகா. எனவே, உற்பத்திச் செலவு மிகுதியாயிருந்தால், மதிப்பும் உயர்வாகியிருப்பது இங்கு இயல்பு.

[1] ஐரோப்பிய அங்காடிகளில், அண்மைக் காலத்தில் நிலவிய மறுபடியும் உருவாக்க முடியாத பொருள்கள் சிலவற்றின் விலை: விஞ்ஞானி ஐசக் நியூட்டனின் பல் 730 பவுன்; நெப்போலியனின் தொப்பி 80 பவுன்; வால்ட்டேரின் கைத்தடி 500 பிராங்கு; மன்னன் சார்லஸ் XII இன் மேலங்கி 5,61,000 பிராங்கு; தன் காதலி ஜோசபைனுக்கு நெப்போலியன் எழுதிய 8 கடிதங்கள் ரூ. 50,000.

(ஆதாரம்: பத்திரிகைச் செய்திகள்)

மூன்றுவதாக, இவ்விரு வகைகளுக்கும் இடையேயுள்ள பொருள்கள் வருகின்றன. இவற்றை, மறுபடியும் உருவாக்க இயலுமென்றாலும், அது அவ்வளவு எளிதன்று. அங்காடியில், வழக்கமாக வாங்கி விற்கிற பொருள்கள் இவ் வகையின. இவற்றின் மதிப்பானது தேவை, அளிப்பு இரண்டினையும் பொருத்துள்ளது.

அடுத்துள்ள படம் இக் கருத்தை விளக்குகிறது. $DO^1$ தேவை வளைகோடு ; $SS^1$ அளிப்பு வளைகோடு. செங்குத்து அச்சில் விலையும், கிடை அச்சில் பொருள் அளவும் குறிப்பு இடப்பட்டு உள்ளன. இங்கே, $OP^1$ விலையாய் இருந்தால், $OM^1$ தேவை ஆனால், $OM^2$ அளிக்கப்படுகிறது. தமது பொருளை விற்றுத் தீர்க்க




வேண்டுமெனில், தமக்குள் போட்டியிட்டுக் கொண்டிருக்கும் விற்போர், விலையைக் குறைத்துக் கொடுத்தாக வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. இதனால், விலை இறங்குகிறது. விலை மட்டும் OP-ஐ எட்டும்போது தான் தேவையும் அளிப்பும் சமமாக (OM) இருக்கின்றன. இனி, விற்போர் தம்முடைய அளிப்பைச் சரிக்கட்ட வேண்டியதில்லை. எனவே, அந்த மட்டத்திலேயே பொருளின் விலை, நிலை கொள்ள முற்படும். மாறுதபடி விலையானது இந்த மட்டத்திலேயே நிலைகொள்ள முற்படுவதால், இவ் விலை 'சமநிலை விலை' எனப்படும். இவ் விலையில் தேவையும் அளிப்பும் சமமாய் இருக்கும். இது போன்றே, குறிப்பிட்ட நேரத்தில் நிலவுகிற விலை, சமநிலை விலையைவிடக் குறைவாயிருந்தால், தேவை மிகுதியாகவும் அத்துடன் ஒப்பிடும் போது அளிப்பு குறைவாகவும் இருக்கும். இதனால்,

வாங்குவோரிடையே போட்டி ஏற்பட்டு, விலையானது சமநிலை மட்டத்துக்கு உயர முற்படும். இவ்வாறு விலையானது எப்போதும் சமநிலை மட்டத்தில் நிலைகொள்ள முற்படுகிறது. இம்மட்டம் இரண்டு வளைகோடுகளும் சந்திக்கும் இடத்தில் உள்ளது. தேவை வளைகோட்டின் பின்னே இறுதிநிலைப் பயன்பாடும், அளிப்பு வளைகோட்டின் பின்னே இறுதிநிலை உற்பத்திச் செலவும் செயல்படுவதால், இவ் விரண்டு வளைகோடுகளும் சந்திக்கும் இடம் என்று சொல்லும் போது, அங்கு இறுதிநிலைப் பயன்பாடும் இறுதிநிலை உற்பத்திச் செலவும் சமமாயிருக்க வேண்டும் என்று பொருளாகிறது.

தேவையோ அளிப்போ தனியாகப் பொருளின் மதிப்பை முடிவு செய்யவில்லை என்பது இங்குக் கருதத் தக்கது. பொருத்தமான உவமையொன்றுடன் இதனை விளக்குவார் மார்ஷல். காகிதத் துண்டொன்றைக் கத்தரிக்கக் கத்தரிக்கோலின் இரு அலகுகளும் வேண்டும். இதுபோலத் தேவை, அளிப்பு இரண்டும் சேர்ந்து மதிப்பை நிருணயிக்கின்றன என்பார் மார்ஷல். கத்தரிக்கோலின் ஓர் அலகை அசைக்காது வைத்துக் கொண்டால், அடுத்த அலகு காகிதத் துண்டைக் கத்தரிப்பதாகக் கொள்ளலாம். ஆனால், இங்கும் முதல் அலகு இருப்பதால் தான் இரண்டாவது அலகால் கத்தரிக்க முடிகிறது என்பது கவனிக்கத் தக்கது. இவ்வாறு, அளிப்பு மாறாமலிருந்தால், தேவை மாறுதல் விலையை மாற்றுகிறது எனச் சொல்வதில் பொருள் உண்டு. ஆனால், விலையில் ஏற்பட்ட மாறுதலுக்குக் காரணம் தேவையில் ஏற்பட்ட மாறுதல் மட்டுமல்ல ; அளிப்பு இரண்டும் விலையை முடிவு செய்கின்றன என்பார் மார்ஷல். 'காகிதத் துண்டைக் கத்தரித்தது மேலலகா கீழலகா என்று வாதிடுவதில் எவ்வளவு பொருளுண்டோ, அதுபோன்றே மதிப்பை முடிவு செய்வது பயன்பாடா அல்லது உற்பத்திச்செலவா என்று சொல்வதும் ஆகும்.'

தமது விளக்க உரையை இன்னும் விரிவுபடுத்தி, தேவை, அளிப்பு ஆகிய இரு சக்திகளும் கால அளவில் எவ்வாறு செயல்படுகின்றன என்றும் மார்ஷல் ஆராய்ந்துள்ளார். குறுங் காலத்தில் இறுதிநிலைப் பயன்பாடும், நெடுங் காலத்தில் இறுதிநிலை உற்பத்திச் செலவும் மதிப்பை முடிவு செய்வதில் சிறப்புப் பங்கு வகிக்கின்றன என்பது அவர் கருத்து. குறுங் காலத்தில் உற்பத்திச் செலவை முழுதும் ஈடுகட்டாத விலை மட்டத்திலுங் கூடப் பொருளை விற்றாக வேண்டிய கட்டாயம் ஏற்படலாம். ஆனால், நெடுங்கால மதிப்பு உற்பத்திச் செலவை ஈடுகட்டத் தவறுமானால், தொடர்ந்து உற்பத்தி செய்வதில் பொருளில்லை என்றாகிறது. எனவே, நெடுங் காலத்தில், மதிப்பு உற்பத்திச் செலவுக்குச் சமமாக முற்படும்.

இவ்வாறு, குறுங்கால மதிப்பானது தேவையையும், நெடுங்கால மதிப்பானது அளிப்பையும் சார்ந்திருக்கும் என்று சொல்லலாம்.

தேவையும் அளிப்பும் மதிப்பை முடிவு செய்கின்றன என்று சொல்லும் போது, ஒன்றிரண்டு உண்மைகளை மறந்துவிட லாகாது என மார்ஷல் நினைவூட்டி உள்ளார். எவ்வாறு தேவையும் அளிப்பும் மதிப்பை முடிவு செய்கின்றனவோ, அதுபோன்றே மதிப்பானது தேவையையும் அளிப்பையும் முடிவு செய்கிறது என்பதும் மறக்கத் தக்கதன்று. தேவை விதியின்படி, விலை இறங்க இறங்கத் தேவை ஏறும் என்றும், விலை ஏற ஏறத் தேவை அளவு இறங்கும் என்றும் அறிந்துள்ளோம். இதுபோன்று, விலை மாறுதல்களுக்கேற்ப அளிப்பும் மாறும் என்பது அளிப்பு விதி. எனவே, தேவை, மதிப்பு, அளிப்பு ஆகிய மூன்றுமே ஒன்றுக்கொன்று காரணமாகவும், ஒன்றையொன்று சார்ந்திருப்பதாகவும் சொல்வதே சரி. இதனையும் ஓர் உவமையின் வழி மார்ஷல் விளக்குவார். மதிப்பு, பயன்பாடு, உற்பத்திச் செலவு ஆகிய மூன்றும் ஓர் உட் குழிந்த தகழியில் இடப்பட்டு உள்ள மூன்று கண்ணாடிக் கோலிகளுக்கு ஒப்பானவை. இக் கோலிகளில் எந்தவொரு கோலியினதும் இருப்பு பிற கோலிகளது இருப்பையே பொருத்துள்ளது ; ஒன்றை நகர்த்தினால் பிறவும் தாமாகவே நகர்ந்து விடுகின்றன !

இறுதிநிலைக் கோட்பாடுபற்றியும் மார்ஷல் ஓர் உண்மையை நினைவூட்டி உள்ளார். மதிப்பானது இறுதிநிலைக் கட்டத்தில் முடிவாகிறது என்று சொல்வதற்குப் பதிலாக, இறுதிநிலைக் கட்டமே மதிப்பை முடிவாக்குகிறது எனச் சொல்வது பிழை என்பார் மார்ஷல். இறுதிநிலைப் பயன்பாடும் இறுதிநிலை உற்பத்திச் செலவும் மதிப்பை முடிவு செய்கின்றன என்று சொல்வதை விட இவ் விரண்டும் மதிப்பைச் சுட்டுகின்றன என்று சொல்வதே திருந்தச் சொல்வதாகும். மொத்தப் பயன்பாடும் மொத்த உற்பத்திச் செலவுமே விலையை முடிவு செய்கின்றன. ஆனால், இறுதிநிலைப் பயன்பாடும் இறுதிநிலை உற்பத்திச் செலவும் விலையானது எதற்குச் சமமாயிருக்கும் என்பதைச் சுட்டிக் காட்டுகின்றன. இதற்கும் ஓர் உவமை தரப்பட்டுள்ளது. ஒன்பது பேர் ஏறியுள்ள படகொன்றில் பத்தாவதாக ஒருவன் ஏறியதும் படகு கவிழ்ந்து விட்டதென்றால், அந்தப் பத்தாவது மனிதனால் மட்டுமே படகு கவிழ்ந்தது என்று சொல்வது சரியன்று ; பத்துப் பேரின் கனத்தால் தான் உண்மையில் படகு கவிழ்ந்தது. இதுபோன்றே ஒரு பொருளின் மதிப்பு அதன் இறுதிநிலைப் பயன்பாட்டுக்கும் இறுதிநிலை உற்பத்திச் செலவுக்கும் சமமாய் இருக்கும் எனச் சொல்லும் போது, இவ் விரண்டும் குறிப்பிட்டபடி இருப்பதற்குக் காரணம் பொருளின் மொத்தப் பயன்பாடும் மொத்த உற்பத்திச் செலவுமே என்பதை மறந்துவிட லாகாது.

### மதிப்புக் கோட்பாட்டில் காலக் கூறின் சிறப்பு

தேவை, அளிப்பு இரண்டும் மதிப்பை முடிவு செய்கின்றன. ஆனால், அவற்றின் தராதர முக்கியத்துவம் நாம் பகுத்தாய எடுத்துக் கொள்ளும் காலப் பகுதியையும் பொருத்துள்ளது. இவ்வுண்மையை விளக்கமாக உணர்த்திய பெருமை மார்ஷலுக்கு உரியது. மிகக் குறுங் காலம், குறுங் காலம், நெடுங் காலம், மிக நெடுங் காலம் என நான்கு காலப் பகுதிகளைச் சுட்டி, ஒவ்வொரு காலப் பகுதியிலும் மதிப்பானது எவ்வாறு முடிவாகிறது என்பதை அவர் விளக்கியுள்ளார்.

இந்தக் காலப் பாகுபாட்டின் அடிப்படையை முதலில் புரிந்து கொள்ள வேண்டும். இப் பாகுபாடு நாழிகைப் பொழுதை அடிப்படையாகக் கொண்டிருக்கவில்லை. அதாவது சில நாழிகைப் பொழுதை அடிப்படையாகக் கொண்டிருக்கவில்லை. அதாவது, சில நாழிகைப் பொழுது குறுங் காலம் என்றும் பல நாழிகைப் பொழுது நெடுங் காலம் என்றும் பாகுபாடு செய்யவில்லை. தேவை மாறுதல்களுக்குத் தக்கவாறு அளிப்பைச் சரிக்கட்டிக் கொள்ள வேண்டி வருகிற காலத்தின் அடிப்படையிலேயே இப் பாகுபாடு செய்யப்பட்டுள்ளது. தொழில்களின் தன்மையைப் பொருத்து இக் காலப் பகுதிகளின் நாழிகை அளவு மாறலாம். துணித் தொழிலில் நெடுங் காலப் பகுதியின் அளவு ஓராண்டுக்குங் குறைவாகவே இருக்கலாம் ; ஆனால் பழத்தோட்டங்களில் இதன் அளவு பத்துத் பதினைந்து ஆண்டுகளாகக்கூட இருக்கலாம்.

### மிகக் குறுங் காலம்

இந்தக் காலப் பகுதியில் தேவை மாறுதல்களுக்குத் தக்கவாறு அளிப்பைச் சரிக்கட்டிக் கொள்ளப் போதிய காலம் இல்லை என வைத்துக் கொள்ளப்படுகிறது. இவ்வாறு, இக் காலக் கூறில் அளிப்பானது முற்றிலும் வரையறுக்கப்பட்டு விட்டதாகிறது. எனவே, இங்கு, பொருளின் விலை முழுக்க முழுக்கத் தேவையையே சார்ந்துள்ளது. எடுத்துக் காட்டாக, உள்ளூர் அங்காடி யொன்றில் விற்பனைக்கு வந்துள்ள மீனின் மதிப்பு எவ்வாறு முடிவாகிறது எனப் பார்க்கலாம். தேவை மிகுதியாக இருந்தாலும், அதற்குத் தக்கவாறு அளிப்பைப் பெருக்குவதற்குக் (காலமின்மைக் காரணத்தால்) முடியாது. இதனால், மீனின் விலை உயர்வதைத் தடுக்க முடியாது. இதுபோன்றே, தேவை குறைவாக இருந்தால், மீன் எப்படியும் விற்றாக வேண்டுமெனில் விலை தானகவே இறங்கி விடுகிறது. மிகக் குறுங் கால மதிப்பு முற்றிலும் தேவையையே சார்ந்திருப்பது இங்குத் தெளிவாகிறது. மிகக் குறுங் கால மதிப்பை

'அங்காடி மதிப்பு' என்று மார்ஷல் குறிப்பிடுவார். அடுத்துள்ள படம் மேலே கண்ட உண்மைகளை விளக்குகிறது. இங்கு அளிப்பு




OM மாறுதிருக்கிறது. அதனால், VSPS அளிப்பு வளைகோடு செங்குத்தாயிருக்கிறது. தேவை வளைகோடு DD ஆக இருந்தால், விலை OP. தேவை ஏறினால், $D^1D^1$ புதிய தேவை வளைகோடொன்று கிடைக்கிறது: புதிய சமநிலை விலை $OP^1$. இதுபோன்றே, தேவை இறங்கும் போது விலை $OP^2$ என்றாகிறது.

## குறுங் காலம்

இருக்கிற உற்பத்திக் கருவிகளை வைத்துக் கொண்டு, தேவை மாறுதலுக்குத் தக்கவாறு அளிப்பைச் சரிக்கட்டிக் கொள்ள இயல்கிற காலப் பகுதியே குறுங் காலம் எனப் பெறுகிறது. கையிலுள்ள எந்திரங்கள் மாறுவதாகவோ, அல்லது உற்பத்தி முறைகள் மாறுவதாகவோ இங்குக் கருதவில்லை. கையிலுள்ள முதல் கருவிப் பொருள்களைக் கொண்டு, அளிப்பை மாற்றுவதற்கான முயற்சி இக் காலப் பகுதியில் நடக்கிறது. மிகக் குறைந்த அளவு உற்பத்திச் செலவிலேயே நிறுவனங்கள் எந்நேரமும் உற்பத்தி செய்வது வழக்கம். எனவே, இருக்கிற கருவிகளைக் கொண்டு உற்பத்தியைப்

பெருக்க வேண்டுமெனில், உற்பத்திச் செலவு மிகுவதைத் தவிர்க்க முடியாது. எனவே, குறுங் காலத்தில், தேவை ஏறினால் அளிப்பு மிகுவதற்கு வாய்ப்புண்டு. ஆனால், இந்த அளிப்பு ஏறிய உற்பத்திச் செலவிலேயே கிடைக்கிற காரணத்தால், விலையானது பழைய நிலைக்கு மீள வழியில்லை ; அது பழைய மட்டத்தைவிட உயர்வாக, ஆனால், (அளிப்பு மிகுவதால்) மிகக் குறுங் கால மட்டத்தை விடக் குறைவாகவே இருக்குமென எதிர்பார்க்கலாம். மீனின் தேவை திடீரென மிகுந்தால், இருக்கிற படகுகளையும் வலைகளையும் வைத்துக் கொண்டு ஆழ்கடல் சென்றோ, அதிக நேரம் உழைத்தோ




மிகுதியாக மீன் பிடிக்கப் படலாம். ஆனால், இவற்றால் உற்பத்திச் செலவு மிகுவது இயல்பு ; விலையும் பழைய மட்டத்திற்கு மீள வழி வழி இல்லை. குறுங் கால மதிப்பைக் 'குறுங் கால இயல்பான மதிப்பு' என்றும் மார்ஷல் குறிப்பிடுவார். மேலேயுள்ள படம் மேலே கண்ட உண்மைகளை விளக்குகிறது. படத்தில் VSPS மிகக் குறுங் கால

அளிப்பைச் சுட்டுவது போல, SPS குறுங் கால அளிப்பைச் சுட்டுகிறது. இக் குறுங் கால அளிப்பு வளைகோடு செங்குத்தாய் இராமல் கீழிருந்து மேல் நோக்கிச் சரிவதன் பொருள் உயர்ந்ததொரு செலவில் தான் மிகுதியான அளவு உற்பத்தியாகும் என்பதே. தேவை ஏறும்போது, விலை OP-இலிருந்து $OP^1$ ஆக மிகக் குறுங் காலத்தில் உயர்கிறது. இவ் விலையேற்றம் அளிப்பைப் பெருக்க ஊக்கமளிக்கிறது; அளிப்பும் பெருகுகிறது. ஆனால், மிகுதியான அளிப்பு உயர்வான செலவில்தான் இயலுமாதலால் இப்போதைய $OM^1$ அளிப்பு $OP^3$ செலவிலேயே இயலுமென்பது தெளிவாகிறது. இப்போது தேவையும் அளிப்பும் சரிக்கட்டிக்கொள்ளும் விலை மட்டம் $OP^3$. இந்த விலை மட்டம் மிகக் குறுங் கால மட்டத்தைவிட ($OP^1$)க் குறைவாக இருக்கிற போதிலும், பழைய OP மட்டத்துக்கு மீளவில்லை என்பது கவனிக்கத் தக்கது.

## நெடுங் காலம்

தேவை மாறுதல்களுக்குத் தக்கவாறு உற்பத்திக் காரணிகளை மாற்றி, அளிப்பைச் சரிக்கட்டிக் கொள்ள இயல்கிற காலப் பகுதியே நெடுங் காலம் எனப் பெறுகிறது. மீனின் தேவை ஏறுமுகமா இருந்தால், அதிகப்படியாகப் படகுகளையும் வலைகளையும் செய்து அவற்றை ஆண்டு, நெடுங் காலத்தில் மிகுதியாக மீன் பிடிக்கப் படலாம்.

இந்த நெடுங் காலத்தில் விலையானது உற்பத்திச் செலவைச் சரிக்கட்டிக் கொள்ளாவிட்டால், உற்பத்தியே நடக்காது. எனவே, விளைவு விதிகளின் இயக்கத்தையே நெடுங் கால விலை சார்ந்துள்ளது. குறிப்பிட்ட தொழிலில் மாறு விளைவு விதி செயல்படுவதாய் இருந்தால் புதிய விலை, பழைய விலைக்குச் சமமாகி விடலாம்; குறைந்து செல் விளைவு விதி செயல்படுவதாய் இருந்தால் (தேவை ஏறும்போது) நெடுங் கால விலை இறங்கி விடலாம்.

அடுத்துள்ள படம் குறிப்பிட்ட தொழிலில் மாறு விளைவு விதி செயல் பட்டால் நிகழ்வதைக் காட்டுகிறது. தேவை ஏறும்போது மிகக் குறுங் காலத்தில் விலை $OP^1$ ஆக ஏறுகிறது. இந்த விலையேற்றத்தையொட்டி அளிப்பைப் பெருக்குவதற்கான முயற்சி நிகழ்கிறது. தொழிலில் மாறு விளைவு விதி செயல்படுவதால், மிகுதியான அளவையும் ஒரே செலவில் உற்பத்தி செய்ய முடியும். OM அளவை உற்பத்தி செய்ய என்ன செலவாகுமோ அதே அளவுதான் $OM^1$ அளவு உற்பத்தி செய்யவும் ஆகிறது. இதனால் தேவை ஏற்றத்தை யொட்டி அளிப்பும் ஏறும்போது, இரண்டும் சரிக்கட்டிக் கொள்ளும் விலை மட்டம் பழைய (தொடக்க நிலை) விலை மட்ட




மாகவே ஆகி விடுகிறது. தேவை ஏற்றத்துக்குத் தக்கவாறு அளிப்பும் பெருகியுள்ளதுதான் இப்போதுள்ள மாறுதல்.



முன் பக்கத்திலுள்ள படம் குறிப்பிட்ட தொழிலில் குறைந்து செல் விளைவு விதி செயல்பட்டால் நிகழ்வதைச் சுட்டுகிறது. தேவை ஏறும்போது மிகக் குறுங் காலத்தில் விலை $OP^1$ ஆக ஏறுகிறது. இந்த விலையேற்றத்தை யொட்டி அளிப்பைப் பெருக்குவதற்கான முயற்சி நிகழ்கிறது. தொழிலில் குறைந்து செல் விளைவு விதி செயல் படுவதால் மிகுதியான அளவை உற்பத்தி செய்ய மிகுதியான செல வேற்படுகிறது; $OM^1$ அளவை உற்பத்தி செய்ய $OP^3$ செலவாகிறது. இதனால், தேவை யேற்றத்தை யொட்டி அளிப்பும் ஏறும் போது இரண்டும் சரிக்கட்டிக் கொள்ளும் விலை மட்டம் பழைய (தொடக்க நிலை) விலை மட்டத்தை விட உயர்ந்ததாகவே இருக்கிறது. தேவை யேற்றத்துக்குத் தக்கவாறு அளிப்பும் பெருகியுள்ள போதிலும் புதிய விலை, பழைய விலையைவிட உயர்ந்தேயுள்ளது. (ஆனால், தேவைக் குத் தக்கவாறு அளிப்பும் மிகுந்துள்ள காரணத்தால் மிகக் குறுங் கால விலையை விடக் குறைவாகவே இருக்கிறது).

கீழுள்ள படம், குறிப்பிட்ட தொழிலில் வளர்ந்துசெல் விளைவு விதி செயல்பட்டால் நிகழ்வதைச் சுட்டுகிறது. தேவை ஏறும்




போது, மிகக் குறுங் கால விலை $OP^1$ ஆக ஏறுகிறது. இந்த விலையேற்றத்தை யொட்டி அளிப்பைப் பெருக்குவதற்கான முயற்சி

நிகழ்கிறது. ஆனால், இத் தொழிலில் வளர்ந்து செல் விளைவு விதி செயல்படுவதால் மிகுதியான அளவை உற்பத்திசெய்ய குறைவான செலவே ஏற்படுகிறது ; $OM^1$ அளவை உற்பத்தி செய்ய $OP^3$ செலவாகிறது. இதனால், தேவை ஏற்றத்தையொட்டி அளிப்பும் ஏறும் போது இரண்டும் சரிக்கட்டிக் கொள்ளும் விலை மட்டம் பழைய (தொடக்க நிலை) விலை மட்டத்தை விடத் தாழ்ந்ததாகவே இருக்கிறது. தேவை ஏற்றத்துக்குத் தக்கவாறு அளிப்பும் பெருகி, புதிய விலை பழைய விலையை விடக் குறைவாகவே இருக்கிறது.[1]

நெடுங் கால மதிப்பை 'இயல்பான மதிப்பு' என்றும் மார்ஷல் குறிப்பிடுவார். தேவை மாறுதல்களுக்குத் தக்கவாறு அளிப்பு சரிக்கட்டிக் கொள்ளத் தடையேதும் இல்லாதிருந்தால், இயல்பாகவே மேலே கண்ட மாறுதல்கள் நிகழ்கிற காரணத்தால் தான் இக் கால மதிப்பை 'இயல்பான மதிப்பு' என மார்ஷல் அழைத்தார். விலையை ஓர் ஊசலியுடன் ஒப்பிடலாம். ஊசலி இடமும் வலமும் ஊசலாடுகிறபோதிலும், அவ்வாறு ஆட்டுவிக்கப் படாத நிலையில் நட்ட நடுவில் தொங்குவது இயல்பு ; ஆட்டுவிக்கப்படும்போது கூட நடுவை நோக்கியே அது ஓடி வருகிறது. இது போன்று, விலையானது மிகக் குறுங் காலத்தில் இயல்பான விலையைவிட்டு அங்குமிங்கும் மாறுகிற போதிலும், இறுதியில் அது இயல்பான விலை மட்டத்தைத் தான் எட்டுகிறது. மிகக் குறுங் கால விலை நிலையற்ற சக்திகளால் ஏற்படுவதும், நெடுங் கால விலை தேவைக்குத் தக்கவாறு அளிப்புச் சரிக்கட்டிக் கொண்டபின் ஏற்படுவதுமே இதற்குக் காரணம். முந்திய விலை நிலையற்றதெனில், பிந்திய விலை நிலை பேறுடையதாய் இருக்கிறது.

**மிக நெடுங் காலம்**

தேவை மாறுதல்களுக்கேற்ப அளிப்பைச் சரிக்கட்டிக் கொள்ள அடிப்படையான மாறுதல்கள் நிகழும் காலப் பகுதியே மிக நெடுங் காலம். இக் காலப் பகுதியில் உற்பத்திக் காரணிகளின் உற்பத்திக் காரணிகளே மாறுதலுக்கு ஆளாகலாம். மீனின் தேவை ஏறினால், மிக நெடுங் காலத்தில் மீன் பிடி முறை திருத்தப்பட்டு, படகுகள் செய்ய மரத்திற்காகக் காடுகளும், வலை பின்னுவதற்கு வேண்டிய நூல் தரு ஆலைகளும், அவற்றுக்கான பருத்தி வயல் பரப்பும் மிகுக்கப் படலாம். இங்கும் விளைவு விதிகளின் தன்மையைப் பொருத்து (மேலே, நெடுங் காலத்தின் தொடர்பாகக் கண்ட முறையில்) விலையானது முடிவு கட்டப்படுகிறது.

[1] மேலேயுள்ள மூன்று படங்களும் தேவை இறங்கினால் என்ன நிகழும் என்பதையும் சுட்டிக் காட்டுகின்றன. $DD^2$ வளைகோடு தொடர்பான சமநிலைகளைப் பார்க்கவும்.

இவ்வாறு, விலையை முடிவு செய்வதில் காலம் பெரும் பங்காற்று கிறது. காலம் குறுகக் குறுகத் தேவையும், நீடிக்க நீடிக்க அளிப்பும் மதிப்பைப் பெரிதும் தாக்குகின்றன.

குறுங் காலத்தில் உற்பத்திச் செலவு ஒரு வகையில் மதிப்பை முடிவு செய்கிறது என்பது இங்குக் கருதத் தக்கது. மிகக் குறுங் காலத்தில் தேவை இறங்கினால், உற்பத்தியாளனுக்கு இரு வழிகளே உள்ளன. ஒரு வழி, விலையைக் குறைத்து விற்பது; அடுத்த வழி தொழிலையே மூடிவிடுவது. இரண்டாவது வழியைத் தற்காலிகமாக வேனும் கடைப்பிடிப்பது விரும்பத் தக்கதல்ல. எனவே, முதல் வழியே, பெரும்பாலும் கடைப் பிடிக்கப்படுகிறது. இந்தக் குறைந்த விலையானது ஆக மொத்த உற்பத்திச் செலவை ஈடுகட்டா விட்டா லும், கச்சாப் பொருள்களிலும் கூலிகளிலும் இட்ட மாறும் உற்பத் திச் செலவுகளையேனும் ஈடுகட்டினாற் போதும். எனவே, மிகக் குறுங் கால மதிப்பு தேவையால் முடிவு செய்யப்படுகிற போதிலும், அதனை மாறும் உற்பத்திச் செலவுகள் ஓரளவேனும் கட்டுப்படுத்து கின்றன. நெடுங் காலத்தில் பொருளின் மதிப்பு மாறும் உற்பத்திச் செலவுகளை மட்டுமல்லாமல் நிலைத்த உற்பத்திச் செலவுகளையும் கட்டாயம் ஈடுகட்டியாக வேண்டும்.

# 3. விலை நிருணயம் II

தேவை, அளிப்பு, காலப் பகுதி ஆகியவற்றுக்கு உரிய இடம் நல்கி, தமது மதிப்புக் கோட்பாட்டை மார்ஷல் விளக்கியுள்ளபோதிலும், இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் ஆசிரியர்கள் பலர், மார்ஷலின் விளக்கத்தில் சில உண்மைகள் விடுபட்டுள்ளன என்பதைச் சுட்டிக்காட்ட முன் வந்தனர். தேர்வுச் சிக்கல் பொருளியல் செய்கைகளின் அடிப்படை ; இந்தச் சிக்கலை நேர்முகமாக எதிரிடுபவை தனிப்பட்ட நிறுவனங்கள். எனவே எந்தவொரு மதிப்புக் கோட்பாடும் மதிப்பு நிருணயத்தைத் தனிப்பட்ட நிறுவனங்களின் கண்ணோட்டத்தில் விளக்க வேண்டும். ஆனால், பழங் கால ஆசிரியர்களோ தேவை, அளிப்பு, அவற்றின் இயக்கம் ஆகியவற்றைப் பொதுப்படையாக விளக்கி வந்தனர். இந்த விளக்கம் போதுமானதல்ல என்றும், மதிப்பு எவ்வாறு முடிவாகிறது என்பதை முதலில் நிறுவனங்களின் கண்ணோட்டத்தில் ஆய்ந்து பின்னர் அந் நிறுவனங்களுடைய எதிரெதிர் செயல்களால் எவ்வாறு தொழிலில் மதிப்பு முடிவாகிறது என்றும் விளக்க வேண்டுமெனத் தற்கால ஆசிரியர்கள் கூறுகின்றனர்.[1] இவ்வகை விளக்கத்தில் தனிப்பட்ட நிறுவனங்களின் செயல், அவை இயங்குகிற அங்காடியின் இயல்பைப் பொருத்துள்ளது என்பதும் தெளிவாக்கப்படுகிறது. நாமும் நிறைவுப் போட்டி, முற்றுரிமை, நிறைகுறைப் போட்டி என ஒவ்வோர் அங்காடி வகைகளாக எடுத்துக்கொண்டு ஆராயலாம்.

[1] 'நிறுவனம்' (Firm) 'தொழில்' (Industry) இரண்டுக்கும் இடையேயுள்ள வேற்றுமை இதுதான். தொழில் துணிவோன் ஒருவனால் வழி நடத்தப்படுகிற உற்பத்திக் காரணிகள் தொகுதியொன்றே நிறுவனம். குறிப்பிட்டவொரு பொருளின் உற்பத்தியில் ஈடுபட்டுள்ள அத்தகைய நிறுவனங்களின் தொகுதியே தொழில். கோவையில் பஞ்சாலைத் தொழில் நடக்கிறது. அத் தொழிலில் ஈடுபட்டுள்ள பல்வேறு தொழில் துணிவோர் உற்பத்தி நிலையங்கள் தனித் தனிப் பஞ்சாலை நிறுவனங்கள் ஆகின்றன.

## நிறைவுப் போட்டி

நிறைவுப் போட்டி நிலவும்போது நிறுவனங்களின் எண்ணிக்கை மிகுதியாயிருக்கும். எல்லா நிறுவனங்களும் ஒப்பான தன்மையுள்ள பொருள்களையே விற்கின்றன. இருக்கிற நிறுவனங்கள் தொழிலி லிருந்து விலகவும், புதிய நிறுவனங்கள் தொழிலினுள் புகவும் தடை யெதுவுமில்லை. இவ் வியல்புகளால் எந்தவொரு நிறுவனத்தாலும் தனது சொந்தச் செயலின் வழியாகப் பொருள் விலையை மாற்றிவிட முடியாது. மேலும், நடப்பு விலையில் எந்தவொரு அளவிலும் பொருளை விற்கத் தனியொரு நிறுவனத்தால் இயலும். அதாவது, தனியொரு நிருவனத்தை எதிர்நோக்கி நிற்கும் தேவை நிறைந்த நெகிழ்ச்சியுடன் இருக்கும். இந்தச் சூழலில் மதிப்பு எவ்வாறு முடிவாகிறதென ஆராயலாம்.

மிகவுயர்ந்த அளவு இலாபம் பெற வேண்டும் என்பதே உற்பத்தியாளன் நோக்கம். பொருளின் ஒவ்வோர் அலகையும் உற்பத்தி செய்யும்போது, உற்பத்தியாளன் அவ்வலகை விற்பதால் தனக்குக்




கிடைக்கிற வருவாயை (அதாவது, இறுதிநிலை வருவாயை)யும், அதனை உற்பத்தி செய்வதில் தனக்கு ஏற்பட்டுள்ள செலவை (அதாவது இறுதிநிலை உற்பத்திச் செலவை)யும் ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டே இருக்கிறன். இறுதிநிலை வருவாய், இறுதிநிலை

உற்பத்திச் செலவைவிட மிகுதியாய் இருந்தால், உறுதியாக அவ் வலகை உற்பத்தி செய்கிறுன். (செலவைவிட வரவு மிகுதியாயிருப் பதே காரணம்). இவ்வாறு, இறுதிநிலை வருவாயையும், இறுதிநிலை உற்பத்திச் செலவையும் ஒவ்வொரு முறையும் ஒப்பிட்டுப் பார்க்கும் போது, குறுப்பிட்டவொரு கட்டத்தில் இவ்விரண்டும் சமமாக இருப் பதை அவன் காண்கிறுன். அந்தக் கட்டத்தில் தான் நிகர இலாபம் மிகவுயர்ந்த அளவினதாயிருக்கும். இதனை முன் பக்கத்துள்ள படம் விளக்கும். படத்தில் OM அளவு உற்பத்தி செய்யும்போதே இலாபம் மிகவுயர்ந்த அளவில் இருக்கும் என்பது தெளிவாகிறது. அதைவிடக் குறைவாக ($OM^1$) உற்பத்தி செய்தால், இறுதிநிலை உற்பத்திச் செலவு ($M^1O$) குறைவாகவும், இறுதி நிலை வருவாய் ($M^1P^1$) மிகுதியாகவும் இருப்பதால் $QP^1$ இயல்பு கடந்த இலாபம் கிடைக்கிறது. (உற்பத்திச் செலவு என்று குறிப்பிடும் போதெல் லாம் அத்துடன் இயல்பான இலாபம் சேர்ந்திருப்பதால், இங்கு $M^1Q$ —இல் இயல்பான இலாபமும் அடங்கியுள்ளது. இதுபோக எச்சமாகக் கிடைக்கிற காரணத்தால் $QP^1$-ஐ இயல்பு கடந்த இலா பம் என்கிறேம்.) இந்த இயல்பு கடந்த இலாபம் முழுதையும் பெற்று விட வேண்டுமெனில் OM உற்பத்தி செய்ய வேண்டும். அதைவிட மிகுதியாக ($OM^2$) உற்பத்தி செய்தாலோ, இறுதிநிலை உற்பத்திச் செலவு மிகும் ($M^2P^2$); அதே நிலையில் இறுதிநிலை வருவாயோ ($M^2Q^1$) குறைந்து செல்கிறது. இதனுல் நட்டமே ($Q^1P^2$) ஏற்படு கிறது.

இவ்வாறு, இறுதிநிலை, வருவாயும் இறுதிநிலை உற்பத்திச் செல வும் சமமாக இருக்கும் எல்லைவரை உற்பத்தி செய்தால் இலாபம் மிகவுயர்ந்த அளவில் இருக்கும் என்பது பொதுவானதோர் உண்மை. (முற்றுரிமையிலும் முற்றுரிமைப் போட்டியிலுங்கூட இதுவே நிலை) ஆனுல், நிறைவுப் போட்டியில் இறுதிநிலை வருவாயின் போக்கு தனியொரு வகையில் இருக்கு மென்பதை இங்குக் கவனிக்க வேண் டும். அடுத்துள்ள அட்டவணையின் துணைகொண்டு இதனை அறிய லாம். நிறைவுப் போட்டி நிலவும்போது எந்தவொரு நிறுவனத் தாலும் விலையைக் கட்டுப்படுத்த முடியாது ; நடப்பு விலையில் எவ்வ ளவு விற்க முடியும். அப்படியானுல் இறுதிநிலை வருவாயின் போக் கும் தனியொரு வகையினதாகவே இருக்கும். 50 அலகுகளை ரூ. 10 விலையில் விற்பவனுல், 60 அலகுகளையும் அதே ரூ. 10 விலை யில் விற்க முடிகிறது இதனுல் இறுதிநிலை அலகின் வருவாயும் அதே ரூ. 10 தான். ஏற்கனவே விலை ரூ. 10 எனக் கண்டோம். ஆதலால், நிறைவுப் போட்டி நிலவும்போது, விலையும் இறுதிநிலை வருவாயும் சமமாயிருப்பது இயல்பு. இவ் வுண்மையை அடுத்துள்ள படமும் கூறுகிறது. OP விலையில் OM மட்டுமல்ல, அதைவிட மிகுதி

யாகவோ குறைவாகவோகூட விற்கமுடியும். இதனால் நிறுவனம் எதிர்நோக்கும் தேவை வளைகோடு ஒரு படுகிடைக் கோடாக இருக்

| உற்பத்தி அலகுகள் | மொத்த உற்பத்திச் செலவு ரூ. | சராசரி உற்பத்திச் செலவு ரூ. | இறுதி நிலை உற்பத்திச் செலவு ரூ. | மொத்த வருவாய் ரூ. | சராசரி வருவாய் ரூ. | இறுதி நிலை வருவாய் ரூ. | இயல்பு கடந்த இலாபம் ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 50 | 600 | 12.00 | - | 500 | 10.00 | 10.00 | 100 |
| 60 | 660 | 11.00 | 6.00 | 600 | 10.00 | 10.00 | 60 |
| 70 | 730 | 10.04 | 7.00 | 700 | 10.00 | 10.00 | 30 |
| 80 | 810 | 10.01 | 8.00 | 800 | 10.00 | 10.00 | 10 |
| 90 | 900 | 10.00 | 9.00 | 900 | 10.00 | 10.00 | - |
| 100 | 1000 | 10.00 | 10.00 | 1000 | 10.00 | 10.00 | - |
| 110 | 1110 | 10.01 | 11.00 | 1100 | 10.00 | 10.00 | –10 |
| 120 | 1230 | 10.02 | 12.00 | 1200 | 10.00 | 10.00 | –30 |




கிறது. மேலும், OP இறுதிநிலை வருவாயாகவும் இருக்கிறது. இதனால் ஒரே படுகிடைக்கோடு விலையையும் இறுதிநிலை வருவாயையும் சுட்டுவதாகிறது.

மிகவுயர்ந்த அளவு இலாபம் பெற வேண்டுமெனில், இறுதிநிலை வருவாயும் இறுதிநிலை உற்பத்திச் செலவும் சமமாவது வரை உற்பத்தி தொடர வேண்டுமென முன்பு கண்டோம். இப்போது நிறைவுப் போட்டியின் இலக்கணப்படி இறுதிநிலை வருவாயும் விலையும் சமமாயிருக்க வேண்டும் என அறிகிறோம். இதனால், இயல்பாகவே, இங்கு இறுதிநிலை உற்பத்திச் செலவானது இறுதிநிலை வருவாய்க்கு மட்டுமல்ல, விலைக்குங் கூடச் சமமாகவே இருக்கும்.

நிறைவுப் போட்டியில் நிறுவனங்கள் புகவும் விலகவும் தடை இல்லை எனக் கண்டோம். இவ்வாறு புகுவதற்கும் விலகுவதற்கும் இலாப வாய்ப்புக்கள் தாம் காரணம். குறிப்பிட்ட பொருளின் உற்பத்தியில் இயல்பு கடந்த இலாபத்திற்கு வாய்ப்பிருந்தால் அவ்வுற்பத்தியில் புதிய நிறுவனங்கள் புகுவதியற்கை. இதுபோன்றே, அங்கு இயல்பான இலாபத்துக்குக்கூட வாய்ப்பில்லையேல் நிறுவனங்கள் விட்டு விலகுவதும் இயற்கை. இதனை அடுத்துள்ள இரு படங்களும் விளக்குகின்றன.




மிகவுயர்ந்த அளவு இலாபம் பெறும் நோக்கத்துடன் இறுதிநிலை வருவாயும், இறுதிநிலை உற்பத்திச் செலவும் சமமாயிருக்கும்OM அளவு உற்பத்தி செய்வதாக வைத்துக் கொள்வோம். OM அளவு OP விலையில் விற்கப் பெறுவதால், இப்பொழுது மொத்த வருவாய் OMQP. இதே நேரத்தில் OM உற்பத்தி செய்ய ஆகியுள்ள மொத்தச் செலவு OMRS மட்டுமே. (இந்த OMRS - இல் இயல்பான இலாபமும் அடங்கியுள்ளது.) எனவே, இங்கு PQRS இயல்பு கடந்த இலாபம் பெற வாய்ப்பிருக்கிறது. இதனால், புதிய நிறுவனங்கள் இத் தொழிலில் தோன்றலாம்; அல்லது இருக்கிற நிறுவ

ணங்கள் உற்பத்தியை மிகுக்க முயலலாம். நிறுவனங்கள் எண்ணிக்கையிலும் அளவிலும் வளர முற்படுகின்றன. இதனால் விலை இறங்குவதாலோ, அல்லது, உற்பத்திச் செலவு மிகுவதாலோ, விலைக்கும் சராசரி உற்பத்திச் செலவுக்கும் இடையேயுள்ள வேறுபாடு — அதாவது, இயல்பு கடந்த இலாபம் — நெடுங் காலத்தில் மறைந்து போகும்.

இதற்கெதிரான நிலை ஏற்படுவதை இவ் விரண்டாவது படம் விளக்கும். இங்கும் இறுதிநிலை வருவாயும், இறுதிநிலை உற்பத்திச்




செலவும் சமமாயிருக்கிற OM அளவு உற்பத்தி செய்வதாக வைத்துக் கொள்வோம். OM அளவு OP விலையில் விற்கப்படுவதால், இப்போது மொத்த வருவாய் OMQP. இதே நேரத்தில் OM உற்பத்தி செய்ய ஆகியுள்ள மொத்தச் செலவு OMRS ஆகும். எனவே, இங்கு PQRS நட்டம் ஏற்படுகிறது. இதனால், சில நிறுவனங்கள் தொழிலை விட்டு விலகலாம்; மற்றுஞ் சில தமது உற்பத்தியை வெட்டிக் குறைக்கலாம். நிறுவனங்கள் எண்ணிக்கையிலும் அளவிலும் சுருங்க முற்படுகின்றன. இதனால், விலை ஏறுவதாலோ, அல்லது, உற்பத்திச் செலவு குறைவதாலோ, விலைக்கும் சராசரிச் செலவுக்கும் இடையேயுள்ள வேறுபாடு—இங்கே, நட்டம் — நெடுங் காலத்தில் மறைந்து விடுகிறது.

இவ்வாறு, நெடுங் காலத்தில், நிறைவுப் போட்டியில் சராசரி வருவாயும் சராசரி உற்பத்திச் செலவுங்கூடச் சமமாயிருக்க வேண்டும் என்றாகிறது. அடுத்துள்ள படம் இதனைத் தெளிவாக்குகிறது. OM உற்பத்தியாகும் போது OP விலையாகவும், சராசரி உற்பத்திச் செலவாகவும் இருப்பதால் மொத்த வருவாயும் மொத்த உற்பத்திச் செலவும் (OMQP) சமமாக இருப்பதால், நிறுவனம் இயல்பான

இலாபத்தையே பெறுவது தெளிவாகிறது.[1] மேலேகண்ட அட்டவணையில் இந் நிலையானது 100 அலகுகள் உற்பத்தி செய்யும்போது தோன்றுகிறது.




இதுவரை கண்டுள்ளவற்றிலிருந்து, நிறைவுப் போட்டியில் தனியொரு நிறுவனம் சமநிலை எய்த வேண்டுமெனில், அதன் இறுதி நிலை வருவாய், இறுதிநிலை உற்பத்திச் செலவு, சராசரி வருவாய், சராசரி உற்பத்திச் செலவு ஆகிய நான்கும் சமமாக இருந்தாக வேண்டும் (MR=MC=AR=AC) என நிறுவப்படுகிறது.

நிறைவுப் போட்டிச் சூழலில் செயலாற்றும் நிறுவனங்களின் அளவு பற்றியும் ஓர் உண்மையை இங்கே சுட்டலாம். இங்கே, சம நிலையின்போது, நிறுவனத்தின் சராசரி உற்பத்திச் செலவும், இறுதி நிலை உற்பத்திச் செலவும் சமமாய் இருக்க வேண்டும் எனக் கண்டோம். சராசரி உற்பத்திச் செலவு மிகக் குறைந்த அளவினதாக இருக்கும் போது தான், அதற்குச் சமமாக இறுதிநிலை உற்பத்திச் செலவு இருக்க முடியும். எனவே, நிறைவுப் போட்டியில் தனியொரு நிறுவனத்தின் சராசரி உற்பத்திச் செலவு மிகக் குறைந்த அளவினதாக இருந்தாக வேண்டும். மிகக் குறைந்த

[1] படத்திலிருந்து வேறோர் உண்மையும் புலப்படுகிறது. இறுதிநிலை உற்பத்திச் செலவு வளைகோட்டிலுள்ள R புள்ளி சுட்டும் இடத்தில் இறுதிநிலை வருவாயும், சராசரி வருவாயும், இறுதிநிலை உற்பத்திச் செலவுங்கூடச் சமமாயிருக்கின்றன. இருந்தும் அந்நிலையில் உற்பத்தி நிறுத்தப்படாமைக்குக் காரணம், அதன் பின்னர் உற்பத்தி தொடர்ந்தால் இறுதிநிலை உற்பத்திச் செலவு குறைந்து செல்ல வாய்ப்பு இருக்கிறது. எனவே, நிறைவுப் போட்டி நிலவும்போது, நிறுவனம் சமநிலை அடைய, இறுதிநிலை உற்பத்திச் செலவு ஏறுமுகத்ததாயிருக்க வேண்டும் என்றாகிறது. அதாவது, இறுதிநிலை உற்பத்திச் செலவு வளைகோடு இறுதிநிலை வருவாய் கோட்டைக் கீழிருந்து வெட்டவேண்டும்.

சராசரி உற்பத்திச் செலவுடன் தொழில் புரியும் நிறுவனத்தை உத்தம நிறுவனம் என்று அழைப்பதால் நிறைவுப் போட்டியில் தனியொரு நிறுவனம் உத்தம நிறுவனமாக இருந்தாக வேண்டும் என்ருகிறது. தனியொரு நிறுவனம் மட்டுமல்ல, நிறைவுப் போட்டியின் கீழ் எல்லா நிறுவனங்களும் உத்தம அளவினதாகவும்[1], ஒப்பான சராசரி உற்பத்திச் செலவினதாகவும் நெடுங்காலத்தில் இருந்தாக வேண்டும். ஏதோவொரு காரணத்தால், குறிப்பிட்டவொரு நிறுவனத்தின் உற்பத்திச் செலவு பிற நிறுவனங்களில் இருப்பதை விடக் குறைவாக இருப்பதாக வைத்துக் கொள்வோம். இப்போது அந்த நிறுவனத்தால் பிற நிறுவனங்களை எல்லாம் அங்காடியிலிருந்து விரட்டி விட்டு, காலப் போக்கில், முற்றுரிமை ஆற்றலைப் பெற்றுவிட முடியும். அல்லது, பிற நிறுவனங்களின் அளவு தனது உற்பத்திச் செலவும் உயர்வது வரை அந் நிறுவனம் தொடர்ந்து உற்பத்தியைப் பெருக்கிக் கொண்டே போகலாம். எனவே, நிறைவுப் போட்டிச் சூழலில் எல்லா நிறுவனங்களும் உத்தம அளவினதாகவும், ஒப்பான சராசரி உற்பத்திச் செலவுள்ளவையாகவும் இருத்தல் வேண்டும்.

தொழிலும் நிறுவனமும் சமநிலை எய்தும் நிலையைக் கீழ்வரும் படம் விளக்கும்.




[1] எல்லா நிறுவனங்களும் ஒரேயளவு உற்பத்தி செய்யும் என்பதன்று இதன் பொருள். திறமை மிக்க உற்பத்திக் காரணிகளை ஆள்பவை அவற்றை மிகத் தீவிரமாகப் பயன்படுத்தி, பிறவற்றைவிட அளவில் மிகுதியான உற்பத்தியைக் கொணரலாம். ஆனுல், திறமை மிக்க இக் காரணிகளுக்குத் தரவேண்டிய வெகுமதி, ஒப்பீட்டடிப்படையில் மிகுதியாக இருப்பதால், இத்தகைய நிறுவனங்களின் சராசரி உற்பத்திச் செலவு பிறவற்றில் நிலவுகிற மட்டத்துக்குச் சமமாகி விடுகிறது.

தொழிலின் தேவை—அளிப்பு நிலைகளால் விலை PM ஆக நிறுவப்படுகிறது. இவ் விலையைத்தான் தனியொரு நிறுவனம் ஏற்றுச் செயல்புரிய வேண்டும், அதனால் விலையைக் கட்டுப்படுத்த முடியாமலிருப்பதே இதற்குக் காரணம். எனவே, PM விலைக்குத் தக்கவாறு தன்னுடைய உற்பத்தியை அது சரிக்கட்டிக் கொள்ளும் போது, அதன் உற்பத்தி, OM ஆக இருக்கும். அப்போது அதன் இறுதி நிலை வருவாயும், இறுதிநிலை உற்பத்திச் செலவும் சமமாக உள்ளன. அது மட்டுமல்ல, அதன் சராசரி வருவாயும், சராசரி உற்பத்திச் செலவுங்கூடச் சமமாக உள்ளன; இதனால், அது இயல்பான இலாபமே பெறுகிறது.

## விற்பனை முற்றுரிமை

நிறைவுப் போட்டிக்கு நேரெதிரானது முற்றுரிமை. நிறைவுப் போட்டியில் விற்போர் பலராயிருப்பர். முற்றுரிமையில் வாங்குவோர் பலராயினும் விற்போன் ஒருவனே உண்டு[1]. இங்கு நிறுவனம் வேறு, தொழில் வேறு என்றில்லை. அத்தொழிலில் புதியவர் புக வழியும் இல்லை. மேலும், முற்றுரிமையாளன் விற்கும் பொருளுக்கு மாற்றுப் பொருளும் இல்லை. இந் நிலையில் முற்றுரிமையாளன் நிலை முற்றிலும் தனியானது. நிறைவுப் போட்டியில் பொருள் விலையானது தேவையாலும் அளிப்பாலும் முடிவு செய்யப்படுகிறதே யொழிய, அதனைக் கட்டுப்படுத்தத் தனியொரு விற்போனால் முடியாது. அங்கே, விற்போன், நிலவுகிற விலைக்குத் தக்கவாறு தன்னுடைய உற்பத்தியைச் சரிக்கட்டிக் கொள்கிறான். இதற்கு மாறாக, முற்றுரிமையில் அளிப்பானது விற்போனால் முற்றிலும் கட்டுப்படுத்தப் படுகிறது. ஒருவனே விற்போனாக இருப்பதால், அவன் கொணரும் உற்பத்தி, ஆக மொத்த அளிப்பைக் கட்டுப்படுத்துகிறது. தவிரவும், முற்றுரிமையாளனால், பொருளின் விலையையும் தான் விரும்புகிற மட்டத்தில் நிறுவிக்கொள்ள முடியும். அவனுக்குப் போட்டியாக விலையைக் கூட்டவோ, குறைக்கவோ வேறெவரும் இல்லாததே இதற்குக் காரணம்.

இங்கு, வேறோர் உண்மையைப் புரிந்து கொள்ள வேண்டும். அளிப்பையும் விலையையும் கட்டுப்படுத்தும் அளவுக்கு ஆற்றல் மிக்குள்ள முற்றுரிமையாளனால், தேவையை மட்டும் கட்டுப்படுத்த முடியாது. தேவை மட்டம், முற்றிலும் வாங்குவோரைப் பொருத்தது. எனவே, அவன் விலையை நிறுவும் போது, அந்த விலையில்

[1] பேராசிரியர் சேம்பர்லின் கூறுவதுபோல ஒரேவொரு விற்போன் தான் இருக்க வேண்டும் என்றில்லை. விற்போர் சிலர் தமக்குள் இணைந்து கொண்டு குறிப்பிட்ட பொருளின் அளிப்பில் குறிப்பிடத் தக்க அளவு ஆதிக்கம் செலுத்தத் தக்கவர்களாயிருந்தால், அதுவும் முற்றுரிமையே. அளிப்பைக் கட்டுப்படுத்த இயல்வதே முற்றுரிமையின் தனி இயல்பு.

எவ்வளவு விற்கும் என்பது பொருளின் தேவையையே பொருத்து உள்ளது. இதுபோன்றே, அவன் அளிப்பைக் கட்டுப்படுத்திக் கொள்ளும் போது, அவ் வளிப்பை எந்த விலையில் விற்றுத் தீர்க்க முடியும் என்பது, மீண்டும் தேவையையே பொருத்துள்ளது. இவ்வாறு, முற்றுரிமையாளனால் அளிப்பை அல்லது விலையைக் கட்டுப் படுத்த முடியுமே யொழிய இரண்டையும் ஒரு சேரக் கட்டுப்படுத்த முடியாது என்றாகிறது.

இனி, முற்றுரிமையாளன் தனது பொருளுக்கு விலையை நிறுவும் போது, எவ்வாறு செயல்படுவான் எனப் பார்க்கலாம். முற்றுரிமை யாளன் நிறுவுகிற விலையின் மட்டம் இரண்டு காரணிகளைப் பொருத் துள்ளது: பொருளின் தேவை நெகிழ்ச்சியும் உற்பத்திச் செலவுச் சூழலுமே அவ் விரு காரணிகள்.

பொருளின் தேவை நெகிழ்ச்சி உடையதாய் இருந்தால், குறைந்த விலையில் மிகுதியாக விற்க முடியும். இப்போது, முற்றுரி மையாளன் குறைந்த விலையை நிறுவி, பெரிய அளவில் வருவாய் பெற முற்படுவது இயல்பு. மாறாகப் பொருளின் தேவை நெகிழ்ச்சி யற்றிருந்தால், விலையைக் குறைத்து வைத்தாலும், விற்பனை பெரிய அளவில் பெருக வாய்ப்பு இல்லை. எனவே, இங்கு ஏறிய விலையை நிறுவி, இயன்ற மட்டும் மிகுதியான வருவாய் பெற முற்படுவதே நல்லது.

இலாபம் மொத்த வருவாயை மட்டுமன்றி, மொத்த உற்பத்திச் செலவையும் பொருத்திருப்பது தெளிவு. எனவே, தன் உற்பத்திச் செலவின் போக்குப் பற்றியும் முற்றுரிமையாளன் கவனிப்பது இயல்பு. உற்பத்திச் செலவு மாறா இயல்பினதாய் இருப்பின், வருவாய் மிகமிக இலாபமும் மிகுவது இயல்பு மாறாக, உற்பத்திச் செலவு வளர்ந்து செல் இயல்பினதாயிருப்பின், மிகுந்த அளவு விற்பதால் வருவாய் மிகுதியாகக் கிடைத்தாலும், இந்த வருவாய் மிகுதியை விழுங்கிவிடும் அளவுக்கு உற்பத்திச் செலவும் வளர்ந்து விடலாம். எனவே, உற்பத்திச் செலவு வளர்ந்து செல் இயல்பின தாயிருப்பின் உயர்ந்த விலை விதித்துக் குறைந்த அளவு விற்பதே முற்றுரிமையாளனுக்கு ஆதாயம். இதற்கு மாறாக, உற்பத்திச் செலவு குறைந்து செல்லும் இயல்பினதாயிருப்பின், உற்பத்தியைப் பெருக்கி, மிகுதியாக விற்பதால் இலாபம் மிக வழியேற்படுகிறது. இங்கே, குறைந்த விலையில் மிகுதியாக விற்பதே முற்றுரிமையாள னுக்கு ஆதாயமாகிறது.[1]

[1] இவற்றிலிருந்து, முற்றுரிமையாளன் எப்போதும் உயர்ந்த விலையினையே நிறுவ மாட்டான் என்பது தெளிவாகிறது. பொருளின் தேவை நெகிழ்ச்சியுடைய தாகவும், உற்பத்திச் செலவு குறைந்து செல் இயல்பினதாகவும் இருந்தால் முற்று ரிமை விலை குறைவாகவே இருக்கும்.

அடுத்து, உற்பத்தியைக் கட்டுப்படுத்தும் போது, முற்றுரிமையாளன் கவனிக்க வேண்டிய உண்மைகளைப் பார்க்கலாம். முற்றுரிமையாளன் நோக்கமும் மிக உயர்ந்த இலாபம் பெற வேண்டும் என்பது தான். இறுதிநிலை வருவாயும் இறுதிநிலை உற்பத்திச் செலவும் சமமாயிருக்கும் உற்பத்தி அளவில் தான் இலாபம் மிகவுயர்ந்த அளவில் இருக்கும். அந்த அளவை எட்டுவது வரை முற்றுரிமையாளன் தொடர்ந்து உற்பத்தி செய்கிறான். நிறைவுப் போட்டியிலும் இவ்வாறு தான் நிகழ்கிறது.

ஆனால், நிறைவுப் போட்டி நிலவும் போது, விற்போன் ஒருவனால் நடப்பு விலையில் எவ்வளவும் விற்க முடியும்; அவனது அளிப்பிலுள்ள கூடுதல் குறைவுகள் விலையைச் சற்றும் பாதிப்பதில்லை. இதனால் அவனது இறுதிநிலை வருவாயும் விலையுங் கூடச் சமமாய் இருக்கும். ஆனால், முற்றுரிமையாளன் நிலைமை வேறு. அவனால் விலையைக் கட்டுப்படுத்த முடியும் என்று சொல்லும் போது, அவனது அளிப்பு மிகமிக, மிகுதிப்படும் அளிப்பைக் குறைந்த விலைக்கே விற்க முடியும் என்பது தெளிவாகிறது. இதனால் விலை இறங்க இறங்க இறுதிநிலை வருவாயானது விலையை விடக் குறைந்து கொண்டே செல்லும். இந்த உண்மையைக் கீழ்வரும் அட்டவணை உணர்த்துகிறது.

| உற்பத்தி அலகுகள் | மொத்த உற்பத்திச் செலவுகள் ரூ. | சராசரி உற்பத்திச் செலவு ரூ. | இறுதி நிலை உற்பத்திச் செலவு ரூ. | மொத்த வருவாய் ரூ. | சராசரி வருவாய் ரூ. | இறுதி நிலை வருவாய் ரூ. | இயல்பு கடந்த லாபம் ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 70 | 432.50 | 6.18 | - | 612.50 | 8.75 | - | 180.00 |
| 80 | 457.50 | 5.72 | 2.50 | 680.00 | 8.50 | 6.75 | 222.50 |
| 90 | 482.50 | 5.37 | 3.50 | 742.50 | 8.25 | 6.25 | 250.00 |
| 100 | 550.00 | 5.50 | 5.70 | 800.00 | 8.00 | 5.75 | 250.00 |
| 110 | 620.00 | 5.63 | 7.00 | 852.50 | 7.75 | 5.25 | 232.50 |
| 120 | 710.00 | 5.90 | 9.00 | 900.00 | 7.50 | 4.75 | 190.00 |

அட்டவணை சுட்டுவதுபோல, 70 அலகுகள் ரூ. 8.75 விலையில் விற்கும் போது, மொத்த வருவாய் ரூ. 612.50. சர்வாதீனன்

அளிப்பை மிகுக்கும் போது, 80 அலகுகளை ரூ. 8.50 விலையில்தான் விற்க முடியும். இப்போது, மொத்த வருவாய் ரூ. 680. இங்கே, இறுதிநிலை வருவாய் ரூ. 6.75 ; ஆனால், புதிய விலையோ ரூ. 8.50. இதுபோன்றே 90 அலகுகள் விற்க வேண்டுமெனில், விலையை ரூ. 8.25 ஆகக் குறைக்க வேண்டும். இப்போது, மொத்த வருவாய் ரூ. 742.50. இறுதிநிலை வருவாய் ரூ. 6.25 மட்டுமே (விலையோ ரூ. 8.25). இவ்வாறு விலை இறங்க இறங்க, இறுதிநிலை வருவாயானது விலையை விடக் குறைவாகவே ஒவ்வொரு கட்டத்திலும் இருக்கிறது. அட்டவணையில் 6, 7 பத்திகள் இந்தப் போக்கைத் தெளிவாக்குகின்றன. இதன் விளைவு மிகவும் முக்கியமானது. எல்லாரையும் போல முற்றுரிமையாளனும், இறுதிநிலை வருவாயும், இறுதிநிலை உற்பத்திச் செலவும் சமமாவது வரை தொடர்ந்து உற்பத்தி செய்கிறான். ஆனால், இறுதிநிலை வருவாயானது விலையை விடக் குறைவாகவே இருப்பதால், இயல்பாகவே, இறுதிநிலை உற்பத்திச் செலவும் விலையை விடக் குறைவாகவே இருக்கிறது.

அடுத்துள்ள படம் இந்த உண்மையைத் தான் விளக்குகிறது. மிகுதியான அளிப்பைக் குறைவான விலைக்கே விற்க முடிவதால்,




சராசரி வருவாய் வளைகோடு (AR)—அதாவது தேவை வளைகோடு —கீழ்நோக்கிச் சரிகிறது. இறுதிநிலை வருவாயானது ஒவ்வொரு கட்டத்திலும் விலையை விடக் குறைவாக இருப்பதால், இறுதிநிலை வருவாய் வளைகோடு (MR) எப்பொழுதும் சராசரி வருவாய் வளைகோட்டுக்குத் தாழ்வாக இருக்கிறது. OM உற்பத்தி அளவில், இறுதிநிலை உற்பத்திச் செலவும் இறுதிநிலை வருவாயும் சமமாய்

உள்ளன. அதை விட மிகுதியாக உற்பத்தி செய்தால், நட்டமேற்படுவதால் OM உற்பத்தியுடன் சர்வாதீனன் நின்று விடுகிறுன்.

OM உற்பத்தியை OP விலையில் விற்க முடியும். இங்கே மொத்த வருவாய் OMQP. இதே நேரத்தில் மொத்த உற்பத்திச் செலவு OMRS மட்டுமே. எனவே, PQRS இயல்பு கடந்த இலாபத்தை முற்றுரிமையாளன் அடைகிறுன். போட்டியில்லாக் காரணத்தால், புதிய நிறுவனங்கள் புக வழியில்லை. இதனுல் நிலைத்து விற்க முடிகிற இந்த இலாபம் முற்றுரிமை இலாபம் எனச் சொல்லப் படுகிறது. அட்டவணையில் 100 அலகுகள் உற்பத்தி செய்யும் போது, இறுதிநிலை வருவாயும் இறுதிநிலை உற்பத்திச் செலவும் சமமாய் இருக்கின்றன. சர்வாதீனன் 100 அலகுகளே உற்பத்தி செய்கிறுன். இப்போது, ரூ. 250 இயல்பு கடந்த—முற்றுரிமை—இலாபம் பெற முடிகிறது என்பதை அட்டவணையின் இறுதிப் பத்தி காட்டுகிறது.[1]

முற்றுரிமையாளன் சமநிலை அடைவதில் மற்றொரு தனித்தன்மையும் உள்ளது. நிறைவுப் போட்டியில், நிறுவனமானது சமநிலை அடையும்போது, இறுதிநிலை உற்பத்திச் செலவு ஏறுமுகத்ததாய் இருக்க வேண்டும் என்பது ஒரு நியதி. ஆனுல், முற்றுரிமையில் இவ்வாறு இருந்தாக வேண்டும் என்றில்லை. கீழுள்ள அட்டவணைகளின் துணைகொண்டு இதனைக் காணலாம்:

| உற்பத்தி அலகுகள் ரூ. | மொத்த உற்பத்திச் செலவு ரூ. | சராசரி உற்பத்திச் செலவு ரூ | இறுதி நிலை உற்பத்திச் செலவு ரூ. | மொத்த வருவாய் ரூ. | சராசரி வருவாய் ரூ. | இறுதி நிலை வருவாய் ரூ. | இயல்பு கடந்த இலாபம் ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 20 | 156.25 | 7.81 | - | 252.50 | 12.67 | – | 96.25 |
| 30 | 180.00 | 6.00 | 2.37 | 280.00 | 9.33 | 2.75 | 100.00 |
| 40 | 200.00 | 5.00 | 2.00 | 300.00 | 7.50 | 2.00 | 100.10 |
| 50 | 216.25 | 4.32 | 1.62 | 312.50 | 6.25 | 1.25 | 95.75 |
| 60 | 228.75 | 3.81 | 1.25 | 317.50 | 5.26 | 0.50 | 88.75 |

[1] நிறைவுப் போட்டியில் இந்த இயல்பு கடந்த இலாபம் பூஜ்யமாக இருக்கும் என்பதை அதன் தொடர்பான அட்டவணையில் காண்க.

மேலும் மேலும் உற்பத்தி செய்யும் போது, சராசரி உற்பத்திச் செலவும் இறுதிநிலை உற்பத்திச் செலவும் குறைந்து செல்வது அட்டவணையில் சுட்டிக் காட்டப்படுகிறது. மூன்றும் நான்காம் பத்திகளிலிருந்து இதனை உணரலாம். இங்கும் இறுதிநிலை வருவாயும் இறுதிநிலை உற்பத்திச் செலவும் சமமாயிருக்கும் நிலையில் (40 அலகுகளுடன்) உற்பத்தி நிறுத்தப் படுகிறது. உற்பத்தி மேலும் தொடர்ந்தால், உற்பத்திச் செலவு குறைந்து செல்லவே வாய்ப்பிருக்கிறது. இருந்தும், முற்றுரிமையாளன் தொடர்ந்து உற்பத்தி செய்ய முயலாமலிருப்பதற்குக் காரணம் அந் நிலையிலேயே முற்றுரிமை இலாபம் மிகவுயர்ந்த அளவில் (ரூ. 100) இருப்பது தான்.

| உற்பத்தி அலகுகள் | மொத்த உற்பத்திச் செலவு ரூ. | சராசரி உற்பத்திச் செலவு ரூ. | இறுதி நிலை உற்பத்திச் செலவு ரூ. | மொத்த வருவாய் ரூ. | சராசரி வருவாய் ரூ. | இறுதி நிலை வருவாய் ரூ. | இயல்பு கடந்த இலாபம் ரூ. |
|---|---|---|---|---|---|---|---|
| 50 | 250.00 | 5.00 | 5.00 | 575.00 | 11.50 | - | 325.00 |
| 60 | 300.00 | 5.00 | 5.00 | 640.00 | 10.66 | 6.50 | 340.00 |
| 70 | 350.00 | 5.00 | 5.00 | 700.00 | 10.00 | 6.00 | 350.00 |
| 80 | 400.00 | 5.00 | 5.00 | 750.00 | 9.38 | 5.00 | 350.00 |
| 90 | 450.00 | 5.00 | 5.00 | 795.00 | 8.80 | 4.50 | 845.00 |
| 100 | 500.00 | 5.00 | 5.00 | 825.00 | 8.25 | 3.00 | 325.00 |

மேலும் மேலும் உற்பத்தி செய்யும் போது சராசரி உற்பத்திச் செலவும் இறுதிநிலை உற்பத்திச் செலவும் மாறுதிருப்பது மேலே உள்ள அட்டவணையில் சுட்டிக் காட்டப்படுகிறது. மூன்றும் நான்காம் பத்திகளிலிருந்து இவ் வுண்மையை உணரலாம். இங்கும் இறுதிநிலை வருவாயும் இறுதிநிலை உற்பத்திச் செலவும் சமமாய் இருக்கும் நிலையில் (80 அலகுகளுடன்) உற்பத்தி நிறுத்தப்படுகிறது. மேலும் உற்பத்தி செய்தால் உற்பத்திச் செலவென்னவோ மாறப் போவதில்லை. இருந்தும் முற்றுரிமையாளன் தொடர்ந்து உற்பத்தி செய்ய முயலாமல் இருப்பதற்குக் காரணம், அந் நிலையிலேயே முற்றுரிமை இலாபமானது மிகவுயர்ந்த அளவில் (ரூ. 350) இருப்பது தான்.

கடைசி இரு அட்டவணைகளிலுங் கண்ட உண்மையை அடுத்துள்ள இரு படங்களும் காட்டுகின்றன. முதற் படம் இறுதிநிலை உற்பத்திச் செலவு குறைந்து செல்வதையும், இரண்டாவது படம்




இறுதிநிலை உற்பத்திச் செலவு மாருதிருப்பதையும் சுட்டி நிற்கின்றன. இரண்டிலும் PQRS முற்றுரிமை இலாபம் கிடைக்கிறது

முற்றுரிமையாளன் சமநிலை அடையும் போது, இறுதிநிலை உற்பத்திச் செலவு, இவ்வாறு வளர்ந்து செல்வதாகவோ, குறைந்து செல்வதாகவோ, அல்லது மாருதிருப்பதாகவோ இருக்கலாம் என்பது தெளிவாகிறது.

**வேறுபாடு காட்டும் விற்பனை முற்றுரிமை.**

நிறைவுப் போட்டியில் ஒரு பொருளுக்கு ஒரேயொரு விலைதான் அங்காடியில் இருக்க முடியும். ஆனால், முற்றுரிமையாளன் தனியொரு விற்பனையாளன் என்ற முறையில் அங்காடியை வெவ்வேருகப் பகுத்து ஒவ்வோர் இடத்திலும் வெவ்வேறு விலைகளை நிறுவத் தக்கவனாய் உள்ளான். 'ஒரே ஆதிக்கத்தின் கீழ் உற்பத்தியாகிய ஒரே பொருளை வெவ்வேறு விலைகளில் வெவ்வேறு வாங்குவோர்க்கு விற்குஞ் செயலே' 'வேறுபாடு காட்டும் விற்பனை முற்றுரிமை' (Discriminating Monopoly) என்பார் ஜோன் ராபின்சன்.

இந்த வேறுபாடு காட்டுதல் மூன்று வகைகளிலாக நிறைவேற்றப் படலாம்.

**1. ஆள் வேறுபாடு காட்டுதல்**

வெவ்வேறு விலைகளை வெவ்வேறு வாடிக்கைக்காரர்களுக்கு விதிப்பதே 'ஆள் வேறுபாடு காட்டுதல்' (Personal Discrimination).

மருத்துவர் ஒருவர் ஏழைக்குக் குறைந்த கட்டணமும், செல்வந்த னுக்கு ஏறிய கட்டணமும் விதிப்பது இதற்கோர் எடுத்துக்காட்டு. இதுபோல, மாணவர்களுக்குப் போக்குவரவு நிறுவனங்கள், அரைக்கட்டணச் சலுகை வழங்கிவருவது மற்றோர் எடுத்துக்காட்டு.

## 2. இட வேறுபாடு காட்டுதல்

ஒரே பொருளை ஓர் இடத்தில் உயர்ந்த விலையிலும், மற்றோர் இடத்தில் குறைந்த விலையிலும் விற்பதே 'இட வேறுபாடு காட்டு தல்'(Place Discrimination). தரமான நூல்களைக் குறைந்த விலைக்கு 'ஆசியப் பதிப்புக்கள்' என வெளியிடும் சில வெளி நாட்டு வெளியீட் டகங்கள், அந் நூல்கள் அமெரிக்கா போன்ற நாடுகளில் குறைந்த விலைக்கு விற்கப்படமாட்டா என அறிவித்திருப்பது இதற்கோர் எடுத்துக்காட்டு. சென்னையில், மூர்மார்க்கெட்டிலும் சைனா பஜா ரிலும் ஒரே பொருளுக்கு இரு விலைகள் நிலவுவது மற்றோர் எடுத்துக் காட்டு.

## 3. தொழில் வேறுபாடு காட்டுதல்

ஒரு தொழிலில் குறைந்த விலையும் மற்றொரு தொழிலில் அதே பொருளுக்கு உயர்ந்த விலையும் விதிப்பதுதான் 'தொழில் வேறுபாடு காட்டுதல்' (Trade Discrimination). மின்சார வாரியம், விளக்கு ளுக்கு வீடானால் குறைந்த விலை, பிற இடங்களானால் சற்றுக் கூடு ல் விலை, தொழில் நிறுவனங்களுக்கு இன்னுங் குறைந்த விலை, யிர்த் தொழிலுக்கு மிகக் குறைந்த விலை என விதித்திருப்பது தற்கோர் எடுத்துக்காட்டு. இங்கிலாந்து நாட்டிலும் பால் விற் ன வாரியம், குடிக்கப் பயன் படுத்தும் பாலுக்கு உயர்ந்த விலை ம், பாலைக்கொண்டு பிற பொருள்களை உற்பத்தி செய்பவர்களுக் குக் குறைந்த விலையும் விதித்திருப்பது மற்றோர் எடுத்துக்காட்டு.

பேராசிரியர் பிகு, விலை வேறுபாடு காட்டுதலில் மூன்று படி யளவு அல்லது தரங்கள் (Degrees) உண்டெனச் சொல்வார். முதல் தர விலை வேறுபாட்டில் ஒவ்வோர் அலகுக்கும் வெவ்வேறு விலை வாங்கப்படும். ஒவ்வோர் அலகுக்கும் நுகர்வோன் எவ்வளவு தரச் சித்தமாயுள்ளானோ, அவ்வளவும் விலையாக வாங்கப்படும். இத னால் நுகர்வோர் எச்சப்பாடு எதுவும் இராது. இரண்டாம் தரத்தில் சில விலை மண்டலங்கள் இருக்கும். x விலைக்கு மேற்பட்ட தேவை விலையைப் பெறக் கூடிய எல்லா அலகுகளும் x விலையில் விற்கப் படும். x-ஐ விடக் குறைவான, ஆனால் y-ஐ விட உயர்வான தேவை விலையைப் பெறக்கூடிய எல்லா அலகுகளும் y விலையில் விற்கப்படும். இப்படியே படிப்படியாக ஒரு மண்டிலத்தின் அடித்

தள விலையில் அம் மண்டிலத்தைச் சார்ந்த தேவைகள் நிறைவேற்றப்படும். மூன்றும் தரத்தில் அங்காடியில் உள்ளவரை எல்லாம் பல்வேறு தொகுதிகளாகப் பகுத்து ஒவ்வொரு தொகுதிக்கும் வெவ்வேறு விலை விதிக்கப்படும். இம் மூன்று தர விலை வேறுபாடு காட்டுதலும் கருத்தியல் கண்ணோட்டத்தில் இயல்வதேயாயினும் நடைமுறையில் இறுதித் தரமே செயல்படுகிறது.

வேறுபாடு காட்டுதல் சில சூழல்களிலேயே இயல்வதாகும். முதலில் விலை குறைந்த அங்காடியில் விற்கிற பொருளை, விலை உயர்வாயுள்ள அங்காடிக்கு மாற்றுவது இயலாத வொன்றுயிருக்கவேண்டும். மேலே சொன்ன மருத்துவனது பணியைப் பொருத்தவரை அதனை இடமாற்ற முடியாதென்பது தெளிவு. குறைந்த கட்டணத்துக்காகக் குறிப்பிட்ட சிகிச்சையை ஏழை ஒருவனை முதலில் பெறச் செய்து, அவனிடமிருந்து அதனைத் திரும்பப் பெறச் செல்வந்தனுல் இயலாது.

இரண்டாவதாக, உயர்ந்த விலை நிலவும் அங்காடிக்குரிய வாடிக்கைக்காரர்கள் குறைந்த விலை நிலவும் அங்காடிக்கு இடம் பெயரவும் இயலாதிருக்க வேண்டும். மருத்துவர் பணியைக் குறைந்த கட்டணத்தில் பெறுவதற்காகச் செல்வந்தன் ஏழையாக மாறிவிடுவதும் இயல்பாக நடப்பதல்ல.

வேறுபாடு காட்டும் முற்றுரிமை குறிப்பிட்ட நிலைகளிலேயே இலாபகரமாயிருக்கும்; அங்காடியில் தேவை நெகிழ்ச்சி வேறுபட்டிருக்க வேண்டும்: தேவை நெகிழ்ச்சியுடனிருக்கும் அங்காடியில் விலையைக் குறைத்து வைத்துத் தனது இலாபத்தை மிகவுயர்ந்த அளவுக்கு முற்றுரிமையாளனுல் பெருக்கிக் கொள்ள முடியும். இது போன்றே தேவை நெகிழ்ச்சியற்றிருக்கும் அங்காடியில் உயர்ந்த விலை விதிப்பது அவனுக்கு இலாபந் தரும். இரண்டு அங்காடிகளிலும் அவ்வவற்றிற்குரிய இறுதிநிலை வருவாயும்—இறுதிநிலை உற்பத்திச் செலவையும் சமப்படுத்திக் கொள்வது இயற்கை. இரண்டு அங்காடிகளிலும் தேவை நெகிழ்ச்சியானது ஒரே தன்மையில் இருந்தால் இறுதிநிலை வருவாயில் வேறுபாடுகள் இருக்க வழி இல்லை. இதனுல் விலை வேறுபாடு காட்டவும் வழியில்லை.

வேறுபாடு காட்டும் முற்றுரிமையில் விலையும் உற்பத்தியும் நிருணயமாகும் முறையை இனிப் பார்க்கலாம். A, B என இரு அங்காடிகள் இருப்பதாகவும், இவற்றில் A அங்காடியில் தேவை நெகிழ்ச்சியற்றிருப்பதாகவும், B அங்காடியில் தேவை நெகிழ்ச்சியுடன் இருப்பதாகவும் வைத்துக்கொள்வோம். A அங்காடியில் உயர்ந்த விலை

யும், B அங்காடியில் குறைந்த விலையும் விதிக்கப்படும் என்பது தெளிவு. இதனால், A-இல் விற்பனை குறைய, B-இல் விற்பனை மிகுந்து செல்லலாம்: இதனால் A-இலிருந்து பொருளானது B நோக்கிச் செல்ல நேரும். பொருளின் இறுதிநிலை வருவாய் இரு அங்காடிகளிலும் சமமாக இருக்கும்போது தான் இந்தப் போக்கு ஒரு முடிவுக்கு வரும்.

அடுத்து இரு அங்காடிகளிலும் இறுதிநிலை வருவாயானது, மொத்த உற்பத்தியின் இறுதிநிலை உற்பத்திச் செலவுக்குச் சமமாகவும் இருந்தாக வேண்டும். ஏதாவது ஓர் அங்காடியில் இறுதிநிலை உற்பத்திச் செலவானது, இறுதிநிலை வருவாயை விடக் கூடுதலாக இருந்தால், அங்கு விற்பனையைக் குறைப்பதால் முற்றுரிமையாளன் இலாபம் பெருகும்; இதற்கு நேரெதிரான நிலை நிலவும் அங்காடியில் விற்பனையை மிகுப்பதால் இலாபத்தைப் பெருக்க முடியும். எனவே, முற்றுரிமையாளன் சமநிலை அடைய இறுதிநிலை வருவாயும் இறுதிநிலை உற்பத்தி செலவும் சமமாக இருக்க வேண்டும் என்றாகிறது. இவ்வாறு, அங்காடி A-இல் இறுதிநிலை வருவாய் = அங்காடி B-இல் இறுதிநிலை வருவாய் = மொத்த உற்பத்தியின் இறுதிநிலை உற்பத்திச் செலவு என்ற சமன்பாடு ஏற்படும்போது தான் சமநிலை தோன்றும் என்பது தெளிவாகிறது. கீழ்வரும் படம் இதனை விளக்கும்:




சராசரி வருவாய் வளைகோடுகளின் ($AR_A$ & $AR_B$) சரிவுகளிலிருந்தே A அங்காடி தேவை நெகிழ்ச்சியற்றது என்பதையும் புரிந்து

கொள்ளலாம். C படம் மொத்த உற்பத்தியைச் சுட்டிக் காட்டுகிறது: அதில் OM உற்பத்தியே மிகவுயர்ந்த இலாபந்தரும் அளவு ஆகிறது; இறுதிநிலை வருவாயும், இறுதிநிலை உற்பத்திச் செலவும் அந்த அளவில் தான் சமமாக இருக்கின்றன. (CMR வளைகோடானது $MR_A$, $MR_B$ வளைகோடுகளைப் பக்கவாட்டில் கூட்டியதன் வழியாகக் கிடைக்கப் பெற்றது). QM இறுதிநிலை வருவாய் இரண்டு அங்காடிகளிலும் சமமாக உள்ளது. A-இல் $OM_A$-உம், B-இல் $OM_B$-உம் விற்பனையாகும். விலையோ A-இல் $OP_A$ ஆகவும், B-ல் $OP_B$ ஆகவும் இருக்கும். முற்றுரிமையாளன் மொத்த இலாபம் TQR.

வேறுபாடு காட்டுதல் நேர்மையன்று என்று சொல்லலாம். ஆனால், வேறுபாடு காட்டுவதிலும் இரு நன்மைகள் உள்ளன. வேறுபாடு மட்டும் காட்டவில்லையெனில், சில பொருள்களை உற்பத்தி செய்ய இயலாமலே போகலாம். மருத்துவரைப் பொருத்தவரையிலுங்கூட, செல்வந்தனுக்கு ஏறிய கட்டணத்தை விதிக்காவிட்டால், பணி செய்யவே இயலாது போகலாம். இரண்டாவதாக, தேவை நெகிழ்ச்சி மிக்க அங்காடி ஏழைகளுடையதாகவும், நெகிழ்ச்சி குறைந்த அங்காடி செல்வந்தர்களுடையதாகவும் இருந்தால், செல்வந்தர் இழப்பதைவிட, ஏழைகள் பெறுவது மிகுதியாக இருக்கும். இதனால் ஆக மொத்த நலம் மிகலாம்.

## முற்றுரிமைப் போட்டி

நிறைவுப் போட்டியும் தூய முற்றுரிமையும் ஆசிரியர் கற்பனையில் தோன்றியவை. ஆனால், நடைமுறையில் காண்பது என்னவோ, இவ் விரண்டுங் கலந்த நிலையிலுள்ளதோர் அங்காடி வகையே. இங்கு மிகப் பல விற்போரையோ, அல்லது ஒரேவொரு விற்போனையோ காண முடியாது. ஒன்றுக்கு மேற்பட்ட விற்போர்கள் இருப்பினும், அவர்கள் ஒவ்வொருவரும் ஓரளவு முற்றுரிமை ஆற்றல் உள்ளவர்களாகவும் இருக்கின்றனர். நாளிதழ்களை எடுத்துக் கொள்வோம். ஒவ்வோர் இதழுக்கும் குறிப்பிட்ட அளவு வாசகர்கள் இருக்கின்றனர்; அந்த அளவுக்கு அவற்றுக்கு முற்றுரிமை ஆற்றல் இருக்கிறது: குறிப்பிட்ட நாளிதழை வாசித்து வருபவன் அதனையே தொடர்ந்து வாசித்து வருவது தான் இதற்குக் காரணம். அதே நேரத்தில் வாசகர்களைக் கவர்வதற்காக எல்லா நாளிதழ்களும் போட்டியிட்டுக் கொண்டுதான் இருக்கின்றன. எனவே, முற்றுரிமையாளர்களிடையே இங்குப் போட்டி நிகழ்வதால், இது முற்றுரிமைப் போட்டி எனப்படுகிறது. இங்கே, போட்டி நிறை

வற்றிருப்பதால், இது நிறைகுறைப் போட்டி என்றும் அழைக்கப் படுகிறது.[1]

நிறைவுப் போட்டியிலும் தூய முற்றுரிமையிலும் ஒப்பான பொருள்களே விற்கப்படுகின்றன. ஆனால், முற்றுரிமைப் போட்டி யில், போட்டியிடுவோர் விற்கும் பொருள் ஒப்பான தன்மைய தென்று சொல்ல முடியாது; அதே நேரத்தில் ஆழமான வேறுபாடு இருப்பதாகவும் சொல்ல முடியாது. எல்லா நாளிதழ்களும் கிட்டத் தட்ட ஒரே செய்திகளைத் தான் நாள்தோறும் தருகின்றன. இருந் தாலும், குறிப்பிட்டவொரு நாளிதழைத் தொடர்ந்து படித்து வருப வன், அதில் ஏதோ சில வேறுபாடுகளைக் காண்பதால், அவ்விதழ் பிறவற்றிலிருந்து வேறுபட்டதாக அவனுக்குத் தோற்றமளிக்கிறது. இதற்குக் காரணம் அந்த அளவுக்கு, விற்போர் தம்முடைய பொருள்களை வேறுபடுத்திக் காட்டுவது தான்.

இந்தப் 'பொருள் வேறுபாடு' (Product Differentiation) பல வழிகளில் இயல்வதாகிறது. வர்த்தகக் குறிகளை இடுவது ஒரு வழி. பொருளைத் தக்க பருமனில், வண்ணத்தில், பொதிகளில், இடத் தில் வழங்குவது மற்றொரு வழி. பழக்க வழக்கங்களாலும், போக்கு வரவுச் செலவுகளாலும், நுகர்வோன் மாற்றுப் பொருள்கள் பற்றி அறியாத காரணத்தாலும்கூட இவ்வாறு பொருள் வேறுபாடு இயல்வதாகலாம். இதன் விளைவு, விற்போர் தம் பொருளின் மீது ஓரளவு முற்றுரிமை பெற்றவர்களாவது தான். வேறு சொற்களில் கூறுவதானால், இங்குத் தொழில் எனவொன்று இல்லை என்று கூடக் கொள்ளலாம்.

இந்தப் பொருள் வேறுபாட்டை நிலை பெறச் செய்யவும் முற்று ரிமைப் போட்டியில் இடையறாது முயன்றாக வேண்டும். இதற் காகத் தான் இங்கு 'விற்பனைச் செலவு' (Selling Costs) எனத் தனியாக வேறு செலவிட வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. சேம்பர்லின் கூறுவது போல, 'விலை பொருளுடைய தேவை வளை கோட்டின் வடிவத்தை, அல்லது நிலையை, மாற்றுவதற்காக இடுகிற செலவுகளே 'விற்பனைச் செலவுகள்'. இச் செலவுகள் தேவை வளைகோட்டை வலப்புறம் நகர்த்தும் நோக்கத்தில் இடம் பெறுபவை—அதாவது, நடப்பு விலையில் மிகுதியாக விற்க, அல்லது

[1] முற்றுரிமைப் போட்டிக்கும் நிறைகுறைப் போட்டிக்குமிடையே வேறுபாடொன் றைக் குறிப்பிடுவது உண்டு. 'பொருள் வேறுபாடு' நிலவும் போது, அந் நிலையை 'முற்றுரிமைப் போட்டி' என்று சிறப்பாகவும், பிற வகைகளில் அங்காடி நிறைவற்றி ருக்கும் போது, அந் நிலையை 'நிறைகுறைப் போட்டி' என்று பொதுவாகவும் சொல் வதுண்டு.

உயர்ந்த விலையில் இப்போது விற்கிற அளவு விற்க இச் செலவுகள் இடப் பெறுகின்றன. நாளிதழ்களும் 'செய்திகளை முந்தித் தருவது' 'சுடச் சுடத் தருவது' என்றெல்லாம் தம்மை அடிக்கடி விளம்பரப் படுத்திக் கொள்வதைப் பார்க்கிறோம். வேறு சில நிறுவனங்கள் விற்பனையாளர்களைத் தனியாக அமர்த்துகின்றன; மருந்தகங்கள் இதற்கோர் எடுத்துக்காட்டு. பெரும்பான்மை பற்பசை நிறுவனங் கள் சில பரிசுகளைத் தம் பொருளுடன் வழங்குவது விற்பனைச் செலவிடும் வழிகளில் மற்றொன்று. தம்முடைய பொருள்களை அறி முகப்படுத்தும் வகையில்—சில நேரங்களில் நினைவூட்டும் வகையில் நிறுவனங்கள் விழாக்கள் நடத்துவதும் விளம்பரம் செய்வதும் வழக்கம். வெண்ணிற லக்ஸ் சோப்பு, 1961-இல் வானவில்லின் நிறங்களில் புதிதாக அறிமுகப்படுத்தப்பட்ட போது, குறிப்பிட்ட நிறுவனம் விழாவே நடத்தியது. 'ஓவல்டின்' மீண்டும் வந்த போதும் நாடெங்கும் பெரிய அளவில் விளம்பரங்கள் நடந்ததைப் பார்க்க முடிந்தது. இவற்றிலிருந்து உண்மையொன்றை அறிந்து கொள்ள முடியும். முற்றுரிமைப் போட்டியில், விற்போன் தன்னு டைய வழக்கமான வாடிக்கைக்காரர்களை எந்த நேரத்திலும் நழுவ விட்டுவிடக் கூடிய பேராபத்து இருக்கிறது. அந்த அளவுக்கு அவன் முற்றுரிமை ஆற்றல் குறைவாகவே இருக்கிறது.

இந்தச் சூழலின், முற்றுரிமைப் போட்டியின், எவ்வாறு பொரு ளின் மதிப்பு முடிவு செய்யப்படுகிறது எனப் பார்ப்போம். இங்கும் விற்போன் நோக்கம் மிக உயர்ந்த இலாபத்தை ஈட்ட வேண்டும் என்பது தான். இறுதிநிலை வருவாயும் இறுதிநிலை உற்பத்திச் செலவும் சமமாகும் நிலையுடன் உற்பத்தியை நிறுத்தும்போது இது இயல்வதாகும். எனவே, நிறைவுப் போட்டியிலும், முற்றுரிமையிலும் நிகழ்வது போன்றே முற்றுரிமைப் போட்டியிலும் இறுதிநிலை வருவா யும் இறுதிநிலை உற்பத்திச் செலவும் சமமாயிருக்கும் அளவு உற்பத் தியாகும். ஆனால், இங்கே இறுதிநிலை உற்பத்திச் செலவு என்று சொல்லும்போது, வழக்கமான உற்பத்திச் செலவு மட்டுமன்றி, அத் துடன் விற்பனைச் செலவும் சேர்கிறது என்பதை மறந்து விடலா காது. (சில மருந்துகளின் விலையில் 45 சதவீதமும் அவற்றின் விற்பனைக்காக இடப்பட்டுள்ள செலவாக இருப்பதிலிருந்து விற் பனைச் செலவின் முக்கியத்துவத்தை உணரலாம்.)

முற்றுரிமைப் போட்டியில் பெரும்பான்மையினராக விற்போர் இல்லாத காரணத்தால், தனியொரு விற்போன் செயல்கள் பொருள் விலையைத் தாக்காமல் இருக்க முடியாது. தனியொரு விற்போன் அளிப்பு, விலையை மாற்றத் தக்கது என்பதே இதன் பொருள்; மேலும் மேலும் அலகுகளை விற்க வேண்டுமெனில், விலையைக்

குறைத்தாக வேண்டும். இங்கே, முற்றுரிமைக்கும் முற்றுரிமைப் போட்டிக்கும் இடையே நிலவும் ஒப்புமை தெளிவாகிறது. முற்றுரிமையில் நிகழ்வது போன்றே, இங்கும் நிறுவனத்தை எதிர்நோக்கும் தேவை வளைகோடு கீழ்நோக்கிச் சரிவதோடு, அதற்குத் தாழ்வாகவே இறுதிநிலை வருவாய் வளைகோடும் சரிந்து செல்லும் நிலையும் ஏற்படுகிறது. இதனால், இறுதிநிலை வருவாய்க்குச் சமமாயிருக்கும் இறுதிநிலை உற்பத்திச் செலவு, விலையைவிடக் குறைவாகவே இருக்கும். விலையானது இறுதிநிலை வருவாயைவிட உயர்வாயிருப்பதால், உற்பத்தியாளன் இயல்பு கடந்த இலாபம் பெறுவதும் நிகழத் தக்கதாகிறது. அடுத்துள்ள படத்தில் PQRS இவ் வகை இலாபத்தைக் குறிப்பிடுகிறது.




இந்நிலை முற்றுரிமையின் தொடர்பாக ஏற்படுவதிலிருந்து மாறுபட்டதாக இல்லை. இருப்பினும், இந் நிலை முற்றுரிமைப் போட்டியில் குறுங் காலத்தில் மட்டுமே ஏற்படும். விற்போர் முற்றுரிமை ஆற்றல் பெற்றிருந்தாலும், அவர்களிடையே போட்டி நிலவுவது இங்கு நினைவுகூரத் தக்கது. இதனால் எந்தவொரு நிறுவனம் இயல்பு கடந்த இலாபம் பெருகிறதோ, அத்துடன் பிற நிறுவனங்கள் தீவிரமாகப் போட்டியிடுகின்றன; புது நிறுவனங்கள் புகவும் தடையில்லை. குறிப்பிட்ட நிறுவனம் கடைப் பிடிக்கும் அதே உற்பத்தி முறைகளையும் விற்பனை முறைகளையும் பிறவும் பின்பற்றுகின்றன. இதனால் நெடுங் காலத்தில் குறிப்பிட்டவொரு நிறுவனம் இயல்பு கடந்த இலாபம் பெற வழியில்லாது போகிறது. ஒவ்வொரு நிறுவனமும் இயல்பான இலாபத்தையே நெடுங் காலத்தில் பெற முடியும் என்பதுதான் இதன் பொருள். இவ்வாறு, முற்றுரிமைப்

போட்டியில், நெடுங் காலச் சமநிலை, நிறைவுப் போட்டியில், நெடுங் காலத்தில் நிகழ்வதைப் போன்று, ஒருவகையில் உள்ளது. அடுத்துள்ள படம் இதனை விளக்கும். படத்தில் OM அளவு OP




விலையில் விற்கப்படும். மொத்த வருவாயும் மொத்த உற்பத்திச் செலவும் சமமாக (OMQP) இருப்பதால் இயல்பு கடந்த இலாபம் எதுவுமில்லை.

ஆனால், இந்தச் சமநிலையில் (நிறைவுப் போட்டியுடன் ஒப்பிடும் போது) முக்கியமானதொரு வேறுபாடிருப்பதை மறந்துவிட வழியில்லை. நிறைவுப் போட்டியில் நிறுவனத்தை எதிர்நோக்கும் தேவை வளைகோடு படுகிடைக் கோடாயிருக்கும். ஆனால், முற்றுரிமைப் போட்டியிலோ, இது கீழ்நோக்கிச் சரிந்து செல்கிறது. இதனால், நிறைவுப் போட்டியில் முடிவானதை விடக் குறைவானதோர் உற்பத்தி அளவில், இங்கே சமநிலை ஏற்பட்டு விடுகிறது. மேலேயுள்ள படத்திலும் இறுதிநிலை உற்பத்திச் செலவும் சராசரி உற்பத்திச் செலவும் சமமாகும் அளவுக்கு உற்பத்தி நிகழ வேண்டுமெனில், OM-ஐ விட மிகுதியாக உற்பத்தி செய்ய வேண்டும் என்பது புலப்படும். OM-ஐ விட மிகுதியாக உற்பத்தி செய்வதால் சராசரி உற்பத்திச் செலவு குறையவும் வாய்ப்பிருக்கிறது. ஆனால், அந்நேரத்தில் வருவாயும் குறைகிறது. எனவே, உற்பத்தியானது உத்தம அளவை எட்டும் முன்பே நிறுத்தப்பட்டு விடுகிறது. இதனால், நிறைவுப் போட்டிக்கு மாறுபட்ட நிலையில், முற்றுரிமைப் போட்டியிலுள்ள நிறுவனங்கள் உத்தம அளவினதாக இருப்பது இல்லை. இப்படிச் சொல்லும் போது, நிறுவனங்களின் சராசரி

உற்பத்திச் செலவு மிகக் குறைந்த அளவினதாக இல்லை என்பது தெளிவாகிறது. இதனால், முற்றுரிமைப் போட்டியில் உயர்ந்த அளவு உற்பத்திச் செலவுள்ள நிறுவனங்கள் தொடர்ந்து நிலவ வழியேற் படுகிறது. இங்கு முற்றுரிமைப் போட்டியானது நிறைவுப் போட்டி யிலிருந்து வேறுபட்டதாகிறது.

### விற்பனைச் செலவுகள்

முற்றுரிமைப் போட்டியில் விற்பனைச் செலவுகள் தவிர்க்க இயலாதன. உற்பத்திச் செலவுகளுடன் ஒப்பிடும்போது இவ்வகைச் செலவுகள் சில நிலைகளில் வேறுபடுகின்றன. முதலாவதாக, இவற்றின் விளைவு பற்றித் திட்டவட்டமாக எதையும் எதிர்பார்க்க முடியாது. சில நேரங்களில் பலன் ஏற்படலாம்; சில நேரங்களில் பலன் தராதுப் போகலாம். பலன் தரும்போது இடுகிற செலவுக்கும் அதனால் வளர்கிற தேவைக்கும் இடையே நிருணயமான சில வீதங் கள் இருப்பதாகச் சொல்ல முடியாது. விற்பனைச் செலவுகளின் பலன் அவற்றால் கவரப் பெற வேண்டிய மனிதனுடைய உள்ளத் தைச் சார்ந்திருப்பதே இதற்குக் காரணம். இரண்டாவதாக, விற் பனைச் செலவுகள் விரைவில் தொற்றிக் கொள்வனவும் ஆகும். ஒரு நிறுவனம் விற்பனைச் செலவிடத் தொடங்கினால், தொடர்புள்ள அடுத்த நிறுவனமும் அதை அப்படியே பின்பற்றியாக வேண்டும். ஒரு பெட்ரோல் கிடங்கு இலவசக் காற்றுதவி நல்கினால் அதனால் தம்முடைய வாடிக்கையாளர்கள் கவரப்பட்டு விடலாகாதே எனப் பிற போட்டி நிறுவனங்களும் இலவசக் காற்றுதவி நல்க வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. இதனால், குறிப்பிட்ட தொழிலில் அது ஒரு பொதுச் செலவினமாகிறது: இறுதியில் அதிக விலைகளின் வழியாக, அது நுகர்வோர் தலைக்கு மாற்றப்பட்டும் விடுகிறது. மூன்றாவதாக, குறிப்பிட்ட நிறுவனத்தின் விளம்பரமானது, அதே தொழிலில் ஈடு பட்டுள்ள மற்றொரு நிறுவனத்தின் தேவையை மிகுப்பதற்கு உதவி செய்வதாகி விடலாம். வானொலிப் பெட்டி நிறுவனமொன்று தன் னுடைய பெட்டியை விளம்பரப்படுத்தலாம். இதனால், வானொலிப் பெட்டி வாங்க வேண்டும் என்ற பொதுவான ஆர்வம் வளர்க்கப்படு கிறது. இதன் விளைவாகக் குறிப்பிட்ட நிறுவனத்தின் வானொலிப் பெட்டியைத் தான் நுகர்வோன் வாங்க வேண்டும் என்றில்லை: ஏதாவதொரு வானொலிப் பெட்டி வாங்க வேண்டும் என்று அவனைத் தூண்டவும் செய்யலாம் அல்லவா?

விற்பனைச் செலவுகள் இவ்வாறு தனித் தன்மை பெற்றுத் திகழ்கிற போதிலும், அவற்றின் பொதுவான போக்கு உற்பத்திச் செலவுகளைப்போன்றே இருக்கும். வழக்கமான சராசரி உற்பத்திச்- செலவு வளைகோடு 'U' வடிவத்தில் இருக்கும். விற்பனைச் செலவு

வளைகோடுகளும் இவ்வாறே இருக்கும். சராசரி விற்பனைச் செலவு முதலில் குறைந்து சென்று, பின்னர் வளர்ந்து செல்லும். மேலும் மேலும் விற்பனைச் செலவிடும் போது, தொடக்கத்தில் சராசரி விற்பனைச் செலவு குறையக் காரணம், விற்பனைச் செலவு மிகுந்துள்ள வீதத்தினும் மிகுதியாக விற்பனையானது மிகுந்து செல்வது தான். மிகுதியான நிருவாகத் திறமை, சிறந்த விற்பனைத்திறன் முதலியன இதற்குக் காரணம். ஆனால், ஒரு நிலைக்குப்பின் குறைந்து செல்வினையே கிடைக்கிறது: வளர்ந்து செல் விற்பனைச் செலவு தன் வீதத்தைவிடக் குறைவாகவே விற்பனையை மிகுக்கிறது. இதற்கும் காரணங்கள் இல்லாமலில்லை. குறிப்பிட்ட நிலைக்குப் பின்னரும் மிகுதியாக விற்பனையாக வேண்டுமானால், வழக்கமான வாடிக்கையாளர்களை மிகுதியாக வாங்க வைக்க வேண்டும்; அல்லது, பிற நிறுவனங்களின் வாடிக்கையாளர்களைத் தன்பால் ஈர்க்க வேண்டும். இவை இரண்டுக்கும் எல்லையுண்டு. வழக்கமான வாடிக்கையாளர்கள் பிற பொருள்களையும் வாங்க வேண்டும்; எந்தப் பொருளை வாங்க வேண்டுமானாலும் வருமானம் அதற்கோர் எல்லை கட்டிவிடுகிறது. பிற நிறுவனங்களின் வாடிக்கையாளர்களை இழுக்க வேண்டுமானால், அந் நிறுவனங்கள் வேறு விற்பனைச் செலவுகளை இட்டுக் கொண்டிருக்கின்றன. இவ்வாறு, குறிப்பிட்ட நிலைக்கு அப்பால் சராசரி விற்பனைச் செலவு வளைகோடு மேல்நோக்கிச் செல்வது இயல்பாகிறது.

விற்பனைச் செலவுகள் இரு வகைகளில் இடப்படலாம். உற்பத்தியின் வீதத்திற்கேற்ப விற்பனைச் செலவுகளை இடுவது ஒரு வகை; ஒரு குறிப்பிட்ட தொகையை நிலைத்த அளவு விற்பனைச் செலவாக இட்டு விடுவது அடுத்த வகை. ஒரு சீசா தலைவலிப் பூச்சு மருந்துக்கு ஒரு சீப்பு இலவசமாகக் கொடுக்கப்பட்டால், இங்கு பூச்சு மருந்து உற்பத்தி சீசாக்களாகப் பெருகப் பெருக அதே வீதத்தில் சீப்பிலிடும் (விற்பனைச்) செலவும் வளர்ந்து செல்லும். இதனால், புதிய சராசரி உற்பத்திச் செலவு வளைகோடானது பழைய சராசரி உற்பத்திச் செலவு வளைகோட்டில் வலப்புறம் ஒரு சீப்புச் செலவின் அளவுக்கு இடம் விட்டுக் கிடக்கும். இதற்கு மாறாக, குறிப்பிட்ட அளவு நிலைத்த செலவிடும்போது, அச் செலவினை மொத்த உற்பத்தியில் பகிர்ந்திடும்போது, குறைந்த உற்பத்தி அளவில் விற்பனைச் செலவு வீதம் மிகுதியாகவும், கூடுதல் உற்பத்தி அளவில் விற்பனைச் செலவு வீதம் குறைவாகவும் இருக்கும். இங்கே, சராசரி உற்பத்திச் செலவு வளைகோட்டுக்கும், அத்துடன் விற்பனைச் செலவையும் சேர்க்கும்போது கிடைக்கும் புதிய வளைகோட்டுக்கும் இடையேயுள்ள இடைவெளி தொடக்க நிலையில் மிகுதியாக இருந்து, பின்னர் வரவரக் குறைந்து செல்லும்.

விற்பனையாளன், தான் இடுகிற விற்பனைச் செலவின் அளவினைப் பற்றிச் சிந்திப்பது இல்லை: அவ்வாறு இடுகிற செலவால் தன்னுடைய இலாபம் எவ்வாறு பாதிக்கப்படுகிறது என்பதையே அவன் கவனிப்பான். எந்த அளவு விற்பனைச் செலவில் தன்னுடைய இலாபம் மிகவுயர்ந்த அளவினதாக இருக்கிறதோ, அந்த அளவினையே அவன் இறுதியில் தேர்ந்தெடுப்பான். இறுதிநிலை விற்பனைச் செலவும், அதனால் மிகும் இறுதிநிலை வருவாயும் சமமாகும் வரை அவன் விற்பனைச் செலவிடுவான் என்று கூறலாம். அப்போதுதான் விற்பனைச் செலவால் அவன் பெறும் ஆதாயம் மிக உயர்ந்த அளவினதாக இருக்கும்.

அடுத்துள்ள படம் இதனை ஒரு வகையில் விளக்குகிறது.[1] தொடக்கத்தில் OM, OP விலையில் விற்கப்படுவதாக வைத்துக்




கொள்வோம். இப்போது PQRS இலாபம். இனி, விற்பனைச் செலவிடுவதால், நிறுவனத்தின் தேவை வளைகோடு ($AR_1$) வலப்புறம் நகர்கிறது. புதிய சராசரி உற்பத்திச் செலவு வளைகோடு $AC_1$ இப்போது $OP_1$ விலையில் $OM_1$ விற்பனையாகிறது; இலாபம் $P_1Q_1R_1S_1$. இது PQRS-ஐவிட மிகுதியாக இருப்பதால், குறிப்பிட்ட

[1] இங்கு MR, MC வளைகோடுகள் வரையப்படவில்லை. எளிமை கருதி அவை இங்கு நுழைக்கப்படவில்லை.

அளவு விற்பனைச் செலவு உற்பத்தியாளனால் வரவேற்கப்படுகிற ஒன்றேயாகும்.

விற்பனைச் செலவிட்டுப் போட்டியிடுவதற்குப் பதிலாக, விலையைக் குறைத்து விற்றால் என்ன என்ற வினாவை, இறுதியாக ஆராயலாம். நுகர்வோன் கண்ணோட்டத்தில் விலைக் குறைப்பு நன்மையே; சமூகக் கண்ணோட்டத்தில் விற்பனைச் செலவுகள் பாழே. ஆனால், விற்போனைப் பொருத்தவரை விளம்பரம் எதிர்பார்த்த பலனைத் தரவில்லையெனில், அதனை அப்படியே நிறுத்தி விடலாம். ஆனால், ஒரு முறை குறைத்த விலை பயன்தரவில்லையெனில், அதனை மறுபடி உயர்த்துவது என்பது அவ்வளவு எளிதன்று. மேலும், போட்டி நிறுவனங்கள் எதிர் நடவடிக்கையில் ஈடுபட விலைக்குறைப்பு காரணமாகும் அளவுக்கு விற்பனைச் செலவுகள் ஆவதில்லை. இறுதியில், போட்டி நிறுவனங்கள் விலையைக் குறைத்து விட்டால், முதலில் குறைத்த நிறுவனம், தான் எதிர்பார்த்த பலனைப் பெறமுடியாத நிலை ஏற்பட்டுவிடும்.

விற்பனைச் செலவினை வரவேற்பவர்களும் இல்லாமல் இல்லை. விளம்பரம் குறிப்பிட்ட பொருளின் வழியாக ஒருவன் பெறும் நிறைவை மிகுக்கலாம். 'நான் ஓட்டும் ஒரு மலிவான உந்து வண்டி, ஒரு 7000·00 டாலர் உந்து வண்டியின் அளவு நல்லது என என்னை நம்ப வைப்பதில் ஒரு விளம்பரமிடுவோன் வெற்றி பெற்று, நான் அந்த உந்து வண்டியை என்னுடைய உரிமையாக வைத்திருப்பதுவரை நம்பியிருந்தேனானால், உந்து வண்டியிலிருந்து நான் பெறுகிற நிறைவு பெரிதும் மிகுக்கப்பட்டுள்ளதோடு, என்னுடைய நல்வாழ்வு உணர்வும் விளம்பரத்தால் மிகுக்கப் பெற்றுள்ளது' என்பார் மேயாஸ். விளம்பரங்கள் பல்வேறு பொருள்களையும் பல்வேறு நிறுவனங்களையும் நுகர்வோனுக்கு அறிமுகப்படுத்தி வைக்கின்றன. இதனால், வாங்குவோர் நிலையறிந்து தேர்ந்தெடுக்க முடிகிறது. இதுவும் விளம்பரங்களால் ஏற்படும் ஒரு நன்மை அல்லவா ?

**சிலவர் விற்பனை**

நிறைகுறைப் போட்டியில் சிலவர் விற்பனை ஒரு வகை[1]. இங்கே, அங்காடியில் விற்பனை நிறுவனங்கள் சிலவாக இருக்கும்.

[1] இதற்கு ஆங்கிலத்தில் 'ஆலிகாப்பலி' (Oligopoly) என்று பெயர். இச்சொல் ('Oligoi' 'Pollein' என்ற) இரு கிரேக்கச் சொற்களிலிருந்து தோன்றியது இவ்விரு சொற்களின் பொருள் முறையே 'சில' 'விற்பதற்கு' என்பதாகும். எனவே, இதனைச் 'சிலவர் விற்பனை' எனத் தமிழில் ஆக்கியுள்ளோம். இதற்கும், நிறைகுறை (முற்றுரிமை)ப் போட்டிக்கும் இடையேயுள்ள வேற்றுமைகள் மூன்று எனலாம்: 1. நிறைகுறைப் போட்டியில் நிறுவனங்களின் எண்ணிக்கை சற்று மிகுதியாக இருப்பதால், தனியொரு நிறுவனம் பிறவற்றை மிகுதியாகச் சார்ந்திருப்பது இல்லை. 2. புதிய நிறுவனங்கள் தொழிலில் புக நிறைகுறைப் போட்டியில் தடை இல்லை. 3. கூட்டுச் சேர்வதும் அங்கு எளிதில்லை.

விற்பனையாகும் பொருள்களும் ஒப்பானவையாகவோ, அல்லது ஒன்றுக்கொன்று நிறைந்த பதவிகள் அல்லாதவைகளாகவோ, இருக்கும். அமெரிக்கா போன்ற பெரிய முதலாளித்துவ நாடுகளில், இந் நிலையே நிலவுகிறது.

சிலவர் விற்பனையின் சிறப்பியல்புகள் கீழ்வருவன எனலாம்:

1. நிறைவுப் போட்டியில் நிறுவனங்கள் ஒன்றையொன்று சார்ந்திருப்பதில்லை. ஏராளமான சிற்றளவு நிறுவனங்கள் பணியாற்றுவதால் எந்தவொரு நிறுவனமும் பொருளின் விலையையோ, ஆகமொத்த உற்பத்தியையோ தாக்கும் நிலையில் இல்லை. விற்பனை முற்றுரிமையில் தனியொரு நிறுவனமே பணியாற்றுவதால், இத்தகைய சார்புநிலை பற்றிய பேச்சுக்கே இடமில்லை ஆனால், சிலவர் விற்பனையில் இவ்வாறில்லை. இங்கே, எண்ணிக்கையில் சிலவான நிறுவனங்கள் தன்மையில் மிக அதிகம் வேறுபாடில்லாத பொருளை விற்கின்றன. இதனால், ஒவ்வொரு நிறுவனமும் அங்காடியில் பெரியதொரு பகுதியைக் கட்டுப்படுத்தத் தக்கவையாக உள்ளன. இதனால் அவற்றால் விலையையும், உற்பத்தியையும் குறிப்பிடத்தக்க அளவு தாக்க இயலும். எனவே, எந்தவொரு நிறுவனமும் தன்னுடைய விலை–உற்பத்திக் கொள்கைகள் பிற நிறுவனங்களை எவ்வாறு தாக்குகின்றன என்பதைப் பற்றிச் சிந்திக்காமல் இருக்க முடியாது. குறிப்பிட்ட நிறுவனம் தன்னுடைய விற்பனை அளவை மிகுப்பதற்காகத் தன்னுடைய விலையை வெட்டிக் குறைப்பதாக வைத்துக் கொள்வோம். இப்போது, பிற நிறுவனங்களும் விலையைக் குறைத்து விட்டால், குறிப்பிட்ட நிறுவனத்தின் நோக்கம் நிறைவேற வழியில்லை. ஆதலால், சிலவர் விற்பனையில் தனியொரு நிறுவனம், தானாக எந்தச் செய்கையிலும் ஈடுபடும் நிலையில்லை என்பது தெளிவு. தன்னுடைய ஒவ்வொரு செய்கையை ஒட்டியும் பிற நிறுவனங்கள் எவ்வாறு எதிரெதிர் செயலாற்றும் என்பதை ஒவ்வொரு நிறுவனமும் சிந்தித்தாக வேண்டும்.

2. இதன் விளைவாக, எல்லா நிறுவனங்களும் ஒரு வகை உறுதியின்மைச் சூழலிலேயே பணியாற்றுகின்றன. விலையைக் குறிப்பிட்ட அளவு குறைத்தால் எவ்வளவு விற்க முடியும் என்பதை எந்தவொரு நிறுவனமும் உறுதியாகக் கூற முடியாது. இதனால், தேவை, வருவாய் வளைகோடுகள் நிருணயமற்ற நிலையில் உள்ளன. நிறைவுப் போட்டியிலும், விற்பனை முற்றுரிமையிலும் நிலைமை இவ்வாறில்லை.

3. அங்காடியில் செயலாற்றும் நிறுவனங்களிடையே முற்றிலும் மாறுபட்ட இரு கண்ணோட்டங்களைப் பார்க்கலாம். ஒருவர்க்கொரு

வர் போட்டியிட்டுக் கொண்டிருப்பதன் தீமைகளை உணர்ந்த நிலையில், தம்முடைய ஆக மொத்த இலாபத்தை மிகவுயர்ந்த அளவினதாக்கும் வகையில் தமக்குள் இணைந்து கொள்ள அவை முன்வரலாம். சில நேரங்களில், தன்னுடைய இலாபத்தை மிகவுயர்ந்த அளவினதாக்க வேண்டும் என்ற நோக்கத்தில் பிற நிறுவனங்களுடன் நேரடிப் போரில் ஈடுபடவும் முன்வரலாம். இவ்வாறு, ஒருங்கு இணையும் ஆர்வம் ஒருபுறமும், போராடி அழிக்கும் ஆர்வம் மறுபுறமுமாக மாறிமாறித் தோன்றுகின்றன. இதனாலும் சிலவர் விற்பனையின் உறுதியின்மைக் கூறு வலிவடைகிறது.

4. இறுதியாக, சிலவர் விற்பனையில் முற்றுரிமைக் கூறு ஒன்றிருப்பதும் குறிப்பிடத் தக்கது. ஒவ்வொரு நிறுவனமும் ஆகமொத்த உற்பத்தியில் குறிப்பிடத் தக்க அளவினை உற்பத்தி செய்வதாலும், தம்முடைய பொருளை வேறுபடுத்தி வைப்பதாலும், குறிப்பிட்ட வரையறைக்குள் ஒரு முற்றுரிமையாளனாகச் செயலாற்ற முடியும்.

இனி, சிலவர் விற்பனையில் விலை எவ்வாறு முடிவாகிறது என்று சிந்திக்கலாம். மூன்று வெவ்வேறு நிலைகளிலிருந்து இங்கே ஆராய வேண்டும் :

1. தற்சார்பில் விலை நிறுவல்
2. கூட்டுச் சூழலில் விலை நிறுவல்
3. விலைத் தன்மையின் கீழ் விலை நிறுவல்.

1. பிறரைச் சார்ந்திராமல் ஒவ்வொரு சிலவர் விற்பனையாளனும் தானே தன்னுடைய விலையையும் உற்பத்தியையும் நிருணயித்துக் கொள்ளலாம். பிற விற்பனையாளர் நேரடியாகத் தாக்க முன்வரவில்லை என்று வைத்துக் கொள்வோம். இங்கே, பல நிலைகள் தோன்றலாம். எல்லா நிறுவனங்களும் ஒப்பான பொருளை உற்பத்தி செய்து, அங்காடியையும் சமமாகப் பகிர்ந்து கொள்வதாக இருந்தால், ஒரே விலை நிலவலாம். நிறுவனங்களின் பொருள்கள் முற்றிலும் வேறுபடுத்தப் பட்டிருந்தால், ஒவ்வொன்றும் முற்றுரிமை விலையையே நிறுவலாம். உண்மை உலகில் இவை விதிவிலக்காகவே இருக்கும். இதனால், விலையும் உற்பத்தியும் நிருணயமற்றிருக்கும் நிலையே பெரிதும் இயல்பாக இருக்கும். நிறுவனங்களின் போராட்டத்தால் விலை நிலையற்று ஏறி இறங்கிக் கொண்டிருக்கும். ஏதாவதொரு நிருணயிக்க முடியாத மட்டத்தில் அது முடங்கிக் கிடக்கவும் செய்யலாம். எல்லார்க்கும் இசைவான ஒரு விலை ஏற்பட்டு, அந்த விலையை நிலைபேருக்குவதையே நோக்கமாகக்

கொண்டு நிறுவனங்கள் செயல்படலாம் : தேவையிலும் உற்பத்திச் செலவிலும் மாறுதல்கள் ஏற்பட்டாலும் இவ் விலையை மாறவிடாமல் இறுகப் பற்றிக் கொள்ள எல்லோருமாக முயலலாம் !

2. போட்டியின் தீமையை உணர்ந்தவைகளாக நிறுவனங்கள் தம்மிடையே கூட்டுச் சேர்ந்து கொள்ளலாம். இந்தக் கூட்டு ஓர் உடன்படிக்கை வழியாகவோ, பொது விற்பனை ஏற்பாடுகள் வழி யாகவோ உருவாகலாம். இது நிறைவுக் கூட்டாக இருந்தால், ஆக மொத்தத் தொழிலில் விலையும் உற்பத்தியும் முற்றுரிமைச் சூழலில் ஏற்படுவது போலவே அமைந்து விடும். ஆக மொத்தத் தொழிலின் முற்றுரிமை விலையே ஒவ்வொரு சிலவர் விற்பனை நிறுவ னத்தினதும் விலையாக இருக்கும். ஆகமொத்தத் தொழிலின் இறுதி நிலை உற்பத்திச் செலவும், இறுதிநிலை வருவாயும் சமமாக இருந்து, அந்த இறுதிநிலை உற்பத்திச் செலவுக்குச் சமமாக ஒவ்வொரு நிறு வனத்தினதும் இறுதிநிலை உற்பத்திச் செலவும் ஆகும் நிலையில் அவற்றின் உற்பத்தி அளவும் இருக்கும். கீழ்வரும் படம் இதனை விளக்கும் :



TMR மொத்த இறுதிநிலை வருவாய் வளைகோடு ; TMC மொத்த இறுதிநிலை உற்பத்திச் செலவு வளைகோடு. இவ் விரண்டும் வெட் டிக் கொள்ளும் K மொத்த உற்பத்தியை நிருணயிக்கிறது. இப் போது, மொத்த உற்பத்தி OM ; விலை MP. தொழிலின் இறுதி

நிலை உற்பத்திச் செலவாகிய KM-க்குச் சமமாக நிறுவனங்களின் இறுதிநிலை உற்பத்திச் செலவும் அமையும் வகையில் அவை உற்பத்தி அளவைக் கட்டுப் படுத்தும்போது, முறையே $OM_1$, $OM_2$, $OM_3$ அளவை மூன்று நிறுவனங்களும் உற்பத்தி செய்யும்.

மேற்கூறிய நிலை, நிறைவுக் கூட்டு நிலவும்போதே ஏற்படும். கூட்டு நிறைவற்றிருந்தால், தொழிலின் ஆகமொத்தத் தேவை வளை கோட்டின் வெவ்வேறு பகுதிகள் ஒவ்வொரு விற்பனையாளனுக்கும் உரியதாகிறது ; தேவை வளைகோட்டின் அந்தந்தப் பகுதிக்கு இசைந்தவாறு தம்முடைய இறுதிநிலை வருவாய் வளைகோட்டை அவரவர் இயற்றிக் கொள்ள வேண்டும். இங்கும் இறுதிநிலை வருவாயும், இறுதிநிலை உற்பத்திச் செலவும் சமமாக இருக்கும் அளவு உற்பத்தியே இலாபத்தை மிக உயர்ந்த அளவினதாக்கும். ஆனால், வருவாய்—உற்பத்திச் செலவு நிலைகள் வேறுபட்டிருப்பதால், ஒவ்வொரு நிறுவனமும் விலையை விதிக்கலாம். போட்டியைத் தவிர்ப்பதற்காக ஒப்பான விலையை விதிக்க எல்லா நிறுவனங்களும் இணங்கவும் செய்யலாம் : இந்த விலையானது முற்றுரிமை விலையை விடக் குறைவாகவே இருக்கும்.

3. சிலவர் விற்பனைச் சூழலில் தொழிலிலுள்ள நிறுவனங்களில் குறிப்பிட்ட ஒன்று விலையை நிருணயிக்க, அதனை ஏற்றுக்கொண்டு



பிற நிறுவனங்கள் எல்லாம் செயல்படுவதும் உண்டு. இதுவே 'விலைத் தலைமை' எனப்படும். இரு நிறுவனங்கள் ஒப்பான பொருளை விற்பதாகவும், அவற்றின் உற்பத்திச் செலவு வேறுபட்டிருப்பதாகவும் வைத்துக் கொள்வோம். இப்போது, குறைந்த அளவு இறுதிநிலை உற்பத்திச் செலவுள்ள உற்பத்தியாளன் இயல்பாகவே தலைமை தாங்குகிறான். அவன் குறைந்த விலையை நிறுவ, அவ் விலையே அங்காடியில் நிறுவிக்கொள்கிறது. படத்தில் $MC_1$ $MC_2$ வளைகோடுகள் நிறுவனங்களின் இறுதிநிலை உற்பத்திச் செலவுப் போக்கைச் சுட்டுகின்றன. ஒப்பான பொருளை உற்பத்தி செய்வதால், இரு நிறுவனங்களுக்கும் AR, MR, வளைகோடுகள் பொதுவாக உள்ளன. உற்பத்திச் செலவு குறைவாக உள்ள நிறுவனம் $P_1M_1$ விலையை நிறுவும். ஆனால், அடுத்த நிறுவனத்தால் (அதனுடைய விலையாகிய) $P_2M_2$ விலையை நிறுவமுடியாது. அதுவும் $P_1M_1$ விலையையே பின்பற்றும்.

## இருவர் விற்பனை

அங்காடியில் இரண்டே இரண்டு விற்பனையாளர் இருக்கும் நிலையே இருவர் விற்பனை. இவ்வகை அங்காடி பற்றிய ஆய்வினை மூன்று அறிஞர்கள் பல்வேறு கோணங்களிலிருந்து தந்துள்ளனர்.

முதல் மேற்காட்டு 1837-இல் பேராசிரியர் கோர்னோ(Cournot) தந்த ஒன்று. இருவரும் ஓரியலான பொருளை விற்பதாகவும், இருவர் உற்பத்திச் செலவும் சமமாக, தலா அலகு உற்பத்திச் செலவு நிலைத்து இருப்பதாகவும் வைத்துக் கொள்வோம். ஒவ்வொருவனும் தன்னால் அடையமுடிகிற இலாபத்தை மிகவுயர்ந்த அளவினதாக ஆக்குவதையே குறிக்கோளாகக் கொண்டுள்ளான். ஆனால், இருவரும் தமக்குள் ஓர் உடன்படிக்கைக்கு வரவோ, மறைமுகமாக உடன்படிக்கை செய்துகொள்ளவோ இசைபவர்களாக இல்லை. மொத்தத் தேவை எவ்வளவு என்பதை இருவரும் அறிந்துள்ளனர். உற்பத்திச் செலவு சமமாக இருப்பதால், இருவரும் தம்முடைய உற்பத்தி அளவையே சரிக்கட்ட முயல்கின்றனர்.

அல்ஃபோன்ஸ் என்ற உற்பத்தியாளன் முதன் முதலில் சரிக்கட்ட முயல்வதாக வைத்துக்கொள்வோம். இப்போது, அவன் ஒரு விற்பனை முற்றுரிமையாளன். நிலைத்த உற்பத்திச் செலவும், நேர்க் கோடான தேவை வளைகோடும் இருக்குமானால் முற்றுரிமை உற்பத்தி, போட்டிச் சூழலில் ஏற்படுவதில் நேர் பாதியாக இருக்கும் என்பது விதி. எனவே, போட்டிச் சூழலில் நிலவும் உற்பத்தியில் நேர்பாதியை உற்பத்தி செய்து அல்ஃபோன்ஸ் தன்னுடைய இலாபத்தை மிகவுயர்ந்த அளவினதாக்குகிறான். இப்போது இரண்

டாவது விற்பனையாளனாகிய காஸ்டன் அரங்கில் தோன்றுகிறான். அல்ஃபோன்ஸ் போட்டிச் சூழல் உற்பத்தியில் நேர்பாதி உற்பத்தி செய்து வருவதை அவன் காண்கிறான்; இதே நிலை தொடரும் என்று அவன் நம்புகிறான். எஞ்சியிருக்கும் பாதிக்குத்தான் ஒரு விற்பனை முற்றுரிமையாளன் என்று காஸ்டன் கருதுகிறான். எனவே (மேலே கூறிய காரணங்களினால்) தன்னுடைய இலாபத்தை மிகவுயர்ந்த அளவினதாக ஆக்குவதற்காக அந்த எச்சத்தில் பாதியை (அதாவது போட்டிச் சூழல் உற்பத்தியில் நான்கிலொன்றை) உற்பத்தி செய்கிறான். அங்காடியில் அளிப்பு பெருகுகிறது: விலை இறங்குகிறது. இதனைக் கண்ட அல்ஃபோன்ஸ் தன்னுடைய இலாபத்தை மிகுப்பதற்காக, போட்டிச் சூழல் உற்பத்தியில் காஸ்டன் உற்பத்தி செய்துள்ளது போக எஞ்சியுள்ளதில் பாதியை உற்பத்தி செய்கிறான். இவ்வாறு மாறி மாறி இருவரும் செயல்படும்போது என்ன நடக்கும் என்பதை வாட்சன் தன்னுடைய நூலில் (D. S. Watson in 'Price Theory and its Uses') கீழ் வரும் பட்டியல் வழியாக விளக்குகிறார். இங்கே போட்டிச் சூழல் உற்பத்தி 6400 அலகுகள் என்று வைத்துக் கொள்ளப்படுகிறது.

| காட்சி | அல்ஃபோன்ஸ் உற்பத்தி | காஸ்டன் உற்பத்தி |
|---|---|---|
| 1 | 3200 அலகுகள் | |
| 2 | | 1600 அலகுகள் |
| 3 | 2400 ,, | |
| 4 | | 2000 ,, |
| 5 | 2200 ,, | |
| 6 | | 2100 ,, |
| 7 | 2150 ,, | |
| 8 | | 2125 ,, |
| இறுதியில் | 2133 | 2133 |

இவ்வாறு மாறி மாறி இருவரும் செயல்படும்போது இருவ(
போட்டிச் சூழல் உற்பத்தியில் தனித் தனியே 1/3, அல்லது (

வருமாக 2/3 உற்பத்தி செய்கின்றனர். இப்போது இருவரும் சம அளவை விற்பதால் நிலையான சமநிலை அடைகின்றனர். இது போன்று 3 விற்பனையாளர் இருந்தால், போட்டிச் சூழல் உற்பத்தியில் 3/4 உற்பத்தியாகும். இவ்வாறு, 'n' உற்பத்தியாளர்கள் இருந்தால் மொத்த உற்பத்தியானது போட்டிச் சூழல் உற்பத்தியின் $\frac{n}{n+1}$ அளவாக இருக்கும் என்று நிறுவலாம். இதிலிருந்து போட்டியாளர் எண்ணிக்கை கூடக்கூட விலையும் உற்பத்தியும் போட்டிச் சூழல் மட்டத்தை நோக்கி வருகின்றன என்று முடிவு கட்டலாம்.

கோர்னோவின் கருத்துக்கு எதிர்ப்பு தெரிவித்த பிரெஞ்சுக் கணித வல்லுநர் ஜோசப் பெர்ட்ரான்ட் (Joseph Bertrand), இருவர் விற்பனை பற்றிய தன்னுடைய மேற்காட்டை 1883-இல் தந்தார். இவரும் இருவருடைய உற்பத்திச் செலவும் சமமாக இருப்பதாகவும், பொருள் ஓரியலானது என்றும் எடுத்துக் கொள்கிறார். ஆனால், கோர்னோவுக்கு மாறானதொரு நிலையில், விற்பனையாளர் சரிக்கட்டிக்கொள்வது தம்முடைய உற்பத்தி அளவையல்ல, விலையையே என்பது இவருடைய கருத்து.

பெர்ட்ரான்ட் குறிப்பிடும் விற்பனையாளராகிய ஹென்ரியும், பீயரியும் தம்முடைய போட்டியாளனுடைய விலை மாறாது என்ற எடுகோளில் செயல்படுகின்றனர். ஹென்ரி முதலில் விலை வைப்பதாக வைத்துக்கொள்வோம். இப்போது, அவன் ஒரு விற்பனை முற்றுரிமையாளன் நிலையிலிருப்பதால், முற்றுரிமை விலையையே விதிக்கிறான். அடுத்து பீயர் தோன்றுகிறான். தன்னுடைய போட்டியாளாகிய ஹென்றியின் விலைமாறாது என்ற எடுகோளுடன் செயல்படும் இவன், தான் விதிக்கும் விலையை மற்றவன் விதித்துள்ள விலையை விடக் குறைவான மட்டத்தில் விதிக்கிறான். விற்கப்பெறும் பொருள் ஓரியலானதால், பீயரியால் அங்காடி முழுதையும் பிடித்துக்கொள்ள முடிகிறது. விற்பனை எதுவும் இல்லாத ஹென்ரி, இப்போது, பீயரியின் விலைமாறாது என்ற நினைப்பில், தன்னுடைய விலையை இன்னுங் குறைவாக விதிக்கிறான். இதனால் ஹென்ரி அங்காடி முழுதையும் பிடித்துக் கொள்கிறான். இவ்வாறு, இந்த விலை குறைப்புப் போர் தொடர்கிறது. இறுதியில், விலையானது உற்பத்திச் செலவு மட்டத்தை எட்டும்போதே போர் நிறுத்தம் ஏற்படுகிறது. அதன் பின்னரும் போர் தொடர்ந்தால், விளைவது நட்டமே. இருவரும் ஒரே விலையில் விற்பதால், சமநிலை உற்பத்தியானது போட்டிச் சூழல் உற்பத்தியின் அளவினது ஆகிறது.

கோர்னோவும், பெர்ட்ரான்டும் எட்டுகிற முடிவுகள் வேறுபடுகின்றன. ஒருவர் உற்பத்தி அளவையும், அடுத்தவர் விலை மட்டத்தையும் பற்றி ஆய்கின்றனர். முன்னவர் இருவர் விற்பனையில், உற்பத்தியானது போட்டிச் சூழல் உற்பத்தியைவிடக் குறைவாக இருக்கும் எனக் கொள்வதால், விலை உயர்வாக இருக்கும் என்ற முடிவுக்கு வருகிறார். அடுத்தவரோ, இருவர் விற்பனையில் உற்பத்தியும் விலையும் போட்டிச் சூழலில் அமைவதைப் போன்றிருக்கும் என்று முடிவு கட்டுகிறார்.

பெர்ட்ரான்டின் விலை குறைப்புப் போரை ஏற்றுக்கொள்ளும் இங்கிலாந்து நாட்டுப் பொருளியலறிஞர் எட்ஜ்வொர்த், அப் போரின் முதலில் நிலைபேறான சமநிலை எதுவும் ஏற்படாது என்ற முடிவுக்கு வருகிறார். இவருடைய கருத்து 1897-ல் வெளியாகியது. அதனைக் கீழ்வரும் படம் விளக்கும் :




டாம், ஹாரி இருவரும் போட்டியாளர்கள் என்று வைத்துக் கொள்வோம். இருவருடைய உற்பத்திச் செலவும் சமமாக இருப்பதாகவும், விற்கும் பொருள் ஓரியலானது என்றும் வைத்துக் கொள்வோம். டாம் உற்பத்தி செய்ய முடிகிற மிகவுயர்ந்த அளவு OB; ஹாரி உற்பத்தி செய்யமுடிகிற மிகவுயர்ந்த அளவு $OB^1$. இரண்டும் சமமே. முன்னவன் தேவை வளைகோடு DT; பின்னவன்

வளைகோடு DH (இதனை வலமிருந்து இடமாகப் படிக்கவேண்டும்). OB, $OB_1$ அவர்களுடைய உற்பத்திச் செலவு வளைகோடுகள்.

டாம் தொடங்குவதாக வைத்துக் கொள்வோம். இப்போது அவன் முற்றுரிமையாளனாக இருப்பதால், போட்டிச் சூழல் உற்பத்தி (OB)யில் நேர் பாதியாகிய a $P_1$-ஐ, $P_1$ விலையில் விற்கிறான். இந்த விலை மாறாது என்ற எடுகோளில் செயல்படும் ஹாரி, தன்னுடைய உற்பத்தி முழுவதையும் ($P_2b=OB_1$) $P_2$ விலையில் அங்காடிக்குக் கொணர்கிறான். இதன் விளைவாக டாம் விற்பனையில் $b_1b$-ஐ அவனால் பறித்துக்கொள்ள முடிகிறது. இதனால், டாம் தன்னுடைய விலையை $P_3$ ஆகக் குறைத்து, அவ் விலையில் தன்னுடைய உற்பத்தி முழுவதையும் ($P_3C=OB$) விற்க முன் வருகிறான். இதனால், ஹாரியின் விற்பனையில் $OC_1$-ஐ அவனால் ஆக்கிரமித்துக் கொள்ளமுடிகிறது. இப்படியே விலை குறைப்புப் போர் தொடர்கிறது. இறுதியில், இருவரில் ஒருவர்—ஹாரி என்று வைத்துக் கொள்வோம். $P_4$ விலையை விதிக்க முற்படலாம். இப்போது, ஆக மொத்தத் தேவையில் நேர் பாதியை, தன்னுடைய உற்பத்தி முழுவதையும் அவன் அளிக்கிறான். இதைவிடக் குறைந்த விலையை அடுத்தவனால் விதிக்க முடியாது: அவ்வாறு விதிக்கும்போது, அவனால் ஹாரியின் விற்பனையில் எந்தப் பகுதியையும் ஆக்கிரமிக்க முடியாது என்பது மட்டுமல்ல, அவனால் மிகுதியாக உற்பத்தி செய்யவும் முடியாது; அவனுடைய மிகவுயர்ந்த அளவு உற்பத்தியே OB தான்.

விலையை மேலும் குறைப்பதற்கான ஆர்வம் இருவரிடமும் இல்லாத நிலையில் நிலையான சமநிலையொன்று ஏற்படும் எனக் கருதி விடலாகாது என்பார் எட்ஜ்வொர்த். தன்னுடைய உற்பத்தி முழுவதையும் ஹாரி அங்காடிக்குக் கொண்டு வந்துவிட்டதாக எண்ணும் டாம், அங்காடியின் மீண்டும் விலையை $P^1$ ஆக உயர்த்தத் துணிவான். நேர் பாதி தன்னிடம் உள்ளதால் ஒரு விற்பனை முற்றுரிமையாளனாகச் செயல்பட முடியும் என அவன் நம்புகிறான். ஹாரி அவனைப் பின்பற்றித் தன்னுடைய விலையையும் விற்பனை முற்றுரிமைச் சூழல் மட்டத்துக்கு உயர்த்த முனைகிறான். மீண்டும் விலை குறைப்புப் போர் தொடங்குகிறது. இவ்வாறு, எட்ஜ்வொர்த்தின் கருத்தில், இருவர் விற்பனைச் சூழலில் விலையானது ஏறியிறங்கி நிலையற்றிருப்பதே இயல்பாகிறது.

மேலே கண்ட தொன்மை நூலாளர் விளக்கம் முதன்மையான சில எடுகோள்களின் அடிப்படையில் அமைந்துள்ளது. விற்கும் பொருள் ஓரியலானது என்பது ஓர் எடுகோள். பொருள் ஓரியலான

தாக இருந்தால் விலை சமமாவதும், இருவரும் அங்காடியைச் சரிசமமாகப் பங்கிட்டுக் கொள்வதும் நிகழக் கூடியதே. ஆனால், பொருள் வேறுபாடு நிலவும்போது, ஒருவன் விலையைக் குறைப்பதால் அடுத்தவனுடைய விற்பனையைப் பிடித்துக் கொள்ளமுடியும் என்று சொல்ல முடியாது. பொருள் வேறுபாட்டால் இருவர் விலையும் சமமாக இருக்க வேண்டும் என்றில்லை; ஆனால், இருவர் விலையும் ஒரே போக்கில் செல்லலாம் என்று சொல்வதில் தவறில்லை; ஒருவன் விலையைக் குறைத்தால், அடுத்தவனும் ஓரளவு விலையைக் குறைக்க முன் வரலாம். பொருள் வேறுபாடு நிலவும் போது, பொருளின் தரத்தை மாற்றுவதிலும், விற்பனைச் செலவிடுவதிலும் போட்டியாளர் கவனஞ் செலுத்துவதே பெரும்பாலும் வழக்கமாக இருக்கிறது.

தொன்மை நூலாளரின் மற்றொரு எடுகோள் இருவருடைய உற்பத்திச் செலவும் சமம் என்பதாகும். இருவரிடையே உற்பத்திச் செலவில் வேறுபாடிருந்தால், குறைந்த உற்பத்திச் செலவு நிருவனம் அடுத்ததை அரங்கிலிருந்து விரட்டிவிடுவது நிகழத் தக்கதே.

### இரு பக்க முற்றுரிமை.

ஒரு பொருளின் விற்பனையிலும் வாங்கலிலும் முற்றுரிமை இருப்பதே, 'இரு பக்க முற்றுரிமை' (Bilateral Monopoly) என்று கூறப்படும்.[1]

விற்பனை முற்றுரிமையாளன் இயல்பாகவே தன்னுடைய இறுதிநிலை வருவாயும் இறுதிநிலை உற்பத்திச் செலவும் சமமாகும் அளவு வரை அளிக்க முன் வருவான். படத்தில் D-தேவை வளைகோடு பல்வேறு விலை மட்டங்களில் எவ்வளவு எவ்வளவு விற்பனையாகும் என்பதைச் சுட்டிக் காட்டுகிறது. MR வளைகோடு அவனுடைய இறுதிநிலை வருவாய்ப் போக்கைக் குறிப்பிடுகிறது. மேலும் மேலும் பொருளை அளிக்கும்போது அவனுக்கு ஏற்படும் இறுதிநிலை உற்பத்திச் செலவின் போக்கை S-அளிப்பு வளைகோடு சுட்டுகிறது. இப்போது $OP_1$ விலையில் OM விற்க அவன் முன் வருவான்.

பல்வேறு விலைகளில் எவ்வளவு அளிக்கப்படும் என்று சுட்டிக் காட்டும் S-அளிப்பு வளைகோடு வாங்குவோனுடைய சராசரி உற்பத்திச் செலவு வளைகோடு ஆகிறது. மொத்த உற்பத்திச் செலவை, மொத்தம் உற்பத்தியான அலகுகள் எண்ணிக்கையால் வகுக்கும்

[1] உழைப்பின் அளிப்பைக் கட்டுப்படுத்தும் ஆற்றல் மிக்க தொழிற் சங்கம் விற்பனை முற்றுரிமையாளனாகவும், அவ்வுழைப்பை வாங்குவது தனியொரு நிறுவனமாகவும் இருந்தால் இரு பக்க முற்றுரிமைச் சூழல் நிலவுவதாகச் சொல்லலாம்.

ஈவே சராசரி உற்பத்திச் செலவு. இந்த ஈவுத் தொகைதான் வாங்குவோன் பொருளின் அலகுகளுக்குத் தரும் தலா அலகு விலை. எனவே, S கோடுதான் வாங்குவோன் தருகிற விலையையும் குறிப்




பிடுவதாகிறது. சராசரி உற்பத்திச் செலவு வளர்ந்து செல்லும் போது, இறுதிநிலை உற்பத்திச் செலவு ஒவ்வொரு கட்டத்திலும் மிகுதியாக இருப்பதால், இறுதிநிலை உற்பத்திச் செலவு வரைகோடு (MC), S வரைகோட்டின் உயரே கிடக்கிறது. D தேவை வரைகோடு வாங்குவோன் பொருளின் பல்வேறு அலகுகளை வாங்குவதால் பெறும் இறுதிநிலை வருவாய்ப் போக்கைச் சுட்டுகிறது. இவ்வாறு, அவன் OM அளவு $OP_2$ விலைக்கு வாங்க முன் வருவான்.

இப்போது விற்பனை முற்றுரிமையாளன் OM அளவு $OP_1$ விலையில் அளிக்க முன் வருகிறான்; அதே நேரத்தில் அதற்கு $OP_2$ விலையே தர வாங்கல் முற்றுரிமையாளன் சித்தமாக உள்ளான். இதனால் விலையானது நிருணயமாகாத நிலையிலேயே இருக்கும். அது $OP_2$க்கும் $OP_1$-க்கும் இடையே ஊசலாடிக் கொண்டிருக்கும்

இருபாலரது பேர ஆற்றலைப் பொருத்து விலையானது இறுதியில் நிருணயமாகும்.

இதே நேரத்தில் இரு பக்கமும் போட்டி நிலவினால் தேவை-அளிப்பு இரண்டும் சமநிலை எய்தும் விலை மட்டம் OP ஆகவும், உற்பத்தி OM-ஐவிட மிகுதியாகவும் இருக்கும் என்பது இங்குக் கவனிக்கத் தக்கது.

## நிறைவுப் போட்டி, விற்பனை முற்றுரிமை, நிறைகுறைப் போட்டி — ஓர் ஒப்பீடு

### 1. உற்பத்தியும் விலையும்

நிறைவுப் போட்டிச் சூழலில் நிருணயமாகும் உற்பத்தி அளவை விடக் குறைவாகவும், விலையைவிட உயர்வாகவும் முற்றுரிமையில் உற்பத்தியும் விலையும் அமையும் என்று பொதுவாகக் கூறப்படும். அடுத்துள்ள படத்திலிருந்தும் இதனை அறியலாம். இங்கு முற்று




ரிமை விலை OP ஆகவும், உற்பத்தி OM ஆகவும் இருக்கும். நிறைவுப் போட்டியில் (சராசரி உற்பத்திச் செலவுக்குச் சமமாக விலை

இருக்க வேண்டுமாதலால்) விலை $OP_1$ ஆகவும், உற்பத்தி $OM_1$ ஆகவும் இருக்கும். (முற்றுரிமைக்குப் பொருந்தும் இவ் வுண்மை முற்றுரிமைப் போட்டிக்கும் பொருந்துவதே.)

ஆனால், முற்றுரிமை விலை எப்பொழுதும் உயர்வாகவே இருக்கும் என்று சொல்ல முடியாது. பொருளின் தேவையானது நெகிழ்ச்சியுடன் இருக்கும்போதும், வளர்ந்துசெல் விளைவு விதியின்படி உற்பத்திச் சூழல் நிலவும் போதும் முற்றுரிமை விலை குறைவாகவே இருக்கும். விலை மிகவும் உயர்வாக இருந்தால், நுகர்வோர் பதிலீட்டுப் பொருள்களை விரும்பித் தேரலாம். விலை மிக அதிகமாக இருந்து, இலாப வாய்ப்பு மிகுதியாக இருக்கும்போது போட்டி நிறுவனங்கள் தோன்றலாம்: பிற நாடுகளில் இருந்தும் அத்தகைய போட்டி ஏற்படலாம். மேலும், அரசுத் தலையீடு வேறு உள்ளது. அரசு பொருளுக்கு நியாய விலை விதிக்கலாம்; அதே பொருளை அயல் நாடுகளிலிருந்து இறக்குமதி செய்யலாம்; சில நேரங்களில் தொழிலை நாட்டுடைமை ஆக்கவும் முன் வரலாம். எனவே, முற்றுரிமையாளன் விலையை உயர்த்துவதற்கு நடை முறையில் சில வரம்புகள் உள்ளன என்பதை மறந்து விடலாகாது.

## 2. செயல் திறமை

போட்டிச் சூழலில் திறமை மிக்க நிறுவனங்களே இறுதியில் நிலைத்து நிற்க முடியும். மிகக் குறைந்த சராசரி உற்பத்திச் செலவு கொண்ட உத்தம நிறுவனங்களே தொடர்ந்து நிலைக்கும்.

முற்றுரிமையில் நிலைமை இவ்வாறில்லை என்பது உண்மையே. ஆனால், முற்றுரிமையாளனால் பெரிய அளவில் உற்பத்தி செய்ய முடியும் என்பதைச் சிந்திக்கும் போது, அவனால் அகச் சிக்கனங்களை ஆண்டு பயன்காண முடியும் என்பதைப் புரிந்து கொள்ளலாம். இந் நிலையில் முற்றுரிமை நிறுவனம் சிக்கனமாகச் செயல்பட வாய்ப்பில்லாமலில்லை.

நிறைகுறைப் போட்டியில் நிலைமை சற்று வேறுபட்டுள்ளது. நிறைவுப் போட்டிக்கு முற்றிலும் மாறுபட்ட நிலையில், அகச் சிக்கனங்களுக்கு வாய்ப்பிருந்தாலும், அவற்றை ஆண்டு பயன் காண முடியாத நிலை இங்கு நிலவுகிறது. எனவே, இங்குள்ள நிறுவனங்கள் உத்தம அளவை எட்டுவதில்லை.

புத்தாக்கங்களை எடுத்துக் கொண்டாலும், நிறைவுப் போட்டி நிறுவனங்கள், பிற நிறுவனங்களைப் போல, உடனுக்குடன் தம்முடைய திறமையைச் சீரமைத்துக் கொள்ள வேண்டிய கட்டாயத்

துக்கு ஆளாகியுள்ளன. அடுத்த நிறுவனத்தின் புதிய உற்பத்தி முறையை உடனேயே பின்பற்று விட்டால், தோல்வியும் நட்டமுமே தொடரும். முற்றுரிமையாளனுக்கோ, போட்டியில்லாக் காரணத்தால், புதிய முறைகளைக் கடைப்பிடிக்க வேண்டிய கட்டாயம் இல்லை. ஆனால், அந்த முறைகளைக் கடைப் பிடித்தால் வருகிற இலாபங்களைப் பிறர் எவருடனும் பங்கிட்டுக் கொள்ள வேண்டிய அவசியமின்றித் தான் மட்டுமே அடைகிற வாய்ப்பு முற்றுரிமையாளனுக்கு இருக்கிறது. இதனால் புத்தாக்கங்களைக் காணும் ஆர்வம் அவனிடம் மிகுதியாக இருக்கும் என்பார் ஷூம் பீட்டர். மேலும், பேரளவில் உற்பத்தி செய்து பெரிய அளவில் நிதி வசதி பெற்றிருக்கும் முற்றுரிமை நிறுவனங்கள் ஆராய்ச்சித் துறையில் தனியாகச் செலவிட வசதியுள்ளவைகளாக இருக்கின்றன என்பதும் இங்குக் கவனிக்கத் தக்கது.

### 3. பொருளியல் நலம்

நிறைவுப் போட்டியில், இறுதிநிலை உற்பத்திச் செலவும் விலையும் சமமாக இருக்கும். இதனால், இறுதிநிலை அலகை உற்பத்தி செய்ய எவ்வளவு செலவாகியுள்ளதோ, அதே தொகையைத் தான் நுகர்வோர் அதற்கு விலையாகத் தருகிறார்கள். இந்நிலை முற்றுரிமையில் இல்லாததால், அங்கு, நுகர்வோர் மிகுதியாகத் தரவேண்டிய நிலை ஏற்படுகிறது. அவர்கள் மேலும் வாங்கச் சித்தமா யுள்ளனர். அதற்கு அதன் உற்பத்திச் செலவை விட மிகுதியாகத் தரவும் அவர்கள் சித்தமே. ஆனால், படத்தில் $MM_1$ அலகு நுகர்வோர்க்குக் கிடைக்காமலே போகிறது. அந்த அளவுக்கு வளங்களும் பயன் படுத்தப் பெறாது வறிதே கிடக்கின்றன.

இங்கே, வேறிரு உண்மைகளை மறந்துவிட லாகாது. நுகர்வோர் விருப்பத் தேர்வுகளுக்கு இசைய இறுதிநிலை உற்பத்திச் செலவானது வளங்களை ஒதுக்கீடு செய்வது உண்மையே. ஆனால், வருமான ஒதுக்கீட்டை இந்த விருப்பத் தேர்வுகள் சார்ந்து நிற்கின்றன என்பதை மறந்து விடலாகாது. எனவே, நிலவியுள்ள வருமானப் பகிர்வு நிலையை ஏற்றுக் கொண்ட பின்னரே, விலையும் இறுதிநிலை உற்பத்திச் செலவும் சமமாக இருக்கும்போது பொருளியல் நலம் மிகவுயர்ந்த அளவினதாக இருக்கும் என்ற கருத்தையும் ஏற்றுக்கொள்ள முடியும்.

மேலும், 'உற்பத்திச் செலவு' என்று சொல்லும்போது, இறுதிநிலை சமூக உற்பத்திச் செலவும், நிறுவனமொன்றின் இறுதிநிலை உற்பத்திச் செலவும் சமமாக இருக்கும் என்று கொள்ள முடியாது.

தன்னுடைய இறுதிநிலை உற்பத்திச் செலவுக்குச் சமமாக இருக்கும் ஒரு நிறுவனத்தின் பொருள் விலை குறைவாகவே இருக்கலாம். ஆனால், அதன் தொழிற்சாலை போக்கும் புகையால், சமூகத்துக்கு ஏற்படும் சமூகத் தீமைகளை அகற்றுவதற்கான செலவுகள் பொருள் விலையுடன் சேர்க்கப்பட்டிருப்பதில்லை அல்லவா ?

இதுபோன்றே, நிறைகுறைப் போட்டியில், விலையானது இறுதி நிலை உற்பத்திச் செலவை விட மிகுதியாகவே இருக்கும். இருந்த போதிலும், நுகர்வோருடைய பல்வகைச் சுவைகளுக்கு ஏற்றவாறு பொருள் வேறுபாடு செய்யும் நிறைகுறைப் போட்டி நிறுவனங்கள் ஒரு வகையில் விரும்பத் தக்க பணியினைத் தானே செய்கின்றன ? அந்த அளவுக்கு அதிகப்படி விலை தருவதில் தவறில்லையல்லவா ?

எனவே, தற்கால ஆசிரியர்கள் நிறைவுப் போட்டிக்குப் பதிலாக, 'செயல்படத் தக்க போட்டி'யே நடைமுறையில் சிறந்தது என்பார்கள். பொருள் வேறுபாடு வேண்டிய ஒன்று ; ஆதலால், இறுதிநிலை உற்பத்திச் செலவு வளைகோடு தேவை வளைகோட்டுக்குத் தாழே தான் கிடக்க முடியும். இதன் பொருள், விலைக்கும் இறுதிநிலை உற்பத்திச் செலவுக்கும் இடையே இடைவெளி இருக்கும் என்பது தான். இந்த இடை வெளியைக் கட்டுப்படுத்த முயல்வதில் தவறில்லை. தேவை வளைகோட்டை மிகவும் நெகிழ்ச்சியுள்ளதாக ஆக்கினால் இது இயலும். இதற்கு வழி குறிப்பிட்ட தொழிலில் தடையற்றபடி புதியவர்கள் நுழைய வசதி செய்து கொடுப்பது தான் !

## தொடர்புடைய மதிப்புகள்

சில பொருள்களின் தேவையும் அளிப்பும் ஒன்றுக்கொன்று தொடர்பு உள்ளவையாய் இருக்கும். இதனால், இவற்றுள் ஒன்றன் மதிப்பு மாறும்போது, அடுத்ததன் மதிப்பும் மாற நேரும். இந்நிலையில் மதிப்பு எவ்வாறு முடிவாகிறது என இனிப் பார்க்கலாம் :

### கூட்டளிப்பு

உற்பத்தி வினை யொன்றால் ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்கள் உற்பத்தியாகும் போது, அப் பொருள்கள் எல்லாம் கூட்டாக அளிக்கப் படுகின்றன. நெல்லும் வைக்கோலும், ஆட்டிறைச்சியும் தோலும், எண்ணெயும் பிண்ணாக்கும் கூட்டளிப்புக்கு எடுத்துக் காட்டுகள். இங்கெல்லாம், உற்பத்திச் செலவின் பெரும் பகுதி கூட்டுற்பத்திச் செலவாயிருக்கும். சில நேரங்களில், பொருள்களுக்குத் தனித்தனி உற்பத்திச் செலவு வேறிருக்கலாம்.

கூட்டு விளை பொருள்களில் ஒன்றன் தேவையானது மிகும் போது, அடுத்ததன் விலையானது இறங்க நேரிடும். எண்ணெயின் தேவை மிகுவதாக வைத்துக் கொள்வோம். இதனால், அதன் விலை ஏறும்; எண்ணெயின் அளிப்பு பெருகும். ஆனால், எண்ணெயின் அளிப்பு பெருகும்போது, அத்துடன் பிண்ணாக்கின் அளிப்பும் பெருகுவது இயல்பு. இதனால், பிண்ணாக்கின் தேவை மாறுதிருக்கும் நிலையில், அதன் விலை இறங்குவது தவிர்க்க இயலாததாகிறது.

கூட்டு விளைபொருள்களின் விலை முடிவாவது பற்றி இரு வகைகளில் ஆராயலாம். முதலில் இப் பொருள்களின் கூட்டு வீதம் மாறத் தக்கதெனில் என்னென்ன இயலும் என்பதையும், அடுத்து வீதம் மாற்ற இயலாதெனில் என்னென்ன இயலும் என்பதையும் ஆராயலாம்.

கூட்டு விளைபொருள்கள் கூட்டாகத் தோன்றுகிற வீதத்தை மாற்ற இயலுமென்று—அதாவது, குறிப்பிட்ட வினை முறைகளால் குறித்த அளவு எண்ணெயுடன் மிகுதியாகப் பிண்ணாக்கோ, அல்லது குறித்த அளவு பிண்ணாக்குடன் மிகுதியாக எண்ணெயோ உற்பத்தி செய்ய முடியுமென—வைத்துக் கொள்வோம். உண்மையில், கழிந்த உலகப் போரின்போது, பருத்தி விதையிலிருந்து மிகுதியான அளவு எண்ணெய் பிழிந்தெடுக்கிற சில வினை முறைகள் மேலை நாடுகளில் கண்டுபிடிக்கப் பட்டதாகச் சொல்லப்படுகிறது. இப்போது, குறிப்பிட்ட ஒரு பொருளின் இறுதிநிலை உற்பத்திச் செலவை எளிதில் அறிந்து கொள்ள முடியும். அதிலிருந்து பொருளின் விலையை முடிவு செய்வது எளிது. ஓர் எடுத்துக்காட்டுடன் இதனை விளக்கலாம். ரூ. 100 செலவிட்டு 5 அலகு எண்ணெயுடன் 4 அலகு பிண்ணாக்கு உற்பத்தி செய்ய முடியுமென்றும், ரூ. 110 செலவில் சற்றே வேறுபட்டதொரு வினைமுறையைக் கையாண்டால், 6 அலகு எண்ணெயுடன் 4 அலகு பிண்ணாக்கும் உற்பத்தி செய்ய முடியும் என்றும் வைத்துக் கொள்வோம். இவ்விரண்டாவது வினை முறையிலிருந்து ரூ. 10 செலவில் ஓர் அலகு எண்ணெய் மிகுதியாக உற்பத்தி செய்ய முடியும் என்றுகிறது. அதாவது, எண்ணெயின் இறுதிநிலை உற்பத்திச் செலவு ரூ. 10. இதில் இருந்து விலையை முடிவு செய்வது எளிது.

இதற்கு மாறுக, கூட்டு விளைபொருள்கள் கூட்டாகத் தோன்றுகிற வீதத்தை மாற்றவே முடியாது என்ற நிலை இருந்தால், ஒவ்வொன்றினதும் இறுதிநிலை உற்பத்திச் செலவைக் கணக்கிட வழியில்லை. எனவே, விலை முடிவைப் பொருத்தவரை இரண்டு அடிப்படை உண்மைகளை மட்டுமே இங்குச் சுட்ட முடியும். (1) இவற்றின் மொத்த வருவாய், மொத்த உற்பத்திச் செலவுக்குச் சமம

யிருக்க வேண்டும். (2) ஒவ்வொன்றினதும் தனித்தனி விலை அவற்றின் இறுதிநிலைப் பயன்பாட்டைப் பொருத்திருக்கும்.

### கூட்டுத் தேவை

ஒன்றுக்கு மேற்பட்ட பொருள்கள் கூட்டாகத் தேவைப்படும் போதுதான் கூட்டுத்தேவை தோன்றுகிறது. பேனாவும் மையும், மோட்டாரும் பெட்ரோலும், பற்பசையும் பற்குச்சியும் கூட்டுத் தேவைக்கு எடுத்துக் காட்டுக்கள். இவற்றை நிரப்புப் பொருள்கள் என்றும் அழைப்பதுண்டு. நிரப்புப் பொருள்களின் விலைகள் எதிரெதிர் திசைகளில் மாறுகின்றன. பேனாவின் விலை இறங்கியதால், பேனாவின் தேவை மிகுந்தால், மையின் தேவையும் மிகுந்து, அதன் விலை ஏறுமுகமாகிறது.

இந்த விலை மாறுதலின் அளவு ஒன்றன் தேவை நெகிழ்ச்சியையும் அடுத்ததன் அளிப்பு நெகிழ்ச்சியையும் பொருத்திருக்கும். பேனாவின் தேவை நெகிழ்ச்சியுள்ளதா யிருந்தால், அதன் விலை இறங்கும்போது, தேவை பெரிய அளவில் வளர்வதியல்பு. இதனால், மையின் தேவை அளவும் வளரும், ஆனால், அதன் அளிப்பு மிகவும் நெகிழ்ச்சியுள்ளதா யிருந்தால், அளிப்பு விரைவில் வளர்ந்து, விலையானது மிகுதியானபடி ஏறாமல் தடுத்துவிடலாம்.

நிரப்புப் பொருள்களின் சேர்மான வீதத்தை மாற்ற இயலுமா என்பதையும் பார்க்க வேண்டும். பற்பசையின் விலை குறையும் போதெல்லாம் குச்சியின் தேவையும் விலையும் மிகுந்தாக வேண்டும் என்றில்லை. பற்பசைக் குழாய்கள் பலவற்றுக்கு ஒரேவொரு பற்குச்சி போதுமானது. இங்கே, பற்பசைக்கும் பற்குச்சிக்குமிடையே நிலையான வீதங்கள் எதுவும் இல்லை என்பது கவனிக்கத் தக்கது.

### இணைந்த அளிப்பு

பல்வேறு பொருள்கள் ஒரே தேவையை நிறைவு செய்யத் தக்கவையா யிருக்கும்போது அவற்றின் அளிப்பு இணைந்த அளிப்பு எனப்படும். பதிலீட்டுப் பொருள்கள் இவ்வகையின. இவற்றுள் ஒன்றன் அளிப்பு மிகுந்தால், அடுத்ததன் விலையும் இறங்கும். நேர் மாறாக ஒன்றன் அளிப்புக் குறையும்போது அடுத்ததன் விலையும் சேர்ந்து ஏறுகிறது. எடுத்துக்காட்டாக, சர்க்கரையின் அளிப்பு மிகுந்து, அதன் விலை இறங்கினால், வழக்கமாக வெல்லம் நுகர்வோரும், இப்போது சர்க்கரையை நுகர முற்பட்டால், வெல்லத்தின் தேவை குறைந்து அதன் விலையும் இறங்குவதியல்பு.

**இணைந்த தேவை**

ஒரு பொருள் பல்வேறு விருப்பங்களை நிறைவு செய்யத் தேவைப்படுவதைத்தான் இணைந்த தேவை என்கிறோம். மின் சாரம், நிலக்கரி போன்றவை இணைந்த தேவைக்கு எடுத்துக் காட்டுக்கள். இங்கு ஒரு துறையில் தேவை மிகும்போது விலை ஏற முற்படலாம். ஆனால், இறுதியில் பிற துறைகளின் தேவை நிலையை ஆராய்ந்தபின்னரே விலையின் போக்குப் பற்றி எதுவும் முடிவாகச் சொல்ல முடியும்.

## ஊக வணிகம்

முதலாளித்துவச் சூழலில் இயல்பாக இருக்கும் விலை உறுதி யின்மையை நிலைக்களனாகக் கொண்டு செயல்படுவோரே ஊக வணிகர். இவர்கள் செயல், பொருள் விலையை நடை முறையில் கட்டுப்படுத்தத் தக்கதாக உள்ளது. எனவே, விலை நிருணயம் பற்றிச் சிந்திக்கும்போது, ஊக வணிகம் பற்றிச் சிந்திப்பதும் இயல்பே.

பொதுவான வணிகர்கள் பொருள்களை நுகர்வோர்க்கு விற்பதற் காக வாங்குவர். ஆனால், ஊக வணிகர்களோ பொருள்களின் வருங்கால விலை மாறுதல்களைக் கருத்தில் கொண்டு அவற்றில் கொள் வினை விற்பனை செய்வர். இவர்கள், குறிப்பிட்ட பொருளின் விலை எதிர் காலத்தில் உயரும் என ஊகித்து, இப்போது ஏராளமாக வாங்கு வர்; அல்லது, எதிர் காலத்தில் விலை இறங்கும் என ஊகித்து இப்போது கையிருப்பை விற்பர். முந்தியவர்கள் 'எருதுகள்' என் றும், பிந்தியவர்கள் 'கரடிகள்' என்றும் பொதுவாக அழைக்கப் படுகின்றனர்.

கால அளவில் ஊக வணிகம் விலைகளை நிலை பேறுடையதாக ஆக்கத்தக்கதாகும். பருவ மாறுதல், வேலை நிறுத்தம் போன்ற காரணங்களால் எதிர்கால அளிப்புக் குறைய நேரும் என எதிர் பார்க்கப் பட்டால் எருதுகள் பணியாற்றத் தொடங்குகின்றனர். வருங்கால விலை உயர்வால் இலாபமடைய வேண்டும் என்பதே இவர்களுடைய நோக்கம். இதுபோன்று எதிர்கால அளிப்புப் பெருக நேரும் என எதிர்பார்க்கப்பட்டால், கரடிகள் பணியாற்றத் தொடங்குகின்றனர். இவர்கள் இரு பாலரதும் செயலால், உடனடி யாக நடப்பு விலையானது பாதிக்கப் படுகிறது: ஏராளமாக வாங்க முன் வரும்போது நடப்பு விலை உயரும்; ஏராளமாக விற்கும்போது நடப்பு விலை இறங்கும். இதனால், நடப்பு விலையானது எதிர்கால

விலைப்போக்குக்குச் சமமாக இப்போதே மாறிக் கொள்ளத் தொடங்குகிறது; இதன் விளைவாக, விலை மாறுதல்கள் திடீரெனத் தோன்ற வழியில்லாது போகிறது; விலை மாறுதல்களின் அளவும் குறைக்கப் பட்டுவிடுகிறது. இதனைக் கீழ்வரும் படம் விளக்கும்: இயல்பாக




விலையானது A வரை ஏறலாம்; B வரை இறங்கலாம். ஆனால், ஊக வணிகர் செய்கையால் அது $A_1$ வரையே ஏறுகிறது; $B_1$ வரையே இறங்குகிறது.

இவ்வாறு, விலை மாறுதல்களின் அளவைக் கட்டுப்படுத்துவதால் நுகர்வோரும் உற்பத்தியாளரும் தாக்குறுகின்றனர். இரு சாரார்க்கும் நிலையான விலையில் பொருள்கள் கிடைக்கின்றன. முதலீடு செய்வோர்க்கும் பங்கு அங்காடியில் நிகழும் ஊக வணிகத்தால் தோன்றும் நிலையான விலை நன்மையே தருகிறது.

ஆனால், ஊக வணிகமானது எப்பொழுதும் நேர்மையாக நடப்பதில்லை. செயற்கையான அருமைப்பாட்டை உண்டு பண்ணி, விலைகளை உயர்த்தலாம்; கையிருப்புக்களை மிகுதியாக விற்று விலைகளை வீழ்த்தலாம். இவற்றால், நுகர்வும் உற்பத்தியும் இறுதியில் தாக்குறும். மேலும், இவை ஒரு சூதாட்ட மனப்பான்மையைச் சமூகத்தில் வளர்த்து விடுகின்றன. போதிய அறிவில்லாதோருங்கூட விரைவில் பணம் சேர்க்கலாம் என்று எண்ணி ஊக வணிகத்தில்

ஈடுபட்டு விடலாம். போதிய திறமையும் கைம்முதலும் இல்லாமல் இவர்கள் பணியாற்றி, எதிர்பாரா நிலையில் நொடித்துப் போகும் போது, பொதுவான நம்பிக்கையின்மையும் ஒழுக்கக் கேடும் எங் கெங்கும் பரக்கக் காரணமாகி விடுகின்றனர்.

## மேலும் படிக்கத் தக்க நூற்கள்


சி. வேலாயுதம் — 'பொருளாதாரம்—II'

கேர்ன் கிராஸ் — 'பொருளாதாரம் ஓர் அறிமுகம்'

பென்ஹாம் — 'பொருளாதாரம்'

Alfred Marshall — 'Principles of Economics'

Joan Robinson — 'The Economics of Imperfect Competition'

Stonier & Hague — 'A Text-Book of Economic Theory'

J. S. Bain — 'Pricing, Distribution and Employment'

G. J. Stigler — 'The Theory of Price'

D. S. Watson — 'Price Theory and its Uses'

R. G. Lipsey — 'An Introduction to Positive Economics'

Albert Meyers — 'Elements of Modern Economics'

J. E. Meade — 'An Introduction to Economic Analysis and Policy'

# பகிர்வு

'ஒவ்வொரு நாளைக் கொவ்வொரு மனைவி
புருஷன் எச்சில் புசித்திட வேண்டும்;
இடையில்
தீபா வளியோ, திருக்கார்த் திகையோ,
வேறிம் மாதிரி விசேஷ நாளோ,
வந்திடு மாகில் வரிசை வரிசையாய்
ஐந்திலை யிட்டவை அனைத்திலும் அமுது
படைத்தும், புருஷன் பருகிய பின்னர்,
பரிகலத் துள்ள பதார்த்த மெல்லாம்
மனைவியர் சரியாய் வகுத்துண வேண்டும்;
வழக்குகள் ஒன்றும் வரலா காது...'

(கவிமணி)

# 1. பகிர்வும் நாட்டு வருமானமும்

நால்வகை உற்பத்திக் காரணிகளது ஒத்துழைப்பின்றி எதனை யும் உற்பத்தி செய்ய இயலாது. இதனால், தான் உற்பத்தி செய் துள்ள பொருள்களில் பங்குபெற ஒவ்வோர் உற்பத்திக் காரணிக்கும் உரிமையுண்டு. இப் பங்குகள் எவ்வாறு முடிவாகின்றன என்பதைத் தான் பகிர்வு இயலில் ஆராய்கிறோம்.

இயற்கை மரபினர் பகிர்வு பற்றி முதன் முதலில் சிந்திக்கத் தொடங்கினர். பிற்கால ஆசிரியர்கள், குறிப்பாக, சமதருமக் கருத் தினர்—பகிர்வுக்கு முதலிடம் நல்கி வந்தனர். ஆனால், தற்கால அமெரிக்க ஆசிரியர்கள் சிலர் 'பகிர்வு' எனத் தனியாக ஓர் இயல் வேண்டியதில்லை எனக் கருதுகின்றனர். உற்பத்திக் காரணிகள் உற்பத்திப் பணியில் ஈடுபடுகின்றன. அப் பணிக்குக் கைம்மா றாகவே உற்பத்தியானது அவற்றிடையே பகிர்ந்தளிக்கப் படுகி றது. எனவே, உற்பத்திக் காரணிகள் பெறுகிற பங்கு அவற்றின் பணிக்குத் தருகிற விலையேயாகும். இந் நிலையில் பொருள்களின் விலை நிருணயம் பற்றி ஏற்கெனவே நிறுவப் பெற்றுள்ள கோட் பாடுகளை உற்பத்திக் காரணிகளுக்கும் பொருத்தி, ஆய்ந்தாற் போதும் என்பது இவ் வாசிரியர்கள் கருத்து.

ஒரு கண்ணோட்டத்தில் பார்க்கும்போது, உற்பத்திக் காரணி கள் பெறும் பங்கு அவற்றின் பணிக்குத் தருகிற விலைதான். ஆனால், சாதாரணப் பொருள்களிலிருந்து உற்பத்திக் காரணிகள் சில வகைகளில் வேறுபட்டுள்ளன என்பதைக் கருத வேண்டும். பொருளின் விலையை நிறுவ அதன் உற்பத்திச் செலவை அறிய வேண்டும். உற்பத்திக் காரணிகளுக்கும் இது போல உற்பத்திச் செலவென ஒன்று இருக்கிறதா எனப் பார்க்க வேண்டும். இயற் கையின் கொடையாகிற நிலத்துக்கு உற்பத்திச் செலவென

எதனைச் சொல்வது? மேலும், பொருளின் அளிப்பு, விலைக்குத் தக்கவாறு சரிக்கட்டிக் கொள்ளுமென அறிவோம்; ஆனால் உற்பத்திக் காரணிகள் அளிப்பு விலைக்குத் தக அவ்வாறு சரிக்கட்டிக் கொள்வது ஐயமே. நிலத்தின் அளிப்பு மாறாதது. உழைப்பின் அளிப்பை மாற்றுவதும் அவ்வளவு எளிதல்ல. அடுத்து, உற்பத்திக் காரணிகள் பெறும் பங்கு, வெறும் உருவ அருவப் பொருள்களின் பணிக்குக் கிடைக்கிற வெகுமதியன்று; காரணிக்கு உரியவர்கள் பெறும் வருமானமுமாகும். எனவே, அடிப்படையில், பகிர்வு ஒரு மனித குலச் சிக்கலாகவும் இருக்கிறது. இந்தக் கடைசிக் காரணத்தால் தான் இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந்த நூலாசிரியர்கள், பொருள்களின் விலை நிருணயத்துக்கு அன்றி, உற்பத்திக் காரணிகள் விலை நிருணயத்துக்கே முதன்மை நல்க முன் வந்தனர். இதே காரணத்தால், பகிர்வு பற்றிய பகுத்தாய்வுகளில் நெறியுரைக் கூற்றுக்கள் பலவும் ஊடுருவியுள்ளன என்பதுங் கவனிக்கத் தக்கது.

பகிர்வு பற்றிய எல்லா ஆய்வுகளிலும் எழுகிற அடிப்படை வினாக்கள் மூன்று எனலாம்: எதனைப் பகிர்ந்தளிப்பது? எவரிடையே பகிர்ந்தளிப்பது? எந்த அடிப்படையில் பகிர்ந்தளிப்பது? சமுதாயத்தின் மொத்த விளை பொருளை (உற்பத்தியை)ப் பகிர்ந்தளிக்க வேண்டும் என்பது முதல் வினாவுக்குரிய விடை. இதன் தொடர்பாக, 'நாட்டு விளைபொருள்' அல்லது 'நாட்டு வருமானம்' என்ற கோட்பாட்டை ஆய வேண்டும். இரண்டாவது வினாவுக்குரிய விடை நாட்டு விளைபொருளை உற்பத்திக் காரணிகளிடையே பகிர்ந்தளிக்க வேண்டும் என்பதுதான். ஆனால், பகிர்ந்தளிக்கப்படும் விளை பொருளைப் பெறுவது காரணிகளைப் பணிசெயத் தருவோர்களே யாதலால், பகிர்வைப் 'பணி வழிப் பகிர்வு' 'ஆள் வழிப் பகிர்வு' என இரு கண்ணோட்டத்தில் ஆய்வதற்குரிய வாய்ப்பு ஏற்படுகிறது. இறுதி வினாவுக்கு விடையாகப் பல்வேறு கோட்பாடுகளை ஆசிரியர்கள் தந்துள்ளனர். அவற்றை இறுதியில் ஆராய வேண்டும்.

## நாட்டுவருமானம்

சமுதாயத்தின் மொத்த விளைபொருள், உற்பத்திக் காரணிகளிடையே பகிர்ந்தளிக்கப் பெறுகிறது என்று சொல்லும்போது, சில வரையறைகளை முதலில் செய்து கொள்வது நல்லது. 'சமுதாயம்' என்பதற்கு உலகளாவிய பேரெல்லையும், மிகச் சிலர் கொண்ட சிற்றெல்லையும் உள்ளது ஆனால், பொருளியல் பகுத்தாய்வைப் பொருத்தவரை அரசியல் கட்டியுள்ள நாட்டெல்லையே நடைமுறைச் சிறப்புள்ளது. எனவே, சமுதாயத்தின் விளைபொருள் என்று சொல்லும்போது, நாட்டு விளைபொருளையே சுட்டுகிறோம். அடுத்து

'நாட்டு விளை பொருள்' காலத்தால் மாறிக் கொண்டிருக்கிறது என்பதைக் கவனிக்க வேண்டும். அப்படியானால், நாட்டு விளை பொருள் பற்றி ஆயும் போது, ஒரு குறிப்பிட்ட கால வரையறைக்குள் நின்று ஆயாவிட்டால், அதில் பொருளில்லை என்றாகிறது. இக் கால வரையறையை ஓர் ஆண்டாக எடுத்துக் கொள்வது மரபு. இவ்வாறு, மொத்த விளை பொருள் என்று குறிப்பிடும்போது ஒரு நாட்டின் ஓராண்டுக்கால விளை பொருளே வழக்கமாகக் குறிப்பிடப் படுகிறது.

இந்த விளை பொருள்கள் உப்பு முதல் கற்பூரம் வரை பல் வகைப் பொருள்களாக இருக்கலாம். ஆதலால், ஒரு நாட்டின் ஓராண்டுக்கால விளை பொருளைத் தொகுத்தறிய முற்பட்டால், ஒன்றுக் கொன்று தொடர்பில்லாத பல்வகைப் பொருள்களின் தொகை யொன்றே கிடக்கும். இத்தொகையிலிருந்து எதையும் நுட்பமாக அறிந்து கொள்ளமுடியாது. ஆகவே, பல் வகைப் பொருள்கள் தொகையைப் பொதுவானதோர் அளவுகோல் கொண்டு அளவிட்டுச் சொன்னால், அது புரிய முடிகிற சில உண்மைகளைப் புலப்படுத்தும். பொருள்களின் இந்தப் பொது அளவை பணம் ஒன்றே. இவ்வாறு நாட்டின் ஓராண்டுக்கால விளை பொருளின் பண மதிப்பை அறியமுடிந்தால், ஆய்வுக்கு அது வசதியாக இருக்கும்.

நாட்டு விளை பொருள், நாட்டுச் செலவீட்டுக்கும் நாட்டு வருமானத்துக்கும் சமமாயிருக்கும். குறிப்பிட்டவொரு நாட்டின் ஓராண்டுக்கால விளை பொருள் (ரூ. 20,000 மதிப்புள்ள) ஒரு வீடு மட்டுமே என்று வைத்துக்கொள்வோம். இப்போது, நாட்டில் வீடு கட்டுவதில் ஈடு பட்ட நிலம், உழைப்பு, முதல், அமைப்பு ஆகியவற்றுக்குரிய வாரம், கூலி, வட்டி, இலாபம் என்றபடி ரூ. 20,000 செலவிடப்பட்டுள்ளது. இந்த ரூ. 20,000 செலவீடு, வீடு கட்டுவதில் பணிபுரிந்தவர்க்குரிய வாரம், கூலி, வட்டி, இலாபம் என்ற வகை வருமானமாகிறது. இவ்வாறு, நாட்டு விளை பொருள, நாட்டுச் செலவீடு, நாட்டுவருமானம் ஆகிய மூன்றும் சமமாயிருப்பது தெளிவு. எனவேதான் உற்பத்திக் காரணிகளிடையே பகிர்ந்தளிக்கப் படுவது நாட்டு வருமானம் என்றும் சொல்லப் படுகிறது.

இந்த அடிப்படையில், நாட்டு விளை பொருளை அல்லது நாட்டு வருமானத்தை அளந்தறிய மூன்று வழிகள் உள்ளன எனலாம்.

**1. உற்பத்திக் கணிப்பு முறை**

நாட்டில், குறிப்பிட்ட காலப்பகுதியில், உற்பத்தியாகிய பொருள்களதும் பணிகளதும்[1] நிகர மதிப்பைத் தொகுத்தறிவதே

[1] சோவியத் நாட்டில் பணிகளின் மதிப்பு சேர்க்கப்படுவதில்லை.

இம்முறை. நாட்டின் உற்பத்தித் துறைகளைப் பயிர்த்தொழில், பொறியாக்கத் தொழில், வணிகம் என்றெல்லாம் வசதியாகப் பகுத்துக்கொண்டு, ஒவ்வொரு துறையிலும் நிகர உற்பத்தி எவ்வளவு என்பதைக் கணக்கிட்டறிய வேண்டும். அயல் நாடுகளுடன் கொடுக்கல் வாங்கல்கள் இருக்கும்போது, அயல்நாட்டு வணிகத்தின் நிகர மிச்சத்தை (ஏற்றுமதி இறக்குமதி)யும், அயல் நாடுகளில் தம் நாட்டவர் விடுத்துள்ள முதலீட்டையும் கணக்கில் சேர்த்துக் கொள்ள வேண்டும்.

இம் முறையைக் கடைப்பிடிக்கும்போது, கண்ணுங் கருத்துமாகக் கவனிக்கவேண்டிய ஒன்றுண்டு. ஓர் இனத்தை இரு முறை கணக்கில் சேர்த்துவிடாமல் இருக்கவேண்டும் என்பதே அது. ரூ100 மதிப்புள்ள சுருட்டில், ரூ. 80 மதிப்புள்ள புகையிலை சேர்த்திருப்பதாக வைத்துக் கொள்வோம். இப்போது சுருட்டினதும் புகையிலையினதும் மொத்த மதிப்பைச் சேர்த்து (ரூ. 180)க் கணக்கிட்டால், (ரூ. 80 மதிப்புள்ள) புகையிலை இரு முறை கணக்கில் சேர்க்கப்படுகிறது. இதனைத் தவிர்ப்பதற்காகத் தொழில்களின் மொத்த உற்பத்தி (உற்பத்தியான பொருளின் மொத்த விற்பனை மதிப்பு) அல்ல, அதன் நிகர மதிப்பே கணக்கிலெடுக்கப்படுகிறது. உற்பத்தியான பொருளின் அங்காடி விலையிலிருந்து, அப் பொருளின் உற்பத்தியான பொருளின் உற்பத்தியில் ஆண்டுள்ள கச்சாப் பொருள்களதும், வினை முற்றுப் பொருள்களதும் மதிப்பைக் கழித்தபின் கிடைப்பதே நிகர மதிப்பு. இதுபோன்றே, பொருளின் உற்பத்தியில் தேய்ந்து மாய்ந்துள்ள முதல் கருவிப் பொருள்களையும் கழிவு செய்தால்தான் நிகர நாட்டு வினை பொருளைக் கணக்கிட்டறிய முடியும்.

## 2. வருமானப் பேறு முறை

நாட்டில், குறிப்பிட்ட காலப் பகுதியில் தனி நபர்களும் நிறுவனங்களும் பெற்றுள்ள நிகர வருமானத்தைத் தொகுத்து, நாட்டு வருமானத்தைக் கணிப்பதே இம் முறை. உழைப்பின் வழியாகவும் சொத்திலிருந்தும் பெறுகிற வருமான மனைத்தும் தொகுக்கப்பட வேண்டும். அரசாங்கம் தரும் சம்பளங்கள், அயல் நாட்டு முதலீட்டிலிருந்துகிடைக்கும் ஊதியம், கம்பெனிகள் நல்கும் பங்கு வீதங்கள்[1] ஆகியவெல்லாம் சேர்க்கப்படவேண்டும்.

[1] கூட்டுப் பங்குக் கம்பெனிகளிலிருந்து பெறும் வருமானத்தைப் பொருத்தவரை, பகிர்ந்தளிக்கப் பெறாத இலாபங்களையும் கம்பெனி வரிகளையுங்கூடக் கணக்கில் எடுத்துக்கொள்ளவேண்டும். இலாபத்தின் ஒரு பகுதி பகிர்ந்தளிக்கப்படாதபோது, அந்த அளவுக்குக் கம்பெனியின் சொத்து மதிப்பு ஏறுவதால், பகிர்ந்தளிக்கப்படாத இலாபத்தையும் வருமானமெனக் கொள்ளலாம். தனி நபர் வருமானத்தைக் கணிக்கும்போது, அவன் தரும் நேரடி வரியைக்கழிவு செய்வது வழக்கமில்லை: எனவே, கம்பெனிவரிகளையும் கணக்கில் எடுப்பதே பொருத்தமாயிருக்கும்.

இம் முறையைக் கையாளும்போது, முக்கியமாகக் கவனிக்க வேண்டியது மாற்றிட ஊதியங்களை (Transfer Payments) யொட்டிய சிக்கல். குறிப்பிட்ட காலப் பகுதியில் நாட்டில் உற்பத்தியாகியுள்ள பொருள்களதும் பணிகளதும் மதிப்பே நாட்டு வருமானம். எனவே, உற்பத்தியுடன் நேரடித் தொடர்பினால் பொருள்களும் பணிகளும் பெறுகிற வருமானங்களை மட்டுமே தொகுத் தெழுத வேண்டும். மாற்றிட ஊதியங்கள் இவ்வகைப் பட்டவையல்ல. வரிகளின் வழியாகச் செல்வந்தர் வருமானத்தைப் பிரித்தெடுத்து, அதனை ஏழை எளியோர்க்கு வேலையின்மை இடருதவி, முதியோர் உதவித் தொகை போன்ற பல வழிகளில் அரசு மாற்றிக் கொடுக்கிறது. இவற்றை மாற்றிட ஊதியங்கள் எனலாம். இந்த இனங்கள் சிலருடைய வருமானமாய் உள்ளன. இவ்வின வருமானங்களை நாட்டு வருமானக் கணக்கில் தொகுத் தெழுதுவது சரியன்று. உற்பத்தியின் வழியாக ரூ. 500 ஈட்டும் ஒருவன், ரூ. 100 வரிகள் வழியாக அரசுக்குத் தர, அந்த ரூ. 100-உம் மற்றொருவனுக்கு முதியோர் உதவித் தொகையாகக் கொடுக்கப் பட்டால், இருவர் வருமானமும் ரூ. 500 + 100 = 600 எனக் கூட்டி, நாட்டு வருமானக் கணக்கில் எழுதுவது சரியன்று. மொத்தம் உற்பத்தியாகியுள்ள பொருளின் மதிப்பு ரூ. 500 மட்டுமே; ரூ. 100 பெறுபவன் எதனையும் உற்பத்தி செய்யவில்லை. இதே காரணத்தால், போர்க் காலக் கடன் பத்திரங்களுக்குரிய வட்டி, உற்பத்தித் துறையில் ஆளப் பெறாத உள்நாட்டுக் கடன் பத்திரங்களுக்குரிய வட்டி ஆகியவையும் நாட்டு வருமானக் கணக்கில் சேர்க்கப்படலாகாது.

மேலும், இந்தியா போன்ற நாடுகளில் உற்பத்தியாளர்கள் தம்முடைய உற்பத்தியின் ஒரு பகுதியைத் தாமே நுகர்ந்து வருகின்றனர் என்பதையுங் கருத வேண்டும். இப் பகுதியும், உண்மையில் நாட்டு விளைபொருளின்பாற் படுவதே. தமது உழைப்பின் பலனைப் பணமாக மாற்றிப் பின்னர் வேறு பொருள்களை நுகர்வதற்குப் பதிலாகத் தாம் உற்பத்தி செய்தவைகளையே நுகர்ந்து விடுகின்றனர் என்பது தான் இங்குள்ள வேறுபாடு. எனவே, உற்பத்தியின் இப் பகுதியையும் நாட்டு வருமானத்துடன் தொகுத் தெழுத வேண்டும்.

### 3. செலவீட்டு அளவு முறை

நாட்டில், குறிப்பிட்ட காலப் பகுதியில் விளை முற்றிய பொருள்களில் இடப் பெற்றுள்ள மொத்தச் செலவீட்டைத் தொகுத்தறிவதே இம் முறை. நுகர்வோர் பொருள்களிலும், முதல் கருவிப் பொருள்களிலுமாகத் தனி மனிதர்களும் அரசும் இடுகிற செலவின் கூட்டுத் தொகையே நாட்டு வருமானம்.

இம் முறையைக் கையாளும் போது தோன்றுகிற சிக்கல் இரண்டு எனலாம். முதற் சிக்கல் அயல் நாட்டு வணிகத்தை யொட்டியது. இந்தியனொருவன் ஜப்பான் பைலெட் பேனுவில் இடுஞ் செலவு, இறுதியில் ஜப்பானிய உற்பத்தியாளனுடைய வருமானமாகிறது. இதுபோன்றே, மலேயா வாசி ஒரு உஷா தையல் எந்திரத்தில் இடுஞ் செலவு, இறுதியில் இந்திய உற்பத்தியாளனுடைய வருமானமாகிறது. எனவே, நாட்டின் மொத்தச் செலவீட்டுடன், குறிப்பிட்ட ஆண்டில் ஏற்றுமதியாகியுள்ள பொருள்களது மதிப்பைக் கூட்டி, இறக்குமதி யாகியுள்ள பொருள்களது மதிப்பை அதிலிருந்து கழித்தாக வேண்டும் என்பது தெளிவாகிறது.

இரண்டாவது சிக்கல் மறைமுக வரிகளையொட்டியது. மறைமுக வரிகள் வருமானத்தின் மீதோ, முதலின் மீதோ அல்லாது, செலவினங்கள் மீதே விதிக்கப் படுகின்றன. பத்து ரூபாய்க்கு ஆலைத் துணி வாங்கும்போது, அதில் ஒன்றிரண்டு ரூபாய் அரசுக்கு வரியாகச் செல்வதால், ரூ. 10 செலவிட்டால் துணி விற்பனையாளனுக்குக் கிடைக்கும் வருமானம் ரூ. 10–ஐ விடக் குறைவே. இதற்கு மாறாக, ரூ. 10-க்குள் கைத்தறித் துணி வாங்கினால், கைத்தறியாளனுக்கு ரூ. 10-ஐ விட மிகுதியான வருமானம் கிடைக்கலாம். அரசு, கைத்தறியாளனுக்கு உதவித் தொகை வழங்குவதே இதற்குக் காரணம். எனவே, செலவீட்டின் மொத்த மதிப்பைக் கணக்கிடும் போது மறைமுக வரிகளின் மதிப்பைக் கழித்து, உதவித் தொகைகளின் மதிப்பைச் சேர்த்துக் கணக்கிட வேண்டும்.[1]

இந்த மூன்று முறைகளில் எந்த முறையைக் கையாண்டாலும், கிடைக்கிற தொகை சமமாகவே இருக்கும். நாட்டு விளைபொருள், நாட்டு வருமானம், நாட்டுச் செலவீடு ஆகிய மூன்றும் சமமாயிருக்குமென ஏற்கெனவே நிறுவியுள்ளதே இதற்குக் காரணம்.[2] இந்தியா போன்ற நாடுகளில் இந்த மூன்று முறைகளையுமே ஒன்றுக்கொன்று குறை நிரப்பும் வகையில் சேர்த்துக் கையாண்டு வருகின்றனர்.

நாட்டு வருமானப் பட்டியல்கள் நடைமுறையில் மிகவும் பயன் தருபவை. நாட்டு வருமானத்தின் போக்கு ஒரு நாட்டு வளர்ச்சியைச் சுட்டிக்காட்டும் பட்டியல் என்றே சொல்லலாம். நாட்டின்

[1] இவ்வாறு கணக்கிட்டால், நாட்டு வருமானம் அடக்க மதிப்பில் கணக்கிடப் படுகிறதென்றும், இல்லையெனில், அதனை அங்காடி விலையில் கணக்கிடுவதாகவும் சொல்வார்கள்.

[2] இவ் வுண்மையை இங்கிலாந்து நாட்டு வருமானம் பற்றி ஜே. எல். ஹான்சன் ('A Text Book of Economics' by J. L. Hansen) தந்துள்ள மூன்று பட்டியல்களும் விளக்கும். அவை, அதிகார இறுதியில் தரப்பட்டுள்ளன.

பொருளியல் ஏற்றத்தாழ்வுகளை அது படம் பிடித்துக் காட்டுகிறது. நாட்டின் வருமான நிலை பற்றிய புள்ளி விவரங்களிலிருந்து மக்கள் நலமட்டம் பற்றியும் அறிய முடியுமென ஆசிரியர்கள் கருதுகின்றனர். வருமானப் பெருக்கம் நலப்பெருக்கத்தின் அறிகுறி எனச் சொல்லப்படும். இரு நாடுகளுடைய தராதர நிலையையும் அவற்றின் நாட்டு வருமானத்தை ஒப்பு நோக்கிப் பார்ப்பதன் வழியாக அறிந்து கொள்ள முடியும்.

நாட்டு வருமானப் புள்ளி விவரங்களின் சிறப்பை மொத்தமாகக் குறைகூறுத நிலையிலும், அவற்றின் குறைபாடுகள் சிலவற்றை நினைவில் வைத்திருப்பது நன்று.

முதலில், நாட்டு வருமானம் சரியானபடி நலத்தை அளக்கத் தக்கதா எனப் பார்ப்போம். நாட்டு வருமானம் குறித்து நிற்கிற விளைபொருள்களின் தன்மை பற்றி எதுவும் கூறப்படவில்லை என்பது இங்குக் கவனிக்கத் தக்கது: உற்பத்தியின் தீய விளைவுகள் பற்றிச் சிந்திக்கவே இல்லை. பேராசிரியர் பிகு இந்தக் குறைபாட்டைச் சுட்டிக்காட்டி விட்டு, 'சமூக நிகர விளைபொருள்', 'தனியார் நிகர விளைபொருள்' என ஒரு பாகுபாட்டை இயற்றியுள்ளார். தனியார் நிகர விளைபொருள் உற்பத்தியில் ஏற்படுகிற வசதிக் குறைவுகளைக் கழித்தபின் கிடைக்கிற தொகையே சமூக நிகர விளைபொருள். மது வகைகள் உற்பத்தியால் குற்றமிழைத்தல் பெருகி, சிறைச்சாலைகள், காவலர்கள் முதலிய இனங்களில் அரசு நிறைய செலவிட வேண்டி ஏற்படுகிறது. எனவே, சமூகத்தின் கண்ணோட்டத்தில் நிகர விளைபொருளானது, மது வகைகள் உற்பத்தியிலிருந்து அவற்றால் ஏற்பட்ட செலவினங்களைக் கழித்தபின் கிடைக்கிற தொகையேயாம். இதிலிருந்து மது வகைகள் உற்பத்தியுடன், அதனுல் அரசுக்கு ஏற்படுகிற செலவையும் ஒப்பிட்டால், அவற்றை உற்பத்தி செய்யாமலிருந்தால், சமூக நிகர விளைபொருளும், அதன் வழியாக நலமும் உயரும் என்பது தெளிவாகிறது. மேலும், பிஷர் (Fisher) கூறுவது போல, நாட்டு வருமானத்திலிருந்து மக்கள் நலப்போக்கை அறிய வேண்டுமெனில், நாட்டின் ஆக மொத்த உற்பத்தியையல்ல, ஆக மொத்த நுகர்வையே அளந்தறிய வேண்டும். குறிப்பிட்ட காலப் பகுதியில் நாடு நுகர்கிற பொருள்களின் அளவே நாட்டு வருமானம் என்பார் பிஷர்.

மேலும், நாட்டின் மொத்த வருமானமல்ல, தலா வருமானமே நலத்தை அளக்கத் தக்கது என்பதையுங் கருத வேண்டும். மொத்த வருமானம் பெருகினுலும், அந்த வருமானமானது மக்களிடையே

சமமாகப் பகிர்ந்தளிக்கப்படாவிட்டால் நலம் மேம்படாது. எனவே, தலா வருமானப் போக்கே முக்கியமானது.

நாட்டு விளைபொருளைப் பண மதிப்பிட்டு அளந்தறிவது பற்றியும் ஆசிரியர்களிடையே கருத்து வேற்றுமை உண்டு. 'ஒரு நாட்டின் உழைப்பும் முதலும் இயற்கை வளங்களில் செயல்பட்டு, ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட அளவு நிகர மொத்தமாக, எல்லா வகைப் பணிகளும் அடங்கிய, உருவ அருவப் பொருள்களை உற்பத்தி செய்கின்றன'. இந்த நிகர மொத்தமே நாட்டு விளைபொருள் என்பார் மார்ஷல். ஆனால், பிகு, பணத்தால் அளவிட முடிகிற வருமானப் பகுதியே நாட்டு வருமானம் என்பார். மார்ஷலது கருத்து நடைமுறைக்கு உதவாது என்பது வெளிப்படை. ஆனால், பிகுவின் கருத்திலும் சில குறைபாடுகள் உள்ளன. சமுதாயத்துக்கு மிகவும் பயன்படுகிற, ஆனால், பணத்தால் மதிப்பிட முடியாத இலவசப் பாலங்கள், குடும்பப் பணி, அரசின் பாதுகாப்பு—தற்காப்புப் பணி முதலிய பலவுள்ளன. இவற்றை பிகுவின் கருத்துப்படி நாட்டு வருமானத்தில் சேர்க்க முடியாது. பொருள்களின் தரத்தில் ஏற்படும் மாறுதல்களையும் பணத்தைக் கொண்டு அளவிட முடியாது. மேலும், பிகுவின் விளக்கம் சில புதிர்களைக் கொண்டு வந்து விடுகிறது. ஒருவன் தன் வீட்டு வேலைக்காரியை மணந்து கொண்டால், கூலி கொடுக்காமலேயே அவளது பணியைப் பெற்றுவிட முடியும். மணந்து கொண்ட பின் பணிகள் அளவு குறையாமலிருக்க, (ஆனால், அவற்றின் ஒரு பகுதியை இப்போது இலவசமாகப் பெறுவதால்) நாட்டு வருமானம் மட்டும் குறைந்து போகிற விந்தை நிலை ஏற்பட்டு விடுகிறது. மேலும், பணத்தின் மதிப்பு நிலைபேறுடன் இராவிட்டால், கால அளவில் நாட்டு வருமானப் பட்டியல்களை ஒப்பிட்டுப் பார்த்து முடிவுக்கு வருவதில் பொருளில்லை. இக்குறைகளெல்லாம் உண்மையே ஆயினும், பணம் தவிர வேறு எந்த மதிப்பளவையும் இல்லாத நிலையில், இதனை ஏற்றுக்கொள்ளாதிருக்க வழியில்லை.

நாட்டு வருமானப் புள்ளி விவரங்களிலிருந்து, இரு நாடுகளது பொருளியல் நிலையை ஒப்பு நோக்கி முடிவுக்கு வருவதிலும் சில சிக்கல்கள் உள்ளன. விலை மட்ட மாறுதல்கள், மக்கள் தொகை அளவு வேறுபாடுகள், இருநாடுகளுடைய செலாவணிகளின் மாற்று வீதம், போர்க் கருவிகள் போன்ற பொருள்களின் உற்பத்தியில் இரு நாடுகளும் செலவிடும் வீதங்கள், ஊதியத்தை எதிர்பாராமலே மக்கள் செய்கிற அலுவல்களின் அளவு, வருமானப் பகிர்வு நிலை ஆகியவற்றையும் ஒப்பிட்டுப் பார்த்த பின்னரே ஒரு முடிவுக்கு வர முடியும்.

# பிற்சேர்க்கை

## இங்கிலாந்தின் நாட்டு வருமானம் (1958)

### I. மொத்த நாட்டு விளைபொருள்

| விளைபொருள், அல்லது பணி | மில்லியன் பவுன் |
|---|---|
| பயிர்த் தொழில், வனங்கள், மீன்வளங்கள் | 863 |
| பொறி வழியாக்கம், சுரங்கம், கட்டிடங்கள் பொதுப் பயன் தருவன | 9886 |
| போக்குவரவு, வழங்கீடு | 4242 |
| காப்பீடு, பாங்குகள், நிதியகங்கள் | 566 |
| குடியிருப்பு வீடுகள் | 640 |
| பொதுப் பணியாளர் நல்கிய பணிகள் | 1831 |
| குடும்பங்களுக்குரிய வீட்டுப் பணிகள் | 97 |
| அயல்நாடுகளிலிருந்து பெற்ற நிகர வருமானம் | 269 |
| பிற பணிகள் | 1690 |
| சொத்து மதிப்பேற்றம் | 30 |
| நாட்டு வருமானம் | 20114 |

## II. நாட்டு வருமானம்

| வருமான வகைகள் | மில்லியன் பவுன் |
|---|---|
| கூலிகள், சம்பளங்கள் | 12110 |
| படையினர்க்குப் பணமாகவும் பொருளாகவும் கிடைத்த ஊதியம் | 412 |
| வேலை செய்வோர் காப்பீட்டுத் திட்டங்களுக்குக் கொடுத்தது | 865 |
| கலைத் தொழில் ஈட்டம் | 270 |
| பயிர்த் தொழில் வருமானம் | 439 |
| பிற தனியார் தொழில்களதும் கூட்டு வியாபாரங்களதும் இலாபங்கள் * | 1115 |
| கம்பெனி இலாபங்கள் * | 3095 |
| பொதுத் தொழில்களின் இலாபங்கள் * | 478 |
| நிலங்கள் கட்டடங்களது வாரம் | 1031 |
| அயல்நாடுகளிலிருந்து பெற்ற நிகர வருமானம் | 269 |
| சொத்து மதிப்பேற்றம் | 30 |
| நாட்டு வருமானம் | 20114 |

* தேய்மானச் செலவு உட்பட.

## III. செலவு

| செலவிடு துறைகள் | மில்லியன் பவுன் |
|---|---|
| உணவு | 4672 |
| உடை | 1383 |
| வாடகை, எரிபொருள் விளக்கு வீதங்கள் | 2051 |
| மது வகை | 954 |
| புகையிலை | 1031 |
| வீட்டுக்கு வேண்டிய பொருள்கள் | 1211 |
| நூல்கள், செய்தித்தாள்கள் முதலியவை | 225 |
| கார்களும் மோட்டார் சைக்கில்களும் | 384 |
| பயணம் | 530 |
| பொழுது போக்கு | 191 |
| பிற பொருள்களும் பணிகளும் | 2237 |
| ஆக மொத்தத் தனியார் நுகர்வு | 14869 |
| பொதுப்பணியாளர் செலவுகள் | 3734 |
| பிற செலவுகள் | 275 |
| மொத்த உள்நாட்டு முதலாக்கம் | 3600 |
| உதவித் தொகைகள் | 399 |
| அயல்நாடுகளிலிருந்து பெற்ற நிகர வருமானம் | 269 |
| கழிக்க வேண்டியவை : | 23146 |
| பொருள்கள் பணிகள் மீதுள்ள வரிகள் | 3032 |
| அடக்க விலையில் மொத்த நாட்டுச் செலவீடு | 20114 |

# 2. பணி வழிப் பகிர்வும் ஆள்வழிப் பகிர்வும்

நாட்டு வருமானத்தின் பகிர்வு இரு கோணங்களிலிருந்து ஆயப்பட்டு வருகிறது. உற்பத்திக் காரணிகள் தம்முடைய பணிக்குரிய கைம்மாருக வாரம், கூலி, வட்டி, இலாபம் என்றவாறுள்ள பண வருமானங்களை எவ்வாறு அடைகின்றன என்பது ஒரு வகை ஆய்வு. இது பணிவழிப் பகிர்வு (Functional Distribution) எனப்படும். மற்றொன்று, நாட்டு மக்கள் தத்தம் வருமானங்களை எவ்வாறு, எவ்வளவு பெற்று வருகின்றனர் என்பதைப் பற்றிய ஆய்வு. இது, ஆள்வழிப் பகிர்வு (Personal Distribution) எனப்படும். இரண்டும் ஒன்றே எனச் சொல்ல முடியாவிட்டாலும், இரண்டுக்கும் இடையே நெருங்கிய தொடர்பிருக்கிறது என்பதை மட்டும் உறுதியாகச் சொல்லலாம். உற்பத்தியில் ஈடுபட்டுள்ள நிலம், உழைப்பு, முதல், அமைப்பு ஆகியவற்றின் விலை எவ்வாறு முடிவாகிறது என்பதை விளக்கும் முயற்சியே பணிவழிப் பகிர்வு பற்றிய ஆய்வு. ஆனால், ஆள்வழிப் பகிர்விலோ, ஆட்களது வருமானத்தின் ஏற்றத் தாழ்வுகளை ஆராய்கிறோம். உழைப்பைப் பொருத்தவரை பணி வழிப் பகிர்வும், ஆள் வழிப் பகிர்வும் கிட்டத்தட்ட இணைந்தே செல்கின்றன. தனியொரு உழைப்பாளியின் சொந்த வருமானம், அவன் உழைப்புப் பணி வழி பெறுகிற கூலிகள் மட்டுமே. ஆனால் ஒரு சிறிய வியாபாரியை எடுத்துக் கொண்டால், அவனது சொந்த வருமானத்தின் ஒரு பகுதி அவன் உழைப்புக்குரிய கூலியாகவும், மற்றொரு பகுதி அவன் நிலத்துக்குரிய வாரமாகவும், மூன்றாவதொரு பகுதி அவன் விடுத்துள்ள முதலுக்குரிய வட்டியாகவும், எஞ்சியது தொழில் இலாபமாகவும் இருக்கலாம். இவ்வாறு, எல்லாரது வருமானமும் அவரவர் உற்பத்திப் பணியைச் சார்ந்திருப்பது தெளிவு.

எனவே, ஆள்வழிப் பகிர்வை ஆயவேண்டுமானாலும், முதலில் பணி வழிக் கோட்பாடுகளை ஆய்ந்தாகவேண்டும்.[1]

## வருமான ஏற்றத் தாழ்வுகள்

நாட்டு வருமானம் எவ்வாறு நாட்டு மக்களிடையே பகிர்ந்தளிக்கப் பட்டுள்ளது என்பதை ஆய்வதே ஆள் வழிப் பகிர்வு. இவ்வகை ஆய்வில் ஈடுபட்ட ஆசிரியர் பலரும் எட்டியுள்ள முடிவு, தற்கால முதலாளித்துவ சமுதாயங்களில் நாட்டு வருமானம் மக்களிடையே சமமாகப் பகிர்ந்தளிக்கப்பட்டிருக்கவில்லை என்பதே. ஒரு சிலர் செல்வந்தராகவும் மிகப்பலர் ஏழையராகவும் இருப்பது எங்கெங்கும் காண்கிற ஓர் அவல நிலையாய் உள்ளது. குபேரபுரி எனக் குறிப்பிடப்படும் அமெரிக்காவிலோ, இன்று, மொத்த நாட்டு வருமானத்தில் மூன்றிலிரு பங்கு உயர் மட்டத்திலுள்ள 10 சதவீத மக்களிடமும், மற்றொரு 10 சதவீதப் பங்கு அடி மட்டத்திலுள்ள 30 சதவீத மக்களிடமும் பகிர்ந்து கிடப்பதாகப் புள்ளி விவரங்கள் தெரிவிக்கின்றன. பத்தொன்பதாவது நூற்றாண்டைச் சார்ந்த பரீட்டோ, இவ்வாறு வருமானம் பகிர்ந்தளிக்கப் பட்டிருக்கும் நிலையானது சமூக அரசியல் அமைப்புக்களாலும், வரிநிலைகளாலும் மாறிவிடாது தொடர்ந்து நிலவும் என்று கூடச் சொல்வார்.

இந்த ஏற்றத் தாழ்வுகளுக்குக் காரணங்கள் யாவை? இவற்றை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம்: சில, ஏற்றத் தாழ்வுகளின் தோற்றத்துக்குக் காரணமாகின்றன; மற்றும் சில இந்த ஏற்றத்தாழ்வுகளை மிகுக்கின்றன; இன்னுஞ் சில ஏற்றத் தாழ்வுகளை நிலை பெறச் செய்கின்றன.

உயர்ந்த வருமானங்களும் குறைந்த வருமானங்களும் தோன்றுவதற்கு அடிப்படைக் காரணம் மக்கள் சார்ந்துள்ள அலுவல்களிடையே உள்ள வேறுபாடுகள் தாம். அலுவலின் இனிமையன்மை, ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்துக்குப் பெயர்ந்து செல்வதில் ஏற்படுஞ்செலவு, பல்வேறு தொழில்களில் வேண்டி வருகிற உள்ளார்ந்த திறமை, உயர் கூலி தரும் அலுவல் வகைகளில் பயிற்சி பெறுவதற்கான வாய்ப்பு வேறுபாடுகள், தொழிற் சங்கங்கள் போன்ற முற்

[1] தூகன், பாரனேவ்ஸ்கி (Tugan, Baranousky) போன்றோர் 'பகிர்வு பற்றிய சமூகக் கோட்பாடு' ஒன்றைத் தந்துள்ளனர். இவர்கள் கருத்துப்படி சமூக விளை பொருளில் ஒருவன் பங்கு சமூக ஆற்றலின் பகிர்வைச் சார்ந்துள்ளதாகச் சொல்லப்படும். இதனால், பணிவழிப் பகிர்வுக்கும் ஆள்வழிப் பகிர்வுக்கும் இடையே வேறுபாடில்லையென இவர்கள் முடிவு கட்டுகின்றனர்.

றுரிமைஆற்றல் உளதாயிருத்தல் ஆகியவை பல்வேறு அலுவல்களி டையே கூலி மட்ட வேறுபாடுகளுக்குக் காரணமாகும் என்பார் மீட்.

மற்றெரு காரணம் சூழ் நிலை. இங்கும் பரம்பரை ஒரு புறமும் வாய்ப்புக்கள் மறு புறமுமாக வருமான ஏற்றத் தாழ்வுகளை இயற்றி விடுகின்றன. தமக்கும் தம்மைச் சார்ந்தவர்க்கும் மிக எளிதில் உயர் வருமாளங்களைத் தருகிற அலுவல்களைச் செல்வந்தர்களால் தேடிக்கொள்ள முடிகிறது. சொந்தத் திறமை இருந்தாலும் ஏழைய ரால் முன்னேற முடியாமல் போவதற்கு வாய்ப்பின்மையே ஒரு கார ணம். 1928 இல் அமெரிக்காவில் நடந்த கணக்கெடுப்பு ஒன் றின்படி அன்றிருந்த தொழிலதிபர்களில் 60 சதவீதத்தவரும், லட் சாதிபதிகளில் 75 சத வீதத்தவரும் பிறப்பால் தொழிலதிபர் பிள்ளை களாக இருந்த உண்மை தெளிவாக்கப் பட்டுள்ளது. அன்றிருந்த தொழிலதிபர்களில் 12.5 சதவீதத்தவரும், லட்சாதிபதிகளில் 1.6 சதவீதத்தவரும் ஏழைக் குடும்பங்களில் இருந்து வந்தவர்.

ஏற்றத் தாழ்வுகள் ஒரு முறை தோன்றினல், முக்கியமானதொரு காரணத்தால் அவை மிகுக்கப்பட்டுவிடுகின்றன. தனியார் சொத் துரிமையே இதற்குக் காரணம். ஒரு முதலாளித்துவ அமைப்பில் தனியார்க்குச் சொத்துரிமை மட்டுமல்ல, அச்சொத்தை வருமானம் ஈட்டும் வகையில் ஆளவும் உரிமையுண்டு. இதனல், சொத்து மிக ஈட்டும் ஒருவன், அதனையே மீண்டும் மீண்டும் ஆண்டு, மேலும் மேலும் வருமானத்தை ஈட்டிக்கொள்கிறன். இவ் வருமானத்தைக் கொண்டு புதுச் சொத்தும் புது வருமானமும் தொடர்ந்து ஈட்டிக் கொள்ள முடிகிறது. இதனல் உள்ளவனுக்கும் இல்லாதவனுக்கும் இடையே உள்ள பிளவு தொடர்ந்து ஆழமாகிக் கொண்டே போகிறது.

இந்த ஏற்றத் தாழ்வுகள் நிலை பெறக் காரணம் வாரிசுரிமை முறைகளே. பெற்றவன் சொத்து பிள்ளைகளுக்கும் வாரிசுரிமையா கச் செல்லும்போது, செல்வந்தன் மகன் செல்வந்தனுகவும், ஏழை மகன் ஏழையாகவும் தலைமுறை தலைமுறையாகத் தொடர்வது தவிர்க்க இயலாததாகிறது.

இந்த ஏற்றத் தாழ்வுகளின் விளைவுகளை அறநோக்கிலிருந்து அணுகுவது ஒருபுறமிருக்க, அதன் பொருளியல் விளைவுகள் தீமை பயப்பன என்பதை மட்டும் இங்குப் பார்க்கலாம். வருமான ஏற்றத் தாழ்வுகள் நிலவும்போது, நாட்டு உற்பத்தி செல்வந்தர் கட்டுப் பாட்டின் கீழ் வருவது இயல்பு. அவர்களுடைய தேவையே ஆற் றல் மிக்க தேவை. செல்வந்தர்க்கு வேண்டிய பொருள் வகை

களே உற்பத்தியாவதோடு, நாட்டின் செல்வ வளங்கள் அவ்வகைப் பொருள்களின் உற்பத்தியில் தான் மேலும் மேலும் ஈடுபடுத்தப் படுகின்றன. இதனுல், நாட்டின் அரிய வளங்கள் உரிய வழியில் ஆளப் பெருது போகலாம். ஏழையர் வாங்கும் ஆற்றல் அறவே குறைந்திருப்பதால், அவர்களுடைய வாழ்க்கைத் தரம் குன்றுவது இயல்பு. இதனுல், நாட்டு மக்களது வாழ்க்கைத்தரம் இழிந்த நிலையலாம்.

கால அளவில் தம்மிடம் வாங்கும் ஆற்றல் அறவே இல்லாது போகும் நிலையில், நுகர்வோர் குலத்தால் பொருள்களை வாங்க முடியாத நிலைகூட ஏற்பட்டுவிடலாம். இதன் விளைவு மிகவும் அவலமாயிருக்கும். வருமானம் ஒரேயிடத்தில் சென்று குவியக்குவிய, செல்வந்தர் தம் சேமிப்பும் முதலீடும் வளர்ந்து செல்லும். ஆனுல், அதே நேரத்தில் ஏழையரிடுஞ் செலவு குறைந்து செல்லும். இதனுல், பொருள் தேவை குன்றும்; விலை இறங்கும். இதன் தொடர்பாக முதலீடு குன்றும். இதன் விளைவு வேலை வாய்ப்புக்கள் சுருங்க நேர்ந்து வருமானமானது மேலுங் குறைந்து செல்வதுதான். இந்த நச்சுச் சக்கரமானது சுற்றிச் சுற்றி, இறுதியில் மாபெரும் தொழில் மந்தம் ஒன்றுக்குக் காரணமாகிவிடும். இத்தகையதொரு சூழ் நிலையில் முதலாளித்துவமே உடைந்து சுக்கு நூருகிவிடும் என்பர் மார்க்ஸீய வாதிகள். கெயின்ஸீயப் பொருளியலிலும் அமித சேமிப்பும், குறைந்த நுகர்வும் தீயனவென்று சுட்டிக்காட்டப் பட்டுள்ளது.

பொருளியலின் சில ஆதாரக் கோட்பாடுகளின் அடிப்படையில் இந்த ஏற்றத்தாழ்வு மக்கள் நல மேம்பாட்டுக்கு உதவுவதல்ல என்றும் அறிய முடியும். ஒரு நிலைக்குப் பின் வருமானம் பெருகும்போது, அதன் 'இறுதிநிலைப் பயன்பாடு' குறைந்து செல்லும் என்பது குறைந்து செல் பயன்பாட்டு விதி கூறும் உண்மை. இலட்சம் ரூபாய் ஆண்டு வருமானம் உள்ளவனைவிடக் கோடி ரூபாய் ஆண்டு வருமானம் உள்ளவன் நூறு மடங்கு மிகுதியாகப் பயன்பாடு பெறுகிருன் எனச் சொல்லமுடியாது. எனவே, பெருஞ் செல்வந்தர்களின் செல்வத்தை வெட்டிக் குறைத்து ஏழையரது செல்வத்தைப் பெருக்க உதவினுல், அதனுல் ஏழையர் பெறும் பயன்பாட்டு மிகுதி, செல்வந்தர் இழப்பதைவிட எச்சமாயிருக்கும் என்ருகிறது.[1] எனவே ஏற்றத்தாழ்வுகளை அகற்றுவதால், மக்கள் நலம் மேம்பட ஒரு வாய்ப்பிருப்பதும் தெளிவாகிறது.

[1] இங்கு நூலாசிரியர்களிடையே கருத்து வேற்றுமை நிலவுகிறது. மார்ஷல் எட்ஜ்வொர்த், பிகு போன்ருேர் இதனை ஆதரிக்கின்றனர். ஆனுல், ராபின்சன், ஹிக்ஸ், கால்டர் போன்ருேர் இதனை ஏற்றுக்கொள்வதில்லை. இராபின்ஸின் கருத்துப்படி விருப்பத்தராதர வேறுபாடுகளால் பொருளின் குறிப்பிட்ட அளவிலிருந்து இருவர் பெறும் பயன்பாட்டை ஒப்பிட்டுச் சொல்லமுடியாது, ஹிக்ஸும், கால்டரும்,

இத்தகைய ஏற்றத் தாழ்வுகள் நிலவுவதை ஆதரிப்போர், இவற்ருல் மக்களிடையே முன்னேறும் ஆர்வம் மிகுவதாகக் கூறுவதும் உண்மைக்குப் புறம்பானது. தனியார் முன்னேற்றம் எப்போதும் சமூக நலத்துக்கு, ஊறு செய்யாத வகையில் நடப்பதாகச் சொல்ல முடியாது : எளிய பங்காளர்கள் வயிற்றிலடித்துப் பெரியதனக்காரர் ஆகியவர்கள் எத்தனேயோ பேருண்டே !

மேலும், வருமான ஏற்றத் தாழ்வுகளின் சமூக அரசியல் விளேவுகளும் பெரும்பாலும் தீமை பயப்பனவாகவே உள்ளன. உண்டு களித்திருப்போர் ஊக்குவிக்கப்பெற்று, நாட்டின் அரிய வளங்கள் வீணுக்கப்படலாம். ஏழையர் மிகுவதால் ஏற்படும் அமைதியின்மை புரட்சிக்கு நிலேக்களனுவதும் இயல்பு. பிரெஞ்சுப் புரட்சி என்ன, ருஷியப் புரட்சி என்ன, எல்லாப் புரட்சிகளுக்கும் காரணம் பொருளியல் ஏற்றத் தாழ்வுகள் தாமே ?

இறுதியாக, இந் நிலேக்கான தீர்வு வழிகளேயுங் காண வேண்டும்.

அலுவல்கள் வழி வரும் வருமான ஏற்றத் தாழ்வுகளுக்குத் தீர்வு காண கல்வி வளர்ச்சி ஒரு வழி. தன் பொறுப்பில், கல்வி நிலேயங்களே அரசு திறப்பதன் வழியாக மட்டுமல்ல, ஏழை எளியோர்க்குப் படிப்புதவித் தொகைகளும், பள்ளிச் செலவுக்குக் கடனுதவியும் வழங்குவதன் வழியாகவும் இது இயல்வதாகும்.

ஏழை எளியோர் சுரண்டப் படுவதைத் தடுக்கும் வகையில் வேறு சில ஏற்பாடுகளேயுஞ் செய்யலாம். அத்தகையவர்க்குக் குறைந்த அளவு வருமானத்தை உறுதிப்படுத்துவதற்கான ஏற்பாடுகளே இங்குக் குறிப்பிடப்படுகின்றன. ஏழை எளியோர் உண்மை வருமானத்தை மிகுக்கும் வகையில் இலவசக் கல்வி, இலவச மருத்துவ உதவி, சமூகப் பாதுகாப்புத் திட்டங்கள் முதலியவற்றுக்கு ஏற்பாடு செய்யலாம். இவர்களது பண வருமானத்தை மிகுக்கும் வகையில் குறைந்த அளவுக் கூலிகள் நிறுவப்படலாம்.

இதே நேரத்தில் செல்வந்தரைத் தாக்கும் சில செயல்வகைளும் பரிந்துரைக்கப் படலாம். செல்வந்தர் மீது பேரளவில் வரி

எல்லாரது வருமானமும் குறிப்பிட்ட அளவு மிகுந்தால் எல்லாரது நலமும் ஒரேயளவு மிகுந்துள்ளதாக ஏற்றுக்கொள்வர். ஆனுல், வருமானப் பகிர்வில் ஏற்படும் மாறுதல்களால் நலம் எவ்வாறு, எவ்வளவு மாறுகிறது என்பதைத் துல்லியமாகச் சொல்ல முடியாது என்பர். ஒரே வகைச் சுவையுணர்வும் தேவையும் கொண்டுள்ள இருவரிடையே வருமானமானது சமமாகப் பகிர்ந்தளிக்கப்பட்டால் மொத்த நிறைவு மிகவுயர்ந்த அளவினதாயிருக்கும் என்பார் மீட். (முன்னர், குறைந்து செல் பயன்பாட்டு விதியை விளக்கும்போதும் இவை பற்றிக் குறிப்பிடப்பட்டுள்ளது)

விதித்து, அதனால் வருகிற வருவாயை ஏழை எளியோர் வருமானம் மிகுக்கும் திட்டங்களில் செலவிட வேண்டும். பொருள்கள்மீது வரி விதிப்பது இதற்கேற்ற வழியல்ல ; இதன் வழி செல்வந்தரிடமிருந்து மிகுதியாகப் பிரித்தெடுக்க முடியாது என்பது ஒருபுறமிருக்க, பொருள் வரிகள் உற்பத்திக் காரணிகள் ஒதுக்கீட்டை விரும்பத் தகாத முறையில் மாற்றியமைத்தும் விடலாம். எனவே, வருமானங்கள்மீது விதிக்கிற வளர்வீத வரியே, இங்கு, மிகவும் வரவேற்கத் தக்கது. இதனால், உற்பத்திக் காரணிகள் ஒதுக்கீடு தகாத முறையில் மாறிவிட வழியில்லை. வேலையின்மைக்கும் இவ் வரி ஒரு பரிகாரமாகும். இதை விடவும் சிறந்த வரி சொத்து வரிகளாகும். இவற்றால் முதல் வளர்ச்சியில் இடுகிற செலவு குன்றாது ; உழைக்கும் ஆர்வத்தையும் இவை கட்டுப்படுத்துவதில்லை.

தனியாள் சொத்துரிமையால் தோன்றுகிற ஏற்றத்தாழ்வுகளுக்குரிய பரிகாரத்தைப் பற்றியும் ஆசிரியர்களிடையே கருத்து வேற்றுமை உண்டு. தனியாள் சொத்தைப் படிப்படியாக அரசே விலைக்கு வாங்கி, அதனை ஏழையர் நலன் கருதும் வகையில் பயன்படுத்த வேண்டும் என்பார் மீட். சமதருமக் கருத்தினர் இந்த வழியில் அமைதியடையாதவர்களாக, உடனடியாகச் சொத்துரிமையைப் பொதுவுடைமை யாக்குவதே சிறந்த பரிகாரம் என்பர்.

சமதருமக் கருத்தினர் இத்துடன் நில்லாது, இம் முதலாளித்துவ அமைப்பையே மாற்றிவிட வேண்டும் என வலியுறுத்தி வருகின்றனர். முதலாளித்துவ அமைப்பு மாறி, ஒரு சமதரும—பொதுவுடைமை அமைப்பு ஏற்பட வேண்டும் என்பது இவர்கள் கருத்து. சமதரும அமைப்பில் அவரவர் உழைப்புக்கேற்ப வருமானம் பெற வகை செய்யப்படும். பொதுவுடைமை அமைப்பிலோ, அவரவர் அவசியத்திற்கேற்ப வருமானம் பெற வகை உண்டு. பிந்திய அமைப்பு இன்னும் குறிக்கோள் நிலையிலேயே உள்ளது. இதன் நடைமுறை வெற்றி தோல்வி பற்றி எதுவும் இப்போது சொல்ல முடியாது. ஆனால், சமதரும அமைப்பைப் பொருத்தவரை அது திறமையின் அடிப்படையில் ஏற்றத்தாழ்வுகளை அனுமதிக்கிறது : சோவியத் நாட்டு வரலாறு, இதன் தொடர்பான உண்மையொன்றை அறியத் தருகிறது. திறமை அடிப்படையில் ஏற்றத் தாழ்வுகளை அனுமதித்தாலும், அவை கால அளவில் தொல்லை கொடுக்கும் அளவுக்கு வளரத் தக்கவையே. சோவியத் நாட்டில் போர்ப் பிற்காலத்தில் ஏற்றத்தாழ்வுகளைக் குறைப்பதற்காகக் கொணர்ந்த சீர்திருத்தங்கள் இதனை விளக்கும். எனவே, ஒரு சமதரும அமைப்பிலும் பரீட்டோ விதியும், பின்னர் டால்டன்

போன்ருேர் கொண்ட கருத்துக்களும்[1] உண்மையாகின்றன என்று தான் முடிவு கட்டும் நிலையிலுள்ளோம்.

[1] ஒரு தடவை வருமான சமத்துவத்தை நிறுவி விட்டாலும். குறுகிய கால அளவுக்குப் பின், சமத்துவமின்மை மீண்டும் தோன்றிவிடும். எனவே, குறுகிய கால இடைவெளிகளில் மீண்டும் மீண்டும் வருமானத்தைச் சமமாகப் பகிர்ந்தளித்தால்தான் சமத்துவத்தைப் பேண முடியும் என்பார் டால்டன்.

# 3. பகிர்வுக் கோட்பாடுகள்

உற்பத்திக் காரணிகளிடையே சமூக விளைபொருள் எந்த அடிப்படையில் பகிர்ந்தளிக்கப்படுகிறது என்ற சிந்தனை தொன்மை மரபினரிடமிருந்து தொடங்கியது தான். உற்பத்திக் காரணிகள் பெறும் பங்கு அவற்றின் விலையே என்ற பொதுவான கருத்துத்தான் இந்தச் சிந்தனைக் கெல்லாம் ஆதாரமாயிருக்கிறது. இதனால், விலை பற்றிய கருத்துக்களின் அடிப்படையே உற்பத்திக் காரணிகள் பங்கு நிருணயம் பற்றிய கருத்துக்களுக்கும் ஆதாரமாக விளங்கி வருவதில் விந்தையில்லை.

ஒரு பொருளின் விலை அதன் உற்பத்திச் செலவுக்குச் சமமாக முற்படும் எனப் பழங்கால ஆசிரியர்கள் கருதி வந்தனர். இந் நிலையில், ஓர் உற்பத்திக் காரணியின் விலையும் அதன் உற்பத்திச் செலவுக்குச் சமமாக இருக்க வேண்டும் என அவர்கள் கொண்டது இயல்பே. 'உற்பத்திக் காரணிகளின் உற்பத்திச் செலவு' எதனைக் குறிக்கிறது எனப் பார்க்க வேண்டும். உற்பத்திச் செலவே எனப் பழங்கால ஆசிரியர்கள் கொண்டதால், உழைப்பின் உற்பத்திச் செலவு என்று சொல்லும் போது, அவ் வுழைப்பு அளிக்கப் பெறுவதற்கு வேண்டிய குறைந்த அளவு உணவுப் பொருள்களையே அது சுட்டி நிற்பதாக அவர்கள் கருதினர்; இதுபோன்றே முதலின் அளிப்பு நுகர்வுத் தவிர்ப்பைப் பொருத்துள்ளதால், இந்த நுகர்வுத் தவிர்ப்பையே முதலின் உற்பத்திச் செலவென அவர்கள் கொண்டனர். அந்நாளைய ஆசிரியர்கள் அமைப்பைப் பற்றிச் சிந்திக்காததால், அதன் உற்பத்திச் செலவைப் பற்றியும் சிந்திக்க வேண்டியதில்லை. நிலத்தைப் பொருத்த வரை, அது இயற்கையின் கொடையாதலால், அதற்கென உற்பத்திச் செலவு எதுவுமில்லை; எனவே, நிலத்துக்குக் கிடைக்கிற பங்கு ஒருவகை வேறுபாட்டெச்சமென ரிக்கார்டோ போன்றவர்கள் விளக்க முற்பட்டனர். எவ்வாறு ஒரு

பொருளின் விலையை முடிவு செய்வதில் உற்பத்திச் செலவு மட்டுமே செயல் புரிகிறது எனச் சொல்வது தவறு, அதுபோன்றே ஓர் உற்பத்திக் காரணியின் ஊதியமும் அதன் உற்பத்திச் செலவை யொட்டியது எனச் சொல்வதிலும் பொருளில்லை.

இந் நிலையில், பொருளின் விலையை முடிவு செய்வது உற்பத்திச் செலவல்ல, அதன் பயன்பாடே என்ற கோட்பாடு வலியுறுத்தப் பட்டு வந்தது. இதன் விளைவாக, இப் பயன்பாட்டுக் கோட் பாட்டை உற்பத்திக் காரணிகளுக்கும் பொருத்தி ஆராய ஆசிரியர் கள் முன் வந்தனர். இங்கே, ஒரு பொருளுக்கும் ஓர் உற்பத்திக் காரணிக்கும் இடையே முக்கியமானதொரு வேறுபாடிருப்பதை ஆசி ரியர்கள் உணரத் தலைப்பட்டனர். பயன்பாடு கருதியே பொருளை விரும்பிப் பெறுகிறோம்; ஆனால், உற்பத்திக் காரணிகளிலிருந்து நேரடியாகப் பயன்பாடெதுவும் கிடைக்கவில்லை. இக் காரணிகளைக் கொண்டு உற்பத்தி செய்ய இயல்கிற பொருள்களிலிருந்து பயன் பாடு பெற இயல்வதைக் கருத்தில் கொண்டே இவற்றை விரும்பி வாங்குகிறோம். எனவே, உற்பத்திக் காரணிகளின் தேவை அவற் றால் உற்பத்தி செய்ய இயல்கிற பொருள்களின்—விளைபொருளின் —அளவை, அல்லது அவற்றின் விளை திறனையே சார்ந்துள்ளதாகி றது. பொருள்களின் விலை அவற்றின் இறுதி நிலைப் பயன்பாட்டுக் குச் சமமாயிருக்கவேண்டும் என்று சொல்வது போலவே, உற்பத் திக் காரணிகளின் விலை, அவற்றின் இறுதி நிலை விளை திறனுக்குச் சமமாயிருக்க வேண்டும் என் விளக்கப் பெற்றது.

இக்கால ஆசிரியர்கள் இந்த இறுதி நிலைக் கோட்பாட்டை இன் னும் நுட்பமாக விளக்கி, ஒரு நிறுவனத்தின் இறுதிநிலை வருவாய் இறுதி நிலை உற்பத்திச் செலவு ஆகியவை எவ்வாறு விலையை முடிவு செய்கின்றன என்பதைச் சொல்ல முற்பட்டதும், இப் புதிய கருத் துக்கள் உற்பத்திக் காரணிகளின் விலை நிருணயம் பற்றிய விளக்கங் களிலும் எதிரொலிக்கலாயின. இந்தத் தலை முறையினர் நூல் களில், இவ்வாறு, இறுதிநிலை விளைதிறன் கோட்பாடு புது வண் ணம் பெற்றுத் திகழ்கிறது. இக்காலத்தில், இக் கோட்பாடு பற் றியே நூல்களெல்லாம் பரக்கப் பேசுவதால், இது பற்றி, அடுத்து, விளக்கமாக ஆராயலாம்.

**இறுதிநிலை விளைதிறன் கோட்பாடு.**

கடந்த நூற்றாண்டின் கடைசிப் பகுதியில் எழுதி வந்த விக்ஸ்டீட் என்பாரும், இந்த நூற்றாண்டைச் சார்ந்த கிளார்க், ஜோன் ராபின் சன் ஆகியோரும் இக் கோட்பாட்டை வெவ்வேறு முறைகளில்

விளக்கி உள்ளனர் அவர்கள் விளக்கத்தைப் படிப் படியாகப் பார்க்கலாம்.

விக்ஸ் டீட் 'வினைதிறன்' என்பதற்குப் பதிலாக, 'திறமை' (Efficiency) என்ற சொல்லையே கையாண்டு வந்தார். எல்லா உற்பத்திக் காரணிகளும் அவற்றின் இறுதிநிலைத் திறமையும், இறுதி நிலை உற்பத்திச் செலவும் சமமாகும் நிலை வரை தொடர்ந்து ஆளப் பெறும் என்பது அவர் கோட்பாடு. 'மற்றவை மாருதிருக்க, குறிப்பிட்டவொரு காரணியின்சிறியதொரு மிகுதிப்பாட்டால், வினைபொருளில் ஏற்படும் வினைவே' அக்காரணியின் திறமை என்பார் விக்ஸ் டீட். எவ்வாறு ஒரு பொருளின் விலை அதன் இறுதிநிலைப் பயன் பாட்டுக்குச் சமமாக இருக்குமோ, அது போன்றே, ஒரு காரணியின் விலையும் அதன் இறுதிநிலைத் திறமைக்குச் சமமாக இருந்தாகவேண்டும் என்பது அவர் கோட்பாடு. மேலும் மேலும் உழைப்பாளர்களை அமர்த்தும் 'விவேகமுள்ள' வேலை தருவோன், தான் தருகிற கூலிக்கு எந்தவொரு உழைப்பாளியின் உற்பத்தி சமமாக இருக்கிறதோ, அவ் வுழைப்பாளியுடன், தொடர்ந்து வேலைக்கு ஆள் அமர்த்துவதை நிறுத்தி விடுகிருன். இதே செயல் முறையை எல்லாக் காரணிகளிலும் கடைப் பிடிக்கிருன். இவ்வாறு, எல்லா உற்பத்திக் காரணிகளும் தத்தம் இறுதிநிலை வினைபொருளும் விலையும் சமமாகும் நிலைவரை மேலும் மேலும் அமர்த்தப் படுகின்றன.

அமெரிக்கப் பேராசிரியராகிய கிளார்க், வினைதிறன் கோட்பாட்டை இன்னும் விளக்கமாக ஆராய்ந்து உள்ளார். 'பணியின் இறுதிநிலை வினைதிறன்' என்ற சொற்றொடரை அவர் பயன்படுத்துகிருர். கூடுதலாகவோ, குறைவாகவோ பணியின் ஓர் அலகு ஆளப்படுவதால், மொத்த உற்பத்தியில் ஏற்படுகிற மிகுதி, அல்லது வேறுபாடுதான் பணியின் இறுதிநிலை வினைதிறன். ஒவ்வொரு உற்பத்திப் பணியினதும் வருவாய் வீதம், நிறைவுப் போட்டி நிலவும் போது, அதன் இறுதிநிலை வினைபொருளுக்குச் சமமாக இருந்தாக வேண்டும் என்பார் கிளார்க். உற்பத்திப் பணியொன்றன் வருவாய் வீதம், அதன் இறுதிநிலை உற்பத்தியை விடக் குறைவாயிருந்தால், தொழில் துணிவோரிடையே ஏற்படும் போட்டி, வீதத்தை உயர்த்தி விடும். மாருக, வருவாய் வீதம் இறுதிநிலை உற்பத்தியை விட மிகுதியாய் இருந்தால், உற்பத்திப் பணியாளர்களிடையே போட்டி ஏற்பட்டு வீதம் குறைக்கப்பட்டு விடும்.

வேருேர் உண்மையையும் கிளார்க் விளக்கி உள்ளார். பிற காரணிகளெல்லாம் மாருதிருக்க, ஒரு காரணியை மட்டும் எந்த அளவுக்கு மேலும் மேலும் ஆள முடியும் என்ற வினவுக்கு அவர்

பொருத்தமான பதில் தந்து உள்ளார். பயிர்த் தொழில் போன்ற தொழில்களில், பிற உற்பத்திப் பணிகள் மாறுதிருக்க, அவற்றுடன் சேர்த்தாளப்படும் குறிப்பிட்டவொரு காரணியின் அளவு நெகிழ்ந்து கொடுக்கத் தக்கது என்பார் அவர். மேலும், நெடுங் காலத்தில், நிலைத்த காரணியை மாறுங் காரணியுடன் சரிக்கட்டிக் கொள்ள முடியும். முதல் மாருதிருக்க, உழைப்பு மட்டும் மாறிக் கொண்டிருக்குமானுல், பழைய எந்திரங்களின் இடத்தில், அதே மதிப்புள்ள (ஆனுல், மிகுதியான உழைப்பாளர்க்கு வேலை தருகிற) புதிய எந்திரங்களை ஆண்டு, மிகுதியான உழைப்பாளர்களை அமர்த்த முடியும். இவ் வகை ஏற்பாடுகளுக்கு எல்லையே இல்லை என்பார் கிளார்க்.

விக்ஸ்டீட், கிளார்க், இருவரும் இறுதிநிலை விளைதிறன் கோட்பாட்டை நிறைவுப் போட்டி நிலவும் அங்காடிக்குப் பொருந்தும் வகையில் மட்டுமே விளக்கி வந்தனர். ஆனுல், ஜோன் ராபின்சன் அம்மையாரோ எல்லா அங்காடிகளுக்கும் பொருந்தும் வகையில் இக் கோட்பாட்டைத் திருத்தி அமைத்துள்ளார்.

'காரணியின் மற்றுமொரு அலகை ஆள்வதால் கிடைக்கிற மொத்த விளைபொருளின் மிகுதி'யே இறுதிநிலை விளைபொருள் என்பார் அவர். இந்த மிகுதிப்பாட்டை மூன்று முறைகளில் அளக்கலாம் :

1. 'இறுதிநிலைத் தூல விளைபொருள்' (Marginal Physical Product)

2. 'இறுதிநிலைத் தூல விளைபொருளின் பணமதிப்பு', அல்லது, 'இறுதிநிலை மதிப்பு விளைபொருள்' (Marginal Value Product)

3. அதிகப்படி உற்பத்தியைக் கொணர்வதாலும், விற்பதாலும் நிறுவனத்தின் மொத்த வருவாயில் விளைந்துள்ள மாறுதல். இது 'இறுதிநிலை வருவாய் விளைபொருள்' (Marginal Revenue Product)

அடுத்துள்ள அட்டவணையிலிருந்து இந்தக் கருத்துக்களை நன்கு உணரலாம் :

பிற காரணிகளெல்லாம் மாருதிருக்க, உழைப்பின் அளவு மட்டும் மாறிக் கொண்டிருப்பதாக வைத்துக்கொள்வோம். இதனுல் மொத்த விளைபொருள் எவ்வாறு மாறும் என்பதை அட்டவணையின் இரண்டாவது பத்தி சொல்கிறது. விளைபொருள் அளவு தொடக்கத்தில் வளர்ந்து சென்று, ஒரு நிலைக்குப் பின் குறைந்து செல்வதற்

குக் காரணம் மாறும் வீத விதியின் இயக்கம்தான். மூன்ருவது, பத்தியில் உழைப்பின் அதிகப்படி அலகுகள் அதிகப்படியாகத் தருகிற விளைபொருளின் அளவு தரப்பட்டுள்ளது. அடுத்த பத்தி

| உழைப்பாளர் எண்ணிக்கை | மொத்த விளைபொருள் | இறுதி நிலைத்தூல விளைபொருள் | பொருளின விலை ரூ. | மொத்த வருவாய் ரூ. | இறுதி நிலை வருவாய் விளைபொருள் ரூ. | சராசரி வருவாய் விளைபொருள் ரூ. |
|---|---|---|---|---|---|---|
| 1 | 6 | - | 2 | 12 | - | 12.00 |
| 2 | 14 | 8 | 2 | 28 | 16 | 14.00 |
| 3 | 24 | 10 | 2 | 48 | 20 | 16.00 |
| 4 | 32 | 8 | 2 | 64 | 16 | 16.00 |
| 5 | 38 | 6 | 2 | 76 | 12 | 15.20 |
| 6 | 42 | 4 | 2 | 84 | 8 | 14.00 |
| 7 | 44 | 2 | 2 | 88 | 4 | 12.57 |
| 8 | 45 | 1 | 2 | 90 | 2 | 11.25 |
| 9 | 45 | 0 | 2 | 90 | 0 | 10.00 |
| 10 | 44 | –1 | 2 | [illegible]8 | -2 | 8.80 |

யில் விளைபொருள் விலை தரப்பட்டுள்ளது : விளைபொருள் அங்காடியில் நிறைவுப் போட்டி நிலவும் போது, பொருளின் எந்த அளவையும் ஒரே விலைக்கு விற்க முடியும் ; எனவே, அந்த விலை ரூ. 2 என வைத்துக் கொண்டு, அது ஒவ்வோர் உற்பத்தி நிலையிலும் மாருதிருப்பதாகக் காட்டப்பட்டுள்ளது. அதற்கடுத்த பத்தியில் மொத்த விளைபொருளின் பண மதிப்பு தரப்பட்டு உள்ளது. மேலும் மேலும் உழைப்பை அமர்த்தும் போது, தொழில் துணிவோன் பெறுகிற மொத்த வருவாயே இது. இது மொத்த விளைபொருளதும் பொருள் விலையினதும் பெருக்குத் தொகை. அடுத்த பத்தியில் இறுதிநிலை வருவாய் விளைபொருள் தரப்பட்டு உள்ளது. உழைப்பை மேலும் மேலும் ஆளும்போது, தொழில் துணிவோன் பெற முடிகிற அதிகப்

படி வருவாய் இது. இறுதியில், சராசரி வருவாய் விளைபொருள் தரப்பட்டு உள்ளது. மேலும் மேலும் உழைப்பை ஆளும் போது, அவற்றிலிருந்து தொழில் துணிவோன் பெறுகிற சராசரி வருவாய் இது.

கடைசி இரு கட்டங்களிலிருந்து, இறுதிநிலை வருவாய் விளைபொருள், சராசரி வருவாய் விளைபொருள் ஆகிய இரண்டினதும் வழக்கமான போக்கைப் புரிந்துகொள்ள முடியும். சராசரி வருவாய் விளைபொருள் முதலில் (3-ஆம் உழைப்பாளன் வரை) ஏறிச் செல்லும்போது, அதைவிட மிகுதியான வீதத்தில் இறுதிநிலை வருவாய் விளைபொருள் ஏறிச் செல்கிறது. பின்னர், அது இறங்கிச் செல்லும் போது, அதைவிட மிகுதியான வீதத்தில் பிந்தியது இறங்கிச் செல்கிறது. இத்த உண்மையை அடுத்துள்ள படத்தில் வளைகோடுகள்




வழியாகவும் அறிய முடிகிறது. MRP இறுதிநிலை வருவாய் விளைபொருளையும், ARP சராசரி வருவாய் விளைபொருளையும் சுட்டுகின்றன.

விளைபொருள் போக்கை அறிந்த பின், அடுத்து, குறிப்பிட்ட நிலையில் எவ்வளவு உழைப்பு அமர்த்தப்படும் என்று கணித்தறிய வேண்டும். அந்த அளவு உழைப்பின் அளிப்பைப் பொருத்துள்ளது தெளிவு. உழைப்பங்காடியிலும் நிறைவுப் போட்டி நிலவுவதாக வைத்துக் கொண்டால், குறிப்பிட்ட கூலி வீதத்தில் அகப்படுகிற உழைப்பாளர் எண்ணிக்கைக்கு அளவேயில்லை என்றாகிறது. ரூ. 4 கூலி வீதமென்று வைத்துக் கொள்வோம். ஒருவரோ இருவரோ என்று இல்லாமல் எத்தனை பேராயினும் இந்த வீதத்தில் வேலை

செய்யச் சித்தமாயுள்ளனர். இதனால், மேலும் மேலும் உழைப்பாளரை அமர்த்தும் போது, சராசரிக் கூலிச் செலவு மாறாதிருக்கும். இதே நேரத்தில் இறுதிநிலைச் செலவும் மாறாதிருக்கும் என்பது இங்குக் கவனிக்கத் தக்கது. ஓர் உழைப்பாளனால் ஏற்படும் செலவு ரூ. 4 ; இருவரால் ஏற்படும் செலவு ரூ. 8. இதனால் சராசரிச் செலவு ரூ. 4 என்பது மட்டுமல்ல, இரண்டாவது ஆளால் ஏற்படும் அதிகப்படிச் செலவும் ரூ. 4 தான். இதனால் இறுதிநிலைச் செலவும் சராசரிச் செலவும் இங்குச் சமமாயிருப்பது இயல்பு.

இந்த உண்மையை வளைகோடுகள் வழியாகச் சொல்வதானால் அடுத்துள்ள படத்தில் இருப்பதைப் போல ஒரே படுகிடைக் கோடு இறுதிநிலைச் செலவுக்கும் சராசரிச் செலவுக்கும் பொதுவானதாய்




இருக்கும். MW-உம், AW-உம் முறையே இறுதிநிலை (கூலி)ச் செலவையும் குறித்து நிற்கின்றன.

நிறுவனம் மேலும் மேலும் உழைப்பை அமர்த்தும் போது, எந் நிலையில் சமநிலை அடையும் என்பதை அறிவது மிகவும் எளிது. அடுத்து உள்ள படம் சுட்டுவது போல OP கூலி வீதத்தில், OM உழைப்பே அமர்த்தப்படும். அதைவிடக் குறைவாக ($OM_1$) அமர்த்தினால், இலாப வாய்ப்பை இழக்க நேரிடும். இப்போது உழைப்பின் இறுதிநிலை வருவாய் விளைபொருள் கூலிவீதத்தைவிட மிகுதியாய் இருக்கிறது ($M_1P_1 > OP$). OM-ஐ விட மிகுதியாக அமர்த்தினால் நட்டமே ஏற்படும் ($M_2P_2 < OP$). எனவே, பொருள் அங்காடியிலும், காரணி அங்காடியிலும் ஒரே சமயத்தில் நிறைவுப் போட்டி நிலவும் போது, ஒரு காரணியின் விலை அதன் இறுதிநிலை வருவாய் விளைபொருளுக்குச் சமமாயிருக்கும் என்பது தேற்றம். மேலும், நெடுங் காலத்தில் கூலி வீதமானது சராசரி வருவாய்க்கும்

சமமாயிருக்க வேண்டும். கூலி வீதம் OS ஆக இருந்தால், மொத்த வருவாய் விளைபொருளுக்கும் மொத்தக் கூலிச் செலவுக்குமிடையே




ஓர் எச்சப்பாடு (PQRS) தோன்றுகிறது. இது இயல்பு கடந்த இலாபம். இதனால், புதிய நிறுவனங்கள் புகுந்து விளைபொருள் விலை இறங்குவதாலும், அதிக ஆட்கள் அமர்த்தப்படுவதால் கூலி வீதம் உயர்வதாலும் மீண்டும் கூலிவீதம் OP மட்டத்துக்கே வந்து விடும்.[1]

மேலே கண்ட உண்மைகள் நிறைவுப் போட்டிச் சூழலுக்குப் பொருந்துவன. முற்றுரிமை நிலவும் போது என்ன நிகழுமென இனிப் பார்க்க வேண்டும்.

[1] இங்கே, இறுதிநிலை மதிப்பு விளைபொருளின் நிலையைக் கவனித்தால் வேறோர் உண்மையும் புலப்படும். இறுதிநிலைத் தூல விளைபொருளின் பண மதிப்புத் தான் இறுதிநிலை மதிப்பு விளைபொருள். நிறைவுப் போட்டியில் விளைபொருள் விலை மாறாதிருக்கிறது. எனவே, இறுதிநிலைத் தூல விளைபொருளை, விளைபொருளின் விலை கொண்டு பெருக்கும்போது கிடைக்கும் தொகையும், இறுதிநிலை விளைபொருளால் மொத்த வருவாயில் ஏற்படுகிற மாறுதலும் சமமாகவே இருப்பது இயல்பு. மேலே உள்ள அட்டவணையில் 2 உழைப்பாளர் அமர்த்தப்படும்போது, இறுதிநிலைத்தூல விளைபொருள் 8 அலகுகள்; விலை ரூ. 2. எனவே, இறுதிநிலை மதிப்பு விளைபொருள் ரூ. 16. அதே நேரத்தில் இறுதி நிலை வருவாய் விளைபொருளும் ரூ. 16. எனவே தான் பொருளங்காடியில் நிறைவுப் போட்டி இருந்தால் கூலியானது இறுதிநிலை மதிப்பு விளை பொருளுக்குங் கூடச் சமமாயிருக்கும் எனச் சொல்லலாம்.

பொருள் அங்காடியில் முற்றுரிமை நிலவுவதாயிருந்தால், பொருளின் அதிகப்படி அலகுகளைக் குறைந்த விலைக்கே விற்க முடியும். இப்போது, மேலேயுள்ள அட்டவணையின் நான்காம் பத்தியைத் திருத்தி எழுத வேண்டும்: ரூ. 2-இலிருந்து அவ் விலை வரவரக் குறைந்து வர வேண்டும். இதனால் இறுதிநிலை வருவாய் விளைபொருளும் எவ்வாறு மாறும் என்பது தான் முக்கியம். மாறும் வீத விதியின் இயக்கத்தால் பொதுவான போக்கு நிறைவுப் போட்டியில் நிலவுவது போன்றிருந்தாலும், இறுதிநிலை வருவாய் விளைபொருளுக்கும் சராசரி வருவாய் விளைபொருளுக்கும் இடையேயுள்ள வேறுபாடு எல்லாக் கட்டங்களிலும் மிக அதிகமாகவே இருக்கும். மேலே உள்ள அட்டவணையில், 6 அலகுகளை ரூ. 2 விலையில் விற்க முடியுமெனில், முற்றுரிமை நிலவும் போது, 14 அலகுகளை ரூ. 1.50 விலைக்கே விற்க முடியுமெனக் கொள்ளலாம். அப்போது இறுதிநிலை வருவாய் விளைபொருள் ரூ. 16 அல்ல, ரூ. 9 ($14 \times 1.50 - 6 \times 2$) மட்டுமே. சராசரி வருவாய் விளைபொருள் ரூ. 14 அல்ல, ரூ. 10.50 மட்டுமே. இவ்வாறு, நிறைவுப் போட்டியுடன் ஒப்பிடும் போது, இறுதிநிலை வருவாய் விளைபொருளுக்கும், சராசரி விளைபொருளுக்கும் இடையேயுள்ள வேறுபாடு எல்லாக் கட்டங்களிலும் பெரிய அளவினதாயிருக்கும். அடுத்துள்ள படம் இதனை விளக்கும். MRP




வளைகோட்டுக்கும் ARP வளைகோட்டுக்கும் இடையே உள்ள இடைவெளி மிகுதியாயிருப்பதற்குக் காரணம் மேலே குறிப்பிடப்பட்டுள்ளதாகும்.

இனி, செலவைப் பார்க்கலாம். காரணி அங்காடியிலும் முற்றுரிமை நிலவுவதாக வைத்துக் கொள்வோம். இந்நிலையில், அடுத்

தடுத்த அலகுகளை வாங்க மேலும் மேலும் விலை தர வேண்டும் என்றுகிறது. ரூ. 4 வீதத்தில் ஓர் உழைப்பாளியை அமர்த்த முடியு மெனில், மேலும் ஓர் உழைப்பாளிக்கு, அதைவிட மிகுதியாக ரூ. 5 தர வேண்டும் என்றுகலாம். இதனால், செலவு வளைகோடு படுகிடையாக இராது. அது, மேல் நோக்கிச் செல்லும் ஒரு கோடாகவே இருக்கும். சராசரிச் செலவு வளைகோடு மேல்நோக்கிச் செல்லும் இதே நேரத்தில் இறுதிநிலைச் செலவு வளைகோடும் மேல் நோக்கிச் செல்ல முற்படுவதியல்பு. ஆனால், இறுதிநிலைச் செலவு வளைகோடானது சராசரிச் செலவு வளைகோட்டுக்கு மேலே இடம் கொள்ளும். மேலே சொன்ன எடுத்துக் காட்டிலேயே, 2 உழைப் பாளர் அமர்த்தப்படும் போது, இறுதிநிலைச் செலவு (ரூ. 4·இலி ருந்து) ரூ. 5 என வளர்கிற போது, சராசரிச் செலவு ரூ. 4.50 என்ற அளவில் குறைவாகவே வளர்வது இதனை விளக்கும். அடுத் துள்ள படத்தில் இவ் வுண்மை சுட்டிக் காட்டப்படுகிறது. MW,




AW என்ற இரு வளைகோடுகளும் முறையே இறுதிநிலை (கூலி)ச் செலவையும் சராசரி (கூலி)ச் செலவையும் குறித்து நிற்கின்றன.

இந் நிலையில், கூலி எவ்வாறு முடிவாகும் என்பதை அடுத் துள்ள படம் விளக்குகிறது. இங்கு, இறுதிநிலை வருவாய் பொருளும், இறுதிநிலை (கூலி)ச் செலவும் சமமாயிருக்கும். OM அளவு உழைப் பாளர் அமர்த்தப் படுகின்றனர்; கூலிவீதம் OP. ஆனால், உழைப் பின் இறுதிநிலை வருவாய் விளைபொருள் MR என்பது இங்குக் கவனிக்கத் தக்கது. எனவே, ஒரு காரணியின் விலை அதன் இறுதி நிலை வருவாய் விளைபொருளுக்குச் சமமாயிருப்பது நிறைவுப்

போட்டி நிலவும் நிலையில் தான் என்பது வலியுறுகிறது. மேலே உள்ள படத்தின்படி OM உழைப்பால், தொழில் துணிவோன் பெறுகிற மொத்த வருவாய் விளைபொருள் OMRS ; ஆனால், அவன் கூலியாகத் தருவதோ OMQP. எனவே, அவன் PQRS எச்ச வருவாய் பெறுகிறான்.[1]

[1] இந்த PQRS தொழில் துணிவோன் உழைப்பைச் சுரண்டுவதன் அளவு என்று கூறப்படுகிறது.

இதன் தொடர்பாக ஆசிரியர்களிடையே நிலவும் கருத்து வேற்றுமை இங்கு அறியத்தக்கது. பிகு, ஜோன் ராபின்சன் ஆகியோர் கூலி வீதம் இறுதிநிலை மதிப்பு விளைபொருளுக்குச் சமமாக இருக்கவேண்டும் என்றும், அதைவிடக் குறைவாக இருக்கும்போதெல்லாம் சுரண்டல் நிகழ்கிறது என்றும் சொல்வார்கள். பொருளங்காடியில் நிறைவுப் போட்டி நிலவினால், கூலி வீதம் இறுதிநிலை மதிப்பு விளைபொருளுக்குச் சமமாக இருக்கவேண்டும் என முன்னர்க் கண்டோம். எனவே, அங்குச் சுரண்டலுக்கு இடமேயில்லை. இனி, பொருளங்காடியில் முற்றுரிமை நிலவும்போது எவ்வாறிருக்கும் எனப் பார்க்கலாம். மேலேயுள்ள எடுத்துக்காட்டில் கண்டதுபோல 6 அலகுகளை ரூ. 2 விலையில் விற்றால், 14 அலகுகளை ரூ. 1.50க்கே விற்க முடியும் எனக் கொள்ளலாம். இப்போது இறுதிநிலை வருவாய் விளைபொருளோ ரூ. 9; அதே நேரத்தில் இறுதிநிலை மதிப்பு விளைபொருள் ரூ. 12. இவ்வாறு, எல்லாக் கட்டங்களிலும் இறுதிநிலை மதிப்பு விளைபொருளானது, இறுதிநிலை வருவாய் விளைபொருளைவிட மிகுதியாயிருக்கும். இங்கு, இறுதிநிலை வருவாய் விளைபொருளும் கூலியும் சமமாயிருக்கும் என்று சொல்லும்போது, கூலியானது இறுதிநிலை மதிப்பு விளைபொருளைவிடக் குறைவாக இருக்கும் என்றாகிறது. இங்கு பிகு, ஜோன் ராபின்சன் ஆகியோர் கருத்துப்படி சுரண்டல் நிகழ்கிறது. ரூ. 12 விளைபொருளுக்கு ரூ. 9 தந்தால் சுரண்டல்தானே என்பது இவர்கள் கருத்து.

ஆனால், சேம்பர்லின் இக்கருத்தை ஏற்றுக்கொள்ளமாட்டார். உற்பத்தியாளன் காரணியின் ஓர் அலகை ஆளும்போது, அதனால் தனக்கேற்படும் செலவையும் அதிலிருந்து தனக்குக் கிடைக்கும் வருவாயையுமே சமன்படுத்துவான். எனவே, தான் பெறுகிற வருவாயைவிட மிகுதியாகத் தர வேண்டும் என எதிர்பார்ப்பது முறையல்லவே? மேலேயுள்ள எடுத்துக்காட்டிலும் அவன் ரூ. 12 வீதத்தில் மொத்தம் 2 அலகுகளுக்கு ரூ. 24 ஈந்தால், அவனது மொத்த வருவாய் ரூ. 21 ஆக இருக்கும்போது இங்கு நட்டமல்லவா ஏற்படும். எனவே, இறுதிநிலை வருவாய் விளைபொருளுக்குத் தக்கவாறு கூலி தரவேண்டும் என எதிர்பார்ப்பதே முறை என்பார் சேம்பர்லின்.

இறுதிநிலை விளைதிறன் கோட்பாட்டை உழைப்பின் கண்ணோட்டத்திலிருந்து மேலே விளக்கிய போதிலும், பிற காரணிகளையும் உழைப்பின் இடத்தில் வைத்து விளக்க முடியும். எனவே, இக்கோட்பாடு பகிர்வு பற்றிய பொதுக் கோட்பாடாகிறது.

இக் கோட்பாட்டின் நிறைகுறைகளை இனி ஆராய வேண்டும் :

இக் கோட்பாடு சில எடுகோள்களின் அடிப்படையில் நிறுவப்பட்டுள்ளதென்பதை, இங்கு, முதலில் கவனிக்க வேண்டும். அடுத்தடுத்து ஆள்கிற உற்பத்திக் காரணி அலகுகளெல்லாம், ஒப்பான தன்மை உள்ளவை என்பது ஓர் எடுகோள். காரணியின் அலகுகளைச் சிறிய சிறிய கூறுகளாகப் பகுக்க முடியும் என்பது மற்றோர் எடுகோள் ; அப்போது தான் ஒன்றனிடத்தில் மற்றொன்றை ஆள முடியும். உற்பத்திக் காரணிகள் மிகவுயர்ந்த அளவு ஊதியந் தேடி எங்கெங்கும் பெயர்ந்து செல்ல முடியும் என்பது இன்னோர் எடுகோள். தொழில் துணிவோன் நோக்கம் மிகவுயர்ந்த இலாபம் ஈட்டுவது என்பதும், அவனால் காரணியின் இறுதிநிலை விளைதிறனை அளந்தறிய முடியும் என்பதும் மற்றும் சில எடுகோள்கள். மாறும் வீத விதி தவிர்க்க இயலாதபடி செயல்படுகிறது என்பது விதியின் அடிப்படை. உற்பத்தி முறைகளில் மாறுதல் எதுவுமில்லை என்றும் எடுத்துக்கொள்ள வேண்டும். நிறைவுப் போட்டிச் சூழலில் தான் காரணி பெறும் ஊதியம் அதன் இறுதிநிலை விளைதிறனுக்குச் சமமாயிருக்கும் என்பதையும் இங்குக் கவனிக்க வேண்டும்.

டாசிக், தாவன்போர்ட், அட்ரியன்ஸ் (Adriance) போன்றோர் இக் கோட்பாட்டில் காணும் பெரிய குறைபாடு, உற்பத்திக் காரணியொன்றின் விளைபொருளைத் தனியாக வேறுபடுத்தி அளந்தறிய முடியாது என்பது தான். விளைபொருள், கூட்டு விளைபொருள், காரணிகள் அனைத்தும் கூடி உருவாக்குவது. நிலத்தின் விளைபொருள் இது ; அதில் ஆண்ட உழைப்பின் விளைபொருள் இது எனப் பிரித்துப் பிரித்துச் சொல்ல முடியாது. இது உண்மையே. ஆயினும், குறிப்பிட்ட காலத்தில், பிற காரணிகள் எல்லாம் மாறுது இருக்க, நிலம் மட்டும் மாறுவதால் விளைபொருளில் ஏற்படும் மாறுதல், நிலத்தின் மாறுதலால் தான் ஏற்பட்டது என அதன் மீது சாட்டிச் சொல்வதில் தவறில்லை. நடைமுறை அரசியல் துறையிலும் பலவற்றை நாம் இப்படித்தான் சொல்கிறோம் : ஆளுங் கட்சி மாறும் போது நிருவாக எந்திரம் மாறவே இல்லை ; புதிய கட்சியின் ஆட்சியில் ஏதாவது மாறுதல்கள் ஏற்பட்டால், அதைக் கொண்டு வருவதில் ஒத்துழைத்த நிருவாக எந்திரத்துக்கு அல்லாமல் குறிப்பிட்ட கட்சிக்கே அதனை உரியதாக்குகிறோம் !

பேராசிரியர் ஹாப்சன் (Hobson) மற்ருேர் ஐயத்தையும் எழுப்பி உள்ளார். பல்வேறு காரணிகளின் சேர்மான வீதம் தொழில் வினை முறையைச் சார்ந்தது என்றும், அதனை மாற்றுவது என்பது கற்பிதமே என்றும் அவர் கூறுவார். ஐந்து எழுத்தர்கள் இருப்பதாகவும், அவர்களுக்கென ஐந்து தட்டெழுத்துப் பொறிகள் இருப்பதாகவும் வைத்துக்கொண்டால், மற்றவை மாருத நிலையில், ஆருவதொரு தட்டெழுத்துப் பொறியைப் புகுத்துவதால் வினைபொருள் எள்ளளவும் மாறுமெனச் சொல்ல முடியாது. ஏனெனில் ஆளுக்கொரு தட்டெழுத்துப் பொறி எனத் தொழில் வினை முறை நிறுவியுள்ள விதியை மீறமுடியாது. உண்மையில், இந்த எடுத்துக்காட்டு மிகத் தீவிரமானதொரு விதி விலக்கே; பெரும் பான்மையான இடங்களில், நெடுங்காலத்தில், சேர்மானங்களை மாற்றமுடியுமெனச் சொல்லலாம். கிளார்க் இதுபற்றி தெரிவித்துள்ள கருத்து இங்குச் சிந்திக்கத் தக்கது.

வீசர், ஹாப்சன் போன்ருேர் மற்ருெரு குறைபாட்டையும் சுட்டி உள்ளனர். சில இடங்களில், குறிப்பிட்டவொரு காரணியை மாற்றும்போது, உற்பத்தி ஏற்பாடு அறவே சீர்குலைந்து போகலாம். தொழில் துணிவோனை மாற்றினல் என்ன நிகழும் என நினைத்துப் பார்த்தால் இதன் உண்மை புலப்படும். ஆனல், மார்ஷல் போன்ருேர், காரணிகளைச் சின்னஞ் சிறு அலகுகளாக மாற்றி ஆண்டால் இந்தக் குறைபாட்டுக்கு இடமில்லை என்பார்கள்.

ஜோன் ராபின்சன் சுட்டும் மற்ருெரு குறைபாடு இது. காரணியின் வினைதிறன் நிறுவனத்தின் கண்ணேட்டத்திலும், தொழிலின் கண்ணேட்டத்திலும் வெவ்வேறு அளவினதாக அமைந்துவிடலாம். உற்பத்திப் பெருக்கத்தால் பருமச் சிக்கனங்களுக்கு வாய்ப்பிருக்கும்போது, ஓர் அலகு உற்பத்திக் காரணியின் வினைதிறன் தனியொரு நிறுவனத்தில் இருப்பதைவிட மிகுதியாக, தொழிலை ஆக மொத்தமாக எடுத்து ஆயும்போது அமைந்துவிடலாம். தொழிலில் மேலும் ஓர் அலகை ஆளும்போது வேலைப் பகுப்புக்கு வாய்ப்பிருப்பது இதற்குக் காரணம். இங்கெல்லாம், உற்பத்திக் காரணியின் இறுதிநிலை வினைதிறனைத் துல்லியமாகக் கணக்கிட முடியாது.

கெயின்ஸ் பிரபு கூறுவதுபோல வேலை நிறைவு நிலவும்போதே இக்கோட்பாடு உண்மையாயிருக்கும். வேலையின்மை நிலவும்போது உழைப்பாளர் பெறுங் கூலி அவர்தம் இறுதிநிலை வினைதிறனுக்குச் சமமாகத் தவறலாம். மேலும், இக் கோட்பாட்டின்படி வேலை அளவு மிகுக்கப்படவேண்டும் எனில், கூலி வீதம் வெட்டிக் குறைக்கப்பட வேண்டும். அப்போதுதான், கூலியையும் இறுதிநிலை வினை

திறனையும் சமமாக்கும் வகையில் மிகுதியான தொழிலாளர்களை வேலைக்கு அமர்த்த முடியும். தனியொரு தொழிலைப் பொருத்த வரை இது உண்மையா யிருக்கலாம். ஆனால், பொருளாதாரத்தை ஒட்டு மொத்தமாகப் பார்த்தால், வேலை அளவு கூலி மட்டுமன்றி ஆயத்த நிலைத் தேவையையே பொருத்து உள்ளது என்பதை உணரலாம்.

இக் கோட்பாட்டைப் பற்றிச் சொல்லப்படும் மற்றொரு குறை, இது அளிப்புப் பக்கத்துக்கும் போதிய முக்கியத்துவம் அளிக்க வில்லை என்பதாகும். உண்மையில், அளிப்புப் பக்கம் புறக்கணிக்கப் பட்டுள்ளதாகச் சொல்ல முடியாது: காரணியின் இறுதிநிலை வினை திறன் என்று சொல்லும்போது குறிப்பிட்ட அளவு அளிப்பை ஒப்புக் கொண்ட நிலையில்தான் ஆராய்கிறோம்.

முடிவாக, இக்கோட்பாடு பணி வழிப் பகிர்வை விளக்குகிறதே யொழிய, ஆள்வழிப் பகிர்வைப் பற்றியதல்ல என்பதை மறந்து விடலாகாது. கிளார்க் போன்றோர் ஒவ்வொருவனும் தனது இறுதி நிலை வினைதிறன் அடிப்படையில் ஊதியம் பெறுவதால், அது நேர்மையானதே என்றும், எனவே சமுதாயத்தில் வருமான ஏற்றத் தாழ்வுகள் இருந்தால், அந் நிலையைக் குறை கூறலாகாது என்றும் கருதுகின்றனர். இங்கு பணிவழிப் பகிர்வையும், ஆள் வழிப் பகிர்வையும் குழப்பிக் கொள்கிறவர் ஆகிறோம். இறுதிநிலை வினைதிறன் கோட்பாடு காரணிகளின் நிலையில் நின்று பகிர்வு பற்றி ஆராய்கிறதே யொழிய தனியாள்களின் நிலையில் நின்றல்ல.

### தேவை அளிப்புக் கோட்பாடு

தற்கால ஆசிரியர்கள் இறுதிநிலை வினைதிறன் கோட்பாட்டையே சற்றுத் திருத்தமான முறையில் தேவை அளிப்புக் கோட்பாடாகத் தருகின்றனர். உற்பத்திக் காரணிகளுடைய மதிப்பு எல்லாப் பொருள்களுடைய மதிப்பையும் போலத் தேவை யையும் அளிப்பையுமே சார்ந்துள்ளது. தேவையைப் பொருத்த வரை, அது முழுக்க முழுக்கக் காரணியின் வினைதிறனைப் பொருத் துள்ளது.

அளிப்பை எடுத்துக் கொண்டால், பொருள்களுக்கு உற்பத்திச் செலவென இருப்பது போலக் காரணிகளுக்கும் செலவென ஒன்றுண்டு. ஆனால், இச் செலவு பிற வாய்ப்புச் செலவுகளே யொழிய, தொன்னூலாளர் விளக்கி வந்த உண்மைச் செலவு களல்ல. ஒரு காரணியின் அளிப்பு விலை அதன் முன்னுள்ள பல்

வேறு மாற்றுக் கால்களையே பொருத்துள்ளது. காரணியை அளிப்பவன், பல்வேறு துறைகளிலிருந்து பெற முடிகிற வருவாயை ஒப்பிட்டு, எந்தத் துறையிலிருந்து மிகவுயர்ந்த வருவாயைப் பெற முடியுமோ, அங்குத்தான் அதனை அளிக்க முன் வருவான். இதனால், குறிப்பிட்ட ஒரு காரணியின் அளிப்பு விலை அதனால் பிற தொழில்களில் ஈட்ட முடிகிற வருவாய்க்குச் சமமாயிருக்கும்.

நிறைவுப் போட்டி நிலவும்போது, இவ்வாறு, ஒரு காரணியின் விலை அவன் இறுதிநிலை விளைதிறனையும் பிறவாய்ப்புச் செலவையும் பொருத்துள்ளது. சமநிலையில் இவ்விரண்டும் சமமாயிருக்கும்.

# 4. வாரம்

ஆங்கிலத்தில் 'வாரம்' (Rent) என்ற சொல்லானது, பொது வாக, வீடு, எந்திரங்கள், நிலம் போன்றவற்றின் ஆட்சிக்காகத் தரும் ஊதியத்தைக் குறிக்கிறது. (தமிழில் நிலத்தின் ஆட்சிக்காகத் தருவதை 'வாரம்' என்றும், பிறவற்றுக்குத் தருவதை 'வாடகை' என்றும் சொல்கிறோம்). ஆனால், பொருளியலில் இச் சொல்லைத் தனியொரு கருத்தில் ஆள்கிறோம்: இயற்கையின் கொடையாகிய நிலத்திலிருந்து கிடைக்கும் வருமானத்துக்குப் 'பொருளியல் வாரம்' என்று பெயர். 'வாரம்' என்று வழக்கமாக (மேலே) குறிப்பிடு வதை 'ஒப்பந்த வாரம்' என்று பொருளியல் பகுத்தாய்வில் சொல்வது மரபு. ஒப்பந்த வாரத்தில் (1) பொருளியல் வாரம், (2) நிலவுடைமையாளன் நிலத்தைத் திருத்துவதில் செலவிட்ட முதலுக்குரிய வட்டி, (3) இந்தத் திருத்தங்கள் நிகழும் போது நிலவுடைமையாளனோ, அவனது ஆளோ உழைத்திருந்தால், அதற் குரிய கூலி, (4) நிலத்தைப் பண்படுத்துவதில் நிலவுடைமை யாளன் ஏற்க நேரிட்ட ஆபத்துக்குரிய இலாபம் ஆகியவை உள்ளடங்கும்.

நிலம் இயற்கையின் கொடை; அது எவ்வாறு தனது பணிக்கு ஊதியமாக வாரத்தைப் பெறுகிறது என்ற வினாவை எழுப்பி, விடை காணத் தொல்லோர் பலர் முயன்றுள்ளனர். நிலத்தின் சிறப்பை மிக நுட்பமாக விளக்கியவர்கள் இயற்கை மரபினர். எனவே, இவர்கள் கருத்தில் வாரம் பற்றிய குறிப்புக்கள் முதன் முதலாகக் காணப்படுவதில் வியப்பில்லை. உற்பத்தித் துறை களில், நிலத்தில் நிகழும் பயிர்த் தொழில் மட்டுமே எச்சமாக உற்பத்தி செய்வதாக இவர்கள் கருதினர். இடுகிற உழைப்பின் விளைவு பல்கிப் பெருகுவது இத் தொழிலில் மட்டுமே. எனவே, நிலத்தைப் பயிரிடுபவன் இந்த எச்ச உற்பத்தியை நிலவுடைமை

யாளனுக்குக் கொடுக்க இசைவதில் விந்தை இல்லை என்பது இவர்கள் கருத்து. சுருக்கமாகச் சொன்னால், நிலத்தின் வண்மையே வாரம் தோன்றக் காரணம். ஆடம் ஸ்மித்தும் இக் கருத்தை ஏற்றுக் கொண்டவுர்களில் ஒருவர். நிலத்தின் மீது முற்றுரிமை பெற்றுள்ள காரணத்தால், நிலவுடைமையாளன் உழவனிடமிருந்து வாரத்தை வலிந்து பறிக்கிறான். நிலத்தின் வண்மையால் எச்ச விளைவு பெறுவதால், உழவனும் வாரத்தைக் கொடுக்க இசைகிறான் என்பார் ஆடம் ஸ்மித். இந்தக் கருத்துக்களை முதன் முதலில் மறுக்கத் துணிந்தவர் மால்தஸ். தன்னுடைய காலத்தில் பயிர்த் தொழில் விளை பொருள்களின் உயர்வான விலை மட்டத்தின் காரணங்களை விளக்கப் புகுந்த அவர், வளம் மிக்க நிலத்தின் அருமைப்பாடு தான் அடிப்படைக் காரணம் என முடிவு கட்டினார். இதனால் நிலத்தின் வண்மையைப் பாராட்டுவது நின்று, அதன் அருமைப்பாடு பற்றி அறிஞர்கள் சிந்திக்க முன் வந்தனர். இதனிடையே, பொருளின் மதிப்பு அதில் செலவிட்டுள்ள உழைப்பின் அளவைச் சார்ந்தது என்ற கருத்தை வலியுறுத்தியவர்கள் வேறொரு கோணத்தில் இருந்து வாரம் பற்றி ஆய வேண்டிய கட்டாயமும் ஏற்பட்டது. செலவிட்ட உழைப்பின் அளவு சமமாயிருந்தாலும், நிலத்தின் வளத்தைப் பொருத்து விளைபொருளின் உற்பத்திச் செலவு வேறுபடுகிறது. மதிப்பு நிருணயத்தை யொட்டிய இந்தச் சிக்கலை விளக்க வேண்டிய பொறுப்பும் ஆசிரியர்களுக்கு ஏற்பட்டது. இந்தச் சூழ்நிலையில் தான் ரிக்கார்டோ புதிய வாரக் கோட்பாடொன்றை விளக்க முன் வந்தார்.

### ரிக்காடோவின் வாரக் கோட்பாடு

ரிக்கார்டோவின் கருத்துப்படி 'மண்ணின் ஆதியானதும் அழியாததுமான ஆற்றலின் ஆட்சிக்காக நிலவுடைமையாளனுக்குத் தருகிற நிலவிளைவின் பகுதியே' வாரம். தமது கருத்தை அவர் பின் வருமாறு விளக்குவார்:

புதியதொரு நாட்டில் மக்கள் முதன். முதலாகக் குடியேறுவதாகவும், அங்கு A, B, C என மூன்று தர நிலங்கள் இருப்பதாகவும் வைத்துக் கொள்வோம். இருப்பவற்றில் மிகவும் வளமான நிலம் A. அதைவிடக் குறைவான வளமுள்ள நிலம் B. மூன்றிலும் மிகக் குறைந்த வளமுடையது C. முதன் முதலில் வளம்மிக்க A. நிலத்தை மக்கள் பயிரிடுவது இயல்பு. அந் நிலத்தில் ரூ. 300 செலவிட்டு 20 மூடை நெல் உற்பத்தி செய்வதாக வைத்துக் கொள்வோம். இப்போது மூடைக்கு ரூ. 15 உற்பத்திச் செலவாகிறது. A தர நிலம் மிகுதியாகக் கிடைப்பது வரை அதன் ஆட்சிக்கு எந்த வித ஊதியமும் தர வேண்டியதில்லை. ஆனால், மக்கள் தொகை

பெருகி நெல்லின் தேவையும் மிகுதியாகும் போது, A–தர நிலத்திலிருந்து கிடைக்கும் விளைவு பற்ருத நிலை ஏற்படும். அப்போது, B–தர நிலத்தையும் பயிரிட்டாக வேண்டும். இப்போது, B–இல் ரூ. 300 செலவிட்டால், (அது A-ஐ விட வளங்குறைந்த நிலமாக இருப்பதால்) 20 மூடை நெல் கிடைக்க வழியில்லை. குறைவாகவே கிடைக்கும். 15 மூடையென்று வைத்துக் கொள்வோம். இங்கு, மூடைக்கு ரூ. 20 உற்பத்திச் செலவாகிறது. உணவுத் தேவையானது மேலும் பெருகினுல், C-தர நிலத்தையும் பயிரிட வேண்டும். ரூ. 300 செலவிட்டால், இந்தக் கீழ்த்தர நிலத்தில் 10 மூடை நெல் மட்டுமே உற்பத்தி செய்ய முடியும் என வைத்துக் கொள்வோம். இப்போது, மூடைக்கு ரூ. 30 உற்பத்திச் செலவாகிறது.

இந்த நிலையில், குடியானவர்கள் அனைவரும் நிறை வெய்த வேண்டுமெனில், C–தர நிலத்தைப் பயிரிடுவோன் உட்பட எல்லார்க்கும் இசைவாக விலையானது (மூடை, ரூ. 30 ஆக) இருக்க வேண்டும். அப்போது தான் C–தர நிலத்தைப் பயிரிடுவோர் தம் முடைய உற்பத்திச் செலவைச் சரிக்கட்டிக் கொள்ள முடியும். இந்த விலையில் A-தர நிலங்களும், B–தர நிலங்களும் முறையே ரூ. 300 (10 மூடை)-உம், ரூ. 150 (5 மூடை)-உம் எச்சமாகப் பெறுகின்றன. இந்த எச்சமே வாரம். C–தர நிலம் வாரம் எதையும் பெறவில்லை. இந்நிலம் ‘வாரமிலி நிலம்’ அல்லது, ‘இறுதிநிலை நிலம்’ எனப்படும். அது உற்பத்திச் செலவுக்கு மேல் எந்த எச்சத்தையும் உற்பத்தி செய்யவில்லை. இறுதி நிலைக்கு மேலேயுள்ள (வளம் மிக்க) நிலங்களில், (இங்கே, A, B–தர நிலங்களில்) வாரம் தோன்றுகிறது. எனவே, நல்ல நிலமானது இறுதி நிலை நிலத்தைவிட எச்சமாகப் பெறும் மிச்சக்கூறுள்ள நன்மையே வாரம். இந்த நன்மையைப் பெறக் காரணம் வள வேறுபாடு. இந்த வள வேறுபாடுதான் ‘மண்ணின் ஆதியானதும் அழியாததுமான ஆற்றல்.’ சுருக்கமாகச் சொன்னுல், வாரம் ஒரு வேறுபாட்டெச்சம்; ஏதோவொரு தனி முயற்சிக்குக் கிடைக்கிற கைம்மாறல்ல.

அடுத்துள்ள படம் இவ்வுண்மையை விளக்கும். படத்தில் A, B, C மூன்றும் சம அளவான நிலங்கள். அவற்றிலிருந்து பெற முடிகிற விளைவு செங்குத்து அச்சில் அளக்கப்படுகிறது. இவ்வாறு படத்தில் கோடுகளிடப் பெற்று உள்ள பகுதியே A-உம் B-உம் பெறுகிற வாரமாகிறது.

ரிக்கார்டோவின் வாரக் கோட்பாட்டின் மற்ரெரு சிறப்பு, விலைக்கும் வாரத்துக்கும் இடையே உள்ள தொடர்பை அவர் விளக்கிய பான்மையாகும். வாரமானது விலையில் இடம் பெறுவ

தில்லை என்பது அவர் முடிவு. இறுதிநிலை நிலத்தின் உற்பத்திச் செலவுதான் விலையை முடிவு செய்கிறது. இறுதிநிலை நிலமோ வாரமிலி நிலம். அதன் உற்பத்திச் செலவில் வாரம் ஒரு பகுதியன்று.




எனவே, வாரம் இடம் பெருத உற்பத்திச் செலவுக்குச் சமமாக இருக்கும் விலையிலும் வாரம் இடம்பெற முடியாது. மேலே தந்துள்ள விளக்கத்தில் எல்லா நிலங்களுக்கும் இசைவான விலை ரூ. 30 எனக் கண்டோம். இந்த ரூ. 30, C தர நிலத்தின் உற்பத்திச் செலவு; C தர நிலமோ வாரமிலி நிலம். எனவே, இந்த ரூ. 30-இல் வாரம் இடம் பெறவில்லை. இதன் முற்ற முடிந்த பொருள் விலையில் வாரம் இடம் பெறவில்லை என்பது தான். அதாவது, விலையை முடிவு செய்கிற இறுதிநிலை நிலத்தின் உற்பத்திச் செலவில் வாரம் இடம் பெருத காரணத்தால், விலையை வாரமானது முடிவு செய்யவில்லை என்ருகிறது. அதே நேரத்தில் வாரத்தை முடிவு செய்வது விலை தான் என்பதையுங் கவனிக்க வேண்டும். A, B தர நிலங்களில் உற்பத்திச் செலவு போக ஒரு எச்சம் இருப்பதற்குக் காரணம் விலை உயர்வாக இருப்பது தான். விலை ரூ. 15 ஆக இருந்தால், A-உக்கு வாரமெதுவும் கிடையாதென்பதும், விலை ரூ. 20 ஆக இருந்தால், B-உக்கு எச்சமெதுவும் இல்லை யென்பதும் இதனை விளக்கும். மேலும், விலை ரூ. 20 ஆக இருக்கும் போது, A மட்டுமே (ரூ. 100) வாரம் பெறும் போது, அது ரூ. 30 ஆகும் போது B, வாரம் பெறுவதோடு நில்லாது, A பெறும் வாரம் (ரூ 150 ஆக) மிகுதியாகவும் செய்கிறது. எனவே, விலை ஏறும்போது வாரம் தோன்றுகிறது; மிகுதியாகிறது. அதாவது வாரமானது விலையால் முடிவு செய்யப் படுகிறது. அந் நாளையச் சிக்கலொன்றை விளக்கும் வகையில், 'வாரம் தருவதால் தானிய விலை உயர்வாய் இல்லை; தானிய விலை

உயர்வாய் இருப்பதால் தான் வாரம் தரப் பெறுகிறது' என்று ரிக்கார்டோ முடிவு கட்டுவார்.

வாரம் ஒரு வேறுபாட்டெச்சமே என்ற கருத்தை ரிக்கார்டோவின் பின்னோர் சிலர் வேறு சில கோணங்களிலிருந்தும் விளக்கி உள்ளனர்.

வீசர் என்பார் 'தன்மை வாரம்' எனவொன்றைக் குறிப்பிட்டுக் காட்டியுள்ளார். நிலத்தின் வாரம், உத்பத்தியாகிற விளைபொருளின் தன்மையையும் கட்டுப்படுத்துகிறது. நல்ல நிலத்தில் விளையும் உயர்ந்த தானியம் உயர்ந்த விலைக்கு விற்பதால், அந் நிலத்தின் 'பொருளியல் திறமை' மிகுதியாக இருப்பதாகவும் இதனுலும் ஒரு வேறுபாட்டெச்சம் தோன்ற வகையுண்டு என்பார் வீசர். தூனன் (Thunen) என்பார் நிலத்தின் கிடப்பை யொட்டியும் வேறுபாட்டெச்சங்கள் தோன்ற வகையுண்டு என்பார். ஒப்பான வளமுள்ள நிலங்களாக இருந்தாலும், அங்காடிக்கு அருகே உள்ள நிலத்தின் உற்பத்திச் செலவு குறைவாக இருக்க முடியும். அங்காடியை விட்டுத் தொலைவிலுள்ள நிலங்களின் நிகர உற்பத்திச் செலவினுள் கடத்துச் செலவையும் சேர்க்க வேண்டியிருப்பதே இதற்குக் காரணம். இந்த அளவுக்கு அங்காடி அருகேயுள்ள நிலங்களின் உற்பத்திச் செலவு குறைவாக இருந்து, அவற்றல் ஒரு வேறுபாட்டெச்சத்தைப் பெற முடியும். இந்தக் கருத்தை ரிக்கார்டோவும் ஏற்றுக் கொண்டுள்ளார். ஆல்பர்ட் மேயர்ஸ் (Albert Meyers) கூலிவீத வேறுபாடுகளாலும் வாரம் தோன்றலாமென்பார். கூலி வீதம் மிகக் குறைவாகவும், உழைப்பின் அளிப்பு இடம் பெயராததாகவும் குறிப்பிட்டதோர் இடத்தில் அமைந்தால், அங்குள்ள நிலம் (வளத்திலும் கடத்துச் செலவிலும்) ஒப்பான பிற நிலங்களுக்கு எச்சமாக வாரம் பெற முடியும் என்பது அவர் கருத்து. இறுதியாக, வீசர் மற்றொரு வகை வாரத்தையும் சுட்டியுள்ளார். குறிப்பிட்ட நிலத்தில் மேலும் மேலும் உழைப்பையும் முதலையும் ஆளும்போது, தொடக்கத்தில் ஆண்ட (உழைப்பு, முதல்) இடுமானங்கள், பிந்திய இடுமானங்களை விட மிகுதியான விளைவைத் தருவது இயல்பு. குறைந்துசெல் விளைவு விதியின் இயக்கமே இதற்குக் காரணம். இங்கும், முந்திய இடுமானங்கள் எச்ச வருவாய் — வாரம் — பெறுகின்றன. இதனைச் 'சூழ்நிலை வாரம்'(Intensity Rent) என்பார் வீசர்.

ரிக்கார்டோவின் வாரக் கோட்பாடு வேறு பலவற்றுக்கு அடிப்படை என்பது இங்குக் கருதத்தக்கது. வாரம் உழைப்பின் கைம்மாறன்று; ஒருவகை வேறுபாட்டெச்சமே என; ரிக்கார்டோ விளக்கியதும், அந்த எச்ச வருவாய் பலர் கண்களை உறுத்தியது இயல்பே.

ஹென்ரி ஜார்ஜ் (Henry George) தம்முடைய வரிக் கோட்பாட்டை, இதன் அடிப்படையில் நிறுவ முன் வந்தார். நிலங்களின் மதிப்பு உயர்வின் மீது மட்டும் அரசு வரி விதித்தால் போதும் என்பது அவர் கொள்கை. இந்த உயர்வுக்கு நிலவுடைமையாளன் உழைப்பு காரணமாக இல்லாததால், அதனை வரிகள் வழி பிரித்தெடுப்பது எளிது என்பார் ஜார்ஜ். பொதுவுடைமையினர் இன்னும் ஒருபடி சென்று, இந்த எச்ச வருவாயில் நிலவுடைமையாளர் உரிமை கொண்டாடுவதே தவறு எனக் கூறி வருகின்றனர். 'உழுபவனுக்கே நிலம் சொந்தம்' என்ற கருத்தும், அதனையொட்டிப் பல நாடுகளில் நிகழ்ந்தேறி வரும் நிலச் சீர்திருத்தங்களும், ரிக்கார்டோ முடிவுகளையே அடிப்படையாகக் கொண்டுள்ளன.

இங்கு, ரிக்கார்டோவின் கோட்பாட்டில் பிறர் சுட்டும் பிழைகளையும் பார்த்து விடலாம்.

நிலத்திற்கு 'ஆதியானதும் அழியாததுமான ஆற்றல்' எதுவுமில்லை என்பது சிலர் கருத்து. சில ஆண்டுகள் தொடர்ந்து பயிரிட்டால், நல்ல நிலங்களும் தம்முடைய வளப்பத்தை இழந்து விடலாமென இவர்கள் சுட்டிக் காட்டுகின்றனர். ஆனல், லைபிக் (Leibig) என்ற ஜெர்மானியப் பயிர்த் தொழில் வேதியியல் அறிஞர் சுட்டிக் காட்டியுள்ளது போல, தான் இழந்தவற்றை மீண்டும் தன் முயற்சியால் பெற்றுக் கொள்கிற இயற்கை ஆற்றல் மண்ணுக்கு உண்டு. சில காலம் நிலங்களைத் தரிசுபோட்டு, அக் கால அளவில் நிலமானது தன் இயற்கை ஆற்றலை (வளத்தை)ப் பெருக்கிக் கொள்ள மக்கள் வாய்ப்பளித்த பழங்காலச் செயல் இங்குத் கருதத் தக்கது. மேலும், மண் கூறு, தட்பவெப்பநிலை போன்ற சில அழிக்கவியலாத் தன்மைகள் மண்ணுக்கு இருப்பதையும், இதனுல் விளைபொருள் அளவு வேறு படுவதையும் மறுக்க முடியாது.

நிலங்களைப் பயிரிட எடுத்துக் கொள்ளும் வரிசை முறை ரிக்கார்டோ விளக்கியது போன்றில்லை என அமெரிக்க ஆசிரியர்கள் சிலர் — தம் நாட்டு வரலாற்றுப் பகைப் புலனில் — எடுத்துக் காட்டியுள்ளனர். புதிய நாடொன்றில், வளம் மிக்க நிலங்கள் தாம் முதன் முதலில் பயிரிடப்படும் என்றில்லை. நல்லவையோ, இழிந்தவையோ, பக்கத்திலிருக்கும் நிலங்களே முதன் முதலில் பயிரிடப்படுகின்றன. ரிக்கார்டோவின் கோட்பாட்டுக்கு, நிலங்கள் பயிரிட எடுத்துக் கொள்ளப்படும் வரிசை முறையில் அன்றி, நல்ல நிலங்களும் கீழ்த்தர நிலங்களும் ஒரே நேரத்தில் பயிரிடப் பெற்ருல் என்ன நிகழும் என்பது தான் முக்கியம். எனவே, இந்தக் குறைபாடும் அவ்வளவு பெரிய குறைபாடன்று.

வாரமானது ஒரு வேறுபாட்டெச்சமே என்ற கருத்தை ஜெர் மானிய வரலாற்று மரபினர் ஏற்றுக் கொள்வதில்லை. அவர்கள் கருத்துப்படி, நிலத்தின் அளிப்பு, அதன் தேவையுடன் ஒப்பிடும் போது, குறைவாகவே இருக்கிறது. இந்த அருமைப்பாடு தான் வாரம் தோன்றக் காரணம் என்பது அவர்கள் முடிவு. இறுதிநிலை நிலம் உட்பட, எல்லா நிலங்களுமே வாரத்தை அடைகின்றன. இக் கருத்தை ஏற்றுக் கொண்ட மார்ஷல், இதனை ரிக்கார்டோவின் கோட்பாட்டுடன் இணைக்க முயல்வார். ரிக்கார்டோவின் கோட் பாட்டிலும் அருமைப் பாட்டுண்மை ஒரு வகையில் தொக்கி நிற்கிற தெனலாம். நல்ல நிலங்கள் அரியனவாய் இருப்பதால் தானே கீழ்த் தர நிலங்களும் பயிரிடப் படுகின்றன? இது போன்றே, ஜெர்மானிய அறிஞர் கருத்திலும் ஒரு வகை வேறுபாட்டெச்சக் கருத்து தொக்கி நிற்கிறதெனலாம். அருமைப்பாட்டால் நிலங்கள் வாரம் பெறுவதாக வைத்துக் கொண்டாலும், நல்ல நிலங்கள் மிகுதியான அளவு வாரம் பெறக் காரணம் அவற்றின் வள வேறுபாடுதானே? இவ்வாறு ஜெர்மானிய அறிஞர்கள் கருத்து ரிக்கார்டோவின் முடிவுகளைக் குலைத்து விட்டதாகக் கூற முடியாது.

இறுதியாக, வாரத்திற்கும் — விலைக்கும் இடையே உள்ள தொடர்பை ரிக்கார்டோ விளக்கிய முறையையும் பலர் குறை கூறி யுள்ளனர். வாரமானது விலையில் இடம் பெறுவதில்லை என்பார் ரிக்கார்டோ. சமுதாயத்தின் பார்வையில் இருந்து ஆராய்ந்தால் மட்டுமே இது உண்மை ஆகும். தனிப்பட்டதோர் உழவனைப் பொருத்தவரை வாரமானது அவனுடைய உற்பத்திச் செலவில் ஒரு பகுதியே. குத்தகைக்கு நிலத்தைப் பெறும் ஒவ்வொருவனும் நிலத் தின் ஆட்சிக்கு வாரம் தந்தாக வேண்டும்; இந்த வாரத்தைத் தான் உற்பத்தி செய்யும் பொருளின் உற்பத்திச் செலவுக் கணக்கில் சேர்க்காமலிருக்க அவனால் முடியாது. இங்கு, வாரம் உற்பத்திச் செலவின் (விலையின்) ஒரு பகுதியாகிறது. ஆனால், இங்குக் குறிப் பிடுகிற வாரம், ஒப்பந்த வாரமே யொழிய, ரிக்கார்டோவின் பொரு ளியல் வாரமன்று என்பதை மறந்து விடலாகாது.

### இக்காலக் கோட்பாடு

ஜோன் ராபின்சன் போன்ற இந்நாளைய ஆசிரியர்கள் வாரம் பற்றி முற்றிலும் புதிய கோட்பாடொன்றைத் தந்துள்ளனர். இக் கோட்பாடு பிறவாய்ப்புச் செலவுக் கருத்தை அடிப்படையாகக் கொண்டது. அருமைப்பாடு பொருளாதாரத்தின் அடிப்படைச் சிக்கல். உற்பத்திக் காரணிகள் அரியனவாயிருப்பது மட்டுமன்றி, அவற்றைப் பலதுறைகளில் ஆளவும் இயலும். இந்நிலையில், குறிப் பிட்டதொரு துறையில் ஒரு காரணி பெறுகிற ஊதியம், மற்றொரு

துறையின் அதனுல் பெற முடிகிற ஊதியத்தையே பொருத்துள்ளது. ஒரு காரணியைக் குறிப்பிட்ட துறையில் ஆள்வதற்குத் தர வேண்டிய குறைந்த அளவு ஊதியத்தை அதன் 'மாற்றிட ஈட்டங்கள்' (Transfer Earnings) என்று சொல்லலாம். வேருெரு இடத்துக்குக் குறிப்பிட்ட காரணி மாறிச் செல்வதைத் தடுப்பதற்குத் தர வேண்டிய ஊதியம்—அல்லது, அக் காரணியால் மற்ருேர் இடத்தில் ஈட்ட முடிகிற ஊதியம் — மாற்றிட ஈட்டங்கள் எனப் படுகிறது. இந்த மாற்றிட ஈட்டங்களுக்கு எச்சமாக ஒரு காரணிக்கு ஊதியம் தந்தால், இந்த எச்சமே வாரம் என்பது இந்நாளைய கருத்து.

ஆசிரியரொருவர் ரூ. 150-க்குப் பள்ளியில் பணிபுரியச் சித்தமாயிருப்பதாக வைத்துக்கொள்வோம்; இப்போது, உண்மையில் அவர் ரூ. 200 பெற்ருல், இந்த எச்சமான ரூ. 50 வேண்டாததோர் ஊதியமாக-பொருளியல் வாரமாகக் கருதப்படுகிறது. 5 சதவீத வட்டியில் முதலீடு செய்ய முதல் கிடைக்கும் போது, நடைமுறையில் 7 சதவீத வட்டி பெற்று வந்தால், அவ்வாறு பெறுகிற முதல் 2 சதவீதம் வாரம் பெறுவதாகிறது. தொழில் துணிவோன் ஒருவன் 10 சதவீத இயல்பான இலாபத்துக்குத் தொழில்நடத்த ஆயத்தமாய் இருக்கும் போது, உண்மையில் 15 சதவீத இலாபம் பெற்ருல், இங்கு 5 சதவீதம் வாரம். இதுபோன்றே, ஏக்கருக்கு ரூ. 50 என்ற வாரத்தில்[1] பயிரிட நிலம் கிடைக்கும் போது ஒரு குடியானவன் ரூ. 70 வாரம் தந்தால், இங்கே ரூ. 20 வாரத்துள் வருகிறது. எனவே, நிலம் மட்டுமின்றி, எல்லாக் காரணிகளும் தம்முடைய மாற்றிட ஈட்டங்களுக்கு எச்சமாகப் பெறுவதெல்லாம் வாரமே.

ஜோன் ராபின்சன் கருத்துப்படி ஒரு காரணியின் அளிப்பு நிறைந்த நெகிழ்ச்சியுடன் இருந்தால், அது பெறுகிறதெல்லாம் மாற்றிட ஈட்டங்களே ; அங்கே, வாரம் தோன்ற வழியே யில்லாது போகலாம். காரணியின் அளிப்பு நிறைந்த நெகிழ்ச்சியுடனிருந்தால், குறிப்பிட்ட விலையில் காரணியின் அளிப்புக்கு முடிவேயில்லை என்ருகிறது. அடுத்துள்ள படத்தில் OP விலை மட்டத்தில் அளிக்கப்படுகிற உற்பத்திக் காரணியின் அளவுக்கு முடிவேயில்லை. அதனுல் SS சுட்டுகிற அளிப்பு வளைகோடு ஒரு படுகிடைக் கோடாக இருக்கிறது. காரணியின் தேவை நிலையை DD தேவை வளைகோடு சுட்டுகிறது. இருக்கிற சூழலில் OM காரணி அமர்த்தப்படும். காரணியின் மொத்த ஈட்டம் OMQP. இதுவே அதன் மாற்றிட ஈட்டமுமாகும். எனவே, இங்கு வாரம் எழவேயில்லை.

[1] இந்த வாரம் ரிக்கார்டோவின் வேறுபாட்டெச்சமன்று, நிலத்தைப் பயன்படுத்தக் குடியானவர் தரும் ஊதியமேயாகும்.




இதற்கு மாருகக் காரணி யொன்றின் அளிப்பு நிறைகுறை நெகிழ்ச்சியுடனிருந்தால், அதன் ஈட்டத்தில் வாரமும் கலந்திருக்கக் காணலாம். அடுத்துள்ள படம் இதை விளக்கும். மேல் நோக்கிச்




செல்லும் அளிப்புக் கோட்டின் போக்கிலிருந்து, மிகுதியான அளவு காரணிகள் வேண்டுமெனில், மிகுதியான ஊதியமும் தர வேண்டும் என்பது தெளிவாகிறது. OP விலை மட்டத்தில் OM காரணிகள் அளிக்கப்படும். இப்போது காரணியின் மொத்த ஈட்டம் OMQP. ஆனல், OM காரணிகள் குறைந்த அளவு எதிர்பார்க்கும் ஈட்டம் OMQR மட்டுமே. எனவே, இங்கே PQR வாரமாகிறது. இவ்வாறு, ஒரு காரணி நிறைகுறை நெகிழ்ச்சியுடனிருக்கும் போது வாரம் தோன்ற வாய்ப்பேற்படுகிறது.

# 5. கூலிக் கோட்பாடுகள்

உற்பத்தியில் ஆள்கிற உழைப்பாகிய காரணிக்குத் தருகிற விலையே கூலி[1]. இக் கூலி எவ்வாறு முடிவாகிறது என்பது பற்றி ஆசிரியர்கள் பல்வேறு கருத்துக்களைத் தந்துள்ளனர். இவை, கூலிக் கோட்பாடுகள் எனப்படும்.

## பராமரிப்புக் கோட்பாடு

ஒரு பொருளின் விலை அதன் உற்பத்திச் செலவுக்குச் சமமா யிருக்கும் என விளக்கி வந்த தொன்மை மரபினர் இக்கருத்தை உழைப்பின் விலைக்கும் பொருத்த முன்வந்தனர். உழைப்பின் உற் பத்திச் செலவு, உழைப்பாளரின் உயிர் பேணுவதற்கு வேண்டிய குறைந்த அளவு உணவு, உடை, உறையுள் போன்றவற்றின் தொகையே என்பது அவர்கள் கண்ட முடிவு. ஒரு பணப் பொருளா தாரத்தில் இந்தப் பொருள்கள் தொகையை வாங்குவதற்கு வேண் டிய பணத் தொகையை உற்பத்திச் செலவு குறித்து நிற்கும். இத் தொகையே-உழைப்பாளரைப் பராமரிப்பதற்கு வேண்டிய பொருள் அல்லது பணத் தொகையே —பராமரிப்பு மட்டம் எனப்படு கிறது. குறிப்பிட்ட வொரு நேரத்தில் கூலிமட்டமானது இந்தப் பராமரிப்பு மட்டத்துக்கு எச்சமாயிருந்தால், உழைப்பாளர்க்குத் தம்மைப் பராமரிக்க மட்டுமன்றி, தம்முடைய பரம்பரையை விருத்தி பண்ணவும் ஒரு வாய்ப்பு ஏற்பட்டு விடும். இதனல் பிறப்பு வீதம் வளர்ந்து, அதனல் ஏற்படும் மக்கள் தொகைப் பெருக்கத்தால் உழைப்பின் அளிப்பு மிகுவதால் கூலி மட்டமானது இறங்க முற் படுவது இயல்பு. இதுபோன்றே, குறிப்பிட்டவொரு நேரத்தில் கூலி

1 எழுத்தனுக்குக் கிடைக்கும் சம்பளம், மருத்துவனுக்குக் கிடைக்கும் கட் டணம், தரகனுக்குக் கிடைக்கும் தரகு, கௌரவ நீதிபதிக்குக் கிடைக்கும் மதிப் பூதியம், விறகு வெட்டிக்குக் கிடைக்கும் கூலி—அனைத்தும் வெவ்வேறென அன்றாட வழக்கில் கருதுகிற போதிலும், பொருளியலில் இவையனைத்தும் கூலியே.

மட்டமானது பாராமரிப்பு மட்டத்தை ஈடுகட்டத் தவறி விடும் அளவுக்குக் குறைவாய் இருந்தால், பட்டினிச் சாவுகள் தொடர்ந்து, மக்கள் தொகையும் உழைப்பின் அளிப்பும் குறைந்து; கூலி மட்டம் ஏற முற்படும். இதனால், பராமரிப்பு மட்டத்தில் மட்டுமே, கூலியானது நிலைபேருயிருக்க முடியும். வேறு சொற்களில் கூறுவதானால், கூலி மட்டத்தை உயர்த்தவோ தாழ்த்தவோ முடியாது. இவ்வாறு, கூலிமட்டமானது ஓர் இரும்புச் சட்டக் கூட்டினுள் கட்டுப்படுத்தப்பட்டிருப்பதால், இதனைக் கூலிபற்றிய இரும்பு விதி எனச் சொல்வதுமுண்டு.

பராமரிப்புக் கோட்பாடு, உழைப்பின் அளிப்பு மட்டற்றபடி நெகிழ்ச்சியாயிருப்பதாக நம்புகிறது எனலாம். மேலும் இக்கோட்பாட்டின்படி பொருள்கள் விலை ஏறும்போது, அதே அளவுக்குக் கூலிவீதமும் ஏறியாக வேண்டும்; அப்போதுதானே பராமரிப்பதற்கு வேண்டிய குறிப்பிட்ட அளவு பொருள்கள் தொகுதியைத் தவருது பெற முடியும்? மேலும், கூலியின் மீது வரியொன்று விதித்தால், வரியின் அளவுக்குக் கூலிவீதமும் ஏறியாக வேண்டும். இல்லையேல், கூலியின் அளவும், அதற்கு வாங்க முடிகிற பொருள்கள் அளவும் குறைவதால், பராமரிக்க முடியாத நிலை ஏற்பட்டு, உழைப்பின் அளிப்புக் குன்றி, கூலிமட்டம் இயல்பாகவே ஏறிவிடும். பின்னுளில் சமதருமவாதிகள் தம்முடைய கருத்துக்களை வலியுறுத்த இக்கோட்பாட்டினைப் பயன்படுத்திக் கொண்டனர்: உழைப்பாளிகள் தம்முடைய வினைபொருள் முழுவதற்குமே உரியவர்களாயினும், பராமரிப்பளவுக்கு மட்டும் கூலியைத் தந்துவிட்டு, எஞ்சியதை முதலாளி சுரண்டி வைத்துக் கொள்கிருன் என்பது சமதருமச் சித்தாந்தம்.

இக்கோட்பாடு, இந் நாளில் பிழை நிரம்பியதாகவே கருதப் படுகிறது. கூலி ஏறும் போது, பிறப்புக்களின் எண்ணிக்கையும் பெருகும் என்ற கருத்தை இன்று எவரும் ஏற்றுக் கொள்வதில்லை. மால்தஸின் மக்கள் தொகைக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டது இக் கருத்து. இக் கோட்பாடு வலியுறுத்தப்பட்டு வந்த பத்தொன்பதாவது நூற்ருண்டில் இங்கிலாந்தில் கூட, உண்மையில் மக்கள் தொகை இரட்டித்த வேளையில் கூலி மட்டமும் இரு மடங்கு பெருகியுள்ளதாக வரலாறு கூறுகிறது.

கூலி மட்டத்தை மாற்றவே முடியாது என நம்பிக்கையிழந்த நிலையில்முடிவுகட்டுவதும் தவறு. தொழிற்சங்கங்கள் கூலிமட்டத்தை முடிவுசெய்வதில் புரிந்து வருகிற பணியிலிருந்து, கூலிமட்டம் ஏதோவொரு இரும்புச் சட்டக் கூட்டால் கட்டுப்படுத்தப் பட்டிருப்பதாகச் சொல்வதில் பொருளில்லை என்பதையும் புரிந்து கொள்ள முடியும்.

இக்கோட்பாட்டின் துணை கொண்டு தொழில்களிடையே நிலவும் கூலிமட்ட ஏற்றத்தாழ்வுக்குரிய காரணங்களை விளக்கவும் இயலாது. 'உண்பது நாழி, உடுப்பது நான்கு முழம்' என்றபடி எல்லாரது பராமரிப்பு மட்டமும் சமமாக இருந்தாலும், கூலிமட்டம் மட்டும் அவ்வாறு சமமாக இருக்கவில்லையே!

இறுதியாக, இக்கோட்பாட்டின் அடிப்படைக் குறைபாடு, அது உழைப்பின் தேவைச் சூழலை அறவே புறக்கணித்து விட்டமைதான். உழைப்பின் தேவை மிகுதியாயிருந்தால், அதன் விலையாகிய கூலி ஏறுவது இயல்பல்லவா?

### வாழ்க்கைத்தரக் கோட்பாடு

பராமரிப்புக் கோட்பாட்டைத் திருத்த முயன்றவர்கள், வாழ்க்கைத்தரக் கோட்பாடு என வேறொரு கோட்பாட்டை உருவாக்கினர். பராமரிப்பு மட்டமானது ஒருவருடைய பழக்கவழக்கங்களையும் சமூக மரபுகளையும் சார்ந்துள்ளது என ரிக்கார்டோ விளக்க முற்பட்டார். வெற்றுயிர் பேணுவதற்குப் போதுமானவை மட்டுமன்றி, நியாயமான அளவு வாழ்க்கைத் தரத்தைப் பேணுவதற்கும் இன்றியமையாதவற்றை அடைவதற்கும் போதுமானபடி கூலி இருந்தாக வேண்டும். கூலிமட்டமானது இதை விடக்குறைவாக இருந்தால், உழைப்பின் அளிப்புக் குன்றும்; மிகுதியாக இருந்தால் உழைப்பின் அளிப்பு மிகும். இவ்வாறு, கூலிவீதம் வாழ்க்கைத்தர மட்டத்துக்குச் சமமாக இருந்தாக வேண்டும் என முடிவு கட்டப்பட்டது.

முந்திய கோட்பாட்டுடன் ஒப்பிடும் போது, இக் கோட்பாடு மெச்சத் தக்கதே. உழைப்பாளிக்குத் தர வேண்டிய கூலி, அவனுக்கே உரிய வாழ்க்கைத்தரத்தைப் பேணப் போதுமானதாக இருக்க வேண்டும்; அவன் உயிர் பேணப் போதுமானதாக மட்டும் இருந்தால் போதாது. இது ஒருபடி முன்னேற்றம்தான். மேலும், வாழ்க்கைத்தரமானது (அதாவது, ஒருவன் வழக்கமாக நுகர்ந்து வரும் பொருள்களின் அளவு) உழைப்பாளியின் திறமையையும் விளைதிறனையும் தாக்குவதால், அதனால் கூலியும் தாக்குறுவது இயல்பே. இன்னும், வாழ்க்கைத்தர மட்டமானது கூலிகளின் குறைந்த அளவு மட்டமாக எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டு வருகிறது.

இக் கோட்பாட்டிலும் சில குறைகள் இல்லாமலில்லை. ஆழ்ந்து சிந்தித்தால், வாழ்க்கைத் தரமும் கூலிவீதமும் ஒன்றையொன்று கட்டுப்படுத்தத் தக்கவையாய் இருப்பதை அறிய முடியும். வாழ்க்கைத் தரம் உயரும் போது கூலி உயரலாம்; ஆனால், அதே

போன்று கூலி உயரும் போது உழைப்பாளர் வாழ்க்கைத்தரமும் உயர்வது உலக நடைமுறை. எனவே, இவையிரண்டில் எது எதனை முடிவு செய்கிறது என முடிவுகட்ட முடியாது.

மேலும், வாழ்க்கைத்தரத்தை—அதாவது, அது சுட்டி நிற்கும் பொருள்களின் தொகுதியைத் திட்டப்படுத்துவதும் அவ்வளவு எளிதன்று. காலம், சுற்றுப்புறம், பழக்க வழக்கம் போன்ற பல காரணிகளைப் பொருத்து, அது அடிக்கடி மாறிக் கொண்டிருக்கும்.

இறுதியாகப் பராமரிப்புக் கோட்பாட்டின் அடிப்படைக் குறைபாட்டை இங்கும் காணலாம். கூலியை முடிவு செய்ய உதவுகிற தேவைச் சூழல் பற்றி இங்கு எதுவுமே கூறப்படவில்லை.

**மிச்ச உரிமையர் கோட்பாடு**

பேராசிரியர் வால்க்கர் (Walker) இக் கோட்பாட்டுக்கு அடிகோலியவர். இக் கோட்பாட்டின்படி வாரம், இலாபம், வட்டி ஆகிய ஊதியங்களைத் தந்தபின் மொத்த விளைபொருளில் எஞ்சி நிற்கும் மிச்சமே கூலி; அதற்குரியவர் உழைப்பாளர்கள். இந்த எச்சத்தின் அளவு அவர்களுடைய விளைதிறனைப் பொருத்தது. வாரம் முதலிய பிற ஊதியங்கள் விளைபொருளுடன் தொடர்பில்லாத வெவ்வேறு விதிகளால் முடிவாகின்றன என்பார் வால்க்கர். விளைபொருளுடன் தொடர்புள்ளது கூலி மட்டுமே என எடுத்துக்காட்டி, உழைப்பின் விளைதிறனை வால்க்கர் வலியுறுத்துவார்.

உழைப்புத் தேவையை இக் கோட்பாடு குறிப்பிடுகிற போதிலும் இங்கும் சில குறைபாடுகளைக் காணலாம். பொருள் விற்பனையாவதற்கு முன்பே கூலியை முன்பணமாகத் தருவது தான் வழக்கமாதலால், கூலியை ஒருவகை மிச்சமெனக் கொள்ளல் தவறு. உண்மையில், அவ்வாறுள்ள மிச்சத்தைப் பெறுபவன் தொழில் துணிவோனே யொழிய, தொழிலாளியன்று.

மேலும், இக் கோட்பாடு அவ்வப்போது ஏற்படும் கூலிவீத மாறுதல்களை விளக்கத் தக்கதாய் இல்லை. தொழிற் சங்கங்கள் எவ்வாறு கூலிவீதங்களைக் கட்டுப்படுத்துகின்றன என்பதற்கும் இக் கோட்பாடு விளக்கம் தரும் நிலையிலில்லை.

இறுதியாக, இக்கோட்பாடும் ஒருதலை ஆய்வாகி விட்டது: உழைப்பின் அளிப்பையொட்டிய சிக்கல்கள் விளக்கப்படவில்லை.

**கூலிநிதிக் கோட்பாடு**

தொழிற் புரட்சியின் தொடக்க நிலையில், இங்கிலாந்து நாட்டுத் தொழில் முதலாளிகளிடம் பெரிய அளவில் முதல் குவிந்திருந்தது.

இந்நிலையில், தாம் உற்பத்தி செய்த பண்டங்கள் விற்பனையாவதற்கு முன்னரே, உழைப்பாளர்க்குரிய கூலியைத் தரும் நிலையில் முதலாளி கள் இருந்தனர். இதன் அடிப்படையில், ஆசிரியர்கள் சிலர், கூலி தருவதற்கென முதலாளி ஒதுக்கி வைக்கும் முதலின் மட்டத்தையே, கூலிமட்டம் பொருத்திருக்கிறது என முடிவு கட்டலாயினர். மில் இக்கோட்பாட்டை மிகவும் ஆர்வத்துடன் விளக்கியவர்களில் ஒருவர்.

இக்கோட்பாடு, உண்மையில், ஒருவகைத் தேவை — அளிப்புக் கோட்பாடாகும். உழைப்பின் அளிப்பு மக்கள் தொகையையும் அவர் தம் திறமையையும் பொருத்துள்ளது. உழைப்புத் தேவை முதலாளி களிடமிருந்து வருகிறது. இந்தத் தேவையின் அளவு முதலாளிகள் கூலி தருவதற்கென ஒதுக்கி வைக்க இசைகிற முதலின் தொகை யைப் பொருத்துள்ளது. இத்தொகையே கூலிநிதி ; இதனைப் புரள் முதல் என்றும் சொல்லலாம். அளிப்பையும் தேவையையும் அறிந்து கொண்டபின், எந்தவொரு நேரத்திலும், கூலிமட்டத்தை முடிவு செய்வதென்பது எளிது. கூலிநிதித் தொகையை, உழைக்கும் மக்கள் தொகையால் வகுத்தால் கிடைக்கிற ஈவுதான் சராசரிக் கூலிமட்டம்.

இவ்வாறெனில், கூலிமட்டம் மாறுவதற்குக் காரணம் கூலிநிதி யிலும் மக்கள் தொகையிலும் ஏற்படும் மாறுதல்களாகவே இருக்க முடியும். கூலிமட்டம் உயரவேண்டுமெனில் இருவழிகளே யுள்ளன: கூலிநிதி பெருக வேண்டும் : உழைப்பாளர் எண்ணிக்கை குறைய வேண்டும். கூலிநிதியைப் பெருக்குவது எளிதன்று. சமுதாயத்தின் சேமிப்பு—முதலீட்டுப் பழக்கங்களைப் பொருத்தது அது. எனவே, கூலிமட்டம் உயர ஒரே வழி உழைப்பாளர் தம்முடைய எண்ணிக் கையைக் குறைத்துக் கொள்வது, அல்லது மக்கள் தொகையைக் கட்டுப்படுத்துவதுதான். இந்நிலையில், தொழிற்சங்கங்களும் அரசும் கூலியை உயர்த்தும் முயற்சி வீணே. கூலிநிதியின் அளவு மாறுத நிலையில் கூலிவீதம் உயர்த்தப்பட்டால், இருக்கிற நிதியை முன்னி லும் உயர்ந்த வீதத்தில் பகிர்ந்தளிக்கும் போது, சிலர்க்குக் கூலிதர இயலாது போகும் ; வேலையின்மை ஏற்பட்டு விடும்.

முன்னர் வேலை செய்த அனைவர்க்குமே உயர்ந்த வீதத்தில் கூலி தர வேண்டுமெனில் மற்றொரு வழியுமுண்டு ; இலாப வீதத்தைக் குறைத்துக் கொள்ள முதலாளி முன்வந்தால், அவ்வாறு கிடைக்கும் மிச்சத்தைக் கொண்டு கூலிவீதத்தை உயர்த்த இயலலாம். எனவே, இலாபத்தின் செலவில்தான் கூலி உயர முடியும் என்பது இக்கோட் பாட்டின் மற்றொரு முடிவாகிறது.

தொழில்களை ஆகமொத்தமாகக் கவனித்தால் குறிப்பிட்ட ஒரு தொழிலில் கூலிமட்டம் உயர்ந்தால், அதனால் பிறதொழில்களில் கூலி மட்டம் குறைந்தாகவேண்டிய நிலையும் ஏற்பட்டு விடலாம். மாறாக, எல்லாத் தொழில்களிலும் ஒரு சேரக் கூலிமட்டம் உயர முற்பட்டால், இலாபம் குன்ற நேர்ந்து, தொழிலிலிருந்தே முதல் வெளியேறும் நிலை தோன்றி, வேலையின்மை விளைந்து கூலிமட்டம் இறங்க வேண்டிய கட்டாயம் ஏற்படும்.

கூலிநிதிக் கோட்பாட்டை முற்றிலும் சரி எனச் சொல்ல முடியாது.

இலாபத்தின் செலவிலேதான் கூலியை உயர்த்த முடியுமெனச் சொல்வது தவறு. தொழில் செழிப்பாக இருக்கும் போது, இலாப வீதமும் கூலிவீதமும் ஒரு சேர வளர்ந்து செல்வது தான் நடைமுறை. இது போன்றே ஒரு தொழிலில் கூலிவீதம் உயர வேண்டுமெனில், பிற தொழில்களில் கூலிவீதம் இறங்க வேண்டும் எனக் கூறுவதிலும் பொருள் இல்லை. செழிப்பான காலங்களில் எல்லாத் தொழில்களிலுமே விலைமட்டமும் கூலிவீதமும் உயர்வாக இருப்பது இதனை விளக்கும்.

இக்கோட்பாடு வேறொரு முறையிலும் நடைமுறைக்குப் பொருந்துவதாயில்லை. சில நேரங்களில் குறைந்த அளவே முதலுள்ள புது நாடுகளில் கூலி மட்டம் உயர்வாகவும், முதல் மிக்குள்ள நாடுகளில் கூலிமட்டம் குறைவாகவும் இருக்கக் காணலாம்.

இந்தக் கோட்பாடு சராசரிக் கூலிமட்டம் பற்றிய உண்மையொன்றைச் சொல்கிறதேயொழிய, தொழில்களிடையே கூலிவீதத்தில் காணும் வேறுபாட்டை விளக்குவதாயில்லை.

உழைப்பாளி வினைதிறன் படைத்தவன் என்பதையும், அத்திறன் காரணமாகவே அவனுக்குக் கூலிதரப் பெறுகிறது என்பதையும் இக் கோட்பாடு ஒப்புக் கொள்ளாதது பெரிய குறைபாடு.

இறுதியாகக் கூலிநிதியானது மாறாதபடி இருக்கிற ஒன்றன்று என்பதையும் சிந்திக்க வேண்டும். உழைப்பின் தேவையும் அளிப்பும் ஒன்றையொன்று சார்ந்தவையல்ல என்று சொல்வதே தவறு. உழைப்பாளர் அளிப்புப் பெருகினால், கூலி குறையலாம்; கூலி குறையும்போது இலாபம் மிகுதியாகிறது; இலாபம் மிகும் போது மேலும் மேலும் தொழிலாளர்களை அமர்த்துவதற்காக, முதலாளி வேண்டிய அளவு நிதியொதுக்க முன் வரலாம். இவ்வாறு, இலாப

வாய்ப்புப் பெருகும் போது, கூலிநிதி வளரும் என்றும், நேரெதிரான நிலையில் சுருங்கும் என்றும் ஏற்றுக் கொண்டால், இக்கோட்பாட்டின் அடிப்படையே கலகலத்து விடுகிறது. கூலிநிதியானது மாறத்தக்கதென நிறுவி விட்டால், கோட்பாட்டை ஆதாரமாகக் கொண்டு நிறுவுகிற முடிவுகளெல்லாம் ஆதாரமற்றவை ஆகிவிடும். உண்மையில், கோட்பாட்டை ஆர்வத்துடன் பரப்பி வந்த மில், கூலிநிதி மாறாத ஒன்றன்று என்பதைப் பின்னர் ஏற்றுக் கொள்ள வேண்டிய நிலை ஏற்பட்டது. அத்துடன் கூலிநிதிக் கோட்பாடும் செல்வாக்கிழந்து விட்டது எனலாம்.

## இறுதிநிலை விளைதிறன் கோட்பாடு

பகிர்வின் பொது அடிப்படையை விளக்கிய இறுதிநிலை விளைதிறன் கோட்பாட்டை உழைப்புக்குப் பொருத்தி விளக்கும் முயற்சியில் உருவாகியது தான் இக் கோட்பாடு. கிளார்க், ஜெவான்ஸ் போன்றவர்கள் இக் கோட்பாட்டை நன்கு விளக்கியுள்ளனர். நிறைவுப் போட்டிச் சூழலில், உழைப்பின் இறுதிநிலை விளைபொருளும் கூலியும் சமமாக இருக்குமென இக்கோட்பாடு கூறும்.[1]

இக்கோட்பாடு சில எடுகோள்களின் அடிப்படையிலேயே நிறுவப் பெறுகிறது. உழைப்பு ஓரியலானது என்பது ஓர் எடுகோள். உழைப்பும் பிற காரணிகளும் எளிதில் பெயர்ந்து செல்லத் தக்கன என்பது மற்றோர் எடுகோள். வேலை நிறைவு நிலவுவதாகவும் எடுத்துக் கொள்ளப்படுகிறது. பிற காரணிகளின் ஊதியம் மாறாதிருக்கிறது என்பதும் ஓர் எடுகோள்.

இந்த எடுகோள்களின் அடிப்படையில் ஒரு நிறுவனத்தின் உழைப்புத் தேவையை அணுகினால், அங்காடிக் கூலிவீதமும், உழைப்பின் இறுதிநிலை விளைதிறனும் சமமாகுவது வரை உழைப்பு அமர்த்தப்படும் என்று அறியலாம். மேலும் மேலும் உழைப்பை அமர்த்தும் போது குறிப்பிட்ட நிலை வரை விளைவுவீதம் வளர்ந்து செல்லலாம். ஆனால், இறுதியில் குறைந்து செல் விளைவுவிதி செயல்பட்டு, அடுத்தடுத்து ஆள்கிற உழைப்பு அலகுகள் குறைந்து செல்லும் வீதத்திலேயே உற்பத்தி செய்யும் நிலை தோன்றுகிறது. இறுதியில், இறுதிநிலை உழைப்பு அலகு ஒன்றுமே உற்பத்தி செய்யாத நிலைகூடத் தோன்றலாம். நிறைவுப் போட்டிச் சூழலில் இறுதிநிலை உழைப்பின் விளைபொருள் மதிப்பும், அந்த அலகை அமர்த்துவதால் ஏற்படும் (கூலிச்) செலவும் சமமாவது வரை மேலும் மேலும் உழைப்பு அமர்த்தப்படுவது இயல்பு. உழைப்பு அங்காடியிலும்

1 பகிர்வு பற்றிய இறுதிநிலை விளைதிறன் கோட்பாட்டை மீண்டும் பார்க்க.

நிறைவுப் போட்டி நிலவுவதாக வைத்துக் கொள்வதால், இறுதி நிலைக் கூலிச் செலவும் கூலிவீதமும் எந் நிலையிலும் சமமாகவே இருக்கும். கூலி வீதமும் உழைப்பின் இறுதிநிலை வருவாய் விளை பொருளும் சமமாவது வரை உழைப்பு அமர்த்தப்படும் என்பது தான் இதன்பொருள். நிறைவுப் போட்டியில் உழைப்பாளர் அனை வர்க்கும் சமமான கூலி தரப் பெறுகிறது. எனவே, கூலியானது உழைப்பின் இறுதிநிலை விளைதிறனையே சார்கிறது.

உழைப்பு மேலும் மேலும் அமர்த்தப்படும் போது, பிற காரணி களின் அளவு மாருதிருக்கிறது என்ற அடிப்படையிலேயே மேலே கூறிய விளக்கம் அமைந்துள்ளது. ஆனால், நெடுங் காலத்தில் பிற காரணிகளின் அளவு வளரத்தக்கதே. எனவே, உழைப்பின் இறுதி நிலை விளைவு என்று சொல்வதை விட, உழைப்பின் இறுதிநிலை நிகர விளைவு என்று சொன்னால் ஓரளவு திருத்தமாக இருக்கும். மேலும் ஒரு மனிதனை, வேண்டிய அளவு மிகுதியான பிற காரணிகளுடன் அமர்த்துவதால் மிகுதியாகிற உற்பத்தியின் மதிப்பிலிருந்து, மிகுதி யாக ஆண்ட பிற காரணிகளுக்குரிய செலவைக் கழித்தால் கிடைக் கும் தொகையே உழைப்பின் நிகர விளைபொருள்.

இந்தக் கோட்பாடு பராமரிப்புக் கோட்பாட்டைப்போல நீட்டுப் போக்கற்ற ஒன்றன்று. இருப்பினும், இதில் குறைபாடுகள் இல்லாம லில்லை. கோட்பாட்டின் எடுகோள்கள் தேக்க நிலைப்பட்ட சமுதா யத்துக்கு மட்டுமே பொருந்துவன. இயக்க நிலைப்பட்ட அமைப்பில் அவ்வனைத்தும் மாறிக்கொண்டு இருக்கின்றன. மேலும், கூலியைப் பொருத்து விளைதிறனும் மாறலாம் என்பதையுங் கவனிக்க வேண்டும். குறைவான விளைதிறன் குறைந்த கூலிக்குக் காரண மாக இருக்கலாம். ஆனால், குறைந்த கூலி வாழ்க்கைத் தரத்தைக் குறைத்து, அதனால் உழைப்புத் திறமையையும், விளைதிறனையும் குறைத்து விடத்தக்கது அல்லவா? இறுதிநிலை விளைதிறன் கூலியை 'நிருணயிப்பதாக'ச் சொல்வதும் சரியன்று. கூலிவீதம், இறுதிநிலை விளைதிறன், வேலையில் அமர்த்தப்படும் தொழிலாளர் எண்ணிக்கை ஆகியவற்றுக் கிடையே நெருங்கிய தொடர்பிருப்பது உண்மை. இதனால், கூலிவீதத்தின் ஓர் அளவையாக உழைப்பின் இறுதிநிலை விளைதிறனைக் கொள்வதுதான் பொருந்துமே யொழிய, அதனை ஒரு நிருணயிக்கும் காரணியாகக் கொள்வது பொருந்தாது.

இக்கோட்பாட்டில் ஒரு திருத்தத்தைக் கொணர்ந்து உள்ளார் டாவிக். வினைமுற்றிய பொருள் விற்பனை யாவதற்கு முன்னரே உழைப்புக்குரிய கூலி தரப்பட்டு விடுகிறது. எனவே, தான் முன் பணமாகத் தந்த தொகையைப் பொருள் விற்பனையான பின்

பெறுவது வரையுள்ள இடைக் காலத்தில் அத் தொகைக்குரிய வட்டியைத் தொழில் துணிவோன் இழக்கிறான். இந்த இழப்பை ஈடு செய்யாமல் தொழில் துணிவோன் இருப்பதில்லை. இதனால், இறுதிநிலை விளைபொருளிலிருந்து மேற்சொன்ன வட்டியைக் கழிவு செய்த பின் எஞ்சியதை மட்டுமே உழைப்பாளனுக்குத் தருவான் என்பார் டாவிக்.

இறுதிநிலை விளைதிறன் கோட்பாட்டில் காலக் கூறைப் புகுத்திப் புதியதொரு விளக்கம் தந்த டாவிக்கின் முயற்சி புதுமையானதே. ஆனால், இது நடைமுறைக்கு எவ்வளவு பொருந்தும் என்பது ஐயத்திற்குரியது. மேலும், இந்தக் கழித்தற் செய்கையில் உள்ளார்ந்த குழப்ப மொன்றும் இருக்கிறது. கூலி எதைப் பொருத்திருக்கிறது என்றால், உழைப்பின் இறுதிநிலை விளைபொருளாக எதிர்பார்க்கப்படுவதைப் பொருத்திருக்கிறது என்போம். அவ் விளைபொருள் நடப்பு வட்டி வீதத்தில் கழிவு செய்யப் படுவதாகச் சொல்வோம். இனி, வட்டி எவ்வளவு என்று வினவினால், உழைப்பின் இறுதிநிலை விளைபொருளாக எதிர்பார்க்கப்படுவதற்கும் தற்காலம் முன்பணமாகத் தந்துள்ளதற்கும் இடையே உள்ள வேறுபாடு எனப் பதில் வரும். முன்பணமாகப் பணம் தந்ததன் விளைவு வட்டி ; அவ் வட்டியோ முன்பணமாக எவ்வளவு தரப்பட்டுள்ளது என்பதைப் பொருத்திருக்கிறது ! உழைப்பின் இறுதிநிலை விளைபொருள் ரூ. 100 எனக் கணித்துள்ளதாக வைத்துக் கொள்வோம். இந்த ரூ. 100-உம் 3 மாதம் கழித்தே விற்று முதலாகத் தொழில் துணிவோன் கைக்கு வரும் என்று வைத்துக் கொள்வோம். டாவிக்கின் கோட்பாட்டின்படி இந்த ரூ. 100 கழிவு செய்யப்பட வேண்டும். இப்போது ரூ. 98 மட்டுமே தரப்பட்டால், ரூ. 2 வட்டியைக் குறிப்பதாகச் சொல்கிறோம். இன்று ரூ. 98 கொடுப்பதால், பின்னர் ரூ. 100 கிடைக்கிறதா, அல்லது பின்னர் ரூ. 100 கிடைப்பதால் இன்று ரூ. 98 கொடுக்கிறானா என்ற சிக்கல் தோன்றுகிறது ! மேலும், இந்தக் கோட்பாடு ஒரு வகை மிச்ச உரிமையர் கோட்பாடு போலவே இருக்கிறது. வட்டியை எல்லாம் கழித்துக் கொடுத்தபின் மிச்சமிருப்பது உழைப்புக்கு என்ற கருத்து இங்குத் தொக்கி நிற்கிறது. பேராசிரியர் ஹிக்ஸ் இது ஒரு வகைக் கூலி நிதிக் கோட்பாடு என்பார். புரள் முதலின் மொத்தத் தொகை மாறாதிருப்பதாக இங்குக் கருத வழியிருப்பதே இதற்குக் காரணம்.

### தேவை — அளிப்புக் கோட்பாடு

மேலே கண்ட கோட்பாடுகள் எல்லாம் ஒரு தலைப்பட்டன எனச் சொல்வதில் தவறில்லை. அவை தேவைச் சூழலிலும் அளிப்புச் சூழலிலும் ஏதேனுமொன்றை எடுத்துக் கொண்டு ஆய்கின்றன.

இக் கால ஆசிரியர்கள் பொதுவாக ஏற்றுக் கொள்ளும் தேவை — அளிப்புக் கோட்பாடு இந்தக் குறையை அகற்றுகிறது. தேவை, அளிப்பு இரண்டினாலும் கூலி முடிவாகிறது என இக் கோட்பாடு கூறுகிறது.

தேவைப் பக்கத்தில், உழைப்பின் இறுதிநிலை விளைபொருள் கூலியை முடிவு செய்கிறது. தொழிலாளி உற்பத்தி செய்வதற்கும் எச்சமாக எவராலும் கூலிதர முடியாது. எவரேனும் அவ்வாறு தந்தால் நட்டமடைய நேரும். எனவே, இறுதிநிலை விளைபொருள் மட்டத்துக்கு மேல் கூலி உயர முடியாது எனலாம்.

அளிப்புப் பக்கம், உழைப்பாளனின் வாழ்க்கைத்தரம் கூலியை நிருணயிக்கிறது. கூலியானது தன்னுடைய வாழ்க்கைத்தரத்தைப் பேணப் போதுமானதாயிராவிட்டால் உழைப்பாளி உழைக்க முன் வரமாட்டான்.

இவ்வாறு கூலியின் உயர்மட்டத்தை உழைப்பின் இறுதிநிலை விளைபொருளும், கீழ் மட்டத்தை வாழ்க்கைத்தரமும் முடிவு செய்கின்றன. இவ்விரு மட்டங்கள் இடையே இருபாலரதும் பேர ஆற்றலே, குறிப்பிட்ட நேரத்தில் கூலியைத் திட்டப்படுத்துகிறது.

உழைப்பாளியின் கண்ணோட்டத்தில் அவனுடைய பேர ஆற்றல் உழைப்புத் தேவை நெகிழ்ச்சியையும் அளிப்பு நெகிழ்ச்சியையுமே பொருத்துள்ளது. தேவை நெகிழ்ச்சி, தொழில் வினைமுறைகளையும் விளைபொருள் தேவை இயல்பையும், அளிப்பு நிலையையும் பொருத்தது. தொழில் நுட்பக் குணகங்கள் நீட்டுப் போக்கற்ற தன்மையனவாக இருந்தால் இறுதிநிலைத் தூல விளைபொருள் பூஜ்யமாகி விடலாம். உழைப்புத் தேவையும் இல்லாமலாகி விடலாம். விளைபொருளின் தேவை நெகிழ்ச்சியைப் பொருத்ததே உழைப்புத் தேவை நெகிழ்ச்சியும். ஏனெனில் பொருள்கள் தேவையிலிருந்து தோன்றுவது தான் உழைப்புத் தேவை. எந்த அளவுக்கு உழைப்பின் இடத்தில் பிற காரணிகளை ஆளமுடியும் என்பதும் உழைப்புத் தேவை நெகிழ்ச்சியைக் கட்டுப்படுத்துகிறது. அளிப்பு நெகிழ்ச்சியானது உழைப்பாளர் முன்னுள்ள மாற்றுத் துறைகள், மாற்று அலுவல்களுக்குப் பெயர்ந்து செல்வதனால் ஏற்படும் செலவு, அந்தப் பெயர்ச்சியைத் தடைசெய்கிற காரணியின் திறமை போன்றவற்றைச் சார்ந்துள்ளது. மாற்றுத் துறைகள் பல இருந்து, அவற்றுக்குப் பெயர்ந்து செல்லத் தடைகளும் செலவுகளும் இல்லாமல் இருந்தால், உழைப்பின் அளிப்பு நெகிழ்ச்சியுடனிருப்பது இயல்பு. உழைப்புத் தேவை நெகிழ்ச்சியுடனிருந்தால் அதன் பேர ஆற்றல்

குறைவாக இருக்குமென்பதும், அதன் அளிப்பு நெகிழ்ச்சி யுடனிருந் தால் நேரெதிராக இருக்கு மென்பதும் தெளிவு.

நடைமுறையில், உழைப்பின் பேர ஆற்றல் குறைவாகவே இருக்கிறது. காரணங்கள் பல. அவர்கள் எண்ணிக்கை ஏராளமாக இருப்பதே முதற்காரணம். அடுத்து, உழைப்பு அங்காடிகள்வட்டார அளவினவாய் இருந்து, இடப்பெயர்ச்சி இல்லாதபடி உள்ளன. உழைப்பு விரைவில் அழிந்துபோகக் கூடிய ஒரு பொருளாக இருப்பதால், வேலையின்மை ஒரு நிரந்தர இடராக எப்பொழுதும் தொழிலாளர்களை அச்சுறுத்தி வருகிறது. இறுதியாக, அறிவுத்தரத்திலும், நிதி வசதியிலும், தொழிலதிபர்களுடன் ஒப்பிடும் போது, உழைப்பாளர் ஆற்றல் குறைந்தவர்களாகவே இருக்கின்றனர். இவற்றின் பொருள், உழைப்பாளி தனது இறுதிநிலை விளைபொருளுக்கேற்ற கூலியைப் பெறுவது விதியாக அன்று, விதிவிலக்காகவே நடைமுறையில் இருக்கிறது என்பது தான்.

# 6. கூலிகள்—சில சிக்கல்கள்

## கூலி வேறுபாடுகள்

இடத்துக்கு இடம், தொழிலுக்குத் தொழில் கூலிவீதங்கள் வேறுபட்டுள்ளன. 1961-இல் பிரிட்டனில் உழவுத் தொழிலாளி, பொறியியல் தொழில் சார்ந்த தேர்ச்சி பெற்ற தொழிலாளி, மருத்துவர் ஆகிய மூவகையினரும் பெற்றுவந்த கூலி முறையே 500, 800, 2000 பவுன்களாகும். இதற்குரிய காரணங்களை ஆயும் முன்பு இவ் வேறுபாட்டின் மெய்ப்பொருளைப் புரிந்து கொள்வது நல்லது. கூலியில் வேறுபாடு என்று சொல்லும்போது உண்மைக் கூலிகளிலுள்ள வேறுபாடுகளைக் கவனிக்கிறோமே யொழிய, பணக் கூலிகளிலுள்ள வேறுபாடுகளையல்ல. ஆடம் ஸ்மித் கூறியதுபோல, 'உழைப்பின் உண்மைக் கூலிகள் அதற்குத் தருகிற இன்றியமையாப் பொருள்களதும் வசதிகளதும் தொகையுள் அடங்குவதாகச் சொல்லலாம்.' சில இடங்களில் பணக்கூலி (பணமாகத் தருகிற கூலி) குறைவாகவே இருக்கலாம்; ஆனால் அதனை ஈடுகட்டும் வகையில் இலவச மதிய உணவு, இலவசத் தங்குமிடம் முதலியனவும் உழைப்பாளர்க்குக் கிடைக்கலாம். இங்கே, பணக்கூலி குறைவாக இருந்த போதிலும் உண்மைக் கூலி உயர்வாக இருப்பது தெளிவு.[1] எனவே, கூலி

[1] கூலிகளைப் பணமாகத் தருவதே வழக்கமெனில், இங்கே உண்மைக் கூலி இப் பணத்துக்கு மாற்றாக வாங்க முடிகிற பொருள்களது அளவையே பொருத்துள்ளது. இதனால் தான் சென்னை போன்ற மாநகர்களிலும் உள்நாட்டுச் சிற்றூர்களிலும் கிடைக்கிற பணக்கூலி ஒரே அளவினதாக இருந்தாலும், அப் பணத்தைக் கொண்டு வாங்க முடிகிற பொருள்களின் அளவு வெவ்வேறாயிருப்பதால், உண்மைக் கூலியானது (ஒரேயளவு பணக் கூலிக்கு) நகர்ப் புறத்தில் குறைவாகவும் ஊர்ப்புறத்தில் உயர்வாகவும் உள்ளது. தொழிலின் தன்மையைப் பொருத்தும் உண்மைக் கூலி வேறுபடுகிறது. ஆண்டு முழுதும் தொடர்ந்து வேலை கிடைக்கிறதா, கூலி தவிர வேறு வருமானம்வர வாய்ப்பிருக்கிறதா, தொழிலில் முன்னேற வழியிருக்கிறதா, தொழில் மனத்துக்கு உகந்ததாக இருக்கிறதா என்பதை எல்லாம் கவனிக்க வேண்டும். ஆண்டில் சில மாதங்களே வேலை தரும் சர்க்கரையாலைகளில் பணக்கூலி எவ்வளவு உயர்வாக இருந்தாலும் உண்மைக் கூலி குறைவாகவே இருக்கும். அரச ஊழியத்தில் ஓய்வூதியம் பெற வாய்ப்பிருப்பதால், அங்கு உண்மைக் கூலி உயர்வாகவே இருக்கிறது.

கள் வேறுபட்டிருப்பதாக சொல்லும் போது, உண்மைக் கூலிகளிடையேயுள்ள வேறுபாடே கவனத்திற்குரியது.

இனி, இவ் வேறுபாடுகளுக்குரிய சிறப்பான காரணங்களைப் பார்க்கலாம் :

கூலிக் கோட்பாடுகளில் முதன்மையானதெனக் கருதப்பெறும் இறுதிநிலை விளைதிறன் கோட்பாடு, கூலிவீதம் வேறுபடுவதற்கு ஒரே காரணம் உற்பத்தித் திறமையிலுள்ள வேறுபாடுகளாகவே இருக்க முடியும் எனச் சொல்லும். முதலாளித்துவ நாட்டில் மட்டுமன்றிச் சமதரும அமைப்புகளிலுங்கூடத் திறமையால் விளைகிற வேறுபாடுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன என்பதற்கு சோவியத் நாட்டு நடைமுறை ஒரு சான்று.

குறிப்பிட்ட வொரு தொழிலில் பயிற்சி பெறுவதில் இடவேண்டிய செலவின் அளவும் கூலிவீத வேறுபாடுகளுக்குக் காரணமாகிறது. மருத்துவர், பொறியர் போன்ற சில அலுவலாளருடைய கூலிவீதம் உயர்வாக இருப்பதற்குக் காரணம் இதுதான். பயிற்சிச் செலவு மிகுதியாயிருப்பதால், அவ்வகை உழைப்பின் அளிப்பு சுருக்கமாக இருப்பதே இந்த உயர்வான கூலி மட்டத்துக்கு உண்மைக் காரணம். இங்கும், அரசினர் படிப்புதவித் தொகைகளாலும், பொதுவான வருமான முன்னேற்றத்தாலும் பொறியியல் துறையில் பட்டம்பெற்று வருவோர் தொகை நம் நாட்டில் அண்மையில் மிகவும் பெருகி, அதனுல் அவர்களிடையே வேலையின்மை ஏற்பட்டு விடலாம் என்ற அச்சம் ஏற்பட்டுள்ளதை நினைவு கூர்ந்தால், உழைப்பின் அளிப்பு எவ்வாறு கூலிவீதத்தைத் தாக்குகிறது என்பதை உணரலாம்.

தொழிலின் தொடர்பாகவுள்ள பொறுப்புக்களும் நட்ட ஆபத்துக்களும் கூடக் கூலிமட்டத்தை முடிவு செய்கின்றன. பாங்கு பொருட் காப்பாளர் போன்ற பொறுப்புமிக்க, நட்ட ஆபத்துமிக்க அலுவல்களில், கூலிவீதம், வழக்கமாகவே உயர்வாயிருக்கிறது. இங்கும் உழைப்பின் அளிப்பானது குறைவாக இருப்பதே உயர் வீதக் கூலிகள் நிலவக் காரணம்.

தொழிலின் தன்மையைப் பொருத்தும் கூலிமட்டங்கள் வேறுபடுகின்றன. மனத்துக்கினிய தொழில்களில் கூலிவீதம் குறைவாக

நீதிபதியாகவும் அரசியல் வாதியாகவும் முன்னேறுவதற்கு இருக்கும் வாய்ப்பைக் கருதினுல் வழக்குரைஞர் தொழிலில் உண்மை வருமானம் குறைந்ததன்று. தோட்டித் தொழிலின் உயர்கூலி அதன் இனிமையன்மையை ஈடுகட்டுவதற்காகத் தரப்படுவது தான்.

இருப்பது இயல்பு. ஒரே தொழிலில் கூட இரவு வேலைக்குப் பகல் வேலையைவிட மிகுதியாகக் கூலி தருவதற்குக் காரணம் இதுதான். இரவு வேலையின் போதும் பின்னிரவுக்குத் தரும் வீதம் முன்னிர வுக்குத் தரும் வீதத்தை விட மிகுதியாயிருப்பதும் இங்குக் கருதத் தக்கது. தகைமை கருதி ஈடுபடும் தொழில்களில் கூலிவீதம் மிகக் குறைவாக இருப்பதற்குக் காரணமும் இதுவே.

தொழிலில் ஆண்டு முழுவதும் தொடர்ந்து வேலை கிடைக் குமா என்பதும் கூலிவீத வேறுபாடுகளுக்குச் சில நேரங்களில் காரணமாகிறது. சர்க்கரை ஆலைத் தொழிலாளர்கள், கட்டடங்கள் கட்டுவதில் ஈடுபடுவோர், துறைமுகங்களில் சரக்குகளை ஏற்றியிறக் கும் தொழிலாளர்கள்—எல்லாரும் ஆண்டு முழுதும் வேலை வாய்ப் புப் பெறும் நிலையிலில்லை. எனவே, பிற தொழில்களில் ஆண்டு முழுதும் தம்மால் ஈட்ட முடிகிற வருமானத்தை, இத் தொழில்களில் சில மாதங்களுக்குள் ஈட்டி விடத் தொழிலாளர் முயல்வது இயல்பு. இதனால், இத் தொழில்களில் கூலிமட்டம் உயர்வாகவே இருக்க லாம். ஆனால், இதைக் கொண்டு இவர்கள் உண்மைக் கூலியும் உயர்வாயிருப்பதாக முடிவுகட்டி விடலாகாது.

உழைப்பானது பெயர்ச்சியற்றிருக்கும் போது இடத்துக்கு இடம் தொழிலுக்குத் தொழில் கூலிவீதம் வேறுபட்டிருக்கலாம். தட்ப வெப்ப, மொழி, பழக்க வழக்க வேறுபாடுகளால் ஒரு நாட்டுக்குள் ளேயே, குறைந்த வீதம் நிலவுமிடத்திலிருந்து உயர்ந்த கூலி நிலவுமிடத்திற்குப் பெயர்ந்து செல்ல உழைப்பு முன்வராதிருக் கலாம். இப்போது, இவ்விரண்டு இடங்களிடையே கூலிமட்டம் வேறுபடுவதைத் தவிர்க்க முடியாது. குடியேற்ற — இறக்கம் பற்றிய விதிகள் உலக நாடுகளிடையே இவ்வகைப் பெயர்ச் சியைத் தடை செய்கின்றன. இதுபோன்றே நுழைவுக் கட்டுப் பாடுகள், பயிற்சி பெறுவதிலுள்ள கடினம், பணி விதிகள், சாதி சமய, ஒழுங்குகள், முதலியவை தொழிலுக்குத் தொழில் உழைப்பு பெயர்வதைத் தடை செய்கின்றன. வேறு சொற் களில் கூறுவதானால், தொழில்களிடையே உண்மையில் போட்டி எதுவுமில்லை ; தொழில்கள், தம்மிடையே, போட்டியற்ற பல்வேறு வகுப்புக்களாகப் பகுக்கப் பெற்றுள்ளன. இந்த ஒவ்வொரு வகுப் பினுள்ளும் போட்டி உண்டு. ஆனால், வகுப்புக்கள் இடையே போட்டி இல்லை. பொறியியல் துறை அலுவலை எடுத்துக் கொண்டால், அங்கே சீரியல், மின்சாரம், தொழில் நுட்பம், உலோகவியல், விமானவியல் என்ற பல வகுப்புக்கள் உள்ளன. இவற்றுக்கிடையே போட்டியில்லை. அதாவது உலோகவியலுக்கும் விமானவியலுக்கும் இடையே போட்டி இல்லை. ஆனால், ஒவ்வொரு

வகுப்புக்குள்ளும் போட்டியுண்டு. குறிப்பாக, சீரியல் பிரிவை எடுத்துக் கொண்டால், அங்கு அளிப்பு—அல்லது, போட்டியிடுவார் எண்ணிக்கை—எச்சமாயிருப்பதால், அண்மைக் காலத்தில் இங்குக் கூலிவீதம் குறைந்து போகிற நிலை வந்தாலும் வியப்பதற்கில்லை. ஆனால், இவர்கள் எண்ணிக்கைப் பெருக்கத்தால் உலோகவியல் துறையிலோ அல்லது விமானப் பிரிவிலோ கூலிவீதம் பாதிக்கப் படாது.

கூலி வேறுபாடுகளை வேறொரு கோணத்திலிருந்து ஆய்ந்தால், பொதுவாகப் பெண்டிர் பெறும் கூலிவீதமானது ஆடவர் பெறும் வீதத்தை விடக் குறைவாகவே இருக்கிறது. 1955 வரை இங்கிலாந்தில் அரசப் பணித் துறையிலும் கல்வித் துறையிலும் ஆடவரைவிடக் குறைவாகப் பெண்டிர்க்குச் சம்பளம் வழங்கப்பட்டு வந்தது. 1963-இல், அந் நாட்டில், 21 வயதுக்கு மேற்பட்ட ஆடவர் பெற்ற சராசரி வாரக் கூலி 333 ஷில்லிங் 1 பென்ஸ்; 18 வயதுக்கு மேற்பட்ட பெண்டிர் பெற்ற சராசரி வாரக் கூலி 163 ஷில்லிங் 9 பென்ஸ் மட்டுமே! இதற்கும், சில காரணங்களைக் காட்டலாம். உடல் வலிமை வேண்டி வருகிற உருக்காலை போன்ற தொழில்களுக்குப் பெண்டிர் பொருத்தமற்றவராயிருப்பதால், அவர்கள் பெரும்பான்மையான தொழில்களில் நுழைய முடியாதவர்களாயுள்ளனர். பெண்டிர் சில தொழில்களில் ஈடுபடுவதற்குச் சில நாடுகளில் தடை கூட இருக்கலாம்: நிலத்தின் கீழ் வேலை செய்ய வேண்டிய சுரங்கங்கள், இரும்பு எஃகாலை, கனரகத் தொழில்கள், கட்டடங் கட்டுதல், ரெயில்வேயில் சில பகுதிகள், அச்சகங்கள் முதலியனவற்றில் பெண் தொழிலாளரை ஈடுபடுத்த லாகாது என்ற கட்டுப்பாடு இங்கிலாந்தில் இருக்கிறது. இவற்றால், அவர்கள் மிகச் சில தொழில்களில் குவிய முற்பட்டு, அளிப்பின் மிகுதியால், கூலி மட்டம் குறைந்து விட நேர்கிறது. பெரும்பாலும், குடும்ப வருமானத்தின் குறை நிரப்புவதற்காகவே பெண்டிர் தொழிலில் ஈடுபடுவதால், குறைந்த வீதத்திற்கும் தொழில் புரிய அவர்கள் இசைந்து விடுகின்றனர். 'இல்லாள்' எனச் சிறப்பிக்கும் போது, அவள் இல்லத்துக்கு உரியவளே யொழிய, வெளியே வேலை செய்ய வேண்டியவள் அல்லள் என்றல்லவா சமுதாயம் கருதுகிறது? பெண் தொழிலாளர் தேவையும் குறைவாகவே இருக்கிறது. அரசு ஒழுங்கு முறைகளின்படி, அவர்களுக்கு ஆலைகளில் தனி வசதிகள் செய்து தர வேண்டும்; பேறு காலப்படிகள் வேறு தரவேண்டும்; இவற்றையெல்லாம் கழிவு செய்து கொண்டே அவர்களுக்குரிய கூலிவீதத்தை வேலையளிப்போன் முடிவு செய்கிறான். மேலும், பெண்டிரிடையே இடப்பெயர்ச்சி குறைவு என்பதும், அவர்கள் இடையே கட்டுப்

பாடான சங்கங்கள் இல்லை என்பதும் அவர்களுடைய பேர ஆற்றலைக் குறைத்து விடுகின்றன.[1]

இவற்றை யெல்லாம் கருதும் போது, கூலிவீத வேறுபாடுகளுக் கெல்லாம், காரணம் உழைப்புத்தேவை, அளிப்பு இவற்றின் சூழலே எனலாம். ஒரு பொருளின் விலை மட்டம் அதன் தேவையையும் அளிப்பையும் சார்ந்திருப்பது போல, உழைப்பின் விலையும் அதன் தேவையையும் அளிப்பையுமே பொருத்துள்ளது. மேலே கண்ட காரணங்களும் தேவையை, அல்லது அளிப்பையே ஒட்டியுள்ளன என்பது சிந்திக்கப் புலப்படும்.

## தொழிற் சங்கங்களும் கூலியும்

'தம்முடைய வேலைச் சூழலைப் பேணுவதற்கோ, அல்லது மேம்படுத்துவதற்கோ எனக் கூலி ஈட்டுவோர் அமைத்துக் கொள்ளும் ஓர் இடைவிடாத சங்கமே' தொழிற் சங்கம். இந்நாளையத் தொழிலமைப்பில் கூலிவீதத்தை முடிவு செய்வதில் தொழிற் சங்கங்கள் ஆற்றி வருகிற பணி அனைவரும் அறிந்த வொன்று. சோவியத் நாட்டில் கூலிவீதங்களை முடிவு செய்வதில் அரசுடன் இணைந்து நின்று செயல்படுகின்றன தொழிற் சங்கங்கள். முதலாளித்துவ நாடுகளிலுங் கூடத் தொழிற் சங்கங்களே, இன்று நிலவுங் கூலிமட்டத்தைக் கொணர்வதில், பேணுவதில், உயர்த்துவதில் பெரும் பொறுப்பு வகித்து வருகின்றன.

தொழிற் சங்கங்களால் கூலிமட்டத்தை உயர்த்தவே முடியாது என்பது தொல்லோர் கருத்து. கூலிவீதத்தை உயர்ந்த மட்டத்தில் செயற்கையாகப் பேணிவர முயன்றால், அதனால் இலாபம் குன்றித் தொழிலதிபர்கள் தொழில்களை இழுத்துப் பூட்டவே முன் வருவர்; இதனால், கூலிவீதம் தானாகவே இறங்கிவிடும். இந்தத் தொல்லோர் கருத்தை இந்நாளைய ஆசிரியர்கள் ஏற்றுக் கொள்வதில்லை. கூலிவீதம் இறுதிநிலை விளைதிறனுக்குச் சமமாக இருக்க வேண்டும் என்று கருதுவதில் பிழையில்லை. ஆனால், நடைமுறையில் இந்தச் சமன்பாடு ஏற்படுவது உழைப்பங்காடியில் நிலவும் போட்டியின் தன்மையைப் பொருத்தது. உழைப்பாளர் பேர ஆற்றல் குறைந்தவர்களாயிருந்தால் அவர்களை எளிதில் சுரண்டிவிட முடியும். தம்முடைய இறுதிநிலை விளைதிறனுக்கு ஏற்ற கூலியைப் பெற அவர்

[1] ஆண்களுக்கும் பெண்களுக்கும் சமமான கூலிவீதங்களை 1975 முடிவுக்குள் கொண்டு வருவதற்கான சட்டமொன்று இங்கிலாந்தில் இப்போது நிறைவேற்றப் பட்டுள்ளது.

களால் இயலாது போகலாம். இந் நிலையில் தொழிற் சங்கங்கள் உழைப்பாளரின் பேர ஆற்றலை மிகுத்து அவர்களுக்கு உரியதை வாங்கித் தரத் தக்கவை என்பது தெளிவு.

மேலும், இறுதிநிலை விளைதிறன் மாறத்தக்கதன்று என்றோ, அல்லது மாற்றஇயலாதது என்றோ சொல்ல முடியாது. உழைப்பாளர் ஆள்கிற கருவிகளை, பெற்றுள்ள பயிற்சியை, வேலைச் சூழலைப் பொருத்து அவர்களுடைய விளைதிறன் மாறத் தக்கது. இது போன்றே, உழைப்பின் அளிப்பைக் கட்டுப் படுத்தினால் அதன் இறுதிநிலை விளைதிறனை மாற்றி விடலாம். இவ்விரு வகையிலும் தொழிற் சங்கங்களால் செயலாற்ற முடியும். நல்ல புதிய கருவிகளை ஆலைகளில் நிறுவு வேண்டுமென தொழிற் சங்கங்கள் கட்டாயப் படுத்தலாம். இதமான வேலைச் சூழல்களைக் கொண்டு வருவதற் காகப் போரிடுவது, பொதுவாக, எல்லாத் தொழிற் சங்கங்களதும் வழக்கமான பணி. நம் நாட்டில் ஆயுள் காப்பீட்டுக் கழக அலுவலர் சங்கங்கள் போன்ற பல சங்கங்கள் தம்முடைய உறுப்பினர்க்குத் தொழிற் பயிற்சி நல்க ஏற்பாடு செய்து தருகின்றன. இவற்றாலெல் லாம் உழைப்பாளர் திறமையும், அதற்குத் தக்கவாறு கூலியும், உயர முடியும். தொழிற் சங்கங்கள் வலிமை மிக்கவையாக இருந் தால்—குறிப்பிட்ட தொழில்கள் முன்னுள்ள உழைப்பின் அளிப்பை கட்டுப்படுத்தத் தக்கவைகளாக இருந்தால்—உழைப்பாளரின் இறுதி நிலை விளைதிறனையும் அதன் வழியாகக் கூலிமட்டத்தையும் உயர்த்த முடியும்.

மேலே கூறியுள்ளவற்றில் இருந்து, தொழிற் சங்கங்கள், தம் முடைய பணியின் வழியாக, உழைப்பாளர் இறுதிநிலை விளை திறனுக்குச் சமமான கூலி பெற உதவுவன என்பதில் ஐயமில்லை. ஆனால், தொழிற் சங்கங்களால் இறுதிநிலை விளைதிறன் மட்டத் துக்கும் மேலே கூலிவீதத்தை உயர்த்த முடியுமா எனச் சிலர் வினவுவதுண்டு. இது தொழிற் சங்கங்களின் ஆற்றலுக்கு அப்பாற் பட்டது என்றே சொல்லலாம்.

இருப்பினும், சில நேரங்களில், தொழிற் சங்கங்களால் இது இயல்வதாகலாம் எனச் சிலர் சொல்வதுண்டு. எவ்வாறு பொருளின் விலைமட்டம் அதன் தேவை நெகிழ்ச்சியைச் சார்ந்திருக்கிறதோ, அது போலவே கூலி மட்டமும் உழைப்புத் தேவை நெகிழ்ச்சியைச் சார்ந்திருக்கும். எனவே, உழைப்புத் தேவை நெகிழ்ச்சியைப் பொருத்து, தொழிற் சங்கங்களால் கொண்டு வருகிற கூலி மட்டமும் அமைந்திருக்கும். உழைப்புத் தேவை நெகிழ்ச்சி, அதன் தேவைத் தீவிரத்தையும், அது உற்பத்தி செய்து தருகிற பொருளின் தேவை

நெகிழ்ச்சியையும், அதற்கிருக்கும் மாற்றுப் பொருள்கள் வாய்ப்பையும், அதில் இடுகிற செலவின் அளவையும் பொருத்தது. ரெயில்வே நிறுவனமொன்றை எடுத்துக் கொள்வோம். இருப்புப் பாதைகள், அடையாள அறிவிப்புக் கூண்டுகள், வண்டிகள், அவற்றை இயக்கும் எந்திரங்கள் முதலியவை நிலைத்திருக்கின்றன. இவற்றை இயக்க வேண்டுமெனில், குறிப்பிட்ட அளவு பல்வகை உழைப்பாளர்களும் வேண்டும். இவர்களுள் ஒருவர் — வண்டி ஓட்டுநர் என்று வைத்துக் கொள்வோம் — உயர் வீதம் கோரினால், அதனைத் தராதிருக்க, நிறுவனத்தால் முடியாது; தர மறுத்தால், பிற பொறிகளெல்லாம் பயனற்றுக் கிடக்கும். இங்கு, (குறுங்காலத்திலாவது) உழைப்புத் தேவை நெகிழ்ச்சி குறைந்திருக்கக் காண்கிறோம். இந் நிலையில், உழைப்பால் தனது இறுதிநிலை விளைதிறனுக்கு எச்சமான கூலியைப் பெற்றுவிட முடியலாம்.

உழைப்புத் தேவை, அதனைக் கொண்டு உற்பத்தி செய்து விற்கிற பொருளின் தேவையைப் பொருத்தது. எனவே, அந்தப் பொருளின் தேவை நெகிழ்ச்சியற்றிருந்தால், குறிப்பிட்ட வகை உழைப்புத் தேவையும் நெகிழ்ச்சியற்றிருப்பது இயல்பு. இங்குக் கூலியை உயர்வீதங்களில் தந்தாலும், உற்பத்தியான பொருளுக்கு உயர் விலைகளை விதித்து, அக் கூலியை ஈடுகட்டிக்கொள்ள உற்பத்தியாளனால் முடியும்.

உழைப்புத் தேவையின் பின்னிய நெகிழ்ச்சியும் இங்குக் கருதத் தக்கது. பொருளின் உற்பத்தியில் எந்த அளவுக்குப் பிற காரணிகளை உழைப்பின் இடத்தில் ஆளமுடியும் என்பதே இங்கு அறியத் தக்கது. கூலிவீதம் உயரும்போது, உழைப்பைக் குறைவாகவும் பிற காரணிகளை மிகுதியாகவும் ஆள்வதற்குத் தொழில் துணிவோன் முயல்வான். இங்குப் பிற காரணிகளின் அளிப்பு நெகிழ்ச்சியைக் கவனிக்க வேண்டும். கூலிவீதம் உயர்ந்து விட்டதென உழைப்பின் இடத்தில் எந்திரங்களை (முதல்) ஆள முயலும்போது, எந்திரங்களின் அளிப்பு குறைவாகவும், அவற்றின் அளிப்பைப் பெருக்கக் காலமும் செலவும் மிகுதியாக வேண்டுமென்றும் இருந்தால், அவற்றை ஆள்வது அவ்வளவு எளிதில்லை என்றாகும். இங்கு உழைப்புத் தேவை நெகிழ்ச்சி குறைவாக இருப்பது தெளிவு. இதனால், தொழிற் சங்கங்கள் பெரிய அளவில் கூலிமட்டத்தை உயர்த்தத் தக்கவையாக இருக்கலாம்.

இறுதியாக, மொத்த உற்பத்திச் செலவில் கூலியின் பங்கு என்ன என்றும் பார்க்க வேண்டும். உழைப்புக்குரிய கூலி மொத்த உற்பத்திச் செலவில் மிகச் சிறியதொரு பகுதியாக இருந்தால், உயர்

கூலி பெற்றுவிட இயலலாம். இலட்சக்கணக்கான ரூபாய் செலவில் வீடு கட்டும் ஒருவன், கொத்து வேலைச் சிற்றாள் உயர் கூலி கேட்டால் அதன் விளைவாகத் தனது ஆக மொத்தச் செலவு பெரிய அளவில் வளர்ந்து விட வழியில்லாததால், சிற்றாள் கோரிக்கைக்கு இணங்கி விடலாம். 'செலவோடு செலவு கந்தப் பொடி காற்பணம்' என்ற பழமொழியும் இதனை விளக்குகிறது.

இவை தவிர வேறிரு நிலைகளிலும் தொழிற் சங்கங்கள் உழைப்பின் இறுதிநிலை வினைதிறன் விஞ்சியதோர் அளவில் கூலிமட்டத்தை நிறுவுவதில் வெற்றி பெற்று விடலாம். உழைப்புத் தவிரப் பிற காரணிகளெல்லாம் குறைந்த ஊதியம் பெற இணங்கினாலும், உழைப்பால் உயர்கூலி பெற்றுவிட முடியும். நிலத்துக்கும் உழைப்புக்கும் குறைவாகக் கொடுத்துத் தானும் குறைந்த அளவு இலாபத்துடன் நிறைவு பெறத் தொழில் துணிவோனால் முடியுமானால், இதனால் எச்சமாகக் கிடைப்பதை உழைப்புக்குக் கொடுத்து விடலாம். மேலும், தொழில் பூரிப்புக் காலங்களில் விலைமட்டம் ஏறும்போது, உழைப்பு, தன்னுடைய இறுதிநிலை வினைதிறனை விட மிகுதியானதொரு வீதத்தைப் பெற்று விடுவதும் நிகழத் தக்கதே. இங்கு, உயர் கூலியானது உயர்விலை வழியாக நுகர்வோன் தலையில் சுமத்தப் படுகிறது.

மேலே குறிப்பிட்டுள்ளவைகளெல்லாம் குறுங் காலத்தில் [illegible] கிற சில விதிவிலக்குகள்தாம். நெடுங் காலத்தில் எல்லாக் கா[illegible] களும் தம்முடைய இறுதிநிலை வினைதிறனுக்குச் சமமான ஊ[illegible] தைத்தான் பெற முடியும். எனவே, அந்த அளவுக்குத் தெ[illegible] சங்கங்கள் ஓரளவு கட்டப்பட்டு உள்ளன என்றே முடிவு [illegible] வேண்டும்.

உழைப்பு அங்காடியிலும், குறிப்பிட்ட பொருள் அங்காடிய[illegible] நிலவுகிற போட்டிச் சூழலைப் பொருத்து, தொழிற் சங்கங்க[illegible] பேர ஆற்றல் மாறத்தக்கது என்பதையும் இங்குக் குறிப்பிட வே[illegible] டும். இதன் தொடர்பாக நான்கு சூழல்கள் சுட்டிக் காட்ட[illegible] கின்றன.

1. உழைப்பு அங்காடியிலும் பொருள் அங்காடியிலும் நிறை[illegible] போட்டியே நிலவுவதாக வைத்துக் கொள்வோம். இங்கு இறு[illegible] மதிப்பு விளைபொருளுக்குச் சமமாகவே கூலி நிலவும். இந்த ம[illegible] துக்கு உயர்வாகக் கூலியை நிறுவ, தொழிற் சங்கங்கள் முயல[illegible] அதன் விலைவாகக் குறிப்பிட்ட அளவு வேலையின்மை த[illegible] இயலாதபடி ஏற்பட்டுவிடும். அடுத்துள்ள படம் இதனை விள[illegible]

இயல்பான சமனிலை மட்டம் OW. இந்த மட்டத்தில் OM உழைப்பு அமர்த்தப்படும். இப்போது $OW_1$ கூலியை நிறுவத் தொழிற் சங்கம்




முயன்றால் $OM_1$ உழைப்பே அமர்த்த முடியும். $MM_1$ அளவு வேலையின்மை ஏற்பட்டு விடும்.

2. உழைப்பு அங்காடியில் நிறைவுப் போட்டியும் பொருள் அங்காடியில் விற்பனை முற்றுரிமையும் நிலவினால் என்ன ஏற்படும் எனப் பார்க்கலாம். முதல்நிலையில் ஏற்பட்டதுபோல ஓரளவு வேலை இன்மை ஏற்படாமல் கூலிமட்டத்தை உயர்த்த முடியாது. MRP, ARP வளைகோடுகளிடையே யுள்ள இடைவெளி மட்டும் சற்று மிகுதியாக இருப்பதைத் தவிர, இவ்விரண்டு நிலைகளிலும் பிற வேறுபாடுகள் எவையும் இல்லாமலிருப்பதே இதற்குக் காரணம்.[1]

3. இனி உழைப்பு அங்காடியில் வாங்கல் முற்றுரிமையும், பொருள் அங்காடியில் நிறைவுப் போட்டியும் நிலவுவதாக வைத்துக் கொள்வோம். உழைப்பு அங்காடியில் வாங்கல் முற்றுரிமை இருப்பதால் சராசரி, இறுதிநிலை உழைப்புச் செலவு வளைகோடுகள் மேல் நோக்கிச் செல்கின்றன. இந்நிலையில் தொழிற் சங்கம் உயர் கூலி கோரினால் நிறுவனமும் அதற்கு இசையலாம். படத்தில் OW கூலி

[1] இறுதிநிலை விளைதிறன் கோட்பாடு பார்க்க.

கோரப்படுகிறது. எல்லாத் தொழிலாளர்க்கும் ஒரேவீதக் கூலி தர வேண்டும் எனத் தொழிற்சங்கங்கள் கோருவதால் AW வளை கோடும், அதனையொட்டி MW வளைகோடும் படுகிடையாக உள்ளன.




இங்கு $OW_1$ ஆகக் கூலி உயரும் போது, வேலையுடைமையும் $OM_1$ ஆக வளர்கிறது. கூலியும் வேலையுடைமையும் உயர்வதற்கு இங்கு வாய்ப்பிருக்கிறது என்பதுதான் இதன் பொருள்.

இங்கும், ME மட்டம் வரையே வேலையுடைமை அளவைப் பாதிக்காத வகையில் கூலியை உயர்த்தத் தொழிற் சங்கங்களால் இயலும் என்பதைக் கவனிக்க வேண்டும். ME-இலும் உயர்வாகக் கூலி மட்டத்தை நிறுவ முயன்றால் வேலையுடைமை OM-ஐ விடக் குறைவாகவே இருக்க முடியும்.

4. மேலே கண்ட நிலையே உழைப்பு அங்காடியில் வாங்கல் முற்றுரிமையும், பொருள் அங்காடியில் விற்பனை முற்றுரிமையும் நிலவுகிற சூழலிலும் ஏற்படுகிறது. MRP, ARP வளைகோடுகளிடையே உள்ள இடைவெளியிலுள்ள வேறுபாடு தவிரப் பிற நிலைகளிலெல்லாம் இவ்விரு நிலைகளும் ஒப்பாக இருப்பதே இதற்குக் காரணம்.

இவ்வாறு, வேலையுடைமை அளவைத் தாக்காதவாறு கூலி மட்டத்தை உயர்த்த சில நிலைகளிலேயே தொழிற் சங்கங்களால் முடியும் என்பது தெளிவாகிறது.

தொழிற் சங்கங்களால் எல்லாத் தொழில்களிலும் ஒரே நேரத்தில் கூலிமட்டத்தை உயர்த்த முடியுமா என்ற வினு எழுப்பப்படலாம். அந் நிலையில் உற்பத்திச் செலவு பொருள்விலை, நுகர்வோர் வருமானம் ஆகியவை எவ்வாறு தாக்குறுகின்றன என்று பார்க்க வேண்டும். எல்லாத் தொழில்களிலும் கூலிவீதம் உயர்த்தப்பட்டால், வருமானங்கள் மாறுகின்றன. இதனல், நுகர்வோர் பொருள் தேவை மாறும்; இதன் விளைவாக உழைப்புத் தேவை நிலையும் மாற வேண்டும். எனவே, இங்குத் திட்டவட்டமாக எதுவும் கூற முடியாது.[1]

## குறைந்த அளவுக் கூலிகள்

கூலி மட்டங்களை நேர்மையானபடி நிறுவுவதில் இக்கால அரசு தனிக் கவனஞ் செலுத்தி வருகிறது. உழைப்பின் பேர ஆற்றல் குறைவாக இருப்பதால், அதனைச் சுரண்டுவது எளிதாயிருக்கிறது. தொழிற் சங்கங்கள் இதற்கெதிராகக் கேட்யந் தாங்குகிற போதிலும், அவற்றுக்கு ஆதரவாக அரசு வாளேந்த வேண்டிய கட்டாயம் எங்கெங்கும் ஏற்பட்டுள்ளது. இதனல்தான் குறைந்த அளவுக் கூலியைச் சட்டத்தின் வழி முடிவு செய்து, அந்த வீதத்தைத் தந்தாக வேண்டும் எனத் தொழிலதிபர்களை அரசு வற்புறுத்தி வருகிறது.

குறைந்த அளவுக் கூலியை நிறுவுவதில் தலை நீட்டுகிற முதன்மையான சிக்கல், அதனை எந்த அளவினதாக—அல்லது, எந்த மட்டத்தில்—நிறுவ வேண்டும் என்பதுதான். சுரண்டலை அகற்றுவதற்காகவே குறைந்த அளவுக் கூலிகள் நிறுவப்படுகின்றன என்று சொல்லும் போது, சுரண்டல் ஏற்படாத கூலி மட்டத்திலேயே குறைந்த அளவுக் கூலிவீதங்கள் நிறுவப்பட வேண்டும் என்றுகிறது. சேம்பர்லின் கூறுவது போல, உழைப்பின் இறுதிநிலை வருவாய் விளைபொருளை விடக் குறைவாகக் கூலிவீதம் இருக்கும் போதே சுரண்டல் நிகழ்கிறது.[2] எனவே, உழைப்பின் இறுதி வருவாய் விளைபொருள் மட்டத்தில் குறைந்த அளவுக் கூலி

[1] தொழிற் சங்கங்களின் ஆற்றல் பற்றிய நடைமுறை நிலையை ஆராய்ந்த ஆல்பெர்ட் ரீஸ் (Albert Rees) என்பவர், அமெரிக்க நாட்டில் மூன்றிலொரு பங்குத் தொழிற் சங்கங்கள் சங்கமில்லாத நிலையில் நிலவுவதை விட 15-20 சதவீதம் மிகுதியாகக் கூலியை உயர்த்தியுள்ளதாகவும், மற்ருெரு மூன்றிலொரு பங்கு 5-10 சதவீதம் உயர்த்தியுள்ளதாகவும், எஞ்சியுள்ள பங்கு எந்த அளவும்உயர்த்தவில்லை என்றும் கூறியுள்ளார்.

[2] சுரண்டல் பற்றி பிகுவும், ஜோன் ராபின்சனும் கொண்டுள்ள கருத்தை இவ்வியல் 3-ஆம் அதிகாரத்தில் பார்க்கலாம்.

வீதத்தை நிறுவ வேண்டும் என்றுகிறது. அடுத்துள்ள படத்தில் MRP இறுதிநிலை வருவாய் விளைபொருளின் போக்கைச் சுட்டு கிறது. இறுதிநிலை வருவாய் விளைபொருளும், இறுதிநிலைக் (கூலிச்)




செலவும் சமமாயிருக்கும் OM அளவு உழைப்பாளர் அமர்த்தப்படுவ தாக வைத்துக் கொள்வோம். இப்போது OP கூலிவீதமாயிருக்கும். ஆனால் இறுதிநிலை வருவாய் விளைபொருளோ OS. எனவே, உழைப்பு சுரண்டப்படுகிறது. சுரண்டலின் மொத்த அளவு PQRS. இப் போது நேர்மையான குறைந்த அளவுக் கூலிமட்டம் OS. 'MIN-W' எனக் குறித்துள்ள கோடு, இம் மட்டத்தை விட உயர்வாக விதித்தால், OM உழைப்பாளரை விடக் குறைவர்கவே அமர்த்த முடியும் என்பதையும், அதனால் வேலையின்மையே ஏற்படும் என் பதையும் சுட்டிக் காட்டுகிறது. அதே நேரத்தில், மேலும் பலர்க்கு வேலை தர வேண்டுமெனில், குறைந்த அளவுக் கூலி மட்டத்தை மேலும் தாழ்த்த வேண்டும் என்பதும் தெளிவாகிறது.

கருத்தியல் கண்ணோட்டத்தில் நாம் மேலே கண்ட முடிவு ஒரு புறமிருக்க, நடைமுறையில் குறைந்த அளவுக் கூலி மட்டத்தை நிறுவுவதில் மூன்று அடிப்படைகளைக் கையாளலாம் என ஆசிரியர் கள் கூறி வருகின்றனர்.

பெரும்பான்மை அரசுகள் இன்று கடைப்பிடித்து வரும் அடிப் படை, 'வாழ்க்கைக் கூலி' (Living Wage) மட்டமாகும். 'ஒரு நாகரிக சமுதாயத்தில் வாழ்கிற ஒரு மனித உயிர் என்ற முறையில்

சராசரித் தொழிலாளியொருவனது இயல்பான தேவைகளை அடிப் படையாகக் கொண்டது இம் மட்டம். இதன்படி, உழைப்பாளன் ஒருவனது வாழ்க்கைத் தேவைகளை நிறைவேற்றப் போதுமான அளவுக்கு வருமானம் தருகிற நிலையில் கூலி மட்டம் அமைந் திருக்க வேண்டும். பராமரிப்புக்கு மட்டும் போதுமான அளவு, உடல் நலத்தையும் தகைமையையும் பேணப் போதுமான அளவு, வசதியான வாழ்க்கைத் தரத்துக்கு ஏற்பாடு செய்யப் போதுமான அளவு-என்றெல்லாம் இந்தக் குறைந்த அளவுக்கு வெவ்வேறு விளக்கங்கள் தரப்படுகின்றன. இவற்றில் இறுதியில் சுட்டப்படுகிற அளவு முற்றிலுஞ் சிறந்தது என்பதில் ஐயமில்லை.

வேறு சிலர் 'நேர்மையான கூலி' (Fair Wage) என்ற மற்றொரு கோட்பாட்டைப் பரப்பி வருகின்றனர். மார்ஷல், பிகு போன்ருேர் இக் கோட்பாட்டின் ஆதரவாளர்கள். ஒப்பான பிற தொழில்களில் நிலவும் வீதத்தையே, குறிப்பிட்ட தொழிலிலும் குறைந்த அளவு வீதமென முடிவு செய்தால், அதுவே நேர்மையான வீதம் என்பார் மார்ஷல். ஒப்பான பிற தொழில்கள் என்று சொல்லும் போது, ஒப்பிடப்படுகிற தொழில்களிலெல்லாம் நிலவுகிற முயற்சியருமைகள் வசதியின்மைகள், வேண்டி வருகிற இயல்பான திறன், பயிற்சிச் செலவு, தொழிற்சங்க இயக்க நிலை ஆகியவெல்லாம் ஒப்பானதாக இருக்க வேண்டும். பிகுவின் கருத்துப்படி, பிற பகுதிகளிலுள்ள அதே தொழிலில் என்ன வீதம் நிலவுகிறதோ, அதனையே குறிப்பிட்ட பகுதியிலுள்ள தொழிலுக்கும் நிறுவுவதே நேர்மையாகும். தொழில் களிடையே ஒப்புமை காண மார்ஷல் பணித்தார் எனில் ஒரு தொழி லினுள்ளே, ஆனால் பல இடங்களிடையே, ஒப்புமை காண வேண் டும் எனக் கோரினர் பிகு. இருவகை விளக்கங்களும் பிற வாய்ப்புச் செலவுக் கோட்பாட்டை அடிப்படையாகக் கொண்டுள்ளன என்பது கருதத் தக்கது.

மூன்ருவதாகத் 'தொழிலின் (கூலி) தரு ஆற்றல்' (Capacity of the Industry to Pay) என்ரெரு கொள்கையு முள்ளது. குறைந்த அளவு மட்டத்தை முடிவு செய்த பின்னர், அதன்படி குறிப்பிட்ட தொழில் செயல்படும் நிலையில் இல்லையெனில் பயனில்லை. எனவே, குறைந்த அளவுக் கூலிமட்டத்தை முடிவு செய்யும் போது, அந்த வீதத்தைத் தருகிற ஆற்றல் குறிப்பிட்ட தொழிலுக்கு இருக்கிறதா என்றும் பார்க்க வேண்டும். தொழிலின் விளைதிறன், உற்பத்திச் செலவு, மொத்தச் செலவில் கூலியின் அளவு, தொழில் துணி வோனுக்குரிய இயல்பான இலாபம், உற்பத்தி முறைகள், உழைப் பின் இடத்தில் பிறகாரணிகளை ஆள்வதற்கு இருக்கும் வாய்ப்பு ஆகியவற்றையெல்லாம் அறிந்த பின்னரே தொழிலின் கூலி தரு

ஆற்றலை அளவிட்டறிய முடியும். குறைந்த அளவுக் கூலிவீதத்தின் உயர்மட்டம் இதுவாகவே இருக்க முடியும்.

குறைந்த அளவுக் கூலியை நிறுவுவதன் நன்மை தீமைகளை, இனி ஆராயலாம். குறைந்த அளவுக் கூலியை நிறுவுவதால் தொழிலாளர்க்கு நியாயமான அளவு வாழ்க்கைத்தரம் உறுதிப்படுத்தப்படுகிறது; இதனால் அவர்களுடைய திறமை மேம்பட வழி உண்டு. தொழிலாளர்களைச் சுரண்ட முயலும் தொழிலதிபர்களது செயலும் கட்டுப் படுத்தப் படுகிறது. குறைந்த அளவு கூலியைத் தர முடிகிற அளவுக்கு ஈட்டத் திறமையில்லாத தொழிலதிபர்கள் களையெடுக்கப்படுகின்றனர். இதன் விளைவாகத் தொழில் நிருவாகத் தரமும் உயர்கிறது. இவையெல்லாம் குறைந்த அளவுக் கூலியை நிறுவுவதால் ஏற்படுகிற இயல்பான நன்மைகள்.

குறைந்த அளவுக் கூலியை நிறுவுவதால் சில தீமைகளும் தோன்றலாம். இத் தீமைகளைத் தொழிலாளர், தொழிலதிபர், நுகர்வோர் ஆகிய முத்தரப்பினரதும் நோக்கி லிருந்து ஆராயலாம். மேலும், குறைந்த அளவு கூலிகள் தனியொரு தொழிலில் மட்டுமோ, அல்லது, நாடு முழுவதும் எல்லாத் தொழில்களிலுமோ நிறுவப்படலாம். இவ்விரு முறைகளின் விளைவுகளையும், மேலே கண்ட முத்தரப்பினர் நோக்கிலிருந்து ஆராய வேண்டும்.

போட்டிச் சூழலில் நிலவும் மட்டத்தை விட உயர்வாகக் குறைந்த அளவுக் கூலிகள் தனியொரு தொழிலில் மட்டும்[1] நிறுவப்படுவதாக வைத்துக் கொள்வோம். குறிப்பிட்ட அளவு கூலி தருமாறு தொழிலதிபர்களை வற்புறுத்த முடிகிற அரசால், இவ்வளவு தொழிலாளர்களை அந்த வீதத்தில் அமர்த்த வேண்டும் என்று கட்டுப்படுத்த முடியாது அல்லவா? எனவே, குறைந்த அளவுக் கூலி நிறுவப்பட்டுள்ள தொழில்களில் சில தொழிலாளர்கள் நீக்கப்பட்டு, அவர்களின் இடத்தில் திறமை மிக்க வேறு தொழிலாளர்கள் அமர்த்தப்படுவது நிகழத்தக்கதே. இதனால், பல்வேறு தொழில்களிடையே உழைப்புப் பகிர்ந்திடப்பட்டிருக்கும் முறை மாற நேரும். மேலும், அரசு நிறுவியுள்ள குறைந்த அளவை, உயர்ந்த அளவாக வைத்துக் கொண்டு நடப்புக் கூலி மட்டத்தைத் தாழ்த்தவும் தொழிலதிபர்கள் முயலலாம் உழைப்பை மிச்சப்படுத்தும் எந்திரங்களைக் கையாளவும் அவர்கள் முன்வருவர். குறைந்த அளவுக் கூலியை நிறுவுவதால் ஓரளவு வேலையின்மை ஏற்படலாம் என்பதே இவற்றின் பொருள்.

[1] தொழிற் சங்கங்கள் வலுப் பெற்றிராத தொழில்களிலும், சிற்றளவில் உற்பத்தி நடக்கும் தொழில்களிலும் தொழிலாளர் நிலை மிகவும் இழிந்திருக்கும். இவற்றை 'வருத்தும் தொழில்கள்' (Sweated Trades) என்பர். இவ்வகைத் தொழில்களில் மட்டும் குறைந்த அளவுக் கூலிகள் நிறுவுவது பல நாடுகளில் வழக்கமாக உள்ளது.

இந்நிலை இருநிலைகளில் தவிர்க்கத்தக்கதேஎன்பதையும் இங்குக் குறிப்பிட வேண்டும். மொத்த உற்பத்திச் செலவில் கூலியின் பகுதி மிகச் சிறியதாக இருக்கும் போது, கூலி உயர்வால் தொழிலதிபருக்கு ஏற்படும் நட்டத்தை ஈடுகட்டும் அளவுக்குப் பொருள் விலையைச் சிறிது உயர்த்த முடியும். தொழிலதிபர் ஒரு முற்றுரிமையாளராக வும், உற்பத்தியாகிற பொருளின் தேவை நெகிழ்ச்சியற்றதாகவும் இருந்தாலும் வேலையின்மை ஏற்படாதிருக்கும். இவ்விரு நிலைகளி லும் உயர் கூலிச் சுமை நுகர்வோன் தோள்களுக்கு இறுதியில் தள்ளி விடப்படுகிறது.

தனியொரு தொழிலில் மட்டும் குறைந்த அளவுக் கூலி நிறுவும் போது, தொழிலதிபரும் ஒரு வகையில் பாதிக்கப்படலாம். அவன், இயல்பான இலாபத்தை மட்டுமே வழக்கமாகப் பெற்றுவருகிறவ ஞக இருந்தால், கூலிச்சுமை இலாபத்தின் மீதே விழும். இத ஞல் இலாப வீதம் குறைய நேர்ந்து புதுமுதலும் புதுத் தொழில் முயற்சியும் குறிப்பிட்ட தொழிலில் புகுவது தடைப்படும்.

மேலே கண்டது போல, கூலிச்சுமையை நுகர்வோர்க்குத் தள்ளிவிட முடிந்தால் தொழிலாளர், தொழிலதிபர் இருசாராரும் பாதிக்கப்படுவதில்லை. இவ்வகை முயற்சி நிகழும்போது, இயல் பாகவே, நுகர்வோரும் பாதிக்கப்பட்டு விடுகிறுர்கள். மாற்றுப் பொருள்களோ, அயல்நாட்டுப் போட்டியோ இருக்கும்போதுதான் நுகர்வோர் இந் நிலையிலிருந்து காக்கப்படமுடியும்.

நாடு முழுவதும் எல்லாத் தொழில்களிலும் குறைந்த அளவுக் கூலிகள் நிறுவப்படுவதன் விளைவுகளை இனிப் பார்க்கலாம். இம் முறையால் நிறை பயன் அடையவேண்டுமெனில், விலை மாறுதல் களுக்குத் தக்கவாறு குறைந்த அளவுக் கூலிமட்டமும் மாறிக் கொள்ள ஏற்பாடுகள் செய்யப்படவேண்டும். விலை மட்டம் உய ரும்போது, குறைந்த அளவுக் கூலிமட்டம் உயராதிருந்தால், அதனுல் தொழிலாளர்க்குப் பயன் எதுவும் இல்லை. வேறு சொற் களில் கூறுவதானுல், குறைந்த அளவு உண்மைக் கூலியே இங்கு நிறுவப்படுவது.

இம் முறை, தொழிலாளர்களைத் தனியொரு வகையில் தாக்கு கிறது. எல்லாத் தொழிலாளர்க்கும் இந்தக் குறைந்த அளவினைத் தந்தாக வேண்டும். எனவே, ஒரு தொழிலிலிருந்து விலக்கப்பட்ட ஒருவன் வேருெரு தொழிலில் வேலை தேட முடியாது. இத்தகைய வர் நிரந்தரமாகவே வேலையின்றி இருக்க நேரும். தம்முடைய திறமையை மிகுத்துக் கொள்வதன் வழியாகவோ, அல்லது தொழி

லதிபர்களுடன் இரகசியமாகக் குறைந்த கூலி பெற்றுக்கொள்ள இணங்குவதன் வழியாகவோதான் அவர்கள் வேலை பெற முடியும்.

உழைப்பை மிச்சப்படுத்தும் எந்திரங்களைத் தொழிலதிபர்கள் ஆள்வதற்கும், இங்கு, வாய்ப்புக் குறைவு. ஏனெனில் எந்திரத் தொழிலிலும் குறைந்த அளவுக் கூலி நிறுவப் பட்டிருப்பதால், எந்திரங்களின் விலையும் உயர்வாகவே இருக்கும்.

நுகர்வோர் மீது கூலிச் சுமையை உயர் விலைகளின் வழியாகத் தள்ளிவிடவும் முடியாது. விலை உயரும்போது, குறைந்த அளவுக் கூலிமட்டமும், இங்கு, இயல்பாகவே உயர்த்தப்பட்டு விடுவது தான் இதற்குக் காரணம்.

ஆகவே, இங்கு வேலையின்மை தவிர்க்க இயலாதபடி ஏற்படும் என்றாகிறது. ஆஸ்திரேலிய நாட்டு நடை முறையும் இந்த முடிவை ஆதரிப்பதாகவே உள்ளது. இந் நிலையில் வேலை இல்லாதிருப் போரைப் பேணுவதற்கான ஏற்பாடுகளைச் செய்வது அரசின் பொறுப்பு ஆகிறது. இதற்கு நிதி திரட்டுவதற்காக வரிகளை உயர்த்தினால், அவற்றின் சுமையும் தொழிலதிபரைச் சார நேர்ந்தால், வேலையின்மை மேலும் பெருகவே வழியுண்டாகும்.

இருந்தாலும், குறைந்த அளவுக் கூலி நிறுவுவதால் தொழிலாளர்கள் பெறுவது, பெரும்பாலும், நன்மையாகவே இருக்கமுடியும். இதனைக் கீழ் வரும் உண்மைகள் விளக்கி நிற்கின்றன:

1. நிலைத்த முதல் பெரிய அளவிலிருந்து, குறிப்பிட்ட தொழிலுக்கு மட்டுமே பயன்படுகிற எந்திரங்களும் ஆளப்பட்டிருக்கும் போது, தொழிலதிபர்கள் எதுவும் செய்ய இயலாத நிலையில் உள்ளனர்: இலாப வீதம் குறைந்தாலும் தொடர்ந்து தொழிலில் இருந்தாக வேண்டிய நிலையில் அவர்கள் உள்ளனர்.

2. உயர்ந்துள்ள கூலியைத் தம்முடைய திறமையை மிகுக்கும் வழிகளில் தொழிலாளர்கள் செலவிடுவார்களானால், அவர்களுடைய இறுதிநிலை வினை திறன் உயரமுடியும். இதனால், இலாபத்தின் செலவில் தான் கூலி உயரவேண்டும் என்ற நிலை தோன்றாது.

3. தம்முடைய ஏழைமையாலும், தம் இனத்துக்கென ஒருமித்த அமைப்பு எதுவும் இல்லாததாலும், தொழிலாளர் முன்பு சுரண்டப் பட்டிருக்கலாம். இந் நிலையில் குறைந்த அளவுக் கூலிகள் நிறுவப்படுவதால், அவர்கள் வேலை இழக்க நேர்வதில்லை.

4. தொழிலாளர்க்கான வேலையின்மைக் காப்பீட்டு ஏற்பாடுகள் செய்யப் பட்டிருக்குமானால், தொழிலாளர்கள் மிகுதியாகப் பாதிக்கப்படுவதில்லை. செல்வந்தரே சுமைதாங்கிகள் ஆகின்றனர். அப்போது, செல்வந்தரிடமிருந்து ஏழையர்க்குச் செல்வத்தை மாற்றித் தர உதவுவதன் வழியாக, குறைந்த அளவுக் கூலி சமூகப் -பொருளியல் நீதி நிலவவும் வகை செய்வது ஆகிறது.

## கூலிகளும் வேலையுடைமையும்

கூலி மட்டமே வேலையுடைமை மட்டத்தை நிருணயிக்கும் அடிப்படைக் காரணி என்பது தொன்மைப் பொருளியலாளர் கருத்து. ஒரு போட்டிப் பொருளியல் அமைப்பில் உழைப்புத் தேவையும், உழைப்பின் அளிப்பும் கூலி மட்டத்தை நிருணயிக்கின்றன. அந் நிலையில் நிரந்தரமான வேலையின்மை தோன்ற வழியில்லை. உழைப்புத் தேவைக்கு எச்சமாக உழைப்பின் அளிப்புத் தோன்றி, வேலையின்மை ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஏற்படுமானால், அங்காடியில் கூலிவீதம் குறைய முற்பட்டு, இறுதியில் தேவையும் அளிப்பும் சமமாகி, 'நிறைவுறு வேலையுடைமை' (Full Employment) ஏற்பட்டு விடும் என்பது அவர்கள் கருத்து. இந்தச் சூழ்நிலையில், வேலையின்மை நெடுங் காலம் நிலவுகிறதெனில், உழைப்பங்காடியிலுள்ள நிறைகுறைத் தன்மைகளே அதற்குக் காரணமாக இருக்க முடியும்.

வேலையின்மை நிலவும் தொழில் மந்த நிலைக்குத் தீர்வு வழி பொதுக் கூலிவீதம் குறைக்கப்படுவதுதான் என்ற கருத்து இங்குத் தோன்றுகிறது. கூலிவீதம் குறைக்கப்படும் போது, உற்பத்திச் செலவு இறங்கும்; உற்பத்திச் செலவு இறக்கத்தைத் தொடர்ந்து பொருள் விலையும் இறங்கும். விலை குறைவு தேவை அளவை உயர்த்தும். இயல்பாகவே, உற்பத்தியும் வேலையுடைமையும் பெருகிச் செல்லும்.

உற்பத்திச் செலவுக் குறைவு உற்பத்திப் பெருக்கத்தைத் தூண்டுவதற்குக் காரணம், கூலிக் குறைவு இலாபப் பெருக்கத்திற்கு வழி வகுப்பதுதான். பணக் கூலி குறைக்கப்படும் போது, உண்மைக் கூலியும் குறைந்து செல்லும் என்பது தொன்மைப் பொருளியலாளர் எடுகோள்களில் ஒன்று.

இக்கோட்பாட்டைக் கடுமையாகக் குறை கூறியவர் கெயின்ஸ். கூலிவீதக் குறைப்பால், ஆயத்தநிலைத் தேவையில் ஏற்படும் மாறுதல்களைச் சிந்திக்கத் தொல்லோர் தவறிவிட்டனர் என்பதே கெயின்ஸ் சுட்டும் அடிப்படைக்குறைபாடு. குறிப்பிட்ட ஒரு தொழிலில் கூலிவீதம்

குறைக்கப்பட்டால், அது உற்பத்தி செய்யும் பொருளின் தேவை குறையாத வரை, அங்கு மட்டும் வேலையுடைமைபெருகிச் செல்லலாம். ஆனால், நாடெங்கும் உழைப்பாளர் அனைவரதும் கூலிவீதம் குறைக்கப்பட்டால் ஏற்படுகிற நிலை வேறு. பொதுவான ஒரு கூலிக் குறைப்பு உழைப்பாளருடைய வாங்குந் திறனைக் குறைக்கிறது. இதனால், அவர்களுடைய பொருள் தேவையும் குறைகிறது. இத் தேவைக் குறைவு வேலையின்மைக்குக் காரணமாக முடியும்.

மேலும், பணக் கூலி குறையும்போது, உண்மைக் கூலியும் குறையும் என்ற எடுகோளும் ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று. கூலி குறைக்கப்பட்டுள்ள அதே வீதத்தில் விலையும் குறையும் என்பது கெயின்ஸின் கருத்து. இந்நிலையில் இலாபம் உயர வழியில்லை. ஆதலால், உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என்ற ஆர்வத்தைத் தொழில் துணிவோரிடம் எதிர்பார்க்க முடியாது. இதனால் வேலையுடைமை பெருகுவதற்கு வாய்ப்பு இல்லாமலாகிறது.

ஆயத்தநிலைத் தேவையே வேலையுடைமையைக் கட்டுப்படுத்துகிறது என்பது கெயின்ஸின் அடிப்படைக் கோட்பாடு. மக்களுடைய செலவீடுகளின் வழியாகத்தான் இந்த ஆயத்த நிலைத் தேவை செயல்படுகிறது. நுகர்வுத் தேவை, முதலீட்டுத் தேவை என ஆயத்த நிலைத் தேவையை இருவகைப்படுத்தலாம். நுகர்வுத் தேவையானது மக்களுக்கு நுகர்வின் மீதுள்ள மனச் சார்பைப் பொருத்திருக்கிறது. முதலீட்டுத் தேவையோ முதலின் இறுதிநிலைத் திறமையையும் வட்டி வீதத்தையும் பொருத்துள்ளது.[1] ஆக, நுகர்வின் மீதுள்ள மனச்சார்பு, முதலின் இறுதிநிலைத் திறமை ஆகியவை உயரும் போதும், வட்டி வீதம் குறையும் போதுமே வேலையுடைமை வளர முடியும். இம் மூன்றையும் கூலிக் குறைப்பு எவ்வாறு பாதிக்கிறது என்பதையும் கெயின்ஸ் விளக்கி உள்ளார். ஏழையராகிய கூலி ஈட்டுவோரிடமிருந்து, வாரம், வட்டி, இலாபம் போன்றவற்றை ஈட்டும் செல்வந்தர் கைக்கு வருமானமானது மாறிச் செல்ல கூலிக் குறைப்பு காரணமாகிறது. முந்தியவரிடம் நுகர்வின் மீதுள்ள மனச் சார்பு மிகுதியாகவும், பிந்தியவரிடம் அது குறைவாகவுமே இருக்கும். எனவே, கூலிக் குறைப்பால் ஏற்படும் வருமானக் கை மாற்றம் ஆகமொத்த நுகர்வைக் குறைப்பதாகவே அமைந்து விடுகிறது ; இதன் பொருள் வேலையுடைமை பெருக வாய்ப்பில்லை என்பதுதான். ஒரு முதலாளித்துவ அமைப்பில் எந்தவொரு கூலிக் குறைப்பும் நிலைபேறாக இருக்க முடியாது ; ஒருமுறை குறைக்கப்பட்ட கூலி மீண்டும் குறைக்கப்படலாம் என்ற நிலை நிலவுமானால்,

[1] கெயின்ஸின் வேலையுடைமைக் கோட்பாட்டை பகுதி VI-இல் காண்க.

புதிய முதலீடுகளை இட எவரும் உடனடியாக முன்வருவதில்லை. இதனால், முதலின் இறுதிநிலைத் திறமை குறைகிறது ; வேலையுடைமையும் பெருக வழியில்லை. கூலிக் குறைப்பு கொடுக்கல் வாங்கல் ஊக்கியை [1] ஒட்டிய பணத் தேவையைக் குறைக்கும். இதனால், ஊகவணிக ஊக்கியை ஒட்டிய பண அளிப்புப் பெருகலாம்; வட்டி வீதமும் இறங்கலாம்; அதனையொட்டி முதலீடும் வேலையுடைமையும் பெருக வழியுண்டு. இருந்தாலும், வட்டிவீத மாறுதல்களைக் கொண்டுவரக் கூலிக் குறைப்பு வழியை விட, நன்கு செயல்படுகிற பணக் கொள்கை வழி ஒன்றே சிறந்ததாக இருக்க முடியும். கூலிக் குறைப்பு வழி தொழிற்சங்கங்களால் வன்மையாக எதிர்க்கப் படும் என்பதை எண்ணும் போது பணக் கொள்கையின் சிறப்புத் தெளிவாகும்.

கூலிவீதக் குறைப்பு வேலையுடைமையைப் பெருக்காது என்று கெயின்ஸ் கூறும் போது, கூலிவீத உயர்வை அவர் ஆதரிக்கிறாரோ என்ற வினா எழுப்பப் படலாம். உண்மையில், கூலிவீத உயர்வை கெயின்ஸ் ஆதரிப்பவர் அல்லர். கூலி உயர்வு, கூலி ஈட்டுவோர் கைகளில் மிகுதியான அளவு வாங்குந் திறனைச் சேர்ப்பிப்பது உண்மையே ; ஆனால், உயர் கூலிவீதம் தொழிலாளர் வாங்கும் பொருள்களின் விலையையும் உயர்த்துகிறது. இதனால், தொழிலாளர் உண்மைக் கூலி மாறாது இருக்கும் ; ஆயத்த நிலைத் தேவையும், வேலையுடைமையும் கூட மாறாது இருக்கும். கூலி உயர்வு தொழிலாளர் வருமானத்தைப் பெருக்குவதன் வழியாக மொத்தச் செலவீட்டைப் பெருக்க உதவத் தக்கதே. ஆனால், கூலி உயர்வு இலாப வாய்ப்புக்களைப் பாதிப்பதால், முதலின் இறுதி நிலைத் திறமையும் பாதிக்கப்படும். இதுபோன்றே, கொடுக்கல் வாங்கலுக்கான பணத் தேவை மிகுவதை யொட்டி, வட்டிவீதமும் உயர வகை உண்டு. இவற்றாலும் முதலீடு, வேலையுடைமை ஆகியவை பாதிக்கப்படுகின்றன. எனவே, கூலி உயர்வு வேலையுடைமையைப் பெருக்காது என்பதே கெயின்ஸின் கருத்து.

உண்மையில், கெயின்ஸ், வேலையுடைமையின் தொடர்பாக விரும்புவது கூலிக் குறைப்போ, கூலி உயர்வோ, இரண்டுமோ அன்று; பணக் கூலியை அப்படியே விட்டு வைத்திருப்பதே அவர் விரும்பும் கொள்கை.

தற்கால ஆசிரியர்கள் கெயின்ஸின் வேலையுடைமைக் கோட்பாட்டை ஏற்றுக் கொள்கிற போதிலும், அதில் ஒரு சில திருத்தங்களையும் கொணர்ந்துள்ளனர். வேலையுடைமையும் உற்பத்தியும்

[1] கெயின்ஸின் வட்டிக் கோட்பாடு பார்க்க.

வளரும் போது, இறுதிநிலை உற்பத்திச் செலவு வளர்வதால் பொருள் விலையும் உயரமுற்படும். இதன் விளைவாக, உண்மைக்கூலி குறையும் என்பது கெயின்ஸின் கருத்து. உண்மைக் கூலியையோ வாழ்க்கைத் தரத்தையோ குறைக்காமலே வேலையுடைமையைப் பெருக்க முடியும் என்பது தற்கால ஆசிரியர்கள் கருத்து. உற்பத்தியாளர்கள் பொருள்களின் விலையைத் திட்டப்படுத்தும் போது, முழுச் செலவுக் கொள்கையைத் தான் கடைப்பிடிப்பது வழக்கமாக உள்ளது; உற்பத்தி பெருகும் போது, குறிப்பிட்ட கட்டம் வரை விலையைக் குறைத்துச் செல்ல முடியும். மேலும், தொழில் அமைப்பு, உற்பத்தி வினை முதலியவை மாறிச் செல்லும் இந்நாளைய உலகில் வளர்ந்து செல்லும் இறுதிநிலை உற்பத்திச் செலவை ஒரு நிலை வரை புறங்காண முடியலாம். இறுதிநிலை உற்பத்திச் செலவு வளைகோடுகள் நீண்டதோர் அளவு உற்பத்தி மட்டத்தில் தட்டையாகவே இருக்கும் என்ற உண்மையையும் இங்குக் கவனிக்க வேண்டும்.

## நிறைவுறு வேலையுடைமையும் வேலையின்மையும்

தொன்மைப் பொருளியலாளர் நோக்கில் நிறைவு வேலையுடைமையே இயல்பான நிலை; வேலையின்மை ஒரு விதிவிலக்கே ஆகும். ஒரு முதலாளித்துவ அமைப்பில் ஆயத்த நிலைத் தேவைப் பற்றுக் குறையை யொட்டிக் 'கட்டாய வேலையின்மை' (Involuntary unemployment) தோன்றும் என்பது கென்ஸின் கருத்து.

'தன்னிச்சையான வேலையின்மை' (Voluntary unemployment) கட்டாய வேலையின்மை, என வேலையின்மையை இருவகைப் படுத்துவார் கெயின்ஸ். மக்கள் தாமாகவே வேலையின்மையை வலிந்து ஏற்றுக் கொள்ளும் நிலையே தன்னிச்சையான வேலையின்மை. 'சோம்பேறிச் செல்வந்தனும்' 'மந்தமான ஏழையும்' இவ்வகையினர். வேலை செய்யச் சித்தமாக இருந்தும், வேலை கிடைக்கப் பெறுமல் இருப்போரே கட்டாய வேலையின்மைக்கு ஆளாகியுள்ளவர்கள்.

கட்டாய வேலையின்மை பல வகைப்படும். துறைமுகங்களில் கப்பல் போக்கு வரவு இல்லாத காலங்களில் துறைமுகச் சுமைத் தொழிலாளர்க்கு வேலை இருப்பதில்லை. இது 'தற்செயலான வேலையின்மை' (Casual unemployment) எனப்படும். விவசாயம், வீடு கட்டுதல் முதலிய தொழில்களில் சில பருவங்களில் வேலை செய்ய முடியாது. இது, 'பருவக்கால வேலையின்மை' (Seasonal unemployment) ஆகும். பொருளின்—தேவை அளிப்புச் சூழல்கள்

திடீரென மாறுவதாலோ, பொருளாதார அமைப்பில் சரியான ஒருங்கிணைப்பு இல்லாத காரணத்தாலோ தற்காலம் வேலையின்றி இருக்க நேரலாம். இது 'பிறழ்ச்சிகாரண வேலையின்மை'(Fictional unemployment) எனப்படும். தொழிலாளிப் பெயர்ச்சியின்மை, கச்சாப் பொருள் பற்றுக்குறை, எந்திரங்கள் கோளாறு முதலியவை இதற்குக் காரணமாகலாம். பொருளியல், தொழிலியல், அரசியல் மாறுதல்களைத் தொடர்ந்து தோன்றும் வேலையின்மை 'நுட்பத் தொழிலால் வேலையின்மை' (Technological unemployment) ஆகும். மாட்டு வண்டியின் இடத்தில் உந்து வண்டி தோன்றுவது போன்ற புதிய தொழில்கள் தோற்றம், கையுழைப்புக்குப் பதிலாக எந்திரங்கள் ஆளப்படுதல் முதலியவை இவ்வகை வேலையின்மைக்குள் காரணமாகும். தேவைக்கு எச்சமாக உழைப்பாளர் குறிப்பிட்ட தொழிலில் ஈடுபடும் போது தோன்றும் நிலையைக் 'குறைவுறு வேலையுடைமை' (Under employment) என்றும் 'கரந்துறை வேலையின்மை' (Disguised unemployment) என்றும் சொல்வதுண்டு. நிலம், முதல் போன்ற துணைக் காரணிகள் பற்றுக் குறையாலும், நன்கு பரந்த தொழில் வகைப்பாடு இல்லாத சூழலில் மக்கள் தொகை மிக வேகமாக வளர்ந்து செல்வதாலும், கரந்துறை வேலையின்மை விளையும். வணிகச் சகடங்கள் தொடர்பாகத் தொழில் மந்தத்தின் போது ஏற்படும் வேலையின்மை வணிகச் 'சகடத்தால் வேலையின்மை' (Cyclical unemployment) எனப்படும்.

வேலையின்மையின் விளைவுகள் சமூக நலனுக்கு ஊறுசெய்பவையே. நாட்டின் உற்பத்தி ஆற்றல் வீணாக்கப்படுவது வேலையின்மையின் முதல் விளைவு. வேலை யில்லாதிருப்போர் வேலையில் ஈடுபடுத்தப் பெற்றால் நாட்டின் உற்பத்தி மேலும் வளர முடியும். வேலையின்மையால் ஏற்படும் மனக் கசப்பு தொழிலாளியை ஆபத்தானவன் ஆக்குகிறது: புரட்சிகள் பலவற்றின் நிலைக்களன் வேலையின்மை ஆகவே உள்ளது.

வேலையின்மைக்குப் பல பரிகாரங்கள் பரிந்துரைக்கப்பட்டு உள்ளன.

கூலிவீதக் குறைப்பு வேலையின்மைக்கு ஒரே பரிகாரம் என்பர் தொன்மைப் பொருளியலாளர். கருத்தளவிலும், செயலளவிலும் இவ்வழி ஏற்றுக்கொள்ளத் தக்கதன்று. தற்காலிகத் தொழிலாளர்களை நிரந்தரத் தொழிலாளராக மாற்ற முடிந்தால், தற்செயலான வேலையின்மை இல்லாமலாகும். உழைப்பாளர்க்குத் துணைத் தொழில்களுக்கு ஏற்பாடு செய்துகொடுப்பதன் வழியாகப் பருவக்கால வேலையின்மையைப் போக்கலாம். பிறழ்ச்சிக்காரண வேலையின்மையை

அகற்றுவதில் வேலைத் தகவல் நிலையங்கள் உதவி செய்யமுடியும். வணிகச் சகட வேலையின்மைக்குப் பொருத்தமான பண, கருவூலக் கொள்கைகளைக் கடைப்பிடிப்பதே பரிகாரமாகும்.

வேலையின்மைக்குப் போக்குவழி நிறைவுறு வேலையுடைமையை அடைவதுதான் என்பார் கெயின்ஸ். வேலையின்மையே இல்லாதிருக்கும் நிலையே நிறைவுறு வேலையுடைமை என்று இல்லை. நிறைவுறு வேலையுடைமை நிலவும் போது தன்னிச்சையான வேலையின்மை, பருவக்கால வேலையின்மை, தற்செயலால் வேலையின்மை, நுட்பத் தொழிலால் வேலையின்மை, பிறழ்ச்சி காரண வேலை இன்மை ஆகியவை நிலவலாம். சாரசரி 3 சதவீத வேலையின்மை நிலவுவது நிறைவுறு வேலையுடைமைக்கு எதிரானதல்ல என்பார் பெவரிட்ஜ் (Beveridge). இதன் தொடர்பான கெயின்ஸின் விளக்கம் முற்றிலும் புதியது: ஆயத்த நிலைத் தேவை விரியும்போது உற்பத்தி எவ்வளவு நெகிழ்ந்து கொடுக்கும் என்பதன் தொடர்பாகவே, நிறைவுறு வேலையுடைமைக்குப் பொருளிலக்கணம் வகுத்துள்ளார் அவர். ஆயத்த நிலைத் தேவை விரியும்போது, உற்பத்தியும் வேலையுடைமையும் விரிவடையாமல், விலைமட்டம் மட்டுமே உயர்ந்து செல்லும் நிலையே நிறைவுறு வேலையுடைமை என்பார் கெயின்ஸ்.

ஆயத்த நிலைத் தேவையே வேலையுடைமையைக் கட்டுப்படுத்துகிறது என்பது கெயின்ஸின் அடிப்படைக் கோட்பாடு.[1] மக்களுடைய செலவீடுகளின் வழியாகத்தான் இந்த ஆயத்த நிலைத் தேவை செயல்படுகிறது. நுகர்வுத் தேவை, முதலீட்டுத் தேவை என ஆயத்த நிலைத் தேவையை இரு கூறுக்கலாம். இவ்விரு தேவைகளையும் பெருக்கும் வழிகளே வேலையுடைமையையும் பெருக்கும் வழிகளாக இருக்க முடியும்.

இந்நிலையில், நிறைவுறு வேலையுடைமையைக் கொணரும் வழிகள் கீழ்வருனவாகவே இருக்க முடியும் : நுகர்வுச் செலவீட்டை மிகுக்கும் வகையில் செல்வந்தரிடமிருந்து ஏழையர் கைக்கு வருமானத்தை மாற்றித்தர வேண்டும். செல்வந்தர் மீதுள்ள நேர்முக வரிகளை உயர்த்துவது, ஏழையர் மீதுள்ள மறைமுக வரிகளைக் குறைப்பது, வசதியற்றவர்களுக்கு உதவித் தொகை நல்குவது போன்ற வழிகளில் இது முடியும். முதலீட்டுச் செலவை மிகுப்பதற்கு வேறு வழிகள் உள்ளன. வட்டி வீதத்தையும் வருமானவரி வீதத்தையும் குறைப்பதன் வழியாகத் தனியார் முதலீட்டை ஊக்குவிக்கலாம். பற்றுக்குறை நிதியாக்கத்தின் வழியாக அரசும் தன்னுடைய செலவைப் பெருக்கலாம்.

[1] கெயின்ஸின் வேலையுடைமைக் கோட்பாட்டை-பகுதி VI-ல் காண்க.

கெயின்ஸின் நிறைவுறு வேலையுடைமைக் கோட்பாட்டில் சில குறைகளும் இல்லாமல் இல்லை. இக் கொள்கைப்படி செயலாற்ற வேண்டுமெனில், முற்றுரிமைகளை அரசு கட்டுப்படுத்தியாக வேண்டும்; தொழிற் சங்கங்களின் செயலைக் கூடக் கட்டுப்படுத்த வேண்டும். இவற்றால் பொருளியல் செய்கைகளில் அரசுத் தலையீடு மிகுதியாகும். பற்றாக்குறை நிதியாக்கி அரசு செலவிடுவதிலும் ஆபத்துக்கள் பல உள்ளன.

# 7. வட்டி

முதலின் பணிக்காகத் தருகிற ஊதியமே வட்டி. பணப் பொருளாதார அமைப்பில் பணக் கொடுக்கல் வாங்கல்களிலிருந்து வட்டி தோன்றுகிறது. எனவே, குறிப்பிட்ட காலத்துக்கு (வழக்கமாக ஓராண்டுக்கு)க் கடனுகக் கொடுக்கப்படும் தொகையின் சதவீதமாக வட்டியானது கணக்கிடப்படுகிறது.

வட்டி என்று வழக்கமாகச் சொல்வதில், இரண்டு உட்பகுதிகள் இருப்பதாக மார்ஷல் கருதுகிருர். முதலின் ஈட்டம் ஒரு பகுதி; மற்ருெரு பகுதி கொடுக்கல் வாங்கலிலுள்ள நட்ட ஆபத்திற்கான ஈடு, அதிலுள்ள வசதிக் குறைவுக்கான ஊதியம், நிருவாகச் செலவுகள் முதலியவற்றை உட் கொண்டது. இவற்றில் முதற் பகுதியை நிகர வட்டியென்றும், இரண்டாவது பகுதியை, அத்துடன் சேர்த்தால் கிடைப்பது மொத்த வட்டி என்றும் மார்ஷல் கருதுகிருர்.

வட்டியின் இயல்பை இனிப் பார்க்கவேண்டும். கிரேக்கப் பேரறிஞர் அரிஸ்டாட்டில் முதல் இடையிருட் காலம் வரை வட்டி வாங்குவது தவறு என்ற கருத்தே பொதுவாக நிலவி வந்தது. பணமோ வெறும் இடையீட்டுப் பொருள்; அதனுல், குட்டிபோட முடியாது. எனவே, வட்டி கோருவது நேர்மையற்ற செயல் என அந் நாளையச் சிந்தனையாளர்கள் முடிவு கட்டினர். கடுவட்டி வாங்குவதைத் தடை செய்யும் சட்டங்கள் அன்று ஐரோப்பிய நாடுகளிலெல்லாம் நிலவி வந்தன. வட்டித் தொகையாகக் கடன் முதலின் இரு மடங்கைக் கொடுத்துவிட்டால், அதன் பின்னர் கடன் முதலைத் திருப்பித்தர வேண்டியதில்லை என்ற ஏற்பாடு நம்நாட்டில் பெருவழக்காக இருந்து வந்தது. ஆனுல் 18-ஆம் நூற்ருண்டில் தோன்றிய தொழிற்புரட்சி வட்டி பற்றிய கருத்துக்களை மாற்றியது. முதல் விளை திறன் மிக்கது என்ற உண்மையைத் தொழிற் புரட்சி தெளிவாகப் புலப் படுத்தியது. முதலை ஆண்டு, மிகுதியாக உற்பத்தி செய்ய முடியும் என்ற உண்மை, வலிமை பெற்றதும் முதலின் ஆட்சிக்கு வட்டி கோருவதில் தவறில்லை என்ற கருத்தும் தலை நீட்டியது.

ஆனால், மார்க்ஸீயக் கருத்தினர், இன்னும் உழைப்பே, மதிப்பின் தோற்றுவாய் என வலியுறுத்தி வருகின்றனர். இவர்கள் கருத்துப்படி நாட்டு வருமானம் உழைப்பாளர்க்கு மட்டுமே உரியது; எனவே, வட்டி, வாரம், இலாபம் முதலியவற்றுக்கு இடமேயில்லை. இவ்வாறு, வட்டி, இலாபம் போன்றவை நேர்மையான ஊதியம் அல்ல, கொள்ளையடித்துப் பெறும் வருமானங்களே என்பது மார்க்ஸீயவாதிகள் கருத்து.

மேலும், சமதரும அமைப்பில் எவருக்கும் வட்டி தரவேண்டியதில்லை. ஏனெனில், அவ்வமைப்பில் சேமிப்புக்கள் அரசின் ஆணையின்கீழ் வருகிற கூட்டுச் சேமிப்புக்களாகவே இருப்பதால், எவருக்கும் வட்டியெதுவும் தரவேண்டியதில்லை.

இதனால், சமதரும அமைப்பில் வட்டிக் கோட்பாட்டுக்கு இடமேயில்லையென முடிவு கட்டிவிடலாகாது. நாட்டு வளங்கள் அரியனவாயிருப்பதும், அவற்றை ஆள்வதற்கான வழிவகைகள் எல்லையற்றிருப்பதும் சமதரும அமைப்புக்கும் பொதுவானதே. இந்நிலையில், இருக்கிற வளங்களை அவற்றின் தராதர வருவாய் வாய்ப்புக்களின் அடிப்படையில் முதலீடு செய்ய வேண்டும். முதலில் வருவாய் வாய்ப்பு மிக்குள்ள துறையிலும், பின்னர் வருவாய் வாய்ப்புக் குறைந்த துறைகளிலுமாக முதலீடு செய்ய வேண்டும். இவ்வாறு செயல்பட பல்வேறு முதலீட்டுத் துறைகளின் தராதர வருவாய் வாய்ப்புக்களை அளந்தறிய வேண்டும். இந்த வருவாய் வாய்ப்புக்களின் மற்றொரு பெயர்தானே வட்டி என்பது ?

## வட்டிக் கோட்பாடுகள்

### நுகர்வுத் தவிர்ப்புக் கோட்பாடு

பொருளின் மதிப்பு அதன் உற்பத்திச் செலவுக்குச் சமமாயிருக்குமெனக் கருதி வந்த தொன்மை மரபினர் முதலின் மதிப்பும் அதன் உற்பத்திச் செலவையே பொருத்திருக்கிறதென முடிவு கட்டி வந்தனர். ஸீனியர், தொன்மை மரபினரின் வட்டிக் கோட்பாட்டை விளக்கியவர்களில் குறிப்பிடத் தக்க ஒருவர். சேமிப்பை யொட்டியது முதலின் உற்பத்தி. சேமிப்போ நிகழ்காலத்தில் நுகராதிருந்தால் தான் கைவரும். எனவே, நுகர்வைத் தவிர்ப்பதன் வழியாகத்தான் முதலை ஆக்க முடியும். இந்த நுகர்வுத் தவிர்ப்பு ஒரு துறவாகும். இந்த துறவைப் புரிய மக்களைத் தூண்டுவதற்காகத் தருகிற ஊதியமே வட்டி என்பார் ஸீனியர்.

'நுகர்வத் தவுர்ப்பு' (Abstinence) என்று சொல்லும்போது, ஏதோ தகாத ஒன்றைத் தவிர்ப்பதாக ஒரு கருத்து, அங்கே தொக்கி

நிற்கின்றது. உண்மையில் நுகர்வு தகாதவொன்றன்று. அதனைத் தவிர்ப்பதும் இன்றியமையாத அறமன்று. மேலும், இலட்சாதிபதிகள் சேமிக்கும்போது, அவர்கள் வாயைக் கட்டி வயிற்றைக் கட்டி—நுகர்வைத் தவிர்ப்பதன் வழியாகத்தான்—சேமிக்கிறார்கள் எனச் சொல்ல முடியாது.

எனவே, 'நுகர்வுத் தவிர்ப்பு' என்ற சொற்றொடருக்குப் பதிலாகக் 'காத்திருத்தல்' (Waiting) என்ற சொற்றொடரை ஆள்வது பொருத்தமாய் இருக்கும் என்றார் மார்ஷல். செல்வத்தை உடனடியாக நுகர்வதற்குப் பதிலாக, அதனைச் சுற்று வழிகளில் ஆள்வதில் ஆதாயம் மிகுதி. இந்தச் சுற்று வழிகள் காலச் செலவுள்ளன. எனவே, உடனடியாக நுகர்வதற்குப் பதில் 'காத்திருக்க' வேண்டி ஏற்படுகிறது. இவ்வாறு, காத்திருக்கத் தூண்டுவதற்குத் தருகிற ஊதியமே வட்டி என்பார் மார்ஷல்.[1]

நுகர்வுத் தவிர்ப்புக் கோட்பாட்டில் கண்ட அறத்தின் கூறு மார்ஷலின் புதிய கோட்பாட்டில் இல்லை. இருந்தாலும், இரண்டு கோட்பாடுகளும் ஒரே அடிப்படையையே கொண்டுள்ளன. இரண்டு கோட்பாடுகளும் வட்டியை முதலின் அளிப்புக் கோணத்திலிருந்தே ஆய்கின்றன. முதலின் தேவையிலும், உற்பத்தித் திறமையிலும்[2] போதிய கவனஞ் செலுத்த அவை தவறிவிட்டன. இதுவே இக் கோட்பாடுகளின் அடிப்படைக் குறைபாடு. இக் குறைபாடு எல்லா உற்பத்திச் செலவுக் கோட்பாடுகளுக்கும் பொதுவானது.

காத்திருத்தல் கோட்பாடு சொல்லும் அடிப்படை உண்மையொன்று இங்குத் தனியாகக் குறிப்பிடத்தக்கது. 'காத்திருத்தல்' என்ற சொல்லைப் பரந்த பொருளில் ஆண்டால், இவ் வுண்மை புலப்படும். அரியனவாயுள்ள வளங்களை, நுகர்வுப் பொருளை உற்பத்தி செய்வதிலோ, அல்லது முதல் கருவிப் பொருள்களை உற்பத்தி செய்வதிலோ ஆளமுடியும். ஆதலால், முதல் கருவிப் பொருள்கள் உற்பத்தியைப் பெருக்க வேண்டுமெனில், அந்த அளவுக்கு நுகர்வுப் பொருள்களின் உற்பத்தியைச் சுருக்கியாக வேண்டும். நுகர்வுப் பொருள்களைப் பின்னர் மிகுதியாக உற்பத்தி செய்வதற்காகத்தான், குறிப்பிட்ட காலத்தில் முதல் கருவிப் பொருள்கள் உற்

[1] 'காத்திருத்தல்' என்ற சொல்லுககுப் பதிலாக 'அடங்கியிருத்தல்' (Forbearence) என்ற சொல்லை ஆள்கிறார் ஸெலிக்மன்.

[2] காத்திருக்கும்போது செயலெதுவும் நிகழவில்லை என்றும், செயல்புரியாதிருக்கும்போது எதுவும் உற்பத்தியாகாதென்றும், எனவே, 'காத்திருத்தல்' என்பதற்குப் பதிலாகத் 'திரட்சி' (Accumulation) என்ற சொல்லை ஆளலாம் என்றும் கானன் கூறுவார்.

பத்தி செய்யப் படுகின்றன: ஆனல் அக் காலத்தில் நுகர்வுப் பொருள்களின் உற்பத்தியைச் சுருக்கியாக வேண்டும். இவ்வாறு 'காத்திருக்க' வேண்டியதன் சிறப்புப் புலப்படுகிறது.

## இறுதிநிலே விளைதிறன் கோட்பாடு

கார்ல் மெங்கர் போன்ற ஜெர்மானிய ஆசிரியர்கள் வட்டி தரக் காரணம் முதல் விளைதிறன் உள்ளதாக இருப்பதுதான் எனக் கருதினர். முதலை ஆளும்போது, முதலை ஆளாமல் உற்பத்தி செய்வதை விட மிகுதியாக உற்பத்தி செய்ய முடிகிறது. கிடைக்கிற முதல் முழுதையும் சம அளவில் பயன் தருகிற துறைகளில் ஆண்டு கொண்டே இருக்க முடியாது. குறிப்பிட்டவொரு நிலைக்கு அப்பால் முதலின் இறுதிநிலை விளைதிறன் குறைந்து செல்வதைத் தவிர்க்க முடியாது. குறைந்து செல் விளைவு இதற்கொரு காரணம். தொழில்களெல்லாம் சமமான உற்பத்தித் திறமை கொண்டவையல்ல என்பது மற்ரெரு காரணம். இதனல், முதலின் பணிக்காகத் தருகிற வட்டி, அதனை ஆண்டு உள்ள இறுதிநிலைத் துறையை, அல்லது நடப்பு அளிப்பின் இறுதிநிலை அலகை ஆண்டு உள்ள துறையைப் பொருத்துள்ளது. வட்டியானது முதலின் இறுதிநிலை விளைதிறனல் முடிவு செய்யப் படுகிறது என்பதே இதன் பொருள்.

இக்கோட்பாட்டை பிஷர் போன்ரேர் மிக வன்மையாக மறுத்துள்ளனர்:

கடன் வாங்குவது உற்பத்தி செய்வதற்காக மட்டுமல்லாது, சில நேரங்களில் நுகர்வதற்காகவும் நிகழ்கிறது. நுகர்வுக்காகக் கடன் வாங்குவோர் வட்டி தர இசைபவர்களாகவும் இயல்பவராகவும் உள்ளனர். இத்தகைய நுகர்வுக் கடன்களுக்கு வட்டி தருவது ஏன் என்ற வினவுக்கு இக்கோட்பாடு விடை தரும் நிலையில் இல்லை.

உருவ அருவப் பொருள் உற்பத்தியை முதல் மிகுக்க வல்லதே. ஆனல், அது மதிப்பை மிகுத்தாக வேண்டிய கட்டாயமில்லை. விளை பொருளின் அளவு மிகுந்தால் அதன் மதிப்பும் விலையும் குறைந்தும் போகலாம். மேலும், எவ்வளவு மதிப்பு உற்பத்தியாகியுள்ளது என்பதைக் கணக்கிட்டறிய வேண்டுமானலும் முதலாவதாக அவ்வுற்பத்தியில் ஆளப்பெற்றுள்ள முதலின் மதிப்பை அறிந்தாக வேண்டும். முதல் கருவிப் பொருள்களின் நிகழ்கால மதிப்பு அவற்றின் எதிர்கால வருமானங்களைச் சார்ந்துள்ளது. இந்தச் சார்பு நிலையிலேயே வட்டிவீதம் தொக்கி நிற்கிறது என்பதைக் கவனிக்க வேண்டும். எந்திரமொன்று இருப்பதாக வைத்துக் கொள்வோம். இதன் மதிப்பை அளக்க வழக்கமாகக் கையாளும் வழி இதுதான். அந்த

எந்திரத்திலிருந்து ரூ. 1,000 வருமானம் கிடைக்குமென்று அறிந்தால், உடனே, அங்காடியில் வட்டி வீதம் எவ்வளவு எனச் சிந்திக்கிறோம். வட்டி, 5% என்றிருந்தால், உடனே எந்திரத்தின் விலை ரூ. 20,000 என்று கணக்குப் போட்டு விடுகிறோம். பின்னர் ரூ. 20,000 எந்திரம் ரூ. 1,000 தருவதால் (அதாவது அதன் விளை திறன் ரூ. 1,000 ஆதலால்) முதலுக்கு 5% வட்டி கிடைக்கிறது என முடிவு கட்டிக் கொள்கிறோம். ஆனால் எந்திரத்தின் விலையை முடிவு செய்யும் போதே வட்டி வீதமொன்றை எடுத்தாண்டுள்ளோம்! எனவே, முதலின் மதிப்பு, அதன் வருமானம், வட்டிவீதம் ஆகியவற்றிடையே நிலவும் உறவு சுற்றி வளைத்துச் சொல்வது போல இருக்கிறது.

மேலும், வட்டி தோன்ற ஒரே காரணம், முதலின் விளைதிறன் எனக் கருதுவதும் பொருந்தாது. அவ்வாறெனில், முதலின் உற்பத்தித்திறன் மிகுதியாயிருக்கும்போது வட்டி வீதமும் உயர்வாயிருக்க வேண்டும். ஆனால், நடை முறையில் அவ்வாறில்லை. 16,17-ஆவது நூற்றாண்டுகளுடன் ஒப்பிடும்போது இந் நாளில் முதலின் விளை திறன் மிகுதியாகவே இருக்கிறது. இருப்பினும், அந் நாட்களுடன் ஒப்பிடும்போது வட்டிவீத மென்னவோ குறைவாகத்தான் இருக்கிறது.

இந்தக் குறைபாடுகளுக்கெல்லாம் அடிப்படைக் காரணம் இக் கோட்பாடு அளிப்புப் பக்கத்தைத் போதிய அளவு சிறப்பாகக் கவனிக்கத் தவறி விட்டமை தான். வாசிவட்ட—அல்லது, கால விருப்பத் தேர்வுக் கோட்பாடு :

கழிந்த நூற்றாண்டின் இறுதியில் இறுதிநிலை பயன்பாட்டுக் கோட்பாட்டை விளக்கி வந்த ஆஸ்திரிய நாட்டு அறிஞர்கள், தம் முடைய கோட்பாட்டை வட்டி நிருணயத்தை யொட்டிய சிக்கலிலும் புகுத்தி ஆராய முன் வந்த போது பாம் பாவர்க் (Bohm Baverk) என்பவரால் விளக்கப் பெற்ற கோட்பாடுதான் வாசி வட்டக் கோட்பாடு. உளவியல் அடிப்படையிலும்,தொழில் நுட்ப அடிப்படையிலும் வட்டிச் சிக்கலானது இக் கோட்பாட்டால் விளக்கப்படுகிறது.

பாம் பாவர்க்கின் கருத்துப்படி நாளைய பொருள்களுடன் ஒப் பிடும் போது, இன்றையப் பொருள்களுக்கு வாசிவட்ட மொன்று (Agio or Premium) இருக்கிறது. இதனையே மாற்றிச் சொல் வதானால், நிகழ்காலத்துடன் ஒப்பிடும் போது, எதிர்காலமானது கழிவு செய்யப்படுகிறது. இதற்கு மூன்று காரணங்களைத் தந்து உள்ளார் பாம் பாவர்க்.

1. எதிர்காலத் தேவைகள், பொதுவாகக் குறைத்தே மதிப்பிடப்படுகின்றன. எதிர்காலத்தைப் பற்றி நாம் எண்ணித் துணிவதற்கும் எல்லை உண்டு. எதிர்காலத் தேவைகள் நுகர்வோன் கவனத்தை ஈர்க்கும் அளவுக்கு வலிமையுள்ளவை யன்று; மேலும், எதிர்காலத் தேவைகள் உறுதிப்பாடு குறைந்தவையும் ஆகும். 'நாளைக்குக் கிடைக்கும் பலாக்காயை விட, இன்றைக்குக் கிடைக்கும் களாக்காயே மேல்' என்பது மனித உள்ளத்தின் பொதுவான போக்கு.

2. இரண்டாவதாக, எதிர்காலத் தேவைகளுடன் ஒப்பிடும் போது, நிகழ்காலத் தேவைகள் உடனடியாக நிறைவேற்றப்பட வேண்டியவைகளாயுள்ளன. 'நாளை நாளை என்பீராகில் நமனுடைய முறைநாளாவது மறியோம்.' இதனாலும் நிகழ்காலப் பொருள்களின் தேவை எதிர்காலப் பொருள்களின் தேவையுடன் ஒப்பிடும் போது மிகுதியாக இருக்கிறது.

3. மூன்றாவதாக, ஒரு தொழில் நுட்பக் காரணமும் இருக்கிறது. நிகழ்காலப் பொருள்கள் தொழில் நுட்பச் சிறப்புள்ளவையுமாகும். காலச் செலவு பிடிக்கும் சுற்று உற்பத்தி முறையில், நிகழ்கால வளங்களை உடனடியாக நுகர்வுப் பொருள்களை உற்பத்தி செய்வதில் ஆளாமல், அவற்றை முதல் கருவிப் பொருள்களை உற்பத்தி செய்வதில் ஆண்டால், பின்னர் அவற்றைக் கொண்டு இப்போது உற்பத்தி செய்வதை விடவும் மிகுதியாக நுகர்வுப் பொருள்களை உற்பத்தி செய்ய முடியுமல்லவா? இதனால்தான், நிகழ்காலப் பொருள்கள் தொழில் நுட்பச் சிறப்புள்ளன வாகின்றன.

சமுதாயத்தின் கண்ணோட்டத்தில் முதலாளிகளை ஒருவகை வணிகர்களாகக் கருதலாம். அவர்களிடம் நிகழ்காலப் பொருள்கள் விற்பனைக்காக இருக்கின்றன. இவற்றை எதிர்காலப் பொருள்களுக்கு மாற்றிக் கொள்ள அவர்கள் சித்தமாயுள்ளனர். அவர்களிடமிருந்து நிகழ்காலப் பொருள்களைப் பெறுவோர், எதிர்காலத்தில் மேலும் மிகுதியான நிகழ்காலப் பொருள்களாகத் திருப்பித் தருகின்றனர். இந்த மாற்று நிகழ ஓர் அங்காடி தோன்றுகிறது. இறுதிநிலைத் தேவை—அளிப்புக்கள் சமமாகும் நிலையில், ஒரு பொதுவான காலக் கழிவு வீதம்—அதாவது வட்டி வீதம்—அங்குத் தோன்றுகிறது.

பாம் பாவர்க்கின் அடிப்படையை பிஷர் ஏற்றுக் கொள்கிற போதிலும் அதில் சில திருத்தங்களைக் கொணர்ந்துள்ளார். பாம் பாவர்க் சுட்டிய மூன்று காரணங்களில் முதலிரண்டையும் பிஷர் ஏற்றுக் கொள்கிற போதிலும், மூன்றாவது காரணத்தை ஏற்றுக் கொள்ள மறுக்கிறார். மூன்றாவது காரணத்தை ஏற்றுக் கொண்டால், முதலின் உற்பத்தித் திறனை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

மேலும், உண்மையில், மூன்றுவது காரணமே முதலிரு காரணங் களுக்கும் அடிப்படையாகவும் இருக்கிறது. எனவே, காலக் கழிவு பற்றிக் கூறுவதைவிட கால விருப்பத் தேர்வு பற்றிக் கருதுவதே சிறந்தது என்கிருர் பிஷர். எதிர்காலத் தேவைகளைக் குறைத்து மதிப்பிடுவதையே பிஷர், வேறு சொற்களில், 'காலவிருப்பத் தேர்வு' (Time Preference) என்பார். 'எதிர்காலப் பொருள்களில் மேலும் ஓர் அலகின் மீதுள்ள நிகழ்கால இறுதிநிலை விருப்பத்தைவிட, மிகுதி யான, நிகழ்காலப் பொருள்களில் மேலும் ஓர் அலகின் மீதுள்ள நிகழ்கால இறுதிநிலை விருப்பத்தின் சதவீத எச்சமே' இவ்வாறு குறிப்பிடப் படுகிறது. இந்தக் கால விருப்பத் தேர்வால் வரு மானத்தை உடனடியாக நிகழ்காலப் பொருள்களில் செலவிடாமல் பொறுமையாக இருக்க முடியாது. 'பொறுமையின்மையை' (impatience) ஈடுகட்டினுல் தான் அப்பொருள்களைப் பெற முடியும். அந்த ஈடுதான் வட்டி.

இந்த விருப்பத் தேர்வானது ஆளுக்கு ஆள் வேறுபடும். அது, கீழ்வரும் காரணிகளைப் பொருத்திருக்கிறது எனலாம்:

(அ) வருமானத்தின் அளவு: வருமானம் சிற்றளவினதாக இருந் தால், நிகழ்காலப் பொருள்களின் மீதுள்ள விருப்பம் தீவிரமாயிருப் பது இயல்பு. நிகழ்காலத் தேவைகளை நிறைவேற்றிக் கொள்ளவே போதிய வசதியில்லாத நிலையில் எதிர்காலத்தைப் பற்றிய எண்ணம் குறைவாகவே இருக்கும்.

(ஆ) வருமானப் போக்கு: வருமானம், எதிர்காலத்தில் வளர்ந்து செல்லத் தக்கதாயிருந்தால், நிகழ்காலத்தைப் பற்றிய விருப்பே தீவிரமாயிருக்கும். (எதிர்காலத்தில் குடும்பச் சொத்தில் பங்குபெற இருப்பவர் இவ்வகையினர்.) எதிர்காலத்தில் வருமானம் குறைந்து செல்லத் தக்கதாயிருந்தால், எதிர்காலத்துக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்வதிலேயே மிகுந்த நாட்டமிருக்கும்: இங்கே நிகழ்காலப் பொருள்கள் மீதுள்ள விருப்பம் அவ்வளவு தீவிரமா யிராது. (ஓய்வு ஊதியத்தை மட்டும் எதிர்காலத்தில் சார்ந்திருக்க வேண்டியவர் இவ்வகையினர்.)

(இ) வருமானத்தின் கலவை நிலை; வருமானத்தில் கலந்து உள்ள இனங்களையும் கவனிக்க வேண்டும். பணமும் பொருளுமாக வருமானம் அமைந்திருக்கலாம். இந்த இனங்களில் ஏதேனுமொன்று குறைந்தாலும், அந்த அளவுக்குத் தனி மனிதனின் கால விருப்பத் தேர்வு வீதம் மாறும். (அலுவலில் இருக்கும் போது, இலவச வீட்டு வசதி பெறுவோர் ஓய்வு பெறும் போது அந்த வசதியை இழக்க நேர்வதால், இத்தகையவர்க்கு எதிர்காலமே முக்கியமாகலாம்.)

(ஈ) வருமானத்தின் உறுதிப்பாடு: எதிர்காலம் வருமானம் (தூர உறவுச் சொத்துக்களிலிருந்து எதிர்பார்ப்பவைகளைப் போன்றல்லாமல்) உறுதிப்பாடுள்ளதாகத் திகழ்ந்தால் நிகழ்காலத்தையே விரும்பித் தேர்வது இயல்பு.

(உ) ஆள்திறக் காரணிகள்: தனிமனிதன் எதிர்நோக்கு, தன்னடக்கம், பழக்க வழக்கம், வாழ்நாள் எதிர்பார்ப்பு, பிறர் வாழ்விலுள்ள அக்கரை முதலிய காரணிகளும் காலவிருப்பத் தேர்வைப் பாதிக்கின்றன. எதிர் நோக்குள்ளவன் எதிர்காலத்துக்காக ஏற்பாடு செய்ய, இயல்பாகவே முன் வருவான். தன்னடக்க மில்லாதவன் ஊதாரித்தனமாகச் செலவிடுவான்; அவனுக்கு நிகழ்காலமே முக்கியம். தத்தம் வாழ்க்கைத் தரத்தையொட்டி மிகுதியாகவோ குறைவாகவோ செலவிடுவதைத் தம்முடைய பழக்க வழக்கமாக மக்கள் கொண்டிருக்கலாம். நெடுநாள் வாழ முடியாது என எண்ணுபவன் நாளைப் பற்றிக் கருதமாட்டான். தன்னுடைய பிள்ளைகளின் எதிர்காலத்தில் அக்கரை யுள்ளவனே எதிர்காலத்துக்கே முதலிடம் தருவான்.

மேலே கண்ட காரணிகளால் மக்களிடையே விருப்பத் தேர்வு வீதம் வேறுபட்டிருப்பது இயல்பே. ஆனால், இந்த வேறுபாடுகளெல்லாம் அங்காடியில் சரிக்கட்டிக் கொள்கின்றன. அங்காடி வட்டி வீதத்துக்கு மேற்பட்ட விருப்பத் தேர்வு வீதமுடையவன் தன் எதிர்கால வருமானத்தின் எச்சத்தில் ஒரு பகுதியை நிகழ்கால வருமானமாக மாற்றுகிறான்; அதாவது, கடன் வாங்குகிறான். இது எதிர்கால வருமானத்தின் இறுதிநிலைப் பயன்பாட்டை உயர்த்தி, நிகழ்கால வருமானத்தின் இறுதிநிலைப் பயன்பாட்டைத் தாழ்த்தும். அவனது விருப்பத்தேர்வு வீதமும் வட்டி வீதமும் சமமாகும் வரை, இவ் வருமான மாற்று நிகழ்ந்துகொண்டே இருக்கும். இதற்குமாறாக, அங்காடிவட்டி வீதத்தை விடக் குறைவான விருப்பத் தேர்வு வீதமுடையவன், தன் நிகழ்கால வருமானத்தை எதிர்கால வருமானமாக மாற்றுவான்; கடன் கொடுப்பான். இதனால், அவனது விருப்பத் தேர்வு வீதம் உயர்ந்து, முடிவில் அங்காடி வீதத்துக்குச் சமமாகும். இவ்வாறு, தடையற்ற அங்காடியில், எல்லாருடைய விருப்பத் தேர்வுவீதங்களும் தமக்குள் ஒப்பாகிக் கொண்டு இறுதியில் அங்காடி வீதத்துக்கும் ஒப்பாகி விடுகின்றன. இந்த அங்காடி வீதமானது அளிப்பும் தேவையும் சமமாகும் மட்டத்தில் நிலை கொள்வது இயல்பு.

ஒருவனது எதிர்கால வருமானப் போக்கை மாற்றியமைக்கக் கடன் வாங்குவதும் கொடுப்பதுமே வழிகள் என மேலே எடுத்துக் கொண்டோம். ஆனால், முதலீட்டு வாய்ப்புக்களாக, இவை தவிர, வேறுபல வழிகளும் உள்ளன. எனவே, பலவகை வருமானப்

போக்குகளில் ஒன்றைத் தேர்ந்தெடுத்து, பின்னர் அதன் அமைப்பைக் கடன் கொடுக்கல் வாங்கல் மூலம் திருத்த நேர்வதே இயல்பான முறை. இந்த வருமானப் போக்குத் தேர்வு, முதலீட்டு வாய்ப்புக்களைப் பொருத்தது ; கொடுக்கல் வாங்கல் வழி ஏற்படும் திருத்தங்களுக்கு அடிப்படை கால விருப்பத் தேர்வு. எனவே, இவ்விரண்டும் சேர்ந்தே வட்டியை முடிவு செய்கின்றன என்பார் பிஷர்.

ஒரு வகையில், கால விருப்பத் தேர்வுக் கோட்பாடு, காத்திருத்தல் வகையைச் சேர்ந்ததுதான். இருந்தாலும், இக்கோட்பாட்டைக் கொண்டு நுகர்வுக் கடன்களின் அடிப்படையையும் விளக்க முடியும் என்பது ஒரு தனிச் சிறப்பு. ஒருவன் தன் சேமிப்புக்களைப் பிறர்க்குக் கடன் தராது, தனது சொந்த நிறுவனத்தில் முதலீடு செய்தாலும் வட்டியை எதிர்பார்ப்பதற்குரிய காரணத்தையும் இக் கோட்பாடு விளக்குகிறது.

இக் கோட்பாட்டிலும் சில குறைபாடுகள் உள்ளன. இக்கோட்பாடு தேவைச் சூழலை அறவே புறக்கணித்துவிட்டதாகச் சிலர் கூறுகிறார்கள். ஆனால், உண்மையில் பாம் பாவர்க் குறிப்பிட்ட நிகழ் காலப் பொருள்களின் தொழில் நுட்பச் சிறப்பும், பிஷர் சொன்ன முதலீட்டு வாய்ப்புக்களும், புறக்கடை வழியாக முதலின் உற்பத்தித் திறனையே அறிமுகப் படுத்தியுள்ளன. நிகழ் காலத்துக்கும் எதிர் காலத்துக்குமிடையே பணத்தின் வாங்கும் ஆற்றல் மாறாதிருக்கிறது என்ற எடுகோளின் மீதே இக்கோட்பாட்டை விளக்கமுடியும். இந்த எடுகோள் நடைமுறைக்குப் பொருந்துவதன்று. மற்றொரு பொருந்தா எடுகோள் சேமிப்போர் நிலையும் பண்பும் மாறாதிருக்கின்றன என்பதாகும்.

## தொன்மை மரபினர் கோட்பாடு

பொதுவாகத் தொன்மை மரபினர் வட்டி பற்றிக் கொண்டிருந்த கருத்துக்களைத் தொகுத்துப் பார்த்தால், முதலின் தேவையினையும் அளிப்பினையும் பொருத்ததே வட்டி என்ற கோட்பாடொன்று உருவாகும். முதலின் தேவை முதலீட்டுத் தேவையில் இருந்து தோன்றுகிறது ; அதன் அளிப்போ சேமிப்புக்களிலிருந்து வருகிறது. எனவே, முதலீடு சேமிப்புக்கள் ஆகிய இரண்டினாலும் நிருணயிக்கப் படுவதே வட்டி என்றாகிறது.

முதலின் விளைதிறனே முதலீட்டை ஊக்குவிக்கிறது. மேலும் மேலும் முதலை ஆளும்போது, அதன் இறுதிநிலை விளைதிறன் குறைந்து செல்கிறது ; குறைந்து செல் விளைவு விதியே இதற்குக் காரணம். இதனால், அங்காடி வட்டி வீதத்துக்கு முதலின் இறுதி

நிலை விளைபொருள் சமமாகும் வரை மேலும் மேலும் முதல் ஆளப்படும்.

சேமிப்பின் அளிப்பு வட்டி வீதத்தையே பொருத்தது எனத் தொன்மை மரபினர் கருதினர். வட்டி வீதம் உயர்வாயிருந்தால், சேமிப்பின் அளவும் மிகுதியாக இருக்கும் என்பது அவர்கள் துணிவு. அளிப்புக் கண்ணோட்டத்திலிருந்து பார்த்தால், இறுதி நிலைச் சேமிப்போனின் சேமிப்புக்களை ஈர்க்கும் அளவுக்கு வட்டிவீதம் உயர்வாக இருக்க வேண்டும்; இல்லையெனில், அந்த அளவுக்குச் சேமிப்புக்கள் முன் வராத காரணத்தால், இயல்பாகவே சேமிப்பின் அளிப்புக் குறைந்து, வட்டிவீதம் உயர்ந்துவிடும்.

இப்போது, கீழ்நோக்கிச் செல்லும் ஒரு முதலீட்டுத் தேவை வளைகோடும், மேல் நோக்கிச் செல்லும் சேமிப்பு வளைகோடும் கிடைக்கும். இவை யிரண்டும் வெட்டிக் கொள்ளும் இடத்தில்




தேவையும் அளிப்பும் சமமாயிருப்பதால் அங்குத் தோன்றும் வட்டி வீதம் நிலைபேறுள்ளதா யிருக்கும்.

இக் கோட்பாட்டை மிகவும் வன்மையாகக் கண்டிப்பவர் கெயின்ஸ் பிரபு. சேமிப்புக்கும் வட்டிவீதத்திற்கும் இடையே நேரடியானதோர் உறவு இருப்பதாகக் கொள்வதை அவர் ஏற்றுக்கொள்வதில்லை. அவருடைய கருத்தின்படி சேமிப்பு வருமான மட்டத்தைப் பொருத்திருக்கிறதே யொழிய வட்டி வீதத்தையன்று. வட்டியே இல்லாதிருந்தாலும் செல்வந்தர் சேமிப்பார்கள். ஏழைகளை எடுத்துக் கொண்டால், வட்டிவீதம் மிக உயர்வாக இருந்தாலும், அவர்கள் சேமிக்கும் நிலையில் இல்லை. வட்டிவீதம் உயர்ந்தால் சேமிப்பும்

அதிகரிக்கும் என்பது தொன்மை மரபினர் கருத்து. ஆனால், வட்டி வீதம் முதலீடு குன்றி, வருமானமும் குன்றுவதால், இறுதியில் சேமிப்புக் குன்றி விடலாம் என்பார் கெயின்ஸ்.

வட்டிவீதம் குறையக்குறைய, முதலீடு பெருகும் என்ற கோட்பாடும் கெயின்ஸால் ஏற்றுக்கொள்ள முடியாத ஒன்றே. அவருடைய கருத்தின்படி, முதலீடு வட்டிவீதத்தைப் பொருத்திருக்கவில்லை; வட்டிவீதம் உயர்வாக இருக்கும் போதும், பெரிய அளவில் இலாபம் ஈட்ட வாய்ப்பு இருப்பதாக முதலீட்டாளர்கள் கருதினால், கடன் வாங்குவதற்கு அவர்கள் சித்தமாயுள்ளனர். எனவே, முதலீடானது குறிப்பிட்ட தொழிலிலுள்ள இலாப வாய்ப்பினைப் பொருத்திருக்கிறதே யொழிய, வட்டிவீதத்தையன்று என்பார் கெயின்ஸ்.

மேலும், சேமிப்புக்கும் முதலீட்டுக்கும் இடையேயுள்ள கூடுதல் குறைவுகளை நிரப்புவதும் வருமான மாறுதல்களே யொழிய வட்டி வீத மாறுதல்களல்ல என்பார் கெயின்ஸ். வட்டிவீதம் உயர்ந்தால் மிகுதியாகச் சேமிக்கப்படும்; ஆனால், உயர்ந்த வட்டிவீதத்தில், முதலீட்டுத் தேவை குறைவதால் வட்டி வீதம் இயல்பாகவே குறைந்து சென்று, மீண்டும் முதலீட்டுத் தேவையும் சேமிப்பு அளிப்பும் சமமாகும் நிலைக்குச் சேமிப்பு அளிப்பு குறைந்து செல்லும் என்பது தொன்மை மரபினர் கோட்பாடு. ஆனால், உண்மையில் நடப்பதோ வேறு: வட்டிவீதம் உயரும் போது, அதன் விளைவாக முதலீடு சுருங்குகிறது: முதலீட்டுச் சுருக்கம் வருமானத்தையும் சுருக்குகிறது. சுருங்கிய வருமானத்தில் சேமிப்பின் அளிப்பு இயல்பாகவே குறைந்து செல்கிறது. இவ்வாறு, சேமிப்பும் முதலீடும் சமன்படுவதற்கு வருமான மாறுதல்கள் தாம் காரணமாக இருக்கின்றனவே யொழிய வட்டிவீத மாறுதல்களல்ல என்பார் கெயின்ஸ்.

வட்டிவீதத்தை நிருணயிப்பதில் பணத்திற்கு இருக்கும் முதன்மையான பங்கு பற்றி இக் கோட்பாடு எதுவும் கூறவில்லை என்பதும் மற்றொரு குறைபாடு.

**நீர்மை விருப்பத் தேர்வுக் கோட்பாடு**

வட்டியானது பணக் கொடுக்கல் வாங்கல்களின் போது தான் நடைமுறை யுலகில் தோன்றுகிறது. எனவே, கருத்தியல் சார்ந்த வட்டிக் கோட்பாடுகளில் பணத்துக்கு முதன்மையான இடம் தந்தாக வேண்டும். இதில் தொன்மை மரபினர் தவறி விட்டனர் என்றே சொல்லலாம். இந்தத் தவறைத் திருத்தும் வகையில், புதியதொரு கோட்பாட்டை கெயின்ஸ் பிரபு கொணர்ந்தார்.

பணமானது ஏன் கொடுத்து வாங்கப்படுகிறது என்பது இங்கு எழுகிற முதல் வினு. பொருள்களை வாங்குவதற்காகவே பணம் வேண்டும் எனச் சொல்லும் போது, பணத்தின் உண்மைத் தேவை யைக் குறிப்பிடவில்லை. பணம் பணத்துக்காகவே தேவைப் படுவது உண்டு: இந்தத் தேவையே பணத்தின் உண்மையான தேவை. இதனையொட்டியே பணக் கொடுக்கல் வாங்கல் நிகழ் கிறது.

பணத்தைப் பணத்துக்காகவே ஏன் தேவைப்படுத்துகிருேம் என்பது இங்கு எழுகிற இரண்டாவது வினு. 'பணம் ஒன்றே நீர்த்த நிலையிலுள்ள சொத்து; எனவேதான் அதனை விரும்பித் தேர்கி ருேம்.' என்பதுதான் இவ்வினுவுக்குரிய விடை. சொத்துக்களைப் பல முறைகளில் வைத்திருக்க முடியும்: பாங்கு வைப்புத் தொகை களாக வைத்திருக்கலாம்; கடன் பத்திரங்களாக வைத்திருக்கலாம்; பங்குகளாக வைத்திருக்கலாம்: நகை, மாடு, வீடு, நிலம் என்று வைத்திருக்கலாம் இறுதியாகப் பணமாக—ரொக்கமாகவும் வைத் திருக்கலாம். ஆனுல், ரொக்கமாக வைத்திருப்பது தவிரப் பிற முறை களிலெல்லாம் வசதிக் குறைவொன்று இருக்கிறது. ஒரு விருப்பத்தை உடனடியாக நிறைவேற்ற வேண்டு மெனில் பிற முறைகளில் வைக் கப்பட்ட சொத்தை அதற்கெனப் பயன்படுத்த முடியாது: இவ் வகைச் சொத்துக்களை ரொக்கமாக மாற்றுவதிலுள்ள தடங்கல் களே இதற்குக் காரணம். வயிற்றுநோவு கண்ட மனைவியை மருத்துவ விடுதியில் ஞாயிற்றுக்கிழமையன்று சேர்த்தாக வேண்டிய நிலை ஏற்பட்டு, அதனை யொட்டிய செலவுக்காகத் தபால் சேமிப்புப் பாங்கில் தான் வைத்துள்ள தொகையை மீட்டுப் பெற ஒருவன் முயன்ருல், தன் பணம் தனக்கே கிடைக்காதவொரு நிலையல்லவா ஏற்படுகிறது? எனவே எல்லாரும் தம்முடைய வழி வகைகளை நீர்த்த நிலையில் வைத்திருக்க விரும்பித் தேர்வது இயல்பு. இந்தப் போக்கே 'நீர்மை விருப்பத் தேர்வு' (Liquidity Preference) எனப் படும்.

இந் நிலையில், கடன் தருகிறபோது என்ன நிகழ்கிறது எனப் பார்க்கலாம். அப்போது, இந்த நீர்மை விருப்பத் தேர்வைத் துறக்கவேண்டிய நிலை வருகிறது. இந்தத் துறவுக்குத் தருகிற கைம் மாறுதான் வட்டி. 'பணத்தை அப்படியே வைத்திருப்பது நம்மு டைய அமைதியின்மையைத் தாலாட்டுகிறது. நம் அமைதியின் மையின் படியளவு, பணத்தை விட்டுப் பிரிய நாம் வேண்டுகிற வாசி வட்டமே யாகும்' என்பார் கெயின்ஸ். நீர்மை விருப்பத் தேர்வு உயர்வாயிருந்தால், அதனைத் துறப்பதற்குத் தரவேண்டிய வட்டி யாகிய விலையும் உயர்வாகவே இருக்கும். எனவே 'குறிப்பிட்ட

காலத்துக்கு நீர்மை வாய்ப்பை விட்டுப் பிரிவதற்குரிய கைம்மாறே வட்டி' என்பார் கெயின்ஸ்.[1]

இந்த நீர்மை விருப்பத் தேர்வின் அளவு மூன்று ஊக்கிகளைப் பொருத்திருப்பதாகச் சொல்லப்படும் :

1. 'கொடுக்கல் வாங்கல் ஊக்கி' (Transaction Motive) வழக்கமான கொடுக்கல் வாங்கல்களை நடத்துவதற்காகக் குறிப்பிட்ட அளவு, கையில் ரொக்கமாக வைத்திருக்க வேண்டும். அடுத்த தடவை வருமானம் வருவது வரை செலவுகளைச் செய்வதற்காகக் குறிப்பிட்ட அளவு ரொக்கம் எப்போதும் கையில் இருந்தாக வேண்டும். இந்த ரொக்கத்தின் அளவு, ஆள்திற வருமானத்தின் அளவையும், சம்பள நாட்களிடையே உள்ள இடைவெளியின் கால அளவையும் பொருத்தது எனலாம். தொழில் அதிபர்களும் இதே வகையில் தம்முடைய தொழிலின் தொடர்பான செலவுகளைச் செய்வதற்காக—கச்சாப் பொருள் வாங்கவும், கூலி தரவும் இன்ன பிறவற்றுக்காகவும்—குறிப்பிட்ட அளவு ரொக்கம் வைத்திருக்கவேண்டும்.

2. 'எச்சரிக்கை ஊக்கி' (Precautionary Motive) எதிர்பாராத வகையில் தோன்றுகிற நோய்கள், வேலையின்மை முதலிய இடர்களையும் இன்ன பிற செலவினங்களையும் எதிரிடுவதற்காக எச்சரிக்கையோடு ரொக்கமாக ஓரளவு வைத்திருக்க வேண்டும். இதன் அளவும் வருமான மட்டத்தையே சார்ந்துள்ளது.

3. 'ஊக வணிக ஊக்கி' (Speculative Motive) பண அங்காடியில் பொருளீட்ட வேண்டும் என்ற நோக்கத்துடன் ரொக்கமாக வைத்திருக்க விரும்பும் போதே ஊக வணிக ஊக்கி செயல்படுகிறது. 'எதிர் காலத்தில் என்ன கிடைக்கும் என்பதை அங்காடியை விட நன்றாக அறிவதன் வழியாக இலாபமடையும் நோக்கம்' என்ற சொற்களில் இதற்கு இலக்கணம் வகுத்துள்ளார் கெயின்ஸ்.[2] ரொக்கத்தைப் பிற வகைச் சொத்துக்களாகத் தற்போது மாற்றுவதில்

[1] இந்த உண்மையை பாங்குகள் தரும் வட்டி வீதத்திலிருந்து எளிதில் புரிந்து கொள்ளலாம். நீண்ட காலத் தவணை வைப்புத் தொகைகளுக்குப் பாங்குகள் உயர்ந்த வட்டி வீதம் தருகின்றன ; நடப்பு வைப்புத் தொகைகளுக்கோ மிகக் குறைந்த வீதங்களையே தருகின்றன. தவணை வைப்புத் தொகைகளை நீண்ட காலத்துக்குப் பின்னரே திருப்பிப் பெறமுடியும். அந்த அளவுக்கு மக்கள் தம்முடைய நீர்மை வாய்ப்பை நீண்ட காலத்துக்கு இழப்பதால், பெரிய அளவில் கைம்மாறு கோருவது இயல்பே. மாறாக, நடப்பு வைப்புத் தொகைகளைப் பணமாக எளிதில் மாற்றிக்கொள்ள முடிவதால், அங்கு இழக்க நேர்கிற நீர்மை வாய்ப்பு மிகக் குறைவாக இருபபதால், வட்டி வீதமும், இயல்பாகவே மிகக் குறைவாக இருக்கிறது.

[2] 'கலையும் மப்பைக் கண்டு கட்டியிருந்த விதையை வட்டிக்கு விட்டானாம்' என்ற பழமொழி இந்த ஊக்கியைத்தான் சொல்கிறது.

ஆதாயமில்லை என அறிந்து, ரொக்கமாகவே வைத்திருப்போர் இவ்வூக்கியால் கட்டுப்படுத்தப் பட்டுள்ளவர்கள் எனலாம். எதிர்காலத்தில் வட்டி வீதம் ஏறும் என எதிர்பார்ப்போர், இன்று கடன் பத்திரங்களை வாங்க முற்படாமல், எதிர்காலத்தில் வாங்கலாமெனக் காத்திருப்பார்கள். முதலிரண்டு ஊக்கிகளைப் போன்றல்லாமல், இவ்வூக்கியால் வைத்திருக்கப்படும் பணத்தொகை வட்டி வீதத்தை (அல்லது, வட்டிவீதத்தின் எதிர்கால மாறுதல்களை) யொட்டித் தீவிரமாக மாறத் தக்கது என்பது இங்குக் கருதத் தக்கது.

நீர்மை விருப்பத் தேர்வுக்கும் வட்டிவீதத்திற்கும் இடையே உள்ள தொடர்பை மேலே கண்டோம். இந்தத் தொடர்பின் அடிப்படையில் சில முடிவுகளுக்கு வரலாம். குறிப்பிட்ட வட்டிவீதத்தில் கிடைக்கும் ரொக்கத்தைவிட மிகுதியாகக் கையில் வைத்திருக்க விரும்பினால், அளிப்புடன் ஒப்பிடும் போது தேவை எச்சமாக இருக்கும் நிலை ஏற்படுகிறது. இதனால், விலை அதாவது, வட்டி வீதம் — உயர்கிறது. மாறாக, ரொக்கத் தேவை — அதாவது, நீர்மை விருப்பத் தேர்வு—பணத்தின் அளிப்பை விடக் குறைவாக இருந்தால், விலை—அதாவது, வட்டிவீதம்—இறங்குகிறது. இவ்வாறு ரொக்கமாகச் செல்வத்தை வைத்திருப்பதிலுள்ள ஆர்வத்தையும், அகப்படுகிற ரொக்க அளிப்பையும் சமநிலைக்குக் கொண்டு வருகிற விலையே வட்டி. இதனால், நீர்மை விருப்பத் தேர்வு மாறாதிருக்கப் பணத்தின் அளிப்பு மாறுகிற திசைக்கு எதிர்த் திசையில் வட்டி வீதம் மாறும் எனலாம் : பணத்தின் அளிப்பு மிகுந்தால், வட்டி வீதம் இறங்கும்.

இந்த உண்மைகளைக் கீழுள்ள படத்தின் வழியாகவும் விளக்கலாம். இங்கு, LP நீர்மை விருப்பத் தேர்வுப் போக்கைக் குறித்து




நிற்கும் வளைகோடு. Y அச்சில் வட்டி வீதம் குறிப்பிடப்பட்டு உள்ளது. வட்டிவீதம் மிகவும் தாழ்ந்து இருக்குமானால், பணத்தை

யெல்லாம் சொத்துக்களில் முதலீடு செய்யாமல் ரொக்கமாக வைத்திருப்பதையே விரும்பித் தேர்வது வழக்கம். எனவே, LP வளை கோடு கீழ்நோக்கிச் சரிகிறது. மிகத் தாழ்ந்த மட்டத்தில், அது படுகிடையாகவே மாறிவிடுவதற்கும் கெயின்ஸ் ஒரு காரணத்தைச் சுட்டுவார். வட்டிவீதம் மட்டற்றபடி தாழ்ந்திருந்தால், பணத்தைக் கடன் கொடுப்பதிலுள்ள நட்ட ஆபத்துக்களை ஈடுகட்டக்கூட அந்த அளவு கைம்மாறு போதாததாக இருப்பதால், கிடைப்பதையெல்லாம் ரொக்கமாக வைத்திருக்கத் துணிவது நிகழத்தக்கதே.[1] SS கோடு பணத்தின் அளிப்பைச் சுட்டுகிறது. பணத்தின் அளிப்பைக் கட்டுப்படுத்துவது தொடர்புள்ள அரசே யாதலாலும், பாங்குகள் மட்டற்று அளிக்க முடியாதவாறு பல்வேறு வரையறைகள் இருப்பதாலும் பணத்தின் அளிப்பு குறிப்பிட்ட காலத்தில் மாறுதிருக்கும் எனக் கொள்வதே கெயின்ஸின் கருத்துக்குப் பொருந்தும். இதனால் SS கோடு செங்குத்தாக இருப்பதில் வியப்பில்லை. இவ்வாறு, படத்தில் LP தேவை வளைகோடாகவும், SS அளிப்பு வளைகோடாகவும் உள்ளன. இவை இரண்டும் ஒன்றையொன்று வெட்டிக் கொள்ளும் OR மட்டத்தில் வட்டிவீதம் முடிவடைகிறது. அவ்விடத்தில் OS பணம் தேவை ; அளிப்பும் அவ்வளவே. இப்போது பணத்தின் அளிப்பு ($S_1S_1$ ஆக) வளர்ந்தால் நீர்மை விருப்பத் தேர்வு நிலை (LP) மாறுத நிலையில், வட்டிவீதம் $OR_1$ ஆக இறங்குகிறது. இதற்கெதிராக, பணத்தின் அளிப்பு ($S\,S_2$ ஆகக்) குறைந்தால், வட்டிவீதம் $OR_2$ ஆக ஏறுகிறது. நீர்மை விருப்பத் தேர்வு மாறும் பான்மையை $LP_1$ , $LP_2$ வளை கோடுகள் சுட்டுகின்றன. இங்கும் பணத்தின் அளிப்பு (SS) மாறுதிருக்க, நீர்மை விருப்பத் தேர்வு ஏறும் போது ($LP_1$ ) வட்டி வீதம் $OT_1$ ஆக (OR இலிருந்து) ஏறுகிறது ; இது போல, நீர்மை விருப்பத் தேர்வு இறங்கும் போது, வட்டி வீதம் $OT_2$ ஆக இறங்குகிறது.

[1] தொடர்ந்து குறைந்து செல்ல இயலாதவாறு, குறிப்பிட்ட வீதத்தில் வட்டியானது மாறுதிருக்கும் 'இந்நிலையில் 'நீர்மைப் பொறி'க்குள் (Liquidity Trap) சிக்கிக் கொண்ட நிலை தோன்றுகிறது. வட்டி வீதம் பூஜ்ய நிலையை எட்டுமா என்பது மற்றொரு வினு. முதலுக்குத் தேவையே இல்லாதிருந்தாலும், அல்லது முதலின் அளிப்பு எச்சமாயிருந்தாலும் இத்தகைய நிலை தோன்றலாம். வளர்ச்சியடைந்து விட்ட நாடுகளில் முதல் நிலை தோன்றலாம் எனச் சிலர் கூறுவதுண்டு, ஆனால், உண்மையில், எந்த நாட்டிலும் இந்த நிலை தோன்றியதாகச் சொல்ல முடியவில்லை. மேலும் ஹிக்ஸ் கூறுவது போலப் பணமானது பல்வேறு பொருள்களை வாங்குவதற்கு உதவுகிற மிகவும் நீர்த்த நிலையிலுள்ள ஒரு தனிச் சொத்து. ஆதலால், எந்த நிலையிலும் பணத்துக்குத் தேவை இருக்கவே செய்யும்: பணத்துக்குத் தேவை இருப்பது வரை வட்டி தர மக்கள் சித்தமாகவே இருப்பார்கள்-அளிப்புப் பக்கத்தை எடுத்துக் கொண்டாலும், கடனுக்கு வட்டி கிடைக்க வழியில்லாவிட்டால், கடன் கொடுப்பதிலுள்ள தொல்லைகளை ஏற்கக் கடன் ஈவோன் முன் வரமாட்டான்: கடனே கொடுக்காமல் இருப்பதையே அவன் விரும்பித் தேர்வான். கடன் திருப்பப் பெறுமல் போவதிலுள்ள நட்ட ஆபத்தை ஈடு கட்டுவதற்காவது அவன் வட்டியொன்றை விதித்தாக வேண்டும். வட்டி வீதமொன்று — மிகக் குறைந்த அளவிலேயாயினும்-சேமிப்போர்களைத் தூண்டுவதற்காகத் தரப்பட்டாக வேண்டும்.

கெயின்ஸின் நீர்மை விருப்பத் தேர்வுக் கோட்பாட்பாடு முற்றிலும் புதுமையானது என்பதில் ஐயமில்லை. தொன்மை மரபினரின் இறுதிநிலை விளைதிறன் கோட்பாடு, காத்திருத்தல் கோட்பாடு முதலியவற்றை விடத் தமது கோட்பாடு சாலச்சிறந்தது என்பது கெயின்ஸின் கருத்து. நடப்பு வட்டி வீதம், இறுதிநிலை விளைதிறனுக்குச் சமமாக முற்படுவதுண்மையே. ஆனால், இதனால், இறுதிநிலை விளைதிறன்தான் வட்டியை முடிவு செய்கிறது எனச் சொல்லலாகாது. முதலின் இறுதிநிலை விளைதிறன், தொழிலின் எதிர்கால வாய்ப்புக்களையும், முதல் கருவிப் பொருள்களின் உற்பத்திச் செலவினையும் பொருத்தது. இக் காரணிகளுக்கும் வட்டி வீதத்துக்கும் தொடர்பு எதுவுமில்லை. காத்திருத்தல் வட்டியை முடிவு செய்கிறதெனச் சொல்வதும் பொருந்தாது; காத்திருந்து திரட்டிய சேமிப்புக்களை வீணே குவித்து வைத்தால் வட்டி யெதுவும் கிடைக்காது என்பதிலிருந்து இது தெளிவாகிறது. மேலும், முதலின் தேவையையும், சேமிப்பின் அளிப்பையும் சமன்படுத்தும் காரணியே வட்டி எனச் சொல்வதையும் கெயின்ஸ் ஏற்றுக் கொள்வதில்லை. வழக்கத்தை விட மிகுதியாகக் தனியொருவன் சேமித்து விட்டானுனல், இதனால் சேமிப்பின் மொத்த அளிப்பு மிகுந்தாக வேண்டும் என்றில்லை. ஏனெனில், அவன் தற்போது, முன்னை விடக் குறைந்த அளவே நுகர்வுப் பொருள்களில் செலவிடுவதால் அந்த அளவுக்கு நுகர்வுப் பொருள் உற்பத்தியில் ஈடுபட்டிருப்பவர்களுடைய வருமானம் குறைகிறது; இதனால் அவர்கள் குறைவாகவே சேமிக்க முடியும். இதன் ஆக-மொத்த விளைவு, சேமிப்பின் மொத்த அளிப்பு பெருகாது போவதுதான். இதுபோன்றே, தொழிலதிபர்கள் மிகுதியான அளவு முதல் கருவிப் பொருள்களை உற்பத்தி செய்யத் துணிந்தால், அவர்கள் மிகுதியாக இடுகிற செலவு உற்பத்திக் காரணிகளின் வருமானத்தையும் அதன் வழியாகச் சேமிப்பையும் பெருக்கி விடலாம். முதலீடு பெருகும் போது சேமிப்புக்களின் அளவும் உயர்ந்த அளவு வருமானங்களின் வழியாகப்பெருகுகிறது. இவ்வாறு சேமிப்புக்களின் அளவையும், முதலீட்டின் அளவையும் சமன்படுத்துவது வருமானமே என்பார் கெயின்ஸ்.[1]

[1] கால விருப்பத் தேர்வுக் கோட்பாட்டைப் போல நீர்மை விருப்பத் தேர்வுக் கோட்பாட்டிலும் காலக் கூறொன்றுள்ளது. ஆனால், எதிர்காலத்திலும் இரண்டுக்கும் அடிப்படையான ஊக்கிகள் வேறு. நிகழ்காலத்தை எதிர்காலத்திலும் விரும்பித் தேர்ந்து, எதிர்காலத்தில் நுகர்வதற்குப் பதிலாக நிகழ்காலத்தில் வருமானத்தை நுகர்வதை விரும்பித் தேர்கிறுன் என்பது கால விருப்பத் தேர்வுக் கோட்பாடு. ஆனால், ஒருவன் தன் பணத்தை, தன் நீர்மை விருப்பத் தேர்வு நிலையை யொட்டிக் கடனுகத் தந்து விட்டு, அதைத் திரும்பப் பெறுவதற்குக் காத்திருக்கும் போது, அங்கு கால விருப்பத் தேர்வு எதுவுமில்லை. கால விருப்பத் தேர்வெதுவும் இல்லாத நிலையிலும் ஒருவனுக்கு நீர்மை விருப்பத் தேர்வு இருக்கலாம். மேலும், கால விருப்பத் தேர்வு உளவியல் சார்ந்த ஆள் திறக் காரணிகளைச் சார்ந்தது என்பதையும், நீர்மை விருப்பத் தேர்வு கட்டுப்பாட்டுக்குட்பட்டது என்பதையும் கவனிக்க வேண்டும். பாங்குகள் கடன் வாய்ப்புக்களைப் பெருக்குவதன் வழியாக மக்களுடைய நீர்மை விருப்பத் தேர்வைக் கட்டுப் படுத்த முடியும்.

தொல்லோர் கோட்பாட்டில் சில குறைபாடுகளைச் சுட்டிக் காட்டித் தமது கோட்பாட்டை கெயின்ஸ் நிறுவியுள்ள போதிலும், இப் புதிய கோட்பாட்டிலும் பேராசிரியர்கள் இராபர்ட்ஸன், ஹாஸலிட் (Hazelitt) போன்ருேர் சில நுட்பமான குறைபாடு களைச் சுட்டியுள்ளனர். முதலாவதாக, 'ரொக்கம்' எதைக் குறிக் கிறது என்பதில் கெயின்ஸ் அவ்வளவு தெளிவாயில்லை; சில நேரங் களில் பாங்குப் பணத்தைக் கூட ரொக்கத்தினுள் அடக்குவார். இரண்டாவதாக, முதலின் விளைதிறனை அவர் ஏற்றுக்கொள்வதில்லை. தொழில் துணிவோனின் உளப்பாங்கையும் நடப்பு வட்டி வீதத்தை யும் ஒட்டியதே முதலீடு என்பார் அவர். ஆனால், தொழில் துணி வோன் செய்கைகள் முதலின் விளைதிறனைப் பொருத்திருப்பதை எந்நிலையிலும் புறக்கணித்து விட முடியாது. பணத்துக்கு மட்டு மீறிய முதன்மை நல்கி விட்டு, முதலின் தேவையும் அளிப்புமாகிய உண்மைப் பொருளாதாரக் காரணிகளைக் கெயின்ஸ் ஒதுக்கி வைத்து விட்டார் என்பது ஹாஸலிட் சுட்டும் குறைபாடு. ஏற்கனவே சேமித்திராவிட்டால், ரொக்கம் எதுவும் இராது என்பதை இங்குக் கவனிக்க வேண்டும். வட்டிக் கண்ணேட்டத்தில் முதலீடு செய்ய நிதி வேண்டுமாளுலும், சேமிப்பு இன்றியமையாது வேண்டும். எனவே, எந்த வட்டிக் கோட்பாட்டிலும் சேமிப்பைப் புறக்கணித்து விட முடியாது. கெயின்ஸின் கோட்பாட்டில் ஒரு வகைக் குழப்ப மிருப்பதும் இங்குக் குறிப்பிடத்தக்கது. வட்டி வீதமானது நீர்மை விருப்பத் தேர்வாலும் பணத்தின் அளிப்பாலும் முடிவாகிறது என் பார் கெயின்ஸ். ஆனால், நிர்மை விருப்பத் தேர்வை முடிவு செய்வது வருமான மட்டமாகும். இந்த வருமான மட்டத்தை முடிவு செய்வ தில் வட்டி வீதத்திற்குரிய பங்கினைத் தட்டிக் கழித்து விட முடியாது. வட்டிவீத மாறுதல்கள் முதலீட்டையும், அதன் வழியாக வருமானத் தையும், கட்டுப்படுத்துகின்றன. எனவே, வட்டி வீதம் வருமானத் தையும் அதன் தொடர்பாக நீர்மை விருப்பத் தேர்வையும் முடிவு செய்வதாகிறது. இதிலிருந்து நீர்மை விருப்பத் தேர்வு வட்டியை முடிவு செய்வதாகச் சொல்வதுபோல, வட்டியானது நீர்மை விருப் பத் தேர்வை முடிவு செய்வதாகவும் சொல்லலாம் என்ருகிறது. இறுதியாக, நடைமுறை நிகழ்ச்சிகளுக்கு இக்கோட்பாடு பொருத் தும்படியாக இல்லையென்பதையும் கவனிக்க வேண்டும். கெயின் ஸின் கோட்பாடு உண்மையாயிருந்தால், தொழில்மந்தத்தின் அடி மட்டத்தின் போது மட்டும், விலையிறக்கத்தின் விளைவாக நீர்மை விருப்பத் தேர்வு வலிமை மிக்கதாக இருப்பதால், வட்டி வீதம் மிக உயர்ந்திருக்க வேண்டும். ஆனால், உண்மையில் அப்படியில்லை. இது போன்றே, தொழில் பூரிப்பின் உச்சி மட்டத்தின் போது, மக்கள் பொதுவாக நம்பிக்கை மிக்கவராயிருக்கும் போது, நீர்மை விருப்பத் தேர்வு குறைவாகவும் அதனல் வட்டி வீதம் குறைவா கவும் இருக்க வேண்டும்; நடைமுறை இவ்வாறு இருப்பதில்லை.

**கடன் நிதிக் கோட்பாடு.**

தொன்மை மரபினர் கருத்தையும் கெயின்ஸின் கருத்தையும் இணைக்கும் வகையில் உருவாகியதுதான் 'கடன் நிதி'க் (Loanable Fund) கோட்பாடு. எனவே, இது சமரசக் கோட்பாடு எனப்படுவதுமுண்டு. கடன் நிதியைப் பயன் படுத்துவதற்குத் தருகிற விலை தான் வட்டி. இவ்விலையானது கடன் நிதியின் தேவையாலும் அளிப்பாலும் முடிவு செய்யப்படுகிறது. தேவை, அளிப்புக் காரணிகளின் மாறெதிர் செயல்களிடையே உருவாகும் சமநிலையில் தான் வட்டி வீதம் நிறுவிக் கொள்ள முற்படுகிறது.

கடன் நிதியின் தேவை, சிறப்பாக, இரு துறைகளிலிருந்து வருகிறது. உற்பத்தி (முதலீட்டு)க்காகக் கடன் வாங்குவோர், நுகர்வுக்காகக் கடன் வாங்குவோர் என இரு வகையினருள்ளனர். உற்பத்திக்காகக் கடன் வாங்குவோரின் தேவை, முதலின் விளை திறனைப் பொருத்திருப்பது வெளிப்படை. நுகர்வுக்காகக்கடன் வாங்குவோரின் தேவை, நிகழ்கால நிறைவின் மீதுள்ள விருப்பத் தேர்வைப் பொருத்துள்ளது. இவற்றின் அடிப்படையில், பல்வேறு வட்டி வீதங்களில் தேவைப்படுகிற கடன் நிதி அளவைக் காட்டும் கடன் நிதி தேவை வளைகோடொன்றை வரைய முடியும்.

கடன் நிதியின் அளிப்புப் பல துறைகளிலிருந்து வருகிறது. சேமிப்பே முதன்மையான துறை. ஆனால், வீணே குவித்து வைக்கிற சேமிப்பு, சேமிப்பின் அளிப்புப் பகுதி ஆகாது. இரண்டாவதாகக் கடன் நிதியின் அளிப்பு முற்காலத்தில் வீணே குவித்து வைக்கப்பட்டிருந்த சேமிப்புக்களிலிருந்தும் வரலாம். மூன்றாவதாக அரசாலோ பாங்குகளாலோ படைக்கப்பட்ட புதுப் பணத்திலிருந்தும் கடன் நிதி வரலாம். இவ்வாறு, பல்வேறு வட்டி வீதங்களில் அளிக்கப் பெறும் கடன் நிதி அளவைச் சுட்டிக்காட்டும் கடன் நிதி அளிப்பு வளைகோடொன்றை வரைய முடியும்.

இவ்விரு வளைகோடுகளும் அடுத்துள்ள படத்தில் காட்டப்பட்டுள்ளன. இங்கு H வளைகோடு நுகர்வுத் தேவையையும், I வளைகோடு முதலீட்டுத் தேவையையும், இவ்விரண்டினதும் கூட்டுத் தொகையான மொத்தத் தேவையை H+I வளைகோடும் சுட்டுகின்றன. இது போல S வளை கோடு சேமிப்பின் அளிப்பையும், M வளைகோடு புதுப் பணத்தின் அளிப்பையும், S+M வளைகோடு இவ்விரண்டினதும் கூட்டுத் தொகையாகிய மொத்த அளிப்பையும், சுட்டுகின்றன. இந்நிலையில், மொத்தத் தேவையும் மொத்த அளிப்பும் சமமாயிருக்கும் OP மட்டத்தில் வட்டி வீதம் முடிவாகிறது.

இந்தச் சமரசக் கோட்பாட்டைக் கெயின்ஸ் ஏற்றுக் கொள்ள வில்லை. அவர் சுட்டியுள்ள குறைபாடுகளை இங்குப் பார்க்கலாம். கடன் நிதிக் கோட்பாட்டின் முதலீட்டுத் தேவைப் பகுதியையே




கெயின்ஸ் குறை கூறியுள்ளார். முதலீடானது வட்டிவீதத்தைப் பொருத்திருப்பதாகக் கூறுவதைக் கெயின்ஸ் ஏற்றுக் கொள்ள வில்லை. உயர்வான வட்டிவீதத்திலும் இலாப வாய்ப்பு இருக்கு மானல் தொழிலதிபர்கள் கடன் வாங்க ஆயத்தமாக இருக்கின் றனர். இதற்கெதிராக நட்ட பயமிருக்குமானல், பூஜ்ய வட்டியி லுங்கூடத் தொழிலதிபர்கள் கடன் வாங்க முன்வர மாட்டார்கள். இவ்வாறு, முதலீட்டுத் தேவையானது வட்டி வீதத்தை அன்றி, இலாப வாய்ப்புக்களையே சார்ந்து உள்ளது என்பார் கெயின்ஸ். முதலீடானது வருமானத்தில் கொணரும் மாறுதல்களைக் கடன் நிதிக் கோட்பாடு புறக்கணிப்பதாகவும் கெயின்ஸ் கருதுகிருர். வட்டிவீதம் ஏறுவதாக வைத்துக் கொள்வோம் : இதனல், முதலீடு குன்றும். இதன் விளைவாக வருமானம் வீழ்ந்து, சேமிப்புக்களும் கூடக் குன்றிவிட வழியுண்டு. இதனல், முதலின் அளிப்பு வேறு, அதன் முதலீட்டுத் தேவை வேறு எனப் பகுத்தாய வழியில்லை என்ருகிறது. இறுதியாக, கடன்நிதிக் கோட்பாடு வேலை நிறைவு நிலவும் போதே உண்மையாகும் என்பார் கெயின்ஸ். வளங்க ளெல்லாம் ஆளப்பட்டு விட்டால், நிகழ்கால நுகர்வைத் துறக்கும் படித் தூண்டுவதற்காக வட்டியெனும் கைம்மாறைக் கொடுக்க

வேண்டியதுதான். ஆனால், வேலையின்மை நிலவும் போது, கைம் மாறெதுவும் தராமலே வளங்களை ஆட்சிக்குக் கொண்டு வரலாம். இவ்வாறு, வளர்ச்சி குன்றிய நாடுகளில் வட்டி என்ற தூண்டுதலில் லாமலே முதலைத் திரட்ட முடியும் என்பார் கெயின்ஸ்.

### இக்காலக் கோட்பாடு

தொன்மை மரபினர் கோட்பாட்டையும், கெயின்ஸின் கோட் பாட்டையும் இணைப்பதில் கடன்நிதிக் கோட்பாடு வெற்றி பெற்று விடவில்லை என்பது ஹிக்ஸ், லெர்னர் (Lerner) போன்ற இக்கால ஆசிரியர்கள் கருத்து. தொன்மை மரபினர் சுட்டும் சேமிப்புக் களோ ஒழுகு நிலையில் உள்ளவை; கெயின்ஸ் சுட்டும் பணத் தொகையோ நின்ற நிலையில் உள்ளது. இவ்விரண்டையும் இணைப் பது இயலாது என்பது இவர்களுடைய கருத்து. இவர்கள் விளக் கத்தின்படி வட்டி நிருணயமானது கீழ்வருமாறு நிகழ்கிறது.

சேமிப்பு, முதலீடு, நீர்மை விருப்பத் தேர்வு, பண அளிப்பு ஆகிய நான்கும் வருமானத்துடன் சேர்ந்து வட்டியை நிருணயிக் கின்றன என்பது இக்காலக் கோட்பாட்டின் அடிப்படை. பல்வேறு வருமான மட்டங்களில் சேமிப்பும் முதலீடும் எந்தெந்த வட்டிவீதங் களில் சமன்படுகின்றன என்பதையும், இதே போன்று பல்வேறு

| முதலீடு | | சேமிப்பு | |
|---|---|---|---|
| வட்டி வீதம் % | முதலீடு ரூ. கோடிக் கணக்கில் | வருமானம் ரூ. கோடிக் கணக்கில் | சேமிப்பு ரூ. கோடிக் கணக்கில் |
| 8 | 00 | 100 | 00 |
| 7 | 10 | 125 | 10 |
| 6 | 20 | 150 | 20 |
| 5 | 30 | 175 | 30 |
| 4 | 40 | 200 | 40 |
| 3 | 50 | 225 | 50 |
| 2 | 60 | 250 | 60 |

வருமான மட்டங்களில் எந்தெந்த வட்டிவீதங்களில் நீர்மை விருப்பத் தேர்வாகிய பணத் தேவையும் பண அளிப்பும் சமன்படுகின்றன என்பதையும் அறிய முடிந்தால் சமநிலை வட்டி வீதத்தை நிருணயிப்பது எளிது.

முன்பக்கப் பட்டியல், முதலீடும் சேமிப்பும் எட்டும் சமநிலையை விளக்குகிறது.

இந்தப் பட்டியலின் முதல், மூன்றும் பத்திகள் பல்வேறு வருமான மட்டங்களில் சேமிப்பும் முதலீடும் எந்தெந்த வட்டிவீதங்களில் சமன்படுகின்றன என்பதைச் சுட்டிக் காட்டுகின்றன. இவை இரண்டையும் இணைத்து எழுதினால் ஒரு முதலீடு—சேமிப்புப் பட்டியல் கிடைக்கிறது. அந்தப் பட்டியலை வரை படமாக்கினால், கீழ்




நோக்கிச் சரியும் முதலீடு சேமிப்பு (IS) வளைகோடு ஒன்று கிடைக்கும். (மேலே உள்ள படம் பார்க்க) வருமானம் உயர்வாக இருந்தால் சேமிப்பும் மிகுதியாக இருக்கும். சேமிப்பு மிகுதியாக இருந்தால் வட்டி வீதம் குறைவாகவே இருக்கும். இதனால், வருமானம் உயர உயர வட்டிவீதம் இறங்குவது இயல்பு.

இது போன்று, பின்வரும் பட்டியல் பண அளிப்பும் நீர்மை விருப்பத் தேர்வும் எட்டும் சமநிலையை விளக்குகிறது.

இந்தப் பட்டியலின் முதல், மூன்றும் பத்திகள் பல்வேறு வருமான மட்டங்களில் எந்தெந்த வட்டி வீதங்களில் நீர்மைவிருப்பத்

தேர்வாகிய பணத் தேவையும், பண அளிப்பும் சமன்படுகின்றன என்பதைச் சுட்டிக் காட்டுகின்றன. இவை இரண்டையும் இணைத்து

| வட்டி வீதம் % | பண அளிப்பு ரூ. கோடிக் கணக்கில் | வருமானம் ரூ. கோடிக் கணக்கில் | பணத் தேவை ரூ. கோடிக் கணக்கில் |
|---|---|---|---|
| 1 | 100 | 70 | 100 |
| 2 | 100 | 90 | 100 |
| 3 | 100 | 110 | 100 |
| 4 | 100 | 130 | 100 |
| 5 | 100 | 150 | 100 |
| 6 | 100 | 170 | 100 |
| 7 | 100 | 190 | 100 |
| 8 | 100 | 210 | 100 |

எழுதினால் ஒரு நீர்மை விருப்பத் தேர்வு-பணம் பட்டியல் கிடைக்கிறது. அந்தப் பட்டியலை வரைபடமாக்கினால், மேல் நோக்கிச்




செல்லும் நீர்மை விருப்பத்தேர்வு-பணம் (LM) வளைகோடு ஒன்று கிடைக்கும். (மேலேஉள்ள படம் பார்க்க). வருமான மட்டம் உயரும்

போது மக்களுடைய பணத்தேவை (நீர்மை விருப்பத் தேர்வு) உயர்கிறது. இதனால், வட்டிவீதமும் உயர்கிறது. இதனால் தான் இந்த வளைகோடு மேல் நோக்கிச் செல்கிறது.




இவ்விரு வளைகோடுகளின் உதவியால் எவ்வாறு வட்டி நிருணய மாகிறது என்பதை விளக்கலாம்: IS, LM வளைகோடுகள் ஒன்றை யொன்று வெட்டிக் கொள்ளும் இடத்தில் தான் வட்டியானது இறுதி யில் (QM) முடிவாகிறது. இந்த வீதத்தில் வட்டி, சேமிப்பு, முதலீடு ஆகியவை சமநிலை எய்துகின்றன. அதே நேரத்தில் பணத் தேவையும் அளிப்புங்கூட இந்த வீதத்தில் சமநிலை அடை கின்றன. வேறு சொற்களில் கூறுவதானால், Q புள்ளி இருமுகச் சமநிலை OM வருமான மட்டத்தில் உருவாகிறது என்பதும் தெளிவா கிறது. வேறு எந்த வீதத்திலும் இந்த இருமுகச் சமநிலை உருவா காது என்பதைக் கவனிக்க வேண்டும். ON ($M_1Q_1$) வட்டிவீத மாக இருந்தால் சேமிப்பும் முதலீடும் சமநிலை எய்தும்போது, பண அளிப்பும் தேவையும் சமநிலை எய்தவில்லை என்பது தெரிகிறது. இந்த வட்டி வீதத்தில் பண அளிப்பும் தேவையும் சமநிலை எய்த, வருமானம் $OM_2$ ஆக இருக்க வேண்டுமே யொழிய $OM_2$ ஆக இருந்தால் போதாது.

## வட்டியும் வேலையுடைமையும்

வேலையுடைமை, பொருள்களின் ஆயத்த நிலைத் தேவையைச் சார்ந்துள்ளது என்பது கெயின்ஸின் கருத்து. மக்களுடைய செல வீடுகளின் வழியாகத்தான் இந்த ஆயத்தநிலைத் தேவை செயல்படு கிறது. நுகர்வுத்தேவை, முதலீட்டுத் தேவை என இத்தேவையை இருகூறு ஆக்கலாம். நுகர்வுத்தேவை, நுகர்வின் மீதுள்ள மனச்

சார்பைப் பொருத்திருக்கிறது. முதலீட்டின் அளவானது முதலின் இறுதிநிலைத் திறமையையும் வட்டிவீதத்தையும் சார்ந்து உள்ளது. ஓர் அலகு புதிய முதல் கருவிச் சொத்திலிருந்து, அதன் உற்பத்திச் செலவுக்கு எச்சமாக எதிர்பார்க்கப்படும் மிக உயர்ந்த வருமான வீதமே முதலின் இறுதிநிலைத் திறமை. தன்னுடைய இலாபத்தை மிகவுயர்ந்த அளவினதாக ஆக்க வேண்டும் என எண்ணும் தொழில் முயல்வோன், முதலின் இறுதிநிலைத் திறமை, நடப்பு வட்டி வீதத்தை விட மிகுதியாக இருந்தால் முதலீட்டை மிகுத்துக் கொண்டே செல்வான்; முதலின் இறுதிநிலைத் திறமை நடப்பு வட்டி வீதத்தை விடக் குறைவாக இருந்தால் முதலீடு செய்ய மாட்டான். பொதுவாக, முதலின் இறுதிநிலைத் திறமை உயர்வாக இருந்தால் முதலீடும் மிகுதியாக இருக்கும் எனலாம். முதலின் இறுதிநிலைத் திறமை முற்றிலும் தொழில் முயல்வோர் எதிர்பார்ப்பை—அவர்களுடைய மனப்போக்கைச் — சார்ந்தது. மனப்போக்கு எளிதில் மாறத் தக்கதன்று. எனவே, வட்டிவீதம் குறைந்து முதலீட்டைப் பெருக்க வேண்டும் என்றாகிறது. குறைந்த வட்டி வீதம் வேலை மட்டத்தை உயர்த்தத் தக்கது என்பதே இதன் பொருள்.

குறைவான வட்டி கீழ்வரும் காரணங்களால், பொதுவாக, வரவேற்கப் படுகிறது.

முதல் அங்காடியில் ஏற்படுகிற நட்டங்களைக் குறைந்த வட்டி வீதங்கள் குறைக்கின்றன. இதனால், முதலீட்டு ஆர்வம் செழிக்க வகை ஏற்படுகிறது. வட்டிவீதம் உயர்கிறது என்றால் கடன் பத்திரங்கள் விலை இறங்க நேரும். 4 சதவீதம் தருகிற ரூ. 1000 கடன் பத்திரம் ஆண்டுக்கு ரூ. 40 ஈட்டும். குறிப்பிட்ட வகைக் கடன் பத்திரங்களின் வட்டிவீதம் இப்போது 5 சதவீதமாக உயர்வதாக வைத்துக் கொள்வோம். ஆண்டுக்கு ரூ. 40 ஈட்ட, இப்போது, ரூ. 800-க்குள் கடன் பத்திரங்கள் வாங்கினால் போதும். இதனால் ரூ. 200 முதல் நட்டம் ஏற்படுகிறது. இத்தகைய முதல் நட்டங்கள் முதல் அங்காடியைச் சிதைக்கின்றன. கடன் பத்திரங்களை வாங்க இருப்பவர்கள், முதல் நட்டத்தைத் தவிர்ப்பதற்காக, உடனடியாக வாங்கல் செயலில் ஈடுபட மாட்டார்கள். இதனால், அங்காடியில் புதிய முதலீட்டு முயற்சி எதுவும் வெற்றி பெற வழியில்லாமல் ஆகிறது. இதற்கு நேரெதிரான நிலை வட்டி வீதம் குறையும்போது ஏற்படுவதால், அது முதலீட்டை ஊக்குவிப்பதாகிறது.

நெடுங் கால முதல் ஆக்கத்திற்கும் குறைந்த வட்டிவீதங்கள் உதவும். வீடு கட்டுதல், பொதுப்பயன் துறைகள் முதலிய தொழில்களில் முதலீடு செய்வது வட்டிவீதங்களையே பொருத்துள்ளது.

குறைந்த வட்டிவீதங்கள், கடன்வழி ஆகும் பொதுத்துறை முதலீட்டையும் ஊக்குவிக்கின்றன. பற்றுக்குறை நிதியாக்கத்தைப் பெரிய அளவில் கடைப்பிடிக்க உதவும் குறைந்த வட்டி வீதங்கள் அரசக் கடன் பத்திரங்களின் விலையை உயர்த்துவதால், அரசால் எளிதில் புதுக்கடன் எழுப்பவும் முடியும்.

குறைந்த கூலிவீதக் கொள்கையுடன் ஒப்பிடும்போது, வேலை இன்மையைப் போக்குவதற்குக் குறைந்த வட்டிவீதக் கொள்கையே சாலச் சிறந்தது ஆகிறது. குறைந்த கூலிவீதங்களைத் தொழிற்சங்கங்கள் வரவேற்காத நிலையில் நிலைமை சிக்கல் மிக்கதாக ஆகிவிடும். மேலும், கூலிவீதக் குறைப்பால் ஆகமொத்தப் பொருள் தேவை குறைய நேர்வதால், வேலையின்மை அச்சுறுத்தும் நிலை தோன்ற வழியுண்டு.

வேலை உடைமைக் கண்ணோட்டத்தில் பார்க்கும் போது குறைந்த வட்டிவீதங்களில் சில குறைபாடுகளும் இல்லாமல் இல்லை. வட்டியைக் கொண்டு வாழ்பவர்கள் குறைந்த வட்டிவீதங்களை வரவேற்க மாட்டார்கள். சிக்கன வாழ்க்கை ஊக்கமிழக்கும். சொந்த வலுவில் நிற்க முடியாதவர் வாழ்வில் புதியதோர் உறுதியின்மைக் கூறு தோன்றலாம். பாங்குகளின் வருமான நிலையும் பாதிக்கப்படலாம்.

மேலும், முதலீடு வட்டிவீத மாறுதல்களுக்குத் தக்கவாறு நெகிழ்ந்து கொடுக்கத் தக்கதா என்றும் கவனிக்க வேண்டும். வட்டிவீதம் குறைந்துள்ள ஒரே காரணத்தால் முதலீடு பெருக வேண்டும் என்று இல்லை. முதலீட்டாளர்களின் எதிர்கால எதிர்பார்ப்பு மந்தமாக இருந்தால், முதலின் இறுதிநிலைத் திறமை குறைவாக இருக்கிற காரணத்தால், குறைந்த வட்டி வீதத்திலும் முதலீடு முன்வராது. தம்முடைய தொடக்க கால நூல்களில் முதலீட்டைப் பெருக்குவதற்கு ஒரு வழியாக வட்டிவீதக் குறைப்பைப் பரிந்துரைத்த கெயின்ஸ், தம் பொதுக் கோட்பாடு பக்கங்களில் வட்டி வீதங்களின் ஆற்றலில் அவ்வளவு நம்பிக்கை தெரிவிக்கவில்லை என்பதும் இங்குக் கருதத் தக்கது. நடைமுறை பற்றிய பல ஆய்வுகளும் இந்த முடிவுக்கே வந்துள்ளன.

வட்டிவீதம் குறைவதற்கும் ஒரு வரையறை உண்டு. 2—4 சத வீதங்களுக்குக் குறைவாக வட்டிவீதத்தை நிறுவ முடியாது என்பது பலர் கருத்து. மிகத் தாழ்வான வட்டி மட்டங்களில் நீர்மை விருப்பத் தேர்வு நிறைந்த நெகிழ்ச்சியுடன், திகழ்ந்து விடுவதே இதற்குக் காரணம். (கீழ் மட்டங்களில் நீர்மை விருப்பத் தேர்வு வளைகோடு

படுகிடையாகவே ஆகிவிடுகிறது).[1] மிகக்குறைந்த மட்டங்களில், வட்டிவீதம் எதிர்பாராதபடி இனி ஏறும் என்று பலரும் எண்ணுவதால், அந் நிலையில் கடன் பத்திரங்களைக் கையில் வைத்திருக்க யாரும் விரும்புவதில்லை. மேலும் கடன் வாங்கியவர்கள் திருப்பித் தரத் தவறுகிற ஆபத்தை ஈடுகட்டும் வகையில் குறிப்பிட்ட அளவாவது வட்டிவீதம் இருந்தாக வேண்டும் என்று கடன் கொடுப்போர் எப்போதுமே எதிர்பார்ப்பார்கள்.

இருந்தாலும் வீடுகட்டுதல், சாலைகள், பாலங்கள் அமைத்தல் போன்ற துறைகளில் முதலீடு செய்யப்பட வேண்டுமெனில் வட்டிவீதம் மிகக் குறைவாக இருப்பதே நல்லது. இங்குக் குறைந்த வட்டி வீதங்களே முதலீட்டையும், அதன் வழியாக வேலையுடைமையையும் பெருக்கத் தக்கன.

## குறுங் கால, நெடுங் கால வட்டிவீதங்கள்

வழங்கப்பட்டுள்ள காலத்தின் அடிப்படையில் கடன்கள் இரு வகைப்படும். இரண்டு அல்லது மூன்று மாதங்களுக்குள் திருப்பித் தரவேண்டிய கடன்கள் குறுங் காலக் கடன்கள், 'மாற்று உண்டியல்கள்' (Bills of Exchange),'கருவூல உண்டியல்கள்'(Treasury Bills), 'அதிகப் பற்றுக்கள்' (Overdrafts), பாங்கு வைப்புத் தொகைகள் முதலியவை குறுங் காலக் கடன்கள். நெடுங் காலக் கடன்கள் நீண்ட காலத்துக்குப் பின்னர் திருப்பித்தர வேண்டியவை. இவற்றுள் சில நிரந்தரக் கடனுவும் இருக்கலாம்.

குறுங் கால வட்டிவீதத்தை நிருணயிக்கும் முதன்மையான காரணிகள் கீழ்வருவன :

1. முதலீட்டுப் பணிகளின் கடன் தேவையும் அளிப்பும் : உயரும் விலைகளையும் இலாபத்தையும் வணிகர்கள் எதிர்பார்க்கும் போது கடன் தேவை வளரும். இதனுல், வட்டிவீதமும் உயரும். புதிய கண்டு பிடிப்புக்கள் இலாப வாய்ப்புள்ள முதலீட்டுத் துறைகளைத் தருவதால் வட்டிவீதத்தை உயர்த்தத் தக்கன. இது போன்றே உற்பத்திக் குறைவு, வருமானவரி வீத உயர்வு, வேலை நாள் குறைப்பு முதலியவை மக்களுடைய நிகர வருமானம், சேமிப்பு ஆகியவைகளைக் குறைத்து, முதல் பற்றுக் குறைக்குக் காரணமாகி, வட்டிவீதத்தை உயர்த்தி விடுகின்றன.

2. நாட்டின் பொருளியல் வளர்ச்சி நிலை: தொழில் பூரிப்புக் காலத்தில் வட்டிவீதம் உயர்வாகவும், மந்த காலத்தில் குறைவாகவும் இருக்கும்.

[1] நீர்மை விருப்பத் தேர்வுக் கோட்பாடு பார்க்க

3. அரசக் கொள்கைகள்: பொதுவான அரசியல் அமைதியின்மை கடன்கள் தேவையைக் குறைத்து, வட்டிவீதத்தைக் குறைத்து விடும். உலகளாவிய அரசியல் நெருக்கடிகளும் இத்தகையன.

குறுங் கால வட்டிவீதம் குறைவாக இருப்பதே இயல்பு. பாங்குகளிடம் நடப்பு வைப்புத் தொகை போன்ற சில நிதிகள் எப்பொழுதும் இருக்கும். இவற்றை நெடுங் காலக் கடன்களாகத் தரமுடியாது. எனவே, இவற்றைக் குறைந்த வட்டியில் குறுங் காலத்துக்குக் கடனாகத் தர பாங்குகள் இசைந்து நிற்பது இயல்பு. நெடுங் காலக் கடன்களில் ஓர் உறுதியின்மைக் கூறு எப்பொழுதும் இருப்பதால், அவற்றுக்கு ஓர் உயர்வீத வட்டி கோருவதுதான் இயல்பு.

முதலின் இறுதிநிலை விளைதிறன், முதலின் அளிப்பு ஆகிய இரண்டும் மாறும் போதே நெடுங் கால வட்டிவீதம் மாறும் என்பது தொன்னூலாளர் கருத்து. உற்பத்தி முறை, புதிய கண்டுபிடிப்புக்கள், அறிவியல் முன்னேற்றம் ஆகியவையே முதலின் இறுதி நிலை விளைதிறனைக் கட்டுப்படுத்துகின்றன. புதிய கண்டுபிடிப்புக்கள் விளைதிறனை உயர்த்தி, முதலின் தேவையையும் உயர்த்தி விடுகின்றன. இருந்தாலும், கண்டுபிடிப்புக்கள் முதலை மிச்சப்படுத்தும் வகையினதாக ஆகும் போது வட்டிவீதம் இறங்காமல் இருக்க வழியில்லை. இருபதாம் நூற்றுண்டைய கண்டுபிடிப்புக்கள் இவ் வகையின என்று சொல்லப்படுகிறது. எனவே, பொருளியல் வளர்ச்சியையொட்டி வட்டிவீதம் இறங்கிச் செல்வது நிகழத் தக்கதே. முதலின் அளிப்புப் பற்றிச் சிந்திக்கும் போது, சேமிப்பை நிருணயிக்கும் காரணிகளின் போக்கையே வட்டிவீதம் சார்ந்துள்ளதைப் புரிந்து கொள்ளலாம். இக் காரணிகளில் குடும்பப் பற்று, முன்னேறும் ஆர்வம், சிக்கன நோக்கு முதலியவை உளவியல், ஆள்திறக் காரணிகளாகவே உள்ளன. இவற்றில் ஏற்படும் மாறுதல்கள் வட்டிவீதத்தை மாற்றத் தக்கவை ஆகிவிடுகின்றன.

மிக நெடுங் காலத்தில் வட்டிவீதம் குறைந்து செல்ல முற்படும் என்பதே, பொதுவாக, ஆசிரியர்களுடைய கருத்து. கெயின்ஸின் கருத்தும் இதுவே. கால அளவில், மேலும் மேலும் முதல் திரட்டப் படும் போது, புதிய முதலீடுகளிலிருந்து பெற முடிகிற ஆதாயம் குறைந்து செல்ல நேர்ந்து, வட்டிவீதம் குறைந்து செல்ல முற்படும் என்பார் அவர். 'முதலின் மிக நெடுங் காலத் தேக்க நிலை' (Secular Stagnation of Capital) என இதனை வருணிப்பார் கெயின்ஸ். எச்சச் சேமிப்பும், போதா முதலீடுமே இதற்குக் காரணங்கள். குறைந்து செல்லும் நுகர்வின் மீதுள்ள மனச் சார்பு, வருமான

ஏற்றத் தாழ்வுகள், கம்பெனி சேமிப்புக்கள், காப்பீட்டுக் கழகங்களின் வளர்ச்சி ஆகியவை எச்சச் சேமிப்பைக் கொண்டு வரும். மக்கள் தொகை வளர்ச்சி, தொழில் நுட்பப் புத்தாக்கங்கள், குடியேற்ற நாடுகளில் முதலீடு செய்வதற்குள்ள வாய்ப்புக் குறைவு, தொழிற்சங்கங்கள், முற்றுரிமைகள் ஆகியவற்றின் வளர்ச்சி முதலியவை போதா முதலீட்டுக் காரணமாகின்றன.

# 8. இலாபம்

தொழில் துணிவோன் பணிக்குக் கிடைக்கும் கைம்மாறுதான் இலாபம். உற்பத்திக்குரிய கைம்மாறு என்ற வகையிலும் பிற காரணிகள் பெறும் பங்குக்கும் இலாபத்திற்கு மிடையே சில வேற்று மைகள் உள்ளன. முதலாவதாக, இலாபமானது எதிர்க் கணிய மாகவும் இருக்கலாம்; அதாவது, நட்டமும் ஏற்படலாம். இரண் டாவதாக, பிற எந்த வருமானத்தையும் விடப் பெரியதோர் அளவில் இலாபமானது நிலையற்றதாகவும் இருக்கிறது. இறுதியாக அது முன்பணமாகத் தரப்படுவதன்று என்பதையும், பிற காரணி களெல்லாம் பெற்றது போக எஞ்சியிருப்பதே அமைப்புக்குக் கிடைக்கிறது என்பதையும் கவனிக்க வேண்டும்; இதனால், அது உறுதிப்பாடற்றதாகவும் இருக்கிறது.

'இலாபம்' என்று சொல்லும்போது, 'மொத்த இலாபம்' வேறு, 'நிகர இலாபம்' வேறு என்பதைப் புரிந்துகொள்ள வேண்டும். விற்ற விலை—வாங்கின விலை = இலாபம் என்ற வாய்பாடு மொத்த இலாபத்தையே குறிக்கிறது. இந்த இலாபமானது பல இனங்களை உட்கொண்டு உள்ளது.

1. தொழில் துணிவோனால் சொந்தமாக அளிக்கப்பட்டுள்ள முதல், நிலம் ஆகியவற்றுக்குரிய ஊதியம் மொத்த இலாபத்தின் ஒரு பகுதி.

2. மேற்பார்வைக்குரிய கூலி இரண்டாவதொரு பகுதி. பிறி தோரிடத்தில் சம்பளத்துக்கு அமர்ந்தால் தொழில் துணிவோனால் ஈட்ட முடிகிற கூலியே இங்குக் குறிப்பிடப்படுவது.

3. ஆபத்து ஏற்பு, அல்லது உறுதியின்மையைத் தாங்குவதற் குரிய ஊதியமும் மொத்த இலாபத்தினுள் அடங்கியிருக்கிறது.

4. மொத்த இலாபத்தின் மற்றொரு பகுதி 'புதுமை' (Innovation) களிலிருந்து வருகிற வருமானம், புதிய பொருள்களை, புதிய வினைமுறைகளை, அல்லது புதிய அங்காடியை அறிமுகப்படுத்துவதையே பேராசிரியர் ஷும்பீட்டர் (Schumpeter) புதுமை என்று குறிப்பிடுவார்.

5. முற்றுரிமை ஆற்றலின் வழியாகப் பெறுகிற வருமானமும் மொத்த இலாபத்தின் ஒரு கூறு. உரிமங்கள், பதிப்புரிமைகள், தொழில் இரகசியங்கள், தொழிற் கூட்டுக்கள், அரிதான வளங்கள் மீதுள்ள ஆதிக்கம் போன்ற பலவற்றில் இருந்து பெறுகிற வருமானமே, இங்கு, இவ்வாறு குறிப்பிடப்படுகிறது.

6. முற்றுரிமைப் போட்டியில், பொருள் வேறுபாட்டால் பெறுகிற வருமானமும் மொத்த இலாபத்துடன் சேர்க்கப்படுகிறது.

7. இறுதியாக, எதிர்பாரா வருமானங்கள்—அல்லது, சூழ்நிலைகளால் வருகிற வருமானங்கள்—மொத்த இலாபத்தின் வேறொரு பகுதியாகின்றன. சுவை நிலை மாறுதல்களாலும், போர், பணவீக்கம் முதலியவற்றாலும் திடீரென விலை ஏறும்போது தோன்றுகிற வருமான வகைகளே இவ்வாறு குறிப்பிடப்படுகின்றன.

மேலே கண்ட ஏழு இனங்களில், முதலிரண்டு இனங்களும் இறுதி இனமும் தொழில் துணிவோனின் அமைப்புப் பணியினால் தோன்றியவையன்று. எனவே, இவை தவிர எஞ்சியுள்ள இனங்களின் வழியாக வருகிற வருமானமே அமைப்புப் பணிக்குரிய கைம்மாறு. இவற்றின் கூட்டுத் தொகை தான் நிகர லாபம்.[1]

சமதருமக் கருத்தினர், இலாபமானது வெறும் கொள்ளையும் திருட்டுமே யாகுமென்பர். மதிப்பைப் படைப்பது உழைப்பாளர் மட்டுமேயாதலால், மதிப்பனைத்தும் உழைப்பாளர்க்கே உரியது; அதில் இலாபமென ஒரு பங்கைப் பெறத் தொழில்துணிவோனுக்கு உரிமை யில்லை என்பது அவர்கள் கருத்து. இலாபமானது 'சட்டத்தால் சரி செய்யப்பட்ட கொள்ளை' (Legalised robbery) என்று கூட அவர்கள் குறிப்பிடுவதுண்டு. இக் கருத்தும் பிழையானதே யாகும். உழைப்பு மட்டுமன்றி, முதலும் அமைப்புங் கூட உற்பத்திக்கு வேண்டும்; தொழில்துணிவோன் பணியும் உற்பத்திக்கு இன்றியமையாதது. பிற காரணிகளை யெல்லாம் ஒன்று சேர்த்து, தொழிலில் உள்ள நட்ட ஆபத்துக்களையும் ஏற்க முன் வருபவன்

[1] தொழில் துணிவோன் சொந்த முதலுக்குரிய வட்டியையும் நிகர இலாபத்தின் ஒரு பகுதியாக மார்ஷல் கொள்வார்.

தொழில்துணிவோன். இப் பணிகளுக்கெல்லாம் தக்க கைம்மாறு பெறத் தொழில்துணிவோனுக்கு உரிமையுண்டு. எனவே, இலா பமனைத்தும் கொள்ளையே எனக் கண்டிப்பது சரியன்று.

ஒரு சமதரும ஏற்பாட்டில் இலாபம் நிலவுமா என்ற ஒரு வினு எழுப்பப்படுகிறது. சமதரும நாட்டில் உற்பத்தி வழிவகைளெல் லாம் அரசின் ஆதிக்கத்தின்கீழ் இருக்கின்றன. அங்கே அமைப்பு என்றவொரு உற்பத்திக் காரணி புறக் கண்களுக்குத் தென்படாத நிலை கூட ஏற்படலாம். ஆனுல், ஒவ்வொரு சமதரும நாட்டிலும் சராசரி உற்பத்திச் செலவை மிகக் குறைந்த அளவிலாக்கி, உற் பத்தியைக் கட்டுப்படுத்தும் பணியொன்று இருக்கத்தான் செய் கிறது. இப் பணியைத் தனியார் செய்யாத நிலையில், ஓர் ஆர் திற வருமான வகை என்ற முறையில் இலாபமானது மறைந்து போகலாம்; ஆனுல், இலாப நோக்கு மறைந்து விடுவதாகச் சொல்ல முடியாது. சோவியத் நாட்டில் அண்மையில் புகுத்தப் பட்டுள்ள சீர்திருத்தங்கள் இந்த முடிவைத்தான் வலியுறுத்து கின்றன.

## இலாபக் கோட்பாடுகள்

### இலாபம் பற்றிய வாரக் கோட்பாடு

அமெரிக்கப் பேராசிரியர் வால்க்கர் கருத்துப்படி இலாபம் வாரத்தைப் போன்ற ஒன்றுகும். இலாபத்தின் அளவு தொழில் துணிவோனின் ஆற்றலைப் பொருத்தது. பல்வகை நிலங்கள் இருப்பது போல ஆற்றலிலும் பலவகைகள் உள்ளன. குறிப்பிட்ட தொரு நிலத்தின் வாரம், அது இறுதிநிலை நிலத்தை விட எந்த அளவுக்கு விளைதிறன் மிக்கது என்பதைப் பொருத்திருக்கிறது. இதுபோல, தொழில் துணிவோன் ஒருவனது இலாபம், அவன் எந்த அளவுக்கு இறுதிநிலை உற்பத்தியாளனை விட மேம்பட்டிருக் கிருன் என்பதையே பொருத்திருக்கிறது. 'வாரமிலி' நிலம் இருப் பது போல, இலாபமிலாத் தொழில்துணிவோன் ஒருவனும் உள்ளான். இவன் பெறுவது நிருவாகப் பணிக்குரிய கூலி மட்டுமே; இந்த இறுதிநிலைத் தொழில் துணிவோன் பெறுவதற்கு எச்சமாகப் பிற தொழில்துணிவோர் பெறும் வேறுபாட்டெச்சமே இலாபம் என்பார் வால்க்கர்.

நிலத்தின் வாரம் பொருளின் உற்பத்திச் செலவில் ஒரு பகுதி அன்று. இதுபோன்றே பொருளின் விலையானது இறுதிநிலைத் தொழில்துணிவோனின் உற்பத்திச் செலவால் முடிவு செய்யப்படு கிறது; இந்த இறுதிநிலைத் தொழில்துணிவோன் இலாபமின்றி

இருக்கிறன் ; எனவே, இலாபத்தைப் பகுதியாகக் கொண்டிராத அளவு உற்பத்திச் செலவுக்குச் சமமாக விலை இருப்பதால், விலையின் ஒரு பகுதியாக இலாபமும் இருப்பதில்லை.

நெடுங் காலக் கண்ணேட்டத்தில் பார்த்தால், நிகர இலாபம் அறவே இல்லாமலும் ஆகி விடலாம். நல்ல நிலத்தின் அளிப்பு வரையறைக் குட்பட்டதால் வாரம் நிலைத்து நிற்கத் தக்கது. ஆனல், தொழில்துணிவோன் அளிப்பு மாருதிருப்பதன்று. புதிய தொழில்துணிவோர் வர வாய்ப்பிருப்பதால், உற்பத்தி பெருகி விலை மட்டம் இறங்கி, எல்லா நிறுவனங்களது இலாபத்தையும் குறைத்து விடலாம். இவ்வாறு, இலாபம் வரவரக் குறைந்து சென்று, இறுதியில் பூஜ்யமாகி விடலாம். இந் நிலையில், நெடுங் காலத்தில் தொழில்துணிவோனல், தன்னுடைய மேற்பார்வைப் பணிக்குரிய கூலியை மட்டுமே பெற முடியும்.

இக் கோட்பாட்டில் பல்வேறு குறைபாடுகள் இருப்பது ஆழ்ந்து சிந்திக்கப் புலப்படும்.

மார்ஷல் சுட்டியுள்ள குறைபாட்டை முதலில் பார்க்கலாம். இயல்பான அளிப்பு விலையின் பிரிக்க முடியாத ஒரு பகுதி இலாபம் என்பார் மார்ஷல். குறுங் காலத்தில் இலாபமானது விலையின் ஒரு பகுதியாக இல்லாமலிருக்கலாம். ஆனல், நெடுங் கால விலையானது இலாபத்தையும் ஈடுகட்டப் போதுமானதாக இருக்க வேண்டும். இல்லையேல், தொழில் துணிவோர் தொடர்ந்து தொழிலில் ஈடுபடுவதில் ஆர்வமின்றியிருப்பர். மார்ஷலது கருத்துப்படி, விலையானது மாதிரி நிறுவனத்தின் உற்பத்திச் செலவால் முடிவு செய்யப்படுகிறது. 'இயல்பான பருமச் சிக்கனங்களுடன், நேர்மையான அளவு வெற்றியுடன், இயல்பான ஆற்றலுடைய நிருவாகிகளால் நெடுநாள் வெற்றிகரமாக நடத்தப்படுகிற நிறுவனமே 'மாதிரி நிறுவனம்' (Representative Firm) என்பார் மார்ஷல். அத்தகைய நிறுவனம் ஈட்டுகிற இலாபம் நேர்மையான அளவினதாயிருக்கும். அந்த அளவு இலாபமே, அத் தொழிலின் 'இயல்பான இலாபம்' (Normal Profit) என்பார் மார்ஷல். இந்த இலாபம் இறுதிநிலை உற்பத்திச் செலவின் ஒரு பகுதி. இந்த வீத இலாபத்தைப் பெற வாய்ப்பில்லையேல், உற்பத்தியானது வெட்டிக் குறைக்கப்பட்டு, இலாபவீதம் இயல்பான மட்டத்தை எட்டுவதுவரை விலையானது ஏறிக் கொண்டிருக்கும்.

இலாபம் பெருத தொழில் துணிவோன் எவனும் நடைமுறையில் இல்லை. இலாபமில்லையேல், தொழில் துணிவோன் எவனும்

ஆபத்தேற்க முன்வர மாட்டான். நிருவாகக் கூலி மட்டுமே கிடைக்குமென்ருல், சம்பளத்துக்கு வேலை செய்ய ஒருவன் துணி வானே யொழிய ஆபத்தேற்க முன்வர மாட்டான். ஆபத்தேற்க இலாபம் இன்றியமையாதது எனலாம். எனவே, இயல்பான இலாபம் ஒரு நாளும் பூஜ்ய நிலையை எட்ட முடியாது.

நிலத்தையும் தொழில்துணிவோனையும் ஒப்பிடுவது தவறு. நிலத்துக்கென அளிப்பு விலை யென ஒன்றில்லை. தொழில் துணிவு அத்தகையதன்று. மேலும், வாரம் ஒருபோதும் எதிர்க்கணியமாவ தில்லை. ஆனல், இலாபமோ எதிர்க் கணியமாவதுண்டு. நட்டம் ஏற்பட வாய்ப்பிருப்பதே இவ்வாறு குறிப்பிடப் படுகிறது.

தொழில்துணிவோனின் மிகச் சிறந்த பணி ஆபத்து ஏற்பு. தொழில்துணிவோன் ஆற்றலால் மட்டும் தோன்றுவதன்று இலாபம். இந்த ஆபத்து ஏற்புப் பணி பற்றிய இக் கோட்பாடு எதுவும் கூருதி ருப்பது தவறு.

இறுதியாக, கூட்டுப் பங்குக் கம்பெனிகளின் சாதாரணப் பங் காளர் சமவீதத்தில் இலாபம் பெறுவதற்குரிய காரணத்தை இக் கோட்பாடு கொண்டு விளக்க முடியாது. முடிவாகச் சொல்வதானுல் இக் கோட்பாடு பல்வேறு தொழில் துணிவோர் பெறுகிற இலாபங் களிடையேயுள்ள வேறுபாடுகளை வேண்டுமானுல் விளக்குவதாக இருக்கலாம் ; ஆனல், இலாபத்தின் அளவு பற்றியோ, அல்லது அதன் தோற்றம் பற்றியோ எந்த உண்மையையும் சொல்வதாக அமைந்திருக்க வில்லை.

## இலாபம் பற்றிய கூலிக் கோட்பாடு

டாசிக், டாவன்போர்ட் போன்ருேரது கருத்துப்படி இலாபம் ஒருவகைக் கூலியே. உழைப்பாளிக்கும் தொழில்துணிவோனுக்கு மிடையே வேறுபாடு எதுவுமில்லை என்பது இவர்கள் கருத்து. ஒரு வனது உழைப்பு உடலுழைப்பாகவும், அடுத்தவனது உழைப்பு மன உழைப்பாகவும் இருக்கலாம். இதன் அடிப்படையில், இரண்டை யும் வேறுபடுத்த வேண்டியதில்லை என்று இவர்கள் கருதுகின்றனர். இதன்படி, இலாபமானது தொழில்துணிவாற்றலின் அளிப்பையும் தேவையையும் சார்ந்துள்ளது.

இக் கருத்து தவருனதென ஸே (Say) போன்ற ஆசிரியர்கள் மிகப் பழங் காலந்தொட்டே எடுத்துக் கூறிவந்துள்ளனர். கூலிக் கும் தொழில்துணிவுக்குரிய ஊதியத்துக்கும் இடையே முதன் முதலில் வேறுபாடு கண்டவர் ஸே. உழைப்பாளர்க்கும் தொழில்

துணிவோர்க்குமிடையே அடிப்படையானதொரு வேறுபாடு இருக்கிறது. தொழில்துணிவோன் ஆபத்தேற்கும் அரும்பணி புரிகிறான்; உழைப்பாளன் அத்தகையவனல்லன். மேலும், நடைமுறையில், கூலியானது ஓர் உடன்படிக்கையின் வழி முடிவாகிறது; இலாபமோ ஓர் எச்ச வருமானம். போர் போன்ற எதிர்பாராக் காரணங்களால் இலாபமானது மாற நேரலாம்; கூலி அத் தகையதன்று என்பதும் இங்குக் கவனிக்கத் தக்கது. இலாபத்தின் ஒரு பகுதி, போட்டி நிறை குறைந்திருக்கும்போது தோன்றுவதாகும்; ஆனால் போட்டி நிறை குறைந்திருக்கும்போது, கூலிகள் (இலாபத்தைப் போல வளர்ந்து செல்லாது) குறைந்து செல்லவே முற்படுகின்றன. மேலும் குறுங் காலத்தில் பொருளின் விலை இலாபத்தை ஈடுகட்டியாக வேண்டும் என்றில்லை; ஆனால் குறுங் கால விலை கூலியை உறுதியாக ஈடுகட்டியாக வேண்டும் என்றும் பார்த்தோம். இவற்றால், இலாபம் ஒரு வகைக் கூலியே எனச் சொல்வது பொருந்தாது.

## ஆபத்து ஏற்புக் கோட்பாடு

தொழில்துணிவோன் நட்ட ஆபத்துக்களை ஏற்றுக் கொள்வதால் பெறுகிற கைம்மாறே இலாபம் என அமெரிக்க ஆசிரியர் ஹாலி (Hawley) கருதுகிறார். புறக் காரணிகளால் ஏற்படும் ஆபத்து ஒரு புறமிருக்க, எதிர்காலத் தேவையை எதிர் பார்த்து முன்னரே உற்பத்தி செய்யும் இந்நாளைய உற்பத்தி முறையினுள்ளேயே நட்ட ஆபத்தொன்று தொக்கி நிற்கிறது. இந்த ஆபத்தை ஏற்றுக் கொள்ளும் பணியைப் புரிபவன் தொழில்துணிவோன்; அதற்கென அவன் பெறுகிற கைம்மாறு இலாபம். இவ்வாறு ஒரு கைம்மாறு பெற வாய்ப்பில்லையேல், தொழில்துணிவோர் பணிபுரிய முன்வர மாட்டார்கள்.

இக் கோட்பாட்டில் ஒரு சில குறைபாடுகள் சுட்டிக் காட்டப் படுகின்றன. கார்வர் (Carver) கூறுவது போல, ஆபத்தை 'ஏற்பதாலன்று, ஆபத்தைத் 'தவிர்ப்ப'தால் தான் இலாபம் அடைய முடிகிறது.

நைட் சுட்டும் குறை அடிப்படையானவொன்று. அவர் ஆபத்துக்களை இரு வகைகளாகப் பகுத்துள்ளார். தீ, விபத்து போன்றவற்றில் ஏற்படுகிற ஆபத்தை முன்னுணர முடியும். இவ்வாறு முன்னுணர முடிகிற ஆபத்துக்களுக் கெதிராகக் காப்பீடு செய்து கொள்ள முடியும். எனவே, இக் காப்பீட்டுச் செலவுகள் உற்பத்திச் செலவின் ஒரு பகுதியாகின்றன. இவ் வகை ஆபத்துக்களை ஏற்றுக் கொள்ளக் காப்பீட்டுத் தொழிலகங்கள் சித்தமாயுள்ளன. இவற்றுக்கு மாறாக, முன்னுணர முடியாத சில ஆபத்துக்களுள்ளன.

இவற்றை 'உறுதியின்மைகள்' என நைட் (Knight) அழைப்பார். இவ் வுறுதியின்மைகளை ஏற்பதுதான் தொழில் துணிவோன் பணி என நைட் கருதுகிறுர்.

தொழில் துணிவோன் ஈட்டுகிற வருமானம் நட்ட ஆபத்து ஏற்புப் பணிக்காக மட்டும் தரப் பெறுவதன்று. அவனது மேலான அமைப்பாற்றல், முற்றுரிமை ஆற்றல் அல்லது ஆகூழ் வாய்ப்புக்கள் போன்ற பலவற்றையும் இலாபம் சார்ந்துள்ளது. நட்ட ஆபத்தின் அளவுக்கேற்ப இலாபம் இருந்தாக வேண்டும் என்றில்லை.

நட்ட ஆபத்தை ஏற்பது தொழில் துணிவோன்தாஞ என்பதில் கிளார்க் (Clark) ஐயமொன்றை எழுப்பியுள்ளார். நட்டமடையும் போது, அவ்வளவையும் இழப்பது முதலாளி என்பது அவர் கருத்து. வெறுங்கையினஞன தொழில் துணிவோன் இழப்பதற்கு என்ன இருக்கிறது? என்பார் அவர்.

தொழில் துணிவோர்களில் சிலர் சம்பள அலுவல்களில் ஈடு படாமல், ஆபத்துள்ள தொழில்களை விரும்பித்தேரக் காரணம், தொழில் நடத்துவதில் தன்னுரிமையுடன் செயல்பட வாய்ப்பிருக் கிறது என்பது தான். இத் தகையவர்கள் தொழில்களைத் தேரும் போது, நட்ட ஆபத்தை அவ்வளவாகப் பொருட் படுத்துவதில்லை என்பதையுங் கவனிக்க வேண்டும்.

### உறுதியின்மை ஏற்புக் கோட்பாடு

இக் கோட்பாட்டைத் தந்தவர் பேராசிரியர் நைட். இக் காலத் தொழிலுலகின் முதன்மையான கூறுகளிலொன்று அங்கு நிலவும் நட்ட ஆபத்துக்கள் என்பதில் நைட்டுக்குக் கருத்து வேற்றுமை இல்லை. ஆஞல், இந்த ஆபத்துக்களில் சிலவற்றை முன்னுணர்ந்து காப்பீட்டு உறுதி செய்து கொள்ள முடியும். இறப்பாலும், திருட் டாலும், தீயாலும் நேர்கிற ஆபத்துக்கள் இவ் வகைப்படுவன. ஆஞல், எந்நிலையிலும் முன்னுணர முடியாத தொழில்வகை ஆபத் தொன்றுள்ளது. அங்காடிச் சூழல்களைத் தவருக எடை போட்டு விடுவதே அவ் வாபத்து. இதனைக் காப்பீடு செய்து கொள்ளவோ, அதன் வழியாக ஆபத்தேற்பைக் காப்பீட்டுத் தொழிலகங்களுக்கு மாற்றிக் கொடுக்கவோ முடியாது. இவற்றுக்கு 'உறுதியின்மைகள்' (uncertainties) என்ற பெயரை நைட் சூட்டுகிறுர். இவ்வுறுதி இன்மைகளை ஏற்றுக் கொள்வது தொழில் துணிவோன் பணி. இப் பணிக்குரிய கைம்மாறே இலாபம் என்பார் நைட்.

இந்த உறுதியின்மைகளை நான்கு வகைப்படுத்தலாம். விற்பனை ஆபத்துக்கள், தொழில் நுட்ப ஆபத்துக்கள், வணிகச் சகட

ஆபத்துக்கள், பொருளாதார அமைப்பு மாறுதல் ஆபத்துக்கள் என்பவையே அந்நால்வகை ஆபத்துக்கள். தேவை இறக்கம், புதிய போட்டியாளர் நுழைவு, பதிலீட்டுப் பொருள்கள் தோற்றம் முதலி. யவை விற்பனைத் துறையில் ஏற்படுகிற ஆபத்துக்கள். புதிய கண்டு பிடிப்புக்கள், புதிய எந்திரங்கள், புதிய உற்பத்தி முறைகள் முதலிய வற்றின் தோற்றத்தைத் தொடர்ந்து விளைபவை தொழில் நுட்ப ஆபத்துக்கள். வணிகச் சகடத்தின் ஏற்ற இறக்கப் போக்கை யொட்டித் தோன்றுபவைகளே வணிகச் சகட ஆபத்துக்கள். பொருளாதார அமைப்பு மாறுவதாலும், அரசின் தொழிற் கொள்கை மாறுவதாலும் விளைகிற ஆபத்துக்களே இறுதி வகை ஆபத்துக்கள்.

இந்த உறுதியின்மை ஏற்பைத் தனியோர் உற்பத்திக் காரணி யாகவே நைட் கருதுகிறார். உறுதி இன்மை ஏற்பின் பல்வேறு அலகுகள் தேவைப் படுவதற்குக் காரணம் அவை விளைதிறன் உள்ளவைகளாக இருப்பது தான். உறுதியின்மையை ஏற்க எவரும் முன்வராத நிலையில் உற்பத்தி பாதிக்கப் படுவதிலிருந்து உறுதி யின்மை ஏற்பு விளைதிறனுள்ளது என அறியலாம். உறுதியின்மை ஏற்புக்கும் அளிப்பு விலையொன்று உண்டு. இது, தொழில் துணி வோனின் குண நலன், முதலிடுவோனிடமுள்ள வழி வகைகளின் ஆக மொத்த அளவு, அம் மொத்தத்தில் ஆபத்தை எதிர்நோக்கி நிற்பவைகளின் வீதம் ஆகியவற்றைச் சார்ந்துள்ளது. குணத்தால் துணிச்சல் மிக்கவன் குறைந்த விலையிலும் தன் பணியை அளிக்க முன் வருவான். முதலிடுவோனிடம் உள்ள வழி வகைகள் மிகப் பெரிய அளவினவாக இருந்தால், உண்மையிலேயே நட்டம் ஏற் பட்டாலும் அதனால் அவன் மிகுதியாகப் பாதிக்கப்படுவ தில்லை. இங்கும் உறுதியின்மை ஏற்பு அளிப்பு மிகக் குறைந்த விலையிலும் முன்வரும். இது போன்றே மொத்த வழி வகைகளில் நட்ட ஆபத்தை எதிர் நோக்கி நிற்கும் பகுதி குறைந்த அளவினதாக இருந்தாலும், குறைந்த விலையிலும் உறுதி இன்மை ஏற்பு அளிக்கப் படலாம்.

தொழில் துணிவோன் எவ்வாறு உறுதியின்மை ஏற்புப் பணியை நிறைவேற்றுவதன் வழியாக இலாபமடைகிறான் எனப் பார்க்கலாம். இதன் தொடர்பாக நைட் 'நிகழ்திறத்தின்' (Probability) அடிப்படையில் உறுதியின்மையை மூவகைப் படுத்தியுள்ளார். 'பகுத்தறி நிகழ் திறம்' (Inductive Probability) முதல் வகைப் படுகிறது. நிகழ்ச்சியின் நிகழ்திறமானது அதன் தன்மையி லிருந்தே உறுதியாகி, அளவிட்டு அறிகிற வகையிலாகி விடலாம். பாட நூல் வெளியீட்டகங்கள், குறிப்பிட்ட காலத்தில் இவ்வளவு நூல்கள் விற்பனையாகாமல் தேங்கிக்கிடக்கலாமென்பதை உணர

முடிந்து, அவற்றுக்குத் தக்கபடி நூலின் பொதுவான விலையை உயர்த்தி வைத்து நட்ட ஆபத்தைத் தவிர்த்து விடலாம். இங்கு ஆபத்து தொழில் துணிவோனைச் சாராததால், இலாபம் தோன்ற வழியில்லை. இரண்டாவதொரு வகை நிகழ்திறம் 'புள்ளியியல் நிகழ்திறம்' (Statistical Probability) எனப்படும். நிகழ்ச்சியின் தன்மையிலிருந்தல்ல, அதன் போக்கைச் சுட்டும் 'புள்ளி விவரங்'களிலிருந்து நிகழ்திறத்தைக் கணக்கிட முடியலாம். இந்தியப் பயிர்த் தொழிலில் ஐந்தாண்டு கால அளவை எடுத்துக் கொண்டால், ஓராண்டு நல்ல முறையிலும், வேறோர் ஆண்டு மிக மோசமாகவும், மூன்றாண்டுகள் பரவாயில்லை என்றபடியும் விளைச்சல் இருக்குமெனப் பகுத்தறிய முடிந்துள்ளது. இங்கும், இந்த ஏற்ற இறக்கங்களுக்குத் தக்கவாறு காப்பீட்டு ஏற்பாடுகளை முன்னரே செய்துகொள்ள முடியும். இங்குத் தொழில் துணிவோன் பெறுகிற வருமானம் தூய இலாபம் எனச் சொல்ல முடியாது. இறுதியாக, 'மதிப்பீட்டு நிகழ்திறம்' (Estimated Probability) என்றொரு வகையுண்டு. இங்கு, நிகழ் திறத்தைத் தொழில் துணிவோன் பகுத்தறிவதற்கோ, புள்ளிவிவரங்கள் வழி முடிவு கட்டுவதற்கோ வழி இல்லை. இங்கு அவன், தானாகவே, மதிப்பிட்டுக் கொள்ள வேண்டும். இவையே, உண்மையான உறுதி இன்மைகள் இவற்றை ஏற்பதற்குரிய கைம்மாறு தான் இலாபம்.

இந்த உறுதி இன்மையைக் குறைக்கச் சில வழிகளுள்ளன. நட்ட பேர முறையால் (Hedging)[1] உறுதியின்மையை மற்றொருவன் தோளுக்குத் தள்ளிவிட முடியும். இக் காலத்தில், அங்காடி நிலைகளை முற் கூறுவதில் கைதேர்ந்த நிபுணர்கள் உள்ளனர். அவர்கள் சொற்படி நடப்பதாலும் ஆபத்துக்களைக் குறைக்கலாம். எதிர் காலத்தை அடக்கியாள்வதும் ஒரு வழியே. வேனிற் காலத்துக்குப் பழச்சாறு விற்பவன் பிற காலங்களில் பழ ஊறல் விற்கலாமே! இவற்றால், நட்ட ஆபத்தை ஓரளவு குறைக்க முடியுமே யொழிய

[1] வாங்குவதற்கெதிராக விற்பதும் விற்பதற்கெதிராக வாங்குவதுமே நட்டபேர முறை. தனக்கு ஓராண்டு காலம் தேவையான இலட்சம் பொதி பஞ்சை ரூ. 200 வீதத்தில் வாங்குகிற பஞ்சாலை அதிபன், உடனேயே அதேயளவு பஞ்சினை எதிர் காலத்தில் ரூ. 202 வீதத்தில் விலைக்குத் தருவதாக ஊக வாணிகன் ஒருவனிடம் உடன்படிக்கை செய்து கொள்கிறான். (கையிருப்புச் செய்வதிலுள்ள செலவினை ஈடுகட்டுவதற்காக எப்போதும் எதிர்கால விலை சற்றுக் கூடுதலாகவே விதிக்கப்படும்). குறிப்பிட்ட எதிர்காலத்தில் பஞ்சின் விலை ரூ. 150 ஆகக் குறைந்தால், நூலின் விலையும் குறைய நேர்ந்து, அதனால் ஆலை அதிபன் நட்டமடைய நேரலாம். ஆனால், இந்த நட்டத்தை ஈடுகட்டுகிறது அவன் ஊக வாணிகனுடன் ரூ. 202 விலைக்குப் பஞ்சினை விற்க இசைந்து செய்து கொண்டுள்ள உடன்படிக்கை: ரூ. 150 விலையில் பஞ்சினை வாங்கி ரூ. 202 விலையில் விற்பதற்கான வாய்ப்பு அவனுக்கு உள்ளது. இதற்கு மாறாகக், குறிப்பிட்ட எதிர்காலத்தில் பஞ்சின் விலை 250 ஆக உயர்ந்து விட்டால், நூல் வியாபாரத்தில் அவனுக்கு இலாபம் கிடைக்கும் நேரத்தில் பஞ்சு வியாபாரத்தில் நட்டம் தோன்றலாம்: இங்கும் ஒன்றுக்கொன்று ஈடுகட்டிக் கொள்கின்றன. இதனைத் தான் நட்டபேர முறை என்பார்கள்.

ஒரேயடியாகத் தவிர்த்து விட முடியாது. தவிர்க்க முடியாத ஆபத்துக்களை ஏற்க வேண்டிய பொறுப்பு தொழில் துணிவோருடையது; அதற்கெனக் கிடைக்கும் ஊதியமே இலாபம்.

உறுதி இன்மை ஏற்புக் கோட்பாடு சில உண்மைகளை அடிப்படையாகக் கொண்டிருப்பதை மறுக்க முடியாது. இன்றைய பொருளியல் அமைப்பில், உறுதியின்மை, ஒழுங்கானதும் நிலைபேருனதுமான பண்புக்கூருகத் திகழ்கிறது. பொருளியல் செய்கைகளில் இயங்குவன வெல்லாம் சமநிலை எய்தும் எனச் சொல்கிரும். ஆனல், இந்தச் சமநிலை எய்தும் போக்கின் இடையிலேயே புறக்காரணிகள் பல தலையிட்டு, சமநிலை ஏற்படுவதைத் தள்ளிவைத்துக் கொண்டே இருக்கின்றன. இதனல், உறுதியின்மை ஏற்படுவது இயல்பு. இவ்வாறு, நைட்டின் கருத்தில் ஆழமானதோர் உண்மை இருப்பதை மறுக்க முடியாது. ஆனலும், அவரது கருத்தில் சில குறைகளும் காணக் கிடக்கின்றன.

தொழில் துணிவோன் ஒருவனைச் செயல்படுவதில் இருந்து தடுப்பது உறுதியின்மை ஏற்பு மட்டுமன்று; முதல் வளம், தொழில் ஞானம் முதலிய வாய்ப்புக்கள் இல்லாத காரணத்தாலும் தொழில் துணிவின் அளிப்பு வரையறைக் குட்பட்டு விடலாம். இது போன்றே, தொழில் துணிவோன் பணியானது உறுதியின்மை ஏற்பு மட்டுமே எனக் கூறுவதும் சரியன்று. தொழிலைத் தொடங்குவது, உற்பத்திக் காரணிகளை ஒருங்கிணைப்பது போன்ற வேறுபல பணிகளையும் அவன் புரிகிருன். எனவே, இந்தப் பணிகளுக்காகவும் ஊதியம் பெற அவனுக்கு உரிமையுண்டு.

உறுதியின்மை ஏற்பைத் தனியொரு உற்பத்திக் காரணியாகக் கொள்வதும் தவறு. தொழில் துணிவோன் பணிகளின் ஒரு கூறு உறுதியின்மை ஏற்பு என்று வேண்டுமானல் சொல்லலாம். இந்தக் கூறு தொழில்துணிவோன் பெறுகிற கைம்மாறை மிகுக்குமென்று சொல்வதில் தவறில்லை. மேலும், உறுதியின்மை ஏற்பு ('நுகர்வுத் தவிர்ப்பு,' 'காத்திருத்தல்' என்பவைகளைப் போல) உளநூல் வழிப்பட்டது. அவ்வாறெனில், அதனை உண்மைச் செலவின் ஒரு பகுதியாகவே கருத முடியும். ஆனல், உற்பத்திக் காரணிகளின் அளிப்பு, அதன் உண்மைச் செலவையன்று, பிற வாய்ப்புச் செலவுகளையே பொருத்துள்ளது என்பது இந் நாளைய கோட்பாடு. இந் நிலையில், தொழில் துணிவின் அளிப்பை உறுதியின்மை ஏற்பு முடிவு செய்வதாகக் கூறுவதில் பொருளில்லை.

உறுதியின்மை ஏற்புக்குரிய கைம்மாறு இலாபமெனில், வாரத்திலும், கூலியிலும் இலாபத்திலுங்கூட ஓர் இலாப நட்டக் கூறைப்

பார்க்கலாம். முதலீடு செய்பவன் பெறும் வட்டியிலும் உறுதி இன்மை காரணமாக எதிர்பாராத ஏற்றத் தாழ்வுகளைக் காணலாம். இவற்றையும் இலாப நட்டங்களாகக் கருத வேண்டிய நிலை ஏற்பட்டு விடலாம்.

### இயக்கநிலைக் கோட்பாடு

இக் கோட்பாட்டின் ஆசிரியர் கிளார்க். பொருளின் உற்பத்திச் செலவுக்கு எச்சமாயிருக்கும் விலையே இலாபம் என்பார் கிளார்க். அவ்வாறெனில் உற்பத்திச் செலவும் விலையும் வேறுபடும் போது தான் இலாபம் தோன்ற முடியும். தேக்க நிலையிலிருக்கும் சமுதாயத்தில் இத்தகைய வேறுபாடு தோன்ற வழியில்லை. அங்கு, சென்ற ஆண்டைய பொருளியல் செய்கைகளே எவ்வித மாறுதலுமின்றி நடப்பு ஆண்டிலும் மறுபடியும் நிகழ்கின்றன. புதிய பொருள்கள், புதிய அங்காடிகள், புத்தாக்கங்கள், புதிய வினைமுறைகள், புதிய உற்பத்திக் காரணிகள், புதிய அரச ஒழுங்குகள், மக்கள் தொகை மாறுதல்கள் எதுவும் ஏற்படவில்லை. எனவே, அனைத்தும் ஒரு நடைமுறை யொழுங்கின்படி நடந்து வருகின்றன. இங்கே, நட்ட ஆபத்துக்கள் அறவேயில்லை. தெய்வச் செயலாகிய வறட்சி, பெரு வெள்ளம், தீ விபத்து போன்றவைகளைக் காப்பீட்டுறுதி செய்து கொள்ளலாம். இந் நிலையில் தேவையோ அளிப்போ மாறுவதற்கு வழியில்லை. தேவை மாற வேண்டுமெனில், மக்கள் தொகை, அவர்களுடைய வருமானம், சுவைநிலை ஆகியவை, பதிலீட்டு வாய்ப்புக்கள், பொருளின் விலை, தொடர்புள்ள பிற பொருள்களின் விலை, இவை மாறவேண்டும். தேக்க நிலைப்பட்ட சமுதாயத்தில் இவை யெதுவும் மாற வழியில்லை. இந்நிலையில் —அளிப்பு மாருத நிலையில்— விலையும் மாருதிருப்பது இயல்பு. அளிப்பை எடுத்துக் கொண்டால், அதுவும் தேக்க நிலைப்பட்ட சமுதாயத்தில் மாருதிருக்கவே முடியும். ஏனெனில், அளிப்பைத் தாக்குகிற புதிய உற்பத்தி முறைகளோ, கச்சாப் பொருள் விலை மாறுதல்களோ, புதிய பொருள்களோ, புதிய எந்திரங்களோ எதுவும் தேக்க நிலைப்பட்ட சமுதாயத்தில் உருவாக வழியில்லை. இன்ன பல காரணங்களால் விலை மாற விழியில்லை. இவற்ருல், விலைக்கும் உற்பத்திச் செலவுக்கும் இடையே வேறுபாடெதுவுமில்லை; இலாபந் தோன்ற வழியுமில்லை. அந் நிலையில் தொழில் துணிவோன் பெறுவது வெறும் நிருவாகக் கூலியாகவே இருக்கும்.

ஆனல், மாறுதல்கள் தோன்றிச் சமுதாயமானது இயக்க நிலைப்பட்டதாகும் போது, தேவைக்கும் அளிப்புக்குமிடையே - விலைக்கும் உற்பத்திச் செலவுக்குமிடையே – வேறுபாடு தோன்றுகிறது; இலாப நட்டங்கள் ஏற்படுகின்றன. இந்த மாறுதல்களைப் பயன்படுத்து

வதில், அல்லது, சில நேரங்களில் பணி செய்ய வைப்பதில் தான் தொழில்துணிவோன் ஆற்றல் தென்படும்; இலாபமும் கைம்மாருகக் கிடைக்கும்.

இம் மாறுதல்கள் சிறப்பாக ஐவகைப்படும் என்பார் கிளார்க்.

மக்கள் தொகை மாறுதல்கள் முதல் வகைப்படும். இம் மாறுதல்கள் பொருள்களின் தேவை நிலையைத் தாக்கி இலாப வாய்ப்புக்கு அடிகோலுகின்றன. இந்த மாறுதல்களைச் சரியாக எதிர்பார்த்து அவற்றுக்குத் தக்கவாறு உற்பத்தியளவைச் சரிக்கட்டிக் கொண்டால் இலாப வாய்ப்புக்கு வழியிருக்கிறது அல்லவா? குற்றுலத்தில் சாரலின் போது, வழக்கத்தையும் விட மிகுதியான அளவு பயணிகள் இவ்வாண்டு வருவார்களென எதிர் பார்த்து விடுதிகள் பலவற்றை வாடகைக்கு எடுத்து (பிறர்க்குக் கீழ் வாடகைக்குத் தர) வைத்திருப்பவன் எதிர் பார்த்தது உண்மையாகும் போது, பெரிய அளவில் இலாபத்தையும் பெற்று விடுகிருன் அல்லவா?

முதலின் தொகையில் ஏற்படும் மாறுதல்கள் இரண்டாவது வகைப்படுகின்றன. முதலில் ஏற்படும் மாறுதல்கள் உற்பத்திச் செலவைக் கட்டுப்படுத்துகின்றன. மிகுதியான அளவு முதலிருந்தால், திறன்மிக்க முதல் கருவிகளை ஆண்டு உற்பத்திச் செலவைக் குறைத்து எச்சமான விலை பெற இயலும்.

உற்பத்தி முறையில் ஏற்படும் மாறுதல்கள் மூன்றும் வகைப்படுகின்றன. புதிய முறைகளைக் கையாள்வதால், உற்பத்திச் செலவைச் சுருக்கி இலாபம் ஈட்ட முடிகிறது. விறகு விலை ஏறிச் செல்லும் போது, உணவு விடுதிகள் லீக்கோ கரியை ஆண்டு தம்முடைய உற்பத்திச் செலவினைக் குறைத்து இலாப வாய்ப்பைப் பெருக்கிக் கொண்டிருப்பது இதற்கோர் எடுத்துக் காட்டு.

தொழில் அமைப்பு முறையில் ஏற்படும் மாறுதல்கள் நான்காம் வகையின. தொழிற் புரட்சியை யொட்டித் தோன்றிய கூட்டுப் பங்குக் கம்பெனிகள் அமைப்பு, அந் நாளில் வளர்ந்து சென்ற இலாப வாய்ப்புக்களின் முதன்மையான தோற்றுவாயாகும். இது போன்றே, தொழிற் கூட்டுக்கள் சேர்வதாலும், முற்றுரிமை அமைப்புக்கள் உடைவதாலும் விலையிலும் உற்பத்திச் செலவிலும் மாறுதல்கள் ஏற்பட்டு இலாபந் தோன்ற வாய்ப்பு ஏற்படும்.

நுகர்வோர் விருப்பங்களில் ஏற்படும் மாறுதல்கள் இறுதி வகைப்படும். நுகர்வோர் விருப்பநிலை மாறும் போது விலைக்கும் உற்பத்திச் செலவுக்கு மிடையே வேறுபாடு தோன்றி, இலாபம்

ஏற்பட வாய்ப்பேற்படும். நுகர்வோர் விருப்ப நிலையை யொட்டி தமிழ்த் திரைப்பட உலகில் 'புராணப்படக் காலம்', 'சண்டைப்படக் காலம்', 'சிரிப்புப்படக் காலம்' எனப் பல்வேறு 'காலங்கள்' மாறி மாறித் தோன்றுவதும், இந்த மாறுதல்களை விவேகமாகப் பயன் படுத்திக் கொள்ளும் படமுதலாளிகள் பெரிய அளவில் இலாபந் தேடிக் கொள்வதும் இவ் வுண்மையை விளக்குகிறது.

இந்த மாறுதல்களில் சில, தொழில் துணிவோர் அனைவர்க்கும் பொதுவானவை; மற்றவை, சிலர்க்கு மட்டுமே சிறப்பானவை. மக்கள் தொகை மாறுதல், நுகர்வோர் விருப்பநிலை மாறுதல் முதலி யவை முதல் வகைப்படும். ஆனால், புத்தாக்கங்களும் புது உற்பத்தி முறைகளும், அவற்றை ஆள்பவர்க்கு மட்டுமே சிறப்பாகப் பயன் தருகின்றன என்பதைக் கவனிக்க வேண்டும்.

பேராசிரியர் ஷும்பீட்டர் விளக்கியுள்ள 'புதுமைகள்' பற்றியும் இங்குக் குறிப்பிட வேண்டும். புதுமைகளின் நுழைவே இலாபம் தோன்றக் காரணம் என்பார் அவர். புதியதோர் எந்திரம், புதிய தோர் உற்பத்தி முறை, புதியதோர் அங்காடி, புதியதொரு விற்பனை, புதியதொரு பொருள்—இவற்றை யெல்லாம் பொதுவாகப் புதுமைகள் எனலாம். விஞ்ஞானி இவற்றைக் கண்டு பிடிக்கலாம்; ஆனால் இவற்றைத் தொழில் துறையில் ஆதாயந்தரும் வகையில் ஆள்வது தொழில் துணிவோன் தான். இந்த ஆட்சியே இலாபத் தின் தோற்றுவாய்.

இங்கு, இயக்க நிலைப்பட்ட சமுதாயத்தில் தோன்றுகிற இலா பத்தின் சிறப்புக் கூறொன்றைக் கவனிக்க வேண்டும். இலாப மானது மேற்கூறிய வழிகளி லெல்லாம் தோன்றுகிறது; ஆனால், விரைவிலேயே, அது சமதாயம் முழுதும் பரந்து விடுகிறது. எவ் வளவு சிறந்த புதுமையாக இருந்தாலும், போட்டியாளர் செய்கை யால் அது நிலைத்திருக்க வழியில்லாது போகிறது. கிளார்க் கூறியது போல, 'அது விரல்களிடையே காலப் போக்கில் நழுவிச் சென்று, சமுதாய உறுப்பினர் எல்லார்க்கு மிடையே தானே வழங்கிக்கொள் கிறது'. இருந்தாலும் உண்மை உலகில் மாறுதல்கள் ஒன்றிலிருந்து ஒன்றாகத் தோன்றிக் கொண்டே இருக்கின்றன. இதனால், இலாப மும் தொடர்ந்து நிலவ முடிகிறது.

இக் கோட்பாடும் சில உண்மைகளைப் புலப்படுத்துகிறது. நிறு வனங்கள் தம்முடைய சொந்தப் பொறுப்பில் இல்லாமலேயே இலா பம் பெற முடிவதை இக் கோட்பாடு காட்டுகிறது. பொது வகை மாறுதல்களே இதற்குக் காரணம். எதிர்பாரா இலாபங்கள் எவ் வாறு தோன்றுகின்றன என்பதையும் மேலே சொன்ன காரணம்

விளக்குகிறது. புதுமைகள் எச்ச இலாபம் தோன்றக் காரண மெனச் சொல்வதும் ஏற்புடையதே. இருந்தாலும், இக் கோட் பாட்டிலும் சில குறைகளுள்ளன.

பேராசிரியர் நைட் மாறுதல்களையே இருவகைப் படுத்துவார். சில மாறுதல்களை முன்னுணர முடியும். இத்தகைய மாறுதல்களுக் குத் தக்கவாறு எல்லாரும் தம்முடைய செய்கைளைச் சரிக்கட்டிக் கொள்வர்; அப்போது தேவையும் அளிப்பும் சரிக்கட்டிக் கொள்ள முடியும். ஆனால், முன்னுணர முடியாத மாறுதல்களை அவ்வாறு சரிக்கட்ட முடியாததால், அவற்றிலேயே இலாபந் தோன்ற வாய்ப் பிருப்பதாக நைட் கருதுவார். டாசிக் சுட்டும் மற்றொரு குறைபாடு இது. இலாபத்துக்கும், தேக்கநிலையில் ஈட்டுகிற நிருவாக ஈட்டங் களுக்கும் இடையே வேறுபாடு புனைவது செயற்கையாக இருக்கிறது என்பார் அவர்.

தேக்கநிலைச் சமுதாயத்திலும் சில ஆபத்துக்கள் நிலவலாம்: உற்பத்தியாளரின் அக்கறையின்மை, உழைப்பாளர் கவனமின்மை போன்றவற்றால் ஏற்படும் ஆபத்தைத் தாங்குபவன் தொழில் துணி வோனே யாதலால், அந்நிலையிலும் ஊதியத்தை எதிர்பார்க்க அவனுக்கு உரிமை யிருக்கிறது.

எல்லாரும் ஒரு மாறுதலை எதிர்பார்த்து, பெரும்பான்மையினர் அதற்குத் தக்கவாறு சரிக்கட்டிக் கொள்ள, மிகச் சிலர் மற்றவர் களைப் பின்பற்றவில்லை என்று வைத்துக் கொள்வோம். இறுதியில், எதிர்பார்த்த மாறுதல் ஏற்படவில்லையானால், பெரும்பான்மையினர் நட்டமடைய, சிறுபான்மையினர் இலாபம் பெறுவதாக ஏற்படு கிறது. இங்கே, மாறாதிருந்தவர்கள் இலாபம் பெறுகிற விந்தை நிலை ஏற்படுகிறது.

இக் கோட்பாடு முற்றுரிமை ஈட்டங்களுக்கும் இலாபங்களுக்கு மிடையே வேறுபாடிருப்பதாகக் கருதவில்லையெனத் தோன்றுகிறது. இயக்க நிலை மாறுதல்களால் தோன்றும் இலாபம், போட்டி ஏற் பட்டால் மறைந்து போகிறது. இதனால், இலாபத்தின் தோற்று வாய் போட்டியின்மை நிலவுவதில் தான் காணக் கிடக்கிறது. இறுதியாக, தொழில் துணிவுக்கும், பிற காரணிகளைப் போல, அளிப்பு விலையொன்று உண்டு என்பதை இக் கோட்பாடு மறந்து விட்டதும் தவறாகும்.

## இறுதிநிலை விளைதிறன் கோட்பாடு

இறுதிநிலை விளைதிறன் கோட்பாட்டை, அமைப்புக்கும் பொருத்தி ஆராயலாம். அமைப்பின் இறுதிநிலை வருவாய் விளை

பொருள் அதன் தேவை அளவை நிருணயிக்கிறது. இங்கே எழுகிற முதற் சிக்கல் இதுதான். தனியொரு நிறுவனத்தில் அமைப்பின் இறுதிநிலை விளைதிறனைக் கணக்கிட்டறிய முடியாது : ஒரு நிறுவனத்துக்கு ஓர் அமைப்பாளன் மட்டுமே இருக்க முடியும் என்பதுதான் இதற்குக் காரணம். இருந்தாலும் குறிப்பிட்டதொரு தொழிலில் அமைப்பின் இறுதிநிலை விளைதிறனைக் கணக்கிடுவதில் அவ்வளவு இடர்ப்பாடுகள் இல்லை. தொழிலிலுள்ள அமைப்பாளர் எண்ணிக்கையை மிகுக்கவோ குறைக்கவோ முடியுமாதலால், அங்கே, இறுதி நிலை விளைதிறனையும் அளக்க முடியும்.

தொழிலிலுள்ள அமைப்பாளர்கள் அனைவரும் ஒரே தன்மையானவர் என்று வைத்துக் கொள்வோம். அடுத்துள்ள படத்தில்




காட்டப்பட்டிருப்பது போல இறுதிநிலை வருவாய் விளைபொருள் வளைகோடு (MPP) கீழ்நோக்கிச் சரிகிறது. தொழிலில் அமைப்பாளர் எண்ணிக்கை மிகமிக, தனியொருவன் பெற முடிகிற இலாப மட்டம் குறைவதே இதற்குக் காரணம்.

SS வளைகோடு அமைப்பாளர் அமைப்பைச் சுட்டுகிறது. எல்லா அமைப்பாளர்களும் ஒரே தன்மையானவர்கள் என்று எடுத்துக் கொண்டிருப்பதால், எல்லாரும் ஒரேயளவு (OS) இலாபத்தையே ஈட்ட முடியும். (இதனால் SS வளைகோடு படுகிடையாய்

உள்ளது). இந்த OS அவர்களுடைய மாற்றிட ஈட்டங்களையும் குறிப்பிடுகிறது.

இப்போது தேவையும் அளிப்பும் OM மட்டத்தில் சமமாக உள்ளன. அம் மட்டத்தில் எல்லாரும் OS (அல்லது PM) இயல்பான இலாபத்தையே பெறுகின்றனர். குறுங் காலத்தில் இயல்பு கடந்த இலாபம் ஈட்டுவதற்கு வாய்ப்பிருக்கிறதென்பதும் படத்தில் இருந்து தெளிவாகிறது. குறுங் காலத்தில் அளிப்பு $OM_1$ ஆக இருந்தால் OQ இலாபம் ஈட்ட முடியும். இங்கே மாற்றிட ஈட்டங்களிளும் எச்சமாயிருக்கும் QS இயல்பு கடந்த இலாபம் என்பது குறிப்பிடத் தக்கது. ஆனால், நிறைவுப் போட்டிச் சூழலில், நெடுங் காலத்தில் இந்த இயல்பு கடந்த இலாபம் மறைந்து போகிறது.

நிறைவுப் போட்டிச் சூழலில், இயல்பு கடந்த இலாபத்தை ஈட்ட இயலாது என்பதற்கு இரண்டு காரணங்கள் உள்ளன. முதலாவதாக, போட்டியின் விளைவாக விளைபொருளின் விலையானது சராசரி உற்பத்திச் செலவுக்கும், இறுதிநிலை உற்பத்திச் செலவுக்கும் சமமாக இருந்தாக வேண்டும். இரண்டாவதாக, அமைப்பாளன் காரணிகளுக்குத் தரும் விலை அவற்றின் சராசரி, இறுதிநிலை விளைதிறன்களுக்குச் சமமாயிருக்க வேண்டும். இதனால் பொருள்களை விற்பதன் வழியாகவோ, அல்லது காரணிகளை அமர்த்துவதன் வழியாகவோ இயல்பு கடந்த இலாபம் பெற வழியில்லை: பொருளை சராசரி உற்பத்திச் செலக்குச் சமமான விலையில் விற்க வேண்டும்; காரணிக்கும் சராசரி விளைதிறனுக்குச் சமமான ஊதியம் தந்தாக வேண்டும். நிறைகுறைப் போட்டியில் நிலைமை இவ்வாறு இராது என்பதை இங்கு நினைவுகூர வேண்டும்.

இக் கோட்பாடு பிறவற்றைவிடச் சிறந்ததெனத் தோன்றுகிற போதிலும், தனியொரு நிருவனத்தில் அமைப்பாளன் ஒருவனுடைய இறுதிநிலை விளைதிறனை அளந்தறிய முடியாதநிலை இருப்பதை மறந்து விடலாகாது.

## மேற்கொண்டு படிக்கத் தக்க நூற்கள்

சி. வேலாயுதம் — 'பொருளாதாரம் II'
கேர்ன்கிராஸ் — 'பொருளாதாரம் – ஓர் அறிமுகம்'
பென்ஹாம் — 'பொருளாதாரம்'
Alfred Marshall — 'Principles of Economics'
Joan Robinson — 'The Economics of Imperfect Competition'

J. S. Bain — 'Pricing, Distribution and Employment'
Dudley Dillard — 'The Economics of John Maynard Keynes'
George N. Halm— 'Monetary Theory'
G. J. Stigler — 'Theories of Production and Distribution'
J. R. Hicks — 'Social Framework'

# பிற்சேர்க்கை

## சமதருமத்தின் முதன்மையான பொருளியல் சிக்கல்கள்

'செல்வ உற்பத்திச் சாதனங்கள் சமுதாயம் முழுவதற்கும் உரிமையாகி, சமுதாயத்தின் ஆட்பேராக அதற்குப் பொறுப்புள்ள உறுப்புக்களால் பொதுவானதொரு திட்டத்தின்படிச் செயல்படுத்தப்படும் ஒரு சமூகப் பொருளாதார அமைப்பே சமதருமம்; அத்தகைய திட்டமிடப் பெற்ற, சமூக உரிமையாக்கப் பெற்ற உற்பத்தியின் விளைவுகளான நற்பலன்களை, சமவுரிமையின் அடிப்படையில் பெற, சமுதாயத்தின் உறுப்பினர் அனைவர்க்கும் உரிமையுண்டு' என்பது பேராசிரியர் டிக்கின்சன் (Dickinson) வாக்கு. சமதருமத்தின் தனி இயல்புகள் மூன்று என டிக்கின்சன் வழியாக அறிய முடிகிறது :

1. உற்பத்திச் சாதனங்கள் மீது தனியுரிமை எவர்க்குமில்லை; அவை சமுதாயத்தின் பொதுவுடைமை.

2. சமுதாயத்தின் பொதுவுடைமையான அவற்றை ஆளும் உரிமை, சமுதாயத்தால் சிலர் கைக்கு மாற்றிக் கொடுக்கப்படுகிறது. இச் சிலர் திட்டமொன்றின்படி உற்பத்திச் சாதனங்களைப் பயன்படுத்துகின்றனர்: இச் சிலர், பொதுவாக, 'திட்டக் குழு' எனக் கருதப்படுகின்றனர்.

3. இந்தச் சூழலில் உருவாகும் உற்பத்தியில் மக்கள் அனைவர்க்கும் பங்குண்டு.

சமதரும அமைப்பில் பொருளாதாரச் செய்கைகள், திட்டமொன்றின்படி நிகழ்ந்தேறுகின்றன: இதனால், திட்டமிடுதலே சமதருமத்தின் அடிப்படைச் சிக்கல் ஆகிறது. திட்டமிடுவதென்பது தனியொருவன் பொருளாதாரச் செய்கைகளைப் போலவே, ஆனால், ஆகமொத்த மனிதர்களையே ஓர் அலகாக எடுத்துக் கொண்டு, செயல்படுவது தான்; அதாவது திட்டக் குழு ஒரு 'மாமனிதனாக'த் தன்னைக் கருதிக் கொண்டு செயல்பட வேண்டும்: தனி மனிதன்

தன்னுடைய விருப்பத் தேர்வுகளையும் சொந்த வளங்களையும் இணைப்பது போன்றே, மாமனிதனும் நுகர்வோர் விருப்பத் தேர்வு களையும் நாட்டு வளங்களையும் இணைக்கும் பணியிலேயே ஈடுபடு கிருன். அரிய வளங்களைக் கொண்டு பல்வகைப் பொருள்களையும் உற்பத்திச் செய்யத் துணிய வேண்டிய சூழலில், திட்டக் குழுவை எதிர்நோக்கும் முதற் சிக்கல் பல்வேறு துறைகளில் எவ்வளவு எவ் வளவு முதலீடு செய்ய வேண்டும் என்பது தான்.

வளங்கள் பங்கீடு பற்றி 'விவேகமான' முடிவு எடுக்கும் ஆற்றல் திட்டக் குழுவிற்குக் கிடையாது என்பது லட்விக் பான், மைஸஸ் போன்ருேர் கருத்து. இவர்கள் கருத்தை இவ்வாறு சொல்லலாம்: விலை எனும் 'மாயக் கரம்' வளங்கள் ஒதுக்கீட்டினைச் சிக்கலின்றிச் செய்து முடிக்கத் தக்கது. நடப்பு விலையில் மிகவுயர்ந்த அளவு நிறைவும் ஆதாயமும் பெற வேண்டும் என முறையே நுகர்வோரும், உற்பத்தியாளரும் ஓயாது முயல்கின்றனர். பல்வேறு பொருள்களை வாங்கும் போது அவற்ருல் இழப்பது எவ்வளவு, பெறுவது எவ்வளவு என்பதை அவற்றின் தராதர விலைகளே சொல்லி நிற்கின்றன. இவற்றின் அடிப்படையில் இலாப நட்டக் கணக்குப் பார்த்து, நிறைவை மிகவுயர்ந்த அளவினதாக்கும் வகையில் நுகர்வோன் எளிதில் செயல்பட முடியும். இவ்வாறே, தொழில் துணிவோனும் நிலவும் விலைகளிலிருந்து தன்னுடைய வரவு செலவினை ஒப்பிட்டுப் பார்க்க முடிகிறது; ஒப்பீட்டடிப்படையில் ஆதாயம் மிக்க தொழிலி னைத் தேர்வது எளிதாகிறது. இதனுல், நுகர்வோர் மிகவுயர்ந்த அளவு நிறைவு பெறுகின்றனர்; உற்பத்திக் காரணிகள் மிகவுயர்ந்த அளவு ஆதாயம் தருகிற துறைகளில் ஈடுபட முடிகிறது: இதன் பொருள், வளங்கள் பங்கீடு திறம்பட நிகழ்ந்துள்ளது என்பது தான்.[1]

இதற்கு மாருக, சமதரும அமைப்பிலோ உற்பத்திச் சாதனங் கள் பொதுவுடைமையாய் உள்ளன; இவை, போட்டிச் சூழலில் விற்று வாங்கப் பெறவில்லை; இதனுல், இவற்றுக்கென விலை எதுவு மில்லை. விலைகள் தாம் உற்பத்திக் காரணிகளின் தராதர வினை திறனைச் சுட்டுகின்றன. விலைகள் வழியாகவே இலாப நட்டக் கணக்குப் பார்க்க முடியும். எனவே, விலைகள் இல்லாத நிலையில், ஒப்பு நோக்கிப் பார்க்கவும். வளங்களை ஆதாயகரமான வகையில் பங்கிடவும் இயலாது என்ருகிறது.

இந்தக் கருத்தினை, ஆஸ்கார் லாங்கே (Oscar Lange) போன் ருேர் தவறென நிறுவியுள்ளனர்: முதலாளித்துவத்தின் குறிக்கோள்

[1] 'நுகர்வோன் இறைமை' அதிகாரத்தில் இவ்வுண்மை நன்கு விளக்கப்பட்டு உள்ளது.

நிலை, போட்டி நிலவும் அங்காடி. இவ் வங்காடியில் சமநிலை எய்த மூன்று நிபந்தனைகள் நிறைவேற்றப் பெற வேண்டும்; ஒவ்வொரு நுகர்வோனும் உற்பத்தியாளனும் தம்முடைய நிறைவும் வருமானமும் மிகவுயர்ந்த அளவினை எட்டும் வரை வாங்குகிறார்கள்; விற்கிறார்கள்—இது முதல் நிபந்தனை. இரண்டாவதாக, பொருளின் அளிப்பும் தேவையும் சமமாக இருக்க வேண்டும். மூன்றாவதாக, நுகர்வோர் வருமானமானது, உற்பத்திக் காரணிகள் தம்முடைய பணிகள் வழி பெற்ற வருவாய்க்குச் சமமாக இருக்க வேண்டும். பதிலீட்டு வினையால், இவையெல்லாம், இயல்பாகவே, போட்டிச் சூழல்களில் நிறைவேறி விடுகின்றன: இந்த வினையின் ஒவ்வொரு பகுதியிலும் சோதனைகள் நிகழ்த்திப் பார்க்கப் படுகின்றன என்பது இங்கு நினைவுகூரத் தக்கது.

இந்தச் சோதனைகளைச் சமதரும அமைப்பிலும் நடத்த முடியும் என்பார் லாங்கே. தொழிலாளர்க்குத் தொழில் தேரத் தன்னுரிமையும், நுகர்வோர்க்கு விருப்பத் தேர்வுரிமையும் இருப்பதாக வைத்துக் கொள்வோம். முதல் கருவில் பொருள்களுக்கு மட்டுமே விலை எதுவும் இல்லை. இவற்றுக்குச் விரும்பிய வழி விலையொன்றைச் சூட்ட முடிந்தால், சோதனைகள் வழி சமநிலை எய்தவியலும்.

மேலே கண்ட நிபந்தனைகளில், முதல் நிபந்தனையை நுகர்வோர்க்கும் தொழிலாளர்க்கும் இசையவைப்பது எளிதே. நுகர்வோன் தன் நிறைவையும், தொழிலாளி தன் வருமானத்தையும் மிகுத்துக் கொள்ளத் தடையேதுமில்லை. அரசுத் தொழில் நிருவாகி, தன்னுடைய இலாபத்தை மிகவுயர்ந்த அளவினதாக்குவான் என எதிர்பார்க்க முடியாது தான். ஆனாலும், இந்த நோக்கத்தை அடையும் வகையில், நிருவாகிக்கு ஒழுங்கு முறைகள் சில விதிக்கப் படலாம். உற்பத்தியின் சராசரிச் செலவை மிகக் குறைந்த அளவினதாக்கும் வகையில், நிருவாகிகள் பல காரணிகளையும் ஒன்று சேர்க்க வேண்டும் என விதிக்கலாம்; அடுத்து, இறுதிநிலை உற்பத்திச் செலவானது நடப்பு விலைக்குச் சமமாகும் வகையில் உற்பத்தியைச் சரிக்கட்டிக் கொள்ள வேண்டும் என்றும் விதிக்கலாம்.

சமதரும அமைப்பில் முதலுக்கென ஓர் அங்காடி இல்லையென்பது உண்மையே. முதல் கருவிப் பொருள்களுக்கு அரசு விலையொன்றை விதித்து, அவற்றைப் பெறும் அரச நிறுவனங்கள் குறிப்பிட்ட விலையைத் தர வேண்டும் என விதிக்கலாம். இப்போது, மேலே சொன்ன ஒழுங்கு முறைகள் பின்பற்றப்படும் நிலையில், ஒவ்வொரு முதல் கருவிப் பொருளின் இறுதிநிலை விளைதிறனும், அந்தந்தத் தொழில்களில் நிலவும் அதனதன் விலையோடு சமன்படுத்தப் பட்டு விடுகிறது.

தேவையையும் அளிப்பையும் சமன்படுத்தும் அளவில் விலையானது சமதருமத்திலும் நிலவ முடியும். அரசே விலையை நிறுவ, அவ் விலையில் விற்பனையும் வாங்கலும் இயல்பாகவே நிகழ்கின்றன. இவ் விலையைக் 'கணிப்பு விலை' (Accounting Price) எனலாம்.[1] அரசு நிறுவிய விலைகள் உயர்வாயிருந்தால், பொருள்கள் விற்பனையாகாது தேங்கிக்கிடக்கும்; குறைவாயிருந்தால் பொருள் விரைவில் விற்றுத் தீர்ந்து விடும். இதிலிருந்து பாடம் கற்றுக்கொள்ள முடிகிற அரசு, அடுத்து, விலையைத் தக்கவாறு மாற்றி நிறுவிக் கொள்ள முடியும். இவ்வாறு, இறுதியில், சோதனைகளின் வழியாகத் தேவையையும் அளிப்பையும் சமன்படுத்தத் தக்க விலையை அறிந்து கொள்ள முடிகிறது.

மூன்றாவது நிபந்தனையைக் கொணர்வதில் சமதரும அமைப்பில் சில சிக்கல்கள் தோன்றுகின்றன. முதலாளித்துவத்தில், குறிப்பிட்ட காலத்தில் மொத்த நாட்டு வருமானமானது, மொத்தம் உற்பத்தியான பொருள்களின் உற்பத்திச் செலவுக்குச் சமமாகவே இருக்கும். வட்டி, கூலி, இலாபம் ஆகியவற்றின் வழியாக இவ் வருமானம் பெறப்படுகிறது.[2] சமதரும அமைப்பிலோ உழைப்பாளர்க்குக் கூலி கிடைக்கும்; ஆனால், முதலின் ஈட்டம் அரசுக்குச் செல்கிறது. இந்த ஈட்டத்தின் ஒரு பகுதி முதல் கருவிப் பொருள்களின் தேய்மானத்தை ஈடுகட்டச் செல்கிறது; அப் பொருள்களில் பழையன கழித்துப் புதியன புகுத்த மற்றொரு பகுதி பயன்படுத்தப் படுகிறது; புதிதாக முதல் திரட்ட இன்னொரு பகுதி வேண்டும்; வருவாய் தராத (நாட்டுப் பாதுகாப்பு, நீதி நிருவாகம், சாலைப் பராமரிப்பு, இலவச மருத்துவம், கல்வி, பொழுதுபோக்கு வசதிகள் போன்ற பல) துறைகளில் எஞ்சியதொரு பகுதி ஈடுபடுத்தப்படுகிறது; மிச்சமிருப்பது 'சமுதாயப் பங்குவீத'மாக மக்களிடையே பகிர்ந்தளிக்கப்பட வேண்டும். இந்தச் சமுதாயப் பங்கு வீதம், ஆக மொத்தக் கூலிகள் ஆகியற்றின் கூட்டுத் தொகைக்குச் சமமாக, விற்பனைக்குக் கிடைக்கும் நுகர் பொருள்களின் மதிப்பு அமைந்திருக்க வேண்டும்: அப்போது தான் மொத்தத் தேவையும் மொத்த அளிப்பும் சமமாயிருக்கும். இந் நிலையை எட்ட (1) மொத்த உற்பத்திச் செலவும், உற்பத்திக் காரணிகளின் மொத்த ஈட்டமும் சமமாயிருக்க வேண்டும்; (2) மேலே கண்ட பலவகைச் செலவுகளை இடுவதற்காக அரசால் ஒதுக்கி வைக்கப்படும் தொகையானது, அதற்காகப் பயன்படுத்தப்படும் வளங்களின் மதிப்புக்குச்

[1] இயல்பாக அங்காடியில் எழாது, அரசே கணித்துக் கொள்ளும் விலை இது. கணக்கு வைப்பதற்கென்றே அரசு நிறுவிக் கொள்கிற விலை இது.

[2] 'நாட்டு வருமானம்' அதிகாரம் பார்க்க.

சமமாயிருக்க வேண்டும். சமதருமம் கொணரும் வளங்கள் ஒதுக்கீடு, முதலாளித்துவத்தின் கீழ் ஏற்படுவதை விடச் சிறந்தது என்றும் நிறுவப்படுகிறது. முதலாளித்துவ அமைப்பில் வளங்கள் ஒதுக்கீடு, அவை முழு நிறைவுடன் பயன்படுத்தப் படுமென உறுதி கூறவில்லை என்பார் கெயின்ஸ். சமுதாயத்தின் உற்பத்தித் திறனோடு ஒப்பிடும் போது, அதன் மொத்தத் தேவை குறைவாக இருக்க நேர்ந்து, வேலையின்மை ஏற்பட்டு விடும் என்பார் அவர். மேலும், முதலாளித்துவ அமைப்பில் முதலீடானது தொழிலின் இலாப வாய்ப்புக்களை யொட்டியுள்ளது: இலாபமில்லையேல் முதலீடும் இராது: இந்நிலை சமதரும அமைப்பில் ஏற்படாது: இலாப வாய்ப்புக் கருதி முதலீடு செய்யப்படாமையே இதற்குக் காரணம். முதலாளித்துவ அமைப்பின் குறிக்கோள் நிலையாகிய நிறைவுப் போட்டி நிலவும் போதுதான் வளங்கள் ஒதுக்கீடு விலையால் ஒழுங்கு படுத்தப்படும் என்பதை மறந்து விடலாகாது: உண்மையுலகில் நிறைவுப் போட்டி ஒரு விதிவிலக்காகவே இருப்பதால், உண்மையில், விலை ஏற்பாடு எதிர்பார்க்கிறவாறு பணியாற்றவில்லை என்கிறது.

இலாப நட்டக் கணக்குப் பார்க்கும் போது, முதலாளித்துவத்தில், தனியார் உற்பத்திச் செலவு கருத்தில் கொள்ளப்படுகிறதேயொழிய, சமூக உற்பத்திச் செலவன்று. நிலக்கரியை ஆளும் முதலாளி அதனால், தான் பெற முடிகிற இலாப நட்ட வாய்ப்புக்களை ஒப்பு நோக்கிப் பார்க்கிறான் என்பது உண்மையே ; ஆனால், கரியை ஆள்வதால் வெளிப்படும் புகையால் மக்களுடைய சொத்துக்கும் உடலுக்கும் ஏற்படும் நல இழப்புக்களைப் பற்றி அவன் கணக்குப் போட்டுப் பார்ப்பதில்லை. சமதருமத்திலோ சமூகக் கண்ணோட்டத்தில் முடிவுகளை எடுக்க முடியும்.

தற்கால உலகில் தேவையை எதிர் நோக்கியே உற்பத்தி நிகழ்கிறது. இந்த எதிர் நோக்கு பொய்த்தால், பயன்படுத்தப் பட்ட வளங்கள் பாழாகி விடும். இந்த உற்பத்தி முறை ஊக வணிகம் தோன்றி வளரவும் காரணமாகி விடுகிறது. சமதருமத்தில் ஆழ்ந்தகன்ற அறிவின் அடிப்படையில் திட்டங்கள் இடப்படுவதால், முன்கண்ட வகையில் வளங்கள் பாழாகாதிருக்க வழியுண்டு. மேலும், பொருளாதார அமைப்பின் எல்லாப் பகுதிகளையும் ஒருங்கிணைக்கும் வகையில் செயல் திட்டங்கள் அமைவதால், இவ்வகை ஆபத்துக்களின் வாய்ப்பு அருகி விடுகிறது.

சமதரும அமைப்பை எதிர் நோக்கி நிற்கும் மற்றொரு சிக்கல், உழைப்பவரிடையே உழைக்கும் ஆர்வத்தை எவ்வாறு தூண்டுவது

என்பது தான். முதலாளித்துவத்தில் வேலை செய்வோர் வேலை தருவோர் இரு சாராரும் ஆர்வத்துடன் வேலை செய்ய இயல்பான சில தூண்டுதல்கள் உள்ளன. இலாப நட்ட வாய்ப்புக்கள் வேலை தருவோர் செய்கையைத் தூண்டுகின்றன: முறையாகப் பணிபுரிய வில்லையேல் நட்ட ஆபத்தைத் தாங்கியாக வேண்டும்; முறைப் படிச் செயலாற்றினால் இலாபம் இயல்பாகவே வருகிறது. இது தவிர செல்வம் மிகப் பெற்று, சமூகத்தில் உயர்வானதோர் இடத்தை எட்ட முடிகிற சமூகத் தூண்டுதலும் வேறுள்ளது. இதுபோன்றே, மிகுதி யாக உழைத்தால் தான் வேலை செய்வோனால் மிகுதியாக ஈட்ட முடியும்; இல்லையேல் வேலையையே இழக்க நேரும்'.

சமதரும அமைப்பில் இவ்விரு வகையினரும் இல்லை: அனை வரும் வேலை செய்வோரே—தொழிலாளரே. இங்கே, வேலைத் தயக்கம் வேலையையே பறித்துவிடும் என்ற ஆபத்துக்கு இடமில்லை. குறைந்த அளவு வாழ்க்கைத் தரத்தை உறுதிப்படுத்துவது அரசின் கடன்; ஆதலால் வேலைசெய்யாத் தொழிலாளரைக் கூட அவ்வளவு எளிதில் விலக்கிவிட முடியாது. ஆனால், வேறு சில தூண்டுதல் கள் இருக்கின்றன என்பதை மறந்து விடலாகாது; தன்னுடைய வாழ்க்கை சமூகத்தால் பாதுகாக்கப்பட்டுள்ளது என்ற உணர்வு, தான் சுரண்டப்படவில்லை என்ற நினைவு, உயர்வான கூலிவீதம், போனஸ் ஆகியவை வேலை செய்வோன் ஆர்வத்தைத் தட்டி யெழுப்பத் தக்கன. உயர்ந்த உழைப்பைப் பாராட்டும் வகையில் சமூகத்தால் அளிக்கப் பெறும் பட்டங்கள் பரிசுகள் போன்றவையும் வலிமைமிக்க தூண்டுதல்களே. மேலும், வேலைவாய்ப்புக்கள் இங்குச் சமன்படுத்தப்பட்டுள்ளன என்பதையும் மறந்து விடலாகாது. தொழிற் பயிற்சிக்கும், தொழிற் கல்விக்கும், பொதுக் கல்விக்கும் அரசே முன்னின்று ஏற்பாடு செய்கிறது.

சமதருமத் தொழில் நிருவாகம் விரைந்து செயல்படுவதில்லை என்றும் சொல்லப்படுவதுண்டு. தொழிலில் ஈடுபட்டுள்ளோர் இலாப வாய்ப்புக்களையும் நட்ட ஆபத்துக்களையும் நேரடியாகப் பட்டறிய வேண்டிய கட்டாயம் இல்லாமலிருப்பதே இதற்கெல்லாம் காரணம். வேலை செய்வோர் மனப்போக்கு அவ்வாறிருந்தால் அதனையகற்ற வழியொன்றுண்டு: அரசுத் தொழில்களைத் தனித்தனி 'பொது நிறுவனங்களி'ன் (Public Corporations) பொறுப்பின் கீழ்க் கொண்டுவருவதே அவ்வழி: இந்த நிறுவனங்கள் தன்னிச்சையாகச் செயல்படுவதற்கு உரிமை வழங்குவதோடு, அவற்றின் செய்கை ஆதாயக் கண்ணோட்டத்தில் இருக்க வேண்டும் என்று ஒழுங்கும் செய்து விட்டால், தாமதப் போக்கு மறையும்; இயல்பான தூண்டு

தல்கள் தோன்றி விடும். சில நேரங்களில் குறிப்பிட்ட வேலைகள் பெரிய அளவினவாகவும், சிக்கல் பல நிரம்பியனவாகவும் அமைந்து விடலாம்; அப்போது, சிவப்பு நாடாப் போக்கை மிக எளிதில் புறங்கண்டு விட முடியாது.

கருத்தியல் நோக்கில், சிக்கல்களுக்கெல்லாம் தீர்வு வழி காட்ட முடியும் என்பது உண்மையாக இருக்கலாம். ஆனால், இந்த வழிகளையெல்லாம் செயல்படுத்த முடியுமா என்று ஐயுறுவோர் இல்லாமலில்லை. மேலே கண்ட கணிப்பு விலையை எடுத்துக் கொண்டாலும் அவ் வகையில் எத்தனை நூறாயிரம் விலைகள், அவற்றின் அடிப்படையில் எத்தனை எத்தனை சமன்பாடுகள் உருவாக்க வேண்டும் என்று ஐய வினா எழுப்புவோருண்டு. ஆனால், லாங்கேயைப் பொருத்தவரை, நுகர்வோர், உற்பத்தி நிருவாகிகள் இருசாரார்க்குரிய சமன்பாடுகளை மட்டும் பெற்றால் போதும் என்று கூறுவார். நடைமுறையை எடுத்துக் கொண்டாலும் சோவியத் நாட்டுத் திட்டங்கள் கிட்டத்தட்ட இவ்வகையிலான சமன்பாடுகள் பலவற்றை உருவாக்குவதில் வெற்றியே பெற்றுள்ளன. 1950-இல் 1500 பொருள்களுக்கான இத்தகைய 'ஐந்தொகைக் கணக்குகள்' (Balances) இயற்றப் பட்டிருந்ததாக சோவியத் நாட்டுத் திட்ட அறிக்கைகள் தெரிவிக்கின்றன. தொழில் நிருவாகிகள் செயல்படுவதற்குச் சில ஒழுங்கு முறைகள் காட்டப்பட வேண்டுமென மேலே கண்டோம்: கிட்டத்தட்ட அதே வகையிலான ஒழுங்கு முறைகள் இன்றும் சோவியத் நாட்டில் நடைமுறையிலுள்ளன. அண்மையில் லிபர்மேன் (Liberman) என்ற அறிஞரது அறிவுரைக் கிணங்க சோவியத் நாட்டில் கொண்டுவரப்பட்டுள்ள சீர்திருத்தங்கள் சமதருமத்தின் செயல்பாட்டை மேலும் திறம்படச் செய்துள்ளன. பிற முதலாளித்துவ நாடுகளுடன் போட்டியிடத் தக்க திறமையான கருவிகளையும் பொருள்களையும் சோவியத் நாட்டு அரசுத் தொழில்கள் தந்துள்ளன என்பதை அறியும் போது சமதரும நாட்டிலும் முன்னேற்றத்தை ஊக்குவிக்கும் தூண்டுதல்கள் இயல்பாகவே இருக்கின்றன என்று தான் சொல்ல வேண்டும். எனவே, முதலாளித்துவத்தைப் போன்றே சமதருமமும் தன் வழியில் செயல்படத் தக்கது என்று முடிவு கட்ட வேண்டும்.

பகுதி VI

# பொருளியல் சிந்தனை

'அருந்தமிழ் அகத்தியன் ஆராய்ந் திடவும்
கேள்வியிற் பெரியநக் கீரன் கேட்கவும்
கல்வியிற் பெரியனும் கம்பன் காணவும்......'

(கவிமணி)

# 1. வணிக மரபினர்

பதினைந்தாம் நூற்றுண்டு முதல் தொடர்ந்து முந்நூறுண்டுகள் பல ஐரோப்பிய நாடுகளில் நிலவி வந்த ஒரு கருத்தே 'வணிகமரபு' (Mercantalism) எனப்படுகிறது. நிலமானிய முறை தளர்ந்து நாட்டரசு அமைப்பு ஐரோப்பா எங்கும் மெல்ல மெல்ல மலர்ந்து கொண்டிருந்த போது, அதற்கு இணையாகத் தோன்றி வளர்ந்த ஒரு கருத்தே இது. தனியொரு மனிதரால் விளக்கப் பெற்ற ஒரு கோட்பாடாக இதனைக் கொள்ள முடியாது. இங்கிலாந்தில் தாமஸ்மன் (Thomas Mun), ஜோஸையா சைல்ட் (Josiah Child), ஜேம்ஸ் ஸ்டுவர்ட் (James Stuert), பிரான்ஸிஸ், மான்ஷிரடீன் (Montchre-tien), கால்பெர்ட் (Colbert), ஜெர்மனியில் வான் ஹார்னிக் (Von Hornick), இத்தாலியில் ஸெர்ரா (Serra) முதலான பல்வேறு நாட்டினர் இக் கோட்பாட்டினை விளக்கியுள்ளனர்.

ரோஷர் (Roscher) என்பவர் வணிக மரபின் சாரத்தை ஐந்து கோட்பாடுகளாகத் தந்துள்ளார் :

1. ஒரு நாட்டின் நலமும் வலிமையும் மக்கள் தொகை வளர்ச்சியையே சார்ந்துள்ளது என்பது வணிகமரபின் கோட்பாடுகளில் ஒன்று. மக்கள் தொகை பெரிய அளவில் இருந்தால் உற்பத்தியும் மிகுதியாக இருக்கும் : பெற்றி (Petty) என்பவருடைய கருத்தில் செல்வத்தின் தந்தை உழைப்பு ; தாயோ நிலம். உற்பத்தி மிகுதியாக இருந்தால், பிற நாடுகளை வென்று அடக்குவதும் எளிது. தாவனன்ட் (D'Avenant) சொல்வது போல மக்கள் தொகை செறிந்திருப்பது புதிய கண்டுபிடிப்புக்களை ஊக்குவிக்கும். சாமுவேல் ஃபோர்ட்ரே (Samuel Fortrey) குடியேற்றத்தை ஆதரிக்க வேண்டும் என்று கருத்துத் தெரிவித்தார் : குடியேறுவோர் தம்முடன் செல்வத்தைக் கொண்டு வருவதோடு நாட்டில் தொழில் வணிக நிலையை மேம்படுத்த உதவவும் செய்வார்கள் என்பது அவருடைய கருத்து.

மக்கள் தொகை வளர்ச்சியை ஊக்குவிப்பதற்காக, வாழ்க்கைக்கு இன்றியமையாதவைகளை வேண்டு மட்டும் ஏழைகளுக்கு வழங்க வேண்டும் என்றும் சொல்லப்பட்டது. மக்கள் தொகை வளர்ச்சி உற்பத்திக் கண்ணோட்டத்தில் கருதப் பெற்றதால் கல்விக்கான ஏற்பாடுகளும் வலியுறுத்தப் பட்டன.

2. ஒரு நாட்டின் நலமும் வலிமையும் அங்குக் கிடைக்கிற பொன், வெள்ளி போன்ற மதிப்பரிய உலோகங்களையே பொருத்து உள்ளது. வணிக மரபினரின் முதன்மையான கோட்பாடு இது தான். அத்தகைய உலோகங்களே, அவர்களைப் பொருத்தவரை, செல்வம். இந்தக் கருத்துத் தோன்ற சில காரணங்கள் இல்லாமல் இல்லை. இன்றோ செல்வந்தனுல் வணிகம், தொழில், நிலபுலம் என்று பல துறைகளில் தன்னுடைய பணத்தை முதலீடு செய்ய முடியும். ஆனுல், வணிகமரபினர் காலத்தில் இத்தகைய வாய்ப்புக்கள் இல்லை. முதலீடு என்ற பேச்சுக்கே அன்று இடம் இல்லை. நிலைத்து நிற்கிற, மிகவும் பயன் தருகிற, எல்லாராலும் ஏற்றுக் கொள்ளப் பெறுகிற செல்வ வகை அன்று பொன் வெள்ளிதாம். எனவே, இவற்றையே செல்வமாகக் கொண்டது இயல்புதான். நாட்டரசுகளின் தோற்றத்தைத் தொடர்ந்து, அரசுகளின் செலவுகளை ஈடுகட்டுவதற்காக வரி தண்ட வேண்டிய அவசியம் ஏற்பட்டது; வரிகளைப் பொருள்களாகப் பிரிப்பதிலுள்ள சிக்கல்களைச் சிந்திக்கும் போதும் பணத்தின் முக்கியத்துவம் புரிகிறது. மாற்றை அடிப்படையாகக் கொண்ட பொருளாதாரம் அப்போதுதான் மெல்ல மெல்ல உருவாகிக் கொண்டிருந்தது. இவ் வகைப் பொருளாதாரம் நாடு கடந்து உலகளாவிய நிலையில் வளரும் போது, ஓர் இடையீட்டுப் பொருள் என்ற முறையில் பணத்தின் சிறப்பு இயல்பாகவே உயர்கிறது: வணிகம் வளர வளர ஏராளமான பணமும் வேண்டும் அல்லவா? மேலும், அந்நாளில், வணிகமானது பட்டு, வாசனைப் பொருள்கள், திராட்சைச் சாறு முதலிய சில பொருள்களிலேயே சிறப்பாக நிகழ்ந்து வந்தது; இந்த அற்பப் பொருள்களின் இடத்தில் பொன்னும் வெள்ளியும் பெரு மதிப்புப் பெற்றதில் விந்தை இல்லை!

3. பொன் வெள்ளியே ஒரு நாட்டின் வலிமையை நிருணயிப்பதாகக் கொள்ளும் போது, அவற்றை உள்நாட்டுச் சுரங்கங்களில் பெற முடியாத (இங்கிலாந்து, பிரான்ஸ் போன்ற) நாடுகள், அயல் நாடுகளில் இருந்தேனும் பெற வேண்டிய கட்டாயம் ஏற்படுகிறது. இதற்கு வழி தம்முடைய பன்னுட்டு வணிக மிச்சத்தை, அத்தகைய நாடுகள், எப்போதும் சாதகமாக வைத்திருக்க வேண்டும் என்பது தான். இது வணிகமரபினரின் மற்றொரு கோட்பாடு. ஏற்றுமதியைப் பெருக்கி, இறக்குமதியைச் சுருக்கி, வணிக மிச்சத்தைப்

பொன்னும் வெள்ளியுமாகப் பிற நாடுகளிலிருந்து கொண்டுவர வேண்டும் என்பதுதான் இதன் பொருள். இதனால், அயல்நாட்டுப் பொருள்களை 'நுகரலாகாது என்ற கருத்துப் பரப்பப் பெற்றது. 'அயல் நாட்டவை எல்லாம் நம்முடைய தூய்மையைக் கெடுக்கின்றன' என்பார் மான்ஷிரடீன்; 'நாண்மரபின்' (fashion) பெயரால் அயல்நாட்டுப் பொருள்களை நேசிப்பது பற்றிக் கூறும் வான் ஹார்னிக் 'நாண்மரபாகிய வீட்டுத் தலைவியை அவளுடைய தந்தையாகிய பேயிடம் அனுப்பினால் அது நல்லதொரு செயலாக இருக்கும்' என்பார். இங்கிலாந்து தன்னுடைய நாட்டுக் கப்பல்களிலேயே பொருள்களை அனுப்ப வேண்டும் என்பார் மன். ஆங்கில நாட்டைச் சுற்றியுள்ள கடல் பகுதிகளில் டச்சுக்காரர்கள் மீன் பிடிப்பதற்குப் பதிலாக, ஆங்கிலேயர்களே மீன் பிடிக்க வேண்டும் என்பது மன் கூறிய மற்றொரு கருத்து. இங்கிலாந்து ஒரு பொருள் வழங்கு மையமாகத் திகழ வேண்டும் என்பது அவருடைய பிறிதொரு விருப்பம். பிற நாட்டுக் கச்சாப் பொருள்களைக் கொண்டு செய்யப்பட்ட பொருள்களைத் தடையின்றி ஏற்றுமதி செய்ய வேண்டும் என்பார் அவர்: அது ஆங்கிலேயர்களுக்கு வேலை தருகிறது; நாட்டின் ஏற்றுமதியைப் பெருக்குகிறது; கச்சாப் பொருள் இறக்குமதியின் மீது வரி விதிக்க, மன்னன் கருவூலம் நிறையவும் வழி செய்கிறது. ஏற்றுமதி வரிகள் மிதமாக இருக்க வேண்டும் என்பார் பெற்றி. தவிர்க்க இயலாத இறக்குமதிகளை வினைமுற்ற நிலையில் கொண்டு வந்து உள்நாட்டில் வினை முடிக்க வேண்டும் என்பார் வான் ஹார்னிக். 'பெருமை மிகு தன்னிறைவு பெறுதல் ஒரு நாட்டின் நோக்கமாக இருக்க வேண்டும்' என்பார் மான்ஷிரடீன்.

4. இயல்பாகவே, வணிகத்தையும் தொழிலையும் பொருளாதாரத்தின் சிறந்த பகுதிகளாகக் கொண்டு விவசாயத்துக்கு உரிய சிறப்புத் தர மறுத்தனர் வணிகமரபினர். ஸெர்ரா இந்த விருப்பத் தேர்வுக்கு நான்கு காரணங்களைத் தருவார்: வேளாண்மை இயற்கையைச் சார்ந்திருக்கிற நிலையில் அங்கு உறுதியின்மைக் கூறு ஒன்றுண்டு: தொழிலில் இவ்வாறில்லை. இரண்டாவதாக, தொழிலில் வேளாண்மைக்கு மாறுபட்ட முறையில் வளர்ந்து செல் விளைவு காணலாம். மூன்றாவதாக, விவசாயப் பொருள்கள் அழியத் தக்கன; பிற பொருள்களைச் சேமித்து வைத்துப் பின்னர் நல்ல விலையில் விற்க முடியுமாதலால் அவற்றுக்கு நிலையான அங்காடியும் உண்டு. இறுதியாகத் தொழிலில் இலாப வீதமும் மிகுதி என்பார் ஸெர்ரா. பெற்றியினுடைய கருத்தின்படி ஒரு கடலோடி மூன்று விவசாயிகளுக்குச் சமம்.

5. இறுதியாக, மேற்கூறியவற்றையெல்லாம் செயல்படுத்த வேண்டுமெனில் அரசு பொருத்தமான பொருளியல் கொள்கை

களைச் செயல்படுத்தி, வல்லமையுடன் திகழ்ந்தாக வேண்டும். ஸ்க்மாலர் (Schmoller) கூறியதுபோல 'அரசு உருவாக்கம்' அல்லது, பொருளியல் பக்கத்தில் அரசை உருவாக்குவதே வணிக மரபு. வான் ஸெக்கென்டார்ஃப் (Von Seckendorff) என்பவர் அரசு பன்னிரண்டு வழிகளில் செயல்பட வேண்டும் என்பார். எடை, அளவு கோல்களை ஒழுங்குபடுத்துதல், கடுவட்டியை ஒழித்தல், இளைஞர்க்குக் கல்விதரல், இரும்பு, நூற்பு, கம்பளி, வணிகம், வனம், வேளாண்மை ஆகியவற்றைச் சிறப்பாகக் கவனித்தல், விலையைக் கட்டுப்படுத்தல், அயல்நாட்டுப் பொருள் இறக்குமதியைக் குறைத்தல், சமூக விரோதிகளை அடக்குதல், முற்றுரிமையைக் கலைத்தல் ஆகியவை இவற்றுள் சில. வணிகத்தை வளர்க்கும் முறையில் சலுகைகள் வழங்கப் பெற்ற தனிக் கம்பெனிகளின் தோற்றத்தை ஊக்குவிப்பதும் அரசின் கடமையாகக் கருதப் பட்டது.

வணிக மரபு ஐரோப்பிய நாடுகளின் நடைமுறையில் 300 ஆண்டுகள் செல்வாக்குடன் திகழ்ந்தது. முதலாம் எலிசபெத் அரசி (Elizabeth I) காலத்தில் இங்கிலாந்தும், அமைச்சர் கால்பெர்ட் (Colbert) காலத்தில் பிரான்ஸும் வணிக மரபுக் கோட்பாடுகள் செயல்படு களனாகத் திகழ்ந்தன. இறக்குமதி வரி, ஏற்றுமதிக்கு வரிச் சலுகை, கச்சாப் பொருள் இறக்குமதிக்கு வரி விலக்கு, ஏற்றுமதித் தொழில் உற்பத்தியாளர்க்கு அரச உதவி, அயல்நாட்டு வணிகத்தில் ஈடுபட்டுள்ள நிறுவனங்களுக்குத் தனியுரிமைச் சாசனம் வழங்குதல், கப்பல் செலவு விதிகள், தொழிற் பயிற்சி பெறுவோர் சட்டங்கள், வறியோர் உதவித் திட்டங்கள் முதலியவற்றில் அரசு தனிக் கவனஞ் செலுத்தியது.

இவ்வளவு செல்வாக்குடன் திகழ்ந்த வணிக மரபினர் கருத்துக்களில் சில குறைபாடுகள் இல்லாமலில்லை. அடிப்படைக் குறைபாடு பன்னாட்டு வணிகத்தின் உண்மை இயல்பைக் காணத் தவறி விட்டமைதான். நாடுகளின் நிலையில் வேலைப் பகுப்பினை அடிப்படையாகக் கொண்டு நடப்பது தான் பன்னாட்டு வணிகம்: இதில் இரு நாடுகளும் ஒரு சேர நன்மையடைய முடியும். மேலும், ஒரு நாடு சாதகமான வணிக மிச்சம் பெற வேண்டும் என்று கருதினால், அதே நேரத்தில் தொடர்புள்ள அடுத்த நாட்டின் வணிக மிச்சம் பாதிக்கப்பட்டு விடும்: இந்நிலையில் எல்லா நாடுகளும் சாதகமான வணிக மிச்சம் பெற வேண்டும் என்ற நோக்கத்தில் செயல்படுவது இயலாது அல்லவா?

பொன் வெள்ளிக்கு அளவிறந்த சிறப்புத் தந்ததும் தவறுதான். ஆனால், பண்டமாற்றுப் பொருளாதாரம் மறைந்து மாற்றுப் பொரு

ளாதாரம் தோன்றிக் கொண்டிருந்த அந்நாளையச் சூழலில் இந்தச் சிறப்பு ஒரு வகையில் ஏற்றுக் கொள்ளக் கூடியது என்றே சொல்ல லாம். மேலும், பொன் வெள்ளி ஒரு நாட்டில் மிகுதியாகச் சேரும் போது, அங்கே பணப் புழக்கம் பெருகும். இதனால் வேலை செய் வோர்க்கு அதிக ஊதியம் கிடைக்கும். அது உழைப்பை ஊக்குவிக் கும். பணப் புழக்கம் பெருகினால் வருமானம் பெருகும்; அந்நிலை யில் பொருள் விற்பனையும் பெருகும். பணத்தின் அளிப்புப் பெருகும் போது வட்டிவீதம் இறங்குவதால் முதலீடு வளரவும் வாய்ப்பு இருக் கிறது. இவ்வாறு கெயின்ஸீயக் கருத்துக்கள் சில வணிக மரபின ரிடம் காணக் கிடக்கின்றன. கெயின்ஸைப் போலவே, வணிக மரபினரும் நாட்டை ஓர் அலகாக எடுத்துக் கொண்டு ஆய்ந்துள்ள நிலையில் பேரியல் ஆய்வுக்கு முன்னோடிகளாகவும் திகழ்கிறார்கள். பொருளியல் ஆய்வில் புள்ளி இயலையும் கலந்தவர் இவர்கள். பொருளியல் நிருவாகத்தை 'அரசியல் கணக்கு' என்றே பெற்றி குறிப்பிடுவார்.

# 2. இயற்கை மரபினர்

வணிக மரபினரின் ஆதிக்கச் செயல் வகைகளுக்கு எதிராகப் பிரெஞ்சு நாட்டில் பதினெட்டாம் நூற்றாண்டில் தோன்றி வளர்ந்த புதிய சிந்தனை ஒன்றே 'இயற்கை மரபு' (Physiocracy) என்று கூறப் படுகிறது. இந்தச் சிந்தனையாளர்களில் குறிப்பிடத் தக்கவர் குவெஸ்னே (Quesnay), மிராபோ (Mirabeau), து பான்ட் (Du Pont), துர்கோ (Turgot) ஆகியோர். இவர்களில் குவெஸ்னே[1] முதன்மையானவராகக் கருதப் படுகிறார்.

இயற்கை மரபினர் சிந்தனையின் அடிப்படையே இயற்கை ஒழுங்கின் மீது அவர்களுக்கு இருந்த நம்பிக்கை தான். மக்கள் அனைவரும் மகிழ்ச்சியுடன் வாழ வேண்டும் என்பது தான் உலகியற்றியான் நோக்கம். எனவே, இயற்கையோடு இசைந்து வாழ்வது ஒன்றே இன்பம் பெறவழி ; இயற்கை ஒழுங்கோடு ஒட்ட ஒழுகலே நல்வழி. ஒவ்வொருவரும் தம்முடைய உழைப்பின் பலனை நுகர்வதற்கும், தன்னுடைய உழைப்பைப் பயன்படுத்துவதற்கும் உரிமை பெற்றிருப்பதோடு, பிறர் தம்முடைய நலத்தைப் பேணுவதற்கிருக்கும் சுதந்திரத்தோடு முரணாத வகையில் ஒவ்வொருவரும் தன்னுரிமை பெற்றிருத்தலுமே இயற்கை ஒழுங்கு எனலாம். இந்த இயற்கை ஒழுங்குக்குப் புறம்பாக மனிதனால் இயற்றப்படும் செயற்கைச் சட்டங்கள் நிறைவுடையவையன்று. இயற்கை ஒழுங்கினைப் புறக்கணிக்கும் செயற்கைச் சட்டங்கள் செயல்படவும் முடியாது. இயற்கை ஒழுங்கு செயற்கைத் தடைகளை விலக்கி ஒவ்வொருவர்க்

[1] இவர் 1694-இல் பிறந்தவர். சிறந்த மருத்துவர். பெரிய நிலவுடைமையாளரும் ஆவார். 'உழவர்கள்' 'தானியங்கள்' என்ற தலைப்புக்களில் இரு கட்டுரைகளைக் கலைக்களஞ்சியத்துக்கு எழுதினார். இவருடைய புகழ் மிக்க நூல் 1758-இல் வெளியான 'பொருளியல் பட்டியல்', என்பதாகும். 1760-இல் 'அரசப் பொருளியலின் பொது உண்மைகள்' என்ற நூலையும் எழுதினார்.

கும் தம்முரிமையை உறுதி செய்கிறது. இதன் பொருள் தன்னலம் பேணத் தடையில்லாமல் இருந்தால் பொதுநலம் தானுகவே மேம்பட்டுக் கொள்ளும் என்பதுதான். இயற்கை ஒழுங்கே நடைமுறைச் செயல்முறையாக இருந்தால், ஒவ்வொருவனும் மிகவுயர்ந்த அளவு ஊதியம் தரும் துறையில் தன்னுடைய ஆற்றலுக்குத் தக்கவாறு ஈடுபட முடியும். இவ்வாறு உழைத்து, மிகவுயர்ந்த அளவு ஊதியம் பெறும் போது நாட்டு உற்பத்தியும் வருமானமும் இயல்பாகவே வளர்ந்து செல்கிறது. ஆகவே, 'செய்ய விடு, போக விடு' என்பது இயற்கை மரபினரின் முழக்கமாயிற்று.

எல்லார்க்கும் எல்லாவற்றிலும் உரிமை உண்டு என்பதன்று இயற்கை ஒழுங்கு. ஒவ்வொருவர்க்கும் தத்தம் உழைப்பால் பெற்ற பொருளின் மீது முழு உரிமை உண்டு என்பது தான் இயற்கை ஒழுங்கு. பறக்கும் பூச்சிகளெல்லாம் தமக்குச் சொந்தமானது என்று ஒரு தூக்கணங் குருவி கூற முடியாது. தம்மால் பிடிக்க முடிகிற அளவு பூச்சிகள் மீது மட்டுமே அதற்கு உரிமை உண்டு. இவ்வாறு, காடு திருத்திக் கழனியாக்கிய காரணத்தால் நிலவுடைமையாளனுக்கு நிலத்தின் மீதுள்ள உரிமை இயற்கை ஒழுங்குக்கு உட்பட்டது என்பது இயற்கை மரபினர் கருத்து.

இயற்கை ஒழுங்கினை வலியுறுத்தியவர்கள், இயல்பாகவே, இயற்கையோடியைந்த வேளாண்மையையே தலைசிறந்த தொழிலாகக் கருதினர். விதைத்த வித்துக்கும், உழைத்த உழைப்புக்காக உண்ட உணவுக்கும் எச்சமான ஓர் உற்பத்தி வேளாண்மையில் மட்டுமே கிடைக்கிறது. இதனை 'நிகர விளைவு' என்றனர் அவர்கள். அவர்களுடைய நோக்கில் எச்சமாக உண்டு பண்ணுவதே உற்பத்தி. தொழிலில் பொருளின் வடிவம் மட்டுமே மாறுகிறது. 'நிலைக் கண்ணுடியைப் போல வணிகர்களும் பொருள்களைப் பெருக்குவதாகத் தோன்றலாம்; ஆனால், அவர்கள் உள்ளே யாதும் இல்லாதவர்களை ஏமாற்றுகிறார்கள்' என்பார் ஓர் ஆசிரியர். எனவே, உழவர்களை மட்டும் 'விளைதிறன் உள்ளவர்'களாகவும், பிறரை 'விளைதிறன் இல்லாதவர்'களாகவும் இயற்கை மரபினர் கருதினர். அரசின் செல்வமனைத்திற்கும் குடிமக்கள் அனைவருடைய செல்வத்திற்கும் தோற்றுவாய் வேளாண்மை'... 'வேளாண்மைக்குத் தீமையானவை எல்லாம் அரசுக்கும் நாட்டுக்கும் எதிரானவை; வேளாண்மைக்குச் சாதகமானவை எல்லாம் அரசுக்கும் நாட்டுக்கும் ஆதாயகரமானவை' என்பார் குவெஸ்னே. 'ஏர்ப்பின்னது உலகம்' என்ற கருத்தை ஆழ்ந்த பற்றுதலுடன் வெளியிட்டவர் இயற்கை மரபினர் எனலாம்.

இவர்களுடைய கண்ணோட்டத்தில், நில வுடைமையாளர், உழுது பயிரிடுவோர், வினைதிறன் இல்லாதவர் என மூன்று வகுப்பினர் சமூகத்தில் உள்ளனர். நிலவுடைமையாளர் காடு திருத்திக் கழனி ஆக்கிய காரணத்தால் கைம்மாறு ஒன்றை — விளைச்சலின் பகுதியாகப்—பெற உரிமையுள்ளவர்கள். உழுது பயிரிடுவோர்க்கு விளைச்சலில் உரிமையுண்டு என்பதை விளக்க வேண்டியதில்லை. 'நிகர விளைபொருளை' உற்பத்தி செய்ய இயலாதவர்களே வினைதிறன் இல்லாதவர்கள் ; ஆலைத் தொழிலாளர், வணிகர் முதலியோர் இவ் வகையினர்.

இந்த மூன்று வகுப்பினரிடையே எவ்வாறு நிகர விளைபொருள் சுற்றிச் செல்கிறது என்பதையும் குவெஸ்னே விளக்கி உள்ளார். அவரது விளக்கத்தைப் புரட்சியானது என்றும், மனிதனால் கண்டு பிடிக்கப்பட்டவைகளில் எழுத்தையும் பணத்தையும் போன்ற அளவு மிகச் சிறந்த ஒன்று என்றும் கூறுவோர் உள்ளனர். குவெஸ்னே யின் 'பொருளியல் பட்டியல்' இந்த விளக்கத்தைக் கொண்டுள்ள தால் புகழ் பெற்றுள்ளது. ஓராண்டில் உழவர்கள் ரூ. 5 கோடி மதிப்புள்ள பொருள்களை மொத்தம் உற்பத்தி செய்வதாக வைத்துக் கொள்வோம். இதில் அவர்களுடைய உணவு, வித்து முதலிய உற்பத்தி இனச் செலவுக்காக ரூ. 2 கோடி ஆவதாக வைத்துக் கொண்டால், நிகர விளைவு ரூ. 3 கோடி ஆகிறது. இதில் ரூ. 2 கோடியை நிலவுடைமையாளர்க்கு வாரமாகவும், எஞ்சியுள்ள ரூ. 1 கோடியைத் தமக்கு வேண்டிய பிற பொருள்களை வாங்குவதற்காக வணிகர் முதலியோர்க்கு உழவர் தருவதாகவும் வைத்துக் கொள் வோம்.

இனி, நிலவுடைமையாளரிடம் வந்த ரூ. 2 கோடியில் நேர்பாதி யைத் தம்முடைய உணவுப் பொருள்களிலும், அடுத்த பாதியைப் பிற பொருள்களிலும் செலவிடுவர். இப்போது நிலவுடைமையாளர் களிடமிருந்து ரூ. 1 கோடி மீண்டும் உழவர்க்கே வருகிறது. வணிகர் முதலியோரிடம் நிலவுடைமையாளரிடம் இருந்து ரூ. 1 கோடியும், உழவரிடமிருந்து ரூ. 1 கோடியும் உள்ளது. வணிகர் முதலியோர் தம்முடைய உணவிலும் கச்சாப் பொருளிலுமாகச் செலவிடும்போது அந்த ரூ. 2 கோடி கடைசியில் உழவரையே வந்து சேர்கிறது. இவ்வாறு தொடக்கத்தில் உழவரை விட்டுச் சென்ற நிகர விளைவு இறுதியில் அவர்களையே சென்றடைகிறது. இது தான் குவஸ்னே யால் விளக்கப் பெற்ற நிகர விளைபொருள் சுற்றோட்டம்.

வேளாண்மை மட்டுமே வினைதிறனுள்ள தொழில் ; அங்கு மட்டுமே 'நிகர விளைபொருள்' உள்ளது என்று சுட்டிக்காட்டிய

இயற்கை மரபினர் இதனால் நிலத்தின் மீது மட்டும் ஒரேயொரு வரி விதிப்பதே சரியான முறை என்றும் கூறினர். வணிகர் மீதும் தொழிலாளர் மீதும் வரி விதித்தால், அவர்களுடைய பிழைப்பு ஊதியத்தின் மீதே அது விழும். அதனால் அவர்கள் வரி தர இயலாத நிலை தோன்றும்; அல்லது, அவர்கள் வரி தரவேண்டுமானால் அதற்குத் தக்கவாறு அவர்களுடைய ஊதியம் வளரவேண்டும். ஊதியத்தை வளர்ப்பது இறுதியில் நிலவுடைமையாளனையும் உழவனையுமே பொருத்துள்ளது; இவர்கள் அவ்வாறு பிழைப்பு ஊதியத்துக்கு எச்சமாகத் தர முன்வந்தால் வரியின் பளுவை இறுதியில் உழவனே தாங்கிக்கொள்ளவேண்டிய நிலைதான் ஏற்படும்: எச்சமாக உற்பத்தி செய்கிற காரணத்தால் அவனால் மட்டுமே வரிப்பளுவைத் தாங்கிக் கொள்ளவும்முடியும். இதனால், பிற வகுப்பினர் மீது வரி விதிப்பதைவிட உழவன் மீது வரி விதிப்பதே நல்லது என்பது இயற்கை மரபினர் கருத்து. நிகர விளைபொருள்மீது 30 சதவீத வரி விதிக்கலாம் என இவர்களில் சிலர் திட்டம் வகுத்துள்ளனர். பிற் காலத்தில் ஹென்ரி ஜார்ஜ் (Henry George) போன்றோர் இத்தகைய ஒற்றை வரித் திட்டத்தை ஆதரித்து எழுதினர் என்பது இங்கு நினைவு கூரத் தக்கது.

ருஷிய நாட்டில் இரண்டாம் காதரின் (Catherine II), ஆஸ்திரிய நாட்டு இரண்டாம் ஜோஸப் (Joseph II) தஸ்கனி, பாடன் ஆளுநர்கள் இயற்கை மரபினரின் கொள்கைகளை நடைமுறையில் கடைப்பிடித்துக் காட்டியவர்கள்.

இயற்கை மரபினரே பொருளியல் ஆய்வாளரின் முன்னோடிகள் என்று கூறுவதுண்டு. அவர்கள் விளக்கிய தன்னலநாட்டச் சூழலும் தலையிடாக் கொள்கையும் பிற்காலப் பொருளியலாளர்கள் விரும்பிப் போற்றிய கொள்கைகள். பொருளியலின் ஆய்பொருள் பணமேயன்று; பொருள் உற்பத்தியோடும் பகிர்வோடும் அது மிகநெருங்கிய தொடர்புடையது என்பதைத் தெளிவாக்கிய பெருமை இவர்களுக்கு உண்டு. குவெஸ்னே விளக்கிய பொருள் சுற்றோட்டம் நாட்டு வருமானக் கணக்குப் பகுத்தாய்வின் திருந்தா வடிவமே ஆகும்; இக்காலப் பொருளியல் கணக்கியல் ஆய்வுக்கும் இது வழிகாட்டியாக உள்ளது.

இதே நேரத்தில் வேளாண்மைக்கு ஈந்த தனிப் பெருமை, விளைதிறன் உள்ளோர்—இல்லார் என்ற பாகுபாடு, நிகர விளைபொருள் கோட்பாடு ஆகியவை ஏற்றுக்கொள்ளத் தக்கவையன்று என்பதையும் மறந்துவிடலாகாது. வணிகமரபினரின் செல்வாக்கில் மட்டற்றபடி வளர்ந்துவிட்ட அரசத் தலையீட்டையும், செயற்கைச் சட்டங்

களின் புற்றீசல் தோற்றத்தையும் எதிரிடுவதற்கென எழுதிய இயற்கை மரபினரின் மிகைபடக் கூறலாக இக்குறைகளை எடுத்துக் கொண்டால், அவர்களுடைய உண்மை நிலையை நம்மால் புரிந்து கொள்ள முடியும்.

# 3. ஆடம் ஸ்மித்

'பொருளியல் சிந்தனை வரலாற்றில் ஆடம் ஸ்மித்தின்[1] பெயர் ஒப்பிடமுடியாத அளவுக்கு மிகச் சிறந்த பெருமைக்கு உரியது' என்பார் அலெக்சாந்தர் கிரே,(Alexander Gray). அரசப் பொருளா தாரத்தை நிறுவியவரோ, புனைந்தவரோ, வெளிக்கொணர்ந்தவரோ ஆடம் ஸ்மித் அல்லர் என்று கூறும் கிரே, 'ஆடம் ஸ்மித்துக்கு முன்பு பொருளியல் கலந்தாய்வுகள் நிறைய இருந்தன ; அவருடன் பொரு ளியலைக் கலந்தாயும் கட்டத்தை நாம் எட்டுகிறோம்' என்று சொல் வதிலிருந்து ஆடம் ஸ்மித்தின் பெருமையை உணர்ந்து கொள்ள முடியும்.

அவர் ஒரு வகையில் சூழ் நிலையின் தோன்றல் என்று சொல்ல லாம். பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதி தொழிற் புரட்சி தோன்றி வளர்ந்து கொண்டிருந்த தொடக்க நிலைக்காலம். காட்டு வெள்ளம் போல அடுத்தடுத்து வந்துகொண்டிருந்த புத்தாக்கங்க ளின் கொள்ளைப்பயனை அறுவடை செய்யத் தனி மனிதர்கள் துடி துடித்துக் கொண்டிருந்தனர். இந்தத் துடிதுடிப்பைத் தடை செய் வனவற்றைத் தள்ளிவிடுவதற்கு அவர்கள் சற்றும் தயங்கவில்லை. அரசியல் துறையிலும் பிரெஞ்சு, அமெரிக்கப் புரட்சிகள் தன்னுரிமை

[1] ஸ்காத்லாந்து நாட்டில் கிர்க்கால்ட்டியில் 1723 இல் பிறந்த இவர் கிளாஸ்கோ பல்கலைக் கழகத்தில் பேராசிரியர் ஹட்சிசன் (Hutcheson) என்பவருடைய மாணவரா கப் பயின்றார். டேவிட் ஹ்யூம் (David Hume) என்ற தத்துவ அறிஞர் நூல்களை ஆழ்ந்து கற்றார். ஆக்ஸ்போர்டு, எடின்பரோ பல்கலைக் கழகங்களில் ஆங்கில ஆசிரி யராகப் பணியாற்றினார். பக்லோ கோமகனுடன் (Duke of Buccleuch) ஐரோப்பா எங்கும் சுற்றினார். அங்கே இயற்கை மரபைச் சார்ந்த குவெஸ்னே, துர்கோ போன் றவர்களுடன் கலந்துரையாடி அவர்கள் கருத்தினையும் நன்கறிந்தார். பின்னர், தாம் பயின்ற பல்கலைக் கழகத்திலேயே தொடக்கத்தில் தருக்க நூல் ஆசிரியராகவும் தொடர்ந்து தத்துவப் பேராசிரியராகவும் பணியாற்றினார். இறுதியில் அரசின் சுங்கத் துறையில் அமர்ந்து 1790-இல் காலமானார்.

இவர் 1759-இல் இயற்றிய முதல் நூல் 'அறநெறி மெய்ப்பாடுகள் கோட்பாடு' என்பது: இரண்டாம் நூல் 1776-இல் எழுதிய 'நாடுகளின் செல்வம்' என்பதாகும்.

உணர்வைத் தட்டியெழுப்பிக் கொண்டிருந்தன. அரசின் கட்டுப்பாடுகளை மிகுதியாக விதித்திருந்த வணிக மரபுக் கோட்பாடுகள், இதனால், மக்களிடையே செல்வாக்கிழந்தன; தடையிலாப் பொருளாதாரம் பேரார்வத்துடன் வரவேற்கப் பட்டது. இந்த வரவேற்புக்குக் கண்ணும் மூக்கும் வைத்து, புதிய யுகத்துக்குக் கடைதிறப்புப் பாடும் பொறுப்பு ஆடம் ஸ்மித்துக்கு வந்து வாய்த்தது.

ஆடம் ஸ்மித் வாழ்ந்து வளர்ந்து அவருடைய சிந்தனை உருவாகி மலர்ந்த சூழ்நிலையும் இதற்கு இசைவாக இருந்தது. அவரது ஆசானாகத் திகழ்ந்த ஹட்சிஸன் மக்களின் தன்னல நாட்டப் பண்பைச் சிறப்பாக எடுத்துக் கூறியவர்; மிக அதிகம் பேர் மிக அதிகம் நன்மை பெறுவதைக் குறிக்கோளாகக் கொண்டவர். இது போன்றே ஆடம் ஸ்மித்தின் நண்பரும் உள்ளங் கவர்ந்த நூலாசிரியருமாகிய டேவிட் ஹ்யூம் தனிமனிதன் உரிமைக்குப் பேராதரவு தந்தவர். தம்முடைய ஐரோப்பியப் பயணத்தின் போது அவர் கலந்துரையாடிய இயற்கை மரபினரும் இதே கருத்தை வலியுறுத்தி வந்தவர்கள். இந்தத் தொடர்புகள் ஆடம் ஸ்மித்தைத் 'தடையிலாக் கொள்கையின் தீர மிக்க தற்காப்பாளனாக' ஆக்கி விட்டன.

ஆடம் ஸ்மித்தின் 'நாடுகளின் செல்வம்'[1] முகவுரையொன்றைத் தொடர்ந்து ஐந்து பகுதிகளுடன் திகழ்கிறது. முதலிரு பகுதிகளிலும் உற்பத்தி, மாற்று, பகிர்வுக் கோட்பாடுகள் விளக்கப்படுகின்றன. மூன்றும் பகுதியில் ஐரோப்பிய நாடுகளின் பொருளியல் வரலாறும், அதற்கடுத்த பகுதியில் இயற்கை மரபினரையும் வணிக மரபினரையும் பற்றிய திறனாய்வும் தரப்பட்டுள்ளன. இறுதிப் பகுதி அரச நிதி இயல் பற்றியது.

செல்வத்தின் தோற்றுவாய் எது? என்பதே அக்கால முதன்மைச் சிக்கல். சாதகமான வணிக மிச்சத்தை அடைவதே ஒரு நாட்டில் செல்வம் தோன்ற வழி என்றனர் வணிக மரபினர். வேளாண்மை ஒன்றே விளைதிறனுள்ள தொழில் என்பது இயற்கை மரபினர் கருத்து. இவ்விரு கருத்துக்களையும் ஏற்றுக் கொள்ளாத ஆடம் ஸ்மித் உழைப்புத்தான் செல்வத்தின் தோற்றுவாய் எனத் தம்முடைய நூலின் தொடக்கத்திலேயே சொல்வார்.

செல்வத்தைப் பெருக்குவது எவ்வாறு? என்ற வினா இயல்பாகவே எழுகிறது. செல்வப் பெருக்கம் 'உழைப்பை ஆள்வதில் உள்ள திறமையை, தந்திரத்தை, மதிப்பீட்டை'ச் சார்ந்துள்ளது

[1] 'நாடுகளின் செல்வத்தின் இயல்பையும் காரணங்களையும் பற்றிய ஒரு விசாரணை' என்பது நூலின் முழுப் பெயர்.

என்பார் ஆடம் ஸ்மித். இதன் தொடர்பாகத்தான் வேலைப் பகுப்பு பற்றி அவர் ஆராய முன் வருகிறார். இது பற்றி, அவர் குண்டூசித் தொழிலை எடுத்துக் காட்டாகக் கொண்டு கூறி உள்ள சொற்கள் இன்றும் அறிஞர் நாவில் நடமாடிக் கொண்டிருக்கின்றன: 'ஒருவன் கம்பி இழுக்கிறான். ஒருவன் நேர்க் கம்பி யாக்குகிறான். ஒருவன் வெட்டுகிறான். ஒருவன் ஒரு நுனியைக் கூரியதாக்குகிறான். ஒருவன் தலையைப் பற்ற வைக்க இடம் அமைக்கிறான். ஒருவன் தலைப்பைப் பற்ற வைக்கிறான். தலை செய்ய ஓர் ஆள். மெருகு கொடுக்க ஒருவன். தாளில் குத்தி விற்பனைக்கு ஆயத்தமாக்குவது மற்றொரு வன் வேலை. இவ்வாறு, தொழிலைப் பகுத்துப் பகுத்து ஒவ்வொரு வேலையையும் ஒவ்வொருவன் செய்யும்படி எளிதாக்கா விட்டால், ஒரு மனிதன் நாள் முழுதும் உழைத்தாலும் 10 குண்டூசிகள்—வெண்மையும், அழகும், கூர்மையும் இல்லாதனவாகக் — கூடச் செய்ய முடியாது. ஆனால், வேலைப் பகுப்பை மேற்கொண்ட ஆலையில் 10 அல்லது 15 பேர் ஏறக்குறைய பன்னிரண்டு ராத்தல் குண்டூசிகள் செய்கின்றனர்'

வேலைப் பகுப்பு உற்பத்தியைப் பெருக்குகிறது; தொழிலாளி தேர்ச்சி பெற உதவுகிறது; வேலை நேரத்தைச் சிக்கனப்படுத்து கிறது; புத்தாக்கங்களைத் தூண்டுகிறது. அதன் தீமைகளையும் அவர் சுட்டிக் காட்டாமலில்லை: ஒரே வேலையைத் திரும்பத் திரும்பச் செய்யும் போது அலுப்புத் தட்டிவிடும்; வேலைப் பகுப்பால் உழைப் பின் பெயர்ச்சி தடைப்படலாம்.

வேலைப் பகுப்புக்கு இரு வரையறைகள் உள்ளன என்பார் ஆடம் ஸ்மித். அங்காடியின் விரிவு முதல் வரையறை: இதனால் குடியேற்ற நாடுகளை விரிவுபடுத்துவதை அவர் ஆதரிப்பார். முதலின் அளவு தான் அவர் குறிப்பிடும் அடுத்த வரையறை.

வேலைப் பகுப்புக்கு அடிப்படை சிறப்புத் தொழில் தேர்ச்சி. ஒவ்வொருவரும் தனியொரு தொழிலில் சிறப்பாக ஈடுபடும் போது அவர்களிடையே கொடுக்கல் வாங்கல் — 'மாற்று' — இன்றியமை யாதபடி தோன்றுகிறது. எனவே, வேலைப் பகுப்பைத் தொடர்ந்து இயல்பாகவே மாற்று பற்றி ஆராய முன் வருகிறார் ஆடம் ஸ்மித்.

பண்டமாற்று வசதிக் குறைவு மிக்கது. ஆதலால், பணம் என்னும் இடையீட்டுப் பொருள் தானாகவே தோன்றியது; அதன் தோற்றுவாய் அரச ஆணையன்று. உள்நாட்டில் அது அளவு மீறிய வாறு கிடைத்தால் அயல்நாட்டுக்குச் செல்வதிலிருந்து அதனைத் தடுக்க முடியாது. இப்படிக் கூறும் போது வணிக மரபினர் பணத்

துக்கு நல்கி வந்த தனிச் சிறப்பை மறுத்து உரைத்தவர் ஆகிறார் ஆடம் ஸ்மித்.

மாற்று பற்றித் தொடர்ந்து விளக்கும்போது, பொருளின் பயன் மதிப்பு, மாற்று மதிப்பு ஆகியவற்றை வேறுபடுத்திக் காட்டுகிறார் ஆடம் ஸ்மித். பயன் மதிப்பு மிகவுடைய தண்ணீர் மாற்று மதிப்பு இல்லாமலும், வைரம் போன்ற பயன் மதிப்புக் குறைந்தவை மாற்று மதிப்பு மிகுந்தும் திகழ்கிற முரண்பாடு இங்குச் சுட்டிக் காட்டப்படுகிறது.

மாற்று மதிப்பை நிருணயிப்பது எது? என்ற வினா இங்கு எழுகிறது. ஒவ்வொரு பொருளிலும் ஈடுபடுத்தப் பெற்றுள்ள உழைப்பின் அளவே மாற்று மதிப்பை நிருணயிக்கிறது என்பது ஆடம் ஸ்மித்தின் கருத்து. வேட்டையாடுபவன் ஒரு நாள் வேட்டையில் ஒரு மான் அல்லது இரண்டு பீவர்[1] வேட்டையாட இயலும் என்றால், ஒரு மான் = இரண்டு பீவர் என்ற விகிதத்தில் மாற்று நடக்கும் என்பது அவருடைய புகழ்பெற்ற எடுத்துக்காட்டு.

அடுத்த அதிகாரத்தில் பொருள் விலையின் உட்பகுதிகளைப் பற்றி ஆராய முற்படும் ஆடம் ஸ்மித் 'தொடக்க காலத் திருந்தா நிலைப்பட்ட சமூகத்தில்' உழைப்பை மதிப்பு அளவையாகக் கொள்வது பொருந்தும் என்றும், பிற்காலச் சமூகங்களில் உழைப்புடன் முதலும் நிலமும் கூட உற்பத்தியில் ஈடுபடுவதால் 'இயற்கை விலை' யானது வாரம், கூலி, இலாபம் ஆகியவற்றின் கூட்டுத் தொகையாகவே இருக்க முடியும் என்றும் கூறுவார். இவ்வாறு, மதிப்பின் உழைப்புக் கோட்பாடு ஒன்றைத் தந்தவர் அடுத்து மதிப்பின் உற்பத்திச் செலவுக் கோட்பாடு ஒன்றையும் தருவதைப் பார்க்கலாம்.

தொடர்ந்து ஆராயும் போது, விலையானது உற்பத்திச் செலவுக்குச் சமமாகுவது 'இயற்கை விலை' என்றும், அங்காடியில் நிலவும் உண்மை விலை அவ்வப்போதுள்ள தேவையையும் அளிப்பையும் சார்ந்து நிற்கும் என்றும் சொல்லப்படுகிறது.

ஆக, உழைப்பே உத்தமமான மதிப்பு அளவை என்றும், குறிப்பிட்ட நேரத்தில் விலையானது தேவை— அளிப்பைச் சார்ந்திருப்பதாகவும், இறுதியில், அது போட்டிச் சூழலில் கூலி, இலாபம், வாரம் ஆகிய மூன்றுமான உற்பத்திச் செலவுக்குச் சமமாக ஆகிவிடும் என்றும் கூறுகிறார் ஆடம் ஸ்மித்.

[1] ஒரு வகை விலங்கு

அடுத்து கூலி, இலாபம், வாரம் ஆகியவை எவ்வாறு நிருணயமாகின்றன என்று ஆராயலாம்.

கூலி நிருணயத்தைப் பொருத்த வரை ஆடம் ஸ்மித்தின் கோட்பாடு தெளிவாக இல்லை. மதிப்பு அனைத்தும் உழைப்பால் படைக்கப்படுவதால், பொருள் அனைத்தும் உழைப்புக்கே சொந்தம் என்று ஓரிடத்தில் அவர் கூறுகிறார். இங்கே, பிற்காலச் சமதரும மரபினர்க்கு அவர் வழிகாட்டியாகத் திகழ்கிறார். பின்னர், கூலியானது உழைப்புத் தேவையையும் அளிப்பையும் பொருத்திருப்பதாகக் கூறி, வேலை தருவோர் ஒற்றுமையுடன் வல்லவர்களாகத் திகழ்வதால் கூலிவீதம் பிழைப்பு மட்டத்துக்கு இறங்கி விடுவது நிகழத் தக்கது என்று கூறுவார். இங்கே கூலி பற்றிய இரும்பு விதியொன்று தரப் பெறுகிறது. பிறிதோரிடத்தில், கூலி கொடுப்பதற்கென வேலைதருவோர் ஒதுக்கி வைத்திருக்கும் நிதியின் அளவையே கூலிவீதம் பொருத்திருப்பதாகச் சொல்லி, கூலி நிதிக் கோட்பாட்டையும் ஆதரிப்பதாகக் காட்டிக் கொள்கிறார். உழைப்பவர் திறமைக்கேற்றவாறு கூலிவீதம் அமையும் என்று சொல்லி வினைதிறன் கோட்பாட்டுக்கும் வித்தூன்றி வைக்கிறார். கூலிவீதம் உயர்வாயிருந்தால் மக்கள் தொகை பெருக நேர்ந்து, தொடர்ந்து கூலி மட்டம் இறங்க நேரும் என்றும் கூறி, மால்தஸின் மக்கள் தொகைக் கோட்பாட்டுக்கும் பிள்ளையார் சுழி போட்டு வைக்கிறார். இவ்வாறு, கூலி பற்றிய பிற்கால ஆசிரியர்கள் கோட்பாடு அத்தனைக்கும் தோற்றுவாயை ஆடம் ஸ்மித்திடம் காண முடிகிற விந்தை நிலையைப் பார்க்கலாம்.

இலாபத்தைப் பற்றிக் கூறும் போது வளரும் சமூகத்தில் அது வளர்ந்து செல்லும் போக்கைக் காணலாம் என்பார். ஆனால், இலாபம் வளர்ந்து செல்லும் போது கூலி குறைந்து சென்றாக வேண்டும் என்பது அவர் முடிவு. எந்தத் தொழிலிலும் திரள்கிற ஆதாயத்தை இலாபமாக வேலை தருவோனும், கூலியாக வேலைசெய்வோனும் பகிர்ந்து கொள்ள வேண்டுமாதலால், ஒருவர் பங்கு கூடினால் மற்றவர் பங்கு குறைந்தாக வேண்டும் என்பார் அவர்.

அடுத்து, கூலிவீத வேறுபாடுகளைப் பற்றிக் குறிப்பிடும்போது தொழிலின் இசைவான தன்மை, பயிற்சி எளிமை, வேலையொழுங்கு, பொறுப்பு நிலை, வெற்றி வாய்ப்புக்கள் ஆகியவற்றை அவற்றிற்குக் காரணமாகச் சுட்டிக் காட்டும் ஆடம் ஸ்மித்தின் கருத்து இன்றளவும் பாடப் புத்தகங்களில் இடம் பெற்று நிற்கிறது. இதுபோன்றே, இலாப வேறுபாடுகளுக்குக் காரணங்கள் தொழிலின் இசைவான தன்மை, நட்ட ஆபத்து நிலை எனும் இரண்டுமே ஆகும். அவருடைய எண்ணத்தில் வட்டி இலாபத்தின் உள்ளடக்கம்.

வாரத்தைப் பற்றிச் சொல்லும் போது, அது வலிந்து பறிக்கப் படுகிற ஒன்று என்றே குறிப்பிடப்படுகிறது. குத்தகையாளனால் தர முடிகிற மிகவுயர்ந்த அளவே வாரம் என்பது ஆடம் ஸ்மித்தின் கருத்து. நிலத்தை முற்றுரிமையாக நிலவுடைமையாளன் பெற்றிருப்பதாலேயே வாரம் அவனுக்குக் கிடைக்கிறது. நிலத்தின் வளத்தையும் கிடப்பையும் பொருத்து வாரத்தின் அளவு வேறுபடும் என்று ஆடம் ஸ்மித் கூறும்போது ரிக்கார்டோவின் குரலை அங்குக் கேட்க முடிகிறது அல்லவா?

'நாடுகளின் செல்வம்' என்ற நூலின் இரண்டாம்பகுதி 'முதலின் இயல்பு, திரட்சி ஆட்சி' ஆகியவை பற்றி உரைக்கிறது. இப் பகுதியில் தெரிவிக்கப்படும் கருத்துக்களில் இரண்டு மிகச் சிறப்பானவை. உழைப்பின் விளைதிறன் பற்றிய ஆடம் ஸ்மித்தின் கருத்துக்கள் இங்குத் தரப்பட்டுள்ளன. எச்சமாக உண்டு பண்ணுவதே உற்பத்தி எனக் கொண்டு வேளாண்மையை மட்டுமே விளைதிறனுள்ள தொழில் என இயற்கை மரபினர் கருதினர். ஆடம் ஸ்மித் மதிப்பைப் பெருக்குவதே உற்பத்தி என்பார். 'விற்க முடிகிற பொருள்' ஒன்றை உண்டுபண்ணுகிற தொழில் ஒவ்வொன்றும் விளைதிறன் உள்ளவை என்பார் அவர்.

இரண்டாவதாக, முதல் திரட்சி பற்றிய அவர் கருத்துக்களும் சிறப்பானவை. செலவைச் சுருக்குவதே முதல் திரள வழி. ஊதாரி பொதுவாக, பொதுநலப் பகைவன் என்றே குறிப்பிடப் படுகிறான்.

முதலின் ஆட்சி பற்றிக் குறிப்பிடும் போது, ஆட்சி வகைகளை வரிசைப்படுத்தினால், முதலிடம் பெறுவது வேளாண்மை என்று கூறப்படும். உழவனின் உழைப்புக்கும் எச்சமான விளைவு கிடைப்பதே இந்த முதன்மைக்குக் காரணம். அடுத்த இடம் பொறிவழியாக்கத் தொழிலுக்குத் தரப் பெறுகிறது. ஏற்றுமதி வணிகம் மூன்றும் படியில் வருகிறது. இங்கே இயற்கை மரபினரின் சாயலைக் காணலாம் அல்லவா?

வணிகமரபினரின் கொள்கைளை மறுத்துரைக்கும் போது தடையிலா வணிகத்தின் சார்பாக ஆடம் ஸ்மித் உரைப்பன இன்றளவும் சிறந்தவையாகக் கருதப்பட்டு வருகின்றன. எல்லாப் பொருள்களையும் போன்றவையே பொன்னும் வெள்ளியும். அவற்றின் மீது அளவிறந்த பற்றுக் கொண்டு வணிகத்தைக் கட்டுப்படுத்துவதில் பொருளில்லை. 'வணிகத்தைக் கவனி; அது பொன்னைக் கவனித்துக் கொள்ளும்' என்பது அவருடைய பொன்னுரை. வள அமைதியில் நாடுகள் வெவ்வேறு நிலையில் உள்ளன. எனவே, ஒவ்

வொரு நாடும் தம்மிடமுள்ள வளத்துக்குத் தக்கவாறு ஒவ்வொரு தொழிலில் சிறப்பாக ஈடுபடும் போது, எச்சமாக உள்ளவற்றைப் பிற நாடுகளுக்கு அனுப்பித் தம்மிடம் இல்லாதவற்றை அங்கிருந்து வரவழைத்துக் கொள்ள முடியும். வேலைப் பகுப்பை நாடுகளின் அளவில் விரிக்கும் போது தோன்றுவதுதான் பன்னாட்டு வணிகம்.

தடையிலா வணிகத்துக்கும் சில விதிவிலக்குகள் உள்ளன என்பார் ஆடம் ஸ்மித்: 'நாட்டின் பாதுகாப்பு நாட்டின் செல்வச் செழிப்பைவிட மேலானது'. எனவே, தற்காப்புத்துறைத் தொழில் களுக்குப் பாதுகாப்பு நல்குவதில் தவறில்லை. உள் நாட்டுப் பொருள் வரி செலுத்தி வரும் பொருள்கள் மீதும் சுங்கவரி விதிப் பதில் தவறில்லை. இல்லையெனில் ஒப்பீட்டடிப்படையில் அப் பொருள்களின் விலை அயல் நாட்டுப் பொருள்கள் விலையை விட உயர்வாக இருந்து, அதனால் உள் நாட்டுத் தொழிலுக்குக் கேடு விளையலாம். இதுபோன்றே அயல் நாடுகள் விதித்துள்ள சுங்க வரிக்குப் போட்டியாக வரி விதிப்பதும் சரியே. இறுதியில், ஏற் கெனவே விதிக்கப் பெற்றுள்ள இறக்குமதி வரிகளை உடனடியாக அகற்றுவதும் தவறு. அவ்வாறு செய்தால் உள் நாட்டுத் தொழில் போட்டியில் அழிந்து போகலாம்.

அரசின் வரிக் கொள்கையின் தொடர்பாக ஆடம் ஸ்மித் புனைந் துள்ள நான்கு புனித விதிகள் இறவாப் புகழ் பெற்றுள்ளவை: மக்களுடைய ஆற்றலுக்குத் தக்கவாறு வரிகள் விதிக்கப் பெற வேண்டும்; அவை வரையறுக்கப் பட்டிருக்க வேண்டும்; அவை வரி செலுத்துவோனுக்கு வசதியானவைகளாக இருக்க வேண்டும்; சிக்கனமாகவும் இருக்க வேண்டும்.

அரசின் தலையீடு இல்லாமலேயே தன்னல நாட்டத்துடன் மக்கள் தம்முடைய செல்வத்தைப் பெருக்குவது உறுதி. எனவே அரசின் கடமை வாளா இருப்பது தான். நாட்டின் அகப்புறப் பாது காப்பு, நீதி வழங்கல் ஆகியவை மட்டுமே அதன் பொறுப்பு. தனி மனிதன் வாழ் நாளுக்குள் பலன் தராத நீர்ப்பாசனத் திட்டங்கள், போக்குவரவு—தொடர்பு வசதிகளை நிறுவுதல் போன்றவற்றையும், காசாக மாற்ற முடியாத பள்ளிகள், பூங்காக்கள், மருத்துவ வசதிகள் போன்றவற்றையும், தொழில் வளர நிதி தருகிற நிதி நிறுவனங்கள் போன்றவற்றையும் அரசு நடத்துவதை ஆடம் ஸ்மித் வரவேற் பவரே. இருந்தாலும், பொதுவாக, அரசு பாழ்ச் செலவுகளை மிகுதி யாக இடத்தக்கது என்பது அவர் கருத்து.

இவ்வளவு சீரிய கருத்துக்களை வகை தொகை செய்து தந்த ஆடம் ஸ்மித், 'பொருளியலின் தந்தை' என அழைக்கப்படுவது

பொருத்தமானதே. பொருளியல் கருத்துக்களுக்கு இன்றும் அவரே முன்னோடி. பிற் காலத்தில் தோன்றிய பல கருத்துக்களுக்கு 'நாடு களின் செல்வம்' தான் அடிப்படையாக உள்ளது. சம தருமக் கருத்துக்களுக்குக் கூட அங்கே வித்தூன்றப் பட்டுள்ளது. காரல் மார்க்ஸ் எழுதிய 'முதல்' என்ற நூலின் மூன்றும் பகுதிக்கான அடிப் படை. 'நாடுகளின் செல்வம்' என்ற நூலின் முதல் பகுதியில் உள்ளது என்பார் ஆசிரியர் ஒருவர்.

ஆடம் ஸ்மித்தின் கோட்பாடுகள் வெறும் ஏட்டுச் சுரைக்காயாக இராமல் செயல்படுத்தியும் காட்டப்பட்டன என்பது இன்னொரு சிறப்பு. இங்கிலாந்து தடையிலா வணிகத்தைப் பேணி, வணிகத் தடைகளை அகற்றி, தானியச் சட்டங்கள் போன்றவற்றை ஒழிக்கக் காரணம் 'நாடுகளின் செல்வம்' என்ற நூலின் தோற்றமே என்றால் மிகையன்று. ஆடம் ஸ்மித், தன்னுடைய தலைமுறையைத் தூண்டி விட்டு, அடுத்த தலைமுறையை ஆட்சி புரிந்தார்' என்று ஆசிரியர் ஒருவர் அழகாகக் குறிப்பிட்டுள்ளார்.

இருந்த போதிலும், ஆடம் ஸ்மித்தைக் குறை கூறுவோரும் இல்லாமல் இல்லை. ஜெர்மானிய வரலாற்று மரபினர் இவர்களில் முன்னணியில் நிற்பவர்கள். செல்வத்துக்கு மிகக் குறுகிய விளக்கம் கொடுத்து நாட்டு நலனை ஆடம் ஸ்மித் புறக்கணித்து விட்டார் என்பது ஒரு குற்றச்சாட்டு. ஒரு பொருள் வய மனிதனை அவர் கற்பித்து அவனைத் தன்னலம் மட்டுமே நாடுபவனாகச் சித்திரித்து விட்டதாகச் சொல்லப் படுகிறது. தனிமனிதனுக்கு அளவு மீறிய சிறப்புத் தந்து அரசுக்குரிய இடத்தை அவர் மறந்து விட்டார் என்று சொல்வதும் உண்டு. இவ்வாறெல்லாம் குறைகூறும் போது 'நாடுகளின் செல்வம்' என்ற நூலில் ஆடம் ஸ்மித்தின் ஒரு பகுதி யைத்தான் காண்கிறோம் என்பதை மறந்து விடலாகாது. 'அறநெறி மெய்ப்பாடுகளின் கோட்பாடு' என்ற நூலின் ஆசிரியரும் அவரே அல்லவா? ஸே போன்றோர் கூறும் குறை 'நாடுகளின் செல்வம்' பலவற்றை நன்கு விளக்கத் தவறி ஒரே குழப்பமாக உள்ளது என்ப தாகும். முன்னோடிகள் அனைவரும் அநேகமாக இழைத்து உள்ள தவறுகளில் ஒன்றுதான் இதுவும்!

# 4. கார்ல் மார்க்ஸ்

உலகப் போக்கையே மாற்றியமைத்த ஒரு சில நூற்களில் கார்ல் மார்க்ஸின்[1] 'முதல்' எனும் நூலும் ஒன்று எனக் கருதப்படுகிறது. 'பாட்டாளிகளின் மறை நூல்' என்றே இது குறிப்பிடப்படுகிறது. மார்க்ஸின் நூல்களும் அவை சொல்வனவும் கடலெனப் பரந்து கிடக்கின்றன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் முதன்மையான மூன்று கருத்தோட்டங்களைப் பொறுக்கி எடுத்து ஒருங்கிணைத்து முழுவடிவம் கொடுத்தவர் அவர். பழைய ஜெர்மானியத் தத்துவ ஞானத்தையும், ஆங்கில நாட்டு அரசப் பொருளாதாரத்தையும், பிரெஞ்சு நாட்டுச் சமதருமப் புரட்சிக் கருத்துக்களையும் பின்னிப் பிணைத்துத் தந்துள்ளார் அவர்.

அவருடைய கருத்துக்களை அறுவகைப்படுத்தி ஆராய்ந்துள்ளார் அலெக்சாந்தர் கிரே. பொருளியல் சார் வரலாறு, மார்க்ஸின் மதிப்புக் கோட்பாடு, எச்ச மதிப்புக் கருத்து, வேலையில்லாதோர் படைப்பெருக்கம், முதலாளித்துவத் திரட்சிவிதி ஆகியவையே அவ்வாறும்: இவற்றை ஒவ்வொன்றாக இனிக் காணலாம்.

[1] கார்ல் ஹென்ரிக் மார்க்ஸ் (Karl Heinrich Marx) யூதராக இருந்து பின்னர் கிறிஸ்தவ சமயத்தைத் தழுவிய ஜெர்மானியக் குடும்பம் ஒன்றில் 1818-இல் தோன்றினார். பான் (Bonn), பெர்லின் (Berlin), ஜீனு (Jena) என்ற மூன்று இடங்களிலும் பயின்று, இறுதியாகக் குறிப்பிட்ட பல்கலைக் கழகத்தில் டாக்டர் பட்டமும் பெற்றார். ஹெகல் (Hegel) கூறிய தத்துவக் கோட்பாடுகளை ஆழ்ந்து கற்றார். தம்முடைய தீவிரக் கருத்துக்களால் ஆசிரியத் தொழிலில் புக முடியாத நிலை ஏற்பட்டு, பத்திரிகைத் தொழிலை மேற்கொண்டார். 'ரேனிஷ் டைம்ஸ்' என்ற அப் பத்திரிகைக்குத் தடை விதிக்கப்பட்டது. எனவே 1843-இல் வேலை தேடி பாரிஸ் நகர் சென்று, அங்கும் ஒரு தீவிர இடது சாரிப் பத்திரிகையின் ஆசிரியராகப் பணியாற்றினார். அங்கிருந்தும் இரண்டாண்டுகளில் நாடு கடத்தப் பட்டார். பின்னர் பெல்ஜியத்தின் தலைநகராகிய பிரஸ்ஸல்ஸ் சென்றார். 1848 - இல் நடந்த ஜெர்மானியப் புரட்சியில் பங்கெடுக்க மீண்டும் ஜெர்மனி ஏகினார். புரட்சி தோல்வி யுறவே இங்கிலாந்தில் அடைக்கலம் புகுந்தார், 1883-இல் காலமாகும் வரை இலண்டனிலேயே தங்கினார். இலண்டன் காட்சி அரங்கிலுள்ள நூல் நிலையத்திலேயே நாளெல்லாம் படிப்பதிலும் ஆராய்வதிலுமாகச் செலவிட்டார். மிகச் சிறந்த படிப்பாளி, 'நடமாடும் கலைக்களஞ்சியம்' என்று போற்றப்படுபவர். இவருடைய நண்பரும் புரவலருமாகத் திகழ்ந்தவர் பிரடரிக் எங்கல்ஸ் (Frederick Engels) என்ற தொழிலதிபர் ஆவார்.

மனித இனத்தின் கதைதான் வரலாறு. இந்தக் கதைப் போக்கில் பலப்பல ஏற்ற இறக்கங்களை, மாறுதல்களைக் காண்கிறோம். இந்த மாறுதல்களுக் கெல்லாம் பொருளியல் அமைப்பில் அவ்வப் போது ஏற்பட்ட மாறுதல்களே காரணம் என்பது மார்க்ஸின் கருத்து. குறிப்பிட்ட காலத்தில் அரசியல், சமூகம், சமயம், சட்டம், பண்பாடு ஆகிய அனைத்தும் பொருளியல் அடிப்படையில் – அதாவது உற்பத்தி அமைப்பை ஆதாரமாகக் கொண்டே—நிருணயிக்கப் படுகின்றன. நாகரிகமடையாத சமூகம், அடிமை முறை, நில மானிய முறை, முதலாளித்துவம், சமதருமம் ஆகிய ஐந்து பருவங் களிலும் உற்பத்தி உறவுகள் வெவ்வேறு வகைப்படுகின்றன. இந்த வேறு பாட்டுக்குக் காரணம் உற்பத்தி வழிவகைகளின் உரிமை யானது வெவ்வேறு சாராரிடம் இந்தப் பருவங்களின் போது இருப்பது தான். இதனால் ஒவ்வொரு பருவத்துக்கும் பொருத்த மான பொருளியல் அமைப்பு, கருத்துக்கள், குறிக்கோள்கள், சமூக ஏற்பாடுகள் அமைகின்றன. இவை வரன்முறையாக, ஒன்று தன்னைவிட உயர்வான அடுத்ததற்குத் தானாகவே வழிவகுத்து விடுகின்றன. இவ்வாறு மனிதனுடைய பல்வகைச் செயல்களுக்கும் பொருளியல் நோக்கமே தூண்டுகோல் என்று நிறுவப்படுகிறது.

(எப்பொழுதும் சமூகத்தில் இரு வகுப்புக்கள் தோன்றி ஒன்றை யொன்று பகைத்துப் போரிட்டுக் கொண்டிருக்கும் என்பது மார்க்ஸின் இரண்டாவது கோட்பாடு. இந்த வகுப்புக்கும் பொரு ளியல் நிலையே அடிப்படை. ஒரு வகுப்பினர் உள்ளவர்; அடுத்த வகுப்பினர் இல்லாதவர். முதல் வகுப்பினர் இரண்டாம் வகுப்பின ரைச் சுரண்டுவது வழக்கம். சுதந்தர மனிதனும் அடிமையும், (ரோமாபுரிப்) பிரபுவும் பாமரனும், நிலக்கிழானும் பண்ணையாளும், முதலாளியும் பாட்டாளியும் எனச் சமூகமானது பல்வேறு பருவங் களிலும் பிளவுபட்டே நிற்கிறது. இந்த வர்க்கங்களிடையே நிகழும் போராட்டத்தால் தான் சமூகம் புரட்சிகரமான மாறுதல்களை அடைந்து வருகிறது என்பார் மார்க்ஸ். 'புதிய சமூகத்தைக் கருக் கொண்டு நிற்கும் ஒவ்வொரு பழைய சமூகத்திற்கும் வன்முறையே மருத்துவச்சியாக இருக்கிறது' என்பார் அவர்.)

மார்க்ஸின் மதிப்புக் கோட்பாடு தொன்மைப் பொருளியல் அறிஞர்களின் முடிவுகளையே அடிப்படையாகக் கொண்டிருக்கிறது.

இவரும் எங்கல்சும் கூட்டாக எழுதிய 'பொதுவுடைமை அறிக்கை' 1848-இல் வெளியாயிற்று. 1859-இல் 'அரசப் பொருளாதாரத்தின் திறனாய்வு' என்ற நூல் வெளியாயிற்று. இவருடைய மிகச் சிறந்த நூல் 'முதல்'. இதன் முதற் பகுதி 1867-இல் வெளி வந்தது. அடுத்த இரு பகுதிகள் இவர் காலமான பின் எங்கல் ஸால் 1883-இலும் 1889-இலும் வெளியிடப்பட்டன. எஞ்சியவைகளை 'எச்ச மதிப்புக் கோட்பாடுகள்' என்ற தலைப்பில் கார்ல் கவுட்ஸ்கி (Karl Kautsky) 1904-10-இல் வெளியிட்டார்.

பொருள்களின் பயன் மதிப்பையும் மாற்று மதிப்பையும் வேறு படுத்திக் காட்டிய பின்னர் மாற்று மதிப்பு எவ்வாறு நிருணயமா கிறது என்ற வினவை எழுப்பி, விடையையும் தருகிருர் மார்க்ஸ். இரு பொருள்கள் மாற்றிக் கொள்ளப்படும் போது அவ்விரண்டிற்கும் பொதுவாக இருக்கும் ஒன்றின் அடிப்படையிலேயே அவற்றின் தராதர மதிப்பு நிருணயிக்கப்படும். எல்லாப் பொருள்களுக்கும் பொதுவாக இருப்பது அவற்றின் உற்பத்தியில் செலவிடப் பெற்றுள்ள உழைப்பு ஒன்றே. எனவே, ஒவ்வொரு பொருளின் மதிப்பும் கண்ணுக்குப் புலப்படாது அதில் உறைந்து கிடக்கும் உழைப் பின் அளவுக்குச் சமமாகும் என்பார் மார்க்ஸ். இங்கும் பலவகை உழைப்புக்களை ஓரியல் படுத்துவதற்காகச் 'சமூகநலனுக்கு அவசிய மான உழைப்பு' என்ற அளவு கோலைக் கொண்டு பொருள்களின் உற்பத்தியில் உறைந்து கிடக்கிற உழைப்பைக் கணக்கிடவேண்டும் என்பார் அவர்.

முதலாளித்துவ அமைப்பில் உழைப்பாற்றலும் ஒரு பொருளா கவே இருக்கிறது. இதர பொருள்களைப் போல உழைப்பாற்றலும் கூலி என்ற பெயரால் பணத்திற்கு முதலாளியால் வாங்கப்படுகிறது; உழைப்பாளியால் விற்கப்படுகிறது. இந்த உழைப்பாற்றலின் மதிப்பும் அதன் உற்பத்தியில் செலவிடப் பெற்றுள்ள உழைப்புத் தான். உழைப்பாற்றல் அதனைப் பேணப் போதுமான உணவு உடை முதலியவற்றினுல் ஆவது. எனவே, உழைப்பை விற்கும் போது, அதன் விலையாகிய கூலி உழைப்பாளரின் உணவு உடை முதலியவற்றை ஈடுகட்டத் தக்கதாக இருக்க வேண்டும்.

முதலாளித்துவ அமைப்பிலும் மேற் கூறியவற்றைக் கூலி ஈடு கட்டாமலிருக்க வழியில்லை. ஆனுல், மக்கள் தொகை மிகுதியால் உழைப்பாளரைச் சுரண்டுவதற்கான வாய்ப்பு முதலாளிக்குக் கிடைத்து விடுகிறது. உழைப்பாளி ஒருவன் தன்னுடைய உணவு உடை முதலிய பொருள்களைப் பெற 4 மணிநேரம் உழைத்தால் போதும் என்று வைத்துக் கொள்வோம். ஆனுல், உண்மையில் அந்த 4 மணிநேரத்துக்கு மட்டும் அவனை முதலாளி வேலையில் அமர்த்துவதில்லை; இன்னும் நீண்ட நேரம்— 8 மணிநேரம் என்று வைத்துக் கொள்வோம் - முதலாளி வேலை வாங்குகிருர். இந்நிலையில் உழைப்பாளி ஒரு நாளில் 4 மணி நேரத்தைத் தனது உழைப்பாற் றலுக்குச் சமமான மதிப்பை உற்பத்தி செய்ய உழைக்கிருன்; இன்னொரு 4 மணிநேரமோ தனது உழைப்பாற்றலுக்கு எச்சமான மதிப்பை உற்பத்தி செய்ய உழைக்கிருன். இது தான் 'எச்ச மதிப்பு' தோன்றும் முறை என்பார் மார்க்ஸ்.

இந்த எச்ச மதிப்பை மேலும் மேலும் பெருக்குவது தான் முதலாளிகளின் குறிக்கோள். முதலாளிகளைப் பொருத்தவரை அவர்கள் 'மாறு முதல்,' 'மாறும் முதல்' என இருவகை முதல்களை உற்பத்திக்குத் தருகின்றனர். எந்திரங்களும் பிற பொருளுற்பத்திக் கருவிகளும் மாறு முதல். இவற்றிலும் உழைப்புத்தான் உறைந்து கிடக்கிறது. இவை தம்முள் அடக்கி வைத்திருக்கும் உழைப்பைத் தருவதுடன் பொருள் உற்பத்திக்குச் செய்யும் பணியும் முடிவடைந்து விடுகிறது. 100 நாட்கள் உழைப்பினால் செய்த எந்திரம் 100 நாட்கள் உழைப்பையே தரும்; அத்தனை நாட்களே பணி புரியும்; அதன் விலையும் 100 நாட்கள் உழைப்பாகவே இருக்கும். மாறும் முதலோ தொழிலாளர்க்குக் கூலி தருவதற்காக ஒதுக்கி வைக்கப்படும் தொகை—உழைப்பாற்றல் வாங்குவதில் ஈடுபடுத்தப் படும் முதல். இந்த முதல்தான் உழைப்பாளர் இடமிருந்து எச்ச மதிப்பை உற்பத்தி செய்து பெற முதலாளிக்கு உதவுவது. எனவே, முதலாளிகளின் இலாப வாய்ப்பு அவர்கள் பயன் படுத்தும் மாறும் முதலின் அளவைத்தான் சார்ந்திருக்கிறது.

இதனால், தாம் ஆளும் மாறும் முதலின் விகிதத்தை முதலாளி கள் மேலும் மேலும் மிகுத்துச் செல்வார்கள் என எதிர்பார்க்கலாம். ஆனால், நடைமுறை வேறுவிதமாக உள்ளது. அவர்கள் மாறு முதல் ஆகிய எந்திரங்களையே அதிகமதிகம் பயன்படுத்துகிறார்கள்: இதனால், இலாபவீதம் தொடர்ந்து குறைந்து கொண்டே செல் கிறது. இந் நிலையிலும் மொத்த இலாபத்தை மிகுதியாகப் பெற வேண்டும் என்ற அவர்களுடைய ஆசை மட்டும் அடங்குவதில்லை. இந்த ஆசையை நிறைவேற்ற வேண்டுமெனில் - குறைந்த வீதத் தில் ஆகமொத்தம் நிறையப் பெற வேண்டுமெனில் — முதலீட்டின் அளவைத் தான் கூட்ட வேண்டும். இது முதலாளிகளின் முதல் திரட்டும் ஆர்வத்தைத் தூண்டி விடுகிறது. இதுவே மார்க்ஸின் முதலாளித்துவத் திரட்சி விதி. முதல் திரட்டும் இம் முயற்சியில் முதலாளிகள் முனைந்து ஈடுபடும் போது, அவர்களிடையே போட்டி யும் பூசலும் பெருகும். 'ஒரு முதலாளி எப்பொழுதும் பலரைக் கொலை செய்கிறான்'. சின்ன மீன்களெல்லாம் பெரிய மீனுக்கு இரை யாக, கூட்டுத் தொழில், முற்றுரிமை ஆகியவை இயல்பாகவே தோன்றுகின்றன. இதனை 'முதலாளித்துவ முதல் குவிவு' என்பார் மார்க்ஸ்.

முதலாளிகள் மேலும் மேலும் எந்திரங்களை ஆளும் போது, வேலை வாய்ப்புக்கள் மேலும் மேலும் சுருங்குகின்றன; மக்கள் தொகை வேறு தன்னியல்பாகவே வளர்ந்து செல்கிறது. இதனால் வேலையில்லாதோர் படையொன்று அணிதிரள நேர்கிறது. வேலை

யில்லாதோர் தொகை பெருகப் பெருக முதலாளிகள் கூலியைக் குறைக்கவும், எச்ச மதிப்பின் அளவைப் பெருக்கவும் தடையின்றி முயன்று கொண்டிருப்பார்கள். ஆனல், வேலை யில்லாதோரோ வறுமையில் சிக்கி உழல்வர். அவர்களுடைய மனக் கசப்பு மேலும் மேலும் வளர்கிறது. புரட்சி ஒன்று இயல்பாகவே எழுகிறது: முடிவில், முதலாளித்துவ அமைப்பே தட்டி நொறுக்கப் படுகிறது: சமதருமப் புத்தமைப்பு மலர்கிறது. 'புறப்பட்டை உடைந்து விலகு கிறது. முதலாளித்துவத் தனியார் சொத்துரிமையின் சாவுமணி ஒலிக்கிறது. பறிமுதல் செய்வோர் பறிமுதல் செய்யப்படுகிறார்கள்!' இவ்வாறு, முதலாளித்துவத்தின் கல்லறையில் சமதருமம் தானகவே தோன்றிவிடும் என்பதைத் தருக்க முறையில் மார்க்ஸ் நிறுவ முன் வருவதால் அவருடைய கோட்பாடு அறிவியல் சமதருமம் என்றும் சொல்லப்படுகிறது.

அமெரிக்கப் பொருளியலறிஞர் ஸெலிக்மன் கூறுவது போல, ரிக்கார்டோவுக்குப் பின் மார்க்ஸைப் போன்ற பொருளியல் ஞானி தோன்றியதில்லை. போட்டி முற்றுரிமைக்கு வழிவகுக்கும், முதலா ளித்துவ அமைப்பு ஒரு சீராகச் செல்லாது வணிகச் சகடங்களுக்குக் காரணமாக இருக்கும் என்ற அவருடைய கருத்துக்கள் இன்று பேர ளவில் உண்மையாகவே உள்ளன.

தொன்மை மரபினரை அடியொற்றியே அவர் செல்கிறார் என்ப தையும் மறந்து விடலாகாது. மதிப்பின் உழைப்புக் கோட்பாடு, இலாபத்துக்கும் கூலிக்கும் இடையேயுள்ள முரண்பாடு ஆகியவற் றைத் தொன்மை மரபின் அடிப்படையிலேயே அவரும் நிறுவுகிறார். அவருடைய ஆய்வு முறை கூடத் தொன்னூலாளரின் பகுத்தறி முறையே.

இருப்பினும் மார்க்ஸ் எதிர்பார்த்த அளவு விரைவாக முதலாளித் துவத்தின் வீழ்ச்சி ஏற்படவில்லை என்பது கவனிக்கத் தக்கது. பொருளியல் துறையில் அரசு தலையிட்டு மார்க்ஸின் ஆருடங்கள் பலவற்றைப் பொய்ப்பித்து விட்டது. தொழிலாளர்க்குப் பாது காப்பு நல்க அரசு முன்வந்தது; முதல் குவிவையும் முற்றுரிமை எழுச்சியையும் அது கட்டுப்படுத்தியது; அதே நேரத்தில் தொழிற் சங்க இயக்கமானது உழைப்பாளர் கூலிமட்டத்தையும் வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்துவதில் பெரு வெற்றி பெற்றது. இந்நிலையில் மார்க்ஸீயச் சோதிடம் பலிக்காமல் போனதில் விந்தையில்லை. இந்தத் தடுப்புச் செயல்களுக்குக் காரணமே மார்க்ஸீயக் கருத்துக் களின் அறிமுகம் தான் என்று சொன்னல் அது மிகையாகாது.

பொருளியல் கண்ணோட்டத்தில் வரலாற்று உண்மைகளை விளக்குவதும் முற்றிலும் சரியன்று. சமூக வளர்ச்சியிலும் மாறுதல்களிலும் ஒழுக்க நியதிகள், தத்துவக் கோட்பாடுகள், பண்பாட்டு இயக்கங்கள் பொருளியல் நிலையின் அளவுக்குக் கட்டுப்படுத்தும் பங்கு வகித்துள்ளன என்பதை மறுக்க முடியாது.

# 5. ஆல்பிரட் மார்ஷல்

'அரசப் பொருளாதாரத்தின் தந்தை' என்ற பெருமை எவ்வாறு ஆடம் ஸ்மித்துக்கு உரியதோ, அவ்வாறே 'இக்காலப் பொருளியலின் தந்தை' என்ற பெருமை மார்ஷலைச்[1] சேரும். பேராசிரியர் மில்லுக்குப் பின்னர் பீடும் பெருமையும் இழந்து நின்ற தொன்மைப் பொருளியலுக்குப் புத்துயிர் தந்த சிறப்பு அவருக்குரியது. சமதருமக் கருத்தினர், வரலாற்று மரபினர், ஆஸ்திரிய அறிஞர்கள், அறிவியல் சிந்தனையாளர்கள் ஆகிய நான்கு தரப்பினரும் குறைகூறிய தொன்மைப் பொருளியலுக்குப் புதுவண்ணம் தந்தவர் அவர்.

மார்ஷலுடைய பொருளியில் கருத்துக்களின் கருவூலமாகத் திகழ்வது அவருடைய 'பொருளியலின் மூலக் கோட்பாடுகள்' என்ற நூலாகும். இந்நூலின் எட்டுப் பதிப்புக்கள் வெளியாகியுள்ளன. அது ஆறு பகுதிகளாகப் பகுக்கப்பட்டுள்ளது. முதல் பகுதி வெறும்

[1] 1842-இல் ஆங்கில நாட்டு நடுத்தரக் குடும்பமொன்றில் தோன்றிய ஆல்பிரட் மார்ஷல் பாதிரியார் ஆகவேண்டும் என்பது அவர் தந்தையின் விருப்பம். ஆனால், அவர் கற்றவையோ 'கணிதமும், சமூக அறிவியல்களும்.' கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் அவர் பயின்றபோது கிரீன் (T. H. Green), ஸிட்ஜ்விக் போன்ற அறிஞர்களிடம் ஹெகல், கான்ட் போன்றவர்களைப் பற்றிக் கற்றறிந்தார். மில், பெந்தாம், ஸ்பென்சர், ஜெவான்ஸ், தூனன் போன்ற பேரறிஞர் கருத்துக்களையும் படித்து உணர்ந்தார். 1871 முதல் நான்கு ஆண்டுகள் பிரிஸ்டல் பல்கலைக் கழகக் கல்லூரி முதல்வராகவும், பின்னர் 1883 முதல் இரண்டாண்டுகள் ஆக்ஸ்போர்டிலும் பணியாற்றினார். 1885 முதல் 1908 வரை கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகப் பொருளியல் பேராசிரியராக அமர்ந்திருந்தார். 1924-இல் அவர் காலமானது வரை அப்பல்கலைக் கழகத்தில் ஆய்வுத்துறைப் பேராசிரியராகவே இருந்தார். வரிவிதிப்புப் பற்றிய அரச ஆணைக்குழு (1891–94), வயதான ஏழையர் பற்றிய அரச ஆணைக் குழு (1893). தலத்தாபனங்கள் வரி விதிப்புப் பற்றிய அரச ஆணைக்குழு ஆகியவற்றில் அவர் உறுப்பினராக இருந்து உள்ளார்.

இவர் 1779-இல் தம் மனைவியைக் கூட்டாசிரியராகக் கொண்டு எழுதிய நூல் 'தொழிலின் பொருளியல்'. 1890-இல் புகழ்பெற்ற அவருடைய 'பொருளியல் மூலக் கோட்பாடுகள்' வெளியாயிற்று. 1919-இல் 'தொழிலும் வணிகமும்' என்ற நூலும், 1923-இல் 'பணமும், கடனும், வணிகமும்' என்ற நூலும் வெளியாயின.

அறிமுகமே. இரண்டாம் பகுதி சில அடிப்படைக் கருத்துக்களை விளக்குகிறது. விருப்பங்களும் நிறைவும் மூன்றும் பகுதியின் உள்ளடக்கம். நான்காம் பகுதி உற்பத்திக் காரணிகளைப் பகுத்தாய்கிறது. ஐந்தாம் பகுதி தேவை, அளிப்பு, விலை ஆகியவற்றின் பொதுவான தொடர்புகளைப் பற்றியது. ஆறும் பகுதி நாட்டு வருவாயின் பகிர்வை விளக்குகிறது. இறுதியில் 12 பிற்சேர்க்கைகளும் உள்ளன.

இந் நூலின் தொடக்கச் சொற்களே மார்ஷல் பொருளியலுக்குத் தந்துள்ள பொருளிலக்கணமாக இந் நாளில் கூறப்படுகின்றன: 'பொது முறையான தொழில் வாழ்வில் (ஈடுபட்டுள்ள) மன்பதையைப் பற்றிய அறிவாராய்ச்சித் துறை பொருளியல்...' செல்வத்துக்கு மட்டற்ற பெருமை நல்கும் வகையில் பொருளியலுக்குப் பொருளிலக்கணம் வகுத்திருந்த ஆடம் ஸ்மித் போன்றோர் பொருளியலுக்குத் தேடியிருந்த இழி பெயரை அகற்றிய பெருமை இங்கே மார்ஷலை வந்தடைகிறது. தொன்மை மரபினரின் கற்பனையில் தோன்றிய 'பொருள்வய மனிதன்' நடைமுறைக்குப் பொருந்தாதவன் என்றும், அவன் முழுக்க முழுக்கத் தன்னல முனைப்புடன் செயல்படுகிறான் என்று சொல்வது சரியன்று என்றும், குடும்பப் பற்று, மகிழ்ச்சிக்காக வேலை செய்வது, பழக்க வழக்கம் போன்ற பிற காரணிகளும் மனிதனுடைய பொருளியல் செய்கைகளைக் கட்டுப்படுத்துகின்றன என்றும் அவர் சுட்டிக் காட்டியுள்ளார். மேலும், 'பொருளியல் நூலாளன் கணக்கில் எடுக்க வேண்டியவைகளில் அறவியல் ஆற்றல்களும் உள்ளன' என்பார் அவர். அவருடைய கருத்தில் பொருளியலைக் கற்பதன் நோக்கமே அதன் வழியாகப் பல நிகழ்காலச் சமூகச் சிக்கல்களுக்குத் தீர்வுகாண முடியும் என்பது தான்.

பொருளியல் விதிகளின் தனி இயல்பையும் மார்ஷல் தெளிவாகப் புலப்படுத்தி உள்ளார். அவை இயல்பில் 'போக்குரை கூற்றுக்களே' என்பதை அவர் நிறுவியுள்ளார். அவற்றைக் கடலெழுச்சி விதிகளுடன் அவர் ஒப்பிட்டுள்ள பான்மையும் இங்கு நினைவுகூரத் தக்கது. 'மற்றவை மாறுதிருப்பின்' என்ற சொற்றொடர் ஆட்சி அவருடைய காணிக்கை தான். பொருளியல் ஆய்வு முறையிலும் பகுத்தறிமுறை, தொகுத்தறி முறை இரண்டினையும் ஒருசேரப் பயன்படுத்த வேண்டும் என்பதை வலியுறுத்தியவர் மார்ஷல். பொருளியலுக்கு அறிவியல் நிலையைத் தேடித் தந்தவரும் அவரே; 'அரசப் பொருளாதாரம்' என்ற சொல்லாட்சிக்குப் பதிலாகப் 'பொருளியல்' என்ற கவர்ச்சிகரமான சொல்லைப் புழக்கத்தில் கொண்டு வந்தவர் மார்ஷல் அல்லவா ?

ஜெவான்ஸ், ஆஸ்திரிய அறிஞர்கள் போன்றவர்களுக்கு முற்பட்ட தொன்மை மரபினர் நுகர்வுக்கு உரிய இடம் தரத் தவறி விட்

டனர். இந்தக் குறையை அகற்றும் வகையில் நுகர்வுக்கும் தேவைக்கும் மார்ஷல் தனிச் சிறப்புத் தந்துள்ளார். விருப்பங்களின் இயல்புகளையும் வகைகளையும் விளக்கிய பின்னர், விருப்பப் பெருக்கம் பொருளியல் செய்கைகளுக்கு அடிகோலுவதைச் சுட்டிக் காட்டி, நுகர்வின் சிறப்பை எடுத்துக் காட்டியுள்ளார் மார்ஷல்.

'நுகர்வோர் எச்சப்பாடு' என்ற கோட்பாடும் மார்ஷல் தந்துள்ள ஒன்றே யாகும். மொத்தப் பயன்பாட்டுக்கும் மாற்று மதிப்புக்கும் இடையே உள்ள வேறுபாடே நுகர்வோர் எச்சப்பாடு. இந்தக் கருத்து 'கற்பிதமானது' என்று குறை கூறிய நிக்கோல்சன் போன்றோர்க்குப் பதில் கூறும் முறையில் இங்கிலாந்து ஆப்பிரிக்கா இரு நாடுகளிலும் குறிப்பிட்ட அளவு பணத்தால் பெற முடிகிற நிறைவு வேறுபாடுகளை மார்ஷல் சுட்டிக் காட்டும் பான்மை அறிந்து இன்புறத் தக்கது.

'தேவை நெகிழ்ச்சி'க் கோட்பாடும் மார்ஷலின் கைவண்ணங்களில் ஒன்றே. விலை மாறுதல்களால் தேவை அளவில் ஏற்படும் மாறுதல்களின் விகித அளவே தேவை நெகிழ்ச்சி. 'முழு அளவு நெகிழ்ச்சியான,' 'பெரிதும் நெகிழ்ச்சியான', 'நெகிழ்ச்சியான', 'சிறிதே நெகிழ்ச்சியான,' 'நெகிழ்ச்சியற்ற' என்ற ஆறுதர நெகிழ்ச்சிகளை அவர் வேறுபடுத்திக் காட்டியுள்ளார். தேவை நெகிழ்ச்சியை நிருணயிக்கும் காரணிகளையும் அவர் சுட்டிக்காட்டி உள்ளார். நுகர்வுப் பகுதியில் மார்ஷல் தாமாக விளக்கியுள்ள மற்றொரு கோட்பாடு சம இறுதிநிலைப் பயன்பாட்டு விதியாகும்.

முன்னோரைப் பின்பற்றி நிலம், உழைப்பு, முதல் ஆகிய மூன்று உற்பத்திக் காரணிகளை மார்ஷல் பகுக்கிறபோதே அமைப்பின் சிறப்பையும் வலியுறுத்தியுள்ளார். குறைந்துசெல் விளைவு விதியை நிலத்துக்கும் பொருந்தும் வகையில் விளக்கிச் செல்லும் அவர், அவ்விதி சுரங்கங்கள், மீனளங்கள் போன்ற பிற தொழில்களுக்கும் பொருந்துவதே என்று விளக்கியுள்ளார்.

பேரளவு உற்பத்தியின் சிறப்புக்களை விளக்குவதனிடையே 'அகச் சிக்கனம்', 'புறச் சிக்கனம்' என்ற புதுப் பாகுபாட்டை நன்கு அறிமுகப்படுத்தியுள்ளார். பேரளவில் உற்பத்தி செய்யும் போது தனியொரு நிறுவனம் மட்டும் பெறுகிற நலன்கள் அகச் சிக்கனங்கள்; அதனுல் தொழிலுள்ள எல்லா நிறுவனங்களும் பொதுவாகப் பெறுகிற நலன்கள் புறச் சிக்கனங்கள். விளைவின் வளர்ந்து செல் போக்கையும் குறைந்து செல் போக்கையும் சமன்படுத்தும் போது மாறா விளைவு விதி செயல்படும் என்பதும் மார்ஷலின் மற்றொரு கருத்து.

மதிப்பு நிருணயமே பொருளியலின் மையச் சிக்கல். தொன்மை நூலாளரில் பலர் பொருளின் உற்பத்திச் செலவே மதிப்பை நிருண யிக்கிறது என்றனர். ஜெவான்ஸும் ஆஸ்திரிய அறிஞர்களும் பொருளின் பயன்பாடே மதிப்பை நிருணயிக்கிறது என்றனர். மார்ஷலோ இரு சாரார் கருத்தையும் சமரசப்படுத்தும் வகையில், மதிப்பானது, தேவை — அளிப்பு ஆகிய இரண்டினதும் எதிரெதிர் செய்கையால் நிருணயிக்கப் படுகிறது என்று விளக்கி உள்ளார். இங்கே அவர் கையாண்டு உள்ள கத்திரிக்கோல் உவமை மறக்க முடியாத ஒன்று அல்லவா? மதிப்பு நிருணயத்தில் காலக் கூறின் சிறப்பை அறிமுகப் படுத்திய பெருமையும் மார்ஷலுக்கு உண்டு. காலம் குறுகக் குறுகத் தேவையும், நீள நீள அளிப்பும் மதிப்பைக் கட்டுப்படுத்துகின்றன என்பது அவர் முடிவு. 'மாதிரி நிறுவனம்' என்ற கருத்தும் மார்ஷலாலேயே படைக்கப் பட்டுள்ளது.

(உற்பத்திச் செலவின் இயல்பையும் வகையையும் நன்கு விளக்கி உள்ளார் அவர். 'உண்மைச் செலவுகள்', 'பணச் செலவு கள்,' 'முதன்மைச் செலவுகள்', 'துணைச் செலவுகள்' முதலியன மார்ஷலின் கண்டு பிடிப்புகள்.)

முற்றுரிமையாளர் விலை நிருணயிப்பது பற்றியும் மார்ஷல் கூறி உள்ளார். பேரளவு உற்பத்திச் சிக்கனங்களுக்கு வாய்ப்பு இருப்ப தால், முற்றுரிமை விலை எப்பொழுதும் உயர்வாக இருப்பதில்லை என்பது அவருடைய கருத்து.

மதிப்புக் கோட்பாட்டை உற்பத்திக் காரணிகளுக்கும் பொருத்தி ஆராய்ந்தால், பகிர்வுக் கோட்பாட்டைச் சிக்கலின்றிப் பெறமுடியும் என்பார் மார்ஷல். பகிரப் பெற வேண்டியது நாட்டு வருமானம் என, அதற்குப் பொருளிலக்கணம் வகுத்துள்ளார் அவர். உற்பத்திக் காரணிகள் பெறும் கைம்மாறு அவற்றின் நிகர இறுதி நிலை விளைதிறனை ஒட்டியது என்பது அவர் விளக்கம்.

வாரத்தைப் பொருத்த வரை அவருடைய கோட்பாடு ரிக்கார் டோவைப் போன்றதாகவே உள்ளது. 'போலி வாரம்' அவரு டைய சிறந்த படைப்புக்களில் ஒன்று. குறுங் காலத்தில் எந்திரங் கள் போன்றவை பெறும் எச்ச வருவாயே போலி வாரம். வாழ்க் கைத் தரக் கோட்பாடு, இறுதிநிலை விளைதிறன் கோட்பாடு போன்ற கூலிக் கோட்பாடுகளைப் பற்றிப் பேசும் அவர் கூலியானது இறுதியில் உழைப்புத் தேவையையும் அளிப்பையுமே பொருத்தது என்ற முடிவுக்கு வருகிறார். வட்டி பற்றிய 'காத்திருத்தல்' கோட் பாடு அவருடையது. இது ஸீனியர் போன்றோருடைய கருத்துக்கு ஒரு திருத்தமாக அமைந்துள்ளது. இலாபம் பற்றிய ஆபத்தேற்புக்

கோட்பாட்டை அவர் ஏற்றுக் கொள்ள இசையவில்லை. வணிகத் திறமைக்குரிய கைம்மாறே இலாபம்: அது அமைப்பாளர் தேவையையும் அளிப்பையும் பொருத்துள்ளது என்பார் அவர்.

இவை தவிர, தம்முடைய 'பணமும்,கடனும்,வணிகமும்' என்ற நூலில், இன்று கேம்பிரிட்ஜ் கோட்பாடு என்று வழங்கப் பெறும் கோட்பாட்டுக்கு, அவர் அடிப்படை இட்டுள்ளார். பன்னாட்டு வணிகத்திலும், பன்னாட்டு மதிப்பானது தேவை அளிப்புச் சூழலையே சார்ந்திருப்பதாக அவர் கருதுகிறார்.

மார்ஷலின் கருத்துக்கள் தொன்மைப் பொருளியல் கருத்துக்களின் குறை நிரப்பும் வகையில் அமைந்து உள்ளன. தொன்னூலாளர்க்கு எதிராகத் தோன்றிய கருத்துக்களையெல்லாம் ஏற்றுக்கொண்டு அவர் இரண்டையும் சமரசப் படுத்தியுள்ளார் என்று சொல்வதுண்டு. ஆனால், மார்ஷலைப் பொருத்தவரை, தம்முடைய தொண்டு சமரசப்படுத்துவது அன்று; உண்மையைச் சொல்வது தான் என்கிறார்.

தொன்மைப் பொருளியலில் மறுமலர்ச்சி கொணர்ந்த அவர், அதே நேரத்தில் முற்றிலும் புதிய யுகம் ஒன்றிற்கு முன்னோடியாகவும் உள்ளார் என்பதைக் கவனிக்க வேண்டும். அவர் சிறப்பு வகையினவாகக் குறிப்பிட்ட அங்காடி வகைகளே அவர் மாணவர்களால், பிற்காலத்தில், நிறைகுறை அங்காடிகள் என விளக்கப் பட்டன. மதிப்பு நிருணயத்தில் அவர் புகுத்தியிருந்த காலக்கூறு ஆய்வுதான், தேக்கநிலை -- இயக்கநிலை ஆய்வுகளுக்கு வழிகாட்டி. ஷும்பீட்டர் சொல்வது போல அவர் கையாண்ட கணித முறைகளில் இருந்தே இந்நாளைய கணிதமுறைப் பொருளியல் விரிந்து வளர்ந்துள்ளது.

மேலும், கல்வித் துறையில் பொருளியல் சிறப்பான இடம் பெற உதவியவரும் அவரே. அவர் முயற்சியால் தான் கேம்பிரிட்ஜ் போன்ற பல்கலைக் கழகங்களில் பொருளியல் தனிப் பாடமாக ஆயிற்று; 'அரச ஆணைப் பொருளியல் கழகம்' போன்ற பெரிய நிறுவனங்களைக் கண்டவர் அவர். 1935 வரை பொருளியலில் 'மார்ஷல் பேச்சுக்கு மறுபேச்சில்லை' என்ற நிலைதான் இருந்தது.

'மார்ஷலுடைய துறையில் நூற்றாண்டுகளுக்கு அவரே மிகப் பெரியவர்' என்பது கெயின்ஸ் பிரபுவின் கூற்று. ரிக்கார்டோவுக்குப் பின்னர் மார்ஷலே மிகப் பெரிய பொருளியலாளர் என்பார் ஹானே (Haney).

# 6. ஜான் மேனர்டு கெயின்ஸ்

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற பொருளியல் அறிஞர் ஜான் மேனர்டு கெயின்ஸ்.[1] அவருடைய கருத்துக்கள் 'கெயின்ஸீய மறு மலர்ச்சி,' 'கெயின்ஸீயப் புரட்சி,' 'புதிய பொருளியல்' என்றெல்லாம் அழைக்கப் பெறுவதிலிருந்தே அவருடைய பெருமையை உணர்ந்து கொள்ள முடியும்.

அவருடைய மிகச் சிறந்த நூல் 1936-இல் வெளியாகிய 'வேலையுடைமை, வட்டி, பணம் பற்றிய பொதுக் கோட்பாடு' என்பது தான். இருந்தாலும் இந் நூலில் விளக்கப்பெறும் சில கருத்துக்களின் அடிப்படையை அவருடைய முந்திய நூல்களிலும் காணலாம். அவரது 'இந்தியச் செலாவணியும் நிதியும்' என்ற முதல்நூலில்

[1] ஜான் மேனர்டு கெயின்ஸ் ஆங்கில நாட்டில் மதிப்புக்குரிய குடும்பமொன்றில் 1883-இல் பிறந்தார். புகழ்மிக்க ஈட்டன் (Eaton) பள்ளியிலும், கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்திலும் கல்வி பயின்றார். 1905 இல் அரசப் பணித் தேர்வு எழுதி வெற்றி பெற்று, 1908 வரை இந்தியா அலுவலகத்தில் வேலை பார்த்தார். பின்னர் கேம்பிரிட்ஜில் ஆசிரியத் தொழிலில் அமர்ந்தார். 1915 முதல் நான்காண்டுகள் ஆங்கில நாட்டுக் கருவூலத் துறையில் பணி புரிந்தார். முதல் உலகப் போர் முடிவில் ஏற்பட்ட பாரிஸ் அமைதி உடன்படிக்கையின் மீதுள்ள கருத்து வேற்றுமையைத் தொடர்ந்து, கருவூலத் துறையிலிருந்து விலகி மீண்டும் கேம்பிரிட்ஜ் வந்தார். இரண்டாம் உலகப் போரின் போது அவரது பணியை அரசு திரும்பவும் கோரிப் பெற்றது. போர்ப் பிற்காலத்தில் பன்னாட்டு நிதி நிறுவனங்களை நிறுவுவதற்கான தொடக்க நிலை வேலைகளில் முழுமூச்சுடன் ஈடுபட்டார். 1942-இல் 'பிரபு'ப் பட்டம் வழங்கப் பெற்றார். 1946-இல் மாரடைப்பால் காலமானார். இந்திய நாணய நிதி பற்றி அரச ஆணைக் குழு (1913), நிதியும் தொழிலும் பற்றிய மாக்மில்லன் குழு ஆகியவற்றில் உறுப்பினராகப் பணியாற்றியவர் கெயின்ஸ்.

அவருடைய முதன்மையான நூல்கள் கீழ்வருவன: 'இந்தியச் செலாவணியும் நிதியும்' (1913), 'அமைதியின் பொருளியல் விளைவுகள்' (1919) 'உடன்படிக்கையின் ஒரு திருத்தம்' 'பணமுறைச் சீர்திருத்தம் பற்றிய ஒரு நூல்' (1922), 'திருவாளர் சர்ச்சிலின் பொருளியல் விளைவுகள்' (1925), லாயிட்ஜ் ஜார்ஜால் அதைச் செய்ய முடியுமா?' (1929) 'பணம் பற்றிய ஆய்வு நூல்' (1930) 'செழிப்புக்கு வழிகள்' (1933) 'வேலையுடைமை, வட்டி, பணம் பற்றிய பொதுக் கோட்பாடு' (1936) 'போருக்காக எப்படிக் கொடுப்பது?' (1940).

பொன் மாற்றுத் திட்டத்தை நன்கு விளக்கி, தானே இயங்கும் பொன் நாணயத் திட்டத்தை விட 'நிருவகிக்கப்பட்ட செலாவணி' முறையே சிறந்தது என்ற கருத்தை அவர் தெரிவித்து உள்ளார். பணத்தை வீணுகக் குவித்து வைப்பதால் பொருளியல் வளர்ச்சி தடைப்படுகிறது என்ற கருத்தும் இங்கே காணக் கிடக்கிறது. 1923-இல் வெளியாகிய 'பண முறைச்சீர்திருத்தம்' பற்றிய நூலிலும் 'நிருவகிக்கப்பட்ட செலாவணி' இன்றியமையாதது என்றும், பொன் திட்டத்தைக் கைவிடவேண்டும் என்றும், மையப் பாங்கின் பொறுப் புக்களை மிகுக்க வேண்டும் என்றும் வலியுறுத்தி உள்ளார். 'பண வீக்கம் அநியாயமானது ; பணச் சுருக்கம் தக்கதன்று ; இரண்டிலும் மோசமானது பணச் சுருக்கமே' என்ற சொற்கள் இந் நூலில் உள்ள வையே. 1924-இல் வெளியாகிய 'இலாயிட் ஜார்ஜால் அதைச் செய்ய முடியுமா ?' என்ற நூலில், அந் நாளைய இங்கிலாந்தை வாட்டிக் கொண்டிருந்த வேலையின்மைக்குத் தீர்வு காணப் பொதுப் பணித் திட்டங்களை அரசு மேற்கொள்ள வேண்டும் என்ற லிபரல் கட்சிக் கொள்கையை கெயின்ஸ் வரவேற்றுப் பேசி யுள்ளார். பின்னர் 1930-இல் எழுதிய 'பணம் பற்றிய ஆய்வு நூலி'லும் சேமிப்பு,முதலீடு ஆகிய இரண்டுக்கும் இடையேயுள்ள தொடர்பினை நன்கு ஆய்ந்து உள்ளார். இவ்வாறு, உருவாகிக் கொண்டிருந்த அவருடைய புதுமைக் கருத்துக்கள், இறுதியில், 1936-இல் வெளி யாகிய 'வேலையுடைமை, வட்டி, பணம் பற்றிய பொதுக் கோட் பாடு' என்ற நூலில் முழு வடிவம் பெற்றன.

பழைய பொருளியல் நூலாளர் பெரும்பாலும் நுண்ணியல் பொருளியல் ஆய்விலேயே ஈடுபட்டிருந்தனர். பொருளியல் நிலை யானது, பொதுவாக, தொடர்ந்து மேம்பட்டுக் கொண்டு வந்த அந் நாளைய நிலை இவ்வகை ஆய்வுக்குத் துணை செய்வதாகவே இருந் தது. ஆனால், 1930-க்குப்பின் வணிகச் சகடங்களின் திடீர்த் தாக்குதல்கள் பொருளாதார நிலையின் உறுதியின்மையை அறிவு றுத்த முற்பட்டன. நாட்டின் ஆக மொத்தப் பொருளாதாரம் பற்றி அறிஞர்கள் ஆயவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. நுண்ணியல் ஆய்வுக்குப் பதிலாகப் பேரியல் ஆய்வு நடத்த வேண்டிய சூழ்நிலை உருவாகியது : கெயின்ஸீயப் பொருளியல் முழுக்க முழுக்கப் பேரியல் ஆய்வே ஆகும்.

கெயின்ஸின் முதன்மையான ஆய்பொருள் வேலையுடைமை அல்லது வேலையின்மை எனலாம். வேலையின்மைக்குக் காரணம் பொருள் தேவைச் சுருக்கமே ஆகும். பொருளுக்குத் தேவை இல்லை யேல், அதனை உற்பத்தி செய்வதில் பொருளில்லை; உற்பத்தி இல்லை

இல்லை. இவ்வாறு வேலையுடைமையானது பொருள்களின் ஆயத்த நிலைத் தேவையையே சார்ந்து உள்ளது. எனவே வேலையின்மையைப் போக்குவதற்கு வழி ஆயத்த நிலைத் தேவையை மிகுப்பது தான்; நிறைவுறு வேலையுடைமை வேண்டுமெனில், வேலை தேடுவோர் அனைவர்க்கும் வேலை தரமுடிகிற அளவுக்கு ஆயத்த நிலைத் தேவையும் மிகுதியாக இருக்க வேண்டும்.

மக்களுடைய செலவீடுகளின் வழியாகத் தான் இந்த ஆயத்த நிலைத் தேவை செயல்படுகிறது. நுகர்வுத் தேவையும் முதலீட்டுத் தேவையுமாக ஆயத்த நிலைத் தேவையை இருவகைப் படுத்தலாம். இதனால், நுகர் பொருள்களில் இடும் ஆக மொத்தச் செலவையும், முதல் கருவிப் பொருள்களில் இடும் ஆக மொத்தச் செலவையுமே ஆயத்த நிலைத்தேவை சார்ந்திருக்கிறது. ஆக மொத்தச் செலவீடுகள் எந்நேரத்திலும் மொத்த வருமானத்தைவிட மிகுதியாக இருக்க முடியாது. இவ்வாறு, வருமானம் (Y) = நுகர்வு (C) + முதலீடு (I) என்ற சமன்பாடு உருவாகிறது.

நுகர்வை எடுத்துக் கொண்டால் அது வருமானத்தையும், அவ் வருமானத்தில் எவ்வளவு நுகர்வில் செலவிடப் பெறும் என்பதையும் பொருத்திருக்கிறது. வருமானம் உயரும் போது நுகர்வின் அளவும் உயரும்; ஆனால், வருமானம் உயரும் விகிதத்தில் உயர்வதில்லை. மேலும், குறுங் காலத்தில் நுகர்வின் அளவு உயர்வதில்லை; மக்களுடைய விருப்பநிலை முதலியவை அக் காலத்தில் மாற இயலாமல் இருப்பதே இதற்குக் காரணம் [மக்களுக்கு 'நுகர்வின் மீதுள்ள மனச் சார்பு' (Propensity to consume) மட்டும் உயர்வாக இருந்தால், அது வேலையுடைமைக்கு ஊக்கம் தருவதாக இருக்கும் என்பது இங்குத் தோன்றும் ஒரு சிறந்த கருத்து]. இந் நிலையில், நுகர்வில் இடும் செலவு ஒரு நிலையில் வளராது நிற்க நேர்ந்தால் அதன் அளவு ஆயத்த நிலைத் தேவையில் ஒரு குறைவு ஏற்படுகிறது. இந்தக் குறைவை நிரப்பி, ஆயத்த நிலைத் தேவையை நிறைவு செய்ய வேண்டுமானால், நுகர்வில் செலவிடாது மீந்திருக்கும் வருமானத்தை முதலீட்டில் செலவழித்தாக வேண்டும்.

இந்த உண்மையை வேறு வழியிலும் நிறுவலாம். நுகர்வில் செலவிடாது இருக்கும் வருமானப் பகுதியே சேமிப்பு ஆகிறது. ஆதாவது, Y—C=S. மேலே Y=C+I எனக் கண்டோம். இதிலிருந்து, S=I என்ற சமன்பாடு கிடைக்கிறது. ஆயத்த நிலைத் தேவையைப் பேண வேண்டுமெனில் சேமித்ததை முதலீடு செய்ய வேண்டும் என்பது தான் இதன் பொருள். இதிலிருந்து, சிக்கனமாக வாழ்வது எப்போதும் சிறப்பாக இருக்கிற ஒன்றன்று என்று

ஆகிறது. இங்கு, கெயின்ஸ் தொன்மைப் பொருளியலாளரிடமிருந்து மாறுபடுகிருர்.

முதலீட்டின் மெய்ப் பொருளேயும் இங்குப் புரிந்து கொள்ள வேண்டும். நிலத்தையோ, பழைய பங்கு ஒன்றையோ வாங்கும் போதும் முதலீடு செய்வதாகப் பொதுவாகச் சொல்லப்படுகிறது. ஆனுல், இங்கெல்லாம் உண்மையில் நடப்பது சொத்துக் கைமாற்றமே. இங்கு நடப்பதை நிதி முதலீடு என்று வேண்டுமானுல் சொல்லலாம். புதிய தொழிற் சாலேகளேக் கட்டுவது, புதிய எந்திரங்களே உண்டு பண்ணுவது முதலியனவே உண்மை முதலீடுகள். மிகுதியான உழைப்புக்கு வேலே தருவதை இன்றியமையாததாக்கும் வகையில் நாட்டு வருமானத்தைப் பெருக்க உதவுபவைகளே உண்மை முதலீடுகள். நுகர்வு மாருதிருக்கும் நிலேயில், முதலீடு இயல்பாகவே சிறப்பான பங்கு வகிக்கிறது.

கெயின்ஸின் கருத்துப்படி, முதலீட்டின் அளவானது 'முதலின் இறுதிநிலேத் திறமை'யையும் (Marginal Efficiency of Capital) வட்டி வீதத்தையும் பொருத்து உள்ளது. முதலின் இறுதிநிலேத் திறமை, முதலின் விளேதிறனேயே குறிப்பிடுகிறது. ஓர் அலகு புதிய முதல் கருவிச் சொத்திலிருந்து, அதன் உற்பத்திச் செலவுக்கு எச்சமாக எதிர்பார்க்கப்படும் மிகவுயர்ந்த வருமான வீதமே முதலின் இறுதிநிலேத் திறமை. முதலீடு செய்யும் போது, தொழில் முயல்வோன், எந்திரத்திலிருந்து எதிர்பார்க்கப்படும் விளேவையும் அதன் விலேயையும் ஒப்பு நோக்குகிருன். ரூ. 4,0000 விலேயுள்ள ஒரு புதிய எந்திரம் அதன் ஆயுளாகிய 10 ஆண்டுகளுக்கு ஆண்டு தோறும் ரூ. 2,000 வருமானம் தருமானுல், முதலின் இறுதிநிலே உற்பத்தித் திறமை இங்கு ஆண்டுக்கு 5% ஆகிறது. தன்னுடைய இலாபத்தை மிகவுயர்ந்த அளவினதாக ஆக்க வேண்டும் என எண்ணும் தொழில் முயல்வோன், முதலின் இறுதிநிலேத்திறமை, நடப்பு வட்டிவீதத்தை விட மிகுதியாக இருந்தால் முதலீட்டை மிகுத்துக் கொண்டே செல்வான்; முதலின் இறுதிநிலேத் திறமை, நடப்பு வட்டி வீதத்தை விடக் குறைவாக இருந்தால் முதலீடு செய்ய மாட்டான். பொதுவாக, முதலின் இறுதிநிலேத் திறமை உயர்வாக இருந்தால் முதலீடும் மிகுதியாக இருக்கும் எனலாம்.

முதலீட்டைக் கட்டுப்படுத்தும் அடுத்த காரணியாகிய வட்டி வீதத்தைப் பொருத்த வரை, அது நீர்மை விருப்பத் தேர்வையும் பண அளிப்பையும் பொருத்திருக்கும் என்பது கெயின்ஸின் கோட்பாடு. கொடுக்கல் வாங்கல் ஊக்கி, எச்சரிக்கை ஊக்கி, ஊக வணிக ஊக்கி ஆகியவற்றின் விளேவாகப் பணத்தை நீர்த்த நிலேயில்

ரொக்கமாக வைத்திருக்க மக்கள் விரும்புகின்றனர். இந்த நீர்மை விருப்பத்தைக் குறிப்பிட்ட காலத்துக்குத் துறப்பதற்காகத் தருகிற கைம்மாறே வட்டி. குறிப்பிட்ட நேரத்தில் நிலவுகிற வட்டி வீதம் இந்த நீர்மை விருப்பத் தேர்வையும் பணத்தின் அளிப்பையும் பொருத்துள்ளது. நீர்மை விருப்பத் தேர்வு நிலைமாறாத போது, பணத்தின் அளிப்பு பெருகினால் வட்டி வீதம் இறங்கி விடும். இவ்வாறு வட்டி வீதத்தைப் பண அளிப்பால் கட்டுப்படுத்த முடியும் என்ற முடிவுக்கு வருகிறார் கெயின்ஸ்.

ஆயத்த நிலைத் தேவையையும் பேண வேண்டுமெனில் சேமித்ததை முதலீடு செய்ய வேண்டும் என மேலே கண்டோம். முதலீடோ முதலின் இறுதிநிலைத் திறமையையும் வட்டி வீதத்தையும் ஒட்டியது. முந்தியது முற்றிலும் தொழில் முயல்வோர் எதிர்பார்ப்பை—அவர்களுடைய மனப்போக்கைச் சார்ந்தது. மனப்போக்கு எளிதில் மாறத்தக்க தன்று. எனவே, வட்டி வீதம் குறைந்து முதலீட்டைப் பெருக்க வேண்டும் என்று ஆகிறது. பற்றுக்குறை நிதியாக்க முறையினாலும், பாங்குக் கட்டுப்பாடுகளைத் தளர்த்துவதனாலும் பண அளிப்பைப் பெருக்கி, வட்டி வீதத்தைக் குறைக்க முடியும் என்பதை இதன் தொடர்பாக கெயின்ஸ் சுட்டிக் காட்டுகிறார். இயல்பாகவே, தானே இயங்கும் செலாவாணி முறைக்குப் பதிலாக 'நிருவகிக்கப்பட்ட செலாவணி' ஏற்பாடே இதற்கு உதவுவது. இவை அனைத்தும் நிறைவேற அரசின் 'தலையிடாக் கொள்கை' உதவாது என்பதும் தெளிவு.

தன்னுடைய செயல் திட்டத்தில் அரசுக்கு இன்னும் சிறப்பான இடத்தைத் தந்துள்ளார் கெயின்ஸ். வட்டி வீதத்தைக் குறைத்தாலும், முதலீட்டைப் பெருக்குவதில் தனியார் ஆர்வம் காட்டாது இருக்கலாம்: பொருளியல் மந்த காலங்களில் இது நிகழத் தக்கதே. அத்தகைய கட்டங்களில் வேண்டுமளவு முதலீடு செய்ய அரசு தானே முன்வர வேண்டும் என்பார் கெயின்ஸ். இதன் பொருள் தலையிடாக் கொள்கையைக் கைகழுவிவிட வேண்டும் என்பது தான்.

தொன்மைப் பொருளியலாளர் ஆய்வு ஒன்றுக்கொன்று தொடர்பற்றிருந்த இரு கோணங்களிலிருந்து நிகழ்த்தப்பட்டது. பொருளின் மதிப்பைத் தனியொரு கோணத்திலிருந்து — தேவை, அளிப்பு, பயன்பாடு, உற்பத்திச் செலவு என்ற பல காரணிகளை விளக்கி — ஆய்ந்து வந்தனர். அதே நேரத்தில் வேறொரு கோணத்திலிருந்து பணத்தின் அளிப்பு, கொடுக்கல் வாங்கல், 'சுழல் வேகம்' (Velocity

of circulation) என்ற பல காரணிகளை விளக்கி, விலை நிலைகளையும் ஆய்ந்து வந்தனர். இந்த இரு வேறு கோண ஆய்வுக்கு கெயின்ஸ் முடிவு கட்டுகிறார். உற்பத்தியை நிருணயிக்கும் ஆயத்த நிலைத் தேவையே வட்டிவீதமாகிய ஒரு பணம் சார் காரணியைப் பொருத்திருக்கிறது என்று அவர் நிறுவும்போது இதனைக் காண முடிகிறது. எனவே தான் அவர் நூலின் தலைப்பும் 'வேலையுடைமை, வட்டி, பணம் பற்றிய பொதுக் கோட்பாடு' என்று உள்ளது.

'பொதுக் கோட்பாடு' என்று சொல்வதில் மற்றொரு நுட்பமும் உள்ளது. தடையிலாப் பொருளாதாரம் எப்பொழுதும் நிறைவுறு வேலையுடைமை மட்டத்திலேயே சமநிலை எய்தும் எனத் தொல் நூலாளர் உறுதியாக நம்பினர். சில நேரங்களில் நிறைவுறு வேலையுடைமை இல்லாதிருந்தால், பணக் கூலியை வெட்டிக் குறைத்தால் இறுதியில் நிறைவுறு வேலையுடைமை தோன்றிவிடும் என்பது அவர்களுடைய கோட்பாடு. இதனை கெயின்ஸ் மறுத்துள்ளார். தடையிலாப் பொருளாதாரத்தில் தனியார் முதலீடு பற்றாக் குறையாகவும், சேமிப்பு எச்சமாகவும் இருப்பதால் அங்கு இயல்பாக நிலவுவது வேலைக்குறைவுடன் கூடிய சமநிலையே என்பது அவர் கருத்து. அந்தப் பொருளாதாரத்தில் நிறைவுறு வேலையுடைமையுடன் கூடிய சமநிலை ஒரு சிறப்பு நிலையாகவே இருக்க முடியும். எவ்வாறாயினும் ஆயத்த நிலைத்தேவை மட்டத்திலேயே வேலை மட்டம் நிறுவிக் கொள்ளும் என்பது பொது விதி. எனவே இதனை அடிப்படையாகக் கொண்ட நூலைப் 'பொதுக் கோட்பாடு' என்று அழைப்பது பொருந்துவது தானே!

இந் நாளைய அரசுகள் பொருளாதாரத்தில் நேரடியாகத் தலையிட்டு, பங்கு பெற்றுச் செயல் புரிந்து வருவதற்கு வழி வகுத்தவர் கெயின்ஸ். செயல்படு பொருளியலின் வளர்ச்சிக்கு கெயின்ஸ் ஆற்றியுள்ள தொண்டு மகத்தானது. வேலையின்மையை அகற்றுவதை இக் கால அரசுகள் தம்முடைய குறிக்கோள்களில் ஒன்றாகக் கொண்டிருப்பதற்கு கெயின்ஸீயப் பொருளியலின் செல்வாக்குத் தான் காரணம். பொருளாதாரத்தில் அரசத் தலையீட்டுக்கு கெயின்ஸ் காட்டிய பச்சைக் கொடியைத் தொடர்ந்து இன்று திட்டமிடல் முதலாளித்துவ சமூகங்களிலும் இயல்பான தன்மையாக ஆகிக் கொண்டிருப்பதைப் பார்க்கிறோம்.

எவ்வாறு வணிக மரபினரைப் புறந்தள்ள ஆடம் ஸ்மித்தும், முதலாளித்துவத்தைப் புறந்தள்ள கார்ல் மார்க்ஸும் தோன்றினரோ, அதே போல தடையிலாக் கொள்கையைப் புறந்தள்ள கெயின்ஸ் தோன்றினார் என்றால் மிகையன்று.

மேலும், அவருடைய கருத்துக்களின் மெய்ம்மை, சென்ற உலகப் பெருமந்தத்தின் போது அமெரிக்காவில் 'புதிய நடைமுறை' (New Deal) என்ற பெயரில் செயல் படுத்தப்பட்டு நிறுவப்பட்டது என் பதும் இங்குக் கருதத் தக்கது.

நீர்மை விருப்பத் தேர்வு, முதலின் இறுதிநிலைத் திறமை முதலிய சிலவற்றைத் தவிர, பிற கெயின்ஸீயக் கோட்பாடுகள் முந்திய ஆசிரியர்கள் தந்தவையே எனக் கூறி, கெயின்ஸ் புதிதாக எதையும் தந்துவிட வில்லை என்று கூறுவோரும் உளர். பழையனவற்றின் அடிப்படையிலேயே புத்தம்புது முடிவுகளை எட்டியதிலேயே ஒரு பெருமை உள்ளது. அந்தப் பெருமையும் கெயின்ஸையே சாரும்.

# 7. மோகனதாஸ் கரம்சந்த் காந்தி

'வையத்து நாட்டி லெல்லாம் தாழ்வுற்று வறுமை மிஞ்சி விடுதலை தவறிக் கெட்டுப் பாழ்பட்டு நின்ற பாரத தேசந் தன்னை வாழ்விக்க வந்த'வர் காந்தி அடிகள்.[1] எனவே காந்தியடிகளின் வாழ்க்கையும் கோட்பாடுகளும் இந்திய நாட்டின் அண்மைக் கால வரலாற்றுடன் பின்னிப் பிணைந்து கிடக்கின்றன. வாழ்நாளின் இறுதி ஓராண்டைத் தவிர எஞ்சியுள்ள கால மெல்லாம் அவர் கண்ட அரசு மக்கள் நலங் கருதாத மாற்றான் ஆட்சிதான். எனவே, அரசை நம்பியிராமல் மக்கள் சொந்த வலுவில் முன்னேற ஏற்பாடு செய்ய வேண்டிய சிக்கலே அவரை எதிர் நோக்கிய முதல் சிக்கல். இந்த மாற்றான் ஆட்சியில், ஊர்ப்புற வளங்களை உறிஞ்சி, அங்கங்கே சில ஆலைத் தொழில் நகரங்களாகக் கொப்புளிக்கும் கொடுமையும் அன்று இருந்தது. இதற்குப் போக்கு வழி காணும் பொறுப்பும் காந்தி யடிகளுக்கு வாய்த்தது. மேலும், அவர் வாழ்ந்து வளர்ந்த சூழ்நிலை சமயத்தை ஆணிவேராகக் கொண்ட இந்தியப் பண்பாட்டின் மீது அவருக்கு ஆழ்ந்த நம்பிக்கையையும் ஊட்டியிருந்தது. எனவே, அரசைச் சாராமலே, குறிப்பாக ஊர்ப்புறத்தவர், இந்திய நெறி

[1] மோகனதாஸ் கரம்சந்த் காந்தி 1869-இல் போர்பந்தரில் தோன்றினார். இங்கிலாந்தில் சட்டப்பட்டம் பெற்று, வழக்குரைஞராகப் பணியாற்ற 1893-இல் தென்னாப்பிரிக்கா சென்றார். இந்திய மக்கள் அந் நாட்டில் பட்ட தொல்லைகளுக்கு எதிராகப் போராடினார். இங்குத் தான் 'சத்தியாக்கிரகம்' என்ற அகிம்சைப் போர் முறையை உருவாக்கினார். 1906-இல் இந்தியா திரும்பியதும், இந்திய மக்களின் விடுதலை இயக்கத்தில் இரண்டறக் கலந்தார். ஒத்துழையாமை இயக்கம் (1921), உப்புச் சத்தியாக்கிரகம் (1930), தனிநபர் சத்தியாக்கிரகம் (1940), வெள்ளையனே வெளியேறு இயக்கம் (1942) முதலிய பல இயக்கங்களில் தலைமை தாங்கி வழி நடத்தினார். இதனிடையே பல்வேறு நிறுவனங்களின் வழியாக, கதர், கிராமத் தொழில்கள், ஆதாரக் கல்வி போன்ற நிர்மாணத் திட்டங்களிலும் ஈடுபட்டு வந்தார். நாடு விடுதலை பெற்ற பின்னர் 1948-இல் சுட்டுக் கொல்லப்பட்டார்.

இவரெழுதிய நூல்களில் 'சத்திய சோதனை,' 'இந்து சுயராஜ்யம்' போன்றவை தவிரப் பல்வேறு சிறு வெளியீடுகளும் உள்ளன. 'அரிஜன்' என்னும் இதழில் இவரெழுதிய கட்டுரைகள் பல தொகுப்புக்களாக வெளி வந்துள்ளன.

யிலிருந்து வழுவாமலே முன்னேறுவதற்கான வழிகளைப் பரிந்துரைத்து ஓர் உண்மை 'மகாத்மா' ஆகியவர் காந்தியடிகள்.

காந்தியடிகளின் பொருளியல் சிந்தனை இந்தப் பகைப் புலனில் தான் தோன்றியது. தொன்மைப் பொருளியலாளர் 'அரசப் பொருளாதாரம்' என்று பெயரிடும் அளவுக்கு அரசியலுக்கும் பொருளாதாரத்திற்கும் இடையே இணைப்புக் கண்டவர்கள். காந்தியடிகளோ பொருளியலில் அரசின் பங்கைக் குறைத்தவர். ஊர்ப் புறங்களின் வீழ்ச்சியிலே காலூன்றி வளர்ந்த தொழில் நாகரீகத்தின் உடன் பிறப்பே இக்காலப் பொருளியல். காந்தியடிகளோ வீழ்த்தப்பட்ட ஊர்ப் புறங்களின் எழுச்சிக்காகச் சிந்தித்தவர்; செயலாற்றியவர். அறவியல் பற்றி அக்கறையே கொள்ளாத 'பொருள்வய மனிதன்' ஆடம் ஸ்மித், மார்க்ஸ் போன்ற பெரும் புள்ளிகளின் கதாநாயகன். காந்தியடிகளோ அறவியலே பொருளியல் என அறிவுறுத்தியவர். எனவே, காந்தியடிகளைப் பிற பொருளியலாளர் கூட்டத்தில் சேர்த்திட முடியாது.

பிற பொருளியலாளர்க்கும் காந்தியடிகளுக்கும் வேறொரு வேற்றுமையும் உண்டு. அவருடைய பொருளியல் ஒரு நெறியுரை அறிவியல் மட்டுமன்று; அது ஒரு கலையுமாகும். தன்னைச் சுற்றியிருந்த சிக்கல்களுக்கு ஒரு போக்கு வழியாகத் தான் பொருளியலை அவர் அணுகினர். இங்கும், ஒரு குறுங் கால நோக்கும், ஒரு நெடுங் கால நோக்கும் அவருக்கு இருந்தன என்று சொல்லலாம். நாட்டு விடுதலையும் வறுமைஒழிப்பும் அவருடைய குறுங் கால நோக்கங்கள். இந்திய நெறி வழுவாத நாட்டு முன்னேற்றம் அவருடைய நெடுங் கால நோக்கம். காந்தியடிகளின் கோட்பாடுகளை ஆயும் போது இதனை மறந்து விடலாகது.

இனி, அவருடைய பொருளியல் கருத்துக்களைப் பார்க்கலாம்.

'எளிய வாழ்வு உயர்ந்த நோக்கம்' என்பதே அவருடைய நுகர்வுத் திட்டம். உயிர் வாழ இன்றியமையாதவைகளுக்கு எச்சமாகப் பெற ஒருவன் விரும்புவதே தவறு என்பது அவர் கருத்து. துறவிலே இன்பமும் பெருமையும் காணும் இந்தியப் பண்பாட்டின் மீது அவருக்கு இருக்கும் ஆழ்ந்த பற்றுதலே இந்தக் கருத்துக்குக் காரணம்.[1] பொருள் துறவிலே இன்பம் காணச்சொல்பவர், பொருள் துறவால் துன்பம் ஏற்படுவதை ஏற்பவரல்லர். 'பசித்திருப்பவனுக்கு

[1] இக்காலப் பொருளியலறிஞர்கள் விருப்பப் பெருக்கமே பொருளியலின் அடிப்படைச் சிக்கல் எனக் கூறுவர். இதற்குத் தீர்வு, விருப்பங்களைச் சுருக்குவதில் தான் காணமுடியும் எனக் கூறி 'விருப்பமில்லா நிலை'யே குறிக்கோள் நிலை எனப் பேராசிரியர் ஜே. கே. மேத்தா கூறுவார். இவருடைய கருத்து இந் நூலின் முதல் அதிகாரத்திலேயே உள்ளது.

ரொட்டியே கடவுள்', என்று அவர் கூறும் போது இந்த உண்மையைப் புரிந்து கொள்ளலாம்

உற்பத்தி பற்றிய காந்தியடிகள் கருத்தும் புதுமையானதே. தன்னுட்டில் அவர் கண்ட உற்பத்தி முறை சுரண்டலே அடிப்படையாகக் கொண்டது. எனவே, சுரண்டலே எவ் வகையிலும் அவர் ஏற்றுக் கொள்பவரல்லர். உற்பத்தியால் மனிதனே மனிதன் சுரண்டுவதும், மனிதன் இயற்கையைச் சுரண்டுவதும் நிகழலாகாது என்பது அவருடைய அடிப்படைக் கொள்கை.

மனிதனே மனிதன் சுரண்டுவதற்கு ஓர் உற்பத்தி நிறுவன எல்லேயை மட்டும் தராது, ஒரு நில வெல்லேயையும் வலியுறுத்திய பெருமை காந்தியடிகளுக்கு உரியது. முதலாளி தொழிலாளியைச் சுரண்டுவது பற்றி கார்ல் மார்க்ஸ் கூறியுள்ளார். அவருடைய எச்ச மதிப்புக் கோட்பாடே அது தான். ஆனல், காந்தியின் நாட்டில் நகரத்து முதலும் உழைப்பும் ஊர்ப்புறத்தை முற்றச் சுரண்டும் அநீதி நியதியாக இருந்தது. எனவே, அவருடைய நோக்கில் ஒவ்வொரு நிலவெல்லேயும், பிற நிலவெல்லேகளேச் சார்ந்திராதபடி, தன்னிறைவு பெறும் நிலேயிலேயே சுரண்டலற்ற உற்பத்தி ஏற்பட முடியும். இதற்கு வழி, பரவல் முறை உற்பத்தியே ஆகும். அவருடைய சுதேசிக் கொள்கைகளுக்கும் இதுவே அடிப்படை. சுதேசி என்பது சுற்றியுள்ளோர் செய்துள்ள பொருள்களேத் தான் குறிப்பிடுகின்றது ; தன்னுட்டுப் பொருள்களே மட்டுமன்று.

தொழிற் காப்புக் கொள்கை பொதுவாக எங்கும் வரவேற்கப் படுகிற ஒன்றே. சுதேசித் தொழிலுக்குக் காப்பாக அயல் நாட்டுப் பொருள்களின் இறக்குமதிகளேத் தடை செய்வதைச் சரிசெய்கின்றன பொருளியல் முடிவுகள். காந்தியடிகளோ இந்தக் காப்புக் கொள்கையை அதனுடைய தர்க்கவியல் முடிவுக்கே இட்டுச் செல்கிருர். வலுவற்ற தொழில்கள், அவை எவ்விடத்தன ஆயினுஞ் சரி, காக்கப் பெற வேண்டும் என்பது அவருடைய கருத்து. கிராமத் தொழில்களுக்கு உரிய இடத்தை அவர் இவ்வாறே நிறுவுகிருர்.

மனிதன் இயற்கையைச் சுரண்டலாகாது என்ற காந்தீயப் பொருளியலும் புதுமையானதே. காந்தியடிகளின் முதன்மைக் கொள்கைகள் உருவாகிய 1930ஐ ஒட்டிய பத்தாண்டுகள் உலக வரலாற்றில் உலகப் பெருமந்தம், உலகப் பெரும் போர்கள் நிலவிய காலங்களாகும். வளத்தை ஆண்டு செய்த பொருள்கள் விற்பனேயாகாது பாழாகிய காலம், உலக மந்த ஆண்டுகள். அரிய வளங்களே அழிவுக் கருவிகள் செய்யப் பயன்படுத்தி உலகை அழித்த காலம் உலகப் பெரும் போர் ஆண்டுகள். எனவே, வளங்களே ஆண்டு

அழிப்பதற்குப் பதிலாக, அவற்றைப் போற்றிப் பயன்படுத்தக் கோரும் காந்தீயச் சிந்தனை நனி சிறந்தது அல்லவா? காந்தீயப் பொருளியல் 'நிலைபெறு பொருளாதாரம்' (Economy of Permanence) என்பார் பேராசிரியர் ஜே. சி. குமரப்பா.

இயல்பாகவே, வளத்தை மிகப் பேரளவில் ஆள்வதற் கென்றே பயன் படுத்துகிற எந்திர வகைகள் காந்தியடிகளால் ஏற்றுக் கொள்ளப்பட வில்லை. அவருடைய நோக்கில் எந்திரங்கள் இரு வகையின: மனிதனுடைய கடுஉழைப்பைக் குறைக்க உதவுபவை ஒரு வகை; மனிதனைச் சோம்பேறி ஆக்குபவை அடுத்த வகை. இவ்விரண்டாம் வகை எந்திரங்களே காந்தியடிகளால் வெறுக்கப் படுகின்றன.[1]

இன்றைய உற்பத்தி முறை குறைந்த செலவில் மிகுந்த அளவு உற்பத்தி செய்வதையே குறிக்கோளாகக் கொண்டது; உற்பத்திச் செலவுக் குறைப்பே தலையாய குறிக்கோள். ஆனால் காந்தியடிகளின் 'உற்பத்திச் செலவு,' 'சமூக உற்பத்திச் செலவு' ஆகும்; பொருளுற்பத்திச் செலவோடு, பொருளுற்பத்தியால் தாக்குண்ட சமூகம் இடுகிற செலவுகளையும் சேர்க்கக் கிடைக்கும் மொத்த உற்பத்திச் செலவே அவருடைய நோக்கில் உண்மையான உற்பத்திச் செலவாகும். பிகு போன்றோர் இது பற்றிச் சிந்தித்துள்ளவர்களே.

உற்பத்திச் செலவினைப் போல, நிறைவினையும் சமூக நோக்கில் சிந்தித்தவர் காந்தியடிகள். மிகவுயர்ந்த தொகையினர் மிகவுயர்ந்த அளவு நிறைவு பெறும் பெந்தாமின் (Bentham) கொள்கையே மேலை நாட்டுப் பொருளியலாளர் குறிக்கோள். காந்தியடிகளோ 'கடையனுக்கும் கடைத்தேற்றம்' (unto this last) என்ற சர்வோதயக் கொள்கையை ஈந்தவர். சமூகத்தின் கடைசிப்படியில் இருப்பவனைப் பெரும்பாலோர் நலம் என்ற பெரு வெள்ளம் அடித்துச் செல்வதை காந்தீயப் பொருளியல் சரிவைக்காது. எனவே, 'செலவு—விளைவு ஆய்வு' (Cost-Benefit Analysis) காந்தீயத்தின் வரம்புக்கு அப்பாற்பட்டதாகிறது.

காந்தீயப் பொருளியலின் செயல்படு நில எல்லை, சுரண்டல் ஏற்பட இடந்தராத வகையில் சுருக்கமாக இருப்பதால், அங்கே பண்டமாற்றுச் சிக்கலின்றிச் செயல்பட முடியும். இங்கும் பொருளின் மதிப்பளவையாக காந்தியடிகள் கையாளும் கருவி உழைப்புத்

[1] வளர்ச்சி குன்றிய நாடுகளில் உழைப்பினை வீணாக்காமல் பயன் படுத்துவதன் வழியாகவே, குறைந்த செலவில் வளர்ச்சி காண முடியும் என்ற இக்காலக் கருத்து இங்கு நினைவு கூர்தற்குரியது.

தான். அந் நிலையில் பணத்தால் சுரண்டும் இழிநிலைக்கும் இடமில்லை. ஓர் இடையீட்டுப் பொருளாகப் பணத்தை ஆள வேண்டி வந்தாலும், அது ஓர் உழைப்பு நாணயமாக—இவ்வளவு பணம் இவ்வளவு உழைப்புக்குச் சமம் என்று உழைப்புக்கு மாற்றாகக் கொடுக்கப்படும் ஒரு வகைப் பணமாக—இருக்க வேண்டும் என்பது காந்தீயம்.

பகிர்வு பற்றிய காந்தீயக் கோட்பாடு, ஆள் வழிப் பகிர்வையே பேசுகிறது; பணிவழிப் பகிர்வு பற்றி மிகுதியாக அக்கறைப்படவில்லை. பொருளியலை ஒரு கலையாகக் கொள்ளும் போது இது எதிர்பார்க்கத் தக்கதே. இங்கும் முழுச் சமத்துவமே அவருடைய குறிக்கோள். நாவிதனும் வழக்குரைஞனும் சரி சமமாகப் பெறவேண்டும் என்பது அவருடைய திட்டம். ஒவ்வொருவர் தேவைக்கேற்ற வருமானத்துக்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்று கூறுவதன் வழியாக, காந்தீயம் பொதுவுடைமைச் சூழலை நெருங்கி நிற்கிறது.

பணிவழி நோக்கில் பகிர்வை அணுகினால், உழைப்பு நாணயம் புழங்கும் இடத்தில் வட்டி தோன்ற வழியில்லை. இலாபமும் ஓர் ஆள்திற வருமானம் என்ற வகையில் காந்தீய உலகில் நிலவ வழியில்லை. ஏனெனில் தொழில் முயல்வோர் சமூகத்தின் 'தருமகருத்தாக்களா'கப் (Trustees) பணி செய்ய வேண்டும் என்பது அவருடைய வேண்டுகோள்.[1] இந் நிலையில் பணிவழிப் பெறுகிற ஒரே ஒரு வகை வருமானம் கூலியாகவே இருக்க முடியும். காந்தியடிகளின் 'உழைத்து உண்ணும்' (Bread — Labour) கோட்பாடு, உழைப்பை ஒரு கடமையாகக் கருதச் சொல்கிறதே யொழிய, தவிர்க்க இயலாத ஒரு சுமையாகக் கருதச் சொல்லவில்லை என்பதையும் இங்குக் கவனிக்க வேண்டும். இக் காலப் பொருளியல், உழைப்பை ஒரு துன்பமாகவும், ஓய்வையே குறிக்கோளாகவும் கொண்டுள்ளது. காந்தியடிகளுக்கோ ஓய்வு சோம்பலின் மறு பெயர்; உழைப்பது ஒவ்வொருவருடைய கடமை. இங்கும் காந்தீயப் பொருளியலின் தனித் தன்மையைப் பார்க்கலாம்.

காந்தீயப் பொருளியலைக் குறைகூறுவோர், அது நம்மைக் கட்டை வண்டிக் காலத்துக்குப் பின்னோக்கி அழைத்துச் செல்கிறது என்று கூறுவதுண்டு. ஆனால், வேறு சில அறிஞர்களோ, காந்தீயப்

[1] காந்தியடிகளின் சீடர்கள் இந்தத் தருமகருத்தா ஏற்பாட்டின் இடத்தில் நிலக் கொடை, நிதிக் கொடை போன்ற பலவற்றை வலியுறுத்தி வருகின்றனர். நிலம் மிக்கவன் தன்னுடைய நிலத்தில் ஒரு பகுதியையும், நிதிமிக்கவன் தன்னுடைய நிதியில் ஒரு பகுதியையும் சமூகத்துக்கு மாற்றிக் கொடுப்பதே இவர்களுடைய திட்டம். இதற்கு மாறாக, தருமகருத்தாத் திட்டத்தில் நிலத்தையும் நிதியையும் உரியவர்களே ஆண்டு வருகிற போதிலும், அந்த ஆட்சி வழி பெற்ற வருமானத்தில், தம்முடைய இயல்பான தேவை போக எஞ்சுவதை, அவர்கள் சமூகத்துக்கு மாற்றிக் கொடுத்து விடுவர்.

பொருளியலின் காலம் இனித்தான் வரஇருக்கிறது என்று சொல்வர். காந்தீயப் பொருளியலின் அடிப்படைக் குறை, அதன் குறை நிறைகளைப் பரிசோதித்துத் தெளிவதற்கு ஒரு வாய்ப்புத் தரும் வகையிலாவது அது இதுவரை செயல்படுத்தப் படவில்லை என்பது தான். நம் நாட்டிலும் சமூக வளர்ச்சித் திட்டங்கள், கதர், கிராமக் கைத் தொழில் திட்டங்கள் முதலிய காந்தீயச் செயல் திட்டங்கள், காந்தீய அடிப்படையில் அல்லாத ஆக மொத்தத் திட்டம் ஒன்றின் பகுதியாகத்தான் செயல்பட்டு வருகின்றன. இந் நிலையில் காந்தீயப் பொருளியலில், காந்தீய நோக்கு அல்லாத பிற நோக்கில், குறை காண முயல்வது முதிர்ச்சியுடைமை ஆகாது. எவ்வாறாயினும், இந்தியா உள்ளிட்ட ஆசிய நாடுகளின் வறுமை நீக்கும் முயற்சியில் ஒரு குறுங் காலத்திட்டம் என்ற வகையில் காந்தீயப் பொருளியல் பெற்றுள்ள இடம் பெருமைக்குரியது; போற்றிப் புகழ்தற்குரியது. மேலும் 'அறநெறி மெய்ப்பாடுகளின் கோட்பாடு' என்ற நூலை எழுதிய ஆடம் ஸ்மித்திலிருந்து தொடங்கிய பொருளியல், அறநெறிக்குட்பட்ட பொருளியலை வலியுறுத்தும் காந்தியடிகளுடன் ஒரு முழு வட்டம் சுற்றி வந்து நிற்கிறது என்றும் சொல்லலாம் அல்லவா?

## மேலும் படிக்கத்தக்க நூற்கள்

K. S. சோணாசலம் — பொருளாதாரச் சிந்தனை வரலாறு
Alexander Gray — Development of Economic Doctrines
F. A. Neff — Economic Doctrines
Adi H. Doctor — Sarvodaya.

# கலைச் சொற்கள்

(ஆங்கிலம் — தமிழ்)

## A

| | |
|---|---|
| Abstinence | நுகர்வுத் தவிர்ப்பு |
| Accumulation of capital | முதல் திரட்சி |
| Agio | வாசிவட்டம் |
| Allocation of resources | வளங்கள் ஒதுக்கீடு |
| Alternate demand | மாற்றுத் தேவை |
| Alternate supply | மாற்று அளிப்பு |
| Alternative costs | மாற்றீட்டு உற்பத்திச் செலவுகள் |
| Analysis | பகுத்தாய்வு |
| Appendix | பிற்சேர்க்கை |
| Applied Economics | செயல்படு பொருளியல் |
| Art | கலை |
| Assumption | எடுகோள் |
| Average | சராசரி |

## B

| | |
|---|---|
| Bank | பாங்கு |
| Barter | பண்டமாற்று |
| Bears | கரடிகள் |
| Bilateral Monopoly | இருபால் முற்றுரிமை |
| Birth rate | பிறப்பு வீதம் |
| Boom | பூரிப்பு |
| Board of directors | இயக்குநர் குழு |
| Bonds | கடன் பத்திரங்கள் |
| Bounty | அரசக் கொடை |
| Budget | வரவு செலவுத் திட்டம் |
| Bulls | எருதுகள் |
| Business cycle | தொழில் (வாணிக)ச் சகடம் |

# C

Called-up capital ... அழைத்த முதல்
Canon ... புனித விதி
Capital ... முதல்
Capital formation ... முதல் ஆக்கம்
Capital goods ... முதல் கருவிப் பொருள்கள்
Capital market ... முதல் அங்காடி
Capitalism ... முதலாளித்துவம்
Cash ... ரொக்கம்
Cartel ... கார்ட்டெல்
Ceiling ... உச்சவரம்பு
Central bank ... மையப் பாங்கு
Cheque ... செக்கு, காசோலை
Circulating capital ... புரள் முதல்
Class struggle ... வர்க்க (வகுப்பு)ப் போராட்டம்
Co-efficient ... குணகம்
Collective bargaining ... கூட்டுப் பேரம்
Combination ... சேர்மானம்,(தொழில்) தொகுப்பு
Commerce ... வாணிகம்
Commodity ... பண்டம்
Communication ... தொடர்பு வசதி
Communism ... பொதுவுடைமை
Competition ... போட்டி
Composite demand ... இணைந்த தேவை
Composite supply ... இணைந்த அளிப்பு
Constant cost ... மாறு (உற்பத்தி)ச் செலவு
Consumer ... நுகர்வோன்
Consumers' goods ... நுகர்வோர் பொருள்கள்
Consumers' sovereignty ... நுகர்வோர் இறைமை
Consumers' surplus ... நுகர்வோர் எச்சப்பாடு
Consumption ... நுகர்வு
Co-operation ... கூட்டுறவு
Cost ... உற்பத்திச் செலவு
Cross elasticity ... பின்னிய நெகிழ்ச்சி
Cumulative preference share... குவியும் முன்னுரிமைப் பங்கு
Current deposit ... நடப்பு வைப்புத் தொகை
Curve ... வளைகோடு
Customer ... வாடிக்கையாளன்

## D

| | | |
|---|---|---|
| Death rate | ... | இறப்பு வீதம் |
| Debenture | ... | கடன் பத்திரம் |
| Deductive method | ... | பகுத்தறி முறை |
| Deficit | ... | பற்றுக்குறை |
| Definition | ... | பொருளிலக்கணம் |
| Deflation | ... | பணவாட்டம் |
| Demand | ... | தேவை |
| Deposit | ... | வைப்புத் தொகை |
| Depreciation | ... | தேய்மானம் |
| Depression | ... | மந்தம் |
| Desire | ... | வேட்கை |
| Devaluation | ... | மதிப்புக் குறைப்பு |
| Differential surplus | ... | வேறுபாட் டெச்சம் |
| Differentiation | ... | வேறுபாடு காட்டல் |
| Diminishing returns | ... | குறைந்து செல் விளைவுகள் |
| Diminishing utility | ... | குறைந்து செல் பயன்பாடு |
| Director | ... | இயக்குநர் |
| Direct tax | ... | நேர்முக வரி |
| Discrimination | ... | வேறுபாடு காட்டுகை |
| Discriminating monopoly | ... | வேறுபாடு காட்டும் முற்றுரிமை |
| Diseconomies | ... | சிக்கனக் கேடுகள் |
| Distribution | ... | பகிர்வு |
| Dividend | ... | இலாப ஈவு |
| Division of Labour | ... | உழைப்புப் பகுப்பு |
| Dose | ... | இடுமானம் |
| Duopoly | ... | இருவர் விற்பனை |
| Dynamic state | ... | இயக்க நிலை |

## E

| | | |
|---|---|---|
| Earnings | ... | ஈட்டங்கள் |
| Earnings of management | ... | நிருவாக ஈட்டங்கள் |
| Economic development | ... | பொருளியல் வளர்ச்சி |
| Economic forces | .. | பொருளியல் ஆற்றல்கள் |
| Economic Laws | ... | பொருளியல் விதிகள் |
| Economic policy | ... | பொருளியல் கொள்கை |
| Economic theory | ... | பொருளியல் கோட்பாடு |

| | | |
|---|---|---|
| Economic thought | ... | பொருளியல் சிந்தனை |
| Economical | ... | சிக்கனமான |
| Economics | ... | பொருளியல் |
| Economies | ... | சிக்கனங்கள் |
| Economies of scale | ... | பருமச் சிக்கனங்கள் |
| Economy | ... | பொருளாதாரம் |
| Effective demand | ... | ஆயத்தநிலைத் தேவை |
| Efficiency | ... | திறமை |
| Elasticity | ... | நெகிழ்ச்சி |
| Employee | ... | வேலையாள் |
| Employer | ... | வேலையளிப்போன் |
| Employment | ... | வேலையுடைமை |
| Ends | ... | குறிக்கோள்கள் |
| Enterprise | ... | தொழில் துணிவு, தொழில் முயற்சி |
| Entrepreneur | ... | தொழில் துணிவோன், தொழில் முயல்வோன் |
| Equation | ... | சமன்பாடு |
| Equality | ... | சமத்துவம் |
| Equilibrium | ... | சமநிலை |
| Equi-marginal returns | ... | சம இறுதிநிலை விளைவுகள் |
| Equi-marginal utility | ... | சம இறுதிநிலைப் பயன்பாடு |
| Ethics | ... | அறவியல் |
| Exchange | ... | மாற்று |
| Expectation | ... | எதிர்பார்ப்பு |
| Expenditure | ... | செலவீடு, செலவு |
| Exploitation | ... | சுரண்டல் |
| External economies | ... | புறச் சிக்கனங்கள் |

## F

| | | |
|---|---|---|
| Factors of production | ... | உற்பத்திக் காரணிகள் |
| Fair wage | ... | நேர்மையான கூலி |
| Farm | ... | பண்ணை |
| Finance | ... | நிதி |
| Final products | ... | வினைமுற்றிய பொருள்கள் |
| Firm | ... | நிறுவனம் |
| Fixed | ... | நிலைத்த |
| Fixed capital | ... | நிலைத்த முதல் |

Fixed cost ... நிலைத்த உற்பத்திச் செலவு
Fixed factor ... நிலைத்த காரணி
Forbearance ... அடங்கியிருத்தல்
Forced saving ... கட்டாயச் சேமிப்பு
Foreign trade ... அயல்நாட்டு வணிகம்
Formula ... வாய்பாடு, சூத்திரம்
Free competition ... தடையிலாப் போட்டி
Free goods ... இலவசப் பொருள்கள்
Frictional unemployment ... பிறழ்ச்சிக்காரண வேலையின்மை
Full employment ... முழு வேலையுடைமை
Function ... சார்பலன், பணி
Functional distribution ... பணிவழிப் பகிர்வு
Functional relations ... சார்பு உறவுகள்

## G

General equilibrium ... பொதுச் சமநிலை
Generalisations ... பொதுமைகள்
Geometry ... வடிவகணிதம்
Goods ... பொருள்கள்
Government securities ... அரசுப் பத்திரங்கள்
Grade ... தரம் (படி அளவு)
Graph ... வரைபடம்
Gross interest ... மொத்த வட்டி
Gross national income ... மொத்த நாட்டு வருமானம்
Gross national product ... மொத்த நாட்டு விளைபொருள்
Gross profit ... மொத்த இலாபம்
Group equilibrium ... தொகுதிச் சமநிலை

## H

Handicraft ... கைவினைத்தொழில்
Historical school ... வரலாற்று மரபினர்
Homogeneous ... ஓரியலான
Horizontal axis ... படுகிடை அச்சு
Hypothetical ... கற்பிதமான

## I

| | | |
|---|---|---|
| Imprefect competition | ... | நிறைகுறைப் போட்டி |
| Imperfect market | ... | நிறைகுறை அங்காடி |
| Incentive | ... | தூண்டுதல் |
| Income | ... | வருமானம் |
| Income consumption curve | ... | வருமானம் நுகர்வு வளைகோடு |
| Income elasticity | ... | வருமானஞ் சார் நெகிழ்ச்சி |
| Increasing cost | ... | வளர்ந்து செல் உற்பத்திச் செலவு |
| Increasing returns | ... | வளர்ந்து செல் விளைவுகள் |
| Index numbers | ... | குறியீட் டெண்கள் |
| Indifference curves | ... | சமநோக்கு வளைகோடுகள் |
| Indirect tax | ... | மறைமுக வரி |
| Indivisibility | ... | பகுபடாமை |
| Inductive method | ... | தொகுத்தறி முறை |
| Industry | ... | தொழில் (ஆலைத் தொழில்) |
| Industrial organisation | ... | தொழில் அமைப்பு |
| Inequality | ... | ஏற்றத் தாழ்வு |
| Inferior goods | ... | மட்டப் பொருள்கள் |
| Inflation | ... | பணவீக்கம் |
| Innovation | ... | புதுமை |
| Interest | ... | வட்டி |
| Internal economies | ... | அகச் சிக்கனங்கள் |
| International trade | ... | பன்னாட்டு வாணிகம் |
| Inventions | ... | புத்தாக்கங்கள் |
| Investment | ... | முதலீடு |
| Involuntary unemployment | ... | கட்டாய வேலையின்மை |
| Issued capital | ... | வெளியிட்ட முதல் |

## J

| | | |
|---|---|---|
| Joint cost | ... | கூட்டு உற்பத்திச்செலவு |
| Joint demand | ... | கூட்டுத் தேவை |
| Joint product | ... | கூட்டு விளைபொருள் |

| | | |
|---|---|---|
| Joint-stock company | ... | கூட்டுப் பங்குக் கம்பெனி |
| Joint supply | ... | கூட்டு அளிப்பு |
| Jurisprudence | ... | சட்ட இயல் |

## L

| | | |
|---|---|---|
| Labour | ... | உழைப்பு, தொழிலாளர் |
| Labour coefficient | ... | உழைப்புக் குணகம் |
| Labour market | ... | உழைப்பு அங்காடி |
| Labour supply | ... | உழைப்பின் அளிப்பு |
| Land | ... | நிலம் |
| Large scale industry | ... | பேரளவுத் தொழில் |
| Laws | ... | விதிகள், சட்டங்கள் |
| Liability | ... | பொறுப்பு |
| Liquidity | ... | நீர்மை |
| Liquidity preference | ... | நீர்மை விருப்பத் தேர்வு |
| Limited liability | ... | வரையறுக்கப் பெற்ற பொறுப்பு |
| Living wage | ... | வாழ்க்கைக் கூலி |
| Loan | ... | கடன் |
| Loanable fund | ... | கடன் நிதி |
| Localisation of industry | ... | தொழிலின் ஓரிடச் செறிவு |
| Long period | ... | நெடுங்காலம் |
| Loss | ... | நட்டம் |
| Luxuries | ... | போகப் பொருள்கள் |

## M

| | | |
|---|---|---|
| Machinery | ... | எந்திரம், பொறி |
| Macro economics | ... | பேரியல் பொருளியல் |
| Maladjustment | ... | பொருத்தமின்மை |
| Management | ... | நிருவாகம் |
| Managed currency | ... | நிருவகிக்கப்பெற்ற செலாவணி |
| Margin | ... | இறுதிநிலை |
| Market | ... | அங்காடி |
| Material goods | ... | உருவப் பொருள்கள் |

Means ... வழிவகைகள்
Means of production ... உற்பத்தி வழிவகைகள்
Mercantilism ... வணிகமரபு
Method ... ஆய்வுமுறை
Micro economics ... நுண்ணியல் பொருளியல்
Minimum wages ... குறைந்த அளவுக் கூலிகள்
Modern theory ... இக்கால (புதுமை)க் கோட்பாடு
Money ... பணம்
Money market ... பண அங்காடி
Monopoly ... விற்பனை முற்றுரிமை
Monopolistic competition ... முற்றுரிமைப் போட்டி
Monoprony ... வாங்கல் முற்றுரிமை
Mortgage ... அடைமானம்
Multiplier ... பெருக்கி

## N

National expenditure ... நாட்டுச் செலவீடு
National income ... நாட்டு வருமானம்
National product ... நாட்டு விளைபொருள்
National output ... நாட்டு உற்பத்தி
Nationalisation ... நாட்டுரிமையாக்கல்
Natural resources ... இயற்கை வளங்கள்
Necessaries ... இன்றியமையாதவை
Negative quantity ... எதிர்க் கணியம்
Net ... நிகர
Neutral equilibrium ... நடுநிலையான சமநிலை
Nominal income ... பெயரளவு வருவாய்
Non-material goods ... அருவப் பொருள்கள்
No-rent land ... வாரமிலி நிலம்
Normative science ... நெறியுரை அறிவியல்
Normal ... இயல்பான
Notes ... பணத்தாள்கள்

## O

Occupation ... தொழில்
Oligopoly ... சிலவர் விற்பனை
Opportunity ... பிறவாய்ப்பு
Optimum firm ... உத்தம நிறுவனம்
Optimum population ... உத்தம மக்கள் தொகை
Organisation ... அமைப்பு
Output ... உற்பத்தி
Overhead cost ... மேல் உற்பத்திச் செலவு
Overpopulation ... அமித மக்கள் தொகை
Over production ... அமித உற்பத்தி

## P

Paid-up capital ... செலுத்திய முதல்
Particular equilibrium ... குறிப்பிட்ட சமநிலை
Partnership ... கூட்டு வியாபாரம்
Payments ... செலுத்துகள்
Per-capita income ... தலா வருமானம்
Perfect competition ... நிறைவுப் போட்டி
Perfect market ... நிறைவு அங்காடி
Physiocrats ... இயற்கை மரபினர் (பிஸியோக் கிராட்டுகள்)
Population ... மக்கள் தொகை
Positive checks ... இயல்புத் தடைகள்
Poistive science ... இயல்புரை அறிவியல்
Potential price ... தகு விலை
Precautionary motive ... எச்சரிக்கை ஊக்கி
Prediction ... முற்கூற்று
Preference ... விருப்பத் தேர்வு
Premium ... வாசி வட்டம்
Preventive checks ... தவிர்ப்புத் தடைகள்
Price consumption curve ... விலை நுகர்வு வளைகோடு
Price determination ... விலை நிருணயம்

| | | |
|---|---|---|
| Price elasticity | ... | விலைசார் நெகிழ்ச்சி |
| Price line | ... | விலை வீதக்கோடு |
| Prime cost | ... | முதன்மை உற்பத்திச் செலவு |
| Probability | ... | நிகழ்திறம் |
| Product | ... | விளைபொருள் |
| Product differentiation | ... | விளைபொருள் வேறுபாடு காட்டல் |
| Production | ... | உற்பத்தி |
| Profit | ... | இலாபம் |
| Progressive tax | ... | வளர்வீத வரி |
| Propensity | ... | நாட்டம் |
| Proportionate tax | ... | வீத வரி |
| Prosperity | ... | செழிப்பு |
| Public finance | ... | பொது நிதியியல் |
| Public enterprise | ... | பொதுத் தொழில் முயற்சி |
| Purchasing power | ... | வாங்குந் திறன் |
| Pure materials | ... | தூய பொருள்கள் |

## Q

| | | |
|---|---|---|
| Quasi rent | ... | போலி வாரம் |

## R

| | | |
|---|---|---|
| Random sample | ... | தற்செயல் மாதிரி |
| Rate | ... | வீதம் |
| Raw materials | ... | கச்சாப் பொருள்கள் |
| Real cost | ... | உண்மை உற்பத்திச் செலவு |
| Real income | ... | உண்மை வருமானம் |
| Regressive tax | ... | தேய்வீத வரி |
| Rent | ... | வாரம் |
| Representative firm | ... | மாதிரி நிறுவனம் |
| Residual claimant | ... | மிச்ச உரிமையர் |
| Revenue | ... | வருவாய் |
| Reward | ... | கைம்மாறு, ஊதியம் |
| Risk | ... | ஆபத்து |
| Risk bearing | ... | ஆபத்து ஏற்பு |

# S

| | | |
|---|---|---|
| Sacrifice | ... | துறவு |
| Satiety | ... | முழுநிறைவு (தெவிட்டல்) |
| Satisfaction | ... | நிறைவு |
| Saving | ... | சேமிப்பு |
| Scale | ... | பருமன் |
| Scarcity | ... | அருந்தல் தன்மை |
| Schedule | ... | அட்டவணை, பட்டியல் |
| Science | ... | அறிவியல் |
| Self-sufficiency | ... | தன்னிறைவு |
| Selling cost | ... | விற்பனைச் செலவு |
| Services | ... | பணிகள் |
| Shares | ... | பங்குகள் |
| Short period | ... | குறுங் காலம் |
| Size of business | ... | தொழிலின் பருமன் |
| Slope | ... | சரிவு |
| Small-scale industry | ... | சிற்றளவுத் தொழில் |
| Socialism | ... | சமதருமம் |
| Sociology | ... | சமூக இயல் |
| Social product | ... | சமூக விளைபொருள் |
| Social security | ... | சமூகப் பாதுகாப்பு |
| Specificity | ... | ஒரு பயனுடைத் தன்மை |
| Speculation | ... | ஊகவணிகம் |
| Speculative motive | ... | ஊகவணிக ஊக்கி |
| Specialisation | ... | சிறப்புத் தேர்ச்சி |
| Stable equilibrium | ... | நிலையான சமநிலை |
| Standard of living | ... | வாழ்க்கைத் தரம் |
| Static state | ... | தேக்க நிலை |
| Statistics | ... | புள்ளி இயல் |
| Stock exchange | ... | பங்கு அங்காடி |
| Subsistence | ... | பராமரிப்பு |
| Subscribed capital | ... | ஒப்பிய முதல் |
| Substitute | ... | பதில் மாற்றுப் பொருள் |

Substitution ... பதிலீடு
Supplementary cost ... துணை உற்பத்திச் செலவு
Supply ... அளிப்பு
Surplus ... எச்சம்
Surplus value ... எச்ச மதிப்பு

## T

Table ... அட்டவணை, பட்டியல்
Tangent ... தொடுகோடு
Taxation ... வரிவிதிப்பு
Technical ... தொழில் நுட்பமான
Tendency ... போக்கு
Time deposit ... தவணை வைப்புத் தொகை
Time element ... காலக் கூறு
Time preference ... கால விருப்பத்தேர்வு
Trade ... வாணிகம்
Trade union ... தொழிற் சங்கம்
Transactions motive ... கொடுக்கல் வாங்கல் ஊக்கி
Transfer cost ... மாற்றீட்டு உற்பத்திச்செலவு
Transfer earning ... மாற்றிட ஈட்டம்
Transportation cost ... கடத்துச் செலவு
Trigonometry ... திரிகோணமிதி
Trusteeship ... தருமகர்த்தா முறை

## U

Uncertainty ... உறுதியின்மை
Uncertainty bearing ... உறுதியின்மை ஏற்பு
Under-developed ... வளர்ச்சி குறைந்த
Under-employment ... வேலைக் குறைவு
Unearned income ... உழைப்பிலா வருமானம்
Unemployment ... வேலையின்மை
Unity ... ஒன்று, ஒருமை
Unstable equilibrium ... நிலையற்ற சமநிலை

Usefulness ... பயனுடைமை
Use value ... பயன் மதிப்பு
Utility ... பயன்பாடு

V

Value ... மதிப்பு
Value-in-exchange ... மாற்று மதிப்பு
Value-in-use ... பயன் மதிப்பு
Variable ... மாறி
Variable cost ... மாறும் உற்பத்திச் செலவு
Vertical axis ... செங்குத்து அச்சு

W

Wage ... கூலி
Waiting ... காத்திருத்தல்
Wants ... விருப்பங்கள்
Wealth ... செல்வம்
Weight-losing material ... எடை இழக்கும் பொருள்
Welfare ... நலம்

---

# கலைச் சொற்கள்

(தமிழ் — ஆங்கிலம்)

## அ

| | | |
|---|---|---|
| அகச் சிக்கனங்கள் | ... | Internal economies |
| அங்காடி | ... | Market |
| அட்டவணை | ... | Table |
| அடங்கியிருத்தல் | ... | Forbearance |
| அடைமானம் | ... | Mortgage |
| அமித உற்பத்தி | ... | Over production |
| அமித மக்கள் தொகை | ... | Over population |
| அமைப்பு | ... | Organisation |
| அயல் நாட்டு வாணிகம் | ... | International trade |
| அரசக் கொடை | ... | Bounty |
| அரசுப் பத்திரங்கள் | ... | Government securities |
| அருந்தல் தன்மை | ... | Scarcity |
| அருவப் பொருள்கள் | ... | Non-material goods |
| அழைத்த முதல் | ... | Called-up capital |
| அளிப்பு | ... | Supply |
| அறவியல் | ... | Ethics |
| அறிவியல் | ... | Science |

## ஆ

| | | |
|---|---|---|
| ஆபத்து | ... | Risk |
| ஆபத்து ஏற்பு | ... | Risk bearing |
| ஆய்வு முறை | ... | Method |

ஆயத்தநிலைத் தேவை ... Effective demand
ஆலைத் தொழில் ... Industry
ஆள்வழிப் பகிர்வு ... Personal distribution

## இ

இக்கால (புதுமை)க் கோட்பாடு ... Modern theory
இடுமானம் ... Dose
இணைந்த அளிப்பு ... Composite supply
இணைந்த தேவை ... Composite demand
இயக்க நிலை ... Dynamic state
இயக்குநர் குழு ... Board of Directors
இயல்பான ... Normal
இயல்புத் தடைகள் ... Positive checks
இயல்புரை அறிவியல் ... Positive scienee
இயற்கை வளங்கள் ... Natural resources
இயற்கை மரபினர் ... Physiocrats
இருபால் முற்றுரிமை ... Bilateral monopoly
இருவர் விற்பனை ... Duopoly
இலவசப் பொருள்கள் ... Free goods
இலாபம் ... Profit
இலாப ஈவு ... Dividend
இறப்பு வீதம் .. Death rate
இறுதி நிலை ... Margin
இன்றியமையாதவை ... Necessaries

## ஈ

ஈட்டம் ... Enaring

## உ

உச்சவரம்பு ... Ceiling
உண்மை உற்பத்திச் செலவு ... Real cost
உண்மை வருமானம் ... Real income
உத்தம நிறுவனம் ... Optimum firm

உத்தம மக்கள் தொகை ... Optimum population
உருவப் பொருள்கள் ... Material goods
உழைப்பின் அளிப்பு ... Labour supply
உழைப்பு ... Labour
உழைப்பு அங்காடி ... Labour market
உழைப்புக் குணகம் ... Labour coefficient
உழைப்புப் பகுப்பு ... Division of Labour
உற்பத்தி ... Production, output
உற்பத்திக் காரணிகள் ... Factors of production
உற்பத்திச் செலவு ... Cost
உற்பத்தி வழிவகைகள் ... Means of production
உறுதியின்மை ... Uncertainty
உறுதியின்மை ஏற்பு ... Uncertainty bearing

ஊ

ஊக வணிகம் ... Speculation
ஊக வணிக ஊக்கி ... Speculation motive
ஊதியம் ... Reward

எ

எச்சம் ... Surplus
எச்ச மதிப்பு ... Surplus value
எச்சரிக்கை ஊக்கி ... Precawtionary motive
எடுகோள் ... Assumption
எடையிழக்கும் பொருள் ... Weight-losing material
எதிர்க் கணியம் ... Negative quantity
எதிர்பார்ப்பு ... Expectation
எந்திரம் ... Machinery
எருதுகள் ... Bulls

ஏ

ஏற்றத் தாழ்வு ... Inequality

ஒ

ஒப்பிய முதல் ... Subscribed capital
ஒரு பயனுடைத்தன்மை ... Specificity
ஒருமை ... Unity
ஒன்று ... Unity

ஓ

ஓரியலான ... Homogeneous

க

கச்சாப் பொருள் ... Raw material
கட்டாய சேமிப்பு ... Forced saving
கட்டாய வேலையின்மை ... Involuntary unemployment
கடத்துச் செலவு ... Transportation cost
கடன் ... Loan
கடன் நிதி ... Loanable fund
கடன் பத்திரங்கள் ... Bonds, Debentures
கரடிகள் ... Bears
கலை ... Art
கற்பிதமான ... Hypothetical

கா

காசோலை (செக்கு) ... Cheque
காத்திருத்தல் ... Waiting
காலக் கூறு ... Time element
கால விருப்பத் தேர்வு ... Time preference

கு

குணகம் ... Coefficient
குவியும் முன்னுரிமைப் பங்கு ... Cumulative preference share
குறிக்கோள்கள் ... Ends
குறிப்பிட்ட சமநிலை ... Particular equilibrium

குறியீட்டெண்கள் ... Index numbers
குறுங் காலம் ... Short period
குறைந்த அளவுக் கூலி ... Minimum wage
குறைந்துசெல் பயன்பாட்டு விதி ... Law of diminishing utility
குறைந்துசெல் விளைவு விதி ... Law of diminishing return

கூ

கூட்டு அளிப்பு ... Joint supply
கூட்டு உற்பத்திச் செலவு ... Joint cost
கூட்டுத் தேவை ... Joint demand
கூட்டுறவு ... Co-operation
கூட்டு விளைபொருள் ... Joint product
கூலி ... Wage

கை

கைம்மாறு ... Reward
கைவினைத் தொழில் ... Handicraft

கொ

கொடுக்கல் வாங்கல் ஊக்கி ... Transactions motive

ச

சட்ட இயல் ... Jurisprudence
சம இறுதிநிலைப் பயன்பாட்டு விதி ... Law of Equi-marginal utility
சம இறுதிநிலை விளைவு விதி ... Law of Equi-marginal return
சமத்துவம் ... Equality
சமதருமம் ... Socialism
சமநிலை ... Equilibrium
சமநோக்கு வளைகோடுகள் ... Indifference curves
சமன்பாடு ... Equation
சமூக இயல் ... Sociology
சமூகப் பாதுகாப்பு ... Social security

| | | |
|---|---|---|
| சமூக விளைபொருள் | ... | Social product |
| சராசரி | ... | Average |
| சரிவு | ... | Slope |
| சார்பலன் | ... | Function |
| சார்பு உறவுகள் | ... | Functional relations |

சி

| | | |
|---|---|---|
| சிக்கனக் கேடுகள் | ... | Diseconomies |
| சிக்கனங்கள் | ... | Economies |
| சிக்கனமான | ... | Economical |
| சிலவர் விற்பனை | ... | Oligopoly |
| சிற்றளவுத் தொழில் | ... | Small-scale industry |
| சிறப்புத் தேர்ச்சி | ... | Specialisation |

சு

| | | |
|---|---|---|
| சுரண்டல் | ... | Exploitation |

சூ

| | | |
|---|---|---|
| சூத்திரம் | ... | Formula |
| சூன்யம் | ... | Zero |

செ

| | | |
|---|---|---|
| செக்கு | ... | Cheque |
| செங்குத்து அச்சு | ... | Vertical axis |
| செயல்படு பொருளியல் | ... | Applied Economics |
| செலவீடு, செலவு | ... | Expenditure |
| செலுத்திய முதல் | ... | Paid-up capital |
| செலுத்து | ... | Payment |
| செழிப்பு | ... | Prosperity |

சே

| | | |
|---|---|---|
| சேர்மானம் | ... | Combination |

த

தகு விலை ... Potential price
தடையிலாப் போட்டி ... Free competition
தரம் ... Grade
தருமகர்த்தா முறை ... Trusteeship
தலா வருமானம் ... Per-capita income
தவணை வைப்புத் தொகை ... Time deposit
தவிர்ப்புத் தடைகள் ... Preventive checks
தற்செயல் மாதிரி ... Random sample
தன்னிறைவு ... Self-sufficiency

தி

திரிகோணமிதி ... Trigonometry
திறமை ... Efficiency

து

துணை உற்பத்திச் செலவு ... Supplementary cost
துறவு ... Sacrifice

தூ

தூண்டுதல் ... Incentive
தூயபொருள் ... Pure material

தெ

தெவிட்டல் ... Satiety

தே

தேய்மானம் ... Depreciation
தேய் வீத வரி ... Regressive tax
தேவை ... Demand

தொ

தொகுத்தறி முறை ... Inductive method
தொகுதிச் சமநிலை ... Group equilibrium

தொடர்பு வசதி ... Communication
தொடு கோடு ... Tangent
தொழில் ... Occupation, Industry
தொழில் அமைப்பு ... Industrial organisation
தொழில் துணிவு ... Enterprise
தொழில் துணிவோன் ... Entrepreneur
தொழில் நுட்பமான ... Technical
தொழில் முயற்சி ... Enterprise
தொழில் முயல்வோன் ... Entrepreneur
தொழிலின் ஓரிடச் செறிவு ... Localisation of industry
தொழிலின் பருமன் ... Size of business

ந

நட்டம் ... Loss
நடப்பு வைப்புத் தொகை ... Current deposit
நடுநிலையான சமநிலை ... Neutral equilibrium
நலம் ... Welfare

நா

நாட்டம் ... Propensity
நாட்டு உற்பத்தி ... National output
நாட்டுச் செலவீடு ... National expenditure
நாட்டுரிமையாக்கல் ... Nationalisation
நாட்டு வருமானம் ... National income
நாட்டு விளைபொருள் ... National product

நி

நிகர ... Net
நிருவகிக்கப்பட்ட செலாவணி ... Managed currency
நிருவாகம் ... Management
நிருவாக ஈட்டங்கள் ... Earnings of management
நிலம் ... Land
நிலைத்த உற்பத்திச் செலவு ... Fixed cost
நிலைத்த காரணி ... Fixed factor

நிலைத்த முதல் ... Fixed capital
நிலையான சமநிலை ... Stable equilibrium
நிறுவனம் ... Firm
நிறைகுறை அங்காடி ... Imperfect market
நிறைகுறைப் போட்டி ... Imperfect competition
நிறைவு ... Satisfaction
நிறைவு அங்காடி ... Perfect market
நிறைவுப் போட்டி ... Perfect competition

நீ

நீர்மை ... Liquidity
நீர்மை விருப்பத் தேர்வு ... Liquidity preference

நு

நுகர்வு ... Consumption
நுகர்வுத் தவிர்ப்பு ... Abstinence
நுகர்வோன் ... Consumer
நுகர்வோர் திறமை ... Consumer's sovereignty
நுகர்வோர் எச்சப்பாடு ... Consumer's surplus
நுகர்வோர் பொருள்கள் ... Consumer's goods
நுண்ணியல் பொருளியல் ... Mirco economics

நெ

நெடுங்காலம் ... Long period
நெறியுரை அறிவியல் ... Normative science

நே

நேர்முக வரி ... Direct tax
நேர்மையான கூலி ... Fair wage

ப

பகிர்வு ... Distribution
பகுத்தறி முறை ... Deductive method

பகுத்தாய்வு ... Analysis
பகுபடாமை ... Indivisibility
பங்குகள் ... Shares
பட்டியல் ... Table
படுகிடை அச்சு ... Horizontal axis
பண்டம் ... Commodity
பண்ணை ... Farm
பணம் ... Money
பண அங்காடி ... Money market
பணத்தாள் ... Note
பணவாட்டம் ... Deflation
பணவீக்கம் ... Inflation
பணி ... Function, Service
பணி வழிப் பகிர்வு ... Functional distribution
பதிலி ... Substitute
பதிலீடு ... Substitution
பயன்பாடு ... Utility
பயன் மதிப்பு ... Use value, Value-in-use
பயனுடைமை ... Usefulness
பருமன் ... Scale
பன்னாட்டு வாணிகம் ... International trade

பா

பாங்கு ... Bank

பி

பிற்சேர்க்கை ... Appendix
பிறப்பு வீதம் ... Birth rate
பிறழ்ச்சிக்காரண வேலையின்மை ... Frictional unemployment
பிறவாய்ப்பு ... Opportunity
பின்னிய நெகிழ்ச்சி ... Cross elasticity

பு

புத்தாக்கம் ... Invention

| | | |
|---|---|---|
| புதுமை | ... | Innovation |
| புரள் முதல் | ... | Circulating capital |
| புள்ளியல் | ... | Statistics |
| புறச் சிக்கனங்கள் | ... | External economies |
| புனித விதிகள் | ... | Canons |

பூ

| | | |
|---|---|---|
| பூரிப்பு | ... | Boom |

பெ

| | | |
|---|---|---|
| பெயரளவு வருமானம் | ... | Nominal income |
| பெருக்கி | ... | Multiplier |

பே

| | | |
|---|---|---|
| பேரளவுத் தொழில் | ... | Large-scale industry |
| பேரியல் பொருளியல் | ... | Macro economics |

பொ

| | | |
|---|---|---|
| பொதுச் சமநிலை | ... | General equilibrium |
| பொதுச் செலவீடு | ... | Public expenditure |
| பொதுத் தொழில் முயற்சி | ... | Public enterprise |
| பொதுமைகள் | ... | Generalisations |
| பொதுவுடைமை | ... | Communism |
| பொருத்தமின்மை | ... | Maladjustment |
| பொருள்கள் | ... | Goods |
| பொருளாதாரம் | ... | Economy |
| பொருளியல் | ... | Economics |
| பொருளியல் ஆற்றல்கள் | ... | Economic forces |
| பொருளியல் கொள்கை | ... | Economic policy |
| பொருளியல் கோட்பாடு | ... | Economic theory |
| பொருளியல் சிந்தனை | ... | Economic thought |
| பொருளியல் வளர்ச்சி | ... | Economic development |
| பொருளியல் விதிகள் | ... | Economic laws |

| | | |
|---|---|---|
| பொருளிலக்கணம் | ... | Definition |
| பொறி | ... | Machine |
| பொறுப்பு | ... | Liability |

**போ**

| | | |
|---|---|---|
| போக்கு | ... | Tendency |
| போகப் பொருள்கள் | ... | Luxuries |
| போட்டி | ... | Competition |
| போலி வாரம் | ... | Quasi rent |

**ம**

| | | |
|---|---|---|
| மக்கள் தொகை | ... | Population |
| மதிப்பு | ... | Value |
| மதிப்புக் குறைப்பு | ... | Devaluation |
| மந்தம் | ... | Depression |
| மறைமுக வரி | ... | Indirect tax |

**மா**

| | | |
|---|---|---|
| மாதிரி நிறுவனம் | ... | Representative firm |
| மாற்றிட ஈட்டங்கள் | ... | Transfer earnings |
| மாற்றீட்டு உற்பத்திச் செலவு | ... | Transfer cost |
| மாற்று | ... | Exchange |
| மாற்று அளிப்பு | ... | Alternate supply |
| மாற்றுத் தேவை | ... | Alternate demand |
| மாற்று மதிப்பு | ... | Exchange value, Value-in-exchange |
| மாறு உற்பத்திச் செலவு | ... | Constant cost |
| மாறி | ... | Variable |
| மாறும் உற்பத்திச் செலவு | ... | Variable cost |
| மாறும் காரணி | ... | Variable factor |

**மி**

| | | |
|---|---|---|
| மிச்ச உரிமையர் | ... | Residual claimant |

மு

| | |
|---|---|
| முதல் | ... Capital |
| முதல் அங்காடி | ... Capital market |
| முதல் ஆக்கம் | ... Capital formation |
| முதல் கருவிப் பொருள்கள் | ... Capital goods |
| முதல் திரட்சி | ... Capital accumulation |
| முதலாளித்துவம் | ... Capitalism |
| முதலீடு | ... Investment |
| முதன்மை உற்பத்திச் செலவு | ... Prime cost |
| முழு நிறைவு | ... Satiety |
| முற் கூற்று | ... Prediction |
| முற்றுரிமைப் போட்டி | ... Monopolistic competition |

மே

| | |
|---|---|
| மேல் உற்பத்திச் செலவு | ... Overhead cost |

மை

| | |
|---|---|
| மையப் பாங்கு | ... Central bank |

மொ

| | |
|---|---|
| மொத்த இலாபம் | ... Gross profit |
| மொத்த நாட்டு வருமானம் | ... Gross national income |
| மொத்த நாட்டு விளைபொருள் | ... Gross national product |
| மொத்த வட்டி | ... Gross interest |

ரொ

| | |
|---|---|
| ரொக்கம் | ... Cash |

வ

| | |
|---|---|
| வட்டம் | ... Premium |
| வடிவ கணிதம் | ... Geometry |
| வணிக மரபு | ... Mercantilism |

| | | |
|---|---|---|
| வர்க்கப் போராட்டம் | ... | Class struggle |
| வரலாற்று மரபினர் | ... | Historical school |
| வரவு செலவுத் திட்டம் | ... | Budget |
| வரி விதிப்பு | ... | Taxation |
| வருமானம் | ... | Income |
| வருமானஞ்சார் நெகிழ்ச்சி | ... | Income elasticity |
| வருமானம் நுகர்வு வளைகோடு | ... | Income consumption curve |
| வருவாய் | ... | Revenue |
| வரைபடம் | ... | Graph |
| வரையறுக்கப்பட்ட பொறுப்பு | ... | Limited liability |
| வளர்ச்சி குறைந்த | ... | Under developed |
| வளர்ந்து செல் உற்பத்திச் செலவு | ... | Increasing cost |
| வளர்ந்து செல் விளைவு | ... | Increasing return |
| வளர்வீத வரி | ... | Progressive tax |
| வளைகோடு | ... | Curve |

வா

| | | |
|---|---|---|
| வாங்குந் திறன் | ... | Purchasing power |
| வாசி வட்டம் | ... | Premium |
| வாடிக்கையாளன் | ... | Customer |
| வாணிகம் | ... | Trade |
| வாய்பாடு | ... | Formula |
| வாரம் | ... | Rent |
| வாரமிலி நிலம் | ... | No-rent land |
| வாழ்க்கைத் தரம் | ... | Standard of living |

வி

| | | |
|---|---|---|
| விதிகள் | ... | Laws |
| விருப்பம் | ... | Wants |
| விருப்பத் தேர்வு | ... | Preference |
| விலை | ... | Price |
| விலைசார் நெகிழ்ச்சி | ... | Price elasticity |

விலை நிருணயம் ... Price determination
விலை நுகர்வு வளைகோடு ... Price consumption curve
விளைபொருள் ... Product
விற்பனைச் செலவு ... Selling cost
விற்பனை முற்றுரிமை ... Monopoly
வினைமுற்றிய பொருள்கள் ... Finished goods

வீ

வீதம் ... Rate
வீதவரி ... Proportional tax

வெ

வெளியிட்ட முதல் ... Issued capital

வே

வேட்கை ... Desire
வேலைக் குறைவு ... Under employment
வேலையளிப்போன் ... Employer
வேலையாள் ... Employee
வேலையின்மை ... Unemployment
வேலையுடைமை ... Employment
வேறுபாட்டெச்சம் ... Differential surplus
வேறுபாடு காட்டல் ... Differentiation
வேறுபாடு காட்டுகை ... Discrimination
வேறுபாடு காட்டும் முற்றுரிமை ... Discriminating monopoly